# பிள்ளைப் பிணி மருத்துவம் 2



வெளியீடு :

இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை

சென்னை-600 106.

# பிள்ளைப் பிணி

# மருத்துவம்

(பாகம் - 2)

தொகுப்பு:

சுவடிநகல்-நூல்வெளியீட்டுப்பிரிவு

இந்திய மருத்துவம் - ஓமியோபதித் துறை

# நூலடைவு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பிள்ளைப்பிணி மருத்துவம் - பாகம் - 2 |
| தொகுப்பு | : | சுவடிநகல் - நூல்வெளியீட்டுப்பிரிவு |
| பொருள் | : | குழந்தைமருத்துவம் |
| வெளியிட்டோர் | : | மொழிபெயர்ப்பு - நூல்கள் வெளியீட்டுப் பிரிவு, இந்திய மருத்துவம் - ஓமியோபதித்துறை சென்னை - 106. |
| பதிப்புரை | : | © தமிழ்நாடு அரசு |
| முதல்பதிப்பு | : | 2006 |
| மறுபதிப்பு | : | 2014 |
| நூல்வடிவம் | : | RA 1/8 |
| அச்சுத்தாள் | : | 70 GSM மேப் லித்தோ |
| அட்டைக் கட்டுமானம் | : | கடின அட்டை |
| எழுத்துகள் | : | 11 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | VIII + 725 = 733 |
| பிரதிகள் | : | 500 |
| நூலின் விலை | : | ரூ.280.00 |
| அச்சிட்டோர் | : | தி நாடார் பிரஸ் லிமிடெட், 59, போலீஸ் ஸ்டேசன் ரோடு, சிவகாசி.7 |

# பொருளடக்கம்

நோய் வருவழி, குறிகுணம் – 170.

கணத்தின் வகைகள் - 171, குடி நீர் வகைகள் - 172, கற்கம் - 173, நெய் வகைகள் - 174, காரை இரசாயனம், இளகம் - 178, எண்ணெய் வகைகள் - 179, மாத்திரை வகைகள் - 189.

கணம் வகைகள் - 190, அக்கரகணம், அந்தகக்கணம், ஆமகணம் - 191, நீராமகணம் - 194, பேராம கணம் - 195, இரத்த கணம் - 196, உணக்கு கணம் - 199, உலரிக் கணம், உள்ளுரோகக்கணம் - 199, ஊது கணம் - 201, ஊது மாந்த கணம் - 203, எரிகணம் - 204, கரப்பன் கணம், கழிகணம் - 205, குடல் சோகைக் கணம், குடலேற்ற கணம் - 206, குன்றியக்கரகணம், கொதிப்புக்கணம் - 207, சத்திக்கணம், சர்ப்பக் கணம், சிங்கி மாந்தக்கணம் - 208, சித்திரக்கணம், சிலேத்துமகணம், சுரக்கணம் - 209, தனிச்சுரக்கணம் - 210, அத்திச்சுரக்கணம், சுழி கணம் - 211, சூலிக்கணம் - 216, தூங்கு கணம் - 217, தெற்கத்துக்கணம், தெற்கத்து மாந்த கணம் - 218, நிரம்பக்கணம், நீர்க்கணம் - 219, நீர் மாந்த கணம், பட்சிக்கணம், பாலக்கணம் - 221, பித்த கணம் - 222, பிரளிகணம் - 223, பிறக்கணம் - 224, பொருமுகணம், மகாகணம், மகேந்திர கணம் - 225, மந்தாரகணம் - 226, மாந்த கணம் - 227, முக்குக்கணம் - 233, மூலகணம் - 237, மேகக்கணம், வறட்டுக்கணம் - 240, வாதகணம் - 243, வாய்வுக்கணம் - 244, வாலேந்திரக்கணம் - 245, வால் சந்திரக்கணம் - 248, விஷக்கணம், விஷ நீர்க்கணம் - 249, விஷபார்கக்கணம், விஷ மாந்தக்கணம்,

# மாந்தம்

**வேறு பெயர்கள்** மந்தம், அலசம், அலசகம்.

**இயல்** உண்ட உணவு செரியாமல் வயிற்றில் புளித்து வயிறுப்பி இரைந்து மந்தத்தை உண்டாக்கி வாந்தியையும் கழிச்சலையும் உண்டாக்கித் துன்பத்தை ஏற்படுத்தும் நோய்.

***நோய் வருவழி***

இந்நோய் 3 மாதம் முதல் 12 வயது வரை வரக்கூடியது. பால் மட்டுமே குடிக்கும் பருவம், பாலும் சோறும் உண்ணும் பருவம், சோறு மட்டுமே உண்ணும் பருவம் ஆகிய மூன்று பருவங்களிலும் மாந்தம் ஏற்படும்.

பால் மட்டும் பருகும் பருவத்தில் குழந்தைக்குப் பாலூட்டும் தாய் மாந்தத்தை உண்டாக்கும் பொருட்களை மிகுதியும் உண்பதால் மாந்தம் ஏற்படும். நீர்நிலைகளில் பழுத்து உதிர்ந்த சருகுகள் விழுந்து அழுகியிருக்கும் நீர், எருமைப்பால், புளித்த எருமை மோர், எருமை நெய், வாழைப்பழம், மாம்பழம், தேங்காய், இளநீர், கடலை, வெல்லம், மலைத்துவரை, மொச்சைக்கொட்டை, புளியங்கொட்டை, பருப்புருண்டை, மாவினால் செய்யப்பட்ட பண்டங்கள், வாயுப் பொருட்கள், சோறு ஆகிய மாந்தமுண்டாக்கும் பொருட்களை அதிகமாய் உண்பதாலும் மாந்தம் உண்டாகும். பாகற்காய், சுரை, உளுந்து, ஊன், பெரிய உளுவை மீன், வாளைமீன், பன்றிஇறைச்சி, விரால் மீன், கெண்டை மீன் ஆகிய ஆகாப் பொருட்களை உண்பதாலும் தாய்க்கு மாந்தமுண்டாகி அதனால் பாலின் தன்மை திரிந்து போகும். குழந்தை அப்பாலைப் பருக மாந்தமேற்படும்.

பாலும் சோறும் உண்ணும் பருவத்தில் மேற்கூறியவாறு தாயின் உணவுக்குற்றத்தினாலும் மாந்தம் ஏற்படும். குழந்தை மேற்கூறிய மாந்தத்தையுண்டாக்கும் பொருட்களையும் ஆகாப் பொருட்களையும் உண்பதாலும் மாந்தம் வரும்.

சோறு மட்டுமே உண்ணும் பருவத்தில் குழந்தையின் உணவுக் குற்றத்தினாலும், உணவின் வேறுபாட்டாலும் மட்டுமே மாந்தம் நிகழும். குழந்தையின் தூய்மையற்ற தன்மை, சரியான நேரத்தில் சாப்பிடாது நேரந்தவறி சாப்பிடுதல், சத்தற்ற உணவுப் பொருட்களைச் சாப்பிடல், உடம்பில் போதிய சத்தின்மை, ஆகிய காரணங்களாலும் இப்பருவத்தில் இந்நோய் வரும்.

உணவினால் மட்டுமின்றி செயலின் வேறுபாட்டாலும் மாந்த நோய் குழந்தையைத் தாக்கும். பால் மட்டுமே பருகும் பருவத்தில் தாயின் உணர்வுகளால் குழந்தை பாதிக்கப்படுகிறது. வறுமை, பசி, துயரம், மனக்கவலை, பயம், கோபம், இச்சை போன்ற உணர்வுகளால் தாய் தாக்குறும் போது சுரக்கும் பால் தன் தன்மையிலிருந்து மாறுபடுகிறது. அப்பாலைப் பருகும் குழந்தைக்குப் பாலின் தன்மை வேறுபட்டு மாந்தம் உண்டாகிறது.

பாலும் சோறும் உண்ணும் பருவத்திலும் மேற்கூறியவாறு தாயின் உணர்வுகளால் குழந்தையின் அச்சம், கோபம், துயரம் போன்ற உணர்வுகளாலும் மனக்கவலை, மனவேறுபாடுகளாலும் உணவு செரிக்கும் தன்மையில் மாறுபாடு நிகழ்ந்து மாந்தமுண்டாகிறது.

### *மாந்தம் பொது குறிகுணங்கள்*

கண்கள் சிவந்து காணப்படும். கண்விழியின் கீழ் குழிவிழும். சில நேரங்களில் கண்கள் வெளுத்து காணப்படும். கண், காது வீங்கிக் காணும். அரைக்கண் தூக்கம் வரும்.

முகம் வெளுத்துக்காணும். கழுத்து மெலியும், குரல் தாழும், வாய் உலரும். நீர் வேட்கை ஏற்படும். இருமல், தலைவலி, மார்புவலி இவை உண்டாகும். நெஞ்சில் கபங்கட்டிக்கொள்ளும்.

குழந்தை பாலுண்ணாது. அப்படியுண்டாலும் வாந்தியெடுக்கும். பசியின்மை ஏற்படும். குழந்தைக்குப் பேதியாகும். ஓடும் தண்ணீர் போலவும், கெட்டபால் போலவும், கரைத்த மாவு போன்றும், புளித்த வாசனையுடனும், கெட்ட நாற்றத்துடனும் பேதியாகும். வயிறு ஊதும், வயிறு பொருமி இரையும். வயிற்றில் எரிச்சல் ஏற்படும்.

கைகால் இசிவு ஏற்படும். உடல் ஊதிக் கனக்கும். வியர்வை மிகுதியும் உண்டாகும். உடல் சோர்வு ஏற்பட்டு ஓய்ச்சலாக இருக்கும். உடல் நாற்ற மடிக்கும். *(புத்-477-46, சர.வை.மு-18) (ஏடு.ஆர். 941-14,6218-12) (ஏடு.362-17,4552-17,169-20,604-15)*

### *நடைமுறையில் பயன்படுத்தப்படும் மருத்துவ முறைகள்*

இந்நோயில் வரும் மாந்தத்தையும் செரியாமையையும் வயிறுப் பலையும் குறைப்பதற்கு அகட்டு வாய்வகற்றி மருந்துகளையும், கழிச்சலை, நிறுத்துவதற்கு துவர்ப்புச் செய்கையுடைய மருந்துகளையும், வாந்தியை நீக்குவதற்கு இனிப்பு, புளிப்புச் சுவையுடைய மருந்து வகைகளையும் வழங்குதல் வேண்டும்.

குழந்தைகளுக்கு மருத்துவம் செய்ய வேண்டியிருப்பதால் எளிய மருத்துவ முறைகளான சுரசம், குடிநீர், கருக்கு, சூரணம், மணப்பாகு, தீநீர் போன்றவற்றைக் கொடுத்தல் வேண்டும். பின் பசித்தீத்தூண்டி செய்கையுடைய மருந்துகளை வழங்கி குணப்படுத்தல் வேண்டும்.

வயிற்றுவலியையும் வயிற்றுப்பொருமலையும் வயிற்று வீக்கத்தையும் குறைப்பதற்கு வயிற்றில் பற்று பூச வேண்டும்.

*மாசிப்பத்திரிச் சாறு*

மாசிப்பத்திரியின் இலைச்சாற்றை 5-15 மி.லி. எடுத்து அதில் கோரோசனையை 65 மி.கி. கலந்து கொடுக்க மாந்தம் நீங்கும்.

*உத்தாமணி கருக்கு*

உத்தாமணிச் சாறெடுத்து சிறிதளவு உப்பும், வசம்பு சுட்ட கரியுஞ் சேர்த்து ஒரு புதுச்சட்டியிலிட்டுக் காய்ச்ச உப்பு சுண்டி வெளுத்துப் பொடியாகும். இப்பொடியை 130 மி.கி. - 200 மி.கி. வெந்நீரில் கலந்து குழந்தையின் தன்மை, நோயின் வன்மை அறிந்து புகட்ட மாந்தம் குணமாகும்.

## குடிநீர் வகைகள்

*1. பொடுதலைக் குடிநீர்*

பொடுதலையை வதக்கி நீர்விட்டுக் கொதிக்க வைத்து இறுத்துக் கொடுக்க மாந்தம் தீரும்.

*2. பொடுதலைக் குடிநீர் (வேறு)*

பொடுதலையின் இலையை வதக்கி வறுத்த ஓமத்துடன் சேர்த்தரைத்து நீர் விட்டுக் கொதிக்க வைத்து 15-30 மி.லி. அளவு கொடுக்க குழந்தையின் கழிச்சல் நிற்கும். பொடுதலை இலையை வதக்கி குடிநீரிட்டுக் கொடுக்க மாந்தம் போகும்.

*3. வெற்றிலைக் குடிநீர்*

2-3 வெற்றிலையுடன் 4-5 மிளகு சேர்த்துக் குடிநீரிட்டுப் புகட்ட சிறுவர்களுக்குண்டாகும் செரியாமை விலகும்.

*4. வசம்புக் குடிநீர்*

வசம்பு ஒரு பங்கெடுத்து பத்து பங்கு கொதிக்கின்ற வெந்நீர் சேர்த்து ஊறவிட்டு வடிகட்டி 15-30 மி.லி. கொடுக்க பசியின்மை, செரியாமை, வயிற்றுப்பொருமல் நீங்கும். கழிச்சலைப் போக்கும்.

பொடுதலையிலையை வதக்கி வறுத்த ஓமத்துடன் சேர்த்தரைத்து நீர் விட்டுக் கொதிக்க வைத்து வடிகட்டி 15-30 மி.லி. அளவு கொடுக்க குழந்தைகளின் கழிச்சல் தீரும்.

### *5. மாசிக்காய்க் குடிநீர்*

மாசிக்காய்த் தூளை நீர் விட்டு காய்ச்சி வடிகட்டி 15-30 மி.லி. வரையிலும் கொடுக்க மாந்தம் அதனாலேற்பட்ட பெருங்கழிச்சல் போம்.

### *6. கஞ்சி*

பழைய அரிசியுடன் பொடுதலையின் காயையும் சேர்த்து உலையிலிட்டு முதற் கொதி வந்தவுடன் வெந்த அரிசியை உலர்த்தி நொய்யாக்கிக் கொள்க. இதை வேண்டிய போது கஞ்சியாக்கி கொடுக்க குழந்தைகளின் மாந்தம் நீங்கும்.

## சூரண வகைகள்

*1. ஏலச்சூரணம்* ஏலரிசி, ஓமம், சீரகம் இவற்றைச் சமவெடை எடுத்து இளவறுப்பாய் வறுத்து பொடித்து 250-500 மி.கி. அளவெடுத்து வெந்நீரில் கலந்து கொடுக்க மாந்தம் குணமாகும்.

### *2. சீரகக் சூரணம்*

சீரகம், ஏலம், பச்சைக்கற்பூரம் இவற்றைப் பொடித்து ஓரளவாயெடுத்து அதே அளவு சர்க்கரை சேர்த்து காலை, மாலை மூன்று சிட்டிகை அளவு சாப்பிட மந்தவாயு தீரும்.

### *3. வசம்புச் சூரணம்*

வசம்புப் பொடியை 250-500 மி.கி. அளவு உட்கொள்ள அகட்டு வாயுவை அகற்றும்.

### *4. ஓமச் சூரணம்*

ஓமம், சுக்கு, சித்திர மூலவேர்ப்பட்டை இம்மூன்றும் ஓரெடை எடுத்து பொடித்து ஒன்று கலந்து அவ்வெடைக்குச் சமஅளவு கடுக்காய்ப் பொடி கூட்டி 250-500 மி.கி. அளவு மோரில் கொடுக்க மாந்தம் நீங்கும்.

ஓமம், மிளகு இவற்றை வகைக்குச் சமஅளவு எடுத்து வெதுப்பி வெல்லத்தைச் சம அளவெடுத்து சேர்த்து காலை, மாலை, 10 நாட்களுக்குச் சாப்பிட வயிற்றுக்கடுப்பு, பொருமல், கழிச்சல் தீரும்.

### *5. தயிர்ச்சுண்டிச் சூரணம்*

இந்துப்பு, வளையலுப்பு, பூநீறு, சோற்றுப்பு, கல்லுப்பு, இவற்றுடன் சுக்கு 5 பங்கு, புளித்த தயிர் 40 பங்கெடுக்கவும். சரக்குகளைப் பாண்டத்தில் சேர்த்து அதில் தயிர் ஊற்றி உலரும் மட்டும் நாள்தோறும் வெய்யிலில் வைத்துப் பொடித்து வடிகட்டி வைக்கவும். 250-300 மி.கி. அளவு வெந்நீரில் கலந்து கொடுக்க மாந்தம், கழிச்சல் நீங்கும்.

*(பா.செ.கு.316)*

## வடக வகைகள்

1. ஏலரிசி, இலவங்கப்பட்டை, முந்திரி, திப்பிலி இவற்றை வகைக்குச் சம அளவெடுக்க. அதிமதுரம், சர்க்கரை, பேரீந்து இவற்றை மேற்கூறிய அளவில் பாதி எடுக்க. ஒன்று சேர்த்திடித்து சூட்டுடன் இருக்கும் போதே கழற்சிக்காயளவு உருண்டை செய்து 1 அல்லது *(குண 1129)*

### *2. தாளிசாதி வடகம்*

தாளிசபத்திரி, மிளகு, செவ்வியம், திப்பிலி, திப்பிலிமூலம் இவற்றை வகைக்குச் சம அளவெடுக்க. சுக்கு 12 பங்கெடுக்க. இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, ஏலம், குருவேர், சிற்றரத்தை ஆகியவற்றை வகைக்குச் சமஅளவெடுக்க. கரும்பு வெல்லம் 64 கி. எடுக்க. பசும்பால் தேவையான அளவெடுக்க.

சட்டியில் பசும்பாலை ஊற்றி வேடு கட்டி அடுப்பேற்றி அனைத்து சரக்குகளையும் பொடித்து வெல்லத்தையும் ஒன்றாய்க் கலந்து அதன் மீது வைத்து மேற்சட்டி கொண்டு மூடி பிட்டுப்பதம் வரும் வரையில் வைத்து எரித்தெடுத்து, உரலிலிட்டு இடித்து 5 கி. அளவு வடகங்களாகச் செய்து உலர்த்தவும். ஒரு வடகம் இருவேளை கொடுக்க மாந்தம் போம்.

## மணப்பாகு வகைகள்

### *1. துருஞ்சி மணப்பாகு*

துருஞ்சி நாரத்தம் பழச்சாறு 1 பங்கெடுக்க. சர்க்கரை இரண்டு பங்கெடுக்க. இரண்டையும் கலந்து காய்ச்சிப் பதத்தில் எடுத்துக் கொள்ளவும். அதில் 5-10 மி.லி. அளவு எடுத்து தண்ணீரில் கலந்து கொடுக்கவும். மாந்தத்திலுண்டாகும் வாந்தி தீரும். *(பா.செ.மு.கு.287)*

### *2. மாதுளை மணப்பாகு*

கற்கண்டு, பன்னீர், மாதுளம்பழ இரசம், தேன் அனைத்தையும் சம அளவெடுத்து ஒன்று கூட்டி கற்கண்டு கரைந்த பிறகு வடிகட்டி கொதிக்க வைத்துப் பாகு பதம் வந்தவுடன் இறக்கி பத்திரப்படுத்தவும்.

5-10 மி.லி. கொடுக்க மாந்தத்திலுண்டாகும் வாந்தி நீங்கும்.

*(பா.செ.மு.288)*

## தீ நீர்வகைகள்

### *1. ஓமத்தீநீர்*

ஓமம் 100கி எடுத்து தூய்மை செய்து ஒன்றிரண்டாக இடித்து 2 நாள் 2 லி. நீரில் ஊற வைக்க. பிறகு வாலையிலிட்டு அளவாய் எரித்து நீராவியைக் குளிரச் செய்து 1 லிட்டராகத் தீநீர் வடியும் வரையில் சேகரித்துப் புட்டியில் அடைக்கவும். 15-30 மி.லி. அளவு கொடுக்க மாந்தம் நீங்கும். பசியுண்டாகும்.

### *2. தீநீர்*

225 மி.லி. தண்ணீரில் 2 கி. அளவு காயத்தைக் கரைத்து 15-30 மி.லி. அளவு எடுத்து அதில் சிறிது ஓமத்தீநீர் சேர்த்துக் கொடுக்க மாந்தம், வயிற்றுப் பொருமல் போம். (குண558)

### *3. பற்று*

வசம்பைச் சுட்டுக் கரியாக்கி தேங்காயெண்ணெய் அல்லது முத்தெண்ணெயுடன் கலந்து அடிவயிற்றிற் பூச வயிற்றுப் பொருமல் நீங்கும்.

### *மாந்தத்திற்குப் பொதுவாகக் கூறப்படும் மருந்துகள்*

மாந்தத்தில் பலவகைகள் உள்ளன. ஆனால் பொதுவாக மாந்தத்திற்கென சொல்லப்பட்டுள்ள மருத்துவமுறைகள். சுரசம், சாறு, குடிநீர் எனும் வரிசை முறையில் இங்கு தரப்பட்டுள்ளன. அதன்பின்னர் மாந்தத்தின் வகைகளும், அதற்கான விளக்கங்களும் பாகுபடுத்தப்பட்டு விளக்கம் கூறப்படுகின்றன.

மாந்தத்திற்கான பொது மருந்தை விளக்கும் போது சிலவற்றிற்கு மருந்தின் பெயர் தரப்பட்டுள்ளன. சிலவற்றிற்கு சுரசம், கற்கம் என்று மட்டும் தரப்பட்டுள்ளன. மருந்தின் பெயர் குறிப்பிடப்பட்டவற்றிற்கு அதன் பெயருடனும், அவை கூறப் படாதனவற்றிற்கு சுரசம், சாறு, கற்கம் என்று அவ்வாறேயும் விளக்கம் தரப்பட்டுள்ளன.

### *பொடுதலைச் சுரசம்*

ஒரு பிடி பொடுதலையை ஒரு கல்லுப்புடன் சேர்த்து இடித்துச் சாறு எடுக்க வேண்டும். பின் ஒரு மண் சட்டியை அடுப்பிலேற்ற வேண்டும். சட்டி நன்றாகச் சூடு ஏறியபின் கீழே இறக்கி வைத்து அதில் மேலே சொல்லிய சாற்றை ஊற்றி வற்ற வைத்து வயதிற்குத் தக்கவாறு

குழந்தைக்கு 5-15 மி.லி. கொடுக்க மாந்த நோய் நீங்கும். *(ஏடு.604-16, 941-14, 4552-17) (ஏடு.ஆர்.6218-12,169-22,362-17) (புத் 477-47, 482-51).*

## சாறுவகைகள்

### *1. நொச்சிச் சாறு*

நொச்சியிலை, பொடுதலையிலை, நுணாயிலை, உத்தாமணியிலை இவற்றைத் தனித்தனியாக இடித்துச் சாறு எடுக்க வேண்டும். அச்சாற்றை ஒவ்வொருவகைச் சாற்றிலும் சரியளவு எடுத்து ஒன்றாகச் சேர்த்து 5-15 மி.லி. குழந்தைக்குக் காலையில் கொடுக்க வேண்டும். இவ்விதம் 3 நாட்கள் கொடுக்க வேண்டும். *(புத் 477-46, 47, 482-50, 51).*

### *2. வேலிப்பருத்திச் சாறு*

உத்தாமணியிலை, வேலிப்பருத்தி, பேய்மருட்டியிலை, சாணாக்கியிலை, (பாச்சிக்கீரை), வெதுப்படக்கியிலை, வேளையிலை, நொச்சியிலை ஆகிய இலைகளைச் சரியளவு எடுத்து அதைப் புட்டவியல் செய்து சாறு பிழிய வேண்டும். அதில் 15 மி.லி. அளவு எடுத்து அதில் சுட்ட வசம்புப்பொடி, (ஈயக்கொழுந்து) இண்டு வகைக்கு 135 மி.கி. கண்டு பாரங்கி 260 கி. ஆமையோட்டுப் பற்பம் 260 மி.கி. வீதம் போட்டுக் கலக்கிக் கொடுக்க வேண்டும். 5-10 மி.லி. அளவு குழந்தைகளின் வயதிற்கேற்றவாறு அளவறிந்து மூன்று நாள் கொடுக்க மாந்தம் நீங்கும். *(புத் 477-47,482-50-51)*

3. வேலிப்பருத்தியிலையை வதக்கி பிழிந்து சாறெடுத்துக் கொள்க.அதில் ஓமம், வசம்பு ஆகியவற்றை இளவறுவலாய் வறுத்துப் பொடித்துப் போட்டு 5-15 மி.லி. அளவு கொடுக்க மாந்தம் நீங்கும். *(புத் 482-59)*

## குடிநீர் வகைகள்

1. பீர்க்கம் வேர், தும்பைவேர், வெதுப்படக்கிவேர், பேய் மருட்டிவேர், வேலிப்பருத்தி வேர், நுணாவேர்ப்பட்டை, சுட்டெடுத்த வசம்பின் சாம்பல், ஓமம், தோலுரித்த வெள்ளைப்பூண்டு இவற்றை வகைக்கு 4 கி. எடுத்துக் கொள்க. ஒட்டைச் சுட்வைத்து ஓமத்தை வறுக்க வேண்டும், ஓமம் பொரியும் சமயத்தில் பூண்டைப் போட்டு அது வதங்கினவுடன், மேற்கூறிய வேர் வகைகளைப் போட்டு நன்றாய் வதக்கி 82 மி.லி. தண்ணீர் விட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்ட வைத்து இறக்கி வடிகட்டிப் பானஞ் செய்ய வேண்டும். இவ்விதமாக

15-30 மி.லி. அளவு காலை, மாலை இரண்டு வேளையும் செய்து கொடுக்க மாந்த நோய் தீரும். (கை.பி.பால.போதினி-219-22).

2. மேல்தோல் சீவின சுக்கு, ஏலம், கடுகுரோகணி, பரங்கிச்சக்கை இவற்றை வகைக்கு 1கி., மஞ்சள், கடுக்காய்த்தோல், தான்றிக் காய்த்தோல், கோரைக்கிழங்கு இவற்றை வகைக்கு 1 கி. எடுத்துக் கொள்ளவும். இந்த ஆறு பொருட்களையும் சட்டியிலிட்டு வறுத்துச் சாம்பலாக்கிக் கொள்க. எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துச் சட்டியிலிட்டு 165 மி.லி. தண்ணீர் வார்த்து எட்டிலொரு பாகமாகச் சுண்ட வைத்து 15-30 மி.லி. அளவு பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலை, மாலை இரண்டு வேளையும் பானஞ் செய்து வர எல்லா வகை மாந்த நோய்களும் தீரும். *(கை.பி.பால.போதினி-219-22)*

3. அவுரிவேர்ப்பட்டை 2 கி. செவ்வியம் 4 கி. இவ்விரண்டையும் எடுத்து நையச்சிதைத்து 165 மி.லி. தண்ணீர்விட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டின குடிநீரில் 2கி. அல்லது 4கி. தேன்விட்டுக் கலந்து வேளைக்கு 15-30 மி.லி. பருகவும். காலை, மாலை 2 வேளையும் பருகிவந்தால் மாந்தம் நீங்கும். *(கை.பி.போ.221)*

*4. ஓமக்குடிநீர்*

ஓமம், வெள்ளைப்பூண்டு, திப்பிலி இவற்றை வகைக்கு 35 கி. இடித்துப் பொடிசெய்து அப்பொடியை ஒரு துணியில் முடிந்து 1.3லி. தண்ணீரில் போட்டு எரிக்க வேண்டும். அது 170 மி.லி. நீராக வற்றியவுடன் எடுத்துக் குழந்தையின் பருவம், நோய் இவற்றிற்குத் தக்கபடி கொடுக்க வேண்டும். காலை, மாலை (நோய் குணமாகும் வரை) கொடுக்க மாந்தம் குணமாகும். (ஓமத்தை அவித்து தண்ணீரில் கொடுக்க மாந்தம் போகும். *(ஏடு.604-23, 362-25, 6218-19, 435-32).(புத்.477-48, 482-51).*

5. வேலிப்பருத்தி ஒருபிடி, சுக்கு, சடாமாஞ்சில், விளா, வசம்பு, பூண்டு, மிளகு, ஆமையோடு, ஓமம், சீரகம் இவற்றைச் சமஅளவு எடுத்து சிவக்க வறுத்து 1.3 லி. தண்ணீரில் போட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி 15-30 மி.லி. வீதம் (அளவறிந்து) கொடுக்கத் தீரும்.

*(ஏடு.169-21) (புத்.482-59)*

6. சிறுதேக்கு, வாய்விடங்கம், வால்மிளகு, கடுகுரோகணி, சுக்கு, திப்பிலி, இலவங்கம், தான்றி, தக்கோலம், போஸ்தக்காய் இவற்றை வகைக்கு 9 கி. எடுத்து இடித்து 2.6லி. தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க்

காய்ச்சி 15-30 மி.லி. அளவு 3 நாட்களுக்குக் கொடுக்க மாந்தம் குணமாகும். *(புத்.482-60)*

7. ஆவாரையிலை, பொடுதலை, அசமதாகம் ஆகிய இவற்றைக் கருக்கிக் கொள்க. பிறகு அதில் நீர்விட்டு காய்ச்சி 30 மி.லி. அளவாய் வற்ற விட்டு இறக்கிக் கொள்க. அதனைக் குழந்தைக்குக் காலை வேளையில் கொடுக்க மாந்தமனைத்தும் நீங்கி விடும். *(ஏடு.601-2)*

8. சுக்கு, நன்னாரி, தும்பை, முருங்கைக் காம்பு, விளா, வெள்ளையுள்ளி, வெந்தயம், மஞ்சள், திப்பிலி ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. அதனை ஒன்று சேர்த்து வறுத்து நீர்விட்டு வேகவைத்து குடிநீராக்கிக் கொள்க. அதனை 15-30 மி.லி. அளவறிந்து மூன்று நாள் - ஆறு வேளை குழந்தைக்குக் கொடுக்க மாந்தமனைத்தும் நீங்கும்; தாகமும் தீரும். *(ஏடு.601-86)*

### *9. வேளைக் குடிநீர்*

வேளைவேர், சுக்கு, வெந்தயம், வெள்ளைப்பூண்டு, வட்டத்திருப்பி, வசம்பு, ஓமம் ஆகிய பொருட்களை வகைக்கு 2கி. எடுத்து இடித்துப் பொடியாக்க வேண்டும். அப்பொடிக்குப் பதினாறு பங்கு தண்ணீர்விட்டு 1/8 ஆகக் காய்ச்ச வேண்டும். சூடு ஆறு முன்னே அதைக் குழந்தைக்கு 15-30 மி.லி. அளவு வீதம் காலையும் மாலையும் கொடுத்து வரவேண்டும். இப்படிக் கொடுத்து வர மாந்த நோய் நீங்கும்.

*(ஏடு.604-16,941-15, 6218-12, 4552-17, 169-22,477-49,362-17) (புத்- 482-51)*

### *10. மஞ்சணாத்திக் குடிநீர்*

நுணாயிலை, நொச்சித்துளிர், உத்தாமணியிலை, கழற்சியிலை, இவற்றை வகைக்கு ஒரு பிடி எடுத்து சிறுக அரிந்து சட்டியிலிட்டுக் கருக்கி 1.3.லி. தண்ணீர் அல்லது மோர் விட்டு அடுப்பேற்றுக. அந்நீருடன் ஓமம், சுட்டவசம்பு, சுக்கு, மிளகு, பொடுதலைக்காய், திப்பிலி ஆகிய இவ்வாறு பொருட்களையும் வகைக்கு 4கி. எடுத்து நல்லெண்ணெய் விட்டு வறுத்துப் பொடியாக்கிக் கொள்க. அப்பொடியை ஒரு துணியில் முடிந்து அம்முடிப்பை அந்நீரில் அல்லது மோரில் போட்டு 170 மி.லி. காலையிலும் மாலையிலும் அளவறிந்து கொடுத்தால் எல்லா மாந்தங்களும் விரைவில் நீங்கும். தண்ணீரில் போட்டுக் காய்ச்சியும் கொடுக்கலாம். *(ஏடு.941-22,362-24-25,604-22, 6218-18-19) (புத்.477-49, 482-51).*

### *11. உத்தாமணிக் குடிநீர்*

உத்தாமணியிலை, வேளைவேர், நொச்சித்துளிர், பொடுதலையிலை, முருங்கை ஈர்க்கு, நுணா ஈர்க்கு ஆகிய இவ்வாறு பொருட்களையும் வகைக்கு ஒரு பிடி எடுத்து குறுக அரிந்து இளவறுப்பாக வறுக்க வேண்டும். அதில் 1.3 லி. தண்ணீர் விட்டு ஓமம், சுக்கு, மிளகு, திப்பிலி, சுட்ட (ஆண்) வசம்பு ஆகிய இவ்வைந்து பொருட்களையும் வகைக்கு 5 கி. வீதமெடுத்து இடித்து ஒரு துணியில் முடிந்து அந்நீரில் முறைப்படி 1/8 ஆகக் காய்ச்சி குடிநீராக்கிக் கொள்க. 15-30 மி.லி. அளவு காலையிலும் மாலையிலும் கொடுக்க மாந்தமனைத்தும் தீர்ந்துவிடும். *(ஏடு.362-24,169-21) (புத்.477-50,482-51)*

### *12. முக்கடுகுக் குடிநீர்*

சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், வெள்ளைப்பூண்டு ஆகிய ஐந்து பொருட்களையும் வகைக்கு 1கி. எடை எடுத்து நன்றாக இடித்துப் பொடியாக்கி ஒரு துணியில் முடிந்து அடுப்பேற்றி 325 மி.லி. தண்ணீர்விட்டு அதில் போட்டு நன்றாகச் சிவக்கும்படி காய்ச்ச வேண்டும். அதை வேளைக்கு 15-30 மி.லி. கொடுத்தால் மாந்தம் நீங்கும். *(ஏடு.ஆர்.941-22) (ஏடு.362-25,6218-19,169-21,604-23).*

### *13. மாசிப்பச்சைக் குடிநீர்*

மாசிப்பத்திரி, பற்பாடகம், நாயுருவி, முக்காவேளை, கருஞ்சீரகம், கோழிக்காரம் ஆகிய சரக்குகளை வகைக்கு 20கி. எடுத்திடித்துச் சட்டியிலிட்டுச் சாம்பலாக்க வேண்டும். அத்துடன் வெட்டிவேர், சங்கம்பட்டை, சுக்கு, ஏலரிசி, கடுகுரோகணி, பரங்கிச்சக்கை, சீக்கிராம்பட்டை, காவட்டம்புல், கடுக்காய், மாசிக்காய், வசம்பு, தான்றிக்காய், கோரைக்கிழங்கு ஆகிய இப்பதின்மூன்று பொருட்களையும் வகைக்கு 5கி. வீதமெடுத்து இடித்து 2.6லி. தண்ணீர்விட்டு 335 மி.லி. நீராக வற்றவைத்துக் கொள்க. குழந்தையின் வன்மை, நோயின் தன்மை அறிந்து 15-30 மி.லி. அளவு காலையிலும் மாலையிலும் மூன்று நாள், 5நாள் (அல்லது) 7 நாட்கள் கொடுக்க வேண்டும். அவ்வாறு கொடுக்க மாந்தம் நீங்கும். *(புத்.477-50,482-51-52)*

**14.** உத்தாமணிவேர், வெள்ளைப்பூண்டு, வெதுப்படக்கி, கோழியாவரை, வசம்பு, சாணாக்கிக்கீரை, ஓமம் இவை எல்லாவற்றையும் ஒரு சட்டியிலிட்டு நன்றாகக் கருக்கித் தண்ணீர்விட்டு குடிநீராக்கி அன்றைய தினமே 15 மி.லி. - 30 மி.லி. அளவு புகட்டவும். தாகமும் சுரமும் ஏற்பட்டால் நுணா, வெந்தயம், வசம்பு, வெள்ளைப்பூண்டு ஆகிய

இந்நான்கையும் கருக்கிக் குடிநீராகச் செய்து கொடுக்க காய்ச்சல், மாந்தம், பொருமல் நீங்கும். *(சர.வை.மு.142)*

**15.** வறுத்த ஓமம் 4கி. குப்பைமேனி வேர்ப்பட்டை 70கி. இவற்றை எடுத்து 675 மி.லி. தண்ணீரிற் போட்டு வற்றக்காய்ச்சி 15-30 மி.லி. அளவு கொடுக்க மாந்தம் நீங்கும். *(புத்.482-59)*

**16.** பொடுதலை, வேம்பு, மா, புளி, நுணா, நொச்சி, வேலி ஆகிய இவற்றின் ஈர்க்குகளைச் சமமாக எடுத்துக் கொள்க. ஓமம், வெள்ளைப்பூண்டு, திப்பிலியைச் சமமாக எடுத்துக் கொண்டு அனைத்தையும் சேர்த்து இடித்துப் பொடித்துப் போட்டு 1.3 லி. தண்ணீர் ஊற்றி அதனை எட்டிலொன்றாகக் காய்ச்சி எடுத்து 15-30 மி.லி. கொடுக்க மாந்தம் ஐந்தும் (ஊதுமாந்தம், போர்மாந்தம், சத்திமாந்தம், செரியா மாந்தம், கட்டுமாந்தம்) விட்டோடும். *(ஏடு.362-24,604-21) (ஏடு.ஆர்.941-21,6218-18)*

**17.** துளசி, செம்முள்ளி, தும்பை, கஞ்சாங்கோரை, தைவேளை ஆகிய மூலிகைகளைச் சம அளவெடுத்து நறுக்கிப் போட்டு குடிநீராக்கி 15-30 மி.லி. கொடுக்க மாந்தம் ஓடிவிடும்.

## கற்க வகைகள்

### *1. வெற்றிலைக்காம்பு கற்கம்*

வெற்றிலைக்காம்பு 11 பங்கு, வசம்பு 11 பங்கு, வெள்ளைப்பூண்டு 2 பங்கு, சிறு திப்பிலி 1 பங்கு வீதமெடுத்து இவற்றை இலேசாக வறுத்து வெந்நீர் விட்டரைக்க வேண்டும். அதைக் குழந்தையின் பருவத்திற்குத் தகுந்த அளவு எடுத்து நன்றாகக் காய்ச்சிய வெந்நீரில் கரைத்துக் கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்ய மாந்த நோய் நீங்கும். *(புத்.477-47,482-51)*

### *2. குரோட்டைக் கற்கம்*

குரோட்டையிலையை (விளாவிலை) வதக்கிப் பிழிந்து, ஆமை ஓடு, வசம்பு, வட்டத்திருப்பி இம்மூன்றையும் தனித்தனியாகச் சுட்டரைத்து முற்கூறிய சாற்றில் விரைவில் கலக்கிக் குழந்தைக்கு வார்க்க வேண்டும். இலைச்சாறு 35கி. ஆக இருப்பின் மற்றவற்றை 4கி. சேர்க்க. *(புத்.477-47)*

**3.** இரசம், சுக்கு, வெண்காரம், கெந்தம் இவற்றைச் சம அளவு எடுத்துக் கொள்ள வேண்டும். நேர்வாளத்தை அதே அளவு எடுத்து சுத்தி செய்து

அனைத்தையும் குளிர்ந்தநீரில் அரைத்து அவ்விழுதை 65 மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து கொள்ள வேண்டும். இதனைக் குளிர்ந்த நீரில் குழந்தைக்கு கொடுக்க ஊதுமாந்தம், பொருமல், மாந்தங்கள் நீங்கிவிடும். *(ஏடு.362-69,70)*

### *4. புளியாதியீர்க்கு கற்கம்*

புளி, வேம்பு, மா, நெல்லி, நாரத்தை, ஓதி, நுணா, தகரை, எலுமிச்சை ஆகியவற்றின் ஈர்க்கும், வல்லாரைக்கீரை, பழம்பாசி, புள்ளடி, கோரைக்கிழங்கு, வெங்காயம், அத்திமொக்கு, சிற்றாமுட்டிவேர், பேராமுட்டிவேர், மணித்தக்காளி, முசுமுசுக்கை, விட்டுணு கிரந்தி, நரிப்பயற்றங்கொடி, பற்பாடகம், மூக்கொற்றி, சத்திச் சாட்டரணை (சத்திச்சாரணை), அகத்தி, அம்மான் பச்சரிசி, சீந்திற்கொடி, பொன்வறுவலாய் வறுத்த சீரகம், கருஞ்சீரகம், சுக்கு, வெந்தயம், ஆகிய சரக்குகளை வகைக்கு 18கி. எடுத்து கோரோசனம், அக்கராகாரம், அதிமதுரம், மான் கொம்பு, சாதிக்கோட்டம் இவ்வைந்தையும் வகைக்கு 488 மி.கி. வீதமெடுத்து அனைத்தையும் ஆதொண்டைச் சமூலக் குடிநீர் விட்டு அரைத்துக் கற்கமாக்கி சிறு அளவாகக் காலை, மாலை இருவேளையுமாய் பத்துநாள் கொடுக்க மாந்தம் போகும். *(புத்.477-288)*

5. சடைச்சியிலை, இண்டங்கொழுந்து, பாவட்டைஇலை, மிளகுத் தக்காளியிலை, வேலிப்பருத்தியிலை, நல்ல பருத்தியிலை, கண்டங்கத்திரியிலை, துளசியிலை, தூதுவளையிலை, பெருந் தும்பையிலை, நல்ல தும்பையிலை இவற்றைச் சமமாகக் கொண்டு வந்து இடித்து, சட்டியைக் காயவைத்து வதக்கிச் சாறுபிழிந்து கொள்க. அதில் ஒற்றைப்பூடு, ஓமம், திப்பிலி, மிளகு, பெருங்காயம், வெள்ளை வெங்காயம், ஆகியவற்றை அரைத்து கலக்கிக் கொள்க. அதை 15-30 மி.லி. வீதம் மூன்று நாள் கொடுக்கவும். பத்தியம் இருக்கவும். மாந்தம் குணமாகும். *(ஏடு.612-8-9)*

## *சூரண வகைகள்*

### *1. ஐங்காயச்சூரணம்*

மேற்றோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு, ஓமம், கருஞ்சீரகம், குரோசாணி ஓமம், இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம், மஞ்சள், கடுக்காய்த்தோல், வாய்விடங்கம், கண்டதிப்பிலி எனும் வங்காளத் திப்பிலி.

தாளிசபத்திரி, மாசிக்காய், அதிமதுரம், அக்கராகாரம், வெட்பாலையரிசி, தான்றிக்காய், சோம்பு, கறிமஞ்சள், வால்மிளகு,

கொத்துமல்லி விதை ஆகிய சரக்குகளை வகைக்கு 70கி. எடுத்துக் கொள்க. சாதிக்காய், சாதிபத்திரி, கோரோசனை இவற்றை வகைக்கு 4கி. எடுக்க.

கோரோசனையைத் தவிர மற்ற எல்லாவற்றையும் ஒன்று சேர்த்திடித்து துணியில் வடிகட்டிக் கொள்க. பிறகு கோரோசனையைப் பொடித்துச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்திக் கொள்ளவும். 135 மி.கி. எடுத்து தேன், வெண்ணெய் முதலியவற்றில் அனுபானித்துக் கொடுக்கவும். இம்மருந்தைக் கொடுக்க மாந்தநோய்கள் அனைத்தும் நீங்கும். *( கை.பி.பால.போதினி-283)*

2. பருத்திவேர், சுக்கு, அசமதாகம், மிளகு, உப்பு இவற்றை வறுத்துத் தூளாக்கி வெய்யிலில் சற்றே உலர்த்தி துணியில் வடிகட்டி அதனை 135 மி.கி. அளவெடுத்து தூய்மையான தயிரினின்று எடுத்து தெளிந்த தண்ணீரில் கலந்து உட்கொள்ள மாந்தம் விட்டோடும்.

*(ஏடு.109-10) (கை.பி.98-15)*

### *3. சுண்டை வற்றல் சூரணம்*

சுண்டைவற்றல், கறிவேப்பிலை, மாம்பருப்பு, ஓமம், நெல்லிவற்றல், மாதுளம் பழத்தோல், வெந்தயம் ஆகியவற்றைச் சமஅளவெடுக்க. காயவைத்து இளவறுப்பாய் வறுத்து இடித்துப் பொடித்து சலித்துக் கொள்க. 250-500 மி.கி. அளவு எடுத்து எருமைத் தயிரில் கலந்து இருவேளை கொடுக்க மாந்தம் தீரும். *(பா.செய்.கு.315-316)*

### *4. தாளிசாதிச் சூரணம்*

தாளிசபத்திரி, இலவங்கப்பட்டை, ஏலம், சுக்கு, அதிமதுரம், பெருங்காயம், நெல்லிமுள்ளி, கோட்டம், திப்பிலி, கருஞ்சீரகம், சதகுப்பை, ஓமம், நற்சீரகம், திப்பிலிக்கட்டை, கிராம்பு, சாதிபத்திரி, கற்கடகசிங்கி, சாதிக்காய், தான்றிக்காய்த்தோல், கடுக்காய்த்தோல், சடாமாஞ்சில், மிளகு, சிறுநாகப்பூ, சண்பகமொக்கு, வாய்விடங்கம், இலவங்கப்பத்திரி இவற்றை வகைக்கு 1 பங்கெடுக்க. கொத்துமல்லி விதை 6 பங்கெடுக்க. சர்க்கரை 12 பங்கெடுக்க.

மேற்கூறிய சரக்குகளைத் தூய்மை செய்து வெய்யிலில் காய வைத்து பொன் வறுவலாக வறுத்து இடித்துச் சலித்து சீனி (சர்க்கரை) சேர்த்துக் கொடுக்கவும். 250-500 மி.கி. அளவு 2 வேளை கொடுக்க மாந்தம் நீங்கும்.

*5. பஞ்சதீபாக்கினிச் சூரணம்*

திரிகடுகு, (சுக்கு, மிளகு, திப்பிலி), ஏலம், சீரகம் இவற்றை வகைக்குச் சமஅளவெடுக்க. சர்க்கரை ஒரு சரக்கின் அளவுக்கு 5 மடங்கு எடுக்க. சரக்குகளை இளம் வறுப்பாய் வறுத்து பொடித்து சலித்து சர்க்கரையைக் கலந்து கொள்க. அதனை 250-500 மி.கி. அளவு தேன் அல்லது நெய்யில் கலந்து புகட்ட பொருமல், செரியாமை நீங்கும்.

*6. அன்னப்பொடி*

சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், சீரகம், கறிவேப்பிலை, இந்துப்பு இவற்றை வகைக்குச் சமவெடை எடுக்க. கால் பங்கு பெருங்காயத்தைச் சேர்த்துப் பொடித்து 250-500 மி.கி. அளவு எடுத்து சோறுண்ணும் பொழுது முதற்பிடி சோற்றுடன் கலந்து சாப்பிட மந்தத்தை விலக்கி வயிற்றுப்பிசத்தை நீக்கி பசியையும்; சீரணத்தையுமுண்டாக்கும்.

*(குணபா-558)*

## நெய் வகைகள்

*1. உத்தாமணி நெய்*

ஓமம் 35 கி., உத்தாமணியிலை ஒருபிடி, வெற்றிலைக்காம்பு ஒருபிடி, தோல் சீவின சுக்கு, சுட்டவசம்பு, வெள்ளைப்பூண்டு இம்மூன்றையும் வகைக்கு 4கி. எடுத்து இவை அனைத்தையும் சேர்த்து வெந்நீர் விட்டு நன்கு அரைத்து 1.3 லி. பசுநெய்யில் கலக்கி அடுப்பெரித்துப் பக்குவமாக வடித்தெடுக்க வேண்டும். இதனைத் தகுந்த பத்தியத்துடன் 5-15 மி.லி. அளவு மாந்த நோய்க்குக் கொடுக்க குணமாகும். *(புத்.477-52)*

2. முறுக்கு, பொடுதலை, ஏலம், அதிவிடையம், வசம்பு, அதிமதுரம், ஓமம், உள்ளி, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. இச்சரக்குகளை ஒன்று சேர்த்தரைத்து 335 மி.லி. அளவு நெய்யில் கலந்து காய்ச்சி மெழுகு பதமாக வந்தவுடன் இறக்கி வடித்து வைத்துக் கொள்க. அதனை 5-15 மி.லி. அளவு அனுபானமறிந்து கொடுக்க மாந்தம் குணமாகும். *(ஏடு.435-24)*

3. வேலிப்பருத்தியிலையை ஒருபிடி எடுத்து சட்டியிலிட்டு வறுத்து வைத்துக் கொள்க. தேவையான அளவு எருமை வெண்ணெயைச் சட்டியிலூற்றி இவ்விலையைப் போட்டு உருக்கிக் காய்ச்சுக. காய்ந்த பிறகு சட்டியிலிருக்கும் நெய்யை மறுகலசத்திலே வடித்து வைத்துக்

கொள்க. அதனை 5-15 மி.லி. அளவு குழந்தைக்குக் கொடுக்க மாந்தம் தீரும். *(ஏடு.435-33)*

4. பசுவின் வெண்ணெயை 1.3லி எடுக்க. ஓமம், திப்பிலி, உத்தாமணியிலைக் காம்பு இவற்றை ஒவ்வோர் பிடியெடுத்துக் கொள்க. சுக்கு, கற்றாழை, வசம்பு, உள்ளி ஆகியவற்றை 4கி. எடுத்துக் கொள்க. இம்மூலிகைகளை அரைத்து வெண்ணெயில் கலந்து எரித்துப் பதமாக இறக்கிக்கொள்க. அதனைக் குழந்தையின் தன்மை, நோயின் வன்மையை அறிந்து 5-15 மி.லி. கொடுக்க மாந்தங்கள் நீங்கிப் போகும். *(ஏடு.362-26)*

5. வேலிப்பருத்தி, பெருந்தும்பை, குப்பைமேனி, குறிஞ்சி, முதியார் கூந்தல் ஆகிய மூலிகைகளின் சாற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. எருமை நெய் 335 மி.லி. எடுக்க. வசம்பு, பூண்டு, சுக்கு, திப்பிலி, பெருங்காயம் ஆகியவற்றை 1/4 கி. எடுத்து இடித்து ஒன்றாய்ச் சேர்த்தரைத்து மேற்சொன்ன கலவையில் சேர்க்க. அதனைக் காய்ச்சி மெழுகுபதமாக வரும்போது வடித்தெடுத்துக் கொள்க. அதனைக் காலை, மாலை மூன்று நாட்களுக்கு 5-15 மி.லி. கொடுக்க குழந்தைக்கு வரும் மாந்தம், பொருமல் நீங்கிப்போகும்.

### *6. ஆடாதோடை நெய்*

ஆடாதோடைச்சாறு, பசும்பால், பசுநெய் இவற்றை வகைக்கு 2.8லி. எடுக்க. யானைத்திப்பிலி, திப்பிலிக் கொடி, வேலிவேர்ப்பட்டை, இந்துப்பு, சுக்கு, யவாட்சாரம், சத்திச்சாரம் இவற்றை வகைக்கு 5கி. எடுக்க. சரக்குகளைப் பொடித்து பசும்பால் விட்டரைத்து, கலக்கி ஆடாதோடைச்சாறும் நெய்யும் கலந்து காய்ச்சிப் பதத்தில் வடிகட்டிக் கொள்ளவும். சுக்குக் குடிநீரில் கலந்து முதலிருவேளைக்கு 5 கிராமும் மூன்றாம் வேளை 2.5 கிராமும் கொடுக்க குழந்தைகளின் மாந்தம் குணமாகும். *(செய்.மு.குறிப்பு-273)*

## எண்ணெய் வகைகள்

1. சிற்றாமணக்கெண்ணெய் 2.6லி., துளசி, முசுமுசுக்கை, உத்தாமணி, சீந்தில்கொடி, தேள்கொடுக்கு இலை, சிறு செருப்படி, கையாந்தகரை, வல்லாரை, மணித்தக்காளி, நுணாவிலை, கஞ்சாங்கோரை, கொழிஞ்சியிலை, வெள்ளறுகு, பிரமியிலை ஆகிய மூலிகைகளின் சாறு வகைக்கு 335 மி.லி. எடுக்க. வரகுவைக்கோலைச் சுற்றி எரித்து இடித்துப் பிழிந்த ஆற்றுத் தும்மட்டிக்காயிலைச் சாறு 335 மி.லி. எடுக்க.

கருஞ்சீரகம், சீரகம், சன்னலவங்கப்பட்டை, வெந்தயம், கோட்டம் இவற்றை வகைக்கு 17.5 கி. சண்பகமொக்கு 4கி. எடுத்து இவை எல்லாவற்றையும் சேர்த்திடித்து 17கி, தோலுரித்த வெள்ளைப் பூண்டையும் சேர்த்து அம்மியில் வைத்து தண்ணீர் வார்த்தரைத்து வெண்ணெய் போலெடுத்து வைத்துக் கொள்ளவும்.

மேற்கூறிய சாறுகளை ஒன்றாகக் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்துச் சோற்றுப் பதமாய் வரும்போது மேற்கூறப்பட்டுள்ள மருந்துச் சரக்குகளின் தூளைப்போட்டு நன்றாகக் கிளறி விட்டு கடுகுத்திரள் பதத்திலிறக்கி வடிகட்டிச் சீசாவிற் பத்திரப்படுத்த வேண்டும். 5-15 மி.லி. அளவு தாய்ப்பால், சுக்குக் குடிநீர், ஓமக்குடிநீர், ஓமத்திராவகம், தேன் முதலியவை அனுபானமாகும். *(கை.பி.போதினி-230)*

2. மணித்தக்காளி, ஓரிலைத்தாமரை, அவுரி, புங்கு இவற்றின் இலைச்சாறு, சிற்றாமணக்கெண்ணெய் இவற்றை வகைக்கு 1.3லி. எடுத்து ஒன்றாய்க் கலந்து அதில் சங்கு, சிற்றாமணக்கு, நாவல், நன்னாரி, கருந்துளசி, சின்னி, பற்பாடகம், குப்பைமேனி, கவுதும்பை இவற்றின் வேர் வகைக்கொரு பிடி, கடுக்காய்ப்பூ, அதிமதுரம், சடாமாஞ்சி, சண்பகப்பூ, இலவங்கம், செவ்வியம், கடுக்காய், வால்மிளகு, கண்டுபாரங்கி, இலிங்கம், மனோசிலை, வாளம், பூரம், கெந்தி இவற்றை வகைக்கு 4கி. வீதம் எடுத்து இடித்துப் போடுக. அதனை மெழுகு பதமாகக் காய்ச்சி வடிக்கும்போது அதில் புனுகு, கத்தூரி வகைக்கு 4கி. எடுத்து பொடித்து போட்டு வைத்துக் கொண்டு 0.5 கி. வீதம் குழந்தைக்கு ஏழு நாட்கள் கொடுத்து வர சகல மாந்தங்களும் தீரும்.

தாயானவள் உப்பு, புளி தள்ளி பத்தியங்காக்க வேண்டும். பின் ஏழுநாள் கழித்து குழந்தைக்கும் தாய்க்கும் ஓமந்தேய்த்து தலைக்கு நீர் வார்க்க மாந்த மனைத்தும் நீங்கும். *(புத்.482-62)*

அதில் பேதி கண்டு மூர்ச்சையானால் சுக்கு தட்டிப் போட்டுக் குடிநீர் வைத்துக் கொடுக்க நிற்கும்.

3. கஞ்சாங்கோரை, பிரமி, துளசி, பழம்பாசி, குட்டிவிளா, வல்லாரை, சீந்தில்தண்டு, வசம்பு, கடுகுரோகணி, வெள்ளைப்பூண்டு இவற்றை வகைக்கு 4கி. எடுத்து பொடித்து 165 மி.லி. விளக்கெண்ணெயிற் போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து 5-15 மி.லி. அளவு கொடுக்க அனைத்து மாந்தங்களும் தீரும்.

4. கடுக்காய், காட்டுமல்லிகை, கற்றாழை, வெந்தயம், சீரகம், சாரணை, வெங்காயம் ஆகிய இவற்றைச் சமஅளவு எடுத்து தேவையான அளவு

ஆமணக்கெண்ணெயுடன் கலந்து எரித்துத் தகுந்த பக்குவத்தில் வடித்துக் கொண்டு 5-15 மி.லி. அளவறிந்து கொடுக்க மாந்தம் நீங்கிப்போகும். *(ஏடு. 362-53)*

5. விளக்கெண்ணெய் 1.3லி. எடுக்க. கற்றாழைச்சாறு, வேப்பஞ்சாறு, நீருள்ளியின் சாறு ஆகிய இவற்றை 325 மி.லி. எடுக்க. பசுவின் பால் 675 மி.லி. எடுக்க. இவை அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொள்க. அதிலே கோட்டம், அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், சன்னலவங்கப் பட்டை ஆகிய இவற்றை வகைக்கு 9கி. எடுத்து பொடித்து கலந்து கொள்க. வெந்தயம் 35கி. கடுக்காய் 20கி. எடுக்க. இவற்றையும் பொடித்து சேர்க்க. இக்கலவையை அடுப்பேற்றி எரித்து காய்ச்சி மெழுகு பதமாக வரும்போது இறக்கிக் கொள்ளவும். 5-15 மி.லி. அளவெடுத்து அதனைக் குழந்தையின் தன்மை, நோயின் வன்மைக்கேற்ப கொடுக்க மாந்தம் நீங்கும். *(ஏடு.362-57)*

6. வெள்ளீண்டு, தூதுவளை, சங்கங்குப்பி, உத்தாமணி, பூவரசு, குப்பைமேனி, ஆடாதோடை, சாரணை, பூலா, நரிபயற்றங்கொடி, பிரமி, வேளை, கற்றாழை ஆகிய பதின்மூன்று மூலிகைகளையும் கொண்டு வந்து இடித்து 1.3 லி. சாறு எடுக்கவும். விளக்கெண்ணெய் 2.6லி. எடுக்கவும். கருஞ்சீரகம், புனுகு, ஓமம், பூண்டு, கோரோசனை, சண்பகப்பூ, வசம்பு, சாதிக்காய், தான்றிக்காய் ஆகிய சரக்குகளை வகைக்கு 35கி. எடுத்து அரைத்துக் கொள்க. அதனை முன்சொன்ன கலவையில் கலந்து கொள்க. அடுப்பெரித்து பதமாய்க் காய்ச்சி பக்குவத்தில் வடித்து 5-15மி.லி. கொடுத்து வர மாந்தம் ஒன்பதும் நீங்கும். *(புத்.476-104)*

7. விளக்கெண்ணெய், வெள்ளாட்டுப்பால் வகைக்கு 1.3லி. எடுக்க. கிளுவைப்பட்டை, கருவேலம்பட்டை, வெங்காயம், இண்டங்கொழுந்து இவற்றை ஓர்பிடி எடுக்க. சீரகம் 35கி. துத்தி 9கி. காசுக்கட்டி 9கி. ஆகிய இவற்றை எடுத்து இடித்துப் பொடி செய்து மேற்சொன்ன கலவையிலிட்டு கனமான அனலிலிட்டுக் காய்ச்சுக, மெழுகு பதமாக வரும்பொழுது இறக்கிக் கொள்க. அதனைக் குழந்தைக்கு 5-15 மி.லி. அளவு கொடுக்க மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.362-58)*

### *8. சர்வ மாந்த எண்ணெய்*

சங்கம் வேர்ப்பட்டை, பூவரசம்பட்டை, புங்கம் வேர்ப்பட்டை இவற்றை வகைக்கு 35கி. எடுத்து மைபோலரைத்து எண்ணெயிற் கலக்கி அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து மெழுகு பதத்திலிறக்கி

வடிகட்டி வைத்துக் கொள்ளவும். பிறகு இரசகற்பூரத்தை எண்ணெயை விட்டுச் சிறுக சிறுக அரைத்து எண்ணெயுடன் கலந்து ஒன்று சேர்த்து பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளவும். சிறுவர்களுக்கு 5-15 மி.லி. என்ற அளவில் கொடுக்கலாம். தாய்ப்பால், இளநீர், சோம்புத்திராவகம், ஓமத்திராவகம், சுக்குக்குடிநீர் முதலியன அனுபானமாகும்.

*(கை.பி.போதினி.231)*

9. மணித்தக்காளி, துளசி, துத்தி, பிரமி, வில்வம், வல்லாரை, கையாந்தகரை, பொடுதலை, நுணா, புங்கு, சங்கு ஆகியவற்றின் இலைச்சாறு, விளக்கெண்ணெய் இவற்றை வகைக்கு 1.3லி. எடுத்து ஒன்றாகக் கலந்து கொள்க. அதில் கடுக்காய், தான்றிக்காய், சுக்கு, திப்பிலி, ஆமையோடு, அரத்தை, ஓமம், வசம்பு, கத்தூரி மஞ்சள் இவற்றை வகைக்கு 35கி, சாதிக்காய் 4கி. இவற்றை எடுத்துப் பொடித்து மேற்சொன்ன கலவையில் போட்டு, பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொள்க. அதனைக் குழந்தையின் வயதுக்குத் தக்கபடி 5-10 மி.லி. அளவறிந்து கொடுக்க மாந்தம் நீங்கிப்போகும். *(புத்.482-62)*

### *10. அகத்தி எண்ணெய்*

அகத்திச்சாறு, சாரணை இலைச்சாறு, உத்தாமணியிலைச் சாறு, ஆமணக்கெண்ணெய் இவற்றை வகைக்கு 335 மி.லி. எடுத்துக் கொள்ளவும். 4கி. சுட்ட வெள்ளை வசம்பு எடுத்து மேற்சொன்ன சாற்றில் தனித்தனியே அரைத்து கலந்து மண்சட்டியில் ஊற்றி அடுப்பில் வைத்து எரித்துப் பக்குவமானவுடன் இறக்கிக் குழந்தைக்குக் கொடுக்கவும். மாந்த நோய் குணமாகும். *(புத்.477-52)*

### *11. பூண்டு எண்ணெய்*

கஞ்சாங் கோரையிலை, பிரமியிலை, துளசி, பழம்பாசி, நிலவிளா, வல்லாரை, சீந்திற்சமூலம், வசம்பு, கடுகுரோகணி, வெள்ளைப்பூண்டு ஆகிய இப்பத்துப் பொருட்களையும் வகைக்கு 4கி. எடுக்க. ஆமணக்கு நெய்யில் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறிது எரித்துப் பக்குவமானவுடன் இறக்கி வடிகட்டிக் கொள்க. அதைக் காலையிலும் மாலையிலும் 5-15 மி.லி. வீதம் குழந்தைக்குக் கொடுக்க வேண்டும். இதைச் செய்தால் மாந்தம் போகும். தாய் இச்சாபத்தியம் காக்க வேண்டும். *(புத்.477-53)*

12. இஞ்சி, சங்கு, சின்னி, பொன்னாங்காணி, கரந்தை, வன்னி ஆகிய இவற்றைப் பிழிந்த சாறு வகைக்கு 335 மி.லி. எடுத்துக் கொள்க. சிற்றேரண்ட எண்ணெயை 335 மி.லி. எடுத்து அதனுடன் கலந்து கொள்க. அதனை ஒரு விறகு கொண்டு எரித்து காய்ச்சி இறக்கிக்

கொள்க. அதனைக் குழந்தைகட்கு 5-10மி.லி. அளவு கொடுக்க மாந்தம் நீங்கும். *(ஏடு.576-5,56)*

**13.** நீர்முள்ளி வேர்ப்பட்டையையும், ஈரவெங்காயத்தையும் சமமாகச் சேர்த்துக் கொள்க. விளக்கெண்ணெய் தேவையான அளவைக் கலந்து பதமாய் எரித்துக் கொள்க. பக்குவத்தில் வடித்து 5-15 மி.லி. அளவு குழந்தைகளுக்கு அளவறிந்து கொடுக்கவும். (சகல வாகடத் திரட்டு).

### *14. இளநீர் எண்ணெய்*

இளநீரில் பக்குவம் செய்த சிற்றாமணக்கெண்ணெய் 1.3லி. பசுவின் பால், 670 மி.லி. கற்றாழைச்சாறு ஆகியமூன்றையும் ஒன்றாகக்கூட்டி எரித்து மெழுகு பதத்தில் வடித்துக் கொள்க. அதில் சீரகம், மாசிக்காய், கோட்டம், அதிமதுரம், கிராம்பு, ஏலம், சுக்கு ஆகிய இவ்வேழு பொருட்களையும் இளவறுப்பாக வறுத்து நுண்ணிய பொடியாக இடித்து வகைக்கு 4.4கி. எடுத்துக் கொள்க. வெந்தயத்தையும் இளவறுப்பாக வறுத்து இடித்துத் தூளாக்கி 9கி. எடுத்துச் சேர்த்துக் கொள்க. இதனைக் கதிர்ப்புடம்(வெயிலில்) வைத்து எடுத்து காலை, மாலை ஆகிய இருவேளையும் 5-15 மி.லி. எடுத்து வேண்டிய நாள் மட்டும் குழந்தைக்குப் புகட்டி வர மாந்தம் நீங்கிப்போகும்.

குறிப்பு: சிற்றாமணக்குக் கொட்டையை இளநீரில் அவித்து ஓடு நீக்கிச் சிதைத்து இளநீரில் சேர்த்துக் காய்ச்சி மிதக்கும் எண்ணெயை வடித்தெடுப்பதே இளநீரில் பக்குவம் செய்வதாகும். *(புத்.477-292)*

### *15. சாதிக்காய் எண்ணெய்*

சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, ஏலம், கோட்டம், அதிவிடையம், குங்குமப்பூ, அதிமதுரம், பஞ்சமூலம், கடுக்காய், தான்றிக்காய், மாசிக்காய், கருஞ்சீரகம், தக்கோலம், குரோசாணி ஓமம், சதகுப்பை, சித்திரமூலம் ஆகிய இச்சரக்குகளை வகைக்கு 8கி. எடுத்துக் கொள்க. ஓமம் 20கி, வசம்பு 24கி. எடுக்க. வசம்பைச்சுட்டுச் சாம்பலாக்கிக் கொள்க. மற்ற மருந்துகளைப் பொடித்துச் சூரணமாக்கிக் கொள்க. கணப்பூண்டு, இண்டங்கொழுந்து, கனத்த பழம்பாசி, இலந்தங் கொழுந்து, நுணாயிலை, நாவற்கொழுந்து, விடத்தாரையிலை, கருவேலிலை, சங்கிலை, கழற்கொடி, வட்டத்திருப்பி, விட்டுணு கரந்தை, அம்மான்பச்சரிசி, பகன்றை, சடைச்சியிலை, குதிரைவாலி, சிறுபுள்ளடி, கண்டங்கத்திரி, செருப்படை, துளசி, தும்பை, கோழியவரை, ஆடாதோடை, வல்லாரை, பொடுதலை, வேளை,

தவசிமுருங்கை, வறட்பூலா. ஆகிய மூலிகளைகளின் இலைகளை எடுத்து இடித்துச் சாற்றை மொத்தமாக 1.3லி. எடுத்துக் கொள்க.

உப்பிலிவேர், பெருங்கிழங்கு, பூதகரப்பான்பட்டை, வாதகரப்பான் பட்டை, திருநீற்றுப்பச்சைவேர், கருவேப்பிலையின் ஈர்க்கு ஆகிய இவற்றை வகைக்கு 9கி. எடுத்து அவற்றைச் சூரணம் செய்து முன்சொன்ன மருந்துடன் சேர்க்க. முன்கூறிய சாறுகளையும் சேர்த்துக் கொள்க. விளக்கெண்ணெயை 1.3லி. எடுத்துக் கொள்க. தாய்ப்பால் 165 மி.கி. எடுத்து கலக்குக. அனைத்தையும் ஒன்று சேர்த்து பக்குவமாய்க் காய்ச்சிக் கொள்க. அதனை 5-15 மி.லி. அளவு ஐந்து நாட்கள் கொடுத்து பத்தியங் காக்க வேண்டும். அவ்வாறு செய்ய மாந்தம் 18ம் நீங்கிப் போகும். *(புத்.476-57,58)*

### *16. எண்ணெய்*

விளக்கெண்ணெய், மணித்தக்காளிச் சாறு இவற்றை வகைக்கு 335 மி.லி. எடுக்க. வெங்காயச்சாறு 700 மி.லி. எடுத்து ஒன்றாய்க் கலந்து காய்ச்சி அதில் 4கி. கடுகுரோகணியை எடுத்து வறுத்துப் பொடித்துப் போட்டு 5-15 மி.லி. அளவு குழந்தைகட்குக் கொடுக்க மாந்தம் தீரும். *(புத்.482-61)*

### *17. எண்ணெய் (வேறு)*

புள்ளடி, தம்பட்டவரை, நிலவாகை, சங்கு, நாயுருவி, நத்தைச்சூரி, சூரையிலந்தை(கருஞ்சூரை), தூதுவளை, கீழ்க்காய்நெல்லி, பொடுதலை, செம்பொன்னெருஞ்சி, மூக்கரைச்சாரணை, வேலிப்பருத்தி, நொச்சி, பிரண்டை, மஞ்சணாத்தி, மா, இலுப்பை, பருத்தி, சங்கங்குப்பி, முருக்கிலை ஆகிய மூலிகைகளைச் சமமாக எடுக்க. அவற்றை இடித்த சாறு மொத்தமாக 1லி. எடுக்க. நல்லெண் ணெயையும் விளக்கெண்ணெயையும் வகைக்கு 1லி. எடுக்க. சுக்கு, மிளகு, திப்பிலி, அதிமதுரம், கருஞ்சீரகம், அக்கராகாரம் இவற்றை வகைக்கு 5 கி. எடுத்து மேற்கூறப்பட்ட சாற்றிலரைத்து எண்ணெயில் கலந்து கொள்க. பக்குவமாக எரித்து பொன்னிறமாகச் சிவந்து வரும் போது வடித்தெடுத்திறுத்துக் கொள்க. அதனை 5-15 மி.லி. அளவு குழந்தைகட்கு அளவறிந்து கொடுக்க மாந்தம் நீங்கும். *(கைபி.98-32-33)*

### *18. பொன்னாங்காணி எண்ணெய்*

பொன்னாங்காணியிலை, துளசியிலை, தகரையிலை, கீழ்க்காய் நெல்லியிலை, வெண்ணொச்சியிலை, சின்னியிலை, நாயுருவியிலை, அம்மான்பச்சரிசியிலை, கருநொச்சியிலை ஆகிய இலைகளை எடுத்துச்

சாறு பிழிந்து கொள்க. நாவற்கொழுந்து, ஆவாரை கொழுந்து, வேப்பங் கொழுந்து, சூரைக்கொழுந்து, முடக்கறுத்தான் கொழுந்து, முருங்கைத்துளிர், புங்கன் கொழுந்து, ஓரிலைத்தாமரை, புளியாரை, ஆவாரை, புள்ளடி, நரிப்பயற்றங்கொடி, இண்டந்தண்டு, முசுமுசுக்கை, அகத்தின்பருப்பு, சீந்தில் கொடி, ஆடாதோடை, ஆடுதின்னாப்பாளை, விஷ்ணுகரந்தை ஆகிய மூலிகைகளின் சாற்றைத் தனித்தனியாக எடுத்து அவற்றை ஒன்று கலந்த சாறு 1.3 லி. எடுத்து வைக்க.

அத்துடன் ஆவாரை, விடதாரி, நிலக்குமிழ், சிறுகீரை, வில்வம், உத்தாமணி, மிளகுத்தக்காளி, தைவேளை, சங்கம், கண்டங்கத்திரி, நாய்வேளை, குட்டிவிளா, சங்கங்குப்பி ஆகியவற்றின் வேர்களை வகைக்கு ஒருபிடி எடுத்து குடிநீராக்கிக்கொள்க. அதனை மண் சட்டியிலூற்றி அத்துடன் 1.3லி. சிற்றாமணக்கெண்ணெயையும் சேர்க்க. அத்துடன் ஆமையோடு, ஓமம், கடல்நுரை, சீரகம், திப்பிலி, கடுகுரோகணி, கிராம்பு, கருஞ்சீரகம், பற்பாடகம், மணிப்புங்கம்பழம், வசம்பு, பெருங்காயம், செங்கத்தாரிப்பட்டை ஆகிய பொருட்களை வகைக்கு 5கி. எடுத்துப் பொடிச் செய்து போட்டு சிறுகக் காய்ச்சி பக்குவமானவுடன் இறக்கிக் கொள்க. காலை, மாலை 5-15 மி.லி.. கொடுக்க மாந்த நோய்கள் குணமாகும். பின்னர் பத்து நாட்களுக்கு ஒருமுறை இரண்டு மடங்கு வீதம் 5 அல்லது 7 நாட்கள் வழங்க வேண்டும். அவ்வாறு கொடுக்க குடல் சம்பந்தப்பட்ட ஏனைய நோய்கள் நீங்கிவிடும். மீன், புளி, இறைச்சி, கரப்பான் பண்டங்கள் ஆகிய இவற்றை நீக்க வேண்டும். மிளகுநீர், சோறு சாப்பிட பலன் ஏற்படும். *(புத்.476-105-107,477-168-169)*

**19.** சிற்றாமணக்கு நெய் 1.4லி, ஈயக்கொழுந்துச் சாறு 2.8லி. எடுக்க. கருஞ்சீரகம் 35கி, கோரோசனை 4கி. எடுக்க. திரவங்களைப் பாண்டத்திலிட்டுக் கொதிக்க வைத்து சாறு சுண்டும்போது கருஞ்சீரகத்தை இடித்துப் போட்டு மெழுகு பக்குவத்தில் காய்ச்சிக் கொள்க. வடிகலத்தில் கோரோசனையைப் பொடித்துப் போட்டுத் தைலத்தை வடித்துக் கொள்ளவும். தினமும் காலையில் 10 மி.லி. அளவெடுத்து பாலில் கலந்து கொடுக்கவும். அனைத்து மாந்தங்களும் நலமாகும். *(பா.செ.மு.-231)*

**20.** ஆமணக்கெண்ணெய், உத்தாமணிச்சாறு ஆகியவற்றை வகைக்கு 2.8 லி. எடுக்க. வெட்பாலையரிசி, கருஞ்சீரகம், கடுகுரோகணி, நீரடிமுத்துப் பருப்பு, கோட்டம், கார்போகரிசி, சண்பகப்பூ, அக்கராகாரம்

ஆகியவற்றை வகைக்கு 8.75கி. எடுக்க. நேர்வாளம் 70கி. எடுக்க. சரக்குகளைப் பொடித்து உத்தாமணிச்சாறு விட்டரைத்து ஆமணக்கெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடிக்கவும். 5-10 மி.லி. அளவெடுத்து நோயின் தன்மை, குழந்தையின் தன்மையறிந்து தாய்ப்பாலில் கலந்து அனலில் வெதுப்பி, குலுக்கி காலையில் மட்டும் கொடுக்கவும். மாலையில் மாந்தக் குடிநீர் கொடுக்கவும். எண்வகை மாந்தம் தீரும். *(பா.செ.மு.கு.231-232)*

### *21. அண்டத் தைலம்*

கோழிமுட்டையைத் தேவையான அளவு எடுக்க. அவற்றைத் தண்ணீரில் அவித்து உள்ளிருக்கும் மஞ்சள் கருவைப் பிரித்தெடுக்க. இரும்பு வாணலியில் அவற்றைத் தூள் செய்து போட்டு அடுப்பெரிக்க. அவற்றை வறுத்து அழுத்த எண்ணெய் பிரியும். அவ்வெண்ணெயைச் சாய்த்துப் பிடித்து பத்திரப்படுத்தவும். 1-4 துளிப் பசும்பாலில் கலந்து இருவேளை கொடுக்க மாந்தம் நீங்கும். *(செய்.மு.குறிப்பு - 205)*

### *22. கணத்தைலம்*

சிற்றாமணக்கு எண்ணெய், பசுவின் பால் வகைக்கு 1.4 லி, கற்றாழைச் சாறு, பொற்றலைக்கையான் சமூலம், கோவையிலை, பொன்னாங்காணி, புளியாரை, வெங்காயம், கற்பூரவள்ளி இலை இவற்றின் சாறு வகைக்கு 700 கி. அக்கராகாரம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, கோட்டம், வெந்தயம், கற்கடகசிங்கி, சோம்பு, சீரகம், பூண்டு, மாசிக்காய், சாதிப்பத்திரி, வகைக்கு 10 கி. சாதிக்காய், கோரோசனை, குங்குமப்பூ இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க.

அனைத்துச் சரக்குகளை இடித்துப் பொடித்து, சாறு, பால், எண்ணெய் முதலியவற்றையும் ஒன்று சேர்த்துப் பதம் வரும் வரை காய்ச்சிக் கொள்க. பிறகு வடிகட்டி கோரோசனை, குங்குமப்பூ, இரண்டையும் பொடித்துச் சேர்க்கவும். தைலத்தை 5 நாள் நெற்புடத்தில் வைக்கவும். 4-8 மி.லி. தாய்ப்பாலில் கலந்து காலை மட்டும் நோய் தீரும் வரை கொடுக்கவும். அனைத்து மாந்தமும் தீரும். *(செய்.மு.குறி-211-212).*

## மாத்திரை வகைகள்

**1.** சுத்தி செய்த சாதிலிங்கம், சுத்தி செய்த இரசகற்பூரம், ஏலரிசிச் சூரணம், பூங்காவித்தூள் இவற்றை வகைக்கு 2கி. அளவு எடுக்க. இவற்றைக் கல்வத்திட்டு அரைத்துப் பொடித்து சதாப்பிலைச் சாற்றைச்

சிறுகச் சிறுக வார்த்து 6 மணி நேரம் அரைத்து 65 மி.கி. அளவு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்தி வைக்கவும்.

ஒரு வயதுக்குட்பட்ட குழந்தைகட்கு வயதுக்குத் தக்கபடி மாத்திரையை உபயோகிக்கலாம். தாய்ப்பால், தேன், பொடுதலையைப் பிட்டவித்துப் பிழிந்த சாறு, ஓமக்குடிநீர், மாசிப்பத்திரிக்குடிநீர் முதலிய குடிநீர்களில் குழந்தையின் தன்மை, நோயின் வன்மைக்கேற்றபடி அனுபானமறிந்து உபயோகிக்க வேண்டும். *(கை.பி.பால.போதினி-220)*

## *2. அமிர்தாதிக் குளிகை*

அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், கோரோசனை, சாத்திரபேதி, வெட்டிவேர், கோட்டம், மாசிப்பத்திரி, விலாமிச்சுவேர் ஆகிய இவ்வொன்பது சரக்குகளையும் சமனெடுத்துக் கொள்க. ஆதொண்டைச் சாறு விட்டு 3 மணி நேரம் தொடர்ந்தரைத்து 65 மி.கி. - 130 மி.கி. அளவு திரட்டி நிழலிலுலர்த்தவும். நோயின் தன்மை, குழந்தையின் வன்மையறிந்து கொடுக்க மாந்தம் தீரும். *(சிகி.ரத்.தீபம்131)*

3. கடுகுரோகணி, வாய்விடங்கம், மேல்தோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, மிளகு, சுட்டெரித்த வசம்புச்சாம்பல் ஆகிய இச்சரக்குகளை வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. அவற்றை இடித்து துணியில் வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும். முட்டையின் வெண்கருவை சுண்டும்படி வைத்து எடுத்துக் கொள்ளவும். வாளத்தைக் கல்வத்திற் போட்டுப் பொடித்துப் பூரத்தையும் பொடித்து சேர்த்து முன் சுத்தப்படுத்தின சூரணத்தையும் சேர்த்து தாய்ப்பாலை சிறுகச் சிறுக வார்த்து 65 மி.கி. அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்திக் கொள்ளவும். அதனை 3 மாத குழந்தைகட்கு 2 மாத்திரையும், பெரியவர்களுக்கு 4 மாத்திரையுமாக அளவறிந்து கொடுக்கலாம். இவ்வாறு கொடுக்க மாந்தம் அனைத்தும் நீங்கிவிடும். *(கை.பி.போதினி-225)*

## *4. மாந்த மாரணக் குளிகை*

18 கி. இரசத்தையும், 9கி. கெந்தகத்தையும் சேர்த்தரைத்து இரசம் மடிந்த பின்பு 18 கி. வெங்காரத்தையும், சுக்குத்தூள், நெல்லிக்காய், கெந்தகம் போன்றவற்றை 9கி. அளவு எடுத்து தூளாக ஆக்கிக் கொள்ளவும். நேர்வாளப் பருப்பு சம அளவு எடுக்க. முருங்கையிலையைப் பிட்டவித்து பிழிந்த சாற்றை எடுத்துக் கொள்க. வாளத்தைக் கல்வத்திலிட்டு, அரைத்து மேற்படிச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து ஒரு மணிநேரமரைத்து 65மி.கி. எடையுள்ள மாத்திரைகளாகச்

செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவும். 1 மாத்திரை அளவு உடலின் தன்மை, நோயின் வன்மைக்கேற்றபடி மாத்திரையைக் கூட்டியும் குறைத்தும் கொடுக்கலாம். குளிர்ந்த நீரில் கொடுக்க பேதியாகும். வெந்நீரில் கொடுக்க பேதி நின்று விடும். *(போதினி-227-288).*

### *5. ஆனந்த பைரவ மாத்திரை*

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த் தோல், மாசிக்காய், வெங்காரம், இலிங்கம், கந்தகம், வெண்ணாபி ஆகிய சரக்குகளைச் சமமாக எடுத்து சூரணித்துக் கொள்க. மூன்று நாள் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து 3 மி.கி. அளவில் மாத்திரை செய்து நிழலிலுலுர்த்திப் பயன்படுத்துக.

நோயின் தன்மையை அறிந்து குழந்தையின் வயதிற்கேற்ப 1/4-1 மாத்திரை வீதம் தும்பைப்பூ ரசம், தேன், இஞ்சி, சுரசம், தாய்ப்பால் இவற்றில் ஏதேனுமொன்றில் இழைத்துக் கொடுக்க அனைத்து மாந்தம் தீரும். பாலுண்ணும் குழந்தைக்குத் தாய் பத்தியங் காக்க வேண்டும். *(சிகி.ரத்னதீபம்-126)*

**6.** வெள்ளைக்காக்கட்டான் விதை, வேர்த்தோல், கோட்டம். சிற்றரத்தை, பேரரத்தை, வரிக்கடுக்காய் இவற்றை வகைக்கு 35கி. எடுத்துக் கொள்க. மிளகு, மேல்தோல் சீவின சுக்கு, அரிசித்திப்பிலி, இலவங்கம், அதிமதுரம், இவற்றை வகைக்கு 35கி. எடுத்து இவை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்திடித்து துணியில் வடிகட்டிக் கொள்ள வேண்டும். கோரோசனை 2கி, குங்குமப்பூ 1கி, இலிங்க செந்தூரம் 4கி, சுத்தி செய்த இரசகற்பூரம் 4கி, பொரித்த வெங்காரம் 4கி, பூரபற்பம் 4கி, சீந்திற்சர்க்கரை 8கி, சுத்தி செய்த நேர்வாளம் 35கி, எடுக்க. இஞ்சிச்சாறு, முடக்கறுத்தான் சாறு, துளசிச்சாறு இவற்றை வகைக்கு வேண்டிய அளவு எடுத்துக் கொள்க.

வாளத்தைக் கல்வத்திலிட்டு பொடித்து கீழே சொல்லப்பட்ட சரக்குகளை முறையே அரைத்துச் செம்மையாகக் கலந்த பின்பு மேலே கூறப்பட்டுள்ள சூரணத்தையும் சேர்த்தரைத்துச் செவ்வையாகக் கலந்து கொண்டு இஞ்சிச்சாற்றைச் சிறுக சிறுக வார்த்து, முடக்கறுத்தான் சாற்றில் 3மணி நேரமும், துளசிச்சாற்றில் 3 மணி நேரமும் அரைத்து, 65 மி.கி. அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்தவும். மாத்திரை 1-2; அனுபானம்- ஆடாதோடைச்சாறு, வேப்பீர்க்குக் குடிநீர், கஞ்சாங்கோரைச்சாறு, மிளகுக் குடிநீர்

முதலியவை குழந்தைகளின் தன்மை, நோயின் வன்மையறிந்து இக்குடிநீரிலுரைத்துக் கொடுக்க மாந்த நோய்களனைத்தும் நீங்கிப் போகும். *(போதினி-228-229)*

### *7. ஓமாதியுருண்டை*

ஓமம், திப்பிலி, சுக்கு, நற்சீரகம், கருஞ்சீரகம், கொத்துமல்லி, ஆமையோட்டுக்கரி, குரோசாணி ஓமம் ஆகிய எட்டுப் பொருட்களை 4கி. சரி எடையாக எடுத்து தண்ணீர்விட்டு அரைக்க வேண்டும். மெழுகு பதமானவுடன் வழித்து அதை 65 மி.கி. அளவாக உருட்டி வைத்துக் கொண்டு அந்தந்த மாந்தத்திற்குத் தக்க குடிநீரில் வேளைக்கொரு மாத்திரை வீதம் 3 அல்லது 5 நாட்களுக்கு கொடுக்க வேண்டும். வெந்நீரிலும் உரைத்துக் கொடுக்கலாம். *(புத்.477-51,482-52)*

### *8. அமிர்தாதிக் குளிகை*

அதிமதுரம், சாதிக்கோட்டம், ஏலம், கோரோசனை, சாத்திரபேதி, சண்பகப்பூ, மாசிக்காய், இலவங்கப்பூ ஆகியவற்றைச் சமஅளவும், வெட்டிவேர், மாசிபத்திரிவேர், கருந்துளசி இலை, விலாமிச்சை வேர் ஆகியவற்றின் சாறுகளைத் தேவையான அளவும் எடுக்க. சரக்குகளை முறைப்படி சூரணித்து மேற்குறிப்பிட்ட சாறுகளால் தனித்தனியே 6 மணி நேரம் அரைக்கவும். பதமானதும் 130 மி.கி. அளவு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திக் கொள்ளவும். 1 மாத்திரையை மாசிப்பத்திரி குடிநீரில் இழைத்து இருவேளை கொடுக்க மாந்தம் தீரும். *(செய்.மு.குறிப்பு-205) (சிகிச்.ரத்.தீ.131)*

### *9. வாய்விடங்க உருண்டை:*

வாய்விடங்கம், ஆமையோட்டுக்கரி, கெட்டிமிளகு, பொடுதலைக் காய், வசம்பு, திப்பிலி, கழற்சிப் பருப்பு ஆகிய இவ்வேழு பொருட்களையும் சரிசமமாக எடுத்து இடிக்க வேண்டும். அதைக் கல்வத்திலிட்டுப் பொடுதலைச் சாற்றாலாட்டிப் பதமாக வந்தவுடன் வழித்து 65 மி.கி. அளவு உருட்டி உலரவைத்துக் கொண்டு, வேளைக்கு ஒரு மாத்திரை கொடுக்க வேண்டும். வயிற்றுப் பொருமலுக்கு உத்தாமணிக் குடிநீரிலும், கழிச்சலுக்கு ஓமக்குடிநீரிலும் மாந்தங்களுக்கு அவற்றிற்குரிய குடிநீரிலும் கொடுக்க வேண்டும். *(புத்.477-51,482-52)*

### *10. பூர மாத்திரை*

சுத்தம் செய்த கற்பூரம் 20கி. எடுத்துக் குழிக்கல்லில் இட்டு நன்றாக அரைத்து நுண்ணிய பொடியாகச் செய்து பின் அதனுடன் இலவங்கம், ஏலரிசி, சுட்ட வசம்பு, சீரகம், மாசிக்காய், அதிவிடையம் ஆகிய

பொருட்களையும் வகைக்கு 10கி. எடுத்துப்பொடி செய்து, அரைத்துப் பொடியாக வைத்துள்ள பூரப்பொடியுடன் சேர்த்து நன்றாகக் கலந்து மாசிப்பத்திரி வேர்ச்சாறு விட்டு 3 மணிநேரமும், விஷ்ணுகரந்தைச் சாற்றால் 3 மணி நேரமுமரைத்து, மெழுகுப் பதத்தில் வந்தவுடன் கொத்துமல்லி அளவாக மாத்திரை செய்து நிழலில் உலர வைக்க வேண்டும். அம்மாத்திரையை வேளைக்கு ஒரு குளிகையாக 3 அல்லது 5 நாட்கள் வரை மாந்தக் குறிகளை அறிந்து அதற்குத் தக்க குடிநீரில் இழைத்துக் கொடுத்தால் எல்லா மாந்தங்களும் தீரும். *(புத்.477-51, 482-52)*

### *11. இலவங்காதிக் குளிகை*

கிராம்பு 24கி, மிளகு 16கி, பூரம் 4கி, இலிங்கம், இரசம், கந்தகம் வகைக்கு 4கி, வெங்காரம் பொரித்தது 8கி, சுத்தி செய்த வாளம் 40கி. எடுக்க. மேற்கூறிய சரக்குகளனைத்தையும் கல்வத்திலிட்டு, 70கி கடுக்காய்த்தோல் குடிநீரில் 6மணி நேரமரைத்து மெழுகு பதமாக வரும்போது 65 மி.கி. அளவுள்ள மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்க. இதனை மாதத்திற்கு இரண்டு முறை கொடுக்க மாந்தம் நீங்கும்.

நோயின் வன்மை மென்மைக்கேற்றவாறு கடின பத்தியமாக இருக்க வேண்டும். *(சிகிச்.ரத்.தீபம்-134)*

### *12. சண்பகப்பூக் குளிகை*

சண்பகப்பூ, விலாமிச்சை வேர், உயர்ந்த கோட்டம், ஏலம், கோரோசனம், சாத்திரபேதி, அதிமதுரம், வெட்டிவேர், மாசிப்பத்திரி ஆகிய இவ்வொன்பது பொருட்களையும் வகைக்கு 5கி. வீதம் எடுத்து இடித்து அதனை வெட்டி வேர்த்தண்டின் சாற்றினால் ஏழு நாழிகை அரைக்க வேண்டும். பின் அதனை 130 மி.கி. அளவாக உருட்டி உலர்த்தி வைத்துக் கொண்டு வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் தாய்ப்பால் அல்லது இளவெந்நீரில் இழைத்துக் கொடுக்க வேண்டும். இவ்வாறு மூன்று நாட்கள் கொடுத்தால் மாந்தநோய் நீங்கும். *(புத்.477-53,482-52)*

### *13. விழுங்கு மாத்திரை*

சாதிலிங்கம், பூரம், ஏலம், பூங்காவி ஆகிய இவற்றை வகைக்கு 9கி. எடுத்துக் கல்வத்திலிட்டு கோதுமைக் கஞ்சி வார்த்து 6 மணி நேரம் ஆட்டி, மைபோல் வரும்போது வழித்தெடுத்து, 32 மி.கி. அளவில் உருண்டை செய்து மரச்செப்பில் வைத்தடைத்துக் கொள்க. அதனை

ஒரு வயது குழந்தைகளுக்குச் சோற்றில் பிடித்துக் கொடுக்க மாந்தம் நிற்கும். *(புத்.572-52)*

### *14. கத்தூரி மாத்திரை*

5கி. கத்தூரி, 10கி. குங்குமப்பூ, 15கி. கோரோசனம் எடுத்து ஒன்றாகக் கூட்டி 3மணி நேரம் தாய்ப்பால் விட்டரைத்து 130 மி.கி. அளவாக உருட்டிக்கொள்க. ஒரு மாத்திரையைத் தாய்ப்பாலில் இழைத்து நாவில் தடவி விட மாந்தம் நீங்கும். *(புத்.477-318)*

### *15. காக்கட்டான் மாத்திரை*

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், கந்தகம், இரசம், காக்கட்டான் வேர்ப்பட்டை ஆகிய சரக்குகள் ஒன்பதையும் தனித்தனியே சூரணம் செய்து வகைக்கு 4கி. எடுத்து கல்வத்திலிடு. அதனுடன் 24கி. தாளகத்தைச் சேர்க்க. கையாந்தகரைச் சாற்றில் 12 மணி நேரமரைத்து 3கி. அளவுள்ள மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்துக. அதனைக் குழந்தைகளின் வயதிற்கேற்ப 1 அல்லது 2 எடுத்து தாய்ப்பால் (அல்லது) வெந்நீரில் இழைத்துக் கொடுக்க கழிச்சலாகி மாந்தம் நீங்கும்.

**16.** சுக்கு, திப்பிலி வேர்ப்பட்டை, கண்டங்கத்திரி வேர்ப்பட்டை இவற்றை வகைக்கு 17.5 கி, பூரம், சுத்தி செய்யப்பட்ட வாளம், இலிங்கம் இவற்றை வகைக்கு 35கி. எடுக்க. அனைத்தையும் எலுமிச்சம் பழச்சாற்றில் 12 மணி நேரம் அரைத்து 65 மி.கி. அளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்துக. குழந்தையின் தன்மை, நோயின் வன்மையை அறிந்து 1 மாத்திரையை வெந்நீர் அல்லது தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க மாந்தம் நீங்கும். பாலூட்டும் தாய் பத்தியங் காக்க வேண்டும். *(சிகிச்.ரத்.தீபம்-137)*

### *17. பூர மாத்திரை*

பூரம் 105கி, மொட்டு நீக்கிய கிராம்பு 26கி, பூநீறு, ஓமம் இவை இரண்டையும் வகைக்கு 9கி. எடுத்து கல்வத்திலிடுக. தும்மட்டிக்காய்ச் சாற்றில் 36 மணி நேரம் அரைத்து மெழுகு பதத்தில் 65மி.கி. அளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்துக. 650 மி.லி. நீரில் சோம்பு, திராட்சை வகைக்கு 35கி. எடுத்துப் போட்டு 50 மி.லி. யாக வற்றக்காய்ச்சி அதில் 1 மாத்திரையை இழைத்துக் கொடுக்க குழந்தைகளுக்கு ஏற்படும் அனைத்து மாந்தமும் தீரும். *(சிகிச்.ரத்ன.தீ-138)*

**18.** சுக்கு, மிளகு, திப்பிலி, உள்ளி, ஓமம், பெருங்காயம், கரிய சீரகம்

இவற்றை வகைக்கு 16கி. எடுத்துக் கொள்க. வசம்பு 12கி, கடுக்காய் 60கி, சாரணைவேர் 20கி, பொடுதலைக்கொழுந்து, பெருந்தும்பைக் கொழுந்து, உத்தாமணியிலை இவற்றை வகைக்கு ஒருபிடி எடுத்துக் கொள்க. இவை எல்லாவற்றையும் இளவறுவலாக வறுத்து பெருந்தும்பைச் சாற்றாலும் பொடுதலைச் சாற்றாலும் அரைத்து 65 மி.கி. அளவு உருண்டை செய்து உலர்த்திக் குழந்தைகளின் வயதுக்குத் தக்கவாறு கால், அரை, முக்கால், ஒன்று என்று குளிகையை எடுத்து வெந்நீரில் கொடுக்க மாந்தம் நீங்கும். *(புத்.482-52)*

### *19. அரூதா மாத்திரை*

மிளகு 9கி, குங்குமப்பூ 1, பச்சை தோப்பு இலை 8, கோரோசனை 4கி, வெள்ளைப்பூண்டு 2 எடுத்து கல்வத்திலிட்டு மூன்று மணி நேரம் இடைவிடாமல் அரைக்க; தாய்ப்பால் சிறிது சேர்த்து அரைத்து 32 மி.கி. அளவில் மாத்திரை செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக. வேளைக்கொரு மாத்திரையாக 2 அல்லது 3 வேளை நோயின் தன்மை, குழந்தையின் வன்மை, மென்மையறிந்து கொடுக்க மாந்தம் தீரும்.

*(சிகிச்.ரத்ன.தீபம்-125)*

20. வசம்பு, முத்தக்காசு, தேவதாரம், சுக்கு, அதிவிடையம், கடுக்காய், மஞ்சள், அதிமதுரம் ஆகிய இவற்றை வகைக்கு 5கி. கொண்டு வந்து குறிஞ்சா இலைச்சாறும், பொடுதலைச்சாறும் விட்டரைத்து 65மி.கி. அளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்திக் கொள்க. அதனை ஒரு குளிகை வீதம் தாய்ப்பாலிட்டுக் கொடுக்க மாந்தம் தீரும்.

*(ஏடு.612-24)*

21. சுக்கு, திப்பிலி, வெள்வெங்காயம், மாசிக்காய், அதிவிடையம், ஓமம், கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், அதிமதுரம், பெருங்காயம், கோட்டம், சிற்றரத்தை, மிளகு, கடுக்காய், வசம்பு, முத்தக்காசு, தேவதாரம், கத்தூரி மஞ்சள், வெந்தயம், கடுகுரோகணி, கோரோசனை ஆகிய இவற்றைச் சரியெடை கூட்டிக் கொண்டு, பழம்பாசி இலைச்சாறு, வேலிப்பருத்தியிலைச்சாறு, பொடுதலைச்சாறு, சின்னிச்சாறு. ஆகிய சாறுகளிலே அரைத்து 65 மி.கி. அளவு உருண்டை செய்து உலர்த்தி வைத்துக் கொள்க. *(ஏடு.612-24-25)*

மேற்கூறிய சரக்குகளின் மொத்த எடை அளவுக்குச் சுத்தி செய்யப் பட்ட வாளம் சேர்த்து நெட்டைப் பிரமட்டைச் சாற்றினாலேயே அரைத்து 65 மி.கி. அளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்துக. இதனைக் குழந்தையின் வன்மை, மென்மைக்கேற்ப மாந்தம் ஏற்படும்

போது அளவறிந்து தாய்ப்பாலிலேனும், வெந்நீரிலேனும் இழைத்துக் கொடுக்க மாந்தம் குணமாகும். *(சிகிச்.ரத்.தீபம்-134-135)*

### *அனுபானம்*

இண்டங்கொழுந்து, பாவட்டையிலை, நல்லதும்பையிலை, நாய் வேளையிலை, பெருந்தும்பையிலை, தைவேளையிலை, கொழிஞ்சி யிலை, கண்டங்கத்திரியிலை, தூதுவளையிலை, கரிமுள்ளியிலை, காத்தொட்டியிலை, மிளகுத் தக்காளியிலை, சடைச்சியிலை, முருங்கையிலை, நல்ல பருத்தியிலை, வேலிப்பருத்தியிலை ஆகிய இந்தப் பதினைந்து வகை இலையுங் கொண்டு வந்து வதக்கிச் சாறெடுத்துக் கொள்க. அதிலே மேற்சொன்ன குளிகை ஒன்றை இழைத்து 15-30 மி.லி. புகட்டவும். பலவகை மாந்தங்களும் தீரும். *(ஏடு.612-25)*

### *22. புலிப்பாணி மாத்திரை*

வில்வவேர், விளாவேர், நாய்வேளை, கஞ்சாங்கோரை, சின்னி, காட்டுமொச்சை, திருநீற்றுப்பச்சை, தும்பை, சிறுதும்பை, கண்டங்கத்திரி, அமுக்கரா, சங்கங்குப்பி, நுணா, வேலிப்பருத்தி, முடக்கறுத்தான், வெண்காய்வேளை, சாரணை, முடைநாரி, கொழுஞ்சி, பிண்ணாக்குப் பூண்டு, பிரமி, சித்திரமூலம், கொவ்வை, மணித்தக்காளி, கையாந்தகரை, கீழ்க்காய் நெல்லி ஆகிய இந்த மூலிகைகளின் வேர்களை வகைக்கு 175கி. எடுக்க.

வசம்பு, ஓமம், சுக்கு, சதகுப்பை, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், தேசாவரம் எனும் கண்டதிப்பிலி, யானைத்திப்பிலி, அரத்தை, சீரகம், காட்டுச்சீரகம், வாலுளுவை, போஸ்தக்காய், புரசங்கொட்டை ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்து தேவையான அளவு சாணாக்கிக் கீரைச் சாற்றினால் அரைத்துக் கொள்க.

அப்பைக்கொவ்வை, சாரணை, வேளை ஆகியவற்றை அகத்திச்சாறு, இண்டஞ்சாறு ஆகியவற்றில் 6 மணிநேரம் நன்கு அரைத்துக் கொள்க. அதனை இரு பங்காக்கி ஒன்றை 65 மி.கி. அளவு உருட்டி வைத்துக் கொள்க.

மறுபங்கில் சுத்தி செய்த நேர்வாளம், கடுகு ரோகணி ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்து முன்சொன்ன மருந்தில் சேர்த்து அகத்திச்சாறு, நிலவாகைச்சாறு ஆகியவற்றால் 18 மணி நேரமரைத்து, அதனை 65மி.கி. அளவு உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க. இதனை குழந்தைக்கு அளவறிந்து கொடுக்க மாந்தமனைத்தும் நீங்கிப் போகும்.

அப்பைச்சாறு, நாய்வேளைச்சாறு, துளசிச்சாறு, சிறுதும்பைச்சாறு, எருமுட்டை நாறிச்சாறு, காட்டு மொச்சையிலையின் சாறு ஆகிய இந்தச் சாறுகளில் ஏதேனுமொன்றில் மேற்சொன்ன குளிகையை இழைத்துக் கொடுக்க மாந்தமனைத்தும் நீங்கிப்போகும்.

*(புத்.476-58-59)*

### *23. லஷ்மி நாராயண மாத்திரை*

நிர்விஷம், தாளகம், நாபி, இரசம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிவற்றல், சுக்கு, மிளகு, திப்பிலி, மனோசிலை, காந்தம், கந்தகம், பூரம், சுத்தி செய்த நேர்வாளம், இலிங்கம் வகைக்கு 9கி. எடுத்து கையாந்தகரைச் சாற்றில் 18 மணி நேரம் அரைத்து 65 மி.கி. (3கி) அளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்திக் கொள்க. அதனைக் குழந்தைகளின் மாந்தத்திற்குத் தாய்ப்பாலில் கொடுக்க மாந்தம் குணமாகும். *(சிகிச்.ரத்.தீ-133)*

### *24. முருக்கன்விதை மாத்திரை*

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கடுகுரோகணி, முருக்கன்(பலாசு) வித்து இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்துக் கொள்க. நேர்வாளத்தைச் சுத்தி செய்து ஒரு சரக்கின் பங்குக்கு ஆறு பங்காக எடுத்துக் கொள்க. அனைத்தையும் கல்வத்திலிட்டுப் பொடித்து நீர் விட்டரைத்து 500 மி.கி. அளவு மாத்திரைகள் செய்து கொள்ளவும். ஒரு மாத்திரையை எடுத்து பனைவெல்லம், இளநீர், நெய், பால், வாழைப்பழம், சீனி இவற்றில் ஏதேனுமொன்றில் இழைத்து காலையில் மட்டும் கொடுக்கவும். அனைத்து மாந்தங்களும் தீரும். *(பா.செ.மு.கு.-191)*

### *25. பாலசஞ்சீவி மாத்திரை*

சுக்கு, மிளகு, திப்பிலி, பொரித்த வெங்காயம், சாதிலிங்கம் ஆகியவற்றை வகைக்குச் சமஅளவெடுக்க. முறைப்படி தூய்மை செய்து கல்வத்திலிட்டு பொடித்து எலுமிச்சம் பழச்சாற்றால் 3 மணி நேரம் அரைத்து 100 மி.கி. அளவாக உருட்டி நிழலிலுலர்த்துக. மாசிப்பத்திரி பிட்டவியல் சுரசத்தில் திரிகடுகுக் கற்கம் கூட்டி அதில் ஒரு மாத்திரையை இழைத்து இரு வேளையாகக் கொடுக்கவும். *(பா.செ.கு.-185-186)*

### *26. காக்கண மாத்திரை*

காக்கணவேர் 4 பங்கு, திப்பிலி, சுக்கு, கண்டங்கத்திரிவேர் இவற்றை வகைக்கு 1 பங்கு, நேர்வாளம், பூரம், இலிங்கம் இவற்றை வகைக்கு

2 பங்கு எடுத்துக் கொள்க. இவற்றை முறைப்படித் தூய்மை செய்து கல்வத்திலிட்டுப் பொடித்து எலுமிச்சம் பழச்சாறு விட்டு 4.5 மணி நேரம் அரைத்து, 100 மி.கி. அளவு மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலர்த்தவும். 1 மாத்திரையை காலையில் மட்டும் ஓமக்குடிநீர் அல்லது சுக்குக் குடிநீரில் இழைத்துக் கொடுக்க மாந்தம் குணமாகும். *(செய். முறை குறி-175).*

## *27. காரமாத்திரை*

ஓமம், கருஞ்சீரகம், சுக்கு, சிற்றரத்தை, மோடி, வால்மிளகு, கடுகுரோகணி, செவ்வியம், இலவங்கப்பட்டை, மிளகரணைப்பட்டை, கொழுஞ்சிப்பட்டை, வெள்ளைக் காக்கட்டான் வேர்ப்பட்டை, வெண்கடுகு ஆகிய சரக்குகளைச் சமனெடுக்க. தனித்தனியே சூரணித்து நெட்டைப் பிரமட்டைச் சாற்றில் 6 மணி நேரமரைத்து மிளகு (5கி) அளவுள்ள மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்துக. அதனைக் குழந்தையை நீராட்டும் சமயத்தில் தாய்ப்பாலிலேனும் வெந்நீரிலேனும் உரைத்துக் கொடுக்க மாந்தம் நீங்கும்.

## *28. காரமாத்திரை (வேறு)*

சாதிக்காய், கிராம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு, கறிமஞ்சள், ஏலம், சடைக்கஞ்சா, தாளிசபத்திரி, சீனாக்கற்கண்டு, மாசிக்காய், தான்றிக்காய்த் தோல், சீரகம், ஓமம், ஆமையோடு, பூண்டு ஆகிய மருந்துச் சரக்குகளைத் தனித்தனியே சூரணித்து வகைக்கு 9கி. எடுக்க. கல்வத்திலிட்டு வெந்நீரால் 6 மணி நேரமரைத்து 130 மி.கி. அளவில் மாத்திரை செய்து நிழலிலுலர்த்துக. குழந்தைகளுக்கு குளிப்பாட்டும்போது 1 மாத்திரையை வெந்நீரிலுரைத்துக் கொடுக்க மாந்தம் நீங்குவதுடன் குழந்தைகளின் தேகமும் செழுமை பெறும். குழந்தைகளின் வயதிற்கேற்றவாறு எளிதில் செரிக்கத்தக்க உணவைக் கொடுக்க வேண்டும். வசம்பைக் சுட்டுக்கரியாக்கியும், கஞ்சாவை ஏழுமுறை தண்ணீர்விட்டு கழுவி, விதையையும் காம்பையும் நீக்கி உலர வைத்துப் பொன் வறுவலாக வறுத்தும், ஆமையோட்டைச் சுட்டும் சேர்க்க வேண்டும். (போதினி)

## *பாலசுரக் குழம்பு*

நெல்லிக்காய் கெந்தகம் 9கி, சாதிலிங்கம் 18கி, எடுத்து இவ்விரண்டையும் சேர்த்து செவ்வையாகத்தூள் செய்து வைத்துக் கொள்ளவும். நான்கு வாழைப்பழங்களை தோலை நீக்கிப் பீங்கானிற் போட்டுப் புது மூங்கிலின் மேற்புறணியைக் கத்தியினாற் சீவி சுமார்

17.5 கி. தூளை அதிற் போட்டுப் பிசைந்து சற்று தாமதித்துப் பிழிந்தால் முத்துப்போல் தண்ணீர் வரும். அந்த தண்ணீரைத் தனியே வைத்துக் கொள்ளவும்.

முன்பு சுத்தப்படுத்தி வைத்திருக்கிற தூளை ஒரு பெரிய இரும்புக் கரண்டியிற் போட்டு அடுப்பில் விளக்கு போல் நெருப்பை எரிய விட்டுக் கரண்டியை அதிற் பிடிக்க அதிலுள்ள மருந்தானது உருகிவரும். அப்பொழுது முன் சுத்தப்படுத்தின பழத்தின் தண்ணீரைச் சிறுகச் சிறுக வார்த்து தீய்ந்து போகாமல் புரட்டி வர, மெழுகு பதமாய் வரும். அந்தச் சமயத்திலிறக்கிப் பீங்கான் சிமிழில் வைத்துக் கொள்ளவும். அதனை 65 மி.கி. 130 மி.கி. எடுத்து தேனில் அனுபானித்துக் கொடுக்கவும். மாந்த நோய்கள் அனைத்தும் நீங்கும்.

*(கை.பி. போதினி 284)*

*மருந்து*

சத்திச்சாரணை, வேலிப்பருத்தி இவற்றின் சாற்றை 325 மி.லி. எடுத்துக் கொள்க. உள்ளி, வசம்பு இவற்றை வகைக்கு 4கி. எடுத்து அரைத்து சாற்றில் கலந்து எரித்து பக்குவ பாகத்தில் வடித்திறக்கிக் கொள்க. அதனை 5-15மி.லி. அளவறிந்து கொடுக்க மாந்தம் போகும்.

*(ஏடு.362-26)*

## துவாலை வகைகள்

### *1. வேலிப்பருத்தித் துவாலை*

உத்தாமணி, குப்பைமேனி, வேளை, ஈயக்கொழுந்து, பொடுதலை, அகத்தி ஆகியவற்றின் இலைகளைச் சம அளவாக எடுத்து வதக்கி பிட்டவித்துச் சாறு பிழிந்து கொள்ள வேண்டும். வசம்பு, ஆமையோடு இவற்றைச் சுட்டு கரியாக்கிக் கொள்ள வேண்டும். ஓமத்தை வறுத்துக் கொள்ள வேண்டும். இம்மூன்றையும் மேற்சொன்ன சாற்றாலரைத்து அதனைக் கைகளிலும் கால்களிலும் பூசி உள்ளுக்குக் கொடுத்து வர வேண்டும். சாறு ஒன்றுக்கு சரக்கு பத்து சேர்க்க வேண்டும்.

*(ஏடு. 604-22) (புத்.477-48)*

### *2. சின்னித் துவாலை*

சின்னியிலை,நொச்சியிலை, வேப்பிலை, சீந்தில் இந்நான்கு இலைகளையும் தனித்தனியாக வெதுப்பி இடித்துச் சாறு பிழிந்து அவற்றை ஒன்றாய்க் கலந்து மூன்று நாள் கை கால்களில் துவாலையிட மாந்தம் தீரும்.

*(புத்.477-48)*

*திரிப்புகை*

வேலிப்பருத்திவேர், தைவேளைவேர், மிளகுத்தக்காளி வேர், பாவட்டை வேர், நல்லபருத்தி வேர், நாய்க்கடுகு வேர், ஓமம், வசம்பு, வெள்ளைப்பூண்டு, மஞ்சள், இவற்றைக் கூட்டிப் பொடி செய்து சீலையிலூட்டி திரி கட்டி வைத்துக் கொண்டு, வேப்பெண்ணெயில் துவைத்து விளக்கில் பற்ற விட்டு அந்தப்புகையை நாசியில் பிடிக்கவும். மாந்த மயக்கம் போகும். (ஏடு.612-9).

## மாந்தத்தின் வகைகள்

மாந்தத்தின் வகைகளாகப் பாலவாகடம் போன்ற அச்சு நூல்கள், கையெழுத்துப்படிகள், ஓலைச்சுவடிகள் ஆகியவற்றினின்றும் நமக்கு 53 வகை மாந்தங்கள் கிடைக்கின்றன. அவற்றுள் 43 வகை மாந்தங்கள். குறிகுண விளக்கங்களுடன் காணப்படுகின்றன. மீதமுள்ள 10 மாந்தங்கள் பெயரளவில் மட்டுமே கிடைக்கின்றன. அவையாவன: அடை மாந்தம், அட்ச அக்கர மாந்தம், பேதி மாந்தம், புளி மாந்தம், சன்னிபாத மாந்தம், வாந்தி மாந்தம், வறட்சி மாந்தம், திட்டு மாந்தம், கர்ப்ப மாந்தம், கணை மாந்தம் ஆகிய பத்து வகை மாந்தங்களும் குறிகுணங்கள் தரப்படாத மாந்தங்களாகும். அவையாவன மாந்த வகைகள் பின்வருமாறு.

1. அடை மாந்தம்
2. அட்ச அக்கரமாந்தம்
3. அழல் மாந்தம்
4. அள்ளு மாந்தம்
5. இழுப்பு மாந்தம்
6. உப்பல் மாந்தம்
7. உப்பு மாந்தம்
8. உளை மாந்தம்
9. ஊது மாந்தம்
10. எரி மாந்தம்
11. ஐய மாந்தம்
12. கட்டு மாந்தம்
13. கண மாந்தம்
14. கணை மாந்தம்
15. கர்ப்ப மாந்தம்
16. கல் மாந்தம்
17. கழிமாந்தம்
18. சக்தி மாந்தம்
19. சன்னி மாந்தம்
20. சன்னி பாத மாந்தம்
21. சுர மாந்தம்
22. சுழி மாந்தம்

23. செரியாமாந்தம்
24. தலை மாந்தம்
25. திட்டு மாந்தம்
26. நீர்க்கண மாந்தம்
27. துலை மாந்தம்
28. தோஷ மாந்தம்
29. நீர் மாந்தம்
30. பால் மாந்தம்
31. புள் மாந்தம்
32. பேதி மாந்தம்
33. பேய் மாந்தம்
34. போர் மாந்தம்
35. மலடி மாந்தம்
36. முக்கு மாந்தம்
37. வலிப்பு மாந்தம்
38. வளி மாந்தம்
39. வறட்சி மாந்தம்
40. வாந்தி மாந்தம்
41. வாள் மாந்தம்
42. விட மாந்தம்
43. வீக்க மாந்தம்

நாம் இங்கு விளக்கும் வண்ணம் குறிப்புகள் கிடைத்த மாந்தங்கள் 38 ஆகும். அவை இரண்டு வகையில் அடக்கப்பட்டுள்ளது.

இந்தப் பிள்ளைப்பிணி வாகடத்தில் சொல்லப்பட்டுள்ள மாந்தங்களை இரண்டு வகையாகப் பகுத்துக் காணலாம்.

1. முழுநிலை விளக்கப்பெற்ற மாந்தங்கள்
2. குறிகுணம் இன்றி விளக்கப்பெற்ற மாந்தங்கள்.

## *1. முழுநிலை விளக்கம்பெற்ற மாந்தங்கள்*

குறிப்பிட்ட அந்த மாந்தத்தின் குறிகுணம் சொல்லப்பட்டு, பின்னர் அதற்கான மருத்துவம் கூறப்பட்டவை இவ்வகையில் சாரும். அவையாவன 1. அக்கரமாந்தம், 2. இசிவு மாந்தம் 3. உப்பல் மாந்தம், 4. உளை மாந்தம், 5. ஊது மாந்தம், 6. ஊது கண மாந்தம், 7. கட்டு மாந்தம், 8. கர்ப்ப மாந்தம், 9. கல் மாந்தம், 10. கழிச்சல் மாந்தம், 11. சன்னி மாந்தம், 12. சவலை மாந்தம், 13. சிலேத்தும மாந்தம், 14. சுழி மாந்தம், 15. சுழிகண மாந்தம், 16. செரியா மாந்தம், 17. தலைமாந்தம், 18. திட்டு மாந்தம், 19. துலை மாந்தம், 20. தோஷ மாந்தம், 21. நளிர் மாந்தம், 22. நீர் மாந்தம், 23. நீர்க்கண மாந்தம், 24. பால் மாந்தம், 25. பாலாடை மாந்தம், 26. பித்த மாந்தம், 27. பேய் மாந்தம், 28. போர் மாந்தம், 29. முக்கு மாந்தம், 30. வறள் மாந்தம், 31. வாதமாந்தம், 32. வாலை மாந்தம், 33. விஷமாந்தம், 34. விஷதோஷ சன்னி மாந்தம், 35. வீக்க மாந்தம்.

### 2. குறிகுணம் இன்றி விளக்கம்பெற்ற மாந்தங்கள்

அட்டமாந்தம், கிராணி மாந்தம், சுரமாந்தம், ஆகியன குறிகுணம் சொல்லப்படாமல் மருந்துகள் தரப்பட்டுள்ள மாந்தங்களாகும்.

தோடத்தில் உள்ளதுபோல் மூன்றாம் வகையாக குறிகுணம் மட்டும் சொல்லப்பட்ட மாந்தங்கள் இடம் பெறவில்லை.

## மாந்தத்தின் வகைகள்- குறிகுணங்கள்

### 1. அக்கரமாந்தம்

குழந்தைகட்கு அத்தியில் சூடுண்டாதல், உடம்பு குளிரல், சுரம், உடம்பு ஓய்ச்சல், மூச்சில் அனல் வீசல், உதடுகள் வெடித்து வாயில் புண் உண்டாதல், நெஞ்சுலரல், வாய் திறக்க முடியாமை, குழகுழவென்று கழிச்சலாதல் ஆகிய இவையே அக்கரமாந்தத்தின் குறிகுணங்களாகும். *(புத்.477-80, 482-58) (ஏடு.619-5)*

## எண்ணெய் வகைகள்

### 1.மணித்தக்காளி எண்ணெய்

மணித்தக்காளிச்சாறு, அகத்திச்சாறு, கற்றாழைச்சாறு, விளக்கெண்ணெய், உள்ளிச்சாறு ஆகிய இவ்வைந்து பொருட்களையும் வகைக்கு 280 மி.லி. எடுத்து மண்பாண்டத்திலூற்றி ஒன்று சேர்த்துக் காரை வேர்ப்பட்டை, பூலாவேர்ப்பட்டை, துத்தி வேர்ப்பட்டை ஆகிய இம்மூன்றையும் வகைக்கு 35கி. எடுத்துக் கொள்க. வெந்தயத்தை 35கி. எடுத்து வறுத்து வைக்க. இந்த வேர்ப்பட்டைகளை நன்றாகப் பொடி செய்து மேற்கூறப்பட்ட சாற்றாலரைத்துச் சேர்த்துப் பக்குவமாக எரித்து மெழுகு பதத்தில் வடித்து 5-15 மி.லி. உள்ளுக்குக் கொடுத்து வாய்ப்புண் உள்ள இடத்தில் தடவி வரப் புண் ஆறும்.

*(ஏடு. 619-6,619-9) (புத்.477-80-81,476-55)*

### 2. எண்ணெய்

துத்தியிலை, வெந்தயம், ஆடாதோடை, நுணாஊர்க்கு ஆகிய இவற்றைக் குடிநீராகச் செய்து கொள்க; நுணாவிலை, வில்வ இலை, தைவேளை, பொடுதலை, செம்முள்ளி, ஆடாதோடை வகைக்குச் சாறு 1.3லி, அவுரிச்சாறு, அரத்தை, கடுகுரோகணி, வகைக்கு 4கி, கடுக்காய் 20கி, அக்கராகாரம், வெளிச்சிப்பிசின், கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள் வகைக்கு 8கி, ஈருள்ளிச்சாறு, விளக்கெண்ணெய் ஆகியவற்றை வகைக்கு 1.3லி, பேய்க்குமட்டிச்சாறு 168 மி.லி. இவற்றை ஒன்றாய்க்

கலந்து மெழுகுபதமாய்க் காய்ச்சி 5-15 மி.லி. அளவு மூன்று நாட்கள் கொடுக்க. புளி நீக்கிப் பத்தியங் கொடுக்க, அக்கர மாந்தம் நீங்கும்.

*3. எண்ணெய் (வேறு)*

பூவரசங்காய், இலை, பூ இவற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. நன்றாக அரைத்துக்கொள்க. ஆவரை 35கி. எடுக்க. அதனை அடைதட்டிக் கொள்க. சிற்றாமணக்கு எண்ணெயை 140 மி.லி. எடுக்க. அதனை நன்றாகக் காய்ச்சுக. அதில் அடையைத்தட்டிப் போடுக. பிறகு ஏலம், சாதிக்காய், சாதிபத்திரி மூன்றையும் வகைக்கு 2கி. எடுத்துப் பொடியாய் செய்து, அவ்வெண்ணெயிலேயே போடுக. நன்றாகக் கலந்த பின்பு 5-15 மி.லி. உள்ளுக்குக் கொடுக்க அட்சர மாந்தம் நீங்கிப்போகும். *(புத்.476-123)*

*2. அட்டமாந்தம்*

## குடிநீர் வகைகள்

1. உத்தாமணியிலை, வேளைவேர், நொச்சி, பொடுதலை, முருங்கை, நுணாஈர்க்கு ஆகியவற்றைச் சமஅளவு எடுத்து இளவறுவலாக வறுத்து நீர்விட்டு கொதிக்க வைக்க. பிறகு ஓமம், திரிகடுகு, வசம்பு ஆகிய இவற்றை முடிந்து அதில் போடுக. பிறகு அதனை எட்டொன்றாய்க் காய்ச்சி 15-30 மி.லி. அளவு கொடுக்க. எண் வகை மாந்தமும் நீங்கும். *(ஏடு.362-51)*

2. வேலிப்பருத்தி இலை, ஒரு பிடியை எடுத்துக் கொள்க. சுக்கு, சடாமாஞ்சில், விளாவிலை, வசம்பு, உள்ளி, மிளகு, ஆமையோடு, சீரகம் ஆகிய இவற்றைச் சமஅளவெடுத்து இளவறுவலாய் பொன்னிறமாய் வறுத்து நீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி குழந்தைக்கு 15-30 மி.லி. அளவு கொடுக்க அட்ட மாந்தம் நீங்கும். *(ஏடு.362-51)*

*மாத்திரை*

திப்பிலி, சுக்கு, ஓமம், கருஞ்சீரகம், கொத்துமல்லி, ஆமையோட்டுச் சாம்பல், குரோசாணி ஓமம், சவுட்டுமண், பூநீரில் கிடைக்கும் உப்பு ஆகிய இவற்றை வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. இவற்றைச் சாணிப்பால் விட்டரைத்து, அதனை உருண்டை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்க. அதனைக் கொடுக்க. அட்டமாந்தமும் நீங்கிப் போகும். *(ஏடு.362-73-74)*

### 3. இசிவு (வலிப்பு) மாந்தம் குறிகுணங்கள்

கைகால்களை அடிக்கடி இழுத்தல், செரியாமையினால் மாந்தமுண்டாகி வலிப்பு ஏற்படல், பலவித கழிச்சல், மார்பில் வலி, வாந்தி, மயக்கம் குழந்தைகட்கு நாமுள் தோஷத்தினால் விலாப்பக்கம் இரண்டும் உயரவெழும்பித் துன்பத்தையும் வலியையுமுண்டாக்கல். கைகால்கள் அயர்ந்திருத்தல், அடிக்கடி இசிவு காணல், பற்கள் கிட்டியிருத்தலுடன் நறநறவென்று கடித்தல். (சர.வை.மு.-22) முதலியவை இசிவு மாந்தத்தின் குறிகுணங்கள். இதனையே அள்ளு மாந்தம், என்றும் 'இழுப்பு மாந்தம்' என்றும் கூறுவர். *(கை.பி.பா.வை.போதினி-212).*

### குடிநீர்

சிறுதேக்கு, வாய்விடங்கம், வால்மிளகு, கடுகுரோகணி, சுக்கு, ஏலம், திப்பிலி, இலவங்கம், தான்றி, தக்கோலம், கசகசாவின் ஓடு இவற்றை வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. இவற்றை இடிததுப் பொடித்துப் பாண்டத்திலிட்டு 2.6கி. தண்ணீர்விட்டு காய்ச்சுக. எட்டொன்றாய் ஆனபிறகு இறக்கிக் கொள்க. அதனை 15-30 மி.லி. அளவு இசிவு மாந்தத்திற்குக் கொடுக்க நீங்கும். *(புத்.572-51)*

### வெள்ளைப்பூண்டுத் தைலம்

மேற்றோல் சீவின சுக்கு, சன்னராஷ்ட்டம், வெள்ளைப்பூண்டிதழ், மாவிலிங்கப்பட்டை, நல்லவேளை வேர், (தைவேளை), முருங்கைப் பட்டை, முசுறுமுட்டை ஆகிய இவற்றை வகைக்கு 2கி, எடுத்துக் கொள்க. வேப்பெண்ணெய் 105கி. எடுக்க. மேற்படிசரக்குகளை மைபோலரைத்து அவ்வெண்ணெயிற் கலக்கிப் பதமாகக் காய்ச்சி இறக்கிக் கொள்க. அதனை 5-15 மி.லி. அளவு கொடுக்க. இதில் வேளை ஒன்றுக்கு 135 மி.கி. கோரோசனையைப் பொடித்து கலந்து கொடுக்க வேண்டும். இந்த வெள்ளைப்பூண்டுத் தைலத்தை உடலின் மீது பூசிவர வேண்டும். இவ்வாறு செய்ய இசிவு (வலிப்பு) மாந்தம் நீங்கும். *(கை.பி.போதினி-212)*

### புகை

மிளகு, வசம்பு, சுக்கு, பேயத்தி, அழிஞ்சி வேர் ஆகிய இவற்றைப் பொடி செய்து திரியில் வைத்து வேப்பெண்ணெயில் எரித்து அப்புகையை இழுக்க, இசிவு மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.604-23)*

### 4. உப்பல் மாந்தம் - குறிகுணங்கள்

நீர் வேட்கை, சுரம், மலமும் நீருமாகக் கழிதல், வாய்பிதற்றல், வயிறு

உப்பி இரைந்து கழிந்து உடனே வாந்தியாதல், குழந்தை தாயினிடம் பால் உண்ணாமை, மயக்கம் போன்ற இக்குறிகள் குழந்தைகளிடம் காணப்படில் அது உப்பல் மாந்தம். இதனையே 'உப்பும் மாந்தம்' என்றும் கூறுவர். *(கை.பி.214) (புத்.477-76) (ஏடு.424-8)*

### *சுரசம்*

கல்லுப்பு, நல்ல உப்பு ஆகிய இவற்றைக் கலந்து கருக்கிக் கொட்டிக் கொள்ள வேண்டும். வேளைப் பூவை வதக்கிப் பிழிந்து சாறெடுத்துக் கொள்ள வேண்டும். அதனுடன் காயம் சேர்த்து அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி கொடுக்க உப்பு மாந்தம் போகும். *(ஏடு.424-8)*

### *சாறு*

குப்பைமேனியையும் கறியுப்பு அல்லது உப்பையும் சேர்த்துக் கசக்கிப் பிழிந்த சாற்றை 5-15 மி.லி. அளவு கொடுக்க உப்பு மாந்தம் ஒரு நாளில் தீர்ந்து விடும். *(புத்.477-53,477-77)*

### *குடிநீர்*

முக்காவேளை, மேற்றோல் சீவின சுக்கு, ஓமம் இவற்றை வகைக்கு 4கி எடுக்க. இவற்றைச் சட்டியிலிட்டு வறுத்துக் கருக்கி 81 மி.லி. தண்ணீரை வார்த்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின் வடிகட்டி அதில் 65 மி.கி. எடை நாயுருவி உப்பையும், 65 மி.கி. எடை ஆமையோட்டுப் பற்பத்தையும் கலந்து வேளைக்கு 15-30 மி.லி. அளவு கொடுக்க வேண்டும். இவ்விதமாக காலை, மாலை இரண்டு வேளையுஞ் செய்து வந்தால் உப்பு மாந்தம் தீரும்.

*(கை.பி.போதினி-214)*

## *5. உளை மாந்தம் - குறிகுணங்கள்*

வாயுவானது அதிகமாகி குடலைப் பற்றிக் கொண்டு மலத்தைச் சிக்கி கருகச் செய்யல், சில சமயங்களில் மலம், நீர் இரண்டும் கட்டிக் கொள்ளல், குழந்தை அலறித் தேம்பித் தேம்பியழல், அன்னையைத் தேடி அழல், தாய்ப்பால் உண்ணாமை, மருண்டு மருண்டு பார்த்தல் இவையே உளை மாந்தத்தின் குறிகுணங்களாகும்.

### *சங்கம் வேர்க் குடிநீர்*

சங்கம், கொடிவேலி, ஆடாதோடை, கொன்றை இவற்றின் வேர்கள், இந்துப்பு, காயம், புங்கம்பட்டை ஆகிய இவ்வேழு பொருட்களையும் வகைக்கு 10கி. எடுத்து இடித்து 2.6 லி. நீர் விட்டு 335 மி.லி. யாகச் சுண்டக் காய்ச்சி வடித்து 15-30 மி.லி. காலையிலும் மாலையிலுமாக

3 அல்லது 5 நாட்கள் கொடுக்க வேண்டும். இவ்விதம் கொடுக்க உளை மாந்தம் குணமாகும். *(புத்.482-58, 476-55, 477-80)*

### *குருவிச்சி கற்கம்*

ஆலமரத்துப் புல்லுருவி 1கி, பனைவெல்லம் (கருப்பட்டி) 1கி. எடுத்து இவ்விரண்டையும் கூட்டி அரைத்து 5-15 மி.லி. விளக்கெண்ணெயில் கலந்து காலையில் மட்டும் மூன்று நாட்களுக்குக் கொடுக்க உளைமாந்தம் தீரும். *(புத்.477-80,482-58)*

## எண்ணெய் வகைகள்

### *1. சிறுநாகப்பூ எண்ணெய்*

வசம்பு, நற்சீரகம், கருஞ்சீரகம், நாரத்தம்வேர், பூண்டு, காயம் ஆகிய இவற்றை வகைக்கு 9கி. எடுக்க. இவற்றைத் தேவையான அளவு மணித்தக்காளிச்சாறு விட்டு அரைத்து 280 மி.கி. எண்ணெயைச் சேர்த்து கலக்கி நன்கு காய்ச்சி அதனை 5-15 மி.லி. வீதம் மூன்றுநாள் கொடுக்க உளைமாந்தம் நீங்கிப் போகும். மூன்றுநாள் பத்தியம் இருக்க வேண்டும். உப்பு, புளிப்பு ஆகாது.

*(புத்.482-58, 476-54-55, 572-32, 477-79-80)*

### *2. பூநாக எண்ணெய்*

பூநாகம், வசம்பு, வாளம், வேப்பம் வேர், பூண்டு, பெருங்காயம் ஆகிய இவ்வாறு பொருட்களையும் வகைக்கு 5கி. வீதம் எடுத்து இடித்து வெந்நீர் விட்டரைக்க வேண்டும். இதை 650 மி.லி. விளக்கெண்ணெயில் கூட்டிப் பக்குவமாக எரித்து நாள் ஒன்றுக்கு 5-15 மி.லி. வீதம் காலையில் மட்டும் 3 அல்லது 5 நாட்கள் உள்ளுக்குக் கொடுக்க உளை மாந்தம் தீரும்.

*(புத்.482-58, 477-79, 476-54)*

### *6. ஊது மாந்தம் - குறிகுணங்கள்*

குழந்தையின் உடல் முழுதும் ஊதல், வாந்தி, கழிச்சல், குடலில் இரைதல், தொடையில் வலித்தல், சுரங்காய்தல், உடல் கடுத்தல், கணுக்கால் வீக்கம், கை, கால் உடலின் வீக்கம், சோர்வு, அன்னம், நீர் இவை இறங்காமை, நாவிற் புண் போலிருத்தல், மிகுந்த சுவாசம் எழும்புதல், மலங்கெட்டு வயிறு விம்மல், வியர்வை, மயக்கம், கழிச்சல் ஏற்படும் போது தீய வாசனை வீசல் ஆகியவை ஊது மாந்தத்தின் குறிகுணங்கள். *(புத்.477-5,482-53) (ஏடு.7313-25,798-9)*

## குடிநீர் வகைகள்

### *1. பொடுதலையாதிக் குடிநீர்*

அ. பொடுதலை, வேம்பு, மா, புளி, நுணா, நொச்சி, வேலிப்பருத்தி ஆகிய இவ்வேழின் ஈர்க்குகளை எடுத்துக் கொள்க. ஓமம், வெள்ளைப்பூண்டு, திப்பிலி இவற்றைச் சரிஎடை எடுத்துக் கொள்க. வெள்ளைப்பூண்டைச் சிவக்க வறுத்து, ஓமத்தைப் பொரியவிட்டு, அதில் திப்பிலியையும் மற்ற ஈர்க்குகளையும் இடித்துபோட்டு, அவற்றின் மொத்த எடைக்கு எட்டுப்பங்கு தண்ணீர் விட்டு ஒரு பங்காகக் காய்ச்சி, குழந்தைக்குக் காலை, மாலை இருவேளையும் 15-30 மி.லி. வீதம் கொடுக்க ஊது மாந்தம் தீரும். *(புத்.482-53,477-75-76) (ஏடு.7313-25)*

2. மேல் தோல் சீவின சுக்கு, நீர்முள்ளி, குட்டிவிளா, சுரைக்கொழுந்து, நல்லவேளை எனும் தைவேளை இவற்றை வகைக்கு 8கி. எடுத்துக் கொள்க. பூநாகத்தைச் சட்டியிற் போட்டு வறுத்த சாம்பல் 4கி. எடுத்து இவை எல்லாவற்றையும் சட்டியிலிட்டு 150 மி.லி. தண்ணீர் வார்த்து அது கால் அளவாக சுண்ட வைத்திறக்கி வடிகட்டி அதில் 165 மி.கி. ஆமையோட்டுப் பற்பத்தைச் சேர்த்துக் குடிக்க வைக்க வேண்டும். இவ்வாறு செய்ய ஊதுமாந்தம் நீங்கிப் போகும். *(கை.பி.போதினி-21) (புத்.482-79,476-99)*

## கற்க வகைகள்

1. கோரோசனை, உள்ளி, திப்பிலி, அதிமதுரம் ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. அவற்றை முட்டையின் வெள்ளைக்கரு விட்டரைத்து தாய்ப்பாலில் மூன்று நாட்கள் கொடுக்க ஏழு வகை ஊதுமாந்தம் நீங்கிப் போகும்.

2. வேலிப் பருத்தியிலையை வதக்கிச் சாறு பிழிந்து கொள்க. சீரகத்தையும் கடுகுரோகணியையும் சமமாய் எடுத்து தாய்ப் பாலிலரைத்துக் கலக்கி மேற்சொன்ன சாற்றுடன் கலந்து கொடுக்க ஊதுமாந்தம் நீங்கிப் போகும். *(புத்.482-53)*

## எண்ணெய் வகைகள்

1. நன்னாரி, பழம்பாசி, சிறுபுள்ளடி, சிற்றாமுட்டி, சிற்றாமணக்கு, துத்தி, வட்டக்கிலுகிலுப்பை, கண்டங்கத்திரி, கண்ணுப்புகை இவற்றின் வேரும் கொவ்வைத் தண்டையுமரைத்து வகைக்கு ஒரு பெரு விளாங்காய்ப் பிரமாணம் எடுக்க. விளக்கெண்ணெய் 3.9 லி.

கழுவியெடுத்த கற்றாழஞ்சோறு இரண்டு தேங்காய்ப் பிரமாணம், சாதிக்காய், சாதிபத்திரி, ஏலம், அதிமதுரம், வெந்தயம் ஆகியவற்றை வகைக்கு 25கி, கோரோசனை, வெள்ளுள்ளி இவற்றை வகைக்கு 10கி. எடுத்து இவற்றை இடித்துப் போட்டு ஒன்றாய்க் கலந்து காய்ச்சிக் கொள்க. கற்றாழஞ்சோறு மொரு மொரு வென்றிருக்கிற பதத்திலிறக்கி 5-15 மி.லி. அளவு நோயின் தன்மை, குழந்தையின் வன்மை அறிந்து கொடுக்க ஊதுமாந்தம் நீங்கிப் போகும். *(புத்.482-61)*

2. ஓரிலைத்தாமரைக்கிழங்கு, பற்பாடகம், வல்லாரை, முள்ளி, கரிப்பான், வண்டார்மேனி, வட்டத்திருப்பி, முருக்கு, கண்டங்கத்திரி, செந்தாமரை, செங்கழுநீர் ஆகியவற்றின் சாறுகளை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. தேங்காய்ப்பால் 5கி. எடுக்க. இண்டின் வேர்க்காய், வசம்பு, முத்தக்காசு, ஏலம், சாதிபத்திரி, அதிவிடையம், மாயக்காய், வெட்பாலையரிசி, செங்கத்தாரிப்பட்டை, விளா, மருக்காரை, நிலவாகைப் பிசின், மிளகு இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. விளக்கெண்ணெய் 1.3லி. எடுத்துக் கொள்க. மேற்சொன்ன கடைச்சரக்குகளை மேற்கூறப்பட்ட மூலிகைகளின் சாற்றால் நன்றாக அரைத்து எண்ணெயில் கலந்து காய்ச்சி குழந்தையின் வன்மை, நோயின் தன்மையை அறிந்து 5-15 மி.லி. கொடுக்க குணமாகும். *(ஏடு.7313-26)*

3.காட்டு மல்லிகை, வெங்காயம், கருஞ்சீரகம், கடுக்காய், பெருஞ்சீரகம் இவற்றை வகைக்கு சமனெடுக்க. வச்சிரப்பால், விளக்கெண்ணெயைக் கூட்டி எரித்து காய்ச்சி பக்குவ பாகத்தில் வடித்து வைத்துக் கொள்க. அதனைக் குழந்தைகட்கு 5-15 மி.லி. அளவு அளவறிந்து கொடுக்க ஊது மாந்தம் நீங்கிப்போகும். *(ஏடு.798-9-10,7313-8) (கை.பி.98-140)*

## மாத்திரை வகைகள்

1. தாமரை இரண்டு, ரோகணி, கருஞ்சீரகம் ஆகிய இவற்றைத் தாய்ப் பாலில் அரைத்து 65 மி.கி. அளவு மாத்திரை செய்து அளவறிந்து கொடுத்திட ஊது மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.6218-47)*

2. 18 கி. பொரித்த வெண்காரம், 70கி. கடுகுரோகணி, கருஞ்சீரகம் 70கி, ஆகிய இம்மூன்று பொருட்களையும் நன்றாகப் பொடி செய்து அதைக் குழிக்கல்லில் இட்டு தாய்ப்பால் விட்டு மெழுகுப் பக்குவமாகும் வரையில் அரைத்து 65 மி.கி. அளவுள்ள மாத்திரை செய்ய வேண்டும். அதை வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் தாய்ப்பாலில் இழைத்து

மூன்று நாள் கொடுத்தால் ஊது மாந்தம் நீங்கி விடும்.
*(புத் 482-52,477-75, 476-38)*

3. பேதிபூபதி மாத்திரை இரசம், கெந்தகம், சுக்கு, வெங்காரம் இந்நான்கையும் சரி அளவெடுத்து இந்நான்கில் மொத்த எடைக்குச் சரி எடையாக வாளம் எடுத்து இவற்றைப் பொடியாக்கி குழிக்கல்லில் இட்டு தண்ணீர்விட்டு மெழுகு பக்குவமாகும் வரை அரைத்து அதை 32 மி.கி. அளவாக உருட்டி நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். அம்மாத்திரையை குழந்தைகளுக்கு, காலையில் மட்டும் வெந்நீரில் உரைத்துக் கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்ய ஊது மாந்தம் நீங்கும். *(புத்.477-75)*

### *7. ஊதுகண மாந்தம் - குறிகுணங்கள்*

ஊதுகணமாந்தத்தில் கால், கண், உடல் இவற்றில் வீக்கம் உண்டாதல், நாக்குப் புண்ணாதல், சுரங்காய்தல், உணவும் தண்ணீரும் ஏற்காமை, காலும் கையும் சோருதல், மேல் மூச்சுண்டாதல், இந்நோய் 12 ஆண்டு காலம் வரை இருக்கும். *(புத்.477-148)*

### *எண்ணெய்*

முள்ளி, நீர்முள்ளி, இண்டுவேர், தேங்காய்ப்பால், கையாந்தகரை, சிவகரந்தை, கண்டங்கத்திரி, மாதுளம் பழச்சாறு, ஓரிதழ்த்தாமரை, தாமரை, செங்கழுநீர், முருக்கு, வல்லாரை ஆகிய இவற்றை வகைக்கு 325 மி.லி. சாறெடுத்து 1.3.லி விளக்கெண்ணெயில் கலந்து பெருங்காயம், வசம்பு, ஏலம், வெட்பாலையரிசி, வட்டத்திருப்பி, பற்பாடகம், கோரைக்கிழங்கு, சூரத்நிலாவரை, விளாம்பிசின், வாகைப்பிசின், மருக்காரைப்பிசின், இலவம்பிசின், செங்கத்தாரி, மாசிக்காய், கடுக்காய், அதிவிடையம், வால்மிளகு, சாதிபத்திரி, இவற்றை வகைக்கு 9கி. வீதம் எடுத்துப் பொடியாக்கி அப்பொடியை மேற்படி சாறுவிட்டு அரைத்து மேலே சொல்லப்பட்ட கலவையில் கலக்க வேண்டும். பின்பு அடுப்பேற்றி காய்ச்சிப் பக்குவமாக வடிக்க வேண்டும். அதில் 5-15மி.லி. அளவு வீதம் காலையில் மட்டும் மூன்று நாள் கொடுக்க வேண்டும். அப்படிக் குழந்தைக்குக் கொடுத்தால் ஊதுமாந்தம் நீங்கும். புளிப்பு, உப்பு, புகை, எள்ளு, கவிச்சு இவைகளைத் தாயும் குழந்தையும் நீக்க வேண்டும். *(புத்.477-148-149)*

### *மாத்திரை*

சாதிக்காய், மாசிக்காய், கிராம்பு, கோரோசனை, சீரகம், பூதிக்காய், திப்பிலி ஆகியவற்றைத் தாய்ப்பாலில் அரைத்து மிளகளவாய் மாத்திரை

செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்க. அதனைத் தாய்ப் பாலிலிழைத்துக் கொடுக்க ஊதுகண மாந்தம் நீங்கிப் போகும். *(புத்.476-99)*

### *௪. கட்டு மாந்தம் - குறிகுணங்கள்*

மந்தித்திரைந்து வயிறு கழிதல், பிறகு கட்டிக் கொள்ளல், பால் குடிக்க குழந்தை திகைத்தல், ஓயாமல் அழல், இருமல் இலேசாக இருத்தல், உட்சுரம், மலம், சிறுநீர் இரண்டும் கட்டிக் கொள்ளல், பசி ஏற்படாமை, உணவு செரிக்காமை *(ஏடு.941-18,169-25)*

கொட்டாவி, தலைநோய், வயிற்று வலி, வயிற்றிரைச்சல், குடலிரைச்சல், விட்டு விட்டுப் பால் குடித்தல் (ஏடு.798-17) வீக்கம், வியர்வை, தூக்கம் போல் சோர்ந்து விழல், உடலெங்கும் சூடு ஏற்படல், ஆகிய குறிகுணங்கள் ஏற்பட்டால் அது கட்டு மாந்தம். *(புத்.476-48-49)*

## குடிநீர் வகைகள்

1. சீந்தில் தண்டு, களிப்பாக்கு, சிவதைவேர், கடுக்காய், சுக்கு, கடுகுரோகணி, கற்றாழஞ்சருகு இவற்றைச் சமஎடை எடுத்து இடித்து நன்றாகக் கொதித்த நீரில் போட்டு எட்டொன்றாக்கிக் குடிநீராய் மூன்று தினம் கொடுக்க மாந்த சுரம் நீங்கும். வயிறுங்கழியும். 15-30 மி.லி. அளவு அளவறிந்து காலை, மாலை கொடுக்க கட்டு மாந்தம் போகும். (ஏடு.941-18,169-26,798-17) (புத் 477-65, 482-55).

2. பொடுதலை, மா, புளி, வேம்பு, நுணா, வேலிப்பருத்தி, நொச்சி இவற்றின் ஈர்க்கு வகைக்குப் பிடி ஒன்று, வெள்ளுள்ளி, திப்பிலி, ஓமம் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து இடித்து 1.3லி. தண்ணீரில் போட்டுக் குடிநீர் செய்து 15-30 மி.லி. அளவு மூன்று நாள் கொடுக்க கட்டு மாந்தம் நீங்கிப் போகும். *(புத்.482-61, 583-94)*

### *சுக்கு நெய்*

சுக்கு. சிற்றரத்தை, வெற்றிலை, ஓமம், முருங்கைப்பட்டை இவற்றைத் தண்ணீர்விட்டு அரைத்து செய்த சுரசம் 335மி.லி., வேம்பு நெய் 335மி.லி. கலந்து எரித்து வடிக்க வேண்டும். அதைக் காலையில் மட்டும் 5-15மி.லி., அளவு மூன்று நாள் கொடுக்க கட்டு மாந்தம் நீங்கிப் போகும். *(புத்.477-65)*

## எண்ணெய் வகைகள்

1. சிற்றாமணக்கெண்ணெய் 325மி.லி. எடுத்துக் கொள்க. அகத்தி, துளசி, தகரை, கழற்சிக்கொடி, நொச்சி, செம்முள்ளி, மணித்தக்காளி

ஆகிய இவற்றைச் சமமாக எடுத்திடித்துச் சாறாக 325மி.லி. அளவு எடுத்துக் கொள்க. அக்கலவையில் கடுகுரோகணி, கடுக்காய், சீரகம், கரியசீரகம், வெங்காயம், வெள்ளைப்பூண்டு, வசம்பு, பூதகரப்பான் பட்டைச்சாறு, வேளைவேர் ஆகிய சரக்குகளை வகைக்கு 15கி. எடுத்து இடித்துப் போடுக. ஒரு கரண்டியளவு கள்ளிப்பாலைக் கூட்டி அடுப்பெரித்து காய்ச்சி வடிகட்டி 5-15மி.லி. அளவு கொடுக்க கட்டு மாந்தம் நீங்கும். மாலையில் கழியும். (புத் 476-49,482-55, 477-65-66) மாலையில் மிளகுச்சாம்பலும், சுக்கும் போட்டு நீர்வார்த்து காய்ச்சி 15-30மி.லி. அளவு கொடுத்தால் கட்டு மாந்தம் நீங்கிப் போகும். *(புத்.482-56,476-48-49)*

2. **கள்ளிப்பால் எண்ணெய்:** சதுரக்கள்ளிப்பால், வெள்ளாட்டுப்பால் இவற்றை வகைக்கு 325மி.லி.யும் ஆமணக்கெண்ணெய் 1.3லிட்டரும் எடுத்துக் கொள்க. கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், வெள்ளுள்ளி ஆகியவற்றை 8கி. எடுத்து பொடிசெய்து கலவையில் போட்டெரித்துப் பதமாக வடித்துக் கொள்ள வேண்டும். அதனைக் குழந்தையின் தன்மை அறிந்து 5-15மி.லி. 3 அல்லது 6 நாட்களுக்குக் காலை மட்டும் உள்ளுக்குக்கொடுத்து, மேல் விலாவிலும் பூச கட்டுமாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.798-17) (புத்.482-56,476-49, 477-66)*

3. **இஞ்சி எண்ணெய்:** இஞ்சிச்சாறு, சங்கிலைச்சாறு, சிறு சின்னியிலைச்சாறு, பொன்னாங்காணியிலைச் சாறு, விட்ணுகிரந்திச் சாறு, வன்னியிலைச்சாறு ஆகிய சாறுகளை வகைக்கு 335மி.லி. அளவு எடுக்க. 335மி.லி. சிற்றாமணக்கு நெய் எடுத்து இவற்றைக் கலந்து ஒரு மண்சட்டியில் ஊற்றி அடுப்பேற்றி ஒரு விறகால் எரித்து மெழுகுப் பக்குவத்தில் வடித்து இறக்கி வைத்துக் கொள்ள வேண்டும். அளவறிந்து கொடுக்க கட்டுமாந்தம் நீங்கிப் போகும். *(புத்.477-65)*

4. நன்னாரி, பழம்பாசி, சிறுபுள்ளடி, சிற்றாமுட்டி, சிற்றாமணக்கு, துத்தி, வட்டக்கிலுகிலுப்பை, கண்டங்கத்திரி, கண்ணுப்பீளை ஆகியவற்றின் வேர், கொவ்வைத்தண்டு இவற்றை அரைத்து வகைக்கொரு பெரு விளாங்காய்ப் பிரமாணம் எடுக்க. விளக் கெண்ணெய் 3.9லி. எடுக்க. கழுவியெடுத்த கற்றாழஞ்சோறு-2 தேங்காய்ப் பிரமாணம், சாதிக்காய், சாதிபத்திரி, ஏலம், அதிமதுரம், வெந்தயம் இவற்றை வகைக்கு 25கி. கோரோசனை, வெள்ளுள்ளி இவற்றை வகைக்கு 10கி. எடுத்து இடித்துப் போட்டு ஒன்றாய்க் கலந்து காய்ச்சி, கற்றாழஞ்சோறு மொரு மொரு வென்றிருக்கிற பதத்திலிறக்கிக் கொடுக்க கணமாந்தம் நீங்கிப் போகும். *(புத்.482-61)*

### *9. கர்ப்ப மாந்தம் - குறிகுணங்கள்*

தாயானவள் சூல்கொண்டிருக்கும் போது அவள் உண்ணும் உணவு மிக எளிதில் செரிக்கக் கூடியதாய் இருக்க வேண்டும். இவ்வாறின்றி மந்தத் தன்மையுடையதாக இருக்குமானால் கருப்பைக்குள் இருக்கும் குழந்தைக்கு அது பொருந்தாது. மாந்தம் என்னும் நோயையுண்டாக்கும்.

சூலாயிருக்கும் தாய் புதுத் தானியக் கொழியலரிசி, வரகரிசி இவற்றை அதிகமாக உண்டால் பிறக்கும் குழந்தைக்கு மிக்க சூடு ஏற்பட்டு வாயு மிகுதிப்பட்டு குழந்தையின் உடலில் பலவிதமான நோய்கள் ஏற்படும். தாய் கர்ப்பமாக இருக்கும் போது வாயுவும் வன்னியுங் கலந்து மிகுந்திருந்தாலும், இயற்கைப் புணர்ச்சி அளவுக்கு அதிகமானாலும், பிறந்த குழந்தைக்கு வாயு மிகுந்தாலும் அதனால் அந்நாடியானது நாகத்தின் இரைச்சல் போலவும், ஓணான் தலை தூக்கல் போலவும் ஏற்பட்டு பிள்ளையின் வாயில் அளவற்ற புண்ணுண்டாகி உடல் மிகவும் இளைத்துவிடும், இப்படி இரண்டு ஆண்டு இருந்து பின் குழந்தையின் அரையில் ஒரு கட்டியாய் நெரிகட்டி உடம்பெல்லாம் இடைவிடாத காய்ச்சலுண்டாகி உடலும் வீங்கி வெறுத்தல், பிறகு மூன்று திங்கள் சென்றால் நஞ்சுண்டதைப் போன்று விடம் ஏற்பட்டு கைகால்களில் ஆழமான புண்கள் உண்டாதல், தலை சுற்றி வாயில் நீர் வறண்டு நெஞ்சில் ஒருவகையான காரல் உண்டாதல், தலை நடுக்கமும் ஏற்படுதல், இக்குழந்தையின் நாடி மூன்று ஆண்டுகட்கு மேல் நன்றாகத் துடியாமல் படுத்த படுக்கையாயிருத்தல், அப்போது குடிக்கும் பால் முழுதும் மஞ்சள் நிறமாகவும் கொடிக் கொடியாகவும் வாந்தியாதல்,

மேலும் வயிற்று நோய், வயிறு இரைதல், கண்கள் தேனிறமாதல், உடல் தேவாங்கைப் போன்று இளைத்தல் என்னும் இவைகள் உண்டாகும். இதனைச் சிலர் பட்சி தோடமென்றும் கூறுவர். *(புத்.477-83)*

### *புங்கு நெய்*

புங்கங்கொட்டையை உடைத்து உள்ளிருக்கும் பருப்பை எடுத்து ஞாயிற்றுக்கிழமை முதல் மூன்று நாள் வெயிலில் உலர்த்தி பிறகு நன்றாக இடித்து மாவாக்கி ஒரு மண் குடத்தில் போட்டு 64.5லி. நீர் விட்டு ஊற வைக்க வேண்டும். அதில் ஆகாசகருடன் கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, அத்திப்பட்டை, சங்கம்பட்டை, சிறுசின்னிப்பட்டை, சாரணைவேர், வெள்ளைக் குன்றிமணிவேர், கண்டங்கத்திரி வேர், மாதுளைவேர், நிலவேம்பு, குப்பைமேனி, வில்வவேர், கீழ்க்காய் நெல்லி,

அழிஞ்சிற்பட்டை, நாவற்பட்டை, கரிசலாங்கண்ணி, துத்திவேர், ஆடாதோடை வேர், அல்லிக்கொடி, கொத்தான் கொடி, சூரைவேர்ப் பட்டை, வேப்பமரப்பட்டை, சிவனார்வேம்பு, வெண்ணொச்சி வேர், துளசி வேர் இவற்றை வகைக்கு 35கி. எடுத்து வெயிலில் 8 நாள் உலர்த்தி இடித்துத் தூள் செய்து வேறு இடத்தில் துணியில் வடிகட்டி அத்தூளை புன்னங்கொட்டைத்தூள் போட்டு வைத்திருக்கும் குடிநீரில் போட்டும் அத்துடன் பிரமி, தைவேளை, அவுரி, சூரி, தும்பை, காட்டகத்தி, பொன்முசுட்டை, அகத்தி, மணித்தக்காளி என்னும் இவற்றின் சாறுகளை வகைக்கு 70கி. விடுக. பிறகு கடுக்காய்த்தோல், திப்பிலிக்கட்டை, செவ்வியம், அதிமதுரம், கோட்டம், வெட்பாலையரிசி, தக்கோலப்பொட்டு, தேவதாரச்சக்கை, சடாமாஞ்சில், கடுக்காய், சாதிக்காய், தான்றிக்காய் தோல், ஏலரிசி, புனுகு, இருவி, நாபி, கோரோசனம், கஸ்தூரி என்னுமிவற்றை வகைக்கு 12கி. எடுத்துக் கொள்க. அவற்றில் வறுக்கக்கூடியதை வறுத்து தூள் செய்து முன்னுள்ள நீரிற் கொட்டிய பின்னர் வாளம், வீரம், மஞ்சள், கந்தகம், சூதம், பூரம், சாதிலிங்கம், பச்சைக்கற்பூரம் என்னும் இவற்றை வகைக்கு 16கி. எடுத்துத் தூள்செய்து முன் தண்ணீரில் கொட்டி அதனுடன் ஆமணக்கு நெய் 2.6லி. விட்டு சட்டி வாயில் மெல்லிய துணி சுற்றி மூன்று நாள் வெயிலில் வைத்து நான்காவது நாள் அடுப்பேற்றி 9 மணி நேரம் கமலாக்கினியாக எரித்து கடுகு திரண்ட பருவத்தில் வடிகட்டி குழந்தைக்கு காலையில் 15மி.லி. எண்ணெய் வீதம் 9 நாள் கொடுக்க வேண்டும். எண்ணெயை உட்கொள்ள உடல் வச்சிரம் போலாகும்.

தாய்க்கு பீர்க்கங்காய், வறுத்த உப்பு, வெந்நீர், இலவங்கம், மிளகு, இவை கூட்டி இருவேளை சோறுண்ணும் பத்தியம் வைக்கவும். கொள்ளு, அகத்திக்கீரை, புகை, போகம், புளி இவை ஆகா.

*(புத்.477-84-85)*

### *10. கல்மாந்தம் - குறிகுணங்கள்*

குழந்தைகளுக்கேற்படும் ஓர்வகை ஈரல் நோய். கல்லீரலைப் பற்றியதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது. அதிகமான ஊட்டத்தினால் இது ஏற்படும். ஓக்காளம், பசியின்மை, சோகை, பலமின்மை, வயிற்றின் மேல் நீலம் படர்ந்த நரம்புகள் காணும், சில நேரங்களில் வயிற்றுப்பிசம் ஏற்படும்.

சுரம், உடல் வெளுக்கும், வாட்டமடையும்; நாக்குஉலருதல், கால் குளிர்ச்சியாதல், குழந்தை தன் கையினால் முகத்தை அடிக்கடி

நெருடிக்கொள்ளல், பலவிதமாய்க் கழிதல், தலையில் வியர்வையுண்டாகல் ஆகியவை கல் மாந்தத்தின் குறிகுணங்கள்.

*(சர.வை.முறை-22) (புத்.477-86)*

### *திப்பிலி எண்ணெய்*

திப்பிலி, வசம்பு, பூண்டு, பேய்மருட்டி, நிலாவாரை, கடுகுரோகணி, நாயுருவி இவற்றை வகைக்கு 10 கி. எடுத்து முறைப்படி சூரணம் செய்துகொள்க. 350கி. வேப்பெண்ணெய் எடுத்து கலந்து சட்டியிலிட்டு பக்குவமாக எரித்து வடிக்க. அதைக் காலையில் மட்டும் 5-15மி.லி. எண்ணெயில் 65மி.கி. ஆமையோட்டுப் பற்பத்தைக் கூட்டி மூன்று நாள் கொடுக்க கல்மாந்தம் நீங்கும். *(புத்.477-86)*

### *11. கழிச்சல் மாந்தம் - குறிகுணங்கள்*

வாந்தி, மயக்கம், தலையில் வியர்வையுண்டாதல், குரல் தாழல், சுரம்-எப்போதும் உடல் சூடாகவே இருத்தல், கைகால்கள் சில்லிட்டு இருத்தல், கைகால்களில் வலி ஏற்படல், சோர்ந்து சோர்ந்து மலங்கழிதல், குழந்தை பலவகையால் குலைந்திருத்தல், பலவிதமாய் இக்குணங்கள் ஏற்படின் கழிச்சல் மாந்த குறிகுணங்கள் ஆகும்.

*(புத்.476-11,477-85) (ஏடு.941-20)*

### *வேளைப் பச்சிலைச் சாறு*

நல்வேளை, நாய்வேளை, வேலிப்பருத்தி, குப்பைமேனி இவற்றின் இலைகள், அகத்திப்பருப்பு ஆகிய சரக்குகளை வகைக்கு ஒரு பிடி எடுத்து அத்துடன் வசம்பு, வெள்ளைப்பூண்டு இரண்டையும் வகைக்கு 4கி. எடுத்துக் கொள்க. எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து இடித்துச் சாறு வாங்கி குழந்தைக்குக் காலை, மாலை இருவேளையும் 5-15 மி.லி. அளவு மூன்று நாட்கள் உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூச வேண்டும். இவ்விதம் செய்யக் கழிமாந்தம் தீரும்.

*(ஏடு.941-20,(ஏடு.6218-17) (புத்.477-85)*

### *குடிநீர்*

மாசிபத்திரி, பற்பாடகம், நாயுருவி, முட்காவேளை, கருஞ்சீரகம், கோழியெச்சம், ஆகிய இவற்றைப் பொடி செய்து கொள்க. வெட்டிவேர், சங்கு, சுக்கு, ஏலம், கடுகுரோகணி, பரங்கிச்சக்கை, உசிலமரப்பட்டை, காவட்டம்புல், கடுக்காய், மாசிக்காய், வசம்பு, தான்றி, முத்தக்காசு ஆகிய சரக்குகளைப் பொடிசெய்து கொள்க. தண்ணீரை 2.6லி அளவு எடுத்துக் கொள்க. அதில் அப்பொடியைத் தூவி எட்டொன்றாய்க்

காய்ச்சி 15-30மி.லி. அளவு கொடுக்க கழி மாந்தம் விட்டுப் போகும்.
*(புத்.572-51-52)*

### *முக்கடுகாதி மாத்திரை*

தோல் சீவின சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், வெள்ளைப்பூண்டு, பெருங்காயம், கருஞ்சீரகம் இவ்வேழு பொருட்களையும் வகைக்கு 16கி. எடுக்க. வசம்பு 12கி. எடுத்துக் கொள்க. கடுக்காய்த்தோல் 60கி, சத்திச்சாட்டரணை வேர் 20கி, பொடுதலைக் கொழுந்து, பெருந்தும்பைத்தளிர், வேலிப்பருத்தியிலை ஆகிய ஒவ்வொன்றையும் வகைக்கு 20கி. எடுக்க. இச்சரக்குகளை இளவறுப்பாய் வறுத்துக் கொண்டு மற்றவற்றைக் கூடச் சேர்த்து பெருந்தும்பைச்சாறு, பொடுதலைச் சாற்றினாலரைத்து 65-130 மி.கி. அளவு மாத்திரை செய்து கொண்டு அதனைக் குழந்தையின் வயது, உடல், தன்மை, நோயின் வன்மை இவற்றிற்கேற்ப வேளைக்கு கால், அரை, முக்கால், முழு மாத்திரைகளாக வெந்நீரில் உரைத்து மூன்று நாள் கொடுக்க வேண்டும்.
*(புத்.477-86)*

### *12. கிராணி மாந்தத்துக்குக் குடிநீர்*

சிறுதேக்கு, வாய்விடங்கம், வால்மிளகு, கடுகுரோகணி, சுக்கு, ஏலம், திப்பிலி, இலவங்கம், தான்றி, தக்கோலம், கசகசாவின் ஓடு ஆகியவற்றை வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. அவற்றை இடித்துப் பாண்டத்தில் போட்டு அதில் 2.6லி. நீரைச் சேர்த்து, கொதிக்க வைத்து, பின் எட்டொன்றாய்க் காய்ச்சி 15-30மி.லி. அளவு கொடுக்க. கிராணி மாந்தம் நீங்கிப்போகும். *(புத்.572-51) (ஏடு.382-60)*

### *13. சன்னி மாந்தம் - குறிகுணங்கள்*

பத்தியம் கெட்டுவிட்டால் அதன் காரணமாக மாந்தம் மிகுதியாகி துன்பத்தை உண்டாக்கி மயக்கம் உண்டாகும். அதனால் சன்னி உண்டாகும். சுரம், தாகம், நாவில்முள், அறிவு கலக்கம், கண்தாழ்வு, உடல் இளைப்பு, இடைவிடாமல் அலறுதல், வாய் பிதற்றல், வாய் வெந்துபோதல், ஒரு கண் திறந்து இருக்க மற்றொரு கண்ணை உருட்டிப் பார்த்தல், கழுத்து ஊசி போலாதல், பாசி போல் பீளை சார்தல், தலைபுரட்டல், கால் சில்லென்றிருத்தல், உடல் குளிரல், நாவில் முள் தடித்தல், வாந்தி, ஏப்பம், வயிறு உப்பல், வலிப்பு, கால்கை சோர்ந்து போதல், கண்கள் சொருகல், காது மந்தமாதல், பலவிதமாய்க் கழிச்சல் உண்டாதல்.
*(புத்.477-73)*

வாயு மிகுந்து உடல் சூடாதல், சதைகள் பெருத்திருத்தல், கண்கள்,

கை, கால்கள் பதைத்தல், உடல் இரும்பு போல ஆகி தீய நோய்கள் பெருகி நிற்றல். உடல் முழுவதும் வலித்தல் ஆகியவை சன்னி மாந்தத்தின் குறிகுணங்கள். *(ஏடு.619-7)*

## சுரச வகைகள்

### *1. வெற்றிலைச் சுரசம்*

வெற்றிலை, முயிற்றெறும்பு முட்டை, சிற்றரத்தை, சுக்கு, முருங்கைப்பட்டை, மாவிலிங்கப்பட்டை ஆகிய இவற்றைச் சரி எடை எடுத்து அரைத்துப் பிழிந்து சுரசம் செய்து அதில் வேளைக்கு 65மி.கி. அளவு கத்தூரி சேர்த்து காலை, மாலை மூன்று நாள் 5-15 மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுக்க வேண்டும். மேலும் முட்டை, வெள்ளைப்பூண்டு இவ்விரண்டையும் சேர்த்து கருத்தயிலம் வாங்கி மேலிலும் பூச வேண்டும். இவ்வாறு செய்தால் சன்னிமாந்தம் நீங்கிப் போகும். *(புத்.477-73)*

### *2. வேளைவேர்ச் சுரசம்*

வேளைவேர், உத்தாமணிவேர், மாவிலிங்கப்பட்டை, முருங்கைப் பட்டை இவற்றின் சாற்றை வகைக்கு 35கி. எடுத்துக் கொள்க. அவற்றை ஒன்றாய்க் கலந்து அதைச் சுட வைத்து ஆற வைத்து அதில் சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றின் பொடியைச் சேர்த்து நவலோக பூபதி மாத்திரையை இழைத்துக் கலந்து கொடுக்க வேண்டும். அவ்வாறு செய்ய சன்னி மாந்தம் நீங்கும். *(புத்.477-74)*

### *குடிநீர்*

முருங்கைவேர், காவேர், சங்கு, தழுதாழைவேர், கொடிவேலி, வேளை, தூதுவளை, செம்முள்ளி, சுக்கு, மிளகு, திப்பிலி, உள்ளி, அரத்தை, இருவகை ஓமம், மஞ்சள் ஆகிய சரக்குகளைப் பொடித்து ஒன்று சேர்த்து குடிநீராகக் காய்ச்சி குழந்தைக்குக் கொடுக்க சன்னி மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.424-16)*

## எண்ணெய் வகைகள்

1. வேளைச்சாறு, தழுதாழைச்சாறு, நொச்சிச்சாறு, முருக்கிலைச்சாறு, கோழியவரைச்சாறு, முருங்கைச்சாறு ஆகியவற்றை ஒன்று சேர்த்து 675 மி.லி. ஆக எடுத்துக் கொள்க. வேப்பெண்ணெய் 1.3லி எடுக்க. மேற்கூறிய எண்ணெயையும் சாற்றையும் கூட்டிக் கொள்க. வள்ளிச்சாறு, முட்டைநீறு, கத்தூரி, மஞ்சள், வசம்பு, பெருங்காயம், இருவகை ஓமம் இவற்றைப் பொடித்து ஒன்று சேர்த்து எண்ணெயிலிட்டுக் காய்ச்சிக்

கொள்க. அதனைக் குழந்தைகட்கு 5-15மி.லி. அளவறிந்து கொடுக்க சன்னிமாந்தம் நீங்கிப்போகும். *(ஏடு.424-15-16)*

2. வேப்பம்பட்டை, கார்த்திகைக் கிழங்கு, முள்ளி, கெருடன் கிழங்கு, முருங்கைவேர், சிவமூலிவேர், முட்டையோடு, முசுறுமுட்டை ஆகியவற்றை 35கி. எடுக்க. தும்மட்டிக்காய்ச் சாறு 1.3 லி. எடுக்க. வேப்பஞ்சாறு 1.3லி. எடுக்க. வெள்ளைச்சாரணை வேர், கொத்தான் வேர் வகைக்கு 70கி. எடுக்க. நறுக்கெண்ணெய் 1.3லி. எடுக்க. ஏலம், நற்சீரகம், கருஞ்சீரகம், கடுகுரோகணி, பெருங்காயம் ஆகிய சரக்குகளை வகைக்கு 70கி எடுத்துக் கொள்க. மேற்சொன்ன சாறுகளை ஒன்று சேர்க்க. மூலிகைகளின் வேர்களையும் மருந்துச் சரக்குகளையும் இடித்துப் பொடித்து சாற்றில் சேர்த்து எரித்து மெழுகு பதம் வந்தவுடன் இறக்கிக் கொள்க. அதனை 5-15 மி.லி. அளவு கொடுக்க சன்னி மாந்தம் நீங்கி விடும். மூன்று நாள் பத்தியமாயிருக்க வேண்டும்.
*(ஏடு.619-7)*

3. வேப்பம்பட்டைச்சாறு 1.3லி, கார்த்திகைக்கிழங்கு, கெருடன் கிழங்கு, வசம்பு, பெருங்கிழங்கு, கோழிமுட்டை, மாமரத்துப்பூ, முசுறுமுட்டை இவற்றை வகைக்கு 35கி, தும்மட்டிக்காய்ச்சாறு 1.3லி, காட்டரணை வேர், முடக்கறுத்தான் வேர், ஏலம், கருஞ்சீரகம், காட்டுச்சீரகம், கடுகுரோகணி, பெருங்காயம் இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. சிற்றாமணக்கு நெய் 1.3லி. எடுத்துக் கொள்க. கடைச்சரக்குகளைப் பொடிசெய்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி சன்னி மாந்தம் உள்ளவர்களுக்கு 5-15 மி.லி. அளவறிந்து கொடுக்க அது நீங்கிப் போகும். *(ஏடு.619-9)*

### *கத்தூரி மாத்திரை*

கத்தூரி 1 பங்கு, குங்குமப்பூ 2 பங்கு, கோரோசனை 3 பங்கு வீதம் எடுத்து இம்மூன்று பொருட்களையும் தாய்ப்பால் விட்டரைத்து அதை 130 மி.கி. அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலில் வைத்துலர்த்தி வைத்துக் கொண்டு அதைத் தாய்ப்பாலில் உரைத்துக் கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்ய சன்னிமாந்தம் விட்டுப் போகும்.
*(புத்.477-74)*

### *புகை*

குங்கிலியம், அகில், சாம்பிராணி, கருஞ்சீரகம், வேளைவேர், சாரணை ஆகிய சரக்குகளை எடுத்து ஒன்று சேர்த்து புகைத்து

அப்புகையைச் சன்னி மாந்தமுள்ளோர் புகைத்தால் அந்நோய் நீங்கிப்போகும். *(புத்.477-74,476-135)*

### *14. சவலை மாந்தத்திற்கு மாத்திரை*

சாதிக்காய், இலவங்கம், மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, வசம்பு, கறிமஞ்சள், ஏலம், கடைக்கஞ்சா, கற்கண்டு, மாசிக்காய், தாளிசபத்திரி, சீரகம், ஓமம், அரிசித்திப்பிலி, ஆமைஓட்டுப் பற்பம், வெள்ளைப்பூண்டு இவற்றை வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. மேற்படி உள்ள சரக்குகளுள் இடிப்பனவற்றை இடித்துச் சூரணம் செய்து, பிறவற்றையும் சேர்த்து வெந்நீரைச் சிறுகச்சிறுக வார்த்து 6மணி நேரமரைத்து 65 மி.கி. அளவு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்துக. மாத்திரை 1 அல்லது 2 எடுத்து தாய்ப்பால், வெந்நீர் முதலியவைகளில் அனுபானித்துக் கொடுக்கவும். *(கை.பி.போதினி-226)*

### *15. சிலேத்தும மாந்தம் - குறிகுணங்கள்*

உடல் முழுமையும் சிலிர்த்தல், குளிரல், நா உலர்ந்து வெளுத்துக்காணல், பதறி பதறித் திடுக்கிடுதல், சுரம், வயிறு பொருமல், ஏப்பம், வயிறு பேதியாதல் இக்குறிகுணங்கள் காணப்படின் அது சிலேத்தும மாந்தமாகும். *(புத்.476-28, 477-54, 482-50)*

நெஞ்சில் கபங்கட்டல், குழந்தை மயங்கல், நாவில் நீர் ஊறல், கை, கால், தினவெடுத்தல், பருந்தின் உடம்பு போலிருத்தல், மேல் மூச்சு ஏற்படல், உடல் வலி, குரல் தாழல் ஆகியவை சிலேத்தும மாந்தத்தின் குறிகுணங்கள். *(ஏடு.612-3)*

#### *மருந்து*

கழற்சிக்கொடி, நொச்சி, நுணாயிலை இவற்றை வகைக்குச் சமஅளவு எடுக்க. அதனை இரும்புச் சட்டியிலிட்டு சிவக்க வறுத்து வைத்துக் கொள்க. தண்ணீர் 1.3லி. எடுக்க. அசமோதம், வசம்பு, வால்மிளகு, பொடுதலைக்காய், திப்பிலி, ஆகியவற்றை ஓரெடையாய் எடுக்க. அவற்றை எள் எண்ணெய் 165 மி.லி. விட்டு சிவக்க வறுத்துக் கொள்க. அதனைத் துணியில் முடிந்து அக்குடிநீரில் போட்டு எரித்து நன்றாகக் காய்ச்சி எட்டொன்றாய்க் குறுக்கி 15-30 மி.லி. நோயின் திறம், குழந்தையின் வன்மை, மென்மையை அறிந்து காலை, மாலை, மூன்று நாட்களுக்குக் கொடுக்க, மாந்தம் குணமாகும். முருங்கையிலை, கருவாடு தவிர்க்கவும். *(ஏடு.798-5,7313-4)*

### 16. சுழி மாந்தம் - குறிகுணங்கள்

சுரம் விட்டு விட்டு இருத்தல், கண்கள் சுழித்துக் கொள்ளல், சுரத்தோடு இரைப்புங்காணல், தூக்கம் இன்மை, இரைத்தல், விக்கல், மூச்சின் விரைவால் விலாவிற் பள்ளம் விழுதல், பால் குடியாமை, பார்த்தவர் கண்களுக்கு உடல் மங்கினது போல் காணல், கக்கல், இரைப்பு, இருமலேற்படல், பார்த்தவர் இருப்பானோ இறப்பானோ என்று எண்ணும் படியாகக் காணல் இவை சுழி மாந்தக் குறி குணங்களாகும். *(புத்.477-47, 482-56)*

### 1. ஈருள்ளி எண்ணெய்

வெங்காயச்சாறு, வெள்ளைப் பூண்டுச்சாறு, ஆமணக்கெண்ணெய் இவற்றை வகைக்குச் சேர் எடுத்து எதிர்த்துக் காய்ச்சிக் கொடுக்க சுழிமாந்தம் நீங்கும். *(புத்.477,71-72)*

### 2. கத்தூரி எண்ணெய்

கோரோசனம், கோட்டம், அதி மதுரம், திப்பிலி, தேவதாரம், சந்தனம், ஏலம், மாசிக்காய், வெந்தயம், சுக்கு, வெள்ளுள்ளி, கத்தூரி, வசம்பு, கடுகு ரோகணி, பச்சை மூங்கில் தோல் இவற்றை வகைக்கு வராகன் எடுத்து எருமுட்டை பீளரிச் சாறுவிட்டு அரைத்துக் கொள்ளவும்.

விளக்கெண்ணெய் 1.3 லிட், அதனுடன் சேர்த்து எரித்துக் காய்ச்சி கொள்ளவும். இதனை தேவைக்கேற்ப கொடுத்து வந்தால் சுழிமாந்தம் நீங்கி குழந்தை சுகம் பெறும்.

### 17. சுரமாந்தம் - குறிகுணங்கள்

செரியாமை, மந்தத்துடன் சுரம் அடித்தல், குழந்தையின் உடல், முகம் இவற்றில் ஒருவித மினுமினுப்பு, தாய்ப்பால் அருந்த கண்ணில் நீர் வடிதல், சிவப்பாதல், மலச்சிக்கல், மயக்கம், உடல் முழுவதும் வலியுண்டாதல், மயக்கம், கால் சில்லிட்டிருத்தல் ஆகியவை சுரமாந்தக் குறிகுணங்கள். *(சர.வை.முறை-240)*

### 18. சுழிகண மாந்தத்திற்கு நெய்

பூலாத்தி வேர், வாழைப்பிஞ்சு, சத்திச்சாரணை, தூதுவளை, மாதுளை, மலைதாங்கி, தக்காளி, வில்வம், வல்லாரை, கரிசலாங்கண்ணி, சிறுநெருஞ்சி, பெருநெருஞ்சி, சிறுபுள்ளடி, அத்திப்பிஞ்சு, முத்தக்காசு, அகத்தியிலை, முசுமுசுக்கை, கீழ்க்காய் நெல்லி, செருப்படி, சிறுகீரை, ஆம்பல், முள்ளி, கொட்டிக்கிழங்கு, நெய்தல் கிழங்கு, கண்டங்கத்திரி, தவசி, சிவமுருங்கை, கருந்துளசி, சிவந்த நாயுருவி, நிலம்புரண்டி,

செங்கழுநீர்க்கிழங்கு, நிலவேம்பு, சிறுகாஞ்சொறியின் பிஞ்சு, குருந்தொட்டி, ஆடாதோடை, பருத்திப்பிஞ்சு, கதலிப்பூ, பொடுதலை, பிரமி, ஓரிதழ், செந்தொட்டி, கற்றாழை, சிறுபீளைவேர், தாழம் விழுது, கஞ்சாங்கோரை, அமிர்தவல்லி, குழிவிட்டான், அம்மான் பச்சரிசி, விட்டுணு கிரந்தி, கரந்தை, பழம்பாசி, இலந்தை, தம்பலப்பூச்சி ஆகிய மூலிகைகளை வகைக்கு 35கி. எடுத்துக் கொள்க. அவற்றை இடித்துப் பொடித்துக் கொள்க. தண்ணீரை 1.3லி. அளவு கொடுக்க. அதில் அப்பொடியைத்தூவி எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. காய்ச்சிய பிறகு உள்ள அளவுக்கு நான்கிலொருபாகம் நெய் சேர்த்துக் கொள்க. பிறகு அதிமதுரம், கோட்டம், ஏலம், குரோசாணி ஓமம், குந்திரிக்கம், நறுக்குமூலம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், அதிவிடையம், அரிசிவகை ஆறு (கார்போகரிசி, வாலுளுவையரிசி, திப்பிலியரிசி, வெட்பாலையரிசி, மூங்கிலரிசி, ஏலரிசி) ஆமையோடு, கலைக்கொம்பு, ருத்திராட்சம், கெருடப்பச்சை, சாத்திரபேதி ஆகிய இவற்றை வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. மூன்று நாளில் மெழுகு பதமாக செய்து இறக்கிக் கொள்க. அதனைக் குழந்தைகட்கு 5-15 மி.லி. கொடுக்க சுழி கணமாந்தம் நீங்கும்.

*(ஏடு.362-75)*

### *19. செரியா மாந்தம் - குறிகுணங்கள்*

அதிகமான சுரம், தலைவலி, வயிறூதல், கரைத்த மாப்போல புளித்த நாற்றத்துடன் கழிச்சல், தாய்ப்பால், அன்னம் இவை செரிக்காமை, மிகுதியான கழிச்சல், கண் சொருகல், ஒரு பக்கமாக படுத்தல், பால்போல் பேதியாதல், வயிற்றுப் பொருமல், வீக்கம், குளிர்சுரம், வயிற்றுவலி இவையே செரியா மாந்தத்தின் குறிகுணங்கள்.

*(புத்.476-48)*

## குடிநீர் வகைகள்

### *1. ஓமக் குடிநீர்*

ஓமம், சாதிக்கோட்டம், கோரைக்கிழங்கு, சுட்ட வசம்பு ஆகிய நான்கு பொருட்களையும் வகைக்கு 8கி. எடுத்து வறுத்துப் பொடியாக்கி அதில் 170 மி.லி. நீர்விட்டு 20 மி.லி. யாகக் குறுக்கி குடிநீராக்கி 15-30 மி.லி. காலையிலும் மாலையிலும் 2 அல்லது 3 நாட்கள் கொடுக்க செரியாமாந்தம் நீங்கும். *(புத்.477-64,476-48)*

2. வசம்பு, சடாமாஞ்சில், உள்ளி, சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், கருஞ்சீரகம், ஆமையோடு பற்பம் ஆகியவற்றை இடித்துப் பொடித்துத்

தண்ணீர்விட்டுக் காய்ச்சி எட்டொன்றாக்கிக் கொடுத்திட செரியாமாந்தம் குணமாகும். *(ஏடு.169-23,4552-18,941-15)*

3. பிரண்டைச்சாறு எடுத்து, முதிர் வசம்பு, ஓமம், மஞ்சள், சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றைச் சேர்த்து இடித்துப்பொடித்து பிறகுநீர் விட்டு சுண்டக் காய்ச்சி குழந்தைக்குக் கொடுக்க, செரியாமாந்தம் விட்டுப்போகும். *(ஏடு.424-18)*

4. ஓமம், கோட்டம், வசம்பு இவற்றை வகைக்கு 4கி. எடுத்துப் பொடித்து முறையாகக் குடிநீர் செய்து கொடுக்கத் தீரும். *(புத்.482-55)*

## கற்க வகைகள்

1. வேலிப்பருத்திச்சாறு 325 மி.லி. எடுத்துக் கொள்க. வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கோரோசனை ஆகிய ஐந்தையும் வகைக்கு 8கி. எடுத்து வேலின் கொழுந்து 20கி. எடுத்து மேற்சொன்ன சாற்றிலரைத்துக் கொள்ள செரியாமாந்தம் போகும். *(புத்.476-36)*

2. வேலிப்பருத்தியிலையை வதக்கிப் பிழிந்து கொள்க. அதனுடன் மிளகு, வசம்பு, உள்ளி ஆகியவற்றை நன்கரைத்து நெய் துளி விட்டு குடிக்க செரியா மாந்தம் நீங்கிப்போகும்.

மேற்கூறிய கற்கத்துடன் எருமை வெண்ணெயைச் சேர்த்துக் கொள்க. இஞ்சி, பெருந்தும்பை ஆகியவற்றைத் தட்டிப் போட்டு குடிக்கச் செய்ய செரியா மாந்தம் குணமாகும். *(புத்.482-55, 476-48)*

### *20. தலைமாந்தம் - குறிகுணங்கள்*

தலையும் கழுத்தும் ஊதல், கை, கால்களில் குளிர்ச்சி, தலைவலி, உடம்பிலும் முகத்திலும் வியர்வை, கொட்டாவி, உடல்வலி, ஒருவேளை குலை வலித்து இதனால் துள்ளித்துள்ளி விழுதல், தலைப்பாரம், குளிர்சுரம், முகத்தில் வியர்வை, புருவத்தின் மேல்பாகம் நிமிரமுடியாது போதல், புருவ வேதனை, பலவித நிறமான பேதி, வயிற்றுப்பொருமல், வலி, விழித்தபார்வை, ஏப்பம், நாசியிற்புண்போல் வலியுடன் நீர் வடிதல், பலவிதமான மார்புவலி, பற்கிட்டலுடன் நற நறவென்று கடித்தல், பயறினைக் கடித்ததைப் போல் பற்களைப் பதறி கடித்தல், பற்களைத் திறக்க முடியாது சோறு, தண்ணீர் இறங்காமை, சோற்றில் வெறுப்பு, இசிவு, கைகால்களில் கயற்றினை முறுக்கி விட்டாற்போல் இசிவு, எழுந்திருக்கக் கூடாமை, பலவிதமாய்ச் சேட்டை செய்யல், உடலை அசைக்க முடியாது பிணம் போல் கிடத்தல், அசதி,

இளைப்பு முதலியவை தலை மாந்தத்தின் குறிகுணங்கள். *(கை.பி.போதினி - 206). (புத்.572-59-60, 477-69,482-56) (ஏடு.519-17,6218-10,362-19,169-23,4552-18,941-16)*

### *குடிநீர்*

குப்பைமேனி, உத்தாமணி எனும் வேலிப்பருத்தி, அகத்தி, முக்காவேளை, நல்வேளை இவற்றின் இலைகளை வகைக்கு 8கி. எடுக்க. இவற்றை ஒரு சட்டியிற் போட்டு வெதுப்பி 82 மி.லி. தண்ணீரை வார்த்து 41 மி.லி. ஆகச் சுண்ட வைத்து அதில் 130 மி.கி. எடை ஆமையோட்டுப் பற்பத்தையும் 130 மி.கி. எடை வசம்பின் சூரணத்தையும் கலந்து குடிநீராக்கிக் கொள்ள வேண்டும். இவ்விதம் செய்து குழந்தைக்குக் கொடுத்து வந்தால் தலை மாந்தம் தீரும்.
*(கை.பி.போதினி-206)*

### *இஞ்சி எண்ணெய்*

இஞ்சி, சங்கிலை, சிறுசின்னியிலை, கரிசாலை, விட்டுணுகரந்தை, வன்னி ஆகிய மேற்சொன்ன ஆறுவகை இலைச்சாறுகளையும் வகைக்கு 335 மி.லி. அளவு எடுத்து 335 மி.லி. சிற்றாமணக்கு நெய் எடுத்து இவற்றைக் கலந்து ஒரு மண் சட்டியிலூற்றி அடுப்பேற்றி ஒரு இன விறகால் எரித்து நீர் அறவே போகும் வரை காய்ச்சி மெழுகுப் பக்குவத்தில் வடித்து இறக்கி வைத்துக் கொள்ள வேண்டும். பின்பு குழந்தையின் தன்மை, நோயின் வன்மையைக் கவனத்தில் கொண்டு 5-15 மி.லி. அளவு கொடுக்க தலைமாந்தம் குணமாகும். *(புத்.477-65)*

### *துவாலை*

வெதுப்படக்கி, பேய்மருட்டி, தும்பை, வேலியிலை, வெள்ளறுகுவேர், உள்ளி, சதகுப்பை, யானைத்திப்பிலி, வசம்பு ஆகியவற்றைச் சமஎடை எடுத்துக் கொள்க. இவற்றைத் தூய்மைசெய்து விதை நீக்குவனவற்றை விதைநீக்கி சாறுபிழிந்து கொதிக்க வைத்து கை, கால், உடம்பு இவற்றிற்குத் துவாலை செய்ய தலைமாந்தம் நீங்கும். *(ஏடு.169-23, 362-19,941-16, 519-17) (ஏ.ஆர்.6218-13) (புத்.482-56)*

## *21. திட்டுமாந்தம் - குறிகுணங்கள்*

திட்டுமாந்தமும், துட்டு மாந்தமும் ஒன்று. மலக் குடலில் மலஞ்சிக்கி வறட்சி ஏற்படல், உள்ளே குளிர்ச்சியாக இருத்தல், மிகுதியான சுரம், அடிக்கடி கூவல் இவையே திட்டு மாந்தத்தின் குறி குணங்களாகும்.
*(ஏடு. 458-60) (புத்.476-53-54)*

தலைவலி, பெருவயிறு நோகல், அரைத்த மாவினைப்போல மலங்கழிதல், இரைந்து கழிதல், அரைக்கண் தூக்கமாகவே இருத்தல், குழந்தை அழல், மிகவும் தளர்ந்து போய்விடல், இவையே திட்டு மாந்தக் குறி குணங்களாகும்.

*(கை.பி.98-144) (ஏடு.798-14) (புத்.477-78)*

### *குடிநீர்*

சடாமாஞ்சில், அசமோதம், வசம்பு, கருஞ்சீரகம், ஆமையோடு, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய சரக்குகளைச் சமமாக எடுத்துக் கொள்க. அவற்றை இடித்துப் பொடித்து 2.6லி. தண்ணீர்விட்டு தீயெரித்து 335 மி.லியாகச் சுருக்கி குடிநீராக்கிக் கொள்ளவும். 15-30 மி.லி. காலை, மாலை, 3 நாட்களுக்குக் கொடுக்க திட்டு (துட்டு) மாந்தம் நீங்கும்.

### நெய்

இஞ்சி, பெருந்தும்பைச் சாறு இவற்றைக் கூட்டிக்கொள்ளவும். இவற்றை எருமை நெய்யில் வேகவைத்துக் கொடுக்க திட்டு (துட்டு) மாந்தம் நீங்கும். *(ஏடு.7313-13,798-15) (கை.பி.98-144)*

### *தகரை எண்ணெய்*

ஊற்றின ஆமணக்குநெய், தகரைச்சாறு இவற்றை வகைக்கு 1.3லி. எடுத்து அதில் நாயுருவி, தைவேளை, நாய்வேளை, கொழிஞ்சி, மூக்கரட்டை ஆகிய இவ்வைந்து வேர்களையும் சமஅளவெடுத்து அரைத்து அதில் எலுமிச்சங்காயளவு எடுத்து கலக்கிக் கொள்க, வசம்பு, ஓமம், கத்தூரி மஞ்சள், வாய்விடங்கம் ஆகிய இவற்றை வகைக்கு 17.5கி எடுக்க. வெள்ளுள்ளி 70கி, கருஞ்சீரகம், வெந்தயம், கடுகுரோகணி இவற்றை வகைக்கு 35கி. எடுத்து எல்லாவற்றையும் நீர்விட்டரைத்துக் கலக்கிக் காய்ச்சி மெழுகுபதத்துடன் வடித்துக் கொள்க. அதனைக் குழந்தைக்கு காலையில் மட்டும் 5-15 மி.லி. 5 நாட்கள் புகட்டி வர திட்டு மாந்தம் நீங்கிப்போகும். தாயானவள் உப்பு, புளி நீக்க வேண்டும். *(புத்.476-53-54,477-78-79)*

### *22. துலை மாந்தம் - குறிகுணங்கள்*

அடங்காத வாந்தியும், உடம்பு நோக்காடுடன் கடுஞ்சுரமும், முக்கலும் முகக்கடுப்பும் ஏற்படல், கொட்டாவி, தசைவலி, விரை விரைத்து வேர்வையுங்காணல், நீர்வேட்கை, குழந்தை முகத்தைப் பார்த்து அழல், விலாப்புறம் வீங்கல், குப்புறக்கவிழல் இவை துலைமாந்தக் குறிகுணங்களாகும். *(புத்.482-56, 477-67,476-50) (சா.வை.முறை-23).*

### விட்டுணுகரந்தைச் சுரசம்

தோல்சீவின சுக்கு, சிற்றரத்தை, விட்டுணுகரந்தை, சத்திச்சாரணை இலவங்கம், குட்டிவிளா ஆகிய ஆறு சரக்குகளையும் சமஅளவாக எடுத்து வெந்நீர் விட்டு அரைத்துப் பிழிந்து சுரசம் பண்ணி, அதில் ஒரு வேளைக்கு 35 மி.கி. கத்தூரி தூவிக் கலந்து 5-15மி.லி. அளவு மூன்று வேளை கொடுக்க துலை மாந்தம் நீங்கிப்போகும். *(புத்.477-68)*

### காந்தாதிக் குடிநீர்

சிறுநீரில் ஈசுரமூலி, சிற்றாமணக்கு, கிலுகிலுப்பை, நெய்க்கொட்டான், சின்னி, கடுக்காய்த்தோல், மாசிபத்திரி, பற்பாடகம், தான்றி, பெருங்கோரைக் கிழங்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, அதிவிடையம், ஊசிப்பாலை ஆகிய இவற்றைச் சரி எடை எடுத்து நனைத்து இடித்துச் சட்டியிலிட்டுக் கருக்கிக் கொள்க. அச்சட்டியில் கருநீலி, நிலவேம்பு, கசகசாவின் வெளித்தோல், தாளிசபத்திரி, கறிவேப்பிலை, சிறு கோரைக்கிழங்கு, சிற்றாமுட்டி இவற்றின் துகள் தனித்தனியாக 4கி. எடை எடுத்துக் கொள்க. அனைத்தையும் ஒன்று கூட்டி 2.6லி. தண்ணீர்விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. காலையில் 15-30 மி.லி. குடிநீரில் வயிரவ மாத்திரையை இழைத்தும், மாலையில் குடிநீரைத் தனியாகவும் புகட்ட துலை மாந்தம் நீங்கும்.

*(புத்.476-50,477-68)*

### துவாலை

2கி. வெள்ளைக் காக்கணம் வேரை அரைத்து தாய்ப்பாலில் கலந்து கொடுக்க பேதியாகும். 2கி. வெள்ளைக் காக்கணம் வேரை வெந்நீரிலரைத்து 325 மி.லி. விளக்கெண்ணெயையும் எடுத்துக் கொள்க. 4கி. வசம்பு சுட்டகரி, வேளைச்சாறு, கொத்தான்சாறு வகைக்கு 32 மி.லி., சுக்கு, மிளகு, திப்பிலி, நெல்லி, தான்றி, கடுக்காய், அழிஞ்சில் விரை இவற்றை வகைக்கு 4கி. எடுத்து இவற்றின் சாற்றையும் எண்ணெயையும் கலந்து மேற்கூறியுள்ள சரக்குகளைத் தூள்செய்து, அதனை எரித்துப் பக்குவமாக எண்ணெயை வடித்தெடுத்துக் கொள்க. அதனை விரலில் தொட்டு நாக்கில் தடவி சந்துகள், தலை, நெஞ்சு ஆகிய இடங்களிலும் தடவித் தேய்க்கத் துலைமாந்தம் நீங்கிப் போகும்.

*(புத்.482-56,476-50-51,477-68,476-54)*

## 23. தோட மாந்தம் - குறிகுணம்

தோஷக் கோளாறினால் ஏற்படும் மாந்தம். மாந்த தோடமும், தோட

மாந்தமும் ஒன்றே. குழந்தையின் கண்கள் சொருகல், சீதமாயும் சிலவேளை தண்ணீராயும் கழிதல், உடல் கறுத்துக் காணல், மலவாய் மாங்காய் போல் வெளிப்படல், உடல் மிக இளைத்தல், வயிறு பெரிதாகல், பால் குடியாமை, குடித்தாலும் அருவருத்தல், சுரமடித்தல், உடம்பில் தீயநாற்றமடித்தல், கண்குழி விழல் என்னும் இவை தோட மாந்தத்தின் குறிகுணங்கள். இது தீராது. *(புத்.477-82)*

## சாறு வகைகள்

### *1. வெங்காயச் சாறு*

வெள்ளை வெங்காயத்தையும், முடக்கறுத்தான் இலையையும் தனித்தனியாக வெதுப்பிச் சாறு பிழிந்து ஒரே அளவாகக் கலந்து ஒரு வேளைக்கு 5-15 மி.லி. அளவு குழந்தைக்குக் கொடுக்கவேண்டும். *(புத்.476-35,477-83,482-59)*

### *2. பச்சிலைச் சாறு*

நல்வேளைஇலை, வசம்பு, வள்ளி, தமாலம் எனும் பச்சிலை ஆகியவற்றை எடுத்து நன்றாக கருக்கி வெதுப்பிப் பிழிந்து சாறெடுத்து அதனைக் குழந்தைகளின் நோய்வன்மைக்கும் பருவத்திற்கும் தக்கவாறு கால், அரை, முக்கால், முழுசங்காகப் புகட்டிட மாந்த தோடம் நீங்கும். *(புத்.476-35)*

### *முருங்கை நெய்*

35கி. முருங்கைப்பட்டைத்தூள், முட்டையின் வெண்கரு 2, 35கி. வெள்ளைப்பூண்டு ஆகிய இம்மூன்றையும் 175கி. வேப்பெண்ணெயி லிட்டு அடுப்பேற்றி தைலப் பக்குவத்தில் காய்ச்சி வைத்துக் கொண்டு அத்தைலத்தைக் கொஞ்சம் கண்களிலுமிட்டுக் காலை, மாலையிலுமாக மூன்று நாட்கள் நாவிலும் தடவ வேண்டும். அதனால் தோட மாந்தம் தீரும். இது சிறந்த முறையாகும். *(புத்.482-59,2477-83)*

### *எண்ணெய்*

முடக்கறுத்தான் இலை, மூக்கரைச் சாரணைவேர், இலைக்கொழுந்து, குப்பைமேனியிலை ஆகியவற்றின் இலைகளைச் சமமாய் எடுத்து அரைத்து விளக்கெண்ணெயிற் போட்டுப் பதமாய்க் காய்ச்சிப் பிள்ளையின் வயதுக்குத் தக்கபடி 5-15 மி.லி. கொடுக்க தோட மாந்தம் தீரும். *(புத்.482-59)*

### *வெளி மருந்து*

சிறுபுள்ளடி, வெள்ளுள்ளி, கீழ்க்காய் நெல்லி ஆகிய மூன்றையும்

சம அளவு எடுத்து நன்கரைத்து குழந்தையின் உச்சியில் அப்பி மீதமானதை மூன்று குளிகைகளாக உருட்டி சீலையில் வைத்து முடிந்து, கை, காலில் கட்டிக் கொள்ள வேண்டும். *(புத்.476-35)*

### *24. நளிர் மாந்தத்திற்குத் தகரை எண்ணெய்*

ஆமணக்கெண்ணெய், தகரைச்சாறு இவற்றை வகைக்கு 1.3லி. எடுத்து ஒன்று சேர்த்து அதில் நாயுருவி, தைவேளை, நாய்வேளை, கொழிஞ்சி, மூக்கரட்டை ஆகியவற்றின் வேர்களை அரைத்து எலுமிச்சங்காயளவு எடுத்து கலக்கிக் கொள்க. வசம்பு, ஓமம், கத்தூரி மஞ்சள், வாய்விடங்கம் இவற்றை வகைக்கு 20கி, வெள்ளுள்ளி 70கி, கருஞ்சீரகம், வெந்தயம், கடுகுரோகணி இவற்றை வகைக்கு 35கி. எடுத்து எல்லாவற்றையும் நீர் விட்டரைத்துக் கலக்கி மெழுகுபதமாய்க் காய்ச்சி வடித்து குழந்தைக்குக் காலையில் மட்டும் 5-15 மி.லி. புகட்டிவர நளிர் மாந்தம் நீங்கும். தாய் உப்புபுளி தள்ளி பத்தியமாயிருக்கவும். *(புத்.476-53-54,477-79,482-60)*

### *25. நீர்மாந்தம் - குறிகுணங்கள்*

உடல் மெலிவுறல், குளிரல், வாயில் நீர் ஊறி வாந்தி ஏற்படல், ஓக்காளித்தல், தாய்ப்பால் குடிக்காமை, தூங்கி விழித்துக் கொள்ளல். *(ஏடு.169-27,798-13) (80) (புத்.572-58-59)*

உடம்பில் முத்துப்போலே நீர்பாயல், உடம்பு, கைகால் சொறியெடுத்தல், கைகால் வீங்கல், வயிறிரைந்து கழிச்சல் உண்டாதல், முகத்தில் நீர்சேர்ந்து கொள்ளல், தலை வலித்தல், நீர்கடுத்து மலம் இறுதி விடுதல். முகம் மினுமினுத்தல், கடுப்புடனும், முக்கலுடனும் மூத்திரத்தாரையில் நீரிறங்கல், உடல் முழுதும் வேர்வைவிடல், வேர்வை வெளிவந்தபின் தலைவலித்தல், வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், குரல் மெலியல், மூர்க்கமாய் பேசல், சினம் ஏற்படல், ஓடும் தண்ணீர்போல் ஓய்விலாத கழிச்சலாதல், உடம்பில் குடத்து நீர்போல் நீர் சேர்ந்து குளிர்ச்சி கொள்ளல், முகத்திலும் நீர்க் கோர்த்துக் கொள்ளல், அதிகமாகச் சிறுநீர் விடல், ஈரல் குலைவலி ஏற்படல். *(சர.வை. முறை-19)(புத்.476-43,482-53) (ஏடு.6218-16,519-20, 362-22)(கை.பி.98-143)*

### *நொச்சிச் சுரசம்*

நொச்சி, வேளை, குப்பைமேனி, நுணா, பேய்மருட்டி, தும்பை ஆகியவற்றின் இலைகளை வெதுப்பிச் சாற்றைப் பிழிந்து கொள்க. மிளகு, வெள்ளுள்ளி, சுட்ட வசம்பு, ஓமம் ஆகிய மருந்துச் சரக்குகளை

வகைக்கு 270மி.கி. எடுத்து மேற்சொன்ன சாற்றிலரைத்து காய்ச்சி காலை, மாலை இருவேளையும் குழந்தைகட்கு 5-15மி.லி. கொடுக்க நீர் மாந்தம் நீங்கிப் போகும். *(புத்.477-61,482-53)*

## குடிநீர் வகைகள்

1. நொச்சி, துளசி, செம்முள்ளி, கண்டங்கத்திரி, தூதுவளை, வெதுப்படக்கி, வேலிப்பருத்தி ஆகிய மூலிகைகளைப் பிட்டவித்துச் சாறெடுக்க. அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, வெங்காரம் ஆகிய இவற்றை அரைத்துக் கலந்த நீரைத் தீயில் வைத்து குடிநீராக்கி 15-30மி.லி. கொடுக்க குழந்தைகட்கு வரும் நீர்மாந்தம் நீங்கிப்போகும். *(ஏடு.6218-17,519-20,362-23,169-27)*

2. கஞ்சாங்கோரை, பொன்முசுட்டை, வேளை, வசம்பு, மஞ்சள் ஆகிய இவற்றைச் சமனாகக் கூட்டிக் கொள்க. அவற்றைப் பொடித்துத் தண்ணீரைவிட்டு எட்டொன்றாகக் காய்ச்சிக் குடிநீராக்கிக் கொள்க. அதில் பெருங்காயம் தேய்த்துக் கரைத்ததைக் குடிநீராக்கி 15-30மி.லி. கொடுக்க நீர் மாந்தம் நீங்கிப்போகும். *(ஏடு.424-11)*

3. **கருநீலிக் குடிநீர்** அவுரிவேர், செவ்வியம் இரண்டையும் வகைக்கு 4கி. எடுத்து நறுக்கிக் கொள்க. அதனை 335மி.லி. நீரிலிட்டு 45மி.லி. ஆக வற்றச் செய்து 15-30மி.லி. வீதம் ஒரு நாளைக்கு இரண்டு வேளை வீதம் நான்கு நாட்கள் கொடுக்க நீர் மாந்தம் குணமாகும். *(புத்.482-53,477-61,476-43)*

***கற்கம்***

நுணா, நொச்சி, குப்பைமேனி, பேய்மருட்டி, தும்பை, நல்வேளை ஆகிய இவ்வாறு மூலிகைகளின் இலைகளையும் தனித்தனியாகக் கசக்கிச் சாறு பிழிந்து ஒரே அளவாகக் கூட்டி வேளைக்கு உச்சிக்கரண்டி 5-15மி.லி. அளவெடுத்து அதில் அரிசித்திப்பிலி, சுட்டவசம்பு, பூண்டு, ஓமம் இந்நான்கையும் வகைக்கு 130மி.கி. எடுத்து மேற்படி சாற்றிலரைத்துச் சேர்த்துக் காலையிலும் மாலையிலும் மூன்று அல்லது ஐந்து நாட்கள் கொடுக்க நீர் மாந்தம் குணமடையும். *(புத்.477-63, 476-43).*

***இண்டு பிட்டவி நீர்***

திப்பிலியையும் மிளகுத் தூளையும் பொடி செய்து வைத்துக் கொள்க. ஒரு பிடி இண்டங் கொழுந்தைப் பிட்டவித்து பிழிந்தெடுத்த நீர் 5-15மி.லி. அளவு எடுத்து அதில் பொடி செய்து வைத்துள்ள

திப்பிலி, மிளகுப் பொடியை வகைக்கு 260மி.கி. சேர்த்துக் கலக்கி அதை ஒரு நாளைக்கு 2 வேளையாக மூன்று அல்லது ஐந்து நாட்கள் கொடுக்க வேண்டும். இதனால் நீர் மாந்தம் தீரும்.

*(புத்.476-44,477-62)*

## எண்ணெய் வகைகள்

### *1.எண்ணெய்*

வெதுப்படக்கி, அம்மான் பச்சரிசி, நுணா, சங்கங்குப்பி, சாணாக்கி ஆகிய இவற்றின் இலைகளை எடுத்துக் கொண்டு சாறு பிழிந்து வகைக்கு 335மி.லி. எடுக்க. சிற்றாமணக் கெண்ணெய் 1.3லி. எடுக்க. இரண்டையும் ஒன்று சேர்க்க. பூண்டு, வசம்பு, கத்தூரி மஞ்சள் ஆகிய இவற்றை வகைக்கு 17.5 கி. அளவு எடுத்துக் கொள்க. அவற்றை இடித்துப் பொடித்து சாற்றில் கலக்க. *(புத்.477-61,476-43-44) (ஏடு. 798-14)(கை.பி.38-143-144)*

### *2.மிளகெண்ணெய்*

மிளகிலைச்சாறு, வெங்காயச்சாறு, மூக்கரட்டைச்சாறு, விளக்கெண்ணெய் இவற்றை வகைக்கு 325மி.லி. எடுத்துக் கொள்க. இவற்றை ஒன்றாகச் சேர்த்து எரித்துப் பக்குவமாக வடித்துக் கொள்க. அதனைக் காலையில் 5-15மி.லி. அளவறிந்து மூன்று நாள் கொடுக்க நீர்மாந்தம் குணமாகும். *(புத்.477-61)*

### *3.சீதேவி செங்கழுநீர் எண்ணெய்*

சீதேவியார் செங்கழுநீர் இரட்டைபேய்மருட்டிச் சாறு, வெதுப்ப டக்கிச்சாறு, காக்கைமல்லிச்சாறு 280மி.லி. எடுத்துக் கொள்க. இந்நான்கு சாற்றையும் மண்பாண்டத்திலூற்றி அதில் மஞ்சள், சுட்டவசம்பு, வெள்ளைப்பூண்டு ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்து அதை மேற்படி சாறுவிட்டு அரைத்துக் கலக்கிக் கொள்ள வேண்டும். ஆமணக்கெண்ணெய் 280மி.லி. எடுத்து அதனுடன் சேர்த்துக் காய்ச்ச வேண்டும். பக்குவம் பார்த்து மெழுகு பதத்தில் வடித்தெடுத்துக் கொள்ள வேண்டும். இதில் 5-15மி.லி. எடுத்து தாய்ப்பால் கூட்டி காலையில் மட்டும் மூன்று நாட்களுக்குக் கொடுக்க நீர் மாந்தம் குணமாகும். *(புத்.476-44,477-62)*

### *4.வெள்ளெண்ணெய்*

பூரம் 4கி., சுத்தி செய்த வாளம் 8கி. எடுத்து ஒன்றன்பின் ஒன்றாகக் குழிக்கல்லில் இட்டு ஆமணக்கு நெய் விட்டரைத்து 325மி.லி.

ஆமணக்கெண்ணெயில் கலக்க. அத்துடன் வெண்மிளகுத்தூள், இலவங்கத்தூள் இவற்றை வகைக்கு 8கி. சேர்த்து அவ்வெண்ணெயைக் காலையில் மட்டும் 5-15மி.லி. மூன்று நாட்களுக்குப் புகட்ட நீர் மாந்தம் நீங்கிப் போகும். மிளகு நீர், பொரிக்கறி அல்லது பொரிக்குழம்பு அன்னம் கொடுக்கவும். *(புத்.476-44,477-62,482-54)*

### *5.எண்ணெய்*

ஈருள்ளி, மூக்கரட்டை இவற்றின் சாறு, விளக்கெண்ணெய் இவற்றை வகைக்கு 335மி.லி. எடுத்து ஒன்றாய்க் கலந்து காய்ச்சி 5-15மி.லி. அளவறிந்து கொடுக்க தீரும். *(புத்.482-53)*

## *27. நீர்க்கண மாந்தம் - குறிகுணங்கள்*

இருமுதல், மூக்கில் நீர் வடிதல், இடையிடையே சுரங்காய்தல், வயிறு பொருமி இரைந்து பலவிதமாகக் கழிச்சல் ஏற்படல், தலை புரட்டல், மயக்கம், உடம்பு, முகம், கண் சோரல் இவை நீர்க்கண மாந்தக் குறிகுணங்கள். *(புத்.477-82,482-66,476-76)*

### *உருண்டை*

அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், கோரோசனை, சாத்திரபேதி, வெட்டிவேர், கோட்டம், மாசிப்பச்சை, விலாமிச்சம்வேர் ஆகியவற்றைச் சமமாக எடுத்துக் கொண்டு ஆதண்டைச் சாற்றால் 3 மணி நேரமரைத்து 130மி.கி. அளவு உருண்டை செய்து கொண்டு வேளைக்கு ஒரு உருண்டை வீதம் மூன்று நாட்கள் தாய்ப்பாலிலிழைத்துக் கொடுக்க நீர்க்கணமாந்தம் நீங்கிப் போகும். *(புத்.477-82,476-76-77,482-66)*

## *27. பால்மாந்தம் குறிகுணங்கள்*

செரியாமையால் வயிறு ஊதல், பால்நிறமாகப் பேதியாதல், வயிற்றுப்பொருமல், இரைப்புண்டாதல், முகம் வெளுத்துக்காணல், கைகால்கள் வெதும்பிக் காணுதல், பாலுண்ணாமை, ஆந்தைப்போல் கண்களில் குழிவிழுதல், தாகம், அதிகவெப்பம், தலையெடுத்து உட்கார்ந்திருக்காமை, தலை நடுங்கல், மார்புநோவு, வயிற்றுவலி, சீறிச்சீறி அழுதல், பெருமூச்சு, சுரம் முதலியவைகளாம், இதற்குப் பீர் மாந்தமென மறுபெயருமுண்டு.

உச்சி, செவி தாழல், அறிவு மயங்கல், கோழை உண்டாதல், வயிறு புண்போல் நோதல், வேப்பம்பூ போல கழிதல், புளித்த நாற்றத்துடன் கழிதல் , விழி சொருகல், வயிறு உப்பி பால்போல் கழிதல், குடித்த பால் செரியாமல் அப்படியே வாந்தியாதல், பலவிதமாய்த் தவித்தல், குளிர்

எடுத்தல், தலை தூக்க முடியாமல் மயக்கமாயிருத்தல், வாய்புண்ணாதல், பசுவின் பாலும் வாந்தியாதல், இக்குணங்களன்றி முகம் வேறுபடல், கண்கள் பொலிவிழந்து, கண்களைச் சுற்றிக் கரு வளையமிடுதல் எனும் குறிகுணங்களுமுண்டாகும். *(புத்.477-66,482-55) (கை.பி.போ.98-138,98-137))(ஏடு.7313-5-7313-4)*

### *உத்தாமணிக் குடிநீர்*

உத்தாமணியிலை, குட்டி விளாவிலை ஆகிய இவ்விரு இலைகளிலும் வகைக்கு ஒருபிடி எடுத்துக் குறுக அரிந்து சட்டியிலிட்டுச் சிவக்க வறுக்க வேண்டும். அதில் சுக்கு, வசம்பு, பூண்டு, சடாமாஞ்சில் ஆகியவற்றை வகைக்கு 4கி. எடுத்து நறுக்கிக் கூட்டி நீர்விட்டு குடிநீராக்கிக் கொள்ள வேண்டும். ஆமையோட்டுப் பற்பம் 3-மி.கி. முதல் 60மி.கி. கூட்டி காலையில் மட்டும் 3 அல்லது 5 நாட்களுக்குக் கொடுக்க வேண்டும். இப்படிச் செய்தால் பால்மாந்தம் நீங்கும்.
*(கை.பி.போ.209-57) (புத்.477-67)*

### *பொடுதலைக்காய்க் கற்கம்*

பொடுதலைக்காயை வறுத்து அதற்குச் சரியாக இந்துப்பு, வசம்பு, உள்ளி, மிளகு இவற்றைப் பங்கிட்டுச் சமமாகச் சேர்த்து அரைத்து ஒரு வேளைக்குப் பாக்கு அளவாக வெந்நீரில் காலையிலும் மாலையிலுமாக 3 அல்லது 5 வேளை கொடுக்க, பால் மாந்தம் தீரும். இதற்குத் தாய் பட்டினி இருக்க வேண்டும். *(புத்.477-66-67,482-55) (ஏடு 7313-5) (கை.பி.98-137)*

## நெய் வகைகள்

### *1. நெய்*

எருமை நெய் 335மி.லி. எடுக்க வேலிப்பருத்தியின் சாற்றை 165மி.லி. எடுத்து ஒன்று சேர்க்க. வெள்ளுள்ளி 10கி. எடுத்து அதில் சேர்த்து காய்ச்சிக் கொண்டு குழந்தைக்குக் கொடுக்க கொடிய பால் மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.7313-5) (கை.பி.98-137)*

### *2.நெய் (வேறு)*

எருமை நெய்யை 335மி.லி. எடுத்துக் கொள்க. வேளை, முருக்கு, பொடுதலை, பருத்தி இவற்றின் சாற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. ஏலம், விளாவரிசி, கிராம்பு, வசம்பு, வெந்தயம், அதிமதுரம், உள்ளி, திரிகடுகு ஆகிய இவற்றை வகைக்கு 2.5கி. எடுத்து ஒன்று சேர்த்தரைத்து நெய்யில் கலந்து கொள்க. பின் அதனைக் காய்ச்சி மெழுகு பதமாக வரும் போது பக்குவம் பார்த்து வடித்திறக்கிக் கொள்க.

இதனை உச்சியிலும் விலாப்புறத்திலும் நன்றாகத் தடவிக் கொள்ளவும். அந்த நெய்யை 5-15மி.லி. அளவறிந்து எடுத்து தாய்ப்பாலில் கலந்து கொடுக்க பால்மாந்தம் நீங்கிப் போகும்.

*(கை.பி.98-138)*

## *28. பாலாடை மாந்தத்திற்கு மருந்து*

வசம்பு, மயிலிறகு இவற்றைச் சாம்பலாக்கி எடுத்துக் கொள்க. வேப்பம் ஈர்க்கில் தாய்ப்பாலைச் சேர்த்து அதை நறுக்கி சாற்றை எடுத்து கொள்க. அதைத்தினமும் துளி எடுத்துக் கொள்க. அதனுடன் சீரகத்தையும், கிராம்பையும் சேர்த்துப் பொடி செய்து தூவி வேப்பம் விதையையும் பொடித்து கலந்து அளவறிந்து குழந்தைக்குக் கொடுக்க பாலாடை மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.941-17)*

## *29. பித்த மாந்தம் - குறிகுணங்கள்*

பித்தம் அதிகமாகி ஏற்படும் மாந்தம். வாந்தியுடன் பேதி, மூர்ச்சை அதிகமாயுண்டாதல், குரல் கம்மலாதல், உடம்பெல்லாம் மஞ்சளித்தல், வேர்வை விடல், உடல் குளிர்ச்சி கொள்ளல் இவையே பித்த மாந்தத்தின் குறிகுணங்களாகும்.*(ஏடு.7313-3,798-3)(கை.பி.98-135)(புத்.482-50)*

### *குடிநீர்*

சுக்கு, அசமதாகம், தைவேளை வேர், வசம்பு, வெந்தயம் ஆகிய இவற்றைச் சமஎடையாக எடுத்துக் கொள்க. அவற்றைப் பக்குவமாக வறுத்திடித்துப் பொடிசெய்து 1.3லி. தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி குடிநீராக்கி இறக்கிக் கொள்க. அதனைக் குழந்தைகட்கு மூன்று நாள் காலையில் மாலையில் கொடுக்க, பித்த மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.7313-3,798-4)(கை.பி.98-135)*

## *30. பேய் மாந்தம் - குறிகுணங்கள்*

இடுப்பு, கை, கால், துடை, நெற்றி, முகம், கண், மூக்கு முதலிய இடங்களில் பிடிப்புண்டாகி தாங்க முடியாது வலித்தல், பிடரியில் பின்னி வலித்தல், திகில், பயத்தினால் செரியாமையுண்டாகல், தாள் நரம்பைப் பற்றியிழுத்தல், பிதற்றுதல், புலம்புதல், பயந்து பயந்து திடுக்கிடுதல், மிரண்டு விழித்தல், வாயிலிருந்து நுரைநீர் விழல், மயக்கமுண்டாதல் இவையே பேய் மாந்தத்தின் குறிகுணங்களாகும்.

*(புத்.477-81-476-56) (சர.வை.முறை-23)*

### *காட்டாத்திப்பூ சுரசம்*

தும்பை, விட்டுணுகரந்தை, குப்பைமேனி, உத்தாமணி, துளசி, பேய்மருட்டி ஆகிய இவ்வாறு மூலிகைகளின் இலைகளையும் வகைக்கு ஒரு பிடி எடுத்துக் காட்டாத்திப்பூ, சுக்கு ஆகிய இவ்விரண்டையும் வகைக்கு 9கி. எடுத்து எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து அரைத்துப் பிழிந்து வெதுப்பிய சாற்றை 16மி.லி. எடுத்துக் கொள்ள வேண்டும். அதில் வேளைக்கு 65மி.கி. கோரோசனையை இழைத்துச் சேர்த்து, காலையிலும் மாலையிலுமாக மூன்றுநாள் கொடுக்க, பேய் மாந்தம் விட்டுப் போகும். *(கை.பி.போதினி.216-60) (புத்.477-81,476-56)*

### *உருண்டை*

பேய்மருட்டியிலை, உள்ளி, வசம்பு ஆகிய இவற்றை நறுக்கிச் சாறு பிழிந்து சட்டியில் காயவைத்து இறக்கி உருண்டை செய்து அதனைக் குழந்தைகட்குக் கொடுக்க, பேய்மாந்தம் நீங்கும். *(ஏடு.612-5)*

## *31. போர் மாந்தம் - குறிகுணங்கள்*

வயிறு அதிகமாகப் பொருமிக்கழிதல், வயிற்றில் புரட்டல் கண்டு வலி ஏற்படல், மூச்சு விடல், தலை குளிரல், தாய்ப்பாலை உண்ண முடியாமல் மங்கல், அடிக்கடி மிரளல், கண் குழிவிழுதல், அதிகமான நாவறட்சி, மார்பு துடித்தல், தலையைப் புரட்டல், சோர்ந்து மயங்கல், நெற்றி நரம்பு புடைத்துக் காணப்படல், வாயும் நெஞ்சும் உலரல், வயிறு ஊதிக் கொள்ளல், உடல் வாடிக்காணல், கழிச்சலோடு சுரமும் தோன்றல், கண் குழி விழல், கண்கள் திறந்து மூடல், வாயில் நுரையுடன் வாந்தி காணல், மலமடைத்துக் கொள்ளல், சீதக் கடுப்புண்டாகல், புறங்கால் வீங்கல், முதுகெலும்பு வலித்தல், உடலிளைத்தல், மயக்கம், அடிவயிற்றில் கொப்பளிக்கும் சத்தத்தை ஏற்படுத்தல் ஆகியவை போர் மாந்தத்தின் குறிகுணங்கள். *(ஏடு.7313-13,6218-14,362-19-20,519-18)(புத்.477-55-56,482-54)*

### *உத்தாமணி சுரசம்*

உத்தாமணியிலை, தோல் சீவின சுக்கு, திப்பிலி, தும்பையிலை, இந்துப்பு, சானகியிலை, பேய்மருட்டியிலை, சீரகம், பொடுதலையிலை ஆகிய ஒன்பது பொருட்களையும் வகைக்கு 5கி. எடுத்து அரைத்துச் சாறு பிழிந்து 5-15மி.லி. எடுத்துச் சுடவைத்து அதில் கோரோசனை 35மி.லி. கூட்டிக் கொடுக்கவும். இவ்வாறு அளவறிந்து காலையிலும் மாலையிலுமாக 3 அல்லது 5 நாட்கள் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் போர் மாந்தம் தீரும். *(கை.பி.போதினி213)(புத்.477-58)*

***உத்தாமணிச் சாறு***

உப்பை வறுத்துக் கொட்டியபின் அந்தச் சட்டியில் உத்தாமணி, தும்பையிலை, வெற்றிலை இம்மூன்றின் சாறும் சமன்விட்டு அது வெதும்பித் தெளிந்தபின் 5-15மி.லி. அதில் 130மி.லி. சுட்ட ஆமை ஓடு, சுட்ட வசம்பு, இவற்றைத் தேய்த்துக் கொடுக்க வேண்டும். இதைச்செய்ய போர்மாந்தம் குணமாகும்.*(ஏடு.362-21,519-18-169-25)(புத்.482-54,426-46,477-56)*

## எண்ணெய் வகைகள்

### *1. ஆமை ஓட்டுக்கருக்குக் குடிநீர்*

ஆமைஓடு, சுட்டவசம்பு, வெள்ளுள்ளி, ஓமம், நுணா, வேலிப்பருத்தி, பொடுதலையிலை, வெற்றிலைக்காம்பு, கிராம்பு ஆகிய ஒன்பது பொருட்களையும் வகைக்கு 4கி. எடுத்து சட்டியிலிட்டுக் கருக்கிக் குடிநீர் செய்து காலையிலும் மாலையிலும் 3 அல்லது 5 வேளை கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்ய போர்மாந்தம் நீங்கும். *(புத்.477-57,476-47,482-54)(ஏடு.619-25,519-18,362-20)*

### *2. ஈர்க்குக் குடிநீர்*

நொச்சி ஈர்க்கு, நுணா, மா, புளி, வேம்பு, கொடிவேலி ஆகியவற்றின் ஈர்க்குகள், பொடுதலைக் கொடி ஆகிய இவ்வேழு பொருட்களையும் வகைக்கு ஒரு பிடி எடுத்துக் குறுக அரிந்துவிட்டுச் சிவக்க வறுக்க வேண்டும். பிறகு அதில் துளசி, திப்பிலி ஆகிய பொருட்களை வகைக்கு 160மி.கி. எடுத்து சிதைத்துப்போட்டு 5.4 லி. தண்ணீரை விட்டு அதை 675 மி.லி. யாக வற்றவைத்துக் காலையிலும் மாலையிலும் 15-30மி.லி. வீதம் மூன்று நாட்கள் கொடுக்க வேண்டும் . அதனால் போர்மாந்தம் நீங்கும். இச்சாபத்தியம் இருக்க வேண்டும்.

*(புத்.476-47,477-58)*

## கற்க வகைகள்

1. பாவட்டையிலை, கழற்சிக்காய், கழற்சிக் கொத்து, வெட்டிவேர் ஆகிய பொருட்கள் நான்கினையும் சரி எடையாக எடுத்து அரைத்துக் கொண்டு அதில் கொட்டைப்பாக்களவு வெந்நீரில் கரைத்துக் குழந்தைக்கு காலையிலும் மாலையிலும் கொடுக்க வேண்டும். இதனால் போர் மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.169-31)(புத்.476-46,477-55)*

### *2. கோழிக்கல்லீரல் கல் கற்கம்*

கோழியின் கல்லீரற்கல், நற்சீரகம், இலவங்கம் ஆகிய மூன்று

பொருட்களையும் சரியெடை எடுத்துப் பாலிலரைத்து 130மி.லி. பாலில் கரைத்துக் கொடுக்க வேண்டும். இதைச் செய்ய போர்மாந்தம் போகும். *(புத்.482-54,476-46,477-56)*

### *ஓமச் சூரணம்*

ஓமத்தை இளவறுப்பாக வறுத்துத் தூள் செய்து கொண்டு அதை வெந்நீரிலாவது தாய்ப்பாலிலாவது போட்டுக் கொடுக்க வேண்டும். இதனால் போர் மாந்தத்தில் காணும் வயிற்றுப் பொருமல், கழிச்சல், வாந்தி இவை உடனே நீங்கி விடும். *(புத்.476-46,477-55,482-54)*

### *நெய்வகைகள்*

1. பருத்தி, பெரிய தும்பை, முருங்கை, பொடுதலை, மணித்தக்காளி ஆகியவற்றின் சாற்றை வகைக்கு 1.3லி. எடுத்துக் கொள்க. எருமை வெண்ணெயை 335மி.லி. எடுத்துக் கொள்க. மிளகு, மஞ்சள், வசம்பு, சுக்கு, திப்பிலி, பூண்டு, (செவல்காரம்), ஆகிய இவற்றை ஒன்று சேர்த்துக் காய்ச்சி பக்குவமாக வடித்துக் கொள்க. அதனை 5-15மி.லி. அளவு குழந்தையின் தன்மை, நோயின் வன்மையை அறிந்து கொடுத்தால் போர்மாந்தம் நீங்கிப்போகும். *(ஏடு.601-3)*

2. ஏரெண்டெண்ணெய் 335மி.லி. எடுக்க, தேங்காய்ப்பால், பசுவின் பால், இரண்டையும் வகைக்கு 335மி.லி. எடுத்துக் கொள்க. குமரி எனும் கற்றாழையின் வேர், கொன்றைத் தோல் வகைக்கு 10கி. எடுக்க. வெட்பாலரிசி, வெள்ளுள்ளி, வசம்பு ஆகிய இவற்றையும் வகைக்கு 5கி. எடுத்துச் சேர்க்க. கள்ளிப் பாலையும் 5கி. அளவு சேர்க்க. அனைத்துச் சரக்குகளையும் அரைத்து ஒன்று சேர்த்துக் காய்ச்சி பதத்திலிறக்கிக் கொள்க. அதனை 5-15மி.லி. அளவு எடுத்து தாய்ப்பாலில் சேர்த்து நோயின் வன்மை, குழந்தையின் தன்மையை அறிந்து கொடுக்க போர்மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.7313-14)*

## எண்ணெய் வகைகள்

### *1. காட்டு மல்லிகை எண்ணெய்*

காட்டுமல்லிகையிலைச்சாறு 335மி.லி., ஈருள்ளிச் சாறு 335மி.லி. கருஞ்சீரகம் 10கி., கடுக்காய்த்தோல் 10கி., நாட்டுக் கடுகுரோகணி 10கி., எடுக்க. விளக்கெண்ணெயைத் தேவையான அளவு எடுக்க. சரக்குகளைப் பொடித்து அரைத்து எண்ணெயில் கலந்து ஒன்றாகக்கூட்டி எரித்துப் பக்குவமானவுடன் வடித்துக் குழந்தைக்குக் காலையில் மாத்திரம் கொடுக்க வேண்டும். இவ்வாறு மூன்று

நாட்களுக்கு 5-15மி.லி. வீதம் அளவறிந்து கொடுத்தால் போர் மாந்தம் நீங்கும்.
*(புத்.477-56,476-46)*

## *2. சத்திச்சாரணை எண்ணெய்*

சத்திச்சாரணை வேர்ச்சாறு, ஆமணக்கெண்ணெய் ஆகிய இவற்றை வகைக்கு 335மி.லி. எடுத்துக் கலந்து கொண்டு ஆமையோட்டுப்பற்பம், வெள்ளுள்ளி, சுட்ட வசம்பு ஆகிய இம்மூன்றையும் வகைக்கு 4கி. வீதமெடுத்து அரைத்துச் சேர்த்துக் காய்ச்சி காலைதோறும் குழந்தைக்கு 5-15மி.லி. வீதம் மூன்று நாட்கள் அளவறிந்து கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் போர் மாந்தம் நீங்கும்.
*(புத்.482-54,476-46-477,56-57)*

## *மருந்து*

வேப்பம் ஈர்க்கில் தாய்ப்பால் வார்த்து நறுக்கிப் பிழிந்த பால் 16மி.லி. எடுத்து அதில் வசம்புச் சாம்பல் 260மி.கி மயிலிறகுச் சாம்பல் 260மி.கி எடுத்து அதில் தூவி ஒரு துளி தேன் விட்டு சீரகம், கிராம்பு, வேப்பம்விதை இவற்றைக் கலந்து கொடுத்தால் போர்மாந்தம் நீங்கும்.
*(ஏடு.ஆர்.6217-14)(புத்.482-54-55,476-47,477-57)(ஏடு.519-18)*

## *32. மாந்தச் சன்னியின் - குறிகுணங்கள்*

கழிச்சல், செவி மந்தித்தல், கண்ணின் கீழ் வளையம் ஏற்படுதல், அரைக்கும் கீழ் சிறுத்துப் போதல், இவையே மாந்தச் சன்னியின் குறிகுணங்கள்.
*(ஏடு.424-16)*

## *பூண்டாதிச் சாறு*

சிறுகளாவிலை, வெள்ளுள்ளி, சுட்ட வசம்பு, ஓமம் இவற்றைச் சரியாக எடுத்திடித்துச்சாறு வாங்கி காலை, மாலை மூன்று நாள் 5-15மி.லி. அளவு நோயின் தன்மையறிந்து உள்ளுக்குக் கொடுக்கப் பதினெட்டு வகை மாந்தச் சன்னி தீரும். இதையே துவாலை செய்யவும்.
*(புத்.477-74)*

## *எண்ணெய்*

வேளை, சங்கம், முருங்கை, மாவிலிங்கம், குழிமிட்டான் ஆகியவற்றின் வேர்களை ஒன்றாகச் சேர்த்து அரைத்துக் கொள்ள வேண்டும். சிற்றரத்தை, உள்ளி, ஓமம், மஞ்சள் ஆகியவற்றைச் சமனெடுத்து அரைத்துச் சேர்க்க. அண்டத் தயிலத்தையும் அதனுடன் சேர்க்க வேண்டும். சுட்ட வேப்பெண்ணெய், பெருங்காயம், வெங்காயத்தயிலம் இவற்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

கட்டிய இலிங்கத்தை அதில் தேய்த்து கொடுக்க மாந்தச்சன்னி நீங்கும்.
*(ஏடு.424-17)*

### *வேர்ப் புகை*

கஞ்சா, ஊமத்தை, தரா இம்மூன்றின் வேரையும் சரி எடை எடுத்து இடித்து அதை வேப்பெண்ணெய் விட்டு வறுத்துப் பொடி செய்து நெருப்பில் போட்டு அதிலிருந்து வரும் புகையைப் பிடிக்க வேண்டும். அவ்வாறு புகைக்க மாந்தச்சன்னி நீங்கும். *(புத்.477-73)*

## *33. முக்கு மாந்தம் - குறிகுணங்கள்*

குழந்தை முக்கி முக்கிச் சீதமும் மலமுமாய் கழிதல், திடீரென்று சுரங்காய்தல், பின்கால் வீங்கல், அயர்ச்சியோடு சதை, தோல், எலும்பு, நரம்பு இவை வெதும்பி உருக உடலையும் உருக்கல் ஆகியவை முக்கு மாந்தக் குறிகுணங்களாகும். *(புத்.476-52,477-72,482-57)*

### *கற்கம்*

ஓமம், மிளகு, வெள்ளுள்ளி ஆகிய இவற்றின் சூரணமும், ஆமையோட்டுப் பற்பமும் சரி எடை எடுத்து அவற்றை வெள்ளிச் சீலையில் முடிகட்டி சட்டியில் வைத்து அதில் 1.3லி. தண்ணீர் ஊற்றி வற்ற வைக்க. எட்டில் ஒரு பங்காக வற்றிய பிறகு அந்த முடிப்பை அவிழ்த்து அக்குடிநீர் விட்டரைத்து அதைக் காலை, மாலையாக மூன்று வேளை 250மி.கி. கொடுக்க மாந்தம் குணமாகும்.
*(புத்.476-52,477-72,482-57)*

## *34. வறள் மாந்தம் - குறிகுணங்கள்*

தோல் சுருங்கி தளர்ச்சியுறல், கண்கள் வெளுத்து உடல் வெளுத்து, மயக்கம் காணல், தலை சுழலல், தாய்ப்பாலை அதிகமாகக் குடித்தல், உடம்பு இளைத்தல், கையும் காலும் வறண்டு உடல் கடுப்பும் வலிப்புமாய் இருத்தல், குழந்தையின் உருவமே மாறிவிடல், இன்னும் உடல் சில்லென்றிருத்தல், சீதளமாகி ஊதல் ஆகிய இக்குறிகள் வறள் மாந்தத்தில் ஏற்படுமென்பர். *(புத்.482-57,477-77)*

### *சடாமாஞ்சில் குடிநீர்*

சடாமாஞ்சில், சுக்கு, வெள்ளைப்பூண்டு, வசம்பு, உத்தாமணி வேர், நிலவிளா, மிளகு ஆகிய இவ்வேழு பொருட்களையும் சரியெடை எடுத்து இடித்து எடைக்கு எட்டுப் பங்குநீர் விட்டு நான்கிலொன்றாகக் குடிநீர் செய்து அதில் ஆமை ஓட்டின் பற்பம் வயதுக்குத் தக்கபடி கூட்டிக் காலையிலும் மாலையிலுமாக 5-15மி.லி. அளவு மூன்று நாள் கொடுக்க வேண்டும். இதனால் வறள் மாந்தம் தீரும். *(புத்.477-78)*

### *வறட்சுண்டி எண்ணெய்*

வறட்சுண்டி, சாறுவேளை, மணித்தக்காளி, கழற்சி, கரிசாலை, துளசி, அவுரி ஆகியவற்றைச் சரி எடை எடுத்து இடித்துப் பிழிந்து 170மி.லி. எடுத்து அத்துடன் பசுநெய் 170மி.லி. சேர்த்துக் கொள்க. கத்தூரி மஞ்சள், கோட்டம், கருஞ்சீரகம், கடுகுரோகணி ஆகியவற்றை வகைக்கு 2கி. எடுத்து இடித்துப் பொடி வற்றக் காய்ச்சிப் பக்குவமாய் வடித்து மூன்று நாட்களுக்குக் காலையில் மட்டும் 5-15மி.லி. உள்ளுக்குக் கொடுக்க எல்லாத் தோடங்களும் போகும். குருதி மிகுந்து உடல் வளரும். *(புத்.482-57,477-78)*

### *35. வாத மாந்தம் - குறிகுணங்கள்*

கை, கால் குளிரல், வயிறு பொருமிக் கொள்ளல், விழி பார்த்தால் அழுகியதைப் போன்றிருத்தல், உடல் வியர்த்தல், வலித்தல், கொட்டாவி, நாசித் துளையும் மூக்கும் புண்ணாகி வலித்தல், பலவிதமாய் குறிகள் ஏற்படல், சீறியழல், துடித்தல் ஆகியவை வாதமாந்தத்தின் குறிகுணங்கள். *(ஏடு.7313-1-2)(கை.பி.98-134) (புத்.482-50,476-28)*

### *குடிநீர்*

ஊர்முதலி எனும் முருங்கை, வேளை, நொச்சி, உத்தமதாளி, பொடுதலை ஆகியவற்றை வகைக்கு ஒருபிடி எடுத்து வறுத்து நீரிலிடு. அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, அசமதாகம், வசம்பு இவற்றைச் சமமாக எடுத்து வெண்ணிற ஆடையில் முடிந்து போடுக. அவற்றைக் காய்ச்சி நோயின் வன்மை, வயதுக்குத் தக்கபடி 15-30மி.லி. அளவறிந்து கொடுக்க வாதமாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.798-3)*

### *எண்ணெய்*

முருங்கை, வசம்பு, சுக்கு, மிளகு ஆகியவற்றைச் சமஅளவெடுத்து, தேவையான அளவு வேப்பெண்ணெயிற் கூட்டிக் காய்ச்சிக் கொள்க. அதனை 5-15மி.லி. அளவறிந்து கொடுக்க வாத மாந்தம் நீங்கும். *(ஏடு.7313-1-2,798-3)(கை.பி.98-134-135)*

### *36. வாலை மாந்தம்*

பெண் குழந்தை பூப்படைவதற்கு முன் அவளுக்குண்டாகும் மாந்த நோய். இந்நோய் சோறு மட்டும் உண்ணக் கூடிய பருவத்தில் மட்டுமே வரக்கூடியது.

### *குறிகுணங்கள்*

குழந்தை காலையிலும் மாலையிலும் வீறி வீறி அழல், கழுத்து துவளல், தலை சாயல், உடல் முழுவதும் குளிர்ந்து சில்லென்றிருத்தல், சுரமடித்தல், வெப்பமாய் கண்களினின்று நீர் வடிதல் ஆகிய இக்குறிகுணங்கள் வாலை மாந்தத்தினுடையவை. *(புத்.477-58)*

### *அமுக்கராச் சூரணம்*

கிராம்பு, சிறுநாகப்பூ, ஏலம், மிளகு, திப்பிலி, சுக்கு, அமுக்கரா, சர்க்கரை இவற்றை முறையே 1:2:4:8:16:32:64:128 என்ற விகிதத்தில் எடுக்க. சரக்குகளை முறைப்படி தூய்மை செய்து தனித்தனியே பொடித்து அனைத்தையும் கலந்து சர்க்கரையைச் சேர்த்துக் கலந்து வைக்க. 500-1000மி.கி. அளவறிந்து தேன், வெந்நீரில் கலந்து கொடுக்க வாலை மாந்தம் குணமாகும்.

## மாத்திரை வகைகள்

### *1. சஞ்சீவி மாத்திரை*

இருவி, நாபி, அரிதாரம், இரசம், கந்தகம், வெங்காரம், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றை வகைக்குச் சமஅளவெடுத்து பொடித்து, கல்வத்திலிட்டு தேவையான அளவு கையாந்தகரைச் சாறு விட்டு 3 மணி நேரம் வீதம் ஏழு நாட்களரைத்து 130 மி.கி. அளவு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்துக. 1 மாத்திரையைக் காலையில் மட்டும் வெந்நீரிலிழைத்துக் கொடுக்க வாலை மாந்தம் தீரும்.

### *2. பூர மாத்திரை*

சீரகம், ஏலம், இலவங்கம், வசம்புக்கரி, அதிவிடையம், மாசிக்காய் ஆகியவற்றை வகைக்குச் சம அளவு எடுக்க. இரசகற்பூரம் 2 பங்கு எடுக்க. சரக்குகளை முறைப்படி தூய்மை செய்து கல்வத்திலிட்டுப் பொடித்து விட்டுணுகரந்தை வேர்ச்சாறு, மாசிப்பத்திரி வேர்ச்சாறு இவற்றால் முறையே 3 மணி நேரமரைத்து 100மி.கி. அளவுள்ள மாத்திரை செய்து நிழலிலுலர்த்துக. ஒரு மாத்திரை வீதம் காலை, மாலை தக்க அனுபானத்தில் கொடுக்க வாலை மாந்தம் நீங்கும்.

*(புத்.477-51)(பாரத்தின்.செய்.மு.குறி-187)*

### *37. விஷ மாந்தம் - குறிகுணங்கள்*

மலஞ்சிக்கி வயிறு வலித்திரைந்து கழிதல். விட்டுவிட்டு சுரங்காய்தல், மேனிவாடல், உடல் வியர்த்தல், கையிற் பிள்ளை தங்காமை, அடிக்கடி வாந்தியாதல் கைகால் குளிர்ந்து கனத்திருத்தல்,

கண்கள் தூங்குவது போலிருத்தல், குழந்தை பாலை வெறுத்தல், உடம்பு இளைத்தல் ஆகியவை விஷ மாந்த குறிகுணங்கள். *(ஏடு.941-19,7313-8-6218-16-362-22,604-19)(புத்.482-54) (கை.பி.98-140)*

வயிறூதி தேகங்காயல், வயிறு வலித்தல், தாகமெடுத்தல், கிறு கிறுத்தல், சந்துகால் வீங்கல், உடம்பிலுள்ள உறுப்புகளெல்லாம் வலித்தல், குத்தல், மலமடைத்துக் கொள்ளல், தேகங் குளிர்ந்து பிறகு சுடல், ஒரு புறங்காய்ந்து மறுபுறம் குளிர்ந்திருத்தல், பின்பக்கம் குடைந்து குத்தலெடுத்தல், உடலின் பின்பக்கம் அதிகமாக வீங்கல், மலங்கறுத்து சிறுகவே வருதல், சிறுநீர் கழியும் போது கடுப்பேற்படல், எதிர்மொழி பேசுதல், நாக்கு. விரல் இவை கறுத்தல், உடல் வெளுப்பாதல், இடுப்புக்குக் கீழே உடம்பு குளிர்ந்திருத்தல், குளிர்ச்சியில் விருப்பம், கொப்புள் மடிந்து வீங்கல், சில விஷங்கள் கண்ணிமையைப் பற்றி நிற்றல், நாக்கு, பல் ஈறு சில நேரங்களில் வெளுத்துக் காணல். *(கை.பி.98-141)(புத்.7313-10)*

மூச்சு திடீரென்று ஏறி இறங்கல், கடல் அலையைப் போல பாதம் தடித்து வீங்கல், நீர் கோர்த்துக் கொள்ளல், பார்வையும் மங்கிவிடல் இவ்வாறிருப்பின் மருந்து கொடுக்க வேண்டாம். மரணம் தான் என்று (கை.பி.98-142, ஏடு 7313-10) அறிந்து கொள்ள வேண்டும். மேனி வழுவழுத்து வெளுத்துவிடல், காக்கை போல் கண்கள் மேல் நின்று சொருகல், இரண்டரை நாழிகைக்குள் இரைப்பெடுத்துக் கொல்லல். *(ஏடு.7313-11)(கை.பி.98-142)*

மலசலம் கட்டிக் கொள்ளல், வயிறு வலித்தல், சுரங்காய்ந்து உடல் வாட்டமடைதல், அலறி, அழுது அன்னம், பால் எடுக்காமை, பலமுள்ள மட்டும் புரண்டு கொள்ளல், பின் விழித்துப் பார்த்தல் ஆகியவை விஷ மாந்தத்தின் குறிகுணங்கள். இவை ஏற்படின் மரணம் நிச்சயம், மருந்து கொடுப்பதை நிறுத்தி விடலாம். *(ஏடு.7313-11)*

## குடிநீர் வகைகள்

1. கொன்றை, சங்கு, ஆடாதோடை, கொடிவேலிவேர், புங்கன்பட்டை, இந்துப்பு ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. 2.6லி. தண்ணீரெடுத்து ஊற்றி அதை 335மி.லி. ஆக குறுக்கி காய்ச்சிக் குடிநீராக்கிக் கொள்க. அதை 15-30மி.லி. இருவேளை கொடுக்க விஷமாந்தம் நீங்கும். *(ஏடு.7313-11)*

2. ஓமம், பொடுதலை, மஞ்சணாத்தி, நொச்சில், வேளைவேர் ஆகியவற்றைச் சம அளவாய் எடுத்துக் கொள்க. வெளுத்த உள்ளி, வசம்பு, திப்பிலி இவற்றை நறுக்கி எடுத்துக் கொள்க. இவற்றில் நீர் ஊற்றிக் காய்ச்சி எட்டொன்றாக்கி 15-30மி.லி. அளவறிந்து கொடுக்க விஷமாந்தம் நீங்கிப் போகும். *(புத்.476-45,482-54)(ஏடு.362-22, 941-19)*

### நெய்

எருமை நெய் 335மி.லி., வேலிப்பருத்திச் சாறு 165மி.லி. எடுத்து ஒன்றாகக் கலந்துக் கொள்க. வெள்ளுள்ளி, சத்திச்சாரணை இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. அதனைச் சிதைத்து மேற்சொன்ன கலவையில் போட்டு பதமாகக் காய்ச்சி 5-15மி.லி. அளவறிந்து உட்கொள்ள விஷ மாந்தம் நீங்கிப்போகும். *(ஏடு.601-7)*

### எண்ணெய்

பொன்னாங்காணி, மணித்தக்காளி, ஆரை, தகரைப்பாசி ஆகியவற்றின் சாறு 335மி.லி., விளக்கெண்ணெய் 335மி.லி. எடுத்துக் கொள்க. தான்றிக்காய், கடுக்காய், உள்ளி, கிராம்பு, வசம்பு, கோட்டம், வெந்தயம், நீருள்ளி, கெருடப்பச்சை, அதிமதுரம் ஆகியவற்றை வகைக்கு 9கி. அளவாக எடுத்துக் கொள்க. அனைத்துச் சரக்கையும் சேர்த்து காய்ச்சிக் கொண்டு நோயின் தன்மை, குழந்தையின் வயது ஆகியவற்றிற்கேற்ப குழந்தைக்குக் கொடுக்க விஷ மாந்தம் நீங்கிப் போகும். *(ஏடு.601-7)*

### கத்தூரி மாத்திரை

கத்தூரி 5கி., குங்குமப்பூ 10கி., கோரோசனை 15கி. இவை மூன்றையும் கல்வத்திலிட்டு தாய்ப்பால் விட்டு 4 .5 மணி நேரம் அரைத்து 130மி.கி. அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுர்த்தி வைத்து பக்குவப்படுத்திக் கொள்க. அந்த மாத்திரை ஒன்றையெடுத்து தாய்ப்பால் விட்டிழைத்து அதை முனைநாவில் தடவி விட விஷதோஷ சன்னி மாந்தம் விட்டுப்போகும். *(புத்.476-136,572-37)*

### 38. வீக்க மாந்தம் - குறிகுணங்கள்

சோறு செல்லாமை, உடல் வெளுத்து நிறம் வேறுபடல், கண்ணும் காதும் மிக வீங்கல், பிறகு வற்றல், நா புண்ணாதல், ஓயாது சுரங்காய்தல், கைகால் ஓய்ந்து வலியெடுத்தல், அன்னத்தை வெறுத்தல் இவை வீக்க மாந்தக் குறிகுணம். *(புத்.476-52,477-76,482-57)*

### *பூவரசுக் குடிநீர்*

பூவரசம் பழுப்பு, சங்கம்பட்டை, சீந்திற்கொடி, துளசி, சுக்கு, வறள்முள்ளி, முருங்கை ஈர்க்கு, நீர்முள்ளிவேர், சாறுவேளை எனும் தைவேளை வேர், பிரமியிலை, மருள்கிழங்கு, தூதுவளை, சிறுகுறிஞ்சான், சத்திச்சாரணை வேர், கருஞ்சீரகம் ஆகிய சரக்குகளைச் சரிஅளவு எடுத்து இடித்துக் குடிநீரிட்டு எட்டிலொன்றாக வற்றச் செய்து 15-30மி.லி. அளவறிந்து, நோயின் தன்மை, குழந்தையின் வன்மையறிந்து கொடுக்க விடமாந்தம் நீங்கிப்போகும்.

*(புத்.482-57,477-76,476-52) (கை.பி.98-148)*

# மாந்தம்

## நோய்வரு வழி

மாந்தமது வரலாறு சொல்லக் கேளீர்
மாதரொடு பாலகரு மருந்துந் தீனி
சேர்ந்ததொரு பால்தனிலே விஷந்தான் கொண்டு
சிறுவருக்கு உதரத்தில் மந்தம் பற்றி
ஊர்ந்தெழுந்த திரையினால் விரணங் கொண்டு
உள்விரணம் பலநோவு உறவ தாகி
சார்ந்தமலம் சிக்கியதில் தோஷ முண்டாய்
தானெழும்பும் மாந்தவகை சாற்று வேனே.

*(கை.பி.98-133)*

## ஆகாத பண்டங்கள்

மாந்த நோய்வழி வகுக்குங் காலை
வாய்ந்த தாயார் மகவினை யீன்ற

பின்ன ராண்டிற் பெயர்சரு குறுநீர்
வன்மை யெருமைப் பால்வரு புளிமோர்

அந்நெய் வாழை யருங்கனி மாங்கனி
நன்மைத் தேங்காய் நல்லிள நீரும்

கடலை வெல்லங் காட்டிற் றுவரை
அடல்மொச் சைப்புளி யம்பருப் புப்பருப்

புருண்டை மாப்பொரு ளுறுமதி ரசமரிப்
பொருளுறு சோறு போத வருந்தல்

பாகல் கள்ளூன் பரிய வுளுவை
ஏகும் வாளை யெய்வரால் கெண்டை

இவற்றை யுண்ண லெழிலுண் வின்பொழு
தவத்தைச் சுரமிவை யடியாய்ப் பலனில

எய்தின் மலக்கட் டேறி யுடல்கன
முய்தி யின்றி யுண்டா மந்தப்
பாலை யுண்ட பால கர்க்கு

மேலு மயிர்க்கூச் சுண்டாய் மிகுசுரம்
சாலக்கழிச்சல் சாருங் குறிசில

மாந்த முண்டாய் வருமென்
றாய்ந்த மருத்துவ ரறிந்துரைத் தனரே,

அன்னமு பாலு நெய்யு மழகிய பழமுந் தேங்காய்
பின்னையுங் கடலை வெல்லம் பெரியதோர் கதலிப் பண்டும்
தின்னுமோர் காலந் தன்னில் தீயென வெதும்பு மாகில்
ஒன்றுறு பிள்ளைக் குத்தான் உவந்துமே மாந்த முண்டாம்.

அன்னை பால்மலக் கட்டாகி
யதனுடல் கனத்துத் தோன்றித்
தின்றதால் வாயுப் பண்டம்
தின்றத னாலே மாந்தம்
பிள்ளைதான் மயிர்க்கூச் சிட்டுப்
பிள்ளைக்கு வெதுப்பு காணும்
மின்னொத்த விடையாய் கேளாய்
மிகுத்திடுங் கழிச்சற் றானே.

மாதா வயிற்றின் மந்தமுலைப்
பாலே யருந்தி வருமாந்தம்
சூதா மரம்பை தெங்கிளநீர்
சுரபி மாமிசங் கனிகவிச்சு
பேதா மலைத்து வரைகடலை
பேசு மொச்சை புளிங்கொட்டை
மாதா கொள்ளில் பிள்ளைக்கு
வருங்காண் மாந்தந் தப்பாதே.

எந்த நோயும் வருவிதந்தான்
இனித்த வெல்ல முந்தேங்காய்
சொந்த வுண்டை யுளுவையுடன்
துள்ளு வாளை வரால்கெண்டை
சந்த மேதிப் பாலிறைச்சி
சருகின் றண்ணீர் புளிமோர்தான்
வந்த பாகல் சுரைகதலி
வரூஉ மாந்த மிவைதின்றால்.

முளைத்த பின்னன்னை கொள்ள முதிர்ந்த நோய்
வளர்த்த பிள்ளையைச் சூழ்ந்து மலிந்திடும்
கிளைத்த சர்க்கரை வள்ளிக் கிழங்குடன்
தெளித்த மாங்கனி தெங்கு பலாவிற்கே.

பலம தாங்கட்டுப் பால்சுரை பீர்க்கங்காய்
அலரும் வாழை யவரை துவரையுங்
கிலம தாக்கிடுங் கீரைத்தண் டின்கறி
குலவு மாங்கட லைதனைக் கொள்ளவே.

கொள்ள வேசம் புலித்தகர் கோழிமீ
னெள்ளற் பன்றிக் கறிபல் லிறைச்சியு
முள்ளுக் கன்னை நிதநித முண்டாக்கற்
பிள்ளைக் குப்பல மாந்தம் பெருகுமே. *(புத்.477-45)*

### *மாந்தத்தின் பொது குறிகுணங்கள்*

மாந்த நோயில் வரும்பொதுத் தன்மைகள்
வாய்ந்த பலவவை வழுத்தல் கேளாய்

குழந்தை யுடலங் கொள்ளல் கனதி
விழைந்து நோதல் வேர்த்தல் சோர்ந்து

கிடத்தல் காய்தல் கிளரழ னாற்றம்
படுதலை மயக்கம் பார்வை சேத்தல்

கண்கள் சுழலல் கண்கள் குழிதல்
நண்ணு முகம்பல வாக வெளுத்துப்

பண்ணு மொளிதரல் பகர்குரற் றாழ்தல்
திண்வா யுலரல் சேர்முலை யுண்ணா

தெண்ணும் வாந்தி யேற வெடுத்தல்
பசியி ராமை பலநிற பேதி
கசியுஞ் சீதமு மலமுங் காணல்

கெட்ட பால்போல் கிளர்தண் ணீர்போல்
விட்ட பேதி விதமாய்க் காணல்

கைகால் பின்னல் கைகால் குளிரல்
கையிற் றங்காங் கலங்கித் துள்ளல்

என்னு மிவையே யென்றனர்
மன்னிய முன்னூல் மாண்புடை யோரே.

பிள்ளையுங் கனத்தி ருக்கும்
பிரண்டைபோற் காலும் பின்னி
உள்ளவா கண்சி வந்தே
யுடம்பினி னோயுங் காட்டும்

துள்ளியே கையில் தங்கா
துடுக்கெனச் சுழலு மாகில்
கள்ளமாய்க் குரலுந் தாழ்ந்து
கண்குழிந் திருக்கும் மாந்தம்.

மாந்தத்தின் குணமே கேளாய்
வயிறுபோம் வெப்பு நாறும்
சோர்ந்துகை கால்கு ளிர்ந்து
தோகையே முலையுண் ணாது
வாந்தியு மிகவே பண்ணும்
வாயுமே யுலர்ந்து காயும்
மாந்தியே மயக்க முண்டாம்
மாந்தத்தின் குணம தாமே.

மாந்தத்தின் குணமே தென்றால்
வயிறு கழியு மயக்கமதாம்
காந்து பசியு மில்லாமல்
காம விகாரங் கொண்டவர்போல்
சோர்ந்து கிடக்குங் கைகாலும்
குளிர்ந்தே காணுந் தொல்லுலகில்
காந்தள் மலர்போற் கையுடையாய்
கனத்த மாந்த குணமிதுவே. *(புத்.477-46)*

பாரே சீத மலமுடனே
பதமாய்க் கழியும் பலவிதமாய்த்
தேரே கெட்ட பாலதுபோல்
தெளிந்த தண்ணீர் போலவுமே
வாரே கழியுங் குணம்பாராய்
வளமா யுள்ளங் கைகாலும்
நேரே குளிர்ந்த தண்ணீர்போல்
நிசந்தா னென்றுந் தான்பாரே.

பாரே வெதும்புங் கண்சுழலும்
பனிபோற் றேக மிகவேர்க்கும்
பாரே முகமும் பலவிதமாய்ப்
பளிங்கு போல வொளிமினுக்கும்
பாரே யிந்தக் கூறதனைப்
பருவ மறிந்து கொண்டெல்லாம்

பாரே யிந்தக் குறிதானே
 பண்பாய் மாந்த மென்றுரையே. *(புத். 572-14,15)*

மாந்தமானது கண்டிடில் வயிறு உப்பிசமாய்ச்
சேர்ந்த பேதியும் பற்பல விதங்களாய்ச் செறிந்து
வாந்தியோடு மெய்மயக்கமுங் குளிருடன் வெப்புங்
காந்துதாகவும் பிரமையுங்கண் மயங்கிடுமே.....
*(சர.வை.முறை-18)*

மாந்தத்தின் குணமே தென்றால்
 வயிறு கழியும் மயக்கமதாம்
காய்ந்த பசியு மில்லாமல்
 காம விகாரம் கொண்டவர்போல்
சோர்ந்து கிடக்குங் கைகாலுஞ்
 சுழன்றே தோணுந் தொல்லுலகில்
காந்த மலர்போல் குணமுடையீர்
 கனத்த மாந்தக் குணமிதுவே.
*(ஏடு.ஆர்.941-14, 6218-12,362-17,
4552-17,169-20, 604-15).*

மாந்தஞ் செய்யுங் குணங்கேளாய்
 வயிறு பொருமி மிரைப்புண்டாம்
ஆந்தை போலே முழித்திருக்கு
 மாவின்பால் கொள்ளக் கட்டும்
வேந்தே வேப்பம் பூப்போலே
 விதமாய்க் கழியும் தாகிக்கும்
மேந்துந் தனதா யினிப்பொருமி
 வாயு முலரும் மிளைப்புண்டாம்.

கண்ணுங் குழியுஞ் செவிதாழும்
 கருத்து மயங்கிக் குளையுண்டாம்
புண்போ லுதரத்தே நொந்து
 புளித்தே கழியும் வயறதுவும்
பண்ணார் மொழியாள் மால்மாந்தம்
 பரிவாய் இந்தக் குணந்தீர
யெண்ணார் மேதி நெய்தன்னில்
 இயல்வாய் வைக்குந் திறஞ்சொல்வேன்.
*(ஏடு.435-23, 601-1,2)*

சார்ந்திடவே பாலனுடல் வெதும்பி வேர்க்குஞ்
  சற்றுமுலை யுண்ணாது வாந்திபண்ணும்
கூர்ந்திடவே மதிமயங்குஞ் சீதம் வீழும்
  குணங்கெட்டு மலவாயுங் கெட்டபால்போல்
தேர்ந்திடவே தெளிந்துதண் ணீர்போல் கழியும்,
  தேகம்வெப்ப நாற்றமுங் கால்கை குளிர்ப்பாம்
ஆர்ந்திடவே நாவுலருங் குரலுங் கம்மும்
  அப்பனே கண்குளிர்ந்து சுழலு மாமே' *(ஏடு.529-90)*

ஆமே சுழன்ற கண்சிவக்கும்
  அடவாய்க் காலும் பின்னலுண்டாம்
தாமே முகமும் பளிங்காகுந்
  தங்கம் போல மேனி மின்னும்
போமே மாந்தத் தோடகுணம்
  பொருதும் பாலர் பிணி நோக்கி
நாமே சொன்னோ மிந்தமுறை
  நவின்றார் முனிவர் நவின்றோரே *(ஏடு.525-90)*

### *எட்டு வகை மாந்தத்தின் குறிகுணங்கள்*

நாடுகணமாந்தம் நன்றாய் வயிறுபோம்
தேடுசெரியா மாந்தச் செய்திகேள்-ஓடுமே
மாக்கரைத்தத் தன்வலிப் பாந்தலை மாந்தம்
காக்கம்போர் மாந்தத்தைக் காண்.

காண வயிறுபோங் கட்டுமாந்தக் குணமோ
ஆன மலம்போகா தாகுமே-ஊன
விஷமாந்த மேயரைக்கு மேலே வெதுப்பும்
இசைவாய் நீர்மாந்த மியம்பு.

இயம்புவது மேனியெங்குங் குளிர்ந்திருக்கும்
இயம்புகழி மாந்தம் வியல்பைக்கேள் - சோம்பல்
பல்விதமாய்த் தான்கழியும் பாருமிது வெட்டும்
உலகறிய வெவ்வே றுரை. *(ஏடு.169-8)*

### *மாந்த வகைகள்*

சாற்றுகிறேன் வாதமாந்தம் பித்த மாந்தம்
  தயவான சிலேற்பனத்தின் மாந்தந் தானும்
ஊற்றுகிறேன் பால்மாந்தந் தீரை மாந்தம்
  ஊதுகின்ற மாந்தமொடு பிரளி மாந்தம்

சீற்றமுள்ள விம்மாந்தம் தொந்த மாந்தம்
　　சொல்லரிய நீர்மாந்தம் துட்டு மாந்தம்
ஏற்றமுள்ள போர்மாந்தம் திட்டு மாந்தம்
　　இயல்பான சுழிமாந்தம் வீக்க மாமே.

வீக்கமொடு மகாதோஷ மாந்தந் தானும்
　　விளம்புகிறேன் குடோரியொடு வீச்சு மாந்தம்
பக்கமுறு மாந்துகை பதினெட் டுந்தான்
　　பற்புடைய பாலகர்க்கு வந்தணுகில்
ஆக்கமுடன் சாத்தியமும் அசாத்தியமும்
　　ஆராய்ந்து கண்டறிந்து அவுஷ தங்கள்
நீக்கிவிடச் சொல்லுகிறேன் பண்டி தர்க்கு
　　நிகழ்வாத மாந்தகுணம் நீதான் கேளே.
*(ஏடு.798-2) (கை.பி.98-133-134)*

மாந்தம் வாதம் பித்த மையம்
சேர்ந்த விடம்போர் திகழும் வாலை

சுரநீர் செரியா சூழ்கட் டுப்பால்
எரிதுலை தலைகண மிழுக்கும் வலிப்பு

சுழிமூக்கு சந்தி சோர வூதல்
கழியா வீக்கங் கண்ட விருபான்

ஒன்றென் பார்சில ரோதிய வவையுடன்
நன்றாய்த் தனித்தனி நாட்டிய வுப்பு

சத்தி வறட்சி சாருந் திட்டு
முற்று முளைமாந் தக்கர மொழிபேய்

நீர்கணந் தோட நிலைத்த கருப்ப
மார்பத் துங்கொடு வறைவா முப்பத்

தொன்றென வோதுவர் முன்னோர்
நன்றுறு கலைவழி நாடினை யறியே. *(புத்.477-46)*

எண்ணிய மாந்தக் கூட்டம்
　　இயலுறும் வாத மாந்தம்
உன்னிய பித்த மாந்தம்
　　உயிர்செறி சேத்ம மாந்தம்

பன்னிய விடமா மாந்தம்
 பாடுறு போரின் மாந்தம்
துன்னிய வாலை மாந்தம்
 சுரமாந்த மின்னங் கேளே

கேளேநீர் மாந்தமுடன் செரியா மாந்தம்
 கேடுபுரி கட்டுமாந் தத்தி னோடு
பாளான பால்மாந்தந் துலையா மாந்தம்
 பகரரிய வெரிமாந்தந் தலையின்மாந்தம்
தாளான கணமாந்தம் வலிப்பு மாந்தம்
 சதியான சுழிமாந்த முக்கு மாந்தம்
வேளான சன்னிமாந்தம் மூது மாந்தம்
 வீக்கமுறு மாந்தமுட னிருபத் தொன்றே'

*(புத்.477-46)*

### *பொடுதலைச் சுரசம்*

ஒருபிடி பொடுதலை ஓர்கல் லுப்புடன்
இருவித மொன்றென இடித்துச் சாறு செய்து
கிருவிதஞ் சட்டியிலிக் கிஷாயம் செய்தபின்
தருவித முண்டிடத் தணிமாந் தமே.

*(ஏடு.4552-17,362-17,169-22, 604-16,218-12, 941-14)*

ஒருபிடி பொடுதலை யோர்கல் லுப்புடன்
இருவித மொன்றதா யிடித்துச் சாறுசெய்
சிறுவித சட்டியிற் சிறுகச் செய்தபின்
தருவித முண்டிடத் தணியு மாந்தமே' *(புத்.477-47)*

"விடுமே யோம முள்ளியுடன்
 மீறு மிளகு திப்பிலியும்
நடுமே சீலை தனில்முடிந்து
 நன்றாய் நாழி நீர்தன்னில்
இடுமே யடுப்பி லெட்டொன்றாய்
 இதமாய்க் காய்ச்சிக் குடிநீரைக்
கொடுமே மாந்த முள்ளவெலாம்
 குடிபோ மென்று கூறினரே"

### 1. நொச்சிச் சாறு

நொச்சி பொடுதலையு நுண்நுணா வேலிநாற்
பச்சை யிலைசரியாய்ப் பாலருக் - கச்சமற
நீர்வரவே தானருக்கி நீகொடுக்க வேமாந்தம்
ஊர்விட்டுப் போமென் றுரை. *(புத்.477-46,47)*

### 2. வேலிப்பருத்திச் சாறு

உத்தா மணியும் பேய்மருட்டி யுவந்த சாணாக் கிலையுடனே
வித்தார முள்ள வெதுப்படக்கி வேளை நொச்சி லிவையாறும்
ஒத்தே வதக்கிச் சாறுட்கொண் டுயர்ந்த வசம்பு சிறுதேக்குஞ்
சற்றே யாமை யோடுசுட்டுச் சாற்றிற் கொடுமாந் தம்போமே.
*(புத்.477-47)*

### 4. ஓமக்குடிநீர்

விடுமே மாந்த மோமமுள்ளி
மீறு மிளகு திப்பிலியு
போமே சீலை தனில்முடிந்து
போட்டு நாழிநீ ரதனில்
லோடுமே அடுப்பி லெட்டொன்றாய்
அடவாய்க் காய்ச்சிக் குடிநீரைக்
குடுமே மாந்த முள்ளதெல்லாம்
குடிபோ மென்று கூறினேனே.
*(ஏடு.362-25,604-23,6218-19) (புத்.477-48)*

### 5. குடிநீர்

வேலிப் பருத்தி யோர்பிடியும்
விரும்புஞ் சுக்கு சடாமாஞ்சில்
கோல விளாவிலை வசம்புள்ளி
குறித்த மிளகு கூனத்துடன்
சீலச் சீரகமும் போட்டு
சிவக்க வறுத்து யெட்டொன்றாய்
சாலக் காய்ச்சிக் கொடுப்பீரால்
சர்வ மாந்தம் பறந்திடுமே. *(ஏடு.169-21)*

### 8. குடிநீர்

சுக்கொடு நாரி வேரும்
தும்பையும் முருங்கைநெத்து

மிக்கநல் விளாத்தி வெள்ளை யுள்ளி
வெந்தய மோமந் தகத்தோர்
மஞ்சள் திப்பி லிதான்
வகைக்குக் கழஞ்சாய் கூட்டி
ஒக்கவே வறுத் தொன்றாய்
உறுதியாய் வெந்து கொள்ளே
கொண்டிடும் கியாழ மூன்று
நாளாறு பொழுது கொள்ளில்
உந்தியில் பொருமல் மாந்த
முரத்தெழும் தாகம் தீரும். *(ஏடு.601-86)*

### *9. வேளைக் குடிநீர்*

வேளைவேர் சுக்குடனே வெந்தயமும் வெள்ளுள்ளி
பாளைசே ரோம பருவசம்பும் - வேல்விழியீர்
குன்றுமரக் காய்ச்சிக் குழவிதனக் கீயக்
கண்டாலு மாந்தம்போங் காண்.
*(ஏடு.169-22,941-15,6218-12,4552-17,*
*362-17, 604-16) (புத்.482-51)*

வேளைவேர் சுக்குடனே வெந்தயமும் வெள்ளுள்ளி
பாளை வசம்பு பகரோமம் - வாள்விழியாய்
ஒன்றாகக் காய்ச்சி யுடன்குழவிக் கீந்துவிடக்
கண்டவுடன் மாந்தம்போங் காண். *(புத்.477-49)*

### *10. மஞ்சணாத்திக் குடிநீர்*

என்றே மஞ்ச ணாத்தி நொச்சில்
இனியே வேலி கழற்கொடியும்
ஒன்றே யொவ்வொன் றொருபிடியாய்
ஒக்க வறுத்துச் சட்டிதனில்
நன்றாய்க் கருக்கி நீர்நாழி
நயந்து விட்டு மடுப்பேற்றிக்
கன்றா வோமம் வசம்பு சுக்கு
மிளகு பொடுதலைக் காயாமே.

ஆமே திப்பிலி யதனோ
யருநல் லெண்ணெ யிற்சிவக்கத்
தாமே வறுத்துப் பொட்டணமாய்ச்
சமைந்த நீரினுடன் போட்டு

வேமே காய்ச்சி யோர்சங்கு
விரைவிற் கொடுக்கப் படுமாயின்
போமே மாந்த முள்ளவெலாம்
புறம்போய்க் கடலிற் புக்கிடுமே.
*(ஏடு.6218-18-19) (புத்.477-49)*

### *11. உத்தாமணிக் குடிநீர்*

உத்தா மணியிலை வேளைவேர்
உகந்த நொச்சிப் பொடுதலையும்
சித்தா முருங்கை நுணாவீர்க்கு
சேர வறுத்து நீர்வார்த்து
ஒத்த வோமந் திரிகடுகும்
உடனே வசம்பு மதிலிட்டு
வற்றக் காய்ச்சி யெட்டொன்றாய்
வடிக்க மாந்த மாறிடுமே.
*(ஏடு.169-21,362-24) (புத்.477-50)*

உத்தாமணியிலை வேளையின் வேர்
உவந்தநொச்சில் பொடுதலையும்
சித்தா முருங்கை நுணா வீர்க்கு
சேர வறுத்து நீர்விட்டு
ஒத்த வோமந் திரிகடுகும்
உயர்ந்த வசம்பு முடிந்ததனை
வைத்தெட் டொன்றாய்க் காய்ச்சிக்கொடு
மாந்த மெல்லா மோடிடுமே’ *(புத்.477-49)*

### *12. முக்கடுகுக் குடிநீர்*

சுக்கு மிளகுத் திப்பிலியுந்
துய்ய வோம முள்ளியுடன்
ஒக்க நறுக்கி சீலைதனில்
உகந்தே முடிந்து நீருழக்காய்
செக்கச் செவக்கத் தான்காய்ச்சி
சிறுவர்க் கிதனை புகட்டிவர
மிக்க மாந்தம் பிணிதோஷம்
விட்டே யோடுங் கண்டாயே.
*(ஏடு.169-21,362-25,604-23,6218-19)*
*(ஆர்.941-22)*

### *13. மாசிப்பச்சைக் குடிநீர்*

கியாழத்தால் மாந்தங்கள் போகக் கேளாய்
கேடற்ற மாசிப்பத்திரி பற்பா டகந்தான்
கியாழத்தால் நாயுருவி முட்காய் வேளை
கருஞ்சீர கத்துடனே கோழி யெச்சம்
கியாழத்தாற் பற்பமாய்ச் செய்து கொண்டங்
கிருவேலி சங்குசுக் குடனே யேலம்
கியாழத்தால் ரோகணியும் பறங்கிச் சக்கை
சீக்கராம் பட்டைகா வட்டம் புல்லே.

புல்லான கடுக்காயு மாசிக் காயும்
புகழான வசம்போடு தான்றி முத்தம்
வில்லான நீர்பபடியி ரண்ட தாகும்
விதமாக வெட்டொன்றாய்க் காய்ச்சி யேதான்
கல்லான மாந்தமொடு சுழிமாந் தங்கள்
கைப்பினிப்பால் வந்ததொரு கழிச்சல் மாந்தம்
மல்லான மாதவாய்ச் சிறுபண் டத்தால்
மருவிவந்த மாந்தமெல்லா மயங்கிப் போமே.

*(புத்.477-50)*

### *14. குடிநீர்*

உத்தாமணியோ டுள்ளிவெதுப் படக்கிகோழி
யவரைவசம் புடன் சாணாக்கி
யித்தனையு மோமத்தி னிற்கூட்டிக்
கருக்கிட்டு மேபுகட்ட
வத்தினமே மிகுதாக மனல்கண்டா
னுணாவிலைவெந் தயம்வசம்பும்
புத்தவெண்கா யமுங்கூட்டுங் கருக்குணப்பே
திகள்மாந்தம் பொருமல் போமே’

*(சர.வை.முறை-14)*

### *16. மாந்தத்துக்குக் குடிநீர்*

பொடுதலை வேம்பு மாவின்
புளிநுணா நொச்சில் வேலி
கடுகவே யீர்க்கி லேமுங்
கஷாயம் வைத்து மேலு

'மிடுவகை யோமம் ....
வெள்ளுள்ளி திப்பிலி நெரிட்டி
அடிதல நீர்நாழி தன்னை
ஆனதோர் சங்குப் போக.

போக்கிடு மூது மாந்தம்
போர்மாந்தம் சத்தி மாந்தம்
தேக்கிடுஞ் செரியா மாந்தஞ்
சிறந்திடுங் கட்டு மாந்தஞ்
தாக்கிடு மாந்த மஞ்சந்
தரணியில் தணியு மென்றே.
*(ஏடு.362-24,604-21) (ஏடு.ஆர்.941-21,6218-18)*

### *17. குடிநீர்*

இடுமே துளசி செம்முள்ளி
தும்பை யதனுடனே
நடுமே சீர் நல்ல கஞ்சாங்
கோரை தைவேளையுடன்
கொடுமே நறுக்கிப் புகட்டிட
சாற்றைக் குழவியர்க்கு
விடுமே பொருமலு மாந்த
கணங்களும் விட்டிடுமே. *(ஏடு.362-27)*

### *1. வெற்றிலைக் காம்பு கற்கம்*

வெற்றிலைக் காம்பு பதினொன்று மேவு வசம்பு மவ்வளவு
பற்றிய வுள்ளி தானிரண்டு பண்பாந் திப்பிலி தானொன்று
சுற்றி வெதுப்பித் தானரைத்துச் சுகமாய்ப் பருவந் தக்கபடி
வற்றிய வெந்நீர் தனிலிடவே மாந்தம் போமென் றருளினரே.
*(புத்.477-47)*

### *2. குரோட்டைக் கற்கம்*

வல்ல குறோட்டை யிலையதனை வாட்டிப் பிழிந்து தானதிலே
கல்லி யோடு நல்வசம்பு கனத்த வட்டத் திருப்பியுடன்
சொல்லிச் சுட்டங் காட்டியதைச் சுருக்கிற் கலக்கி வார்த்திடவே
மல்லும் பொல்லா வினையான மாந்தம் போமென் றருளினரே.
*(புத்.477-47)*

### *3. கற்கம்*

பேதி பூபதி வரக்கக்கி
 விளங்கிடும் வகையைக் கேளீர்
சேதியா ரசமே சுக்கு
 சேர்ந்த வெண்காரம் கெந்தம்
நீதியா நாலும் நேராய்
 நிறைய நேர்வாளங் கூட்டி
ஆதியாஞ் சுத்தி பண்ணி
 அவரகத் தண்ணீரில் கூட்டே.

கூட்டிட அஞ்சுமஞ்சு சுத்தி
 குளிர்ந்த தண்ணீர் தனிலரைத்து
வாட்டிடும் பனியின் பாசிப்
 பயறள வுண்டை யாக்கி
தீட்டிட வரைத்த நீரில்
 சிறியவர் தனக்கு யீய
போட்டிடு மூது மாந்தம்
 பொருமலா மாந்தம் போமே. *(ஏடு.362-69-70)*

### *4. புளியாதி யீர்க்கு கற்கம்*

உற்றபுளி வேம்புமா நெல்லிநா ரத்தையும்
 ஓதிநுணா தகரை நிம்பம்
ஓதுவகை யீர்க்கில்வல் லாரைப் பழம்பாசி
 வுசிதபுள் ளடிமுத்தமும்
பத்திதரு மீருள்ளி வண்ணத்தி யிருமுட்டி
 பகர்மிளகு தக்காளியும்
பகர்முசுக் கைகாந்தி நரிப்பயற் றங்கொடி
 பற்பட மூக்கொற்றியும்

சத்திவளர் முனியம்மான் பச்சரிசி சீந்திலுஞ்
 சமனாக விருசீரகம்
தகர்சுக்கு வெந்தய மரைப்பலம தாய்வறுத்
 தாதண்டைக் கியாழ கற்கம்
வைத்தகோ ரோசனை யக்கரா வதிமதுரம்
 வரிக்கலைக் கொம்புகோட்டம்
வாகாக வொவ்வொரு பணவிடைய தாகவே
 வளமாக நெகிழ வரையே.

அரைத்ததைக் குழவிக் கீய
னானதோ ரிரண்டு நேரம்
உரைத்திடும் பத்து நாள்தா
னுட்சுர முள்ள வெல்லாம்
கரைத்திடுங் கணமும் பொல்லாக்
காய்ச்சலுங் கணமுந் தீரும்
வரைத்திடுஞ் சுரம சக்கை
மாறுமென் றருள்செய் தாரே. *(புத்.477-288)*

### *2. சூரணம்*

தப்பாம லின்னமொன்று சாற்றக் கேளு
தாரணியில் படர்பருத்தி மூலத் தோடு
வைப்பான வேர்க்கொம்பு அசம தாகம்
மணிமிளகு லவணமிவை வறுத்துத் தூளாய்
கைப்படர்ந்த ரவிதனிலே விரவித் தூசில்
கட்டிமேல் தூக்கிவிடும் நீர தல்லால்
துப்புரவாந் தயிர்நீரில் பொடியிட் டூட்ட
துடராது மாந்தமிது தூட்சந் தானே,
*(ஏடு.109-16) (கை.பி.98-15)*

### *1. உத்தாமணி நெய்*

சுத்தா வினெய்யு மொருநாழி யோமந் துதிபலந்தான்
உத்தா மணியிலை வெற்றிலைக் காம்பொவ் வொருபிடியாய்
வித்தா னசுக்குட னேவசம் புள்ளி வராகனெடை
குத்தா யரைப்பித் தெரியிடு மாந்தங்க ளேகிடுமே.
*(புத்.477-52)*

### *2. நெய்*

கோதைகேள் மாந்தம் போக
குலமேதி நெய்யுழக் கதிலே
போங்கா வளைமு ருக்கு
பொடுதலை சாறுரெண் டப்பாம்
நீத மேல மதிவிடையம்
நிகார வசம்பு விழாலதிமதுரம்
மோதக வுள்ளி திரிகடுகு
முழுகு முலையாய் கழிந்தே.

வாட்டமில் லாம லெல்லாம்
வகைக்கொரு கழஞ்ச தாக
கூட்டி யரைத்து நெய்யில்
கூர்மையாய் கலந்து காய்ச்சி
தீட்டி யநெய் மெழுகு
திறத்துடன் இறக்கிக் கொண்டு
நாட்டமாய் வடித்துப் பின்னும்
நல்லனு பானங் கேளே. *(ஏடு.435-24)*

### *4. மாந்த வகைகளுக்கு நெய்*

சுத்தாவின் வெண்ணெயொரு நாழி
ஓமமது திரிபலந்தான்
உத்தா மணியிலைக் காம்பு
ஒவ்வோர் பிடியாய்
வித்தான சுக்கு குமரி
வசம்புள்ளி வராகனிடை
யெத்தா யரைப்பித் தெரியிடு
மாந்தங்க ளேகுமென்றே. *(ஏடு.362-26)*

### *4. எண்ணெய்*

கடுக்காய் காட்டு மல்லிகையும்
கடிய குமரி வெந்தயமும்
மிடுக்குஞ் சீரக மித்துடனே
மேவுஞ் சாரணை யீருள்ளி
முடுக்கா மணக்கெண் ணெயுடன்
முருகா தெரித்துக் குடுப்பீரால்
துடுக்கா மாந்தஞ் சுழிகணமுஞ்
சொல்லா தோடிப் போய்விடுமே. *(ஏடு.362-53)*

### *5. எண்ணெய்*

இதுவே கேளும் விளக்கெண்ணெ
யேற்க படிதா னொன்றாக
மெதுவாங் குமரிநீர் நிம்பம்
வேண்டுநீ ருள்ளி யின்சார்
அதுவே வகைக்கிப் படிகாலா
னாவின் பாலும் படியரையாய்
முதுவே யிதனை யொன்றாக்கி
மூன்றுங் கற்கந் தனைக்கேளே.

கேளே கோஷ்ட்ட மதிமதுரங்
கிளரும் சண்பகப்பூ வேலம்
நாளே சன்ன லவங்கமுடன்
நன்றாய் வகைக்கிக் கால்பலமாய்
தூளே யாக்கிக் கலந்துவிடு
சொன்னார் வெந்தய மொருபலத்தை
யாளே யிதனை முழுதாக
அரிதகி யிருபத் துடைத்திடுமே.

இடுமே இதனை அடுப்பேற்றி
யெரிக்க மெழுகு பதமாக்கி
யடுமே காய்ச்சி யிறக்கியிதை
ஆறும் பின்பு சிறுகரண்டி
கொடுமே மூலம் ரெத்த கெணம்
கூறும் விஷக்கண மாந்தமுடன்
விடுமே தோஷ முதலாக
வேறு மருந்து வேண்டாமே. *(ஏடு.362-57)*

### *6. மாந்தம் 9-க்கும் எண்ணெய்*

வெள்ளீண்டு தூதுவளைசங்கங் குப்பி
வேலியொடு பூவரசு குப்பை மேனி
நள்ளாடா தோடை சாரணை பூலாவும்
நரிபயற்றங் கொடிபிரமி வேளைக் கன்னி
பள்ளவே பதின்மூன்று வேர்களி யாவும்
பரிந்திடித்த சாறுபடி யொன்ற தாகும்
கள்ளமிலா விளக்கெண்ணெய்ப் படியி ரண்டு
கருஞ்சீரகம் புனுகோமம் பூண்டுதானே.

பூண்டுக்கோ ரோசினையுஞ் சண்ப கப்பூ
புகழ்வசம்பு சாதிக்காய் தான்றிக் காயும்
தாண்டுடனே வகைக்குப்பலம் அரைய தாக
சமரசமா யரைத்தெண்ணெ யதிற்க லந்து
நீண்டுடனே காய்ச்சியொரு கரண்டி வீதம்
நினைவாகக் கொடுத்துவரத் தீரும் நோய்கேள்
கண்டுடனே மாந்த மென்பதும் போமே,
*(புத்.476-104)*

### 7. எண்ணெய்

வேண்டும் விளக்கெண் ணெய்படி
வெள்ளாட் டுப்பா லவ்வளவு
நீண்டங் கிளுவை கருவேலும்
நினவாய்ப் பட்டைஈ ருள்ளி
தோன்று மிண்டங் கொழுந்துபிடி
சொல்லா லிதுவே ஓரளவு
தூண்டும் பலமே சீரகமுந்
துத்திக்கால் காசுக்கட் டியுமே.

கட்டி யோடு மத்ததுவைக்
கடிதாகத் தட்டி யெண்ணெய்
கெட்டி யனலேத்தி யதைக்
கேளும் மெழுகு பதமாக்கி
பொட்டணவே பால கர்க்குப்
பொங்கமுடன் கரண்டி யிட
அஷ்ட்ட கணதோ ஷமுடன்
அணுகாது மாந்த முமே. (ஏடு.362-58)

### 10. அகத்தி எண்ணெய்

ஏகு மகத்தியும் சாரணை வேலியெண் ணேருழக்காய்
வேகம தாகவும் முதுகுள்ளி வெள்வசம்பு
ஆகம தாக வராக னெடையு மரைத்ததனைப்
பாகம தாக வெரியிட மாந்தம் பறந்திடுமே.
(புத்.477-52)

### 11. பூண்டு எண்ணெய்

கஞ்சாங் கோரை பிரமியிலை
கனத்த துளசி பழம்பாசி
செஞ்சா நிலவிளா வல்லாரை
சீந்திற் றண்டு சமூலமுடன்
மிஞ்சா வசம்பு ரோகணியும்
வெண்கா வுளியோர் வராகனெடை
அஞ்சா வெண்ணெ யாழாக்கு
அதிலிட் டெரித்துப் பதம்பாரே.

பாரே யிறக்கி வடிகொண்டு
   பரிவாந் துட்டெடை யொன்றாகக்
கூரே பாலர் உள்ளுக்குக்
   கொடுக்க மாந்தம் போமிப்பால்
காரே யிச்சாப் பத்தியமாய்க்
   காத லனைப்பெற் றதாயை
நீரே வைக்க நலமாகும்
   நீல விழிமா மடமயிலே. *(புத்.477-53)*

## *12. எண்ணெய்*

செய்திட மாந்த எண்ணெயைச் சொல்வேன்
வைதிட இஞ்சி சங்குடன் சின்னி
கைதிட காணி கரந்தையும் வன்னி
நெய்திட எல்லாம் நேராய்ப் பிழிந்திடே.

பிழிந்து சிற்றே ரண்டத்தின் எண்ணெய்
கலந்திட் டேயொரு கட்டையால் தீயிடு
செலந்திகள் காய்ச்சி சிறுக இறக்கிடு
மெலிந்த நோய்தீர விளம்புவேன் கேளே.

கேளிடு மாந்தம் மலபந்த மாந்தம்
சேலிடு சலத்திற் செனிசிர மாந்தம்
பாலகர் உண்ணப் பறந்திடும் பாரு
சீலக் கொடிய சீதளம் போகுமே. *(ஏடு.576-55-56)*

## *14. இளநீர் எண்ணெய்*

முனிவோர் சிற்றா மணக்கு
   முதலிளநீர் தனில வித்து
செனிவா குமெண் ணெய்படி
   சேர்பசும் பாலி ரண்டுபடி
தனியா குமரி நீர்
   தான ரைப்படி யாக
தொனியாய் மெழுகு பதஞ்
   சொல்லும் படிக் காய்ச்சே.

காய்ச்சி யிறுத்தெண் ணெயிற்
   கற்க மினிசீ ரகமும்

மாசிக் காய் கோட்ட
மதுரங் கிராம் பேலம்
தாழ்ச்சி யில்லா சுக்கு
சரிவகைக் குக்கா செடையாய்
கூச்சமின்றி வெந்த யமும்
கூறும் பலங் காலே.

காணவே யிவையெல்லாம் வறுத்தி டித்து
கற்கமிதை யெண்ணெயிலே கலந்த பின்பு
பூணவே சூரியன்றன் புடத்தில் வைத்துப்
பிள்ளைதனக் கீந்திடவே போந்நோ யெல்லாம்
தோணவே காய்ச்சலுட் காய்ச்சல் மாந்தம்
தோன்றுகின்ற வுடம்புவற்றல் வகைகள் யாவும்
நாணவே வாய்வறண்டு குலைந டுங்கி
நாடாதென் றேபெரியோர் நவின்றிட் டாரே.
*(புத்.477-292)*

### *15. மாந்தம் 18க்கும் சாதிக்காயெண்ணெய்*

சாதிக்காய் சாதிப்பத்திரி கிராம்பு ஏலம்
தருகோஷ்டம் அதிவிடையம் குங்கு மப்பூ
போதிக்கும் அதிமதுரம் பஞ்ச மூலம்
பொறிகடுக்காய்த் தான்றிக்காய் மாசிக் காயும்
ஓதியந கர்கரிய சீரகம் தற்கோலம்
உயர்வான குராசாணி ஓமத் தோடு
கோதில்லா சதகுப்பைச் சித்திரை மூலம்
கூறுவகைக் கேயிரண்டு வராகன் கூட்டே.

கூட்டியே ஓமமது வராகன் ஐந்து
குணமான வசம்பதுவும் வராகன் ஆறு
மாட்டியே வசம்பைச் சுட்டுச் சாம்ப லாக்கி
மற்றமருந் தெல்லாஞ் சூரணமே செய்து
காட்டியே கணப்பூண் டிண்டங் கொழுந்துக்
கனத்த பழம்பாசி இலந்தங் கொழுந்து
நாட்டியே நுணாஇலை நாவற்கொ ழுந்து
நல்லவிடத் தாரையிலைக் கருவே லாமே.

ஆமே சங்கிலை ஆங்கழிலின் கொடி
தேமே வட்டத் திருப்பிக் கரந்தையும்
தோமே பாச்சோற்றிப் பேயின்பாச் சோற்றியும்
பாமே நல்லப் பகன்றையும் ஆகுமே.

ஆகுமே சடைச்சியிலை குதிரை வாலி
அழச்சிறு புள்ளடியும் கண்டங் கத்தரி
சோகியொடு செருப்படையும் துளசித் தும்பை
சுயகோழி அவரையுடன் ஆடா தோடை
ஏகுமேவல் லாரைப் பொடுதலையும் வேளை
எடுத வசிமுருங்கை வறட்பூலா பத்ரம்
பாகுமே இலைகளெலாம் இடித்தச் சாறுப்
படியொன்றும் உப்பிலிவேர் பெருங்கி ழங்கே.

கிழங்கான பூத கரப்பான் தன்பட்டைக்
கெடியான வாத கரப்பான் பட்டை
முழங்கான திருநீற்றுப் பச்சை வேரும்
முக்யகரு வேப்பிலையின் ஈர்க்கு தானும்
வழங்கான வகைக்குக் கால்ப லமே
வாங்கிவகையாகச் சூரணித்துமுன் மருந்தில் சேர்த்து
குழம்பான சாறுஞ் சூரணமு மொன்றாய்க்
கூட்டியே விளக்கெண்ணெய் படியில் தாக்கே.

தாக்கியே முலைப்பால் ஓர்ஆழாக்கு விட்டுத்
தன்மையாம் பக்குவமாய்க் காய்ச்சிக் கொண்டு
தேக்கியே கரண்டியள வைந்து நாளுந்
திறமையுடன் கொடுத்து பத்தியம் காப்பாகில்
தூக்கியே ஈரொன்பான் மாந்தந் தீரும்
துடியான கணம்எட்டுந் தீர்ந்து போகும்
நீக்கியே பெரியவர்க் கேழ்நாள் கொடுக்க
நீள்மேகம் கிரந்தியெல்லாந் தீருந் தானே.
*(புத்.476-57-58)*

## *17. எண்ணெய்*

போகவே யின்னுமொன்று சொல்லக் கேளு
புள்ளடிப் பாடவரை நிலவாகை சங்கு
சோகமாம் நாயுருவி நத்தைச் சூரி
சூரையொடு தூதுவளை கீழ்க்காய் நெல்லி

மோகமாம் பொடுதலை செம்பொன் னெருஞ்சி
மூக்கரைச்சா ரணைவேலிப் பருத்தி நொச்சி
மாகமாம் பிரண்டையு வாய்மஞ்ச ணாத்தி
மாவிலுப்பை பருத்திசங்கங் குப்பி யென்னே.

குப்பியொடு முருக்கிலையும் சமன தாகக்
கூட்டியிடித் தேசாறு படியோர் முக்கால்
ஏப்பமுறும் நல்லெண்ணெய் ஏரண்டத் தெண்ணெய்
ஞக்கமுன் சாற்றள வொன்றாய்ச் சேர்த்து
செப்பமிடுஞ் சரக்குவகை சொல்லக் கேளு
திரிகடு கதிமதுரம் கரிய சீரம்
தப்பரிய அக்கிரா வகைக்கோர் கழஞ்சி
சாறுவார்த் தரைத்தெண்ணெ யதனில் சேரே.

சேர்த்திடுவா யீருள்ளி படியோர் முக்கால்
சிறுகஅரிந் தெண்ணெதனில் கலந்து காய்ச்சி
பார்த்திருக்கச் சிவந்துநிறம் பொன்ன தாகும்
பருவத்தில் வடித்திறுத்து வைத்துக் கொண்டு
வார்த்ததனைக் காசெடைதான் மதலைக் கூட்ட
மாந்தமொரு குடலேற்றம் பிரளி வாய்வு
ஆத்தியுறு பால்திரட்சை யிவைக ளெல்லாம்
அகன்றுபோ மின்னுமொன்று அறையி றேனே.

*(கை.பி.98-32-33)*

### *18. மாந்தம் 18-க்குப் பொன்னாங்காணி எண்ணெய்*

பொன்னாங் காணி யிலையுடனே
புகழுந் துளசி தகரையிலை
மின்னார் கீழ்க்காய் நெல்லியிலை
வெண்ணொச் சிலையும் சின்னியிலை
பன்னார் நாயுரு வியினிலையும்
பகரம் மானபச் சரிசியிலை
நன்னார் கருநொச் சியினிலையும்
நாடு மிலைக ளெட்டொன்றே.

ஒன்றே நாவ லின்கொழுந்து
முயரா வாரை யின்கொழுந்தும்
வென்றே வேப்பங் கொழுந்துடனே
விளக்குஞ் சூரை யின்கொழுந்தும்

ஒன்றே முடக்கற் றான்கொழுந்து
முருங்கைத் துளிர்புங் கன்கொழுந்தும்
குன்றே யனைய தனத்தாளே
கோதில் லாத கொழுந்துகளே.

கொழுந்து வகைக ளோரேழு
கூறும் ஓரிதழ்த் தாமரையும்
வழும்புளி யாரை வல்லாரை
வாகா கச்சிறு புள்ளடியும்
எழுந்த நரிப்பயற் றங்கொடிதான்
இண்டந் தண்டு முசுமுசுக்கை
வழுந்த வகத்திப் பழுப்புடனே
வீறு சீந்தில் கொடியாமே.

ஆமே ஆடா தோடைசெழும்
ஆடு தின்னாப் பாளையொடு
காமே விட்ணுக் கரந்தையுடன்
கதித்த முட்கா வேளையுமே
தாமே யிவைகள் பதின்மூன்று
தருமா வாரை தன்வேரும்
நாமே சொன்னோம் விடத்தலைவேர்
நல்ல நிலக்குமி ழின்வேரே.

வேரே சிறுகீ ரையின்வேரும்
வில்வ வேருத் தாமணிவேர்
தாரே மிளகுதக் காளிவேர்
தைவே ளையின்வேர் சங்கம்வேர்
காரே கண்டங் கத்திரிவேர்
கனத்த நாய்வே ளையின் வேரும்
பாரே குட்டிவி ளாவின்வேர்
பகருஞ்சங் கங்குப் பியின்வேரே.

குப்பி பதின்மூன் றாம்வகைக்குக்
கொள்ளு மொவ்வொரு பிடியாக
வைப்ப வேர்வகைக் கியாழமிட்டு
மற்றவை யெல்லாஞ் சாறெடுத்துத்
தப்பிச் சிற்றா மணக்கெண்ணெய்
தானே படியொன் றதில்சொன்ன

ஒப்பிக் கியாழம் சாறுகளும்
ஊற்றிக் கடைசரக் கைக்கேளே.

கேளே கமடத் தோடோமம்
கிளருங் கடல்நுரை சீரகமும்
தானே திப்பிலி ரோகணியும்
சார்ந்த கிராம்பு கருஞ்சீரம்
தானே திப்பிலி ரோகணியும்
சார்ந்த கிராம்பு கருஞ்சீரம்
ஆளே வசம்பு பெருங்காயம்
மான செங்கத் தாரிப்பட்டை.

பட்டை யிவைவகை பதின்மூன்றும்
பகரும் வகைக்குக் கழஞ்சொன்றாய்
இட்டு வத்திர காயஞ்செய்
தெண்ணெயி லிட்டே யடுப்பேற்றி
வட்ட மெழுகு பதத்திறக்கி
வடித்தே யந்தி சந்தியுமே
துட்டெடை யெண்ணெ யுட்கொள்ளத்
தொலையு நோய்கள் சொல்வோமே.

சொல்வே மச்சர கணமுடனே
துடுக்காய் விடாம லேவலிக்கும்
வல்லக் குமரி தலைநோயும்
வறட்கண முடனே கழிகணமும்
வெல்வோ மாந்த கணமோடு
மீறு நீர்க்கண் மிசுவுகணம்
புல்வோம் கொட்டா விக்கணமும்
போரா டியமுக் குணமே.

தீருந் தகநாட் கொருதரந்தான்
சேரி ரண்டுதுட்டெடைகொடுத்துப்
பாருஞ் சகல வியாதியுமே
பதறி யோடும் பத்தியங்கேள்
காருங் கவிச்சு புளியிறைச்சி
கரப்பான் பண்டந் தள்ளிவிடு
சாரு மிளகு நீர்சோறும்
சாப்பிடக் கைவல் லியமாமே.

*(புத்.477-168,169,476-105,107)*

### *7. ஓமாதி யுருண்டை*

என்றே யோமம் திப்பிலிசுக்
கிருசீ ரகமுங் கொத்துமலி
பன்னா மையோடு குரோசாணி
பகர நிறுத்த தோர்நிறையாய்த்
துன்னா நீரிற் றானரைத்துத்
துதித்த நல்ல துவரையென
உண்டை மாந்த முள்ளவெலா
மோடுங் கண்டா யுண்மையிதே. *(புத்.477-51)*

### *9. வாய்விடங்க உருண்டை*

மாசிலார்க்கு மாந்த வுண்டை
வண்மை யுடனே தானுரைக்க
ஆசையாக வாய்வி டங்கம்
ஆமை யோடு நன்மிளகு
வாசமான பொடுத லைக்காய்
வசம்பு திப்பிலி கழற்பருப்புக்
கூசலின்றிச் சரிநி றையாய்க்
கூட்டி நீவைத் தரைத்திடுமே.

அரைத்த மருந்து பொடுதலைச்சா
றம்மி தனிலே விட்டரைத்து
நிரைத்த சூரைக் காயளவு
நிழலி லுலர்த்திக் குளிகைதனைச்
சுரத்தின் கழிச்ச லிருமலுக்குச்
சொற்சிறு வழுதலைக் குடிநீரில்
உருத்து ருண்டை தனைக்கொடுக்க
உடம்பிற் பிணியுந் தீர்ந்திடுமே.

வாந்தி பொருமல லுக்கெல்லாம்
வளரும் வேலிக் கியாழத்தில்
ஓய்ந்த வெகுவாய்க் கழிச்சலுக்
கோமக் கியாழந் தன்னிலிடக்
கேந்தி யாமாந் தத்துக்குக்
கியாழ மறிந்தே யிடுவீரேல்
மாந்தம் விட்டுத் தானகலும்
வளரும் பிள்ளை யாமென்றே. *(புத்.477-51)*

### *10. பூர மாத்திரை*

உரைப்பேன் பூரம் பலமரைதான்
ஓகோ லவங்க மேலமுடன்
திரைப்பன் வசம்பு சீரகந்தான்
திறமாய் மாசி யதிவிடயம்
கரைப்பேன் வகைக்குக் காற்பலமாய்க்
கணமாய்ப் பூரஞ் சுத்திசெய்து
மறைப்பேன் கல்வ மதிற்போட்டு
மாசிப் பத்திரி வேர்ச்சாறே.

வேர்சாற் சாம மொன்றரைப்பாய்
விட்ணு கரந்தைச் சாற்சாமம்
வேர்ச்சாற் வார்த்தரைத் துக்கொண்டு
விதமாய்க் கொத்து மல்லியைப்போல்
வேர்ச்சாற் குளிகை செய்துகொண்டு
விளங்கு நிழலி லுலர்த்தியபின்
வேர்ச்சாற் குளிகை செப்பில்வைத்து
வேதப் பொருளை மனதிலெண்ணே.

எண்ணவே குளிகையொன் றெடுத்துக் கொண்டங்
கெழிலான மாந்தத்தின் கியாழத் தீய
எண்ணவே யோடிவிடு மாந்த மெல்லாம்
இயம்பினேன் முன்சொன்ன தெல்லாம் போகும்
எண்ணவே யிம்மொழிபோ லார்தான் சொல்வார்
எடுத்தமுறை யாடுமிந்த முந்நூறு பாரு
எண்ணவே முன்சொன்ன மாந்த மெல்லாம்
என்சொல்வேன் பறந்தோடு மிதனாற் பாரே.

*(புத்.477-51)*

### *12. சண்பகப்பூக் குளிகை*

போகுஞ் சண்பகப் பூவிலா மிச்சம்வேர்
ஏகுங் கோட்டமோ டேலங்கோ ரோசனம்
வேகுஞ் சாத்திர வேதி மதுரமும்
வாகு வெட்டிவேர் மாசிப்பச் சொன்பதே.

ஒன்பது வகைக் கொன்று கழஞ்செடை
மின்பது வெட்டி வேர்த்தண்டுச் சாற்றினில்
நன்பது வேழு நாழிகை யாட்டி நீ
பின்பது குன்றி போலத் திரட்டியே.

திரட்டி யுலர்த்தி யொருமாத் திரையை
விரட்டி முலைப்பா லிளவெந் நீரினில்
குரட்டி யிழைத்தே கொடுப்பாய்மூன் றேநாள்
கரட்டி டும்பின் கடும்பிணி யாவுமே. *(புத். 477-53)*

## *13. விழுங்கு மாத்திரை*

மயங்கிப்போம் விழுங்குமாத் திரைதான் சொல்வேன்
மாதரசே சாதிலிங்கம் பூரம் ஏலம்
மயங்கிப்போம் பூங்காவி வகைக்குக் காலாய்
வண்மையாய் கல்வத்தில் போட்டுக் கொண்டு
மயங்கிப்போம் கோதுமைக் கஞ்சி வார்த்து
மைபோலே சாமம்ரண் டோயா தாட்டி
மயங்கிப்போம் பயறுபோல் உண்டை செய்து
மரச்செப்பில் வைத்தடைத்து மகத்துவங் கேளே.

மகத்துவங்கேள் ஓராண்டு பிள்ளைக் கெல்லாம்
வல்சிதனில் பிடித்துண்ட மாந்த மேது
மகத்துவங்கேள் சிறுகுழந்தை யானதற்கு
மாசிபத்ரிக் கியாழத்தில் உரைத்தி டாய்நீ
மகத்துவங்கேள் செவ்வாப்புக் கரப்பான் போகும்
வரிசையாய் மாத்திரையின் மகத்து வம்பார்
மகத்துவந்தான் என்னசொல்வேன் இந்நூல் போக்கு
மஷாரத்தினச் சுருக்கமென் மருவிப் பூணே.
*(புத்.572-52)*

## *14. கத்தூரி மாத்திரை*

எய்தாமல் கத்தூரி கழஞ்ச தொன்றும்
இதமான குங்குமப்பூ கழஞ்சி ரண்டாம்
எய்தாமல் ரோசனையுங் கழஞ்சு மூன்றாம்
இவைமூன்றுங் கல்வத்தி லிட்டுக் கொண்டே
எய்தாமல் அமிர்தமெனு முலைப்பால் விட்டே
இனிதான சாமமொன் றரைத்துக் கொண்டே
எய்தாமற் குன்றிபோ னிழலு லர்த்தி
எடுத்துநீ செப்புதனில் அடைத்தி டாயே.

அடைத்திட்ட மாத்திரைதா னொன்றெ டுத்தே
யந்தெரைக்கு முலைப்பால்விட் டிழைத்துக் கொண்டு

விடைத்திட்ட முனைநாவில் தீட்டிட் டாக்கால்
விடதோட சன்னிமாந்தம் வீறிட் டோடும்
கடைத்தெழுந்த பித்தசுரம் வாந்தி தீரும்
கடைமருந்தின் போக்கறியாக் கழுதை மாண்பர்
குடைத்தெழுந்த குடநகில மானே கேளாய்
குருவருளால் கத்தூரி குளிகை யாமே.

*(புத்.477-318)*

### *22. புலிப்பாணி மாத்திரை*

நான்இனிதான் இன்னமொன்று சொல்லக் கேளு
நயமான வில்வவேர் விளாவின் வேரு
மானவே நாய்வேளைக் கஞ்சாங் கோரை
வன்மையாய்ச் சின்னியொடு காட்டு மொச்சை
தேனான திருநீற்றுப் பச்சை தும்பைத்
தெளிவான சிறுதும்பைக் கண்டங் கத்திரி
வானான அமுக்கரா சங்கங் குப்பி
வளமான நுணாவேலிப் பருத்தி யாமே.

ஆமேநீ முடக்கொற்றான் வெண்காய் வேளை
அடவான சாரணை யுட்முடை நாறி
தாமேநீ கொழுஞ்சிப் புண்ணாக்குப் பூண்டு
தயவான பிரமியொடு சித்திர மூலம்
வாமேநீ கொவ்வையுடன் மணித்தக் காளி
வகையான கையானுங் கீழ்க்காய் நெல்லி
போமேநீ இந்தவகை வேர்கள் தானும்
புகழாகக் கஞ்சுநிறை பிலமாய்த் தூக்கே.

தூக்கியே வசம்புடனே ஓமம் சுக்கு
துன்பமிலா சதகுப்பி திரிப லாதி
ஆக்குடைய தேசபுரம் அத்தித் திப்பிலி
அரத்தைகளுஞ் சீரகமுங் காட்டுச் சீரம்
போக்குடைய புதினா லுழுவை தானும்
பொங்கமுடன் பொஸ்தக்காய்ப் புரசங் கொட்டை
தாக்குவாய் வகைவகைக்குக் கழஞ்சு தூக்கிச்
சாணாக்கிச் சாற்றினால் அரைத்தி டாயே.

அரைத்திடுவாய் அப்பைச்சா ரணையும் வேளை
அழகான அகத்திச்சா றிண்டஞ் சாறும்
துரைத்திடுவாய் இருசாமம் மயனம் போலே
துடியுடனே தான்அரைத் திருபங் காக்கி
விரைத்திடுவாய்த் துவரையைப்போல் உருட்டிப் போடு
விதமாக ஒருபங்கில் விபரங் கேளு
இரைத்திடுவாய் சுத்திசெய்த வாளந் தானும்
இதமான கடுகு ரோகணியும் பாரே.

பார்க்கவே வகைவகைக்குக் கழஞ்சு தூக்கிப்
பாங்காக முன்மருந்தில் ஒக்கச் சேர்த்து
வார்க்கவே அகத்திச்சார் நிலவா கைச்சார்
வளமாக விட்டரைப்பாய் சாமம் மூன்று
வேர்க்கவே துவரையைப்போல் உருட்டிச் சேர்த்து
விதமாக நிழல்உலர்த்தி எடுத்துக் கொண்டு
நோக்கவே குழந்தைகள் தன்பிணிகட் கெல்லாம்
நிக்ஷயமாய்த் தான்கொடுக்கத் தீரும் பாரே.

பாருநீ அப்பைச்சார் நாய்வேளைச் சார்
பண்பான துளசிச்சார் சிறுதும் பைச்சார்
வீருநீ எருமுட்டை நாறிச் சாறும்
விதமான காட்டுமொச்சை யிலையின் சாறும்
சேருநீ வயிறுகட்டிப் பிணிகட் கண்டால்
செயலாகும் முன்குளிகை செலுத்திப் போட
தீருநீ இச்சாற்றி லெதிலா னாலும்
திறமாகத்தான் கொடுக்கத் தீரும் பாரே.

தீருமே மாந்தத்தின் வகைகள் யாவும்
திறமான தோஷமொடு வலிப்புக் காய்ச்சல்
ஆதுமே அக்கினியின் மந்தந் தானும்
அன்பில்லா அநேகவித நோய்கட் டோடும்
கூறுமே சிசுவருத்தந் தீர்ந்தோர்க் கெல்லாம்
குற்றமொன்றும் வாராது வறுமை நீங்கும்
வீறுமே போகருட கடாஷத் தாலே
விதமாக புலிப்பாணி பாடி னேனே.

*(புத்.476-58-59)*

### *மருந்து*

யேகுஞ் சத்திச்சாரணை
வேலியிதை யோருழக்காய்
வேகமத்..... தங் கூலு
வீருள்ளி வெண்மா வசம்பு
யாகமதாக வராகனிடையு
மரைத் தேநண்
பாகமதாக யெரியிடை
மாந்தம் பறந்திடுமே. *(ஏடு.362-26)*

### *1. வேலிப்பருத்தித் துவாலை*

வேலிப்பருத்தி மேனியுடன் வேளை யிண்டு பொடுதலையும்
ஆலித்தின்னு மகத்தியிலை யாறும் வதக்கிச் சாறுகொடு
கோல வசம்பு மாமையோடுங் குலவுபோமஞ் சுட்டரைத்துக்
காலிற் கையிற் றுவளையிட்டுக் கடுகக் கொடுமாந் தம்போமே'
*(ஏடு.604-22) (புத்.477-48)*

### *2. சின்னித் துவாலை*

ஆவுஞ் சின்னி யடவிவெண் ணொச்சிலை
ஏவு வேப்பிலை சீந்தி விடித்துநீர்
மேவு மூன்றுநாள் மேற்று வளைசெய்
நோவு மாந்த நொடிக்குளே நீங்குமே. *(புத்.477-48)*

### *அக்கரமாந்தம் - குறிகுணம்*

நாட்டிடுமே அஸ்தியிலே சூடு கொண்டு
நல்லுடம்பு மேல்குளிர்ந்து சுரங்கள் துய்யும்
ஓடியதோர் சுவாசத்தா லனல் புடைத்து
உதடுகளும் வெடித்துவாய் புண்ணாம் நெஞ்சில்
தேடியன்னை யழுகவைப்பாய் துயர மெத்த
தேம்பியவாய் தீர்ப்பதற்கு வருத்தமென்ன
வாடுமே சிறுவனுக்கு தீரோக மெல்லாம்
வழும்புடனே பேதிஅக்கர மாந்த மென்றே.
*(ஏடு.619-5,9)*

நாடுமே அத்தியிலே சூடு கொண்டு
நல்லுடம்பு குளிர்ந்துசுரங் காயும் ஓயும்

ஓடியதோர் சுவாசத்தில் அனல்பு டைக்கும்
உதடுகளும் வெடித்துவாய்ப் புண்ணாம் நெஞ்சு
தேடிஅன்னை அழுமப்பால் துயர மொத்தத்
தேம்பிவாய் திறப்பதற்கு அருமை யாகி
வாடுமே சிறுவனுக்குத் தேக மெல்லாம்
வழும்புடனே பேதியக்ர மாந்த மென்னே.
*(புத்.477-80)*

### *1. மணித்தக்காளி எண்ணெய்*

மாந்தையது காளி முனி குமரிச்சார்சேர்
வாங்குவது எண்ணெய்சேர் உள்ளிச் சாறும்
சேர்ந்தகாரைப் பூலா துத்திவேர்த் தோல்
செயமெழுகுபோல் அரைப்பாய் பலம தாக
வாய்ந்ததொரு வெந்தயமும் பலம தாக
வறுத்திடித்து ஏகமாய் கலக்கிக் கொண்டு
சாந்தமாய் தீயெரிந்து மெழுக தாக்கி
சாதகமாய் புண்வாயில் தடவி டாயே.
*(புத்.477-80,81,476-55)*

### *2. எண்ணெய்*

பூவர சிலையுங் காய்ப்பூ
புகழ்பெற மூன்றுந் தானே
தாவர சமன தாக
தயவுட னரைத்து நல்லாய்
ஆவர பலமொன் றாக
அடையதை தட்டிக் கொண்டு
தேவர்கள் மகிழுஞ் சிற்றா
மணக்குநெய் அரைசேர் கூட்டே.

கூட்டியே காய வைத்து
கூறதில் அடையப் போட்டு
தீட்டிடு சிவக்கக் காய்ச்சி
திகழடை யெடுத்துப் போட்டு
காட்டிய ஏலம் ஜாதிக்
காய்சாதி பத்ரி மூன்றும்
ஆட்டிய வகைவ கைக்கு
அரைவரா கன்தான் தூக்கே.

தூக்கிநீ பொடியாய்ச் செய்து
துகளிலா எண்ணெய் தன்னில்
ஊக்கமாய் கலந்து பின்பு
உள்ளுக்கு எடைதான் துட்டு
பாக்கிய மாக வார்க்கப்
பாலரை மயக்க வந்த
ஆக்கிய காய்ச்சல் மற்ற
அட்சர மாந்தம் போமே. *(புத்.476-123)*

### *அட்ட மாந்தத்துக்குக் (1.) குடிநீர்*

உத்தா மணியிலை வேளைவே
ருகந்த நொச்சிப் பொடுதலையும்
சித்தா முருங்கை நுணாவீர்க்கு
சேர வறுத்து நீர்விட்டு
ஒத்தா வோமம் திரிகடுகு
உசந்த வசம்பு முடிந்ததனில்
வற்றாதே யெட்டொன்றாய்க் குடிக்க
மாந்த மெல்லா மோடிடுமே. *(ஏடு.362-51)*

### *2. குடிநீர்*

வேலிப் பருத்தி யொருபிடியும்
மிகுந்த சுக்கு சடாமாஞ்சி
கோல விளாவிலை வசம்புள்ளி
குறித்த மிளகு கூனனுடன்
சீலச் சீரகம் பொன்னிறமாய்
சிவக்க வறுத்து யெட்டொன்றாய்
பாலர்க் கொருசங் கொடுப்பீரால்
பறக்கு மஷ்ட்ட மாந்தமுமே. *(ஏடு.362-51)*

### *மாத்திரை*

தானென்ற மைந்தருக்கு மாந்தந் தீரத்
தப்பாத மாத்திரையைச் சாற்றக் கேளு
கானென்ற திப்பிலியும் சுக்கு மோமம்
கருஞ்சீரகமுங் கொத்த மல்லிக்

கானென்ற ஆமையது ஓட்டுச் சாம்பல்
    குருசாணி ஓமமுடன் சவுட்டு மண்ணும்
பூனென்ற நீர்க்கரைத்து உப்பு வாங்கி
    பொருந்தவே பலங்காலாய்ப் பொடித்துச் சேரே.

சேரவே சாணிப்பால் விட்டு ஆட்டித்
    திறமாக உண்டைசெய்து உலத்திக் கொண்டு
நேரவே போர்மாந்தம் கட்டு மாந்தம்
    நீர்மாந்தம் செரியாமாந்தம் ஊது மாந்தம்
மாகுமே கழிமாந்தம் மெட்டுக் குந்தான்
    வெந்நீரால் தீருகாசள விடுவீராகில்
சேருமே நோய்கடலில் செல்லும் பாரே.

*(ஏடு.362-73,74)*

## *இசிவு(வலிப்பு) மாந்தம் - குறிகுணம்*

அயருங் கால்கையு மடிக்கடி யிசுப்பு களாகும்
வயிறு பலவிதங் கழிந்து மார்பினில் வலி மிகுத்துத்
தியக்கும் பல்கிட்டிக் கடித்திடும் வாந்தியுஞ் சேர்ந்து
மயக்குமே வலிப்பாகிய மாந்தம் மாதே'.

*(சர.வை.முறை - 22)*

## *குடிநீர்*

வாய்க்கவே சிறுதேக்கு வாய்வி ளங்கம்
    வால்மிளகு ரோகணியும் சுக்கோ டேலம்
சாய்க்கவே திப்பிலி இலவங்கந் தான்றி
    தக்கோலம் மோஸ்தகப்பால் வகைவ கைக்கு
மாய்க்கவே கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
    வண்மையாய் தூளிடித்து பாண்டத் திட்டு
காய்க்கவே இருநாழி சலமும் விட்டுக்
    கடுகவே எட்டொன்றாய்க் காய்ச்சி றக்கே.
(இறக்கியே கொடுத்திடவே கிராணி மாந்தம்
    இயல்பான இசிவுகண்ட மாந்தம் போகும்.)

*(புத்.572-51)*

## *உப்பல் மாந்தம் - குறிகுணம்*

வளம்பட முலையுண் ணாது
    வயிறது உப்பி யுப்பித்

தளம்பட மலமு நீருந்
 தங்கிய கழிச்சலாகும்
பளம்பட வயிறு நோகும்
 பத்திய சுரமுங் காயும்
முளம்பட வுப்பு மாந்தக்
 குணமென வுரைத்த வாறே.

*(ஏடு.424-8) (புத்.477-76)*

தெளிந்த தாகமுஞ் சுரமுடன் பிதற்றலுஞ் செருமிக்
களங்க மாயிரைந் துப்பிக் கழிந்துடனே
வளர்ந்த வாந்தியு முலையை நத்தாமலு மயக்கந்
தளர்ந்ததா லுப்புமாந்த மென்றறிவாய் நீதானே'

*(சர.வை.முறை - 24)*

### *சுரசம்*

கல்லுப்பு நல்ல உப்பு
 கலந்ததைக் கருக்கிக் கொட்டி
சொல்லிய வேளைப் பூவை
 வதக்கியே பிழிந்து கொண்டு
நல்லதோர் காயம் சேர்த்து
 நயம்பட வுரைத்து வார்க்க
வல்லதோர் வுப்பு மாந்த
 மார்க்கம தாகு மன்னே. *(ஏடு.424-8)*

### *சாறு*

தானே மேனியுப் பிரண்டுமே கசக்கிக் கொள் சாற்றைப்
பான மாகவே பருகினால் தீர்ந்திடு மின்னம்
கானமார் முக்கா வேளைசுக் கோமமுங் கருக்கி
யான தானநா யுருவியு மாமைநீ ரருந்தே'

*(புத்.477-77,476-53)*

### *உளைமாந்தம் குறிகுணம்*

வஞ்சியே கருவாலை யறிந்து பாராய்
 வண்மையுடன் வாயுவந்து குடலைப் பற்றி
மிஞ்சியே மலஞ்சிக்கிக் கருகி யேதான்
 மிகுந்தசல மலம் இரண்டுங் கட்டிக் கொண்டங்
கஞ்சியே அலறிஅழும் தேம்பித் தேம்பி
 அன்னையை மிகுதிபெறத் தேடு மெத்த

ஒஞ்சிப்பா லுண்ணாது மருண்டு பார்க்கும்
உளைமாந்தக் குணமிதென் றுணர்ந்து கொள்ளே.
*(புத்.477-79,476-54)*

### *சங்கம் வேர் குடிநீர்*

சங்கம்வேர் கொடிவேலி ஆடா தோடை
தண்கொன்றை வேர்இந்துப் புடனே காயம்
புங்கினுட பட்டைஇரு நாழித் தண்ணீர்
புகழ்பெறவே வார்த்துழக்காய்க் காய்ச்சிக் கொண்டு
துங்கமிகு குழந்தைகட்குக் கொடுக்க வேதான்
தொடர்ந்துநின்ற உளைமாந்தந் தீருந்தீரும்
பங்கயப்பூ வானன் வேல் விழிப ருத்துப்
பணைத்துயர்ந் திறுகுதனப் பாவாய் செய்யே.
*(புத்.477-80,476-55)*

### *குருவிச்சி கற்கம்*

குருவிச் சிலையுங் கருப்பட்டி
கூட வேயரைத் தெண்ணெயிலே
மருவிக் குழப்பி விழுங்கவுளை
மாந்த முட்சுர மெலும்புருக்கி
உருவித் தீரும் சொன்னபடி
யுண்மை யிதுதான் கண்டாயே
கருவி நிகரள கத்தாளே
கால கால னடிபணியே. *(புத்.477-80)*

### *1. சிறுநாகப்பூ எண்ணெய்*

மருந்தான வசம்பு சீரக மிரண்டு
மைந்தனே நாரத்தம் வேர்ப்பூண்டுக் காயம்
விருந்தான திவைவகைக்குப் பலங்கால் வீதம்
வீண்போகத் தக்காளிச் சாறுவிட் டாட்டி
குருந்தான எண்ணெய்சேர் அதில்க லக்கிக்
குருவை நித்தியமும் போற்றிப் போற்றி
நிருந்தான அடுப்பேற்றிக் காய்ச்சிக் கொண்டு
நீமகனே கரண்டிநிறை மூன்று நாளே.

மூன்றுநாள் வார்த்திடதே மூரி யுளைமாந்தம்
ஊன்றி முறிந்தோடும் உண்மையே - மூன்றுநாள்
பத்தியந்தான் உப்புபுளி பாவையே யாகாவாம்
இல்லத்திற் காணு மிது
*(புத்.476-54,55,-572-32,-477-79-80)*

### *2. பூநாக எண்ணெய்*

கொள்ளவே வியாதியென்றால் கொஞ்ச மல்ல
கொடுங்கார மேற்றுதற்கு வகையைக் கேளாய்
விள்ளவே நிலவேருஞ் சிவயோகி வாளம்
விரைவான நிம்பவேர் உள்ளி காயம்
கள்ளவே ஒன்றுக்குக் கழஞ்சு சேர்த்துக்
கருத்துறவே யெண்ணெய்-அரைப் படியில் வெந்திங்
குள்ளதொரு காசெடையாய் உள்ளே வாரு
ஒருமித்திங் குளைமாந்தம் ஓடிப் போமே.
*(புத்.477-79,476-54)*

### *ஊது மாந்தம் - குறிகுணம்*

ஊது மாந்தஞ் செய் குணத்தை
உரைக்கக் கேளாய் ஒண்ணுதலே
வழுதை போலே மலங் கெட்டு
வயிறு விம்மிச் செரிப்பித்து
வேது முடலில் சுரங்காயும்
வியர்வை மயக்கந் தளர்ச்சியுமாம்
பேதியிட்டு மாப்போலே
பின்னே கெந்தந் துர்க்கெந்தம்
ஓதுங் குணங்கள் தானறிந்து
உற்ற மருந்து கொடுத்தி டிரே. *(ஏடு.798-9)*

அரிய பாலனுடல் கனுக்கால்
ஆயி போலதான் வீங்கும்
எரிய சுரமும் தான்காயும்
ஏற்ற நாவும் புண்ணாகும்
செரியா தன்னம் செல்லாது
சேரும் கையும் காலோயும்
பெரிய ஊதுமாந்த கணை
பின்னும் சுவாச முண்டாமே. *(ஏடு.ஆர்.7313-25)*

உடலெல்லா மூதிக் காணும்
  உவாந்தியுங் கழிச்ச லுண்டாம்
குடலெல்லா மிரைச்ச லாகிப்
  கூப்பிடுஞ் சமுத்தி ரம்போல்
தொடையெலாம் வலிக்கு மிக்க
  சுரமுடன் கடுப்பு மாகும்
அடைவினா லூது மாந்தம்
  அதுசெயுங் குறிக டாமே.

அகண்ட வாந்தியுங் கழிச்சலுஞ்
  சுரங்களு மாகிச்
சுகந்த மேனியில் வீக்கமுந்
  துண்டித் துப்படிந்
திகந்த தாமுத ரத்தினி
  லிரைச்சலுண் டாகில்
உகந்த சேய்க்கிது ஊதுமாந்
  தங்களென் றிசைப்பாய்.

*(புத்.477-75) (சர.வை.முறை - 21)*

### *1. பொடுதலை யாதிக் குடிநீர்*

பொடுதலை வேம்பு மாவும்
  புளிநுணா நொச்சி வேலி
சடுதியி லீர்க்கிவ் வேழும்
  சமன்கொண்டு குடிநீர் வைத்தங்
கிடுவகை யோம முள்ளி
  திப்பிலி கூடக் கூட்டி
அடுதனீர் நாழி தன்னி
  லடுப்பினி லெட்டொன் றாக்கே.

ஆக்கிடுங் குடிநீர் தன்னை
  யதனதோர் சங்கு வார்க்கப்
போக்கிடு மூது மாந்தம்
  போர்மாந்தம் சத்தி மாந்தம்
தேக்கிடுஞ் செரியா மாந்தம்
  சிறந்திடுங் கட்டு மாந்தம்
தாக்கிடு மாந்த மைந்தும்
  தரணிவிட் டோடு மன்றே. *(புத்.477-75,76)*

## *2. எண்ணெய்*

உண்டாஞ் சுரைத்த வரையுடன்
    ஓரிலைத் தாமரைக் கிழங்கு
இண்டார் படாகம் வல்லாரை
    இசைந்த முள்ளி கரிப்பானும்
வண்டார் மேனி தானதே
    வட்டத் திருப்பியும் முருக்கு
திண்டார் கண்டங் கத்திரியுடன்
    செந்தாமரை செங்கழு நீரே. *(ஏடு.ஆர்.7313-25,26)*

கழுநீ ரங்கு சாறுடனே
    கதித்த தென்னங்காய்ப் பாலும்
குழலேவகை ஒன்றொரு கழஞ்சு
    கூட்டே ஓரண்டத் தெண்ணெய்படி
வழலே இண்டின் வேர்க்காயும்
    வசம்பு முத்தக்கா யேலம்
விழலே சாதி பத்திரியும்
    விடையம் மாயக்காய் தானே.

மாயக்காய் வெட்பா லரிசி
    வளர்செங் கத்தாரி பட்டை
வாயும் விளா பத்திரம்
    மருக்காரை வாகையும் பிசினுடனே
சாய வாத மிளகொன்று
    தானே கழஞ்சு சமனதாய்
நைய்யயிடித்து சாறுவிட் டரைத்து
    நன்றாய் கலக்கு வரே. *(ஏடு.ஆர்.7313-25-26)*

## *3. எண்ணெய்*

காட்டு மல்லிகை ஈருள்ளி
    கருஞ்சீ ரகமும் கடுக்காயும்
நாட்டில் பெருத்த சீரகமும்
    நல்வச்சி ரப்பால் விளக்கெண்ணெய்
கூட்டி யெரித்துப் பாலகர்க்கு
    கொடுக்க மாந்தம் போர்மாந்தம்
ஓட்டி விடுங்காண் ஒண்ணுதலே
    உலகோ ரறியஉரைத் தோமே.

*(கை.பி.98-140), (ஏடு.798-9-10,7313-8)*

### *1. மாத்திரை*

ஓதுங்கார் மரைரெண்டு தாம்ரோகணி
நீதியே கருஞ்சீரக மிரண்டுடன்
மாதுபாலினில் மாத்திரை செய்திட
ஊதுமாந்தம்விட் டோடுமிது உண்மையே.

*(ஏடு 6218-47)*

### *2. மாத்திரை*

ஓதுங் காரம் அரைரண்டு ரோகணி
நீதி யார்க்கருஞ் சீரக நிண்முலை
மாது பாலினில் மாத்திரை செய்திட
ஊது மாந்தம்விட் டோடுவ துண்மையே.

*(புத்.477-75,476-38)*

### *3. பேதிபூபதி மாத்திரை*

வேதிபூ பதிபா லர்க்கு
விளம்பிடும் வகையைக் கேளாய்
சேதிசே ரிரதஞ் சுக்கு
சேர்ந்தவெங் காரங் கெந்தி
நீதிசேர் நான்கு நேராய்
நிறையினோர் வாளங் கூட்டி
ஆதியாஞ் சத்தி யைச்செய்
தறிந்துதண் ணீரைக் கூட்டே.

கூட்டிடு மைந்துஞ் சுத்தி
குளிர்ந்தநீர் விட்ட ரைத்துப்
பாட்டிடும் பனியிற் பாசிப்
பயற்றள வாக்கிக் கொண்டு
தீட்டிடு முரைத்து நீரில்
சிறியவர் தமக்கே யீயப்
போட்டிடு மூது மாந்தம்
பொருமல்வா தங்கள் போமே. *(புத்.477-75)*

### *ஊதுகண மாந்தம் - குறிகுணம்*

தானே ஊது மாந்தகணம்
தனதாய் உரைப்பேன் மடமயிலே
வானே காலுங் கண்உடம்பும்
வளமாய் வீங்கி நாபுண்ணாய்

ஆனே கேளாய் சுரம்உண்டாய்
அன்னந் தண்ணீா் கொள்ளாது
கானே காலுங் கைசோர்ந்து
கனத்த சுவாசம் அதிகமன்றே.

அதிக மாம் ஊது மாந்த
கணமது பனிரண் டாண்டு
அதிகமாம் அந்நாள் மட்டும்
ஆம்இது நோயின் காலம்
அதிகமாய் மருந்து கேளாய்
அன்புடன் உரைப்பேன் தானே
அதிகமாம் தேவி வாலை
அருளினால் உரைப்பேன் கேளே. *(புத்.477-148)*

### *எண்ணெய்*

பழமே வட்டத் திருப்பியுடன்
பற்பா டகநன் முத்தமுடன்
தழமே ஓரிதழ்த் தாமரையும்
தண்தா மரையும் செங்கழுநீர்
மழமே சூரத் தாவாரை
வல்லா ரையின்தன் சாறுடனே
வழுமே விளாவின் பிசின்வாகை
மருக்கா ரைப்பிசி னுஞ்சேரே.

சேரே இலவம் பிசின்சேரு
செங்கத் தாரி முருக்கஞ்சாறு
மாரே மாசிக் காயுடனே
மகிமை கடுக்காய் அதிவிடயம்
சீரே வாலின் மிளகோடு
சிவந்த சாதிப் பத்திரியும்
வாரே எல்லாம் வகைக்குக்கால்
வளமாய்ப் பொடித்து ஒன்றாக்கே.

பொடித்திடு மருந்தி னோடே
புகழ்விளக் கெண்ணெய் வார்த்தே
அடுத்ததோர் அடுப்பில் ஏற்றி
அழகாகத் தீயை மூட்டி

வடித்துக் கடுகு திரண்டக்கால்
வளமதாய் இறக்கிக் கொண்டு
தடுத்தோர் தேவி மாதைத்
தயவாய்பூ சித்துப் போற்றே.

போற்றிய எண்ணெய் தன்னைப்
புகழ்ந்துதுட் டெடைதா னீய
ஆற்றிய மூன்று வேளை
அழகதாய்க் கொள்ளச் சொல்லு
மாற்றிய புளிப்பு தள்ளு
வகையுப்புப் பகையு மாகா
ஏற்றிய கவிச்சே எள்ளு
இவையெலாம் ஆகா வென்னே.
*(புத்.477-148-149)*

### *மாத்திரை*

சாதிக்காயுடன் மாசிக்காயுந்
தண்கிராம்பு கோரோசினை சீரம்
பூதிக்கா யுடனே திப்பிலியும்
பொருந்த அரைத்து மிளகளவாய்
நீதிக்கா மென நிழ லுலர்த்தி
நிகர்முலை யமுதி லிட
ஊதுகண மாந்தக் கண
மூலவறட் கணம் ஓடுமே. *(புத்.476-99)*

### *எரிமாந்தம் - குறிகுணம்*

பிள்ளை யுடலை தானெரிந்து
பெறுமே யுழலை மிகவாகக்
கள்ள மாகச் சுரமடித்துக்
கனக்கும் பளுவா நீர்போக
மெள்ள. மெள்ளத் தானிறங்கும்
விடும்போ துறுமே துயரமிகக்
கொள்ளு முக்கி மலம் போகும்
மொழிவ ரெரிமாந் தக்குறியே' *(புத்.477-67)*

### *கட்டு மாந்தம் - குறிகுணம்*

தாயார் முலையில் வாய்வைக்குஞ்
சற்றே யுண்ணு மருவிநிற்கும் (திகைத்திடும்)

ஓயா தழுகில் சித்திருமல்
    உள்ளே சுரமு மிகவுண்டாஞ்
சேயார் மலமுஞ் சலங்கட்டுஞ்
    சிக்கப் பண்ணும் பசியில்லை
மாயா மயக்க மிதுகட்டு
    மாந்த மென்று வகுத்தென்னே.

*(ஏடு 941-18,169-25) (புத்.476-48, 49)*

கட்டான மாந்தமுடன் வயிறிரைந்து
    களுப்போலே கொழுத்து வலிதா னுண்டாகி
திட்டுமுட் டெனமயங்கி மலமுஞ் சிக்கி
    சிறுகவயிறு தான்கழிந்து திகைப்புண் டாகி
விட்டுவிட்டு முலையருந்தி துக்கம் போலே
    விழுஞ் சோர்ந்து சற்றிருமல் வியர்வையுண்டாம்
கண்டமுறு தலைவலிக்குஞ் சுரங்கொட்டாவி
    தான்வருத்து மிதுகட்டு மாந்த மென்றே.

*(ஏடு.798-17)*

பறந்த மெய்யினில் வெப்புட னுறக்கமும் பலகால்
உறைந்த வேர்வை கொட்டாவியு முதரத்தில் வலியும்
நிறைந்த நாள்மலஞ் சிக்கியுங் கழியும் நேரிரைச்சல்
அறைந்த சீர்கட்டு மாந்த மென்றே யறியனமே'

*(சர.வை.முறை-20)*

### *1. குடிநீர்*

சீந்தித் தண்டுங் கடுக்காயுஞ்
    சிவதை வேருங் களிப்பாக்குங்
காந்த சுக்கு ரோகணியுங்
    காயும் நீரில் தகத்திட்டு
யேந்து முலையா ளின்னீரை
    யெடுத்துக் குடிக்கக் கட்டுமது
மாந்த மான சுரந்தீரும்
    வயிறு கழியுங் கண்டீரே.

*(ஏடு.941-18,169-26,798-17), (புத்.477-65)*

### *சுக்கு நெய்*

அனமே சுக்குசிற் றரத்தைவெற் றிலையுட னோமங்
கனமு ருங்கையின் தோலிவை சுரசமாய்க் கண்டே

இனிய நிம்பநெய் சேரரை விட்டெரித் திட்டால்
முனிவ தாங்கட்டு மாந்தங்க ளகலுமொய் குழலே.
*(புத்.477-65)*

### *1. எண்ணெய்*

அடுமே சிற்றா மணக்கின்னெய்
அளந்து கால்படி தானதிலே
கடுமே அகத்தி துளசியுடன்
கதித்த தகரை கழற்கொடியும்
வடுமே நொச்சில் செம்முள்ளி
மணித்தக் காளி சமனாகக்
கொடுமே யிடித்து நீர்படிகால்
கூட்டிக் கடைச்சரக் கைக்கேளே.

கேளே கடுகு ரோகணியும்
கிளருங் கடுக்காய் சீரகமும்
வேளே கரிய சீரகமும்
வெங்கா யமும்வெள் ளைப்பூண்டும்
பாளே வசம்பூ தகரப்
பானின் பட்டை சாறுவளை
ஏளே வராக னெடைமூன்று
மிடித்துப் போட்டின் னம்பாரே.

பாரே சதுரக் கள்ளிப்பால்
பரிவா யொருகரண் டிகூட்டித்
தாரே காய்ச்சி வடிகொண்டு
தனயர்க் கொருதுட் டெடைகொடுக்க
வாரே கழியும் அந்திதனில்
மரீசி சாம்ப லுஞ்சுக்கும்
நீரே காய்ச்சி யொருசங்கு
நீயிடு கட்டு மாந்தம்போம்.
*(புத்.477-65,476-49,482-55)*

### *2. கள்ளிப்பால் எண்ணெய்*

அடவியினில் திருடிமலை வரக்கா லிப்பால்
அவையொவ்வொன் றோருழக் களந்து கொண்டு
திடமுடன்ஆ மணக்கெண்ணெய் நாழி கூட்டித்
திரிபாலைவெள் ளுள்ளி வராகனெடை இரண்டு

பொடிசெய்தே எண்ணெயதிற் போட்டுடனே யெரித்து
புகட்டுமோர் காசெடைமேல் வயிற்றில் பூசத்
தடமுடைய கட்டுமாந்தங் கணபே தங்கள்
சாராதென் றுமைக்கரனார் சாற்றி னாரே.
*(ஏடு.798-17) (புத்.477-66,476-49)*

### 3. இஞ்சி எண்ணெய்

செய்திட மாந்த எண்ணெயைச் சொல்வேன்
வைதிட விஞ்சி சங்குடன் சின்னி
கைதிடக் காணி கரந்தையும் வன்னி
நெய்திட வெல்லாம் நேராய்ப் பிழிந்திடே.

பிழிந்து சிற்றே ரண்டத்தி னெண்ணெய்
கலந்திட் டேயொரு கட்டையாற் றீயிடு
செலமறக் காய்ச்சிச் சிறுக இறக்கிடு
மெலிந்தநோய் தீர விளம்புவேன் கேளே.
கேளிடு மாந்த மலபந்த மாந்தம்
சேவிடு சலத்திற் செனிசிர மாந்தம்
பாலக ருண்ணப் பறந்திடும் பாரு
சீலக் கொடிய சீதளம் போகுமே. *(புத்.477-65)*

### கணமாந்தம் - குறிகுணம்

அருந்து மெய்யிளைத் திருமலு மடிக்கடிச் சுரமுந்
திருந்து மூக்கில் நீர் வடிதலும் வயிறுப்பும் சிரநோய்
புரிந்திரைச்சலும் பலவிதம் வயிறு போக்குடனே
வருந்து கண்ணினில் மயக்குமுமாங் கணமாந்தம்'
*(புத்.477-69) (சர.வை.முறை-24)*

### கர்ப்ப மாந்தம் - குறிகுணம்

மொழிகிறேன் கர்ப்ப மாந்தக்
குறிதனை முயலக் கேளாய்
பொழிகிறேன் பெண்ணால் தானும்
புதுவர கரிசிக் கொழியல்
விழிகிறேன் மிதமற் றேதான்
விளம்பர முண்ட தாலே
கழியிளங் கருவுக் கேதான்
கனலதாற் சூடுண் டாமே.

சூடதால் வாத வாயு
　　தோன்றிடுங் குணத்தைக் கேளாய்
பாடதாற் கருவிற் பற்றிப்
　　பலபல நோய்தான் காணும்
வாடலோ டுறுத்தி வாயு
　　வன்னியுங் கூடச் சேர்ந்து
தேடவே பிறந்த பிள்ளைத்
　　தேகத்தி னோயைப் பாரே

தேகத்தின் மேலே நோய்தான்
　　சிலேத்தும நாடி தானும்
ஆகத்தின் மூலச் சூடு
　　மருகியே மிகுத்த தானால்

போகத்தாற் புணர்ச்சி செய்த
　　பொருட்டதாற் சிசுவுக் கேதான்
நாகத்தி னிரைச்சல் போல
　　நடுக்கிடும் நாடி தானே.

நாடியில் வாத நாடி
　　நடுக்குமே சர்ப்பம் போல
ஓடியே சரச ரென்றே
　　யோந்தியைப் போலே பாய்ந்தால்
வாடிடும் பிள்ளைத் தேகம்
　　வாயெல்லாம் புண்ணாய்ப் போகும்
பேடுவின் முலைப்பால் சுண்டிப்
　　பிள்ளையு மிளைக்குந் தானே.

பிள்ளையும் பிறந்தி ரண்ணெ
　　ணாண்டது சென்ற தானால்
கிள்ளையே யரையிற் கட்டிக்
　　கிலேசமாய் வறட்சி காணும்
விள்ளவே தேக மெல்லாம்
　　மிகுத்ததோர் கனலி னாலே
துள்ளவே பாலன் தானும்
　　துடித்ததோர் வீக்க மாமே

துடித்திடும் வெளுக்குந் தேகம்
 தொண்ணூறு நாட்சென் றக்கால்
கடித்ததோர் விடம்பட் டாற்போல்
 கைகால்கள் புண்ணாய்ப் போகும்
வடித்திடுஞ் சுழற்றல் வாய்நீர்
 வறண்டிடு மதன்பி னெஞ்சில்
தடித்திடுங் காரல் காணும்
 தலையது நடுக்கந் தானே.

நடுக்குமே மூன்றாண் டின்மேல்
 நாடியு மசதி காணும்
படுக்குமே பாயல் மீதே
 பாலது குடித்திட் டாலும்
எடுக்குமே வாந்தி யாகு
 மிரைச்சலும் வயிறு நோயாம்
குடிக்கிற சார மெல்லாம்
 குடங்கொண்டு பாயுந் தானே.

பாயுமே கறுக்கும் போது
 பசுமையாய்க் கொடிபோல் வீழும்
வாயுமே தவறிக் கண்கள்
 மதுவெனச் சிவந்து காணும்
தேயுமே தேவாங் கைப்போல்
 செகத்தினர் சொல்லு வார்கள்
நோயுமே பட்சி தோட
 மிதுவென வருளு வாரே. *(புத்.477-83)*

### *கர்ப்ப மாந்தத்திற்கு புங்கு நெய்*

வாங்கிடு புங்கங் கொட்டை
 யதினுடன் பருப்பை வாங்கித்
தீங்கிலா ரவிநாள் மூன்று
 தினந்தின முலர்த்தித் தானும்
பாங்குட னெடுத்தி டிந்தப்
 பருப்பையு முரலிற் றாக்கித்
தாங்கவே யிடித்து மாப்போல்
 தானதைப் பாண்டத் தூட்டே.

ஊட்டிடு தூணி நீரி
  லொருமையாய் சொல்லக் கேளாய்
வாங்கிடு புங்கங் கொட்டை
  யதனுடன் பருப்பை வாங்கிச்
சாட்டிடு சங்கு சின்னி
  சாரணை குன்றி வெள்ளை
மாட்டிடு கண்டங் காரி
  மாதுளை நிலவேம் பன்றே.

வேம்புடன் குப்பை மேனி
  வில்வவேர் கீழ்க்காய் நெல்லி
காம்பஃ தழிஞ்சி னாவல்
  கரிசலாங் கண்ணி துத்தி
ஆம்பஃ தாடா தோடை
  யல்லியுங் கொத்தான் சூரை
வேம்பது சிவனார் வேம்பு
  வெண்ணொச்சி துளசி வேரே.

வேருடன் வகையொன் றுக்கு
  விளங்கவே பலந்தான் கொண்டு
சீருடன் ரவியில் மூன்று
  நாள்களே யுலர்த்திச் சேர
நேருட னுரலிற் றாக்கி
  நிலைபெற விடித்துத் தூளாய்க்
கூறுடன் தோண்டி வேறே
  குணமதாய் வடிதான் கட்டே.

கட்டிய மாவைக் கொண்டு
  கருதிடு முன்பு நீரில்
அட்டிசெய் யாதே பின்ன
  ரருளுவோ. மூலிச் சாறு
தட்டிடு பிரமிச் சாறு
  தைவேளை யவுரி சூரி
ஒட்டிய தும்பை காட்ட
  கத்தியும் பொன்மு சுட்டை.

அகத்தியு மணித்தக் காளி
  யடைவுடன் வகைவ கைக்கு

துரத்திய சாற்றில் வீதம்
துரிதமாய்ப் பலமி ரண்டாம்
சகத்திய மாக விந்தச்
சாறதை நீரி லிட்டங்
ககத்திய மின்னஞ் சொல்வோ
மகத்திய னுரைக்கக் கேளே.

உரைக்கவே கடுக்காய் கண்ட
திப்பிலி செவ்விய முற்ற
விரைக்கவே மதுரங் கோட்டம்
வெட்பாலை யரிசி கோலம்
நிரைக்கவே தேவ தாரம்
நிகழ்பெறு மாஞ்சில் சிங்கி
தரைக்கவே சாதிக் காயும்
தான்றியு மேல மாமே.

ஏலமும் புழுகு தானு
மிருவிநா வியுமே யாகும்
வாலரோ சனையு மாகும்
கத்தூரி பண்பாய் வீதம்
ஞாலமே வகைவ கைக்கு
நளினமாம் வராகன் மூன்று
சாலவே வாங்கி நீயுஞ்
சட்டியில் வறுத்துக் கொண்டே.

கொண்டுநீ யிடித்துத் தூளாய்க்
கொட்டிடு முன்ச லத்தில்
நன்றுநீ சொல்லக் கேளாய்
நவிலுவோங் கடைச்ச ரக்கு
வண்டது வாளம் வீரம்
மஞ்சளுங் கந்தி சூதம்
துண்டது பூரம் சாதி
லிங்கங்கர்ப் பூர மாமே.

பூரமு முதலாய் வாங்கிப்
புகலக்கேள் வகைவ கைக்குத்
தீரவே வராக னாலு
திருத்தமாய்த் தூளாய்ச் செய்து

கூறவே முன்ச லத்திற்
    கொட்டியே பின்பு கேளாய்
ஆரப்பே ராம ணக்கி
    னவ்வெண்ணெய்ப் படிரண் டாமே.

படியஃ திரண்ட தாகும்
    பாங்குட னீரில் தாக்கி
வடிபெற மூன்று நாளும்
    வன்னியாம் ரவியில் வைத்துக்
கடிபெற வடுப்பி லேற்றிக்
    கமலாக்கினி மூன்று சாமம்
துடிப்பெறக் கொதிக்கக் காய்ச்சிச்
    சுண்டியே படிரண் டாமே.

இரண்டதாம் பாக மானா
    லிறக்கியே யாற வைத்துக்
கண்டுநீ வடிதான் கட்டிக்
    கலசத்தி லதனைத் தாக்கி
நன்றதாய்க் கமலம் வைத்து
    நாயகி பூசை செய்தே
என்றிடு நோய்த னக்கே
    யெண்ணெயைக் கொடுத்துப் பாரே.

கொடுக்கிற விதமே தென்றால்
    குழந்தைகட் கதிகா லத்தில்
நடுக்கிற எண்ணெய் தன்னில்
    நாலது கழஞ்சு வாங்கித்
துடுக்குட னவநா ளுந்தான்
    துலங்கவே கொடுத்து நீயும்
வெடுக்கென வதீத பத்யம்
    விளங்கிடுங் குணத்தைக் கேளே.

குணங்குறி குழந்தை பெற்ற
    தாய்தனக் கென்ன பத்யம்
மணங்கமழ் பீர்க்கங் காயும்
    வறுத்ததோ ருப்பு மாகும்
புணங்கலாம் வெந்நீ ராகும்
    போசனம் மாற லாகா

லிணங்கவே லவங்கப் பூவு
  மிளகுடன் காரங் கூட்டே.

கூட்டலா மிருபோ தன்னம்
  கொள்ளுட னகத்திக் கீரை
நாட்டவே புகையும் போகம்
  நவயுறும் புளியு மாகா
தேட்டமாம் பெண்ணா டன்னைத்
  தெளியுறப் பத்யஞ் சொல்லு
வீட்டைவிட் டுழல வேண்டாம்
  மிகுந்தநோய் சிதறிப் போமே.

போகுமே யெண்ணெ யுண்டு
  பின்புமே நவநா டன்னில்
ஆகுமே தேக வச்ரம்
  அதீதமாம் பொன்போ லாகும்
நாடுமே பத்ய மாறி
  நாளது சென்ற தானால்
வேகமே நீங்கிப் போகும்
  விளங்கொளி சடல மாமே. *(புத்.477-84-85)*

### *கல்மாந்தம் - குறிகுணம்*

நாடியே சுரமடித்து மெய் வெளுத்து நாவுலர்ந்து
நீடுகால் குளிர்ந்துங் கையான் முகத்தினை நெருடி
வாடும் பற்பல குணங்களாய்க் கழிந்துடல் வடிந்து
கூடு மாஞ்சிர வியர்வை கல் மாந்தத்தின் குறியே.
*(புத்.477-86) (சர.வை.முறை - 21)*

### *கழிச்சல் மாந்தம் - குறிகுணம்*

வாந்திப் பிராந்தி மூச்சாகி
  வலுவாங் குரலுஞ் சீரணிச்சுக்
காய்ந்த மேனி வேர்வையது
  கைகால் குளிர்ந்து வலியுமுண்டாஞ்
சேந்துக் கழிந்து மலந்தானுஞ்
  சீர்கெட் டிருக்கும் பலவிதமாய்
போந்து குளிருங் கழிமாந்தம்
  பொல்லா தெனவே புகன்றாரே.
*(ஏடு.941-20, 476-11) புத்.477-85)*

### *வேளைப் பச்சிலைச் சாறு*

நல்ல வேளை நாய்வேளை
நாடும் வேலிப் பருத்தியுடன்
சொல்லுங் குப்பை மேனியிலை
துதிக்கு மகத்திப் பழுப்புடனே
வெல்லும் வசம்பு வெள்ளுள்ளி
வேண்டும் படியே சார்வாங்கி
உள்ளுங் கொடுத்து வாலைசெய்ய
வோடுஞ் செவிகழி மாந்தமுமே.

*(ஏடு.941-20, 6218-17) (புத்.477-85)*

### *குடிநீர்*

கியாழத்தால் மாந்தங்கள் போகக் கேளு
கெடியான மாசிபத்ரி பற்பா டகந்தான்
கியாழத்தால் நாயுருவி முட்கா வேளை
கருஞ்சீர கத்துடனே கோழி யெச்சம்
கியாழத்தால் பற்பமாய்ச் செய்து கொண்டு
இருவேலி சங்குசுக் கோடே ஏலம்
கியாழத்தால் ரோகணியும் பரங்கிச் சக்கை
சீக்கனாம் பட்டைக்கா வட்டம் புல்லே.

புல்லான கடுக்காயும் மாசிக் காயும்
புகழான வசம்போடு தான்றி முத்தம்
வில்லான நீர்ப்படி யிரண்ட தாகும்
விதமாக எட்டொன்றாய்க் காய்ச்சி யேதான்
கல்லா மாந்தமொடு கழிமாந் தங்கள்
கைப்பினிப்பால் வந்ததொரு கழிச்சல் மாந்தம்
மல்லான மாதவாய்ச் சிறுபண் டத்தால்
மருவிவந்த மாந்தமெல்லாம் மயங்கிப் போமே.

*(புத்.572-51,52)*

### *முக்கடுகாதி மாத்திரை*

திரிகடு கோம முள்ளி
சீர்பெருங் காய மற்ற
கரியசீ ரகம்வ கைக்குக்
கணக்கது வராக னாலு

மரியதோர் வசம்பு மூன்று
மரிதகி பதினைந் தாகும்
புரியசா ரணைவே ரைந்து
பொடுதலைக் கொழுந்து மாமே.

ஆம்பெருந் தும்பை யின்துளிர்
அந்நிறை வேலிப் பத்திரம்
ஓம்பெறத் தான்வெ துப்பி
ஒன்றாக வேயி டித்துத்
தாம்பெருந் தும்பைச் சாற்றில்
தனிப்பொடு தலையின் சாற்றில்
காம்பட வரைத்துச் சுண்டைக்
காயள வுண்டை செய்யே.

செய்ததோர் குளிகை தன்னைத்
திகழ்நிழ லுலர்த்திக் கொண்டு
வையக பாலர் தங்கள்
வளர்பரு வத்தைப் பார்த்துக்
கொய்யகா லரைமுக் காலோர்
குளிகைவெந் நீரிலீய
மைமாந்தங் கட்டு மாந்தம்
கழிச்சலும் வலிப்பும் போமே. *(புத்.477-86)*

### *கிராணிமாந்தத்துக்குக் குடிநீர்*

வாய்க்கவே சிறுதேக்கு வாய்வி ளங்கம்
வால்மிளகு ரோகணியும் சுக்கோ டேலம்
சாய்க்கவே திப்பிலி இலவங்கந் தான்றி
தக்கோலம் பொஸ்தகப்பால் வகைவ கைக்கு
மாய்க்கவே கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
வண்மையாய் தூளிடித்து பாண்டத் திட்டு
காய்க்கவே இருநாழி சலமும் விட்டுக்
கடுகவே எட்டொன்றாய் காய்ச்சி றக்கே.

இறக்கியே கொடுத்திடவே கிராணி மாந்தம்
இயல்பான சுரக்கட்டி விஷதோ ஷங்கள்
உறக்கியே இசிவுகண்ட மாந்தத் தோடு
உற்றதொரு கிராணி சோகைக் காமாலை

நொறுக்கியே கொண்டசுரம் கோழைக் கட்டு
நொடிக்கின்ற கொட்டாவி விம்மல் தும்மல்
நறுக்கிவிடும் பித்தகண பாண்டு எல்லாம்
நமன்ஓடிப் போவான்பார் கியாழத் தாலே.

*(புத்.572-51)*

### *சன்னி மாந்தம் - குறிகுணம்*

ஓடுமப்பா வாய்வுமிகும் நாரி பத்தி
உடலெங்கும் கனகனத்து சூடுண்டாகும்
நாடுமே சதைகளெல்லாம் குலுக்கிக் காட்டும்
நல்ல முழி கால்கைகள் பதபதைக்குமப்பா
தேடு நீ பருவத்...மாந்தையென்று
செவ்வனே வாதநீர் கலந்து கொண்டு
பாடுதற்கு வாயில்லை தாளை பத்தும்
பருத்துடம்பு யிரும்பது போல திரேகங்காயும்
கூடுமே யசைந் தசைந்து வலிக்குமப்பா
கோராமை சன்னி மாந்த குணமிதாமே.

*(ஏடு.619-7)*

பத்தியத் தாழ்வால் மாந்தம்
பகைசெயும் விதங்கள் மெத்த
சுற்றிய மயக்க முண்டாய்ச்
சொல்லொணாச் சன்னி யெய்தும்
முற்றிய சுரமுந் தாக
முதிர்ந்திடு நாவின் முள்ளு
புத்தியுங் கலங்கிக் கண்ணும்
போத்வே தாழுந் தானே.

உருக்குஞ் சன்னி மாந்தகுணம்
ஓயா தலறும் வாய்பிதற்றும்
ஒருகண் திறந்து மொருகண்ணை
யுருட்டி விழித்துப் பார்த்துமழும்
துருக்கு மூசி போல்கழுத்து
துவள நொந்தே யுடலமெலாம்
பெருக்க நரம்புந் தான்தெறித்துப்
பிழியும் பாசி போல்வழியே.

தொலையில் தாகமு மயக்கமு மறிவுதொந் தித்தல்
தலைபி ரட்டல்கால் குளிர்ந்திட ணாவில்முள் தடித்தல்
மலைவு செய்வெறும் வாந்தியு மேப்பமும் வலிப்பும்
சிலைநு தற்கணே சன்னிமாந் தமெனச் செப்பே.

(சர.வை.மு - 22)

மாந்தமே கோபித் தக்கால்
வயிறுபோ முப்பிக் கொள்ளும்
மாந்தமே கோபித் தக்கால்
வாய்தனை வெருவிச் சீறும்
மாந்தமே கோபித் தக்கால்
மயங்கியே குளிர்ந்து காணும்
மாந்தமே கோபித் தக்கால்
வலிப்புடன் சன்னி தானே.

மாந்தமே கோபித் தக்கால்
.... .... ....
காந்தல்போல் மேனி தானும்
கருகியே வெருவிச் சோரும்
சேர்ந்ததோர் பச்சை வெள்ளை
சிவந்து மேல் மலமுந் தீயும்
வாந்தியே பண்ணுங் கண்டாய்
வலிப்புடன் சன்னி தானே. (புத்.477-73)

## 1. வெற்றிலைச் சுரசம்

செப்பு வெற்றிலை முயிறுதன் முட்டைசிற் றரத்தை
வெப்பு சுக்குடன் முருங்கைமா விலிங்கமுஞ் சுரசம்
ஒப்பில் லாதகத் தூரிசேர்த் துட்கொடு மேலி
லப்பு வாயுள்ளி யண்டத்தின் தயிலமா ரணங்கே.

(புத்.477-73)

## 2. வேளை வேர்ச் சுரசம்

ஓடும் வேளைவே ருத்தாம ணியின்வேர்
மூடு மாவிலிங்கை முருங்கைப் பட்டை
யோடு நால்வகைக் கோர்பல மேரசத்
தோடு வாங்கி முரித்துச்சூ டாற்றிடே.

ஆற்றி டாய்பி னரிசியின் திப்பிலி
கோற்றி டாய்மிள கோடுசுக் கானதூ
ளேற்றி டாய்நவ லோகமி ழைத்துடன்
வார்த்தி டாய்சன்னி மாந்தம்போம் பாரிதே.
*(புத்.477-74)*

### *குடிநீர்*

முருங்க்கைவேரு சாவேர் சங்கு
முதிர்தழு தாழை வேரு
வருங்கொடி வேலி வேளை
மகிழ்க்க தூதுளை செம்முள்ளி
யருந்திரி கடுகோ டுள்ளி
யரத்தை யீரோம மஞ்சள்
பொருந்திடக் காய்ச்சி வார்க்க
புகழ்சன்னி மாந்தம் போமே. *(ஏடு.424-16)*

### *1. எண்ணெய்*

வருந்திடும் வேளைச் சாறு
வளர்தழு தாழைச் சாறு
புகுந்திரு நொச்சிச் சாறு
புகழ்முருக் கிலையின் சாறு
மிகுங்கோழி யவரைச் சாறு
வெம்புன முருங்கைச் சாறு
தொகுத்தரைப் படிசா றாகத்
தொகையொரு படிவேப் பெண்ணெய்.

எண்ணெயுஞ் சாறுங் கூட்டி
யெரித்திடு வள்ளிச் சாறு
நண்ணிய முட்டை நீரு
நாடுகஸ் தூரி மஞ்சள்
எண்ணிய வசம்பு காய
மிகலிரு வோமங் கூட்டி
வண்ணமா யெரித்து வார்க்க
வருஞ்சன்னி மாந்தம் போமே. *(ஏடு.424-15-16)*

### 2. எண்ணெய்

கொடுமையென்று சொல்லாத வலிகட்கெல்லாம்
கோதலித்த நூறாண்டின் வேம்பின்பட்டை
தடுமைபடா கார்த்திகையின் கிழங்குமுள்ளி
தருகெருடன் தவசிவேர் சிவமூலி வேர்
படுமையடா சித்தண்டம் முசுரண்டங்கள்
பதமான நெய்கள் வகை பலமே தூக்கு
கடுமையுள்ள தும்மட்டிக்காய் சாறு நாழி
கனவேம்பின் கியாழமது நாழி கூட்டே.

கூட்டு வெள்ளைச் சாரணைவேர் கொத்தான்வேர்தான்
கோதையரே யேழுவகை பலம் ரெண்டாக
இட்டு நறுக்கெண்ணெய் நாழிசாறு சேர்த்து
ஏலம் சீரக மிரண்டும் ரோகணியும் காயம்
திட்டுவரை பலமிரண்டு பொடித்துப் போட்டு
தீயெரித்து மெழுகாக்கி காசிடையே வாரு
மூட்டோடே ஓடிவிடும், வலி அஞ்சுந்தான்
மூன்றுநாள் பத்தியமாய் முனைந்து வாறே.

*(ஏடு.619-7)*

### கத்தூரி மாத்திரை

கத்தூரி யொன்று கமழ்ஞாழற் பூவிரண்டு
சத்தாவின் கோரோ சனமூன்று - முத்தார
மெல்லியர் தம்முலைப்பால் விட்டரைத்துக் குன்றியெனச்
சொல்லுருண்டை செய்வாய் துணிந்து.

துணிந்துருண்டை வைத்திட்டால் தோடசன்னி மாந்தம்
மணிமாந்த பித்தசுரம் வாந்தி - தணிந்தோடும்
முத்தாரம் பூண்ட முகிழ்முலையாய் யோகப்பேர்
கத்தூரி மாத்திரையாங் காண். *(புத்.477-74)*

### புகை

குக்கிலு மகிலுங் கூட்டிக்
குருசன்னி நாய கந்தான்
சிக்கெனச் சாம்பி ராணி
திகழ்புகைக் கூட்டிப் பின்னர்
தக்கதோர் வேளை வேரும்
சாரணை தானுங் கொண்டு

அக்கணம் புகைக்கச் சன்னி
    மாந்தமு மகலுந் தானே. *(புத்.477-74,476-135)*

### *சிலேத்தும மாந்தம் - குறிகுணம் (கப மாந்தம்)*

மயக்கிடுஞ் சேட்ம மாந்த
    வகையினைத் தகையக் கேளாய்
முயக்கிடு நளிருண் டாகு
    முழுதுடல் சிலிர்சி லிர்ப்பாம்
பயக்குநா வெளுக்கும் பின்னர்
    பயந்தோர் அழலைத் தந்தும்
சயக்கும் வயிறு போகி
    தளர்தரு பொருமு மாகும். *(புத்.477-54,476-28)*

நளிந்து குளிரும் சிலுத்துவரும்
    நாவில் நீரு மோக்காளம்
கழிந்து வயிறு மிகப்பொருமல்
    கைகால் மெய்யுந் தினவெடுக்கும்
பருந்து உடம்பு போலிருக்கும்
    பைய்யப் பேசு மூர்க்கமுண்டாம்
சிறுத்து வலித்து மேல்மூச்சு
    சிலேத்தும மாந்தக் குணமிதுவே. *(ஏடு.612-3)*

### *மருந்து*

கழற்கொடி நீர்குணித் துண்டாயிலை வகைக்கு
    கருதுமொரு இரும்புச் சட்டி தன்னில்
பழக்கமுட னிட்டுசிவக்க வறுத்து வாங்கி
    பறணிபடிபத்து யசமோதம் வசம்பு சுண்டிடைக்
கழறும் நல்மிளகு பொடுதலைக்காய் திப்பிலி
    யோரிடை நிறுத்து திலகத் தெண்ணெய்
ஆழாக்கு விட்டு சிவக்கவறு பாகமானால்
    அதுக்குச் சீலைமுடிந்துட்டு அழல் தீ.

தீயெரித்து யெட்டொன்றாய் குறுக்கி வாங்கி
    சேர்குளிகை நோயறிந்து திறம தாக
நீயிறுத்து நாள்மூன் றந்தி சந்தி
    நினைவாக ஊட்டிவிடு நீங்கும் மாந்தம்
வாயூறும் பத்தி யந்தான்ஊர்முதலி
    வளருமிலெக் கருவாடு மாதர்க் காகும்

சாலமுறும் பாலகர்க்கு மறிந்து ஊட்டி
தயவான பாலமாந்தஞ் சொல்லு வேனே.
*(ஏடு.798-5,7313-4)*

### *சுழி மாந்தம் - குறிகுணம்*

துரப்புமிகும் காய்ச்சலுடன் சுவாசந் தோன்றல்
தூக்கமது பிடியாது தொங்கிக் காய்தல்
இரைப்பெடுத்து விக்கலுடன் விலாவிற் பள்ளம்
ஏந்துகொங்கை குடியாது வீங்கி னாற்போல்
வெறுப்பார்கள் சிறுவன்மேல் இனியே தென்பார்
வேறேநீ மனந்தவிக்க வேண்டாஞ் சொன்னேன்
உறப்பான குறிகளிவை தாமுங் கண்டால்
ஓஓஓ சுழிமாந்த மென்று சொல்லே.
*(புத்.477-71)*

### *1. ஈருள்ளி எண்ணெய்*

தாளு மீருள்ளிச் சாறுவெள் ளிண்டின்சார்
கேளு மாமணக் கெண்ணெய் வகைக்குச்சேர்
சூள வேயெரித் துப்பலம் கொண்டிடில்
வாள வேசுழி மாந்தமும் நீங்குமே.
*(புத்.477-71 - 72)*

### *2. கத்தூரி எண்ணெய்*

ஏகநா யகன்ற னிணையடியைப் போற்றி செய்து
வாகுடனே யெண்ணெய் வசனிப்பேன் - யோகமுள்ள

கோரோ சனமொடு கோட்ட மதிமதுரம்
சீராகுந் திப்பிலி தேவதாரம் - பேரான

சந்தனமு மேலமும் தன்னுடனே மாசிக்காய்
வெந்தயமுஞ் சுக்குவெள் ளுள்ளியும் - அந்தமுள்ள

பேரான கத்தூரி பேர்வசம்பு ரோகணியும்
பாரமுள மூங்கிலின் பச்சைத்தோல் - சீராய்

வகைக்கு வராகனெடை வாட நிறுத்துத்
தொகையா யரைப்பதற்குச் சொல்லத் - தகையாய்

எருமுட்டைப் பீநாறி யேற்றதொரு சாற்றில்
வருந்தி யரைத்து வழித்துத் - திரும்ப

விளக்கெண்ணெய் ஓர்படியும் விட்டெரித்துத் தானே
மலைக்காம னோய்க் கெல்லாம் வனப்பாய் - கலக்கமறப்

பிள்ளைப் பிணிகட்குப் பேறாகத் தான்கொடுக்க
உள்ளநொய் போகுமிஃ தோதக்கேள் - கள்ளமுள்ள

மாந்தவயிற் றுப்பிசமும் வாடா விளந்தேகஞ்
சோர்ந்து கிடக்குஞ் சுழிமாந்தம் - சார்ந்துவரு

நாவறட்சி யார்கணமு நன்றாங் குளிர்காய்ச்சல்
தூவி யிரத்தத்தின் தொந்தசுர - மேவுகின்ற

முக்குக் கணமும் முதிர்பால் கிரிச்சரமும்
பச்சியின் தோடம் பழங்காய்ச்சல் - அக்கணமே

இத்தனைநோ யெல்லா மிருப்பிடத்தை விட்டுவிட்டுக்
கத்தி விழுந்தோடுங் காண்.

*(புத்.477-72)*

### *சுரமாந்தம் - குறிகுணம்*

உகந்த மெய்முக மினுமினுப்பா முயர் சுரமும்
பகர்ந்த பாலருந்தாது நீர் சிவந்திடும் பார்க்கும்
வகிர்ந்த மலஞ்சிக்கியு மயக்கமும் வலியுஞ்
சுகந்தமாயடி குளிர்ந்திடில் சொல் சுரமாந்தம்.

*(சர.வை.முறை - 24)*

### *சுழிகண மாந்தத்துக்கு நெய்*

புத்திரருக்கு அடக்கவொரு நெய்தான் கேளு
பூலாத்தி வேருடனே பூங்கதலிப்பிஞ்சு
மத்திப்பின் பிஞ்சுடனே முத்தக் காசு
மகத்தியிலை முசுமுசுக்கை கீழ்க்காய் நெல்லி
சத்திச் சாரணை தூதுவளைமாதுளையின்
தருவான மலைதாங்கி தக்காளிவில்வம்
சித்தியுள்ள வல்லாரை கரிசலாங் கண்ணி
சிறுநெருஞ்சி பெருநெருஞ்சி சிறுபுள் ளடியே.

அடியான செருப்படியும் சிறுகீ ரைத்தான்
ஆம்பலோடு முள்ளிகொட்டி ஆகுநெய்தல் கிழங்கு
செடியான கண்டங் கத்திரியி னோடு
சிவமுருங்கை கருந்துளசி சிவந்தநா யுருவி

கடியான நிலம்புரண்டி செங்கழுநீர்க் கிழங்கு
கருதுநில வேம்புசிறு காஞ்சொறியின் பிஞ்சுப்
படியான குருந்தொட்டி ஆடா தோடை
பருத்திப் பிஞ்சுடனே. கதலிப் பூவே.

பூவான பொடுதலையும் பிரம தூது
புகளான நறுநின்றி ஓரித ழின்மூலம்
காவான செந்தொட்டி கன்னி சிறுபீளை
கானத்தாலம் விழுதுடனே கஞ்சாங் கோரை
நாவான அமிர்தவல்லி குழிமீட்டான்
நவத்தஅம்மான் பச்சரிசி விட்டுணு கரந்தி
தேவான கரந்தையொடு பழம்பா சித்தான்
சிவந்திருந்த யிலந்தையின் தம்பலமு மென்னே.

பலமான மூலிகைதான் வகைஒன் றுக்கு
பலமொன்று படிசலமா யளந்து விட்டு
செலமான தெட்டொன்றாய் வற்றக் காய்ச்சி
செய்ததுக்கு நாலிலொன்று நறுநெய் சேர்த்து
குலமான அதிமதுரம் கோஷ்ட்ட மேலம்
குருசாணி குந்திரிக்க நறுக்கு மூலம்
பிலமான திரிகடுகு திரிப லாதி
பேரான அதிவிடைய மரிசிவகை யாறே.

ஆறான மையோடு கலங்கொம்பு ருத்திராட்சம்
அதிகமாங் கெருடப்பச்சை சாத்திர பேதி
கூறான மருந்துவகை கால்பலமாய் வாங்கி
குமுறஅரை வெள்ளாட்டுப் பாலை விட்டு
சேறாகக் கலக்கியதைப் பாகு செய்து
திரிநாளில் மெழுகுபதஞ் சேர வாங்கு
வாறான கணபதிக்குப் பூசை செய்து
மைந்தருக்குக் காசெடைதான் வரிசை கேளே.

*(ஏடு.362-75)*

### *செரியா மாந்தம் - குறிகுணம்*

மிக்கக் காய்ச்சல் தலைவலியு
மிகவே வயறுந் தானூதி
தக்க மலமாக் கரைத்ததென்ன
சாலக் கழிந்து கண்ணுறக்கந்

தொக்கப் பங்கம் படுந்துயரஞ்
சோறுங் கீரைத் தண்டதுபோல்
சிக்கென் றிருக்கும் முகமாதே
செரியா மாந்த மிதுதானே.

*(ஏடு 941-15,4552-17,169-22) (புத்.476-48)*

போகுமே வயிறு பாலெனக் கழிந்திடும் பொருமுந்
தேகமுஞ் சுரமாய்க் குளிர்கண் டிடுந்தெவுட்டிச்
சோகமுந் தலைவயின் வலிவாந்தி யுந்தோன்றி
யேகமாயமுஞ் செரித்திடா மாந்தமென் றெண்ணே.

*(சர.வை.மு-19)*

## *1. ஓமக் குடிநீர்*

ஓமமுடன் கனகோட்டங் காசு தானும்
உயர்வசம்பும் கருக்கிட்டுக் கியாழ மாக்கிக்
காமமுடன் அருந்திடவே செரியா மாந்தம்
கழிச்சலுமே போமென்று கருதிச் சொன்னோம்
சாமமுட னுப்பலும்போம் வலியுந் தீர்ந்து
சதிருடனே யுண்டதெல்லாம் செரிக்கும் பிள்ளை
நாமமுள்ள சொற்கேட்டு நாமுஞ் சொன்னோம்
நலமாகும் புவியோர்க்கு நன்மை தானே.

*(புத்.477-64,476-48)*

## *2. குடிநீர்*

ஆமே வசம்பு சடாமாஞ்சி
ஆன வுள்ளி திரிகடுகும்
பூமே கருஞ்சீ ரகஓமம்
புகழ்சே ராமை யோடுடனே
தாமே யிடித்துப் பொடி யாக்கி
தண்ணீர் காய்ச்சிக் கொடுத்திடவே
போமே செரியா மாந்தமெல்லாம்
புறத்திட் டோடும் கண்டீரே.

*(ஏடு 169-23,4552-18,941-15)*

## *3. குடிநீர்*

முத்திய பிரண்டைச் சாறு
முதிர்வசம் போம மஞ்ச

எத்திரி கடுகு கூட்டி
 யடவுடன் சுண்டக் காய்ச்சி
பத்தியே பற்ப மான
 பதத்திலே நீர்விட்டுக் காய்ச்சி
துய்த்திட செரியா மாந்தந்
 தூரவிட் டேகுந் தானே. *(ஏடு.424-18)*

### *1. கற்கம்*

வேலிப்பருத்திச் சாறு ழக்கில்
 மீறும் வசம்பு திரிகடுகு
மாலிக்கோ ரோசினை ஐந்தும்
 வகைக்கு வராகனெடை யிரண்டு
வேலிக் கொழுந்து மேநான்கு
 வராக னரைத்துட் கொள் மாந்தம்
பாலர் வயிற்று வலிசெரியா
 மாந்தம் வயிறூதற் போமே. *(புத்.476-36)*

### *2. கற்கம்*

வேலிப்பருத்தி யிலை வாட்டிப்
 பிழிந்து மிளகு வசம்புள்ளி
சால அரைத்து நெய்துளிவிட்டுத்
 தானே யருந்த குணமாகும்
ஏலும் எருமை வெண்ணெயுடன்
 இசைந்த மருந்துடன் இஞ்சிக்கோலங்
கேளும் பெருந்தும்பைக்
 கூட்டி யருந்திடக் குணமாமே. *(புத்476-48)*

### *தலைமாந்தம் - குறிகுணம்*

தலையுங் கனத்துக் குடலூதிச்
 சரீரந் தன்னில் வலியுண்டாம்
குலையும் வலித்துத் துள்ளிவிழும்
 குளிருஞ் சுரமும் வியர்த்துவிடும்
சிலையின் புருவந் தலைநிமிரா
 சேஷ்டை மிகவே வலியுண்டாம்
மலைபோல் பருத்தத் தனத்தாளே
 வாதைப் படுத்துந் தலைமாந்தம்.

வயிறு கழியும் விதவிதமாய்
மார்பை வலிக்கும் பற்கிட்டும்
பயறு கடித்தாற் போல்தந்தம்
பதறிக் கடிக்கும் இசுப்பெடுக்கும்
கயிறு முறுக்கி விட்டாப்போல்
காலுங் கையுந் தானிழுக்கும்
எயிறு திறக்க மாட்டாது
இறங்கா தன்னந் தண்ணீரே. *(புத்.572-59-60)*

தன்னிமையால் நோயுதித்த வாறே தென்னில்
தன்வயது பத்தெட்டு இந்த நாட்குள்ளே
உன்னிமைக்குள் தீனியினால் கன்மத்தாலும்
உடம்பிலுள்ள சூட்டாலும் வினையி னாலும்
வென்னிமையால் நோயுதித்த வாறி தாகும்
விபரமென்ன காந்தாதிக் கியாழத்தேற்று
சென்னிமைக்குள் ஓடிவிடும் இக்கு ணங்கூர்
சூதில்லா நூலிதுதான் முந்நூ றென்றே.

அடக்கவே பெருக உந்தி
அதிகமாய் சுரமுந் தோன்றும்
முடக்கலு முகடு பார்க்கும்
மூரிகொட் டாவி யுண்டாம்
விடக்கமாம் இசிப்பெ டுக்கும்
விரையெழுந் திருக்கும் வேர்க்கு
அடக்கவுந் தலைமாந் தத்தை
யார்அறிந் தடக்க வல்லார். *(புத்.572-60-61)*

கைகால் குளிர்ந்து தரம்பொருமிக்
கனக்கப் பார்வை யுண்டாகி
மெய்தான் வேர்வை முகத்திலெழும்
விரைந்தே வலிக்கும் பலவிதமாய்ப்
பொய்யேப் பம்கொட் டாவியுடன்
புண்போல் நாசி நீர்வடியும்
மைசேர் விழியாய் தலைமாந்தம்
வந்த குணமிது கண்டாயே.
*(ஏடு 519-17,ஆர்.6218-13,362-19,
169-23, 4552-18,941-16).*

கூட்டுச் சந்துகள் தலைவலி வேர்வை கொட்டாவி
சாட்டி யத்தொடு தலைகனங் குலைவலி சவம்போல்
ஆட்ட மில்லாது குளிர்சுர மதிக மெய்யூதற்
காட்டி னால்தலை மாந்த மென்றதை யறிமாதே.
*(புத். 477-69) (சர.வை.முறைகள் - 18)*

### *இஞ்சி யெண்ணெய்*

செய்திட மாந்த எண்ணெயைச் சொல்வேன்
வைதிட விஞ்சி சங்குடன் சின்னி
கைதிடக் காணி கரந்தையும் வன்னி
நெய்திட வெல்லாம் நேராய்ப் பிழிந்திடே.

பிழிந்து சிற்றே ரண்டத்தி னெண்ணெய்
கலந்திட் டேயொரு கட்டையாற் றீயிடு
செலமறக் காய்ச்சிச் சிறுக இறக்கிடு
மெலிந்தநோய் தீர விளம்புவேன் கேளே.

கேளிடு மாந்த மலபந்த மாந்தம்
சேவிடு சலத்திற் செனிசிர மாந்தம்
பாலக ருண்ணப் பறந்திடும் பாரு
சீலக் கொடிய சீதளம் போகுமே. *(புத்.477-65)*

### *துவாலை*

வெதுப்படக்கி பேய்மிரட்டி தும்பை தானும்
வேலியிலை வெள்ளருகு வேரோ டுள்ளி
மதிப்புடைய சதகுப்பை தேசா வாரம்
வசம்புடனே திப்பிலியோர் நிறையாய் வாங்கி
கதிப்பவிதை நறுக்கிச்சார் உள்ளுக் கீய்ந்து
காந்தநிலத் தேபிழிந்து பிழிந்து கைகால்தம்
கொதிப்புவரும் வலுப்பகலும் துவாலை செய்ய
கூசாமல் தலைமாந்தங் குணமி தாமே.
*(ஏடு.169-23,362-19, 941-16,*
*ஆர்.6218-13, 519-17).*

### *திட்டு மாந்தம் - குறிகுணம்*

பேசுகிறேன் சுரங்காயும் தலைவ லிக்கும்
பெருவயிறு நொந்ததுவு மழுத லாகும்

நேசமுடனே யரைத்துக் கரைத்தாப் போல
நின்றுமலந் தானிரைந்து கழியும் பாரு
வாசமுட னித்திரையு மரைக்கண் ணாகி
மைந்தர்மிகத் தளர்ந்துலர்ந்து குழைந்து போகும்
*.........(கை.பி.98-144) (ஏடு.798-14)*

வயிற்றினில் மலமுஞ் சிக்கி
வறண்டது போலே யாகும்
சயித்திய முள்ளே யாகிச்
சார்ந்திடுஞ் சுரமு மிக்க
குயிற்றிடு மதனாற் பிள்ளை
கூவிடும் பலகா லாக
வயித்திய நீய றிந்து
மருந்துசெய் திட்டு மாந்தம். *(புத்.477-78)*

## *குடிநீர்:-*

வாசமுறுஞ் சடாமாஞ்சி லசுண மோதம்
வசம்பு கருஞ்சீரகமு மாமை யோடும்
ஓடுடனே திரிகடுகு சமனாய் வாங்கி
ஒன்றாகப் பொடித்து மிருநாழி நீரில்
போடுடனே தீயெரித்து உழக்காய் வாங்கி
புதல்வருக்கு யிருபொழுது பொறியா யூட்டு
நீருடனே மூன்றுநா ளாறு போது
நிகழ்த்தினால் மாந்த மற்றுப் போமே.
*(கை.பி.98-144)*

## *நெய்*

கூட்டுடனே இஞ்சிபெருந் தும்பை யின்சார்
கூட்டி மேதிநெய்யில் வெந்துகொள்ளப் போமே.
*(ஏடு.7313-13,798-15) (கை.பி.98-144)*

## *தகரை எண்ணெய்*

வெந்தவித் தூற்று கின்ற
விளக்கெண்ணெய் நாழி தன்னில்
அந்தந்த கரையின் சாறும்
அதுபடி யேதா னொன்று
தந்தநா யுருவி வேரும்
தைவேளை நாயின் வேளை

முந்தவே கொழுஞ்சி வேரும்
 மூக்கரைச்சா ரணையின் வேரே.

வகைக்கொரு வெலுமிச் சங்காய்
 அளவுசாந் தரைத்துக் கொண்டும்
பகைப்பிலா வசம்பு மோமம்
 பண்புகத் தூரி மஞ்சள்
மிதப்புடன் சரிவி ளங்கம்
 மிகுவகைக் கரைய தாகத்
திகைத்தவெள் ளுள்ளி தானுஞ்
 சேர்ந்திரு பங்கு கூட்டே.

கறுத்தசீ ரகமும் வெந்தயங்
 கடுகுரோ கணிவ கைக்கு
நிறுத்தொக்க வொருபங் காக
 நீர்விட்டுத் தான ரைத்து
மறுத்தசட் டியிற்க லந்து
 வகையுட னொன்றா யூற்றிப்
பொருத்திடு மெழுகு பாகம்
 பிழையற வடித்துக் கொள்ளே.

பிள்ளைக்குத் தக்க எண்ணெய்
 தானது புகட்ட இந்தப்
பிள்ளைத்தாய் தனக்கே உப்புக்
 கைப்புடன் தவிர்த்திட் டாக்கால்
தெள்ளிய திட்டு மாந்தம்
 சீரிய சுழிக ணந்தான்
நள்ளிரு வாயுட் காய்ச்சல்
 நளிர்மாந்தம் புரளி போமே.

*(புத்.477-78,79,476-53-54)*

### *துலைமாந்தம் - குறிகுணம்*

அடக்கிடாப் பெருகும் வாந்தி
 அதிகமாய் சுரமுந் தோன்றும்
முடக்கிடு முகக்க டுப்பாய்
 மூரிக்கொட் டாவி யுண்டாம்

விடக்குமேல் வலிப்பெ டுக்கும்
விரைவிரைத் திருக்கும் வேர்க்கும்
அடக்கிடாத் துலைமாந் தத்தை
அறிந்துநீ ரடக்கு வீரே.

*(புத்.477-67,476-50)*

'உதிர் கொட்டாவியுந் தாகமுமுடம் பெங்கும் வலியு
மதிர் சுரத்தொடு முகத்தினைப் பார்த்தழும் வியர்க்கு
முதிர் விலாப் பருத்ததிகமாய் மயங்கி முன் விழுந்தாற்
கதிர் கொள்வெந் தொலை மாந்தமென் றறிந்துகொல் கண்ணே'

*(சர.வை.முறை - 23)*

## விட்டுணுகரந்தைச் சுரசம்

கண்ணே சுக்குசிற் றரத்தையும் விட்டுணு கரந்தை
வெண்ணற் சானகி லவங்கப்பூ குட்டியின் விளாவும்
நண்ண வேசுர சத்திற்கத் தூரியை நாட்டி
யுண்ண வேதுலை மாந்தமு மொழிந்திடு முகந்தே.

*(புத்.477-68)*

## காந்தாதிக் குடிநீர்

விரண்டோடக் காந்தாதிக் குடிநீர் சொல்வோம்
மெய்யுதகம் பெருமருந்து சிற்றே ரண்டம்
மிரண்டோட நரிமருட்டி கோட்டான் சின்னி
மேலான கடுக்காயு மாசிப் பத்திரி
திரண்டோடப் பற்படகந் தான்றி முத்தம்
திரிகடுகு அதிவிடய மூசிப் பாலை
கரண்டோடக் கருக்கியிவை கொட்டிப் போட்டுக்
கருநீலி நிலவேம்பு போஸ்தக் காயே.

காயோடு பத்திரியின் தாளீ சந்தான்
கரியவேப் பிலைமுத்தம் சிற்றா முட்டி
ஈயேகத் தூளிடித் ததனிற் போட்டங்
கிரண்டுபடி தண்ணீர்விட் டெட்டொன் றாக்கிக்
காயோடு வயிரவனுங் கூடச் சேர்த்துக்
கக்கநீ யெடுத்தீயக் கணரோ கங்கள்
காயோடு வயிரவனுங் கூடச் சேர்த்து
வணங்கியே யோடுமிதில் வண்ணம் பாரே.

*(புத்.476-50,477-68)*

### *துவாலை*

பாக்களவு வெண்உயவை வேர ரைத்துப்
  பாவையிட முலைப்பாலில் கலந்தே யீயத்
தாக்கவே வயிறுபே திக்கும் பின்பு
  தயங்குவிளக் கெண்ணெயுடன் வசம்பு வேளை
ஆக்கொத்தான் திரிபலையுந் திரிகடுகு தானும்
  அங்கோலப் பொடியைப்போட் டெரித்து நக்க
மூர்க்கமுடன் சந்துதலை நெஞ்சில் தேய்க்க
  முறிந்தோடிப் போந்துலையின் மாந்தந் தானே.

*(புத்.476-50-51,477-68)*

### *தோடமாந்தம் - குறிகுணம்*

*(தோடமாந்தமும் மாந்த தோடமும் ஒன்றே)*

செய்ய கண்கள் மிகச்சொருகும்
  சீதந் தண்ணீ ராய்க்கழியும்
மைய மேனி கறுப்பாகும்
  மாங்காய் போல ஆசனமாம்
வையந் தேக மிகவிளைக்கும்
  வானம் போல வயிறாகும்
செய்ய தோட மிதுதானே
  தீரா தென்று தானுரையே
சேயி னுடம்பு மிகநாறும்
  செல்லா முலைப்பா லருவறுக்கும்
காயு முடம்பு கண்குழியும்
  கண்டா லிதுதா னறியாயே. *(புத்.477-82)*

### *1. வெங்காயச் சாறு*

ஈர வெங்காயமுடன் எழில்முடக்கொத்தான் இலையும்
பேராய் வெதுப்பிப் பிழிந்திட்டுச் சேரவே
மூன்று காசெடைபுகட்ட முனைமாந்த தோஷம்
ஊன்றுத லில்லாமல் பறந்தோடும்.

*(புத்.476-35,477-83)*

### *2. பச்சிலைச்) சாறு*

நல்வேளை இலைவசம்பு வள்ளித் தமாலம்
  நையவே நறுக்கி வெதுப்பிப் பிழிந்து

சல்லியமாங் குழந்தைகட்குப் பருவம் பார்த்து
தக்கக்கால் அரைமுக்கால் முழுச்சங் காக
புல்லவே புகட்டிடவே மாந்த தோஷம்
பொல்லாத வலியும் யிக்கட்டுந் தீரும்
அல்லளகப் பவளஇதழ்ப் பெண்ணே யிதை
அன்புடனே செய்தருமம் ஆக்க மாமே.

*(புத்.476-35)*

## *முருங்கை நெய்*

அன்னமே முருங்கைப் பட்டை யத்துடன்
மின்ன மேவெண் கருவும்வெள் ளுள்ளியும்
இன்ன மும்வேம்பி னெய்யிவை நாலுடன்
சன்ன மேசெய்து தைலமி றக்கிடே.

இறக்கி டுந்தயி லம்மிதிற் குத்தியே
உறக்கி டுங்கண்ணி லிட்டுற நாவினில்
துறக்கி டுந்தட வத்தோட மாந்தமும்
மிறக்கி டும்மிது மெய்ம்முறை கண்டிடே.

*(புத்.477-83)*

## *வெளி மருந்து*

சிறுபுள் ளடியும் வெள்ளுள்ளி
தின்னும் நற்கீழ்க்காய் நெல்லி
உறவாய் அரைத்துப் பிள்ளைதன்
துச்சில் தப்பி மிஞ்சினதை
நெறியிரண்டு மூன்று குளிகை
நேராய் உருட்டி நெடுஞ்சீலை
மறைவாய் அதனிலே முடிந்து
மாறுகை காலிற் கட்டே. *(புத்.476-35)*

## *நளிர் மாந்தத்திற்குத் தகரை எண்ணெய்*

வெந்தவித் தூற்று கின்ற
விளக்கெண்ணெய் நாழி தன்னில்
அந்தந்த கரையின் சாறும்
அதுபடி யேதான் ஒன்று
தந்தநா யுருவி வேரும்
தைவேளை நாயின் வேளை

முந்தவே கொழுஞ்சி வேரும்
　　மூக்கரைச் சாரணையின் வேரே.

வகைக்கொரு எலுமிச் சங்காய்
　　அளவு சாந்தரைத்துக் கொண்டும்
பகைப்பிலா வசம்பு ஓமம்
　　பண்புகஸ் தூரி மஞ்சள்
மிதப்புடன் சரிவி ளங்கம்
　　மிகுவகைக் கரைய தாக
திகைத்த வெள்ளுள்ளி தானுஞ்
　　சேர்த்திரு பங்கு கூட்டே.

கறுத்த சீரகமும் வெந்தயங்
　　கடுகுரோ கணிவ கைக்கு
நிறுத்தொக்க ஒருபங் காக
　　நீர்விட் டுத்தா னரைத்து
மறுத்த சட்டியிற் கலந்து
　　வகையுட னொன்றா யூற்றிப்
பெருத்திடு மெழுகு பாகம்
　　பிழையற வடித்துக் கொள்ளே.

பிள்ளைக்குத் தக்க யெண்ணெய்
　　தானது புகட்ட இந்த
பிள்ளைத்தாய் தனக்கு உப்புக்
　　கைப்புடன் தவிர்த்திட் டாக்கால்
தெள்ளிய திட்டு மாந்தம்
　　சீரிய சுழிக ணந்தான்
நள்ளிரு வாயுட் காய்ச்சல்
　　நளிர்மாந்தம் புரளி போமே.

*(புத்.476-53-54,477-79)*

### *நீர்மாந்தம் - குறிகுணம்*

நளிருங் குளிருஞ் சிலுத்துவரும்
　　நாவில் நீரு மோக்காளம்
கழிந்து வயிறு மிகப்பொருமும்
　　கைகால் மெய்யுந் தினவெடுக்கும்

மெலிந்த உடம்பு மிகப்பருக்கும்
  மெதுவாய்ப் பேசும் மூர்க்கமதாம்
தெளிந்து சிரிக்கும் நீர்மாந்தஞ்
  செய்யுங் குணங்க ளிதுவாமே.

*(ஏடு.169-27,798-13,519-20, 6218-16,362-22)*

தலையது நோவாய் முகமது மினுக்குந்
தவிக்க வேமலஞ் சிறுத் திட்டு
முலையது முகவா துடம்பெலாங் குளிர்ந்து
மூத்திரங் குறிகடுத் திறங்கும்.

*(புத்.476-43) (கை.பி.98-143) (ஏடு.798-13)*

அறுதி யாகமெய் முழுவதும் வேர்வையே மிகுந்து
உறுதி யாய்க்கழிந் திடுதனீ ரிறங்குத லுதரங்
இறுதி யாய்த்தலை வலிமுக மினுமினுப் பிரைச்சல்
குறைவி லாக்குலை வலிகள்நீர் மாந்தத்தின் குணமே.

*(புத்.477-60)*

அறுதியாக மெய்யாதியந்தம் வியர்வையே மிகுந்து
இறுதியாய்த் தலைவலி முகமினுமினுப் பிரைச்சல்
உறுதியாய்க் கழிந்திடு தனீறிறங்கு தலுதரங்
குறைவிலாக் குலைவலிகள் நீர்மாந்தத்தின் குணமே'

*(சர.வை.முறை - 19)*

தலையது நோவாய் முகமின்னி
  தண்ணீர் போலே மெய்குளிர்ந்து
முலையது முசுவா உடம்பெல்லாம்
  முத்து போலே நீர்பாயும்
குலையது முட்டி நீரிறங்கும்
  குறுகுறெனப் பின்வயிறு விடும்
மலைபோல் திரண்ட முலைநல்லாய்
  வகுத்தே சொன்னோம் நீர்மாந்தம்.

*(புத்.572-58,59)*

### *நொச்சிச் சுரசம்*

நொச்சியிலை வேளையிலை குப்பை மேனி
  நுணாவிலையும் பேய்மருட்டி தும்பை யோடு
பச்சிலையாய்க் கொண்டுவந்து வெதுப்பி யேதான்
  பதமாகச் சாறுவரப் பிழிந்து கொண்டிங்

குச்சிதமாய் மிளகுள்ளி வசம்போ டோமம்
உகந்துவரு முதற்சாற்றி லரைத்துக் காய்ச்சி
நிச்சயமாய்ப் பாலகர்க்குக் கொடுக்க வேதான்
நீர்மாந்தம் போகுநித்த முனிசொன் னாரே.
*(புத்.477-61)*

### *1. குடிநீர்*

நொச்சியிலைத் துளசி செம்முள்ளி காரி
நுகர்தூது வெதுப்படக்கி னோடு வேலி
பஷ்சமுட னோரளவு பிட்ட தாக்கிப்
பரிவாகத் திரிகடுகு பகர்வெண் காரம்
கச்சணிந்த முலைமடவீர் தீயில் வைத்து
கடிதாகவே யரைத்துக் கலந்த நீரை
அச்சமன்றிச் சிறுவோர்க ளருந்த வேதா
னகலும்நீர் மாந்தமென் றருளி னாரே.
*(ஏடு.169-27,6218-17,519-20,362-23)*

### *2. குடிநீர்*

உரைத்திடுங் கஞ்சாங் கோரை
யோங்குபொன் முசுட்டை வேளை
நிரைத்திடும் வசம்பு மஞ்சள்
நேரிரண் டோடுங் கூட்டி
வரைத்ததைக் கியாழம் வைத்து
வளர்பெருங் காயம் தோய்த்துக்
கரைத்ததைக் குடிப்பீ ரானால்
கழன்றுநீர் மாந்தம் போமே. *(ஏடு.424-11)*

### *3. கருநீலிக் குடிநீர்*

மாந்தம் போகக் கருநீலி
மகத்தாஞ் செவ்வியங் கியாழமிட
வாய்ந்த நோயு நீர்மாந்தம்
வணங்கி யோடும் பண்டிதரே
தோய்ந்த விதுதான் அறிவீர்கள்
சொன்ன மொழியுந் தப்பாதிங்
கேந்து மிழையீ ரிந்நூல்போல்
எவருஞ் சொல்லார் அறிவாயே.
*(புத்.477-61,476-43)*

### கற்கம்

குணநுணா நொச்சி குப்பை
மேனியும் பேய்ம ருட்டி
இணர்தும்பை நல்ல வேளை
யிந்தவா றையுங்க சக்கிக்
கணவசம் புள்ளி யோம
மின்னான் கையுங்க ரைத்து
மணங்கொள் பிள்ளைக் கீய
கடுமாந் தங்கள் தொடராதே. *(புத்.477-63,476-43)*

### இண்டு பிட்டவி நீர்

கலக்கமறத் திப்பிலியு மிளகுத் தூளும்
கனமான இண்டிலையும் பிட்டவியல் செய்து
நலங்காமல் திரிபொழுது வார்த்தா யானால்
நாடிவந்த சலமாந்தம் நடுங்கிப் போமே.
*(புத்.477-62,476-44)*

### 1. எண்ணெய்

பாரடா வெதுப்படக்கி அம்மான் பச்சை
பரிவான நுணாசங்கன் குப்பி யோடு
ஊரடா சாணாக்கி வகைக்குச் சாறு
ஓர்வகைக்குக் கால்படிதா னளந்து விட்டுந்
சீரடா ஏரண்டத் தெண்ணெய் நாழி
சேர்வசம்பு லசுணகுள விந்த மொன்று
வாரடா பலமரைதா னிடித்து முற்சார்
வார்த்தரைத்துக் கலக்கி யடுப்பேற்றி டாயே.

எரித்ததனை மெழுகுபதம் தன்னில் வாங்கி
இதமான கலசமதில் வண்டு கட்டி
பிரித்ததனைச் சிறுவருக்கோர் கரண்டி வீதம்
பிசகாமல் மூன்றுநா ளந்தி சந்தி
கருதியதைக் கொடுத்துவிடு பத்தி யந்தான்
காத்திடவே தீரும்நோய் கருத்தாய்க் கேளு
பிரித்ததொரு நீர்மாந்த தோஷ மெல்லாம்
பிசகாது யிதுநிதமாய்ப் பேசும் நூலே.
*(எடு.798-14), (கை.பி.98-143-144)*

பார்க்கவே வெதுப்படக்கி சிற்றம் மானின்
பச்சரிசி பீநாறி நுணாசா ணாக்கி
வார்க்கவே வகைக்குநீர் படிகா லாகும்
வளமதாக எண்ணெயது நாழி யொன்று
தீர்க்கவே வசம்புள்ளி மஞ்ச ளுந்தான்
சேர்த்துவகைக் கரைப்பலமாய்க் கூடக் கூட்டிக்
காக்கவே கடுகுதிரள் பதத்திற் காய்ச்சிக்
கரண்டியிட மூன்றுநாட் சலமாந் தம்போம்.

*(புத்.477-61,476-43-44)*

## *2. மிளகெண்ணெய்*

மலைமருந் தீர உள்ளிமூக் குரட்டை
வயங்குசா றொவ்வொன்றோ ருழக்காய்க்
குலவிளக் கெண்ணெய் தனிலெரித் தருந்தக்
கொட்டுநீர் மாந்தமுங் குணமே.

*(புத்.477-61)*

## *3. சீதேவி செங்கழுநீர் எண்ணெய்*

சீறிய ராக்ஷசன் சிறையினில் வைத்த
நாரியின் நல்லிலை நாட்டிலுள் ளோரை
மீறிய மருட்டிலை வீறுடன் இரண்டுங்
கூறிய இதனைக் குணமுடன் நம்பே.

நம்புவது வெதுப்படக்கி காக்கை மல்லி
நல்லிலையுஞ் சமனாகச் சாறு வாங்கி
வெம்பியதோர் வேல்விழியாள் மீதுறையும் வேரும்
வெகுவாச முடையோகி குதிரைப் பல்லன்
துண்டமதாய் நறுக்கிடுவாய் கழஞ்சு வீதம்
தூக்கிடுவா யெண்ணெய்சேர் சமனாய்ச் சேர்த்துத்
தென்புடனே எரியிலிடு மெழுக தாகத்
தினமொரு காசெடையாய்க் குலுக்கி டாயே.

குலுக்கிடுவாய் முலைப்பாலில் மூன்று நாளுங்
கூப்பிட்டே யோடிவிடுஞ் சலமாந் தந்தான்
அலக்கமுறும் பிள்ளைமாந் தளிர்போ லாகும்
அதனைவிட் டின்னமோ ரடைவு கேளாய்.

*(புத்.476-44,477-62)*

### 4. வெள்ளெண்ணெய்

சிற்றா மணக்கெண்ணெய் பலம்பத்து
திகழும் பூரம் வராகனொன்று
வற்றாச் சுத்தி தான்செய்த
வாளம் வராக னெடையிரண்டு
பற்ற வெள்ளை மிளகதுவும்
பகரும் வராக னெடையிரண்டு
கற்றைக் குழலா ளேலவங்கங்
கதித்த வராக னெடையிரண்டே

எடையே கொஞ்சம் எண்ணெயைவிட்
டிதமா யரைத்தெண் ணெயிற்
தடையில் லாம லொருகரண்டி
தானே மூன்று நாட்கொடுக்க
மடைபோல் திறந்த சலமாந்தம்
மாறிப் போகு மடவன்ன
நடையாய் பொரிமிள கின்னீரும்
நல்ல சாதமு முண்டுவிடே.

*(புத்.476-44,477-62)*

### நீர்க்கண மாந்தம் - குறிகுணம்

இருமும் மூக்கில் நீர்வடியும்
இடையில் இடையில் சுரங்காயும்
பொருமி வயிறு இரைச்சலுண்டாம்
போத பலவித மாய் கழியும்
சொருகும் கண்ணும் உடம்புமுகம்
சோர்ந்து தலையும் புரட்டலுண்டாம்
மருவி மயக்கம் உண்டாகும்
வருகு நீர்க்கண மாந்தமுமே. *(புத்.476-76,477-82)*

### உருண்டை

அருளினார் அமிர்தமெனுங் குளிகை தானும்
அதிமதுரம் சண்பகப்பூ ஏல மோடு
திருவுகோ ரோசினையுஞ் சாத்திர பேதி
சிறந்தவெட்டி வேர்க்கோஷ்டம் மாசிப் பச்சை
திருவெனவே விலாமிச்சம் வேருங் கூட்டிச்
சரியாக ஆதொண்டைச் சாறு விட்டுப்

பருவமதாய் ஒருசாமம் அரைத்துக் குன்றிப்
பருமனாம் முலைப்பாலிற் பருகி டீரே.
*(புத்.476-76-77,477-82)*

### *பால் மாந்தம் - குறிகுணம்*

கண்ணுங் குழியும் செவிதாழும்
கருத்து மயங்கிக் கோழையுண்டாம்
புண்போல் உதரந் தானொந்து
புளித்தே கழியும் வயிறூதும்
பண்ணார் மொழியும் பால்மாந்தம்
பாரில் இந்நோய் தீரவென்றால்
அந்நாள் ஆவின் நெய்தனிலே
அன்பாய் வைக்குந் திறஞ்சொல்வோம்.
பாலதைக் கழியும் பாலதை யெடுக்கும்
பாரதவித் திடும்பல விதமாய்
சாலவே கரங்கால் வெதும்பிடுங் குளிருந்
தலையெடுத் திராமலே மயங்கும்

மெய்கொள் பாலுபா லாய்க்கழிந்
திடுமுகம் வேறாகக்
கைகள் கால்களும் வெதுப்பிடும்
வாந்தியபால் காணுஞ்
செய்யக் கண்களும் வளையமாஞ்
சிரமெடுத் திராது
உய்ய மாந்தம்பால் மாந்தமென்
றேயறி யுடனே. *(புத்.477-66), (கை.பி.98-138),*
*(ஏடு.7313-5). (சர.வை.மு-21)*

மாந்தஞ் செய்யும் குணங்கேளு
வயிறு பொருமு மிரைப்புண்டாம்
ஆந்தை போலே முழித்திருக்கும்
ஆவின் பாலும் சந்திக்கும்
வேந்தர் வேம்பின் பூப்போலே
விதமாய்க் கழியுந் தாகிக்கும்
ஏந்துந் தனத்தாள்விழி சொருகும்
இயல்வா யிடறும் புண்ணாமே.
*(ஏடு.7313-4), (கை.பி.98-137)*

### உத்தாமணிக் குடிநீர்

உடனுத் தாமணி சுக்குடன் வசம்புள்ளி மிளகு
திடமதாஞ் சடா மாஞ்சிலுங் குட்டியின் விளாவுங்
கடம தாங்கியா ழங்களாய்ச் செய்கம டத்தின்
வடிகொள் பற்பமிட் டருந்தப்பால் மாந்தமு மகலும்
*(புத்.477-67)*

### பொடுதலைக்காய்க் கற்கம்

சீலமாய்த் தாயார் லங்கண மிருந்து
திகழ்பொடு தலையின்காய் வறுத்து
கோல விந்துப்பு வசம்புள்ளி மிளகு
கொள்சமன் கொடுத்திடக் குணமே. *(புத்.477-66)*

### பொடுதலைக்காய்க் கற்கம்

ஓதும் பொடுதலைக்காய் வசம்பு
ஓங்கும் பூண்டு மிளகுடனே
மேவு மிந்துப்பொடு சமனாய்
வேக வறுத்துக் கிஷாயமிட்டு
கோதும் கிஷாயமதனி லிறுத்துக்
காடுக்க மாந்தம் தான்தீரும்
நீதும் வயித்தியர் தானறிய
நிறையா யுரைத்தோம் செந்திருவே. *(கை.பி.98-137)*

### 1. நெய்

உண்டா மிதற்குப் பரிகார
முகந்த மேதிநெய் யுழக்கில்
பண்டே வேலிப் பருத்தியின்சார்
பகரும் பாதி யதில்விட்டு
கண்டார் குழலே வெள்ளுள்ளி
கதிக்க ரெண்டு கழஞ்சிட்டுக்
கொண்டே காய்ச்சிக் கொள்வீரால்
கொடிய மாந்தம் குடிபோமே.
*(கை.பி.98-137), (ஏடு.7313-5)*

### 2. பால் மாந்தத்திற்கு நெய்

கோதே கேளாய் மாந்தநெய்யைக்
குலாவு மேதி நெய்யுழக்கு

போதே வேளையு முருக்கு
  பொடுதலைப் பருத்தியின் சாறுசமன்
மீதே ஏலம் விளாவரிசி
  மிக்க கிராம்பு வசம்பிவையும்
தூதாய் வெந்தய மதுரமுள்ளி
  திரிகடு கீரைந் ததுவாட்டே.

வாட்டமா மிவைக ளெல்லாம்
  வகைக்கரை கழஞ் சதாக
கூட்டியே அரைத்து நெய்யில்
  கூர்மையாய்க் கலந்து காய்ச்சி
மீட்டியே மெழுகு பத
  மின்பமாய் முதிர வெந்து
நாட்டியே வடித்துப் பின்னே
  நாளறு பானங் கேளே.

உச்சிதனிலும் விலாப் புறமு
  முகந்து தடவி யுள்ளுக்குக்
கச்சீர் முலைப்பா லானதிலே
  கறந்து நெய்தான் காசளவு
உச்சீர் விட்டங் கினிதுண்ண
  ஒடு மாந்த மிவையெல்லாம்
துச்சீர் துட்டுந் தான்தீரத்
  துய்ய பொடுதலைச் சாற்றிலிடே. *(கை.பி. 98-138)*

### *பாலாடை மாந்தத்திற்கு மருந்து*

வசம்புடனே மயிலிறகுச் சாம்ப லாக்கி
  வசமாக வேப்பீர்க்கில் முலைப்பால் வார்த்து
கசமாக நறுக்கியதன் ரசத்தை வாங்கி
  காலமே தினமொரு துளிதான் கூட்டி
நிசமாகச் சீரகமுங் கிராம்பு சேர்த்து
  நிண்ணயமாய் நிம்பவித்து மேலே தூவி
வசமாக வேயிதனை யருந்த மாந்தம்
  வல்ல பொருமலோடு வாந்தி போக்கே.

*(ஏடு 941-17)*

### *பித்த மாந்தம் - குறிகுணம்*

ஆமே பித்த மாந்தகுணம்
அடுத்தே வாந்தி பேதியுமாய்
தாமே மூர்ச்சையாய்க் குரலுந்
தயங்கிக் கம்மலாகி விடும்
போமே மேனி மஞ்சளித்துப்
பசியும் வேர்வை யாய்க்கடுக்கும்
வாமே குழவி தேகமெங்கும்
வலிக்குங் குளிரு மயக்கிடுமே. *(புத்.476-28)*

### *பித்த மாந்த குறிகுணம்*

சொல்லுகிறேன் வாந்தியொடு பேதி யுண்டாம்
சுருக்கான மூர்ச்சையது மிகவுங் காணும்
அல்லுகிறேன் குரலதுவுங் கம்ம லாகி
அழகான மேனியெல்லா மஞ்சளித்து
பல்லகியே வேர்வையொரு தான்கு ளிர்ச்சை
பகருபித்த மாந்தகுண மிதுதான் பாரு
நல்லமா யறிய பண்டி தர்க்கு
நேர்மையுடன் தானுரைத்தார் நினைவி தாமே.
*(ஏடு.7313-3,798-3) (கை.பி.98-135)*

### *குடிநீர்*

தாமென்ற வேர்க்கொம்பு அசம தாகம்
தைவேளை வேர்வசம்பு வெந்த யந்தான்
நாமென்ற ஓரெடைதான் நிறுத்து வாங்கி
நல்பருவ மாய்வறுத் திடித்துக் கொண்டு
ஓமென்ற நாழிநீ ரெட்டொன் றாக்கி
உத்தமனே மூன்றுநா ளந்தி சந்தி
தாமென்ற பாலகர்க்கு புகட்டி னாக்கால்
தம்பித்த வாதமது தவற லாச்சே.
*(ஏடு.798-4,7313-3) (கை.பி.98-135)*

### *பேய் மாந்தம்-குறிகுணம்*

இடுப்புடன் கைகால் நெற்றி
இம்முகம் பிழியு மூக்குப்
பிடித்திடும் பிடரி தன்னைப்
பின்னித்தாள் நரம்பைப் பற்றி

வடிப்புடன் வலிப்பி மூப்பு
வாயினால் நுரைநீர் விழும்
படித்தகல் அல்கு லாளே
பாருபேய் மாந்தந் தானே.

அணங்கி டுப்புகை கால்துடை யானை மூக்கு
வணங்கு பின்பிடர் நரம்பிவை யெட்டிலும் வலிக்கும்
இணங்கும் வாய்நுரை மயக்கமும் பிதற்றல்கீ ழிழுத்தல்
கணங்கொள் பூதப்பேய் மாந்தமென் றுகந்து கண்டறியே.
*(புத்.477-81,476-56) (சர.வை.மு-23)*

*சுரசம்*

கண்ட காட்டாத்திப் பூத்தும்பை விட்டுணு கரந்தை
விண்ட மேனியுத் தாமணி துளசிபேய் மருட்டி
கொண்ட சுக்குடன் சுரசமாய் கோமதங் கூட்டி
யுண்ட போதுபேய் மாந்தங்க ளகன்றிடு முதிர்ந்தே.
*(புத்.477-81)*

“இப்பேய் மாந்தத்துக்கு
வல்லாரை நெய்கொடுக்க மிகநன்மை”
*(புத்.476-56)*

*போர் மாந்தம் - குறிகுணம்*

மாந்தம் நீருடம்பு வற்றி
வயிறது பொருமிக் காயும்
விந்தையாம் மலங்கனி விட்டு
விட்ட டைத்துக் கொள்ளும்
உந்தியில் கடுப்புச் சீதம்
ஒழுங்கியே புறங்கால் வீங்கும்
வந்தபோர் மாந்தந் தானும்
வதைத்திடு முயிரைத் தானே. *(ஏடு.7313-13)*

பொருமுங் கடியும் புரண்டுவலி யுண்டாம்
மருவிமுலை யுண்ணா மயங்கும் - வெருவிமிகச்
சத்திசெயுங் கட்குழியுந் தாக மிகவெதுப்பும்
வற்றிடும் போர்மாந்த மாம்.

போர் மாந்தத்தின் குணங்கேளாய்
பொருமிப் பொருமி வயிறொழுகும்
மார்பிற் றுடிக்குந் தலையசைக்கும்
வயிறு வலிக்கு மிகச் சோரும்
நேரே சக்தி யுண்டாகும்
நெற்றி நரம்பு புடைத்திருக்கும்
பாரோர் அறியப் பாலகர்க்குப்
பரிந்தே யிதனைப் பார்ப்பாயே.

*(ஏடு.6218-14,362-19-20)*

வாயுட னெஞ்சு லர்ந்து
வயிறது கழிச்ச லாகும்
சாயவே யுடம்பு சோர்ந்து
சடுதியிற் பொருமி யூதும்
காயமும் வாடித் தானும்
கண்களு மலர்ந்து மூடும்
மாயப்போர் மாந்த மென்று
வகுத்திடு தெரியத் தானே.

ஏற்றே யிருந்து மிகக் - கழியும்
இடையிற் சுரமுந் தான்தோன்றும்
தோற்றும் உடலைத் தான்உருக்கும்
தோன்றும் விலாவு முதுகெலும்பும்
வேற்றோர் உடலாய்ச் சத்தியுண்டாம்
மிகுந்த மலமு மேயொழிக்கும்
கூற்ற னாகும் போர்மாந்தக்
குணமாஞ் சுதற்குப் பொல்லாதே.

பூச லாய்ச்சுர மடித்துடல்
கரைந்துபோங் கூடாய்
வாச மாய்க்கழிந் துதடுக
ளுலர்ந்துவாய் நுரையாய்
நீச வாந்தியுங் கண்குழி
யுடனெஞ்சு புண்ணாய்
ஊச லாகும்போர் மாந்தமென்
றேயறி முனமே.

*(புத்.477-55-56) (சர.வை.முறை - 22)*

### *உத்தாமணிச் சுரசம்*

முனமுத் தாமணி சுக்குத்
திப்பிலி முதிர்தும்பை
பினுங்கே ளிந்துப்புசானகி
பேயையு மருட்டி
நனிகொள் சீரகம் பொடுதலை
கோமதம் நாட்டிப்
புனித மோடுட னருந்தப்போர்
மாந்தமுந் தொலையும் *(புத்.477-58)*

### *உத்தாமணிச் சாறு*

உப்பை வறுத்துக் கொட்டியபின்
உத்தா மணியுந் தும்பையிலை
செப்ப மான வெற்றிலையுஞ்
சேரச் சமனாய் வதக்கியதை
நுட்ப மாக நீர்வாங்கி
நொடியில் கூனன் வசம்புரைத்து
அப்பக் கொடுக்கப் போர்மாந்த
மகலு மென்று அருளினரே.
*(எடு.362-21,519-18,169-25),*
*(புத்.476-46,477-56)*

### *1. ஆமை ஓடு கருக்குக் குடிநீர்*

கூனன் முதுகு வசம்புள்ளிக்
கூறும் ஓம நுணாவேலி
மானே பொடுதலை வாரடையும்
வளரும் வெற்றி லையின்காம்பும்
கானே கிராம்பு கருக்கிவிட்டுக்
காய்ச்சி சவலைப் பிள்ளைக்குத்
தானே கொடுக்கப் போர்மாந்தம்
தங்கா தோடிப் போய்விடுமே.
*(புத்.477-57,476-47) (எடு.519-18,362-20)*

### *2. ஈர்க்குக் குடிநீர்*

நொச்சி ஈர்க்கு நுணாயீர்க்கு
நுவல்மா யீர்க்கு புளியீர்க்கு

மிச்ச மான வேப்பீர்க்கு
மீறுங் கொடிவேலி யினீர்க்கு
இச்சைப் பொடுதலை யின்கொடியும்
இதமாய் வகைக்கோ ரொருபிடியும்
கெச்சைப் பூண்டு துட்டெடைதான்
திப்பிலி துட்டெடை யொன்றாமே.

ஆமே பாண்டத் தினிலிட்டே
அப்பு நான்கு படிவிட்டுக்
காமே தானரைப்படியாகக்
காய்ச்சி யொருசங் கந்திசந்தி
போமே மூன்று நாள்கொடுக்கப்
போர்மாந் தம்விட் டேபோகும்
தாமே இச்சாப் பத்தியஞ்செய்
சகல நோயுந் தான்போமே. *(புத்.477-58,476-47)*

### *1. கற்கம்*

பாவட்டக் கழக்கொடியும் பானுயிது மூன்றும்
போவெட்டி மாவேறும் பொங்கமாய் - நீகொட்டைப்
பாக்களவு வெந்நீரில் பாலகருக் கீய்ந்திடவே
பேர்க்கும் போர்மாந்த மேபோம்.
*(ஏடு.169-31,476-46,477-55)*

### *2. கோழிக் கல்லீரல் கல் கற்கம்*

கோழிக்கல் லீர ற்கல் கூறுநற் சீரகமும்
தாழ்வில்லா இலவங்கந் தானரையாய்த் - தோழிகேள்
பாலில் அரைத் துண்ணப் பாரிற்போர் மாந்தம்
வார்க்கு. மாந்தம் போமாம். *(புத்.476-46,477-56)*

### *ஓமச் சூரணம்*

தின்னசம தாகத்தைச் செவ்வறுப்பாய்த் தூளாக்கி
வெந்நீர் முலைப்பாலில் மேற்பொடியிட் டுண்ணப்
பொருமல் கழிச்சல் போர்மாந்தம் வாந்தி
ஒரு நொடியிற் போமென் றுரை. *(புத்.476-46,477-55)*

### *1. நெய்*

மங்காத படர்பருத்தி பெரிய தும்பை
வளர்முருங்கை பொடுதலை வனத்தக் காளி
தங்காம லோரொன்றோர் படியின் சாற்றில்
தனிமேதி வெண்ணெய் கால்படியும் கூட்டி
சிங்கார மிளகுமஞ்சள் வசம்பு சுக்கு
திப்பிலி வெள்ளஉள்ளி செவலக்காரம்
பங்காமல் வெந்துமொரு பாக் களவு
பகர்ந்திடுகில் போர்மாந்தம் பறந்து போமே.
*(ஏடு.601-3)*

### *2. நெய்*

போர் மாந்தந் தீரக் கேளீர்
புகழுமே ரண்டெண்ணெய் உழக்கினோடே
பார்தெங்கின் தேங்காய்ப் பாலும்
பசுவின்பால் உழக்கு சேர்த்து
தேர்தங்கு குமரி வேளைவேரும்
கொன்றைத்தோல் கழஞ்சி ரெண்டு
சேர்தங்கும் வெப்பா லரிசி
வெள்ளுள்ளி வசம்பு கூட்டே.

கூட்டு கள்ளிப் பாலுடனே
கொண்டோ ரொன்றோர் கழஞ்சாய்
நாட்டி யரைப்பால் எண்ணெயுடன்
நலமாய் வெந்து பதத்திறக்கி
ஊட்டு மெண்ணெய் காசளவு
உகந்து முலைப்பால் சேர்த்தருந்த
தீட்டும் பெரிய போர்மாந்தம்
திடமாய்த் தீரும் மாந்தமென்றே. *(ஏடு.7313-14)*

### *1. காட்டு மல்லிகை எண்ணெய்*

காட்டு மல்லிகை ஈருள்ளிக்
கருஞ்சீரகமும் கடுக்காயும்
நாட்டுக் கடுகு ரோகணியும்
நல்ல வச்சிரப்பால் விளக்கெண்ணெய்
கூட்டி எரித்துப் பாலகர்க்குக்
கொடுக்க மாந்தம் போர்மாந்தம்

ஓட்டிவிடுங் காண் இந் தெண்ணெய்
உலகோர்க்குண்டு செய்து கொடே.
*(புத்.476-46,477-56)*

### *2. சத்திச் சாரணை எண்ணெய்*

ஏறுஞ் சத்திச் சாரணைவேர்
இதமாய் எண்ணெய் ஓருழக்கு
தாறுங் கூனன் முதுகுள்ளித்
தனித்த வசம்பு வராகனெடை
ஏல அரைத்து எண்ணெயுடன்
எரித்து பாலர்க் கீந்திடவே
சோரு மாந்தம் போர்மாந்தம்
சொல்லா தோடிப் போய்விடுமே.
*(புத்.476-46,477-56-57)*

### *மருந்து*

வசம்புடனே மயிலிறகு சாம்ப லாக்கி
வசமாக வேப்பீர்க்கில் முலைப்பால் வார்த்துக்
கசமாக நறுக்கியதைப் பிழிந்து சற்றே
காதலுடன் தேனையொரு துளிதான் கூட்டி
நிசமாக சீரகமுங் கிராம்பு சேர்த்து
நிண்ணயமாய் நிம்பவித்து மேவக் கூட்டி
வசமாக வேயிதனை யருந்த வேதான்
வல்லபோர் மாந்தமுடன் வாந்தி போமே.
*(ஏடு.ஆர். 6218-14,519-18),*
*(புத்.476-47,477-57)*

### *மாந்த சன்னி - குறிகுணம்*

மாந்த சன்னி கூடி
வயிறது கழிச்ச லாகுங்
காந்திய செவிமந் திக்குங்
கண்ணது வளையு மிட்டுச்
சேர்ந்திடு மரைக்குங் கீழே
சிறுத்து வீறிப் பாகும்
போந்திடு மாந்த சன்னிக்
குணமெனப் புகலு வாரே. *(ஏடு 424-16)*

### *பூண்டாதிச் சாறு*

சிறுகளா இலையும் வெள்ளுள்ளி
சேர்ந்த வசம்பு மோமமுடன்
அறிவா யிடித்து நீர்வாங்கி
அரிய துவளையிட் டுள்ளுக்கும்
நெறியாய்க் கொடுக்க நாள்மூன்று
நிகழ்பதி னெட்டு மாந்தசன்னி
தெறிபட் டோடு நோயெல்லாம்
சிரசு.முதல்தோ டமும்போமே. *(புத்.477-74)*

### *எண்ணெய்*

பொருந்திய வேளை வேரும்
புகல்சங்கு முருங்கை வேரும்
திருந்திய மாவி லிங்குந்
திகழ்குழி மீட்டான் வேரும்
வருந்திய சித்த ரத்தை
வளருள்ளி யோமம் மஞ்சள்
செருந்தவே யரைத்து கற்கஞ்
செய்துமென் பொடியு மிட்டே.

இட்டதோர் கற்கத் தோடே
இயலண்டத் தயிலஞ் சேரு
சுட்டவேப் பெண்ணெய் காயஞ்
சுடருள்ளித் தயிலத் தோடு
கட்டிய லிங்கர் தேய்த்துக்
கனம்பெற வார்க்கும் போது
திட்டமா மாந்த சன்னி
தீர்ந்திடு மென்று சொன்னார். *(ஏடு.424-17)*

### *வேர்ப் புகை*

கஞ்சா வேரு மூமத்தை
கடிய தராவின் தன்வேரும்
பஞ்சா யிவைகள் வேப்பெண்ணெய்ப்
பைய வறுத்துப் பொடியாக்கித்
துஞ்சா நெருப்புப் புகைகாட்டத்
தோற்றும் சன்னி அத்தனையும்
மஞ்சார் குழலாய் அடிதொழுது
மாய்ந்தே போகுங் கண்டாயே. *(புத்.477-73)*

### *முக்கு மாந்தம் - குறிகுணம்*

அதுவா முக்கு மாந்தகுறி
அறையக் கேளாய் திருக்கறவே
நிதமுங் குழலி முக்கிமுக்கி
நின்றே கழியுஞ் சீமலமும்
புதிய சுரமு மேலாகிப்
பின்கால் வீங்கு முழலையுமாய்ச்
சதைதோ லெலும்பு நரம்புருகத்
தழலா யுலர்த்தி யுருக்கிடுமே. *(புத்.476-52,477-72)*

### *கற்கம்*

ஓமந் திப்பிலி மிளகுள்ளி
ஒடுங்கி ஓடும் சமனாக
நாமச் சீலை தனில்முடிந்து
நாழி நீர்விட் டெட்டொன்றாய்
வாமம் காய்ச்சி முன்முடிந்த
மருந்தை அவிழ்த்து தானரைத்துத்
தாம மூன்று வேளைநல்க
சகல மாந்த மும்போமே. *(புத்.476-52,477-72)*

### *வறள் மாந்தம் - குறிகுணம்*

தோலுந் திதங்கி யுடல்வெளுத்துச்
சுழலு மயக்க முண்டாகும்
பாலு மடுக்கு மெய்யிளைக்கும்
பார்க்கும் போது பலகுணமாம்
காலுங் கையுந் தான்வற்றிக்
கடுப்பும் வலிப்புங் காண்பித்தே
வாலர் தம்மை யுருவழிக்கும்
வறள்மாந் தத்தின் குணமிதுவே. *(புத்.477-77)*

### *சடாமாஞ்சில் குடிநீர்*

மானனாய் சடாமாஞ்சில் வேர்க்கொம் புளிவசம்பு
ஆனதோருத் தாமணி நிலவிளா மிளகு வித்து
பானமாங் கியாழத்தினிற் கமடமாம் பற்பந்
தானுமேகலந் துள்ளிடத் தாழ்ந்துபோ மாந்தம்.
*(புத்.477-78)*

## *வறட்சுண்டி எண்ணெய்*

வறட்சுண்டி சாறு வேளை
  மணித்தக்கா ளிக்க ழற்சி
கரிசாலை துளசி நீலி
  கனசத்தம் சமனாய்க் கூட்டி
அரற்றியே இடித்த சாறா
  ழாக்குமொன் றாவின் நெய்தான்
உரற்றிய வோரா ழாக்கு
  முண்மையாய்க் கூடச் சேரே.

கூடக் கத்தூரி மஞ்சள்
  கோட்டமும் கரிய சீரம்
வாடவே கடுகு ரோணி
  வகைக்கரை வராகன் கூட்டிப்
போடவே பொடிதான் செய்து
  புனிதமா கக்க லந்து
நாடவே அடுப்பி லேற்றி
  நலமொடு காய்ச்சிக் கொள்ளே.

கொள்ளவே சந்தி தன்னில்
  கொடுமேதுட் டெடைஉள் ளுக்குத்
துள்ளவே சகல தோடஞ்
  சுருக்கினில் தீர்ந்து ரத்தம்
உள்ளவே பரவிப் பிள்ளை
  உடலது பருக்கும் பின்பு
எள்ள லின்றிக் குளிர்ந்தே
  யின்புடன் வளருந் தானே. *(புத்.477-78)*

## *வாதமாந்தம் - குறிகுணம்*

ஒன்றாம் வாத மாந்தகுணம்
  உரைக்கக் கேளு திருக்கறவே
பொன்றா நால்கை குளிர்ந்துதாம்
  பொருமும் விழிபார்த் தழுகும்
குன்றா பெய்யில் வேர்வையுமாம்
  குழிய வலிக்கும் பலவிதமாய்
துன்றா துடிக்குங் கொட்டாவி
  துளையு நாசி புண்ணாமே. *(புத்.476-28)*

### குடிநீர்

ஊனென்ற ஊர்முதலி வேளை நொச்சி
உத்தம தாளியொடு பொடுத லையும்
நினவுடன் ஓர்வகைக் கோர்பிடி வறுத்து
நீரிலிட்டு திரிகடுகு அசம தாகம்
வேதண்ட வசம்புவகை சமன்வெ துப்பி
வெண்ணுங்சீலை முடிந்திட்டு விளம்பக் காய்ச்சி
ஊனென்ற மாத்திரை களறிந்து சேர்த்து
ஊட்டிவிடு தைலமொன்று வுரைக்கி றேனே.
(ஏடு.798-3)

### எண்ணெய்

மத்தம்பூங் குழலாளே கேளாய் முருங்கை
மூலமொடு வசம்புசுக்கு மிளகும் கூட்டி
வித்திநின்ப எண்ணெய்தனி லிட்டுக் காய்ச்சி
விதமாகக் காசள வுள்ளுக் கூட்ட
மெத்தவலி தீருங் குதிரைவலி சன்னி-தோஷம்
வெருண்டோடும் பாலருக்காய் மெய்சொன் னோமே.
(ஏடு.798-3,7313-1-2) (கை.பி.98-134,135)

### வாலை மாந்தம் - குறிகுணம்

வாலை மாந்தச் செய்திதனை
வகுத்து ரைக்க மானேகேள்
காலை மாலை வீறியமும்
கழுத்துந் தலையு மிகத்துவளும்
சோலை போல வுடல் குளிரும்
சுரத்தோ டழலாய்க் கண்களினீ
வேலை போல மிகப்பாயும்
விரைந்து பாரீர் மருத்துவரே' (புத்.477-58)

### விஷமாந்தம் - குறிகுணம்

மலமும் சிக்கி வயிறிரைந்து
வாகாய்த் திரைந்து தான்கழியும்
பலவாய் நின்று சுரங்காயும்
பாங்கா யரையின்கீழ்க் குளிரும்
சலமா யுடம்பு தான்வியர்க்கும்
தாங்காப் பிள்ளை வாந்தியுமாய்

நலமாய் மேனி வாடிவரும்
    நவின்றார் விஷமாந் தமிதே.
*(ஏடு.7313-8,6218-16,362-22,941-19,604-19)*
*(கை.பி.98-140)*

ஏகவாந்தியும் பிதற்றலும் வயிற்று நோயிடைக்கீழ்
ஆகச்சீதளக் குளிர்ச்சியு மாந்துத லரிக்கண்
காகம் போலுள்ளிற் சொருகுதல் மலஞ்சிக்கிக்கழிதல்
வேகமாய்ச்சுர மடிக்குதலிது விடமாந்தம்.

கால்கை குளிர்ந்து கனத்திருக்கும்
    கண்ணும் தூங்கி வாந்திவரும்
பாலும் முலையும் வெறுத்தயரும்
    பாவை போலுடம்பு தானுலரும்
தூவி னிடையா விஷமாந்தம்
    தோகை மருந்து கொடுத்தாலும்
சால உடம்பில் பிடியாது
    சாகுங் காணும் திண்மையிதே. *(ஏடு 601-6)*

சிறியவன் வயிறு மூதிச்
    சினத்துடன் தேகங் காயும்
கறியுற்று கேட்ட தாயார்
    கையிலும் தங்கா தாகில்
அறிவரச் சரக்கு மீது
    அரைக்கும் கீழ் குளிர்ந்தி ருக்கும்
வெறிவில் தாக்கி விக்கும்
    விஷமாந்த மாகு மென்றே.
தாகிக்கும் கிறுகி றுக்கும்
    சந்துகால் வீங்கும் வாடும்
தேகத்தி லுடம்ப தெல்லாம்
    சேரவே யுழையும் குத்தும்

வாகுற உர்த்துக் குள்ளே
    மலம்விழு மடைத்துக் கொள்ளும்
பாகுற மொழிகள் மாதே
    பகர்விஷ மாந்த மாமே.

குறிபலன் கேளாய் மாதே
குளிர்ந்துமே வெதுப்புந் தோன்றும்
அதிலொரு புறந்தான் காயும்
அப்புறம் குளிர்ந்து பின்னே
புறமது குடைந்து குத்தும்
பின்னுடல் பெருக வீங்கும்
செறிமலம் கடுத்து நின்று
சிறுகவே கழியும் கண்டாய். *(எடு.7313-9)*

கண்டிடாய் விடுநீர் மெத்தக்
கடுப்புண்டாங் கழியும் போது
சுண்டுற முனங்குங் கண்டாய்
சொல்மொழிக் கெதிரே பேசும்
விண்டிடாய் நாவும் பல்லும்
விரலிவை கருக்கும் கண்டீர்
தண்டின்மேல் வெளுத்துத் தோன்றில்
சதுரமா யறிந்து பாரே. *(கை.பி.98-141)*

குறைந்திடும் குளிர்ந்து காணும்
கொப்புளு மடிந்து வீங்கும்
சிறந்த கண்ணிமையைப் பற்றி
சிலவிஷம் தொந்த மாகி
விரிந்திடும் நாவும் பல்லு
மீரலும் வெளுத்துக் காணும்
நிறைந்திடக் குணமே கண்டால்
நெகிழ்ந்திடும் மருந்தீ யாதே.
*(கை.பி.98-142), (எடு.7313-10)*

மருந்துகள் விரும்பி டாதே
மறுபிற மூச்சு மேலும்
தரங்கினில் தாளும் வீங்கும்
தடித்தது ஊது மாகில்
பரந்தநீர் போலே வீங்கிப்
பார்வையும(ய)ங்கிற் றானால்
மருந்திட வேண்டாம் சொன்னேன்
மரணமென் றறிந்தி டாயே.
*(கை.பி.98-142), (எடு.7313-10)*

மீண்டுவாய் வழுவ முத்து
　　மேனியும் வெளுப்ப தாகும்
தாண்டிய விழிமே லாகும்
　　தவறிடும் தவன முண்டாம்
ஈண்டுமா மரண முண்டாம்
　　மிரண்டரை நாழி கைக்குள்
கண்டுமே யிரைப்பெ டுத்துக்
　　கொல்லுமே மரணந் தானே.

*(ஏடு.7313-11), (கை.பி.98-142)*

மலசலம் கட்டி நின்று
　　வயிறது வலித்துக் கொள்ளும்
அலறியே அழுது பாவம்
　　அன்னம்பால் அடுக்கொ டாது
பலம்பெற பிரண்டு கொண்டு
　　பார்விழிப் பரந்து பார்க்கும்
புலன்குறி யறிந்து ரைத்த
　　பொதுமாந்த குணமி தாமே. *(ஏடு.7313-11)*

## *1. குடிநீர்*

கொன்றையோ டிசங்கு தோடை
　　கொடிவேலி வேரும் காயம்
நன்றதெனப் புங்கின் பட்டை
　　நல்லதோ ரிந்துப் போடு
ஒன்றொரு கழஞ்சி டித்து
　　உத்தம மிரண்டு நாழி
சென்றதை உழக்காய் வாங்கி
　　செலுத்திடு மாந்தம் போமே. *(ஏடு.7313-11)*

## *2. குடிநீர்*

கூறு மோமம் பொடுதலையும்
　　குளுந்தமஞ் சணாத்தி நொச்சில்
வேரும் வேளை வேர்சமனாய்
　　வெள்ளுள்ளி திப்பிலி வசம்புடன் கூட்டி
ஆற நறுக்கி வடித்தபின்பு
　　அளவாய்க் காய்ச்சி யுண்டிடவே

பார மான விஷமாந்தம்
　பதறி யோடுங் கண்டீரே.
(ஏடு.941-19,362-22) (புத்.476-45)

### *நெய்*

உண்டார் விஷமாந்தந் தீர
　யுகந்த மேதி நெய்யுழக்கு
மிண்டார் வேலிப் பருத்திச் சார்
　மிகவே பாதி யதிலிட்டு
கண்டார் குழலாள் வெள்ளுள்ளி
　சத்திச்சார் ரண்டுகழஞ் சிட்டு
கொண்டசார் காய்ச்சிக் கொள்வீரால்
　கொடிய மாந்தம் குடிபோமே. (ஏடு.601-7)

### *எண்ணெய்*

காணியுங் காளி யாரை
　கதித்தநல் தகரைப் பாசி
ஊணிய சாறு ழக்கு
　ஒப்பமே எண்ணெய் தானும்
தாணியுங் கடுக்காய் உள்ளி
　தகரும்கிராம் புவசம்பு கோட்டம்
கேளீர் வெந்தயம் நீர்உள்ளி
　கொடிதாய் கெருடப் பச்சையுமே.

பச்சை மதிரம் வகைக்குக்கால்
　மாத்திரை யாகமிகச் சேர்த்து
சத்திரமா யரிந்துப் போட்டு
　சரக்கெல்லாம் சேர்த்துக் காய்ச்சி
கணபதி தன்னைப் போற்றி
　கீர்த்திக்கால் காரண்டை கொண்டு
பதுமையாய்க் கொள்ளும் போது
　பறந்துபோம் விஷமாந்த மெல்லாம். (ஏடு.601-7)

### *விஷதோஷ சன்னி மாந்தத்திற்கு கத்தூரி மாத்திரை*

எய்தாமல் கத்தூரி கழஞ்சு ஒன்று
　இனிதான குங்குமப்பூ கழஞ்சு ரண்டு

எய்தாமல் ரோசினையும் கழஞ்சு மூன்று
இவைமூன்றுங் கல்வத்தி லிட்டுக் கொண்டு
எய்தாமல் அமிர்தமென்னு முலைப்பால் விட்டு
இனியதொரு சாமம்ஒன் றரைத்துக் கொண்டு
எய்தாமல் குன்றிபோல் நிழலு லர்த்தி
எடுத்துநீ செப்புதனில் அடைத்தி டாயே.

அடைத்திட்ட மாத்திரைதான் ஒன்றெ டுத்து
அந்தெடைக்கு முலைப்பால் விட்டிழைத்துக் கொண்டு
விடைத்திட்ட முனைநாவில் தீட்டிட் டாக்கால்
விஷதோஷ சன்னிமாந்தம் வீறிட்டோடும்
கடத்தெழுந்த சுரம்வாந்தி தீரும் தீரும்
கடைமருந்தின் போக்கறியார் கழுதை மான்பர்
குடைத்தெழுந்த குடநகில மானே கேளாய்
குருவருளால் கத்தூரி குளிகை யாமே.
*(புத்.572-37,476-136)*

### *வீக்க மாந்தம் - குறிகுணம்*

ஆமப்பா சுரங்காயும் காதுங் கண்ணும்
அதிகமாய்த் தான்வீங்கும் வற்றும் பின்னே
காமப்பா வீங்கிவிடும் கைகா லோயும்
நாவுதான் புண்ணாகும் சொல்லக் கேளு
தாமப்பா அன்னமயம் செல்லொண் ணாது
தடித்தவுடல் வெளுத்துநிறம் தளதளப்பாம்
ஓமப்பா குணமி தெல்லா மறிந்தபோது
ஊட்டுவது அவுஷதங்க ளுண்மை தானே.
*(கை.பி.98-147)*

தப்புறு வீக்க மாந்தந்
தன்னையேபன்னக் கேளாய்
கப்புறு காதுங் கண்ணுங்
கனக்கவே வீங்கும் வற்றும்
ஒப்புறு நாவும் புண்ணா
யோய்விலாச் சுரமு முண்டாம்
வெப்புறு கைகால் நொந்து
வெறுத்திடு மன்னந் தானே. *(புத்.477-76,476-52)*

### பூவரசக் குடிநீர்

பாடுவோம் பூவரசம் பழுப்பு சங்கம்
பட்டைசீந் திற்கொடியுந் துளசி சுக்கு
நீடுவோம் வறள்முள்ளி முருங்கை யீர்க்கு
நீர்முள்ளி சார்வேளை யின்றன் வேரும்
சூடுவோம் பிரமியிலை மருள்கி ழங்கு
தூதுவளை சிறுகுறிஞ்சான் சத்தி மூலம்
கோடுவோங் கருஞ்சீர மிவைவ கைக்குக்
கொண்டுசம னெடையாகத் தூக்கி டாயே.

தூக்கியே கியாழமிட் டெட்டொன் றாக்கிச்
சுகமாக நல்கினால் மாந்த வீக்கம்
வீக்கவிட வீக்கவிட பாக வீக்கம்
மிறுசுரம் நீர்க்கட்டு மலக்கட்டும் போம்.

ஊர்முதலி யீர்க்குசிறு குறிஞ்சி தூது
உறுஞ்சீந்தித் தண்டுதுழாய் வேளை வேரு
நீருமுள்ளி பிரமியிலை மருள்கி ழங்கு
நிலைசங் கம்பட்டை சத்தி சாரணைவேர்க
கொம்புமோ தகமும் கரிய சீரம்
விவைான பூவரன் பழுப்பி னோடு
சேர்கையெல்லா மோரிடையாய்ச் சதைத்துக் கொண்டு
தீயெரிக்கக் கரகமதி லடக்கு வாயே.

அடக்கியதில் தண்ணீரும் விட்டுக் காய்ச்சி
அனலாக யெட்டிலொன்றாய்க் குறுக்கி வாங்கி
துடித்துவர மாந்தமொடு வீக்கஞ் சேர
குடிகெடுத்துக் காமாலை யிளைப்பி ருமல்
அடுத்தசுரம் மயக்கமொடு சன்னி தோஷம்
அழல் போக்கும் சுரமாகு மருமையாக
பிடித்து வந்த குடோரியென்று மாந்த தோஷம்
பேசுகிறே னின்னூலில் பெருமை தானே.

*(கை.பி.98-148)*

# கணம்

கணம் என்பது **'கர்ப்பச்சூடு'** எனக் கூறப்பெறும். மாந்தத்தின் தொடர் நோயே கணமாகும். குழந்தைக்கு மாந்த நோய் ஏற்பட்டு முழுவதும் குணமாகாமல் உடலில் இருந்தே முற்றி வரும்நோய் கணமாகும். குழந்தைகள் பாலும் குடித்துச் சோறும் உண்ணும் பருவத்திலுண்டாகும் நோயாகும். மூன்று ஆண்டு முதல் ஏழாண்டு வரை இந்நோய் துன்பத்தைத் தரும்.

## *நோய்வரு வழி*

உள்ளம் தெளிவற்றிருக்கும்; தாயினது உடல்நிலை பாதிக்கப்படும் போது, அவளை அண்டி வாழும் குழந்தையினது உடலும் பாதிக்கப்பட்டு அவுதியுறுகிறது. அதிகமான சூடேற்படும் போது சிலேத்துமம் அதிகமாகச் சேர்வதாலும், தாய்க்கதிகமான துயரம் ஏற்படுவதாலும், பல வகையான நீரினைப் பருகுவதாலும், அதிகமான சலதோடம் ஏற்படுவதாலும் பசியுடனிருக்கும் தாயின் பாலை உண்பதாலும் குழந்தைக்குக் கணநோய் ஏற்படுகிறது. *(புத்.476-59, 477-130)*

தாய் தொடுகறிகளை அதிகமாக உண்ணல், தாகம், பசி, ஆகிய துன்பங்களைச் சகித்தல், தாய் தந்தையரின் முக்குற்றங்கள், தோடங்கள் ஆகிய காரணங்களால் குழந்தைக்குக் கண நோய் ஏற்படுகிறது. *(கை.பி.போ-181)*

சன்னிதோடம், தாய்,.தந்தை போகத்தினாலேற்பட்ட தோடம், தாய்ப் பாலையுண்ட தோடம், முன் செய்த தோடம், சலதோடம் ஆகிய தோடங்களால் 16 கணங்களும் வந்து சேரும். *(கை.பி.98-165)* *(ஏடு.798-22-109-206)*

## *கணத்தின் குறிகுணம்*

வயிறு நோகும், நாக்கு புண்ணாகும், மேல் மூச்சு வாங்கும், 'கர்கர்' என்னுமொலியுடன் இருமல் ஏற்படும், சொல்லமுடியாதபடி பலவிதமான வேறுபாடு உடம்பில் ஏற்படும். பொறுத்துப் பொறுத்துச் சுரங்காயும், கண்ணின் நிறம் இயற்கை நிறத்திற்கு மாறிக் காணப்படும்.

கண் வெகுண்டு பார்த்தல், உச்சியில் குழி விழுதல், தொண்டை கம்மலாகப் பேசுதல், முகத்தில் சிறிது வியர்வை உண்டாதல், வயிறு கழிதல், காய்தல் என்பவை பொதுக்குறிகுணங்களாகும்.

அழல் அதிகமாகி வாயுவைப் பற்றி அழுத்திக் கொள்ளும். அதனால்

அழல் தணிவதற்கு வழியில்லாமல் குழந்தைக்கு அதிகமாகச் சூடுண்டாகி உடல் கணகணப்பு ஏற்படும். குழந்தை தாயைவிடாமல் பிடித்துக் கொள்ளும். வாய் உலரும், நீர் வேட்கை அதிகமாயிருக்கும், பேதியாகும், மலம் எண்ணெய்க் கசிவுள்ளதாக இருக்கும். அத்துடன் மலவாயிலிருந்து எப்பொழுதும் ஊன் கழுவின நீரின் நிறத்தைப் போன்று நீர் கசிந்து கொண்டேயிருக்கும். *(புத்.477-131)*

சிலகுழந்தைகளுக்குச் சீதமாகவும், இரத்தமாகவும், சீதமும் இரத்தமும் கலந்து பேதியாகும். சில குழந்தைகட்கு வெள்ளை நிறத்துடன் தண்ணீர் வேறு மலம் வேறாகவும் கழியும், சில குழந்தைகட்கு ஊன் கழுவின தண்ணீர் போலப் பேதியாகும். வயிறு உப்பும், கால்கள், முகம் இவை கறுத்துச் சில சமயத்தில் எரிந்தும் குளிர்ந்தும் வெதுப்புண்டாகும், இருமலுண்டாகும்.

கணத்தில் அனல் வீசுவது போன்ற உட்சுரம் இருக்கும். கண சுரத்தில் மலம் உள்ளே தங்கிவிடும். மார்பு கூம்புபோல் எழும்பி வாய் மிகவும் நாற்ற மெடுக்கும், மலம் வெட்டையாகும் என்பன போன்ற குறிகள் உண்டாகும்.

மலம் தீய்ந்தும், நீர் சுருங்கியுமிருக்கும்; மார்பில் அதிகச் சுரமிருக்கும்; வயிறும் மலத்துவாரமும் மிகவும் எரியும்; மயக்கமுண்டாகும்; நா வறளும், பசித்தீ குறையும், உட்சுரமிருக்கும் இப்படிக் குழந்தையின் பன்னிரண்டு வயது வரையில் தொடர்ந்து வரும்.

*(புத்.572-11,476-60-61,477-132)*

இவை எல்லாம் ஒரேநேரத்தில் இருக்க வேண்டுமென்பது அவசியமல்ல. சிற்சில குணங்கள் சிலருக்கு அதிகமாகவுங் குறைவாகவு மிருக்கும். ஆகையால் முதன்மையான குறிகுணங்களைக் கருத்தில் கொண்டு தகுந்த சிகிச்சை செய்ய வேண்டும்.

**பத்தியம்:** வெப்பத்தை அழிக்கக்கூடிய, கபத்தை உண்டாக்கக் கூடிய உணவு வகைகள், புளி முதலியவற்றை நீக்க வேண்டும்.

*(சர.வை.மு-26) (கை.பி.182-183)*

## கணத்தின் வகைகள்

கணம் 16 வகைப்படும். வாதகணம், பித்தகணம், கபகணம், மாந்தகணம், நீர்க்கணம், பிரளிக்கணம், சூலிக்கணம், சுழிக்கணம், ஆமகணம், வறட்சிக்கணம், கூர்கொதிப்புக்கணம், பிறக்கணம்,

வீக்ககணம், தேரைக்கணம், முக்குகணம், மூலகணம், போர்க்கணம், விஷ கணம், இரத்தகணம், ஊதுகணம், மந்தாரகணம் ஆகியன இருபத்தொன்றில் 16 மட்டும் குழந்தைகட்கு வருவனவாம். *(ஏடு.798-23) (கை.பி.98-166)*

### *கணத்தின் பொது மருத்துவ முறைகள்*

கணத்தின் வகைகளுக்கான மருத்துவமுறைகள் அதனதன் வகைகளின் கீழ் விளக்கப்படுகின்றன. அதற்கு முன்னர் இங்கு, அனைத்து கணங்களுக்கும் உகந்த மருத்துவம் கூறப்படுகிறது.

## குடிநீர் வகைகள்

### *1. வில்வஇலைக் குடிநீர்*

வில்வயிலை, துத்தியிலை, வெள்ளை வெங்காயம் இம்மூன்றையும் வகைக்கு 9கி. எடுத்து குறுக அரிந்து சிவக்க வறுத்து அதில் 9கி. வெந்தயமும் 2கி. சீரகமும் சேர்த்து 165 மி.லி. நீர் வார்த்து அதை 80 மி.லி. யாகக்காய்ச்சி வேளைக்கு 15-30 மி.லி. 3 அல்லது 5 நாட்களுக்குக் காலையிலும் மாலையிலும் கொடுக்க வேண்டும். *(புத்.476-63,477-134)*

### *2. மணித்தக்காளிக் குடிநீர்*

ஒருபிடி மணித்தக்காளியிலையும், 395மி.கி. ஈருள்ளியும் எடுத்து அரிந்து சிவக்க வறுக்க வேண்டும். பின்பு 140கி. வெந்தயத்தை அதனுடன் சேர்த்து பொன்நிறமாக வறுத்துக் கொள்க. அதில் 2.6லி. நீர்விட்டு 325மி.லி. யாகக்காய்ச்ச வேண்டும். அதை 15-30மி.லி. காலையிலும் மாலையிலுமாக மூன்று நாட்களுக்குக் கொடுக்க கணம் குணமாகும். *(புத்.482-77,476-65,477-135)*

### *3. நீர்முள்ளிக் குடிநீர்*

சங்கன்வேர், நீர்முள்ளி, ஈருள்ளி, கடுக்காய்த்தோல், நெல்லிக்காய், தான்றிக்காய்த் தோல் ஆகிய ஐந்து பொருட்களை வகைக்கு 9கி. எடுத்து இடித்து 650மி.லி. பசுவின் மோரில் சேர்த்து 165 மி.லி. குடிநீராக்கி இரும்புப் பாத்திரத்தில் வைத்துக் கொள்க. அதனை 15-30 மி.லி. அளவு இருவேளையாக 3 அல்லது 5 நாட்களுக்குக் கொடுக்க அனைத்து கணமும் தீரும். *(புத்.482-76,477-174)*

4. நாவல் பட்டை, கூவிளம்வேர், துளசி, வல்லாரை, கற்றாழைப் பூவின்

இதழ், முத்தக்காசு ஆகிய இவற்றைக் கைப்பிடியளவு எடுத்துக் கொள்க. தேவையான அளவு தண்ணீர்விட்டு எட்டொன்றாகக் காய்ச்சிக் கொள்க. பிறகு சாதிக்காயை அதிலரைத்து 15-30மி.லி. இருவேளை கொடுக்க கணம் நீங்கிப் போகும். *(ஏடு.435-42)*

5. அத்தி, ஆல், அரசு மொட்டுகள், மருதம்பட்டை, அத்திப்பிஞ்சு, பருத்திப் பிஞ்சு, நத்தைச் சூரிவேர், முத்தக்காசு ஆகியவற்றைச் சம அளவெடுத்து வறுத்து இடித்து வைத்துக் கொள்க. கிராம்பு, அதிவிடையம், சாதிக்காய், ஓமம் ஆகியவற்றைச் சமமாய்க் கூட்டி வறுத்து இடித்துத் துணியில் முடிந்து போட்டு 1.3லி. தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி 15-30 மி.லி. அளவறிந்து கொடுக்க கணம் நீங்கிப் போகும் *(ஏடு.435-43-44)*

6. வல்லாரை ஒரு மாங்காயளவு எடுக்க. கோரைக்கிழங்கின் மேல்தோலை நீக்கி விடுக. ஒன்றிரண்டாக அரிந்து கொள்க. 35கி. ஓமம் எடுக்க. இம்மூன்று மருந்துகளையும் ஆறு பங்காய் வைத்து முதலில் சட்டியில் மூன்று பங்கு மருந்தையிட்டு வெவ்வேறாக வறுத்துக் கொள்க. மறுபடி மூன்று பங்கு மருந்தைப் பச்சையாகச் சட்டிக்குள்ளேயிட்டு வறுத்த மருந்தையும் உடன் சேர்த்துக் கொள்க. அதிலே 495 மி.லி. தண்ணீர் விட்டு கிண்டுக. தீயெரித்துக் காய வைத்து 40 மி.லி. யாகச் சுண்ட வைத்து உடனிறுத்துக் கொள்க. அந்தக் குடிநீரிலே நெல்லிக்காயளவு பசுவின் வெண்ணெயைப் போட்டு அளவறிந்து கொடுக்க குழந்தைகளுக்கு வரும் கணங்கள் நீங்கும்.

பசுவின் வெண்ணெய் கிடைக்காவிட்டால் 488மி.கி. அளவுள்ள சாதிக்காயைச் சுட்டு மேற்கூறிய குடிநீரில் உரைத்துக் கொடுக்கவும். *(ஏடு.601-99)*

### *கற்கம்*

கெச்சக்காய், நன்னாரி, வாழைப்பூவின் இதழ், மருதம்பட்டை, ஈருள்ளி, சீரகம், அதிமதுரம், சாதிக்காய் ஆகியவற்றைச் சம அளவெடுத்து இடித்து 1.3லி. தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. காய்ச்சிய பிறகு வெந்திருக்கும் அம்மருந்தைக் கிளறி அரைத்து 1-5 கி. கொடுக்க கணநோய் நீங்கிப்போகும். *(ஏடு.435-43)*

## நெய் வகைகள்

### *1. வல்லாரை நெய்*

வல்லாரையிலை, மாசிப்பத்திரி, வில்வயிலை, விளாவிலை, இந்நான்கின் சாற்றை எடுக்க. ஆலம்பால், அத்திப்பால். வெங்காயச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, தாய்ப்பால், பசுவின் பால், நெய், வெள்ளாட்டின் பால், கொம்புத்தேன், கோவைச் சாறு இவற்றை வகைக்கு 650 மி.லி. எடுக்க. தேங்காய்ப்பால் 1.3லி. எடுத்து இவையனைத்தையும் ஒன்று சேர்க்க. மண்சட்டியிலூற்றிக் கொள்க. அத்துடன் சந்தனத்தூள், அறுகங்கட்டை, வெட்டிவேர், விலாமிச்சம்வேர் ஆகிய நான்கையும் வகைக்கு 35கி. எடுத்திடித்து வேறு மட்பாண்டத்தில் போட்டு 325 மி.லி. தண்ணீர் விட்டு 165 மி.லி. யாகக்காய்ச்சி வடித்து மேற்சொன்ன சாற்றுடன் கலக்க வேண்டும். அதில் சாதிக்காய், சாதிபத்திரி, ஏலரிசி, இலவங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த்தோல், தான்றிக் காய்த்தோல், நெல்லி வற்றல், சடாமாஞ்சில், அதிவிடையம், மாசிக்காய் ஆகிய இவற்றை வகைக்கு 35கி. வீதம் எடுத்திடித்து வடிகட்டி வைத்துக்கொண்டு, மேற்படி கலந்து வைத்த திரவங்களை அடுப்பிலேற்றி எரித்து நெய் போலாகும் பதத்தில், பொடி செய்து வைத்துள்ள தூளைத் தூவிக் கிண்டி நெய் போன்ற குழம்பாகும் பருவத்திலிறக்கி வடித்துக் கொள்க. அதனைக் காலை, மாலை இருவேளை 5-10மி.லி. நாற்பது நாள் கொடுத்து வந்தால் எல்லாக் கணங்களும் நீங்கும். வளியாலுண்டான கணங்களும் அதனால் உண்டாகும் பிற நோய்களும் தீரும். தேரைக்கணத்துக்கும் இதனை நோய் வன்மைக்குத் தக்க அளவு கொடுத்து வந்தால் தீரும். இந்நெய்யைக் கொடுக்கும் காலத்தில் புளியையும், புளிப்புப் பொருட்களையும் வளிநோயை விளைவிக்கும் பொருட்களையும் கசப்புப் பொருட்களையும் கட்டாயமாக நீக்கிவிட வேண்டும்.

*(புத்.476-62-63,477-133-134,572-11-13)*

2. ஈரவெங்காயம், நற்சீரகம், சிறுஅம்மான் பச்சரிசி சமூலம், முட்கருவேலங்கொழுந்து இவற்றைச் சம அளவெடுக்க. தேவையான அளவு பசுநெய்யில் போட்டு அடுப்பின் மேல் வைத்துக் காய்ச்சவும். எண்ணெயைக் கடுகுத் திரள் பதத்திலிறக்கி நெய்யை வடிகட்டி தினமும் 5-10மி.லி கொடுக்கவும். உப்பு, புளி நீக்கவும். *(சர.வை.மு-118)*

### *3. சண்பகப்பூ நெய்*

அவுரிச்சாறு, நிலக்குமிழ்ச்சாறு ஆகிய இரண்டையும் வகைக்கு 325

மி.லி. எடுத்து ஒருமண் சட்டியில் ஊற்ற வேண்டும். பின் நல்லெண்ணெய் 325 மி.லி., பசுவின் நெய் 325 மி.லி. எடுத்து இவ்விரண்டையும் மண் சட்டியிலூற்றி சாற்றுடன் கலந்து கொள்க. உயர்ந்த சாதிக்கோட்டம், சண்பகப்பூ, சந்தனத்தூள், கடுகுரோகணி, விலாமிச்சம் வேர், கிராம்பு ஆகிய ஆறு பொருட்களையும் வகைக்கு 5கி. வீதமெடுத்து பொடிசெய்து தேவையான அளவு பசுவின் பால் ஊற்றி அரைத்து அனைத்தையும் கலந்து சிறுக எரித்துப் பக்குவமானவுடன் வடித்துக் கொண்டு அதை வேளைக்கு 5-10மி.லி. அளவு மூன்று முதல் ஐந்து நாட்கள் அல்லது நோய்க்குத்தக்கவாறு கொடுக்க கணம் நீங்கும். *(புத்.476-64,477-170)*

4. புலாத்திவேர், புங்கு, கதலிப்பிஞ்சு, சத்திச்சாரணை, தூதுவளை, மாதுளை, மலைதாங்கி, தக்காளி, வல்லாரை, கரிசலாங்கண்ணி, சிறுநெருஞ்சி, பெருநெருஞ்சி, சிறு புள்ளடி, அத்திப்பிஞ்சு, முத்தக்காசு, அகத்தியிலை, முசுமுசுக்கை, கீழ்க்காய் நெல்லி, செருப்படி, சிறுகீரை, ஆம்பல், முள்ளி, கொட்டி, நெய்தல்கிழங்கு, கண்டங்கத்திரி, சிவமுருங்கை, கருந்துளசி, சிவந்தநாயுருவி, செங்கழுநீர்க்கிழங்கு, நிலவேம்பு, சிறுகாஞ்சொறியின் பிஞ்சு, குருந்தொட்டி, ஆடாதோடை, பருத்திப்பிஞ்சு, வாழைப்பூ, பொடுதலை, பிரமதூது, ஓரிதழ்த்தாமரை, செந்தொட்டி, கற்றாழை, சிறுபீளை, ஆலம்விழுது, கஞ்சாங்கோரை, அமிர்தவல்லி, குழிமீட்டான், அம்மான் பச்சரிசி, விட்டுணுகிரந்தி, கரந்தை, பழம்பாசி, இலந்தை, தம்பலம் ஆகிய மூலிகைகளை வகைக்கு 35கி. எடுத்துக்கொள்க. 1.3லி. தண்ணீர் சேர்த்து எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்துக் கொள்க. அவ்வாறு காய்ச்சியதற்கு நான்கிலொருபாகம் பசுநெய் சேர்த்துக் கொள்க. அதிமதுரம், கோட்டம், ஏலம், குரோசாணி ஓமம், குந்திரிக்கம், நறுக்குமூலம், திரிகடுகு, திரிபலாதி, அதிவிடையம், ஆறுவகை அரிசி, ஆமையோடு, கலைக் கொம்பு, உருத்திராட்சம், கெருடப்பச்சை, சாத்திரபேதி ஆகியமருந்துப் பொருட்களை வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. வெள்ளாட்டுப் பாலை அதில் சேர்த்துக் கலக்கிக்கொள்க. அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதமாக வரும்போது இறக்கிக் கொள்க.

அதனை 5-10மி.லி. கொடுக்க கணம் அனைத்தும் நீங்கிப் போகும். *(எடு.362-74-75)*

5. சிற்றாமணக்குக் கொட்டையை 2.6 லி எடுத்து 2.6 லி. பசுவின் பாலில் அரைத்து வேகவைத்து காயவைத்து இடித்துக்கொள்க.

அதனுடன் இளநீர் 6.5லி. விட்டு ஒன்று சேர்த்து காய்ச்சி எண்ணெயை ஊற்றிக் கொள்க. சாதிக்காய், குரோசாணி ஒமம், சாதிபத்திரி, கிராம்பு, சீரகம், வசம்பு, ஏலம், திப்பிலி, அதிமதுரம், மாயக்காய் ஆகிய இவற்றை $1^1/_4$ கி. எடுத்துக் கொள்க. துளசிச்சாறு, வல்லாரைச் சாறு இவற்றை வகைக்கு 162மி.லி. எடுத்து ஒன்றுசேர்த்து அரைத்து காய்ச்சிக் கொள்க. மெழுகு பதமாக வரும் போது வடித்து 4கி. கொடுக்க கணம் பதினெட்டும் நீங்கிப் போகும். *(ஏடு.601-57)*

### *6. வல்லாரை நெய்*

நன்றாக வடிகட்டிய நீர் 10.4லி. எடுத்து ஒரு மண்பானையில் வார்த்து அதில் 3.5கிலோ வல்லாரையைப் போட்டு அதை எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்து 1.3லி. பசுநெய் சேர்த்து சுக்கு, ஏலம், மான்கொம்புப் பற்பம், சாதிக்காய், தாளிசபத்திரி,கோட்டம், விலாமிச்சம் வேர், வெட்டிவேர், சீரகம், தான்றிக்காய்த்தோல், தக்கோலம், மஞ்சள், சந்தனம், வெங்காரம், வில்வஒடு, அக்கராகாரம், சண்பகப்பூ, குங்குமப்பூ, கத்தூரி மஞ்சள், இம்பூறல்வேர், (கச்சோலம்) கிச்சிலிக் கிழங்கு, கொத்துமல்லி, கடுகுரோகணி, ஆகிய இந்தச் சரக்குகளை வகைக்கு 4கி. எடுத்து 1.3லி. பசுவின் பாலாலரைத்து மண்பாண்டத்திலுள்ள பொருட்களுடன் சேர்த்துக் கலக்கி 1.3லி நெய்யையும் கலக்கி அடுப்பேற்றிப் பதமாய்க் காய்ச்சி இறக்கி வைக்க. பீங்கானில் எடுத்து வைக்க. அதைத் தினமும் காலையிலும், மாலையிலுமாக இரண்டு வேளையும் உண்டு வந்தால் ஒன்பது கணமும் நீங்கிப் போகும்.

*(புத்.482-74-75, 477-164-165, 476-102-103)*

### *7. மாதுளை நெய் (நந்தீஸ்வரர்)*

325 மி.லி. மாதுளைச் சமூலச்சாறு, 90கி. சீந்திற்சக்கரை ஆகிய இவ்விரண்டு பொருட்களையும் மண்சட்டியிற் சேர்த்துக் குழம்பாக்கிக் கொள்க. 325 மி.லி. பசுவெண்ணெயையும் அதனுடன் கூட்டிக் கொள்க. அதைப் பக்குவமாய்க் கிண்டிக் கொள்க. அதில் சாதிக்காய், சாதிபத்திரி, ஏலம் ஆகிய மூன்று பொருட்களையும் வகைக்கு 18கி. எடுத்து இளவறுப்பாக வறுத்துப் பொடி செய்து சேர்த்துக்கொள்க. அதனை அடுப்பேற்றிக் காய்ச்சிப் பதத்தில் வடித்து காலை, மாலை 5-10 மி.லி. குழந்தைக்குக் கொடுக்க வேண்டும். இவ்வாறே 41 நாள் கொடுக்க பதினெண் கணங்களும் ஒழிந்து போகும். சிறு குழந்தை பெரிய குழந்தைகட்கு இந்நெய்யைக் கொடுக்கலாம்.

*(புத்.476-105,482-76,477-167-168)*

### 8. நெய்

புளியன்விதைத் தோல், கையளவு எடுத்துக்கொண்டு பொடி செய்து கொள்க. தேங்காயை உடைத்துத் துருவி அதில் மேற்சொன்ன தூளைக் கலந்துக் கொள்க. அதனை வெயிலில் வைத்து எண்ணெயைப் பிழிந்து கொண்டு அதில் 1.3லி. பசுநெய்யைச் சேர்க்க.

தெற்றியின்பூ, பட்டை, வேர்ப்பட்டை, காக்கணம் வேர்ப்பட்டை, அத்திப்பட்டை, சிறுபீளை, ஒடுவடக்கி, குப்பைமேனி, துளசிமுறி, தக்காளி, முருக்கு, பொடுதலை, சுண்டை, சிறுசுண்டை, தூதுவளை, நன்னாரி, மலைதாங்கி வேர்த்தோல், தென்னம்பூ, மாதுளைப் பிஞ்சு, வெங்காயம் ஆகிய இவற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. இவற்றைக் கழுநீர் வார்த்து பிழிந்து சாறெடுத்துக் கொள்ள வேண்டும். செவ்விளநீர், பசுவின் பால், பசுவின் நெய் இவற்றை வகைக்கு 1.3லி எடுத்து ஒன்று சேர்க்க. இளநீர், பால் ஆகியவற்றைத் தேவையான அளவு எடுத்து கலக்கவும்,

ஏலம், இலவங்கம், இலவங்கப்பட்டை, கெருடப்பச்சை, மாயக்காய், சாத்திரபேதி, கத்தூரிமஞ்சள், ஓமம், அதிவிடையம், திரிகடுகு, அக்கராகாரம், வால்மிளகு, நன்னாரி, சந்தனம், அகில்பூ, அதிமதுரம், வசம்பு, தேற்றான், எலுமிச்சம், கச்சோலம், நெல்லி, கடுக்காய், கூகைநீறு, குரோசாணிஓமம், அரத்தை, சந்தனம், கருஞ்சீரகம், சீரகம், விலாமிச்சம்வேர், சண்பகப்பூ, ஆறு வகை அரிசி, பூலாவிருட்சம், கோரோசனை ஆகியவற்றை வகைக்கு 4கி. எடுத்துக் கொள்க. அவற்றைப் பசுவின் பால் விட்டரைத்து முன்சொன்ன மருந்தில் கலக்கிக் கொள்க. அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதமாக வரும் போது வடித்தெடுத்து இறுத்து வைத்துக் கொள்க. அதில் 5-10மி.லி அளவு காலை, மாலை கொடுக்க கணமனைத்தும் நீங்கிப்போகும். *(ஏடு.109-41-42)*

### 9. நெய் (வேறு)

காராம்பசுவின் நெய், ஈருள்ளிச்சாறு, பூங்கதலிச் சாறு ஆகியவற்றை வகைக்கு 1.3லி எடுத்துக் கொள்க. மாதுளைப்பூவின் சாற்றைச் சமமாய்ச் சேர்த்துக் கொள்க. அதிமதுரம், கெருடப்பச்சை, சிற்றேலம், மாயக்காய் ஆகியவற்றைச் சமமாய் எடுத்துப் பொடித்து அதில் போடுக. இலவங்கம், பஞ்சு, கல்நார் ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்து முன் சொன்ன சாறு விட்டாட்டி ஒன்று சேர்த்துக்கொள்க. பிறகு அடுப்பேற்றி மெழுகு பதமாய்க் காய்ச்சுக; பதமறிந்து அதில் சாதிக்காய், சாதிபத்திரி,

கிராம்பு, அதிவிடையம், வசுவாசி, முத்தக்காசு ஆகிய மருந்துச் சரக்குகளை வகைக்கு 10கி. வீதம் எடுத்து இளவறுப்பாய் வறுத்து பொடித்து கலந்து கொள்க. பிறகு வடி கலசத்திலிட்டு வடித்துக் கொள்க. அதனை 5-10மி.லி. குழந்தைகட்குக் கொடுக்க கண நோய் நீங்கிப்போகும். *(கை.பி.98-49-50)*

10. காராம்பசுவின் நெய், வெங்காயச்சாறு, பூவாழைச்சாறு ஆகிய இவற்றை வகைக்கு 1.3லி. எடுத்துக்கொள்க. பூக்களையுடைய மாதுளையின் பூவின் சாற்றை 1.3லி அளவு எடுக்க. அதிமதுரம், கெருடப்பச்சை, சிற்றேலம், மாயக்காய் ஆகிய இவற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. இலவங்கம், பஞ்சு, கல்நார், ஆகிய இவற்றை 5கி. எடுக்க. இச்சரக்குப் பொருட்களை முன் சொன்ன சாற்றை விட்டு அரைத்து அதனை அடுப்பிலேற்றி பதமாய்க்காய்ச்சி மெழுகு பதமாக ஆக்கிக் கொள்க.

சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, அதிவிடையம், வசுவாசி, முத்தக்காசு ஆகியவற்றை 10கி. எடுத்து இளவறுப்பாய் வறுத்துப் பொடித்து அதில் சேர்த்துக் கொள்க. பக்குவமறிந்து வடித்து 4 கி. அளவு கணங்களுக்குக் கொடுக்க கணம் 5-ம் நீங்கும். *(ஏடு.109-50-51)*

### காரை இரசாயனம்

1.3லி. காரைப்பழத்தின் சாறும், 1.3லி. சர்க்கரையும், 5.2லி. பசுவின் பாலையும் ஒரு மண் சட்டியில் ஊற்றிச் சேர்க்க. அதனைச் சிறுக எடுத்துப் பாகு பதமானவுடன் அதில் 325மி.லி. பசுவின் நெய் விட்டுக் கிளறி காலை, மாலை 5 மி.லி. அளவு 5 முதல் 7 நாட்கள் கொடுத்து வர அனைத்து கணமும் நீங்கும். *(புத்.477-174)*

### இளகம்

கடுக்காய்ப்பிஞ்சு, அதிவிடையம், கசகசா, பரங்கிப்பட்டை, சீரகம், சந்தனத்தூள், சாதிபத்திரி, சிற்றாமுட்டி, கூவிளம், செம்பருத்தி, விலாமிச்சம் ஆகிய இவற்றை வகைக்கு 35கி. எடுத்துக் கொள்க.

அவற்றை இடித்துப் பொடித்துச் சீலையில் வடிகட்டி எடுத்துக் கொள்க. புதியதாக சீனாக்கற்கண்டு 70கி. அளவு அத்துடன் சேர்க்க. பசு நெய்யை 175 கி. அத்துடன் சேர்த்து இளகமாக வரும் வரை காய்ச்சிக் கிளறி பக்குவத்துடன் இறக்கிக் கொள்க. அதனை 2 கி. அளவு கொடுக்க கணமனைத்தும் நீங்கும். *(கை.பி.98-182)*

## எண்ணெய் வகைகள்

### *1. குமிழம்வேர் எண்ணெய்*

நிலக்குமிழ், அம்மான் பச்சரிசி, சூரியகாந்தி, ஆவாரை, மதிமயக்கி, கணப்பூண்டு ஆகியவற்றின் வேர்ப்பட்டைகளை வகைக்கு 35கி. வீதமெடுத்து தண்ணீர்விட்டு மெழுகுபோல் அரைக்க வேண்டும். அதை 1.3லி ஆமணக்கெண்ணெயில் கலக்கிப் பக்குவமாகக் காய்ச்சி இறக்கிப் பீங்கானில் விட்டு ஆறவைக்க வேண்டும், அத்துடன் சீரகம், அதிமதுரம் ஆகியவற்றை வகைக்கு 35கி. எடுத்து வறுத்துப் பொடியாக்கித் தூவிக் கலக்கிக் குலுக்கி வைத்துக் கொள்ளவும். இதைக் காலையில் மட்டும் 5-10மி.லி. வீதம் தாய்ப்பாலில் கலந்து 3 நாட்கள் கொடுக்க கணம்தீரும். *(புத்.482-77,476-62,477-133)*

2. கற்றாழைமடல், வட்டத்துத்திவேர், கடுகுரோகணி, கடுக்காய், நற்சீரகம், கருஞ்சீரகம், வெந்தயம், சாரணைவேர், பழம்புளி, ஈரவெங்காயம் ஆகிய சரக்குகளைத் தண்ணீர் விட்டு நன்றாக அரைத்து தேவையான அளவு ஆமணக்கெண்ணெயில் கலந்து குழப்பி எரித்து பக்குவமாக வடித்திறக்கவும். அதனை 5-10 மி.லி. அளவு தினமும் சாப்பிட்டு வர கணம் குணமாகும். *(சர.வை.மு-113)*

### *3. பாலசஞ்சீவி எண்ணெய்*

இம்பூறல், சிறுகீரை, முசுமுசுக்கை, கோவை, எலிச்செவிக்கீரை, குரும்பை, பொன்னாங்காணி, ஈயக்கொழுந்து, இண்டு, குப்பைமேனி, அவுரி, பொடுதலை, ஆடாதோடை, வல்லாரை, துளசி, குதிரை வாலி, தூதுவளை, கோழியவரை, கொன்றை, தகரை, கரிசாலை, முருங்கையிலை, முருங்கைப்பட்டை, விட்டுணு கிரந்தி, ஓரிதழ்த்தாமரை, பற்பாடகம், வேம்பு, ஆனைநெருஞ்சில், நரிப்பயறு, வெங்காயம், நறுவிலியிலை ஆகிய சரக்குகளை எடுத்து அவற்றின் சாற்றைச் சரியளவு சேர்த்து ஒரு மண்சட்டியிலூற்ற வேண்டும். பிறகு குமிழ், பூதபுட்பம், முன்னை, பாதிரி, வில்வம், சாதிக்காய், கருஞ்சீரகம், சாதிபத்திரி, மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமப்பூ, உள்ளி, துத்தம், கோரோசனை, காசுக்கட்டி, கம்பிப்பிசின் ஆகிய இப் பொருட்களை வகைக்கு 5கி. வீதம் எடுத்துத் தண்ணீரில் அரைத்து மண்சட்டியில் விட்டு கலக்கி அடுப்பேற்றிச் சிறுக எரித்துக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்து, வேளைக்கு 5-10மி.லி. வீதம் காலையில் மட்டும் கொடுக்க வேண்டும். இதைக்கொடுக்க கணங்கள்

தீரும். பத்தியம் இருக்க வேண்டும். ஈருள்ளி, முருங்கைக் கீரை இவற்றைச் சேர்க்கலாம். *(புத்.482-75,477-167)*

4. மாசிக்காய், சீரகம், அதிமதுரம், இவற்றை வகைக்கு 35கி. கிராம்பு, 4கி எடுக்க. கோழியவரை வேர் 350கி, ஈரவெங்காயம் 280கி எடுத்து சரக்குகளைச் சிறுசிறு துண்டுகளாக்கி ஆமணக் கெண்ணெய் 1/2லி. விட்டு பொன்னிறமாக வதக்கிக் கொள்க. பின்பு வேர் வகைகளை எடுத்துப் பஞ்சு போல இடித்து அனைத்தையும் ஒன்று சேர்த்து அடுப்பின் மேல் வைத்துப் பக்குவமாகக் காய்ச்சி வடிக்கவும். இவ்வெண்ணெயை 5-10மி.லி. கொடுக்க இரத்தகணம் முதல் பதினெட்டு வித கணமும் தீரும். *(சர.வை.124-125)*

### *5. குமரி எண்ணெய்*

1.3லி. அளவு சிற்றாமணக்கெண்ணெயையும், குமரிச்சோறு தேங்காயளவும் எடுத்து இவையிரண்டையும் ஒரு மண்சட்டியிலிட்டு அதில் 35கி. வெந்தயம் எடுத்துத் தண்ணீரில் ஊறவைத்து அரைத்துச் சேர்த்துக் கொண்டு அத்துடன் 35கி. அரிந்த ஈருள்ளியைப் போட்டு அடுப்பேற்றிக் காய்ச்ச வேண்டும். வெங்காயம் வெந்து மிதக்கும் பதத்தில் வடித்துக் கொண்டு அதை 5-10 மி.லி. வீதம் காலையில் மட்டும் 5 முதல் 7 நாட்கள் கொடுக்க பதினெட்டு வகை கணமும் நீங்கும். *(புத்.477-169,482-75)*

### *6. வல்லாரை எண்ணெய்*

1.3லி., சிற்றாமணக் கெண்ணெயையும், 650மி.லி. வல்லாரைச் சாற்றையும் ஒரு மண்சட்டியில் ஊற்றி 70கி. வெந்தயத்தைப் பசுவின் பால் விட்டு அரைத்துச் சட்டியிற் கலந்து சிறு தீயிட்டு எரித்துப் பக்குவமானவுடன் அதில் 70கி. சர்க்கரை கலந்து வடித்து வைத்துக் கொண்டு அதைக் காலையில் மட்டும் 5 முதல் 7 நாட்கள் கொடுக்க வேண்டும். இதனால் குழந்தைகட்குண்டான கணச்சூடு தணியும். *(புத்.482-77,477-170,476-65)*

7. பருமனான பேய்க்கும்மட்டிக்காய் 3 எடுத்து மேலே இருக்கும் தோலைச் சீவிவிட்டு, அவற்றை அறுத்து உள்ளிருக்கும் விதைகளை நீக்கிவிடவும். பின்பு அதைப் பாக்குவெட்டியாற் சிறுக நறுக்கி வைத்துக் கொள்ளவும். இதேபோல் வெங்காயத்தின் மேல்தோலை உறித்து அம்மியிலிட்டு அரைத்த விழுது ஒரு விளாங்காயளவு எடுத்துக் கொண்டு மேலே சொன்ன கும்மட்டிக் காய்க்குள்ளே வைத்து விடவும்.

இவையாவற்றையும் 1.3லி. விளக்கெண்ணெயில் குழப்பி அடுப்பின் மேல் வைத்துப் பக்குவமாகக் காய்ச்சி இறக்கவும், அத்துடன் கோரோசனை 2 கி, ஏலக்காய் 4கி. எடுத்துப் பொடி செய்து எண்ணெயில் போட்டுக் குழப்பி வடிகட்டிக் கொள்ளவும். இதில் 5-10மி.லி உட்கொள்ளக் கொடுக்க எல்லாவித கணங்களும் தீரும்.

*(சர.வை.மு-115)*

### *8. கருஞ்சீரக எண்ணெய்*

ஒரு மண்சட்டியில் 325 மி.லி. சிற்றாமணக்கு எண்ணெய், எள், கடுக்காய்த்தோல், கருஞ்சீரகம், கடுகுரோகணி, காட்டு மல்லிகை, ஈயக்கொழுந்து, சீக்கராம் பட்டை ஆகிய பொருட்களை வகைக்கு 9கி. வீதம் எடுத்துப் பொடி செய்து மண் சட்டியிலுள்ள எண்ணெயுடன் கலந்து 9கி. வெங்காயத்தைக் குறுக அரிந்து அச்சட்டியில் போட்டு அடுப்பேற்றிச் சிறுக எரித்து வெங்காயம் நன்றாகச் சிவந்து வெந்த பக்குவத்தில் வடித்து வைத்துக் கொண்டு காலையில் மட்டும் 10 மி.லி. தாய்ப்பால் சேர்த்து எடுத்து மூன்று முதல் ஐந்து நாட்கள் அல்லது நோய் வன்மைக்குத்தக்க அளவு கொடுத்தால் கணம் நீங்கும்.

*(புத்.476-64, 477-170)*

### *9. பொன்னாங்காணி எண்ணெய்*

பொன்னாங்காணிவேர், புளியிலை ஈர்க்கு, வேப்பிலை ஈர்க்கு ஆகிய மூன்றையும் வகைக்கு ஒரு பிடி எடுத்து அத்துடன் கோழியவரையின் வேர்ப்பட்டை 18கி. எடுத்து இவற்றையெல்லாம் நன்றாய் நறுக்கிப் பொடியாக்கி ஒரு மண்சட்டியிலிட்டு அதில் 280கி. சிற்றாமணக்கெண்ணெயை ஊற்றி சட்டி வாயை ஒருமெல்லிய துணியால் கட்டி நாள்தோறும் வெயிலில் வைத்துக் காலையில் மட்டும் 5-10மி.லி. அளவாக 3 முதல் 5 நாட்கள் அல்லது நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால் கணம் நீங்கி விடும்.

*(புத்.476-64,477-171), (ஏடு.362-59)*

### *10. சிறுபுள்ளடி எண்ணெய்*

சிறு புள்ளடி, கழற்சிக்கொழுந்து, அவுரியிலை, சாணாக்கியிலை, பொடுதலையிலை ஆகிய ஐந்து பொருட்களையும் வகைக்கு ஒரு பிடி எடுத்து சுத்தம் செய்து நன்றாகச் சிதைத்து வைத்திருக்கும் சரக்குப் பொருளைப் போட்டு ஒரு மெல்லிய வெள்ளைத் துணியால் அச்சட்டியின் வாயைக் கட்டி வெயிலில் வைத்துக் கொண்டு

காலையிலும் மாலையிலும் 5-10மி.லி. வீதம் 3 முதல் 5 நாட்கள் உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் பூசினால் கணம் நீங்கும். *(புத்.476-64, 477-171)*

### *11. வில்வ எண்ணெய்*

சிற்றாமணக்கெண்ணெய், வில்வ இலைச்சாறு, அவுரிச்சாறு, வெள்ளை வெங்காயச்சாறு வகைக்கு 325 மி.லி. எடுத்து இவையனைத்தையும் மண்சட்டியில் ஊற்றிக் கொள்க. அதில் கடுக்காய்த்தோல் 35கி. எடுத்துத் தூள் செய்து போட்டு பக்குவ பாகத்தில் காய்ச்சி இறக்கி வடித்துக் கொண்டு காலையில் மட்டும் 5-10 மி.லி. 3 முதல் 5 நாட்கள் அல்லது நோய்வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்து வந்தால் கணம் நீங்கிவிடும்.

*(புத்.476-64, 477-171) (ஏடு.6218-39)*

12. சீரகம், வெந்தயம், சாதிக்காய், இலவங்கப்பட்டை, சண்பகப்பூ, ஈரவெங்காயம், கோட்டம், திப்பிலி, திப்பிலிமூலம், ஏலக்காய், கிராம்பு செங்கழுநீர்க்கிழங்கு, கருஞ்சீரகம், வெளிச்சைப் பிசின், கணப்பூண்டு, சாதிபத்திரி ஆகிய மூலிகைகளைச் சமமாக எடுத்துக் கொள்க. தண்ணீர் விட்டரைத்து தேவையான அளவு நல்லெண்ணெயில் குழப்பி சூரிய புடமாக வைக்கவும். இதில் 5-10மி.லி. அளவு எடுத்து கணச் சூட்டிற்குப் புகட்ட குணமாகும். அன்றைய தினம் வெந்நீர் சாதம் சாப்பிடவும். *(சர.வை.மு-117)*

### *13. தும்மட்டி எண்ணெய்*

1.3லி. சிற்றாமணக்கெண்ணெய், வரகு வைக்கோல் போட்டுச் சுட்ட தும்மட்டிக் காயின் சாறு, 325மி.லி வெங்காயச்சாறு, 325 மி.லி. தக்காளிச்சாறு ஆகியவற்றை ஒரு மண்சட்டியில் கூட்டிக் கொள்க. அத்துடன் வால்மிளகும், கோரோசனமும் வகைக்கு 60மி.கி. எடுத்துக் கொள்க. கத்தூரி மஞ்சள், வெந்தயம், சிற்றரத்தை, பேரரத்தை, கருஞ்சீரகம், சிறுலவங்கப்பட்டை, பெரிய லவங்கப்பட்டை ஆகிய ஏழு பொருட்களையும் வகைக்கு 10கி. எடுத்துப் பொடித்து எண்ணெயுடன் கூட்டிக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்துக் காலையில் மாத்திரம் 5-10மி.லி. கொடுக்க வேண்டும். இவ்விதம் 5 முதல் 7 நாட்கள் கொடுக்க எல்லாக் கணங்களும் நீங்கும். தாய், மிளகு நீரும், சோறும் சாப்பிட வேண்டும். *(புத்.477-173)*

### 14. *பழத்தெண்ணெய்*

350கி. சிற்றாமணக்கெண்ணெய், 350கி. எலுமிச்சம்பழச்சாறு இவற்றை ஒரு மண்சட்டியிலூற்றி 35 கி. வெந்தயத்தை நெகிழ அரைத்துக் கலந்து பதமாகக் காய்ச்சி வடித்துக் காலையில் மட்டும் 10மி.லி. அளவாக 3 முதல் 5 நாட்கள் கொடுக்க கணக்கடுப்பு நீங்கும்.

*(புத்.482-78,477-173)*

### 15. *இண்டெண்ணெய்*

2.6லி. சிற்றாமணக்கு எண்ணெயையும், வெள்ளிண்டு, தூதுவளை, சங்கங்குப்பி, வேலிப்பருத்தி, பூவரசு, குப்பைமேனி, ஆடாதோடை, சாரணை, பூலா, நரிப்பயற்றங் கொடி, பிரமி, வேளை, கற்றாழை ஆகிய இந்தப் பதின்மூன்று வகை வேர்களின் சாறுகளை வகைக்கு 1.3லி. எடுத்து ஒரு மண்சட்டியிற் கலந்து கொள்க. அதில் கருஞ்சீரகம், புனுகு, ஓமம், பூண்டு, கோரோசனம், சண்பகப்பூ, வசம்பு, சாதிக்காய், தான்றிக்காய் ஆகிய சரக்கு வகைகளை வகைக்கு 18கி. எடுத்து தண்ணீர் விட்டு நன்றாக அரைத்துச் சட்டியில் வைத்திருக்கும் எண்ணெயுடன் கலந்து கலக்கி அடுப்பேற்றிச் சிறுக எரித்து காய்ச்சிப் பதமானவுடன் இறக்கி நாளொன்றுக்கு 5-10மி.லி. அளவு ஏழு அல்லது ஒன்பது நாட்கள் கொடுத்து வர கணங்களனைத்தும் நீங்கும்.

*(புத்.482-75,477-174)*

16. திப்பிலி, கத்தூரி மஞ்சள், சண்பகப்பூ, கிராம்பு, கருஞ்சீரகம், சுக்கு, *பாம்புக் கஷ்டம், கோட்டம், ஏலக்காய், பொன் முசுட்டை வேர், அவுரிவேர், கொம்புகளில் படரும் சிற்றவரை, தூதுவேளை, கொடிவேலிவேர், விடத்தேரி வேர், நன்னாரி வேர், வசம்பு, வெள்ளைப் பூண்டு, சுடுகாட்டில் முளைத்துள்ள ஏதேனும் ஒரு பூண்டு ஆகிய இச்சரக்குளையெல்லாம் சமமாக எடுத்துத் தண்ணீர் விட்டரைத்து நல்லெண்ணெய் அல்லது பசுவின் நெய்யில் குழப்பி பக்குவமாக எரித்து இறக்கி வடித்து வைத்துக் கொள்க. *(சர.வை.மு.-114)*

### 17. *செப்பு நெருஞ்சி எண்ணெய்*

செப்பு நெருஞ்சி, சிறு புள்ளடி, சிறு அம்மான் பச்சரிசி, தகரை ஆகிய 5 பொருட்களின் வேர்களை வகைக்குக் கழற்சிக்காயளவு அரைத்தெடுத்து நரிப்பயிற்றங்கொடி, அகத்திப்பட்டை,வெங்காயம் ஆகிய மூன்று பொருட்களையும் வகைக்கு ஒரு கழற்சிக்காயளவு அரைத்தெடுத்துக் கொள்க. 165 மி.லி. சிற்றாமணக்கெண்ணெயை ஒரு மண்சட்டியில்

ஊற்றி அதில் மேற்கூறப்பட்ட அரைத்தெடுக்கப்பட்ட பொருட்களைச் சேர்த்து நன்றாகக் கலக்கிக் கொள்க. பிறகு அச்சட்டியின் வாய்க்கு மெல்லிய வெள்ளைத் துணி கட்டி 6 மணி நேரம் வெயிலில் வைத்துக் காலை, மாலை இரண்டு வேளையும் வேளைக்கு 5-10 மி.லி. அளவாக 5 முதல் 7 நாட்கள் கொடுத்தால் எல்லாக் கணங்களும் தீரும். தாயும் குழந்தையும் பத்தியங்காக்க வேண்டும். *(புத்.482-76,477-175)*

18. மணித்தக்காளி, வேலிப்பருத்தி, குப்பைமேனி ஆகியவற்றின் சாறுகள் மொத்தமாக 2.6.லி. எடுக்க. பசுநெய் 675 மி.லி., ஆமணக்கெண்ணெய், நல்லெண்ணெய் வகைக்கு 325 மி.லி. எடுக்க. சாறுகளுடன் சேர்த்த எண்ணெயை அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்து வடித்துக் கொள்க. இதை 5-10 மி.லி. தினமும் கொடுத்து வர கணச் சூடு தீரும். *(சர.வை.மு.-125)*

### *19. புள்ளடி எண்ணெய்*

புள்ளடியிலை, செப்பு நெருஞ்சில் இலை, வல்லாரையிலை, வறட்பூலாயிலை, கோழியவரையிலை ஆகிய இவ்வைந்து இலைகளின் சாறுகளை வகைக்கு 70மி.லி. வீதம் எடுத்து இவைகளுடன் 280கி. சிற்றாமணக்கெண்ணெய் சேர்த்துக் கலந்து கொள்க. இதில் குரோசாணி ஓமம், கடுகுரோகணி, வெளிச்சைப்பிசின், ஆலம்புல்லுருவி, சடாமாஞ்சில் ஆகிய பொருட்களை வகைக்கு 1கி. வீதமெடுத்து இடித்துப் பொடியாக்கிக் கலக்க வேண்டும். பின் எரித்துப் பக்குவமானவுடன் வடித்து வைத்துக் கொண்டு 5-10மி.லி. அளவு காலையிலும் மாலையிலுமாக வேண்டிய நாள் கொடுத்து வர கணங்கள் நீங்கிப்போகும். *(ஏடு.362-60, 6218-44), (புத்.477-290)*

20. மணித்தக்காளியிலை, துளசி, துத்தி, பிரமியிலை, வில்வம், வல்லாரை, கையாந்தகரை, பொடுதலை, நுணா, புங்கிலை, சங்கிலை ஆகியவற்றைச் சமமாக எடுத்து இடித்துச் சாறு பிழிந்து கொள்க. தான்றிக்காய், சுக்கு, கடுக்காய், திப்பிலி, அரத்தை, ஓமம், வசம்பு, கத்தூரி மஞ்சள் ஆகியவற்றை வகைக்கு 17.5 கி. எடுத்து இடித்துப் பொடித்து அதில் போடுக. சாதிக்காயையும் சேர்க்க. விளக்கெண்ணெய் 1.3லி. எடுத்து அதில் ஊற்றி எரிக்க. மெழுகு பதமாக வரும்போது பக்குவத்துடன் இறக்கி வைத்துக் கொள்க. அதனை 5-10மி.லி. கொடுக்க கணம் நீங்கும். பெரியோர்க்கு இரு அளவு கூட்டி 5 முதல் 7 நாட்களுக்குக் கொடுக்க கணம் விட்டுப்போகும். *(புத்.476-38)*

21. எருமை மாட்டின் கொம்பைச் சிறுசிறு துண்டுகளாகச் சீவி ஒரு சட்டியில் போட்டு, அடுப்பில் வைத்து எரிக்கவும். அது பொரிந்து கரிப்பக்குவமாக ஆகும். அப்போது திருகுக்கள்ளியின் மேலுள்ள பொருக்கு 5கி. கூடப்போட்டு 1.3லி. விளக்கெண்ணெய் சேர்த்து ஒன்றாகக் கிளறவும். அதை 2 நாட்கள் சூரியபுடமாக வைத்து மூன்றாவது நாள் கிளறி வைத்துக் கொண்டு 5-10மி.லி. அளவு கொடுத்துவர எட்டு வகைக் கணமும் தீரும். *(சர.வை.மு-114-115)*

22. கருஞ்சீரகம், கடுக்காய், சீரகம், கத்தூரி மஞ்சள் ஆகிய நான்கு சரக்குகளையும் நெய்யிலோ அல்லது தேனிலோ பொன்வறுவலாக வறுக்க. சீயக்காய் சிறிதளவும் பருத்திப்பிஞ்சு 2ம் எடுக்க. இவ்விரண்டையும் வெந்நீரிலோ தாய்ப்பாலிலோ அரைத்துத் தேவையான ஆமணக் கெண்ணெய் சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்கவும். அதை 5-10மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுக்கவும்.

வெட்டுப்பூலாங்கொழுந்து, உசிலங்கொழுந்து, *ஒடமானிக் கொழுந்து, கடுக்காய், வெள்ளைப்பூண்டு இவற்றை ஒன்றிரண்டாக இடித்துக் குடிநீர் செய்து 15-30 மி.லி. அளவு இருவேளை கொடுக்க கணம் நீங்கும். *(சர.வை.மு-123)*

## *23. சஞ்சீவி எண்ணெய்*

விளக்கெண்ணெய் 1.3லி. எடுத்துக்கொள்க. அவுரி, வேலிப்பருத்தி, முடக்கத்தான், தும்பை, கவுதும்பை, சடைச்சி, பெருந்தும்பை, கிரந்திநாயகம், செம்முள்ளி ஆகிய இவற்றின் சாறு வகைக்கு 325 மி.லி. எடுத்துக் கொள்க. புளியம் பிரண்டைக் கிழங்கு, கொல்லங் கோவைக்கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, ஈருள்ளி, கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள், சீரகம், வசம்பு இவற்றை வகைக்கொரு எலுமிச்சங் காயளவு எடுத்துக் கொள்க; அவற்றை அரைத்து சாற்றுடன் கலந்து காய்ச்சி வடித்து 30மி.லி. கொடுக்க சகல கணமும் நீங்கும். *(புத்.482-82)*

24. சீரகம், ஓமம், கிராம்பு, சாதிக்காய், தான்றிக்காய், ஏலம், இலவங்கம், அதிமதுரம் இவற்றைச் சம அளவு எடுத்துக் கொள்க. சாரணைச்சாறு, ஈரவெங்காயச்சாறு, வேலிப்பருத்திச்சாறு, கோவையிலைச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, விரிசிலைச்சாறு, பழம்பாசிச்சாறு, குளப்பாலைச்சாறு, பசுவின் பால், பசுவின் நெய், ஆகியவற்றைத் தேவையான அளவு எடுத்துக் கொள்க. சாரணை வேரையும், கொட்டைப்

பாக்களவு ஆலம் விழுதையும் எடுத்தரைத்துக் கூடப்போட்டு அனைத்தையும் ஒன்று சேர்த்து காய்ச்சி அனைத்தும் வெந்து பதத்தில் வரும்போது வடித்துக் கொண்டு அதனைச் சூரியன் உதயமாகும் முன்னர் உள்ளங்கையில் ஊற்றி நக்க, கணங்கள் தீரும்.

25. பேய்க்குமட்டிப்பழம், அதனிலைச்சாறு, கருஞ்சீரகம், கடுக்காய், கத்தூரி மஞ்சள், கடுகுரோகணி, திப்பிலிமூலம், அக்கராகாரம், நீர்வள்ளி, சித்தரத்தை, கிராம்பு இவற்றைக்கூட்டி விளக்கெண்ணெயில் வேகவைத்துக் கொடுக்கவும். பேதி ஆகும். பேதி கண்ட பிறகு மோர் சாதம் கொடுக்கவும். *(ஏடு.612-6-7)*

26. முடக்கத்தானிலைச் சாறு 1லி., வீளி இலைச்சாறு 1லி., தகரையிலைச்சாறு 1லி., சிற்றாமணக்கெண்ணெய் 1.3லி., எடுத்துக் கொள்க. சீரகம், கடுகுரோகணி, ஈரவெங்காயம் துவைத்த சாறு 1.3லி., கற்றாழஞ்சாறு நாரத்தங்காயளவு, சாரணைச்சாறு அரைத்து எலுமிச்சங்காயளவு எடுத்துக் கொள்க. கொட்டை நீக்கிய கடுக்காய் 10ஐ எடுக்க. இவை எல்லாவற்றையும் பசுவின் பால் வார்த்தரைத்து, சிற்றாமணக்கெண்ணெயில் வேகவைத்து, மெழுகு பதத்திலிறக்கி வடித்துக்கொள்ளவும். கண நோய் உள்ளவருக்கு 5-10 மி.லி கொடுத்தால் வயிறு கழியும். உப்பில்லாக்கஞ்சி கொடுக்கவும். வெகுவாய்க் கழிந்தால் உப்பு போட்டு கொடுக்கவும். *(ஏடு.612-18-19)*

### *27. குமரியெண்ணெய்*

சிற்றாமணக்கெண்ணெயில் அகத்திவேரை வேகவைத்து அவ்வெண்ணெயை 1.3லி. எடுத்துக் கொள்க. பசும்பால் 2.6லி எடுக்க. கற்றாழைச்சாறு 675 மி.லி. எடுக்க. இவை மூன்றையும் சேர்த்து மெழுகு பதமாய்க் காய்ச்சிக் கொள்க. சீரகம், மாசிக்காய், கோட்டம், அதிமதுரம், கிராம்பு ஆகியவற்றை 35கி. எடுத்துக் கொள்க. சுக்கு 4கி. எடுத்துக்கொள்க. வெந்தயம் 9கி. எடுக்க. கற்கத்திற்கான மேற்சொன்ன சரக்கு வகைகளை வறுத்திடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சிக் கொடுக்க கணமனைத்தும் விட்டுப் போகும். *(ஏடு.362-34-35)*

### *28. பால் எண்ணெய்*

வெள்ளாட்டுப்பால் 2.6லி., விளக்கெண்ணெய் 1.3லி. எடுக்க. திருகுக் கள்ளி 35கி., இண்டங்கொழுந்து ஒரு பிடி, சண்பகப்பூ, மதுரம், சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், ஏலம், வெள்ளுள்ளி, கருஞ்சீரகம், சீரகம், வசம்பு, விலாமிச்சம், வெட்டிவேர், நன்னாரி, சிறுநாகப்பூ,

கோரைக் கிழங்கு, பூலாங்கிழங்கு, கோரோசனை, கடுகுரோகணி, கோட்டம், *பச்சைசேவநாகல் ஆகிய இவற்றைச் சமமாய் எடுத்துப் பொடித்து மேற்சொன்ன கலவையில் ஒன்று சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. பதமாக வடித்தெடுத்த பிறகு பாலெண்ணெயைக் கொடுக்க கணமனைத்தும் நீங்கிப் போகும். கர்ப்ப கணத்திற்கு இது மிகவும் சிறந்தது. *(ஏடு.362-58-59)*

29. மருதம்பட்டை, கூவிளம்பட்டை(வில்வப்பட்டை), வேலம்பட்டை, அரசம்பட்டை, மாம்பட்டை, செப்பு நெருஞ்சில் (கருவேல்(அ) வெள்வேல்) கொழுந்து, துடரிக் கொழுந்து (இண்டங் கொழுந்து), மாதுளங்கொழுந்து, வறட்பூலாக் கொழுந்து, நீர்ப்பூலாக் கொழுந்து, விடத்தேரைக் கொழுந்து, கருவேலங்கொழுந்து, கருஞ்சீரகம், கம்பிப்பிசின், வசம்பு, ஏலரிசி, சுக்கு, சண்பகப்பூ, சதகுப்பை, நற்சீரகம், இலவங்கப்பட்டை, அதிமதுரம் ஆகிய கடைச் சரக்குகளையும், கொழுந்துகள், பட்டைகளையும் சமமாக எடுத்துக் கொள்க. கற்கமாக்கி நல்லெண்ணெய் 1.3ல் குழப்பி பக்குவமாக எரித்து இறக்கவும். இறக்கும் போது 4 துளி நெய்யைத் தெளித்து முருங்கை இலையில் இரண்டையும் வாசனைக்குக்கூட்டிக் கொள்ளவும். இதில் 5-10மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூச அனைத்து வகை கணமும், கணச்சூடும் தீரும். *(சர.வை.மு-12)*

30. மூக்கரட்டை, சாரணை, முடக்கத்தான், முத்தெருக்கஞ்செவி, செப்பு, நெருஞ்சில் ஆகியவற்றின் சாறு 1.3லி. எடுக்க. தாமரைச் சாற்றையும் 1.3லி. அளவே எடுக்க. விளக்கெண்ணெய் 2.6லி. எடுக்க. இவ்வனைத்து கலவைகளையும் ஒன்று சேர்த்து காய்ச்சி பதமாய் பக்குவபதத்தில் இறக்கி வடித்து வைத்துக் கொள்க. அதனை நோயின் தன்மை குழந்தையின் வன்மை, மென்மையை அறிந்து கொடுக்க கணங்கள் அகன்று போகும். *(ஏடு.362-53)*

### *31. பொன்னாங்காணி எண்ணெய்*

பொன்னாங்காணியிலை, துளசியிலை, தகரையிலை, கீழ்க்காய் நெல்லியிலை, வெண்ணொச்சியிலை, சின்னியிலை, நாயுருவியிலை, அம்மான் பச்சரிசியிலை, கருநொச்சியிலை, நாவற்கொழுந்து, ஆவாரைக் கொழுந்து, வேப்பங்கொழுந்து, சூரைக்கொழுந்து, முடக்கத்தான் கொழுந்து, முருங்கைத்துளிர், புங்கன் கொழுந்து, ஓரிதழ்த்தாமரை, புளியாரை, வல்லாரை, புள்ளடி, நரிப்பயற்றங்கொடி, இண்டந்தண்டு, முசுமுசுக்கை, அகத்திப் பருப்பு, சீந்தில் கொடி, ஆடாதோடை,

ஆடுதின்னாப்பாளை, விஷ்ணுகரந்தை, முட்காவேளை ஆகிய பொருட்களையெடுத்து அவற்றினின்றும் தனித்தனியாகச் சாறு எடுத்துக் கொள்க. சாறின் அளவு 1.3லி. ஆக இருக்கட்டும். அத்துடன் ஆவாரை வேர், விடதாரிவேர், நிலக்குமிழ் வேர், சிறுகீரைவேர், வில்வம்,உத்தாமணி, மிளகுத் தக்காளி, தைவேளை, சங்கம், கண்டங்கத்திரி, நாய்வேளை, குட்டிவிளா, சங்கங்குப்பி ஆகியவற்றின் வேர்களை ஒவ்வொரு பிடி கியாழமாக்கி எடுத்து 1.3லி. அளவாக எடுத்துக் கொள்க. அதனை மண் சட்டியிலூற்றிக் கொள்க. 1.3லி. சிற்றாமணக்கெண்ணெய் அதனுடன் விட்டு கலந்துக் கொள்க. முற்கூறிய மூலிகைகளின் சாறுகளை ஒன்று சேர்த்துக் கொள்க. அதில் ஆமையோடு, ஓமம், கடல்நுரை, சீரகம், திப்பிலி, கடுகுரோகணி, கிராம்பு, கருஞ்சீரகம், பற்பாடகம், மணிப்புங்கம் பழம், வசம்பு, பெருங்காயம், செங்கத்தாரிப்பட்டை ஆகிய பொருட்களை வகைக்கு 5கி. வீதம் எடுத்துப் பொடி செய்து போட்டுச் சிறுகக் காய்ச்சிப் பக்குவமானவுடன் இறக்கிக் கொள்ள வேண்டும். அதை 10 நாளைக்கு ஒரு முறை 330மி.கி அளவு காலையில் மட்டும் கொடுக்க வேண்டும். இவ்விதம் 5 அல்லது 7 முறை கொடுக்க கணம் நீங்கும்.

மீன், புளி, இறைச்சி, கரப்பான் பண்டங்கள் இவற்றை நீக்க வேண்டும். மிளகுநீர், சோறு சாப்பிடப் பலனுண்டாம்.

*(புத்.477-168-169,476-105-107,482-76)*

## *32. கிளுவை எண்ணெய்*

1.3லி சிற்றாமணக்கெண்ணெயையும், 1.3லி. வெள்ளாட்டுப் பாலையும் ஒரு மண் சட்டியிலூற்றிக் கலந்து அதில் ஒருபிடி ஈருள்ளியையும், ஒரு பிடி இண்டங்கொழுந்தையும் குறுக அரிந்து சிதைத்துச் சேர்த்து கிளுவைப்பட்டை, கருவேலம்பட்டை, நினவாய்ப் பட்டை ஆகிய மூன்றையும் வகைக்கு ஒரு பிடி எடுத்துப் பொடியாகப் போட்டு அத்துடன் 35கி. சீரகத்தையும், காசுக்கட்டியையும் பொடித்து எண்ணெய்க் கலவையில் சேர்த்து கனமான அனல் கொண்டெரித்து மெழுகு பதமாக வரும்வரை காய்ச்சி பக்குவமாக வடித்துக் கொள்க. அதனைக் கரண்டி அளவாகக் கொடுக்க எட்டு வகை கணங்கள் தீரும்.

*(புத்.477-166,476-10)*

33. ஆவின் வெண்ணெய் எலுமிச்சங்காயளவு எடுத்து சட்டிதனில் இட்டுக் கொள்க. அது உருகிவரும் போது மணித்தக்காளியைக் கொட்டைப்பாக்களவு எடுத்து அரைத்து அதில் போட்டெரித்து நன்றாக

வேகவைத்து இறக்கிக் கொண்டு அதனை 4.கி. ஐந்து நாள் கொடுக்க கணம் நீங்கிப்போகும். *(கை.பி.98-181)*

## மாத்திரை வகைகள்

1. வெங்காரம், கோரோசனை இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. கடுகுரோகணி 15கி. எடுக்க. இவற்றை ஒன்று சேர்த்து உருண்டை செய்து அதனைத் தாய்ப்பால், வெந்நீர் ஆகியவற்றில் இழைத்துக் கொடுக்க கணங்கள் நீங்கிப் போகும். *(ஏடு.6218-44)*

### *2. பூபதி மாத்திரை*

சந்தனம், நன்னாரிவேர், புளியம்வித்து ஓடு, சாத்திரபேதி, கோரைக் கிழங்கு, தாமரைவளையம், சிறுகீரைவேர், நாயுருவி வேர், வல்லாரைக் கீரை, சாதிக்காய், சாதிபத்திரி, சண்பகப்பூ, கல்நார், திப்பிலி, இருவாட்சி வேர், சீரகம், கருஞ்சீரகம், இலவங்கப்பட்டை, ஏலம், உருத்திராட்சம், கோரோசனம், பொன்னாங்காணி வேர், குப்பைமேனி வேர், மான்கொம்பு ஆகிய மருந்துப் பொருட்களைச் சரி எடை எடுத்துச் சேர்த்திடித்துப் பொடியாக்கி அவற்றை ஒன்று சேர்த்து குழிக்கல்லிலிட்டு வல்லாரைச்சாறு விட்டு 12 மணி நேரம் அரைக்க வேண்டும். பின் அதில் பொன்னாங்காணிச் சாறு விட்டு 12 மணி நேரம் அரைத்து, அவ்வரைப்பொருளை தேற்றான் விதையளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொண்டு தக்க துணைமருந்தில் வேளைக்கொரு மாத்திரை வீதம் இரு வேளையும் கொடுக்க 8 கணங்களும் நீங்கும். *(புத்.476-101-102,.482-74,477-166)*

3. *விளங்களஞ்சி, வசம்பு, ஓமம், வெள்வெங்காயம், பொடுதலை, மிளகு, திப்பிலி, ஆமையோடு இவற்றைக் களங்காதிலையின் சாற்றை விட்டரைத்து கடலை அளவாய் உருண்டை செய்து கொடுக்க கணம் நீங்கும். *(ஏடு.6218-46)*

### *4. அமிர்த சஞ்சீவிக் குளிகை*

சாத்திரபேதி, உயர்ந்த கோட்டம், ஏலம், இலவங்கம், சந்தனம், கடுகுரோகணி, இலுப்பைப்பூ, நன்னாரிவேர், விலாமிச்சம்வேர், வெட்டிவேர், திப்பிலி, அதிமதுரம், கோரைக்கிழங்கு, திராட்சைப்பழம், பேரிச்சம்பழம் ஆகிய பொருட்களைச் சமவெடையாக எடுத்துக் கருப்பஞ்சாறு விட்டு 12 மணிநேரம் வரை நன்றாக அரைத்துக் கடலையளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு

காலை, மாலை ஆகிய இருவேளையும் வேளைக்கொரு மாத்திரையாக தாய்ப்பால் அல்லது வெந்நீரில் அனுமானித்துக் கொடுக்க எண்கணம் நீங்கும். *(புத்.476-101,482-74,477-165-166)*

### *5. பாலசஞ்சீவி மாத்திரை*

கல்நார், கிராம்பு, இலவங்கப்பத்திரி, செவ்வியம், திப்பிலி, அதிவிடையம், தான்றிக்காய்த்தோல், கருஞ்சீரகம், அக்கராகாரம், கடுகுரோகணி, சாதிக்காய், சாதிப்பத்திரி, கற்கடகசிங்கி, குரோசாணிஓமம், கத்தூரி, பச்சைக்கற்பூரம், சீரகம், கோரோசனம், குங்குமப்பூ ஆகிய மருந்துப் பொருட்களையும் சரிபாகமாக எடுத்து அவற்றை இஞ்சிச்சாறுவிட்டு 3 மணிநேரம் அரைக்க வேண்டும். பின் கையான் சாறுவிட்டு மூன்று மணிநேரம் அரைக்க வேண்டும். அதன் பின் நாரத்தம் பழச்சாறு விட்டு மூன்று நாழிகை அரைத்து 65 மி.கி. அளவுள்ள மாத்திரையாக உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்க. அதனைத் தாய்ப்பாலில் அல்லது பசும்பாலிலாவது இழைத்து காலையிலும் மாலையிலும் வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் மூன்று நாள் கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்ய எண்கணமும் நீங்கும். *(புத்.476-101,482-74,477-165) (கை.பி.98-181)*

### *கீழா நெல்லிப்பால்*

கீழா நெல்லி வேர்ப்பட்டை, கறிவேப்பிலை, சீரகம், பச்சை நெல்லுமி ஆகிய இந்நான்கு சரக்குகளையும் வகைக்கு 4கி. எடுத்து இடித்து அதைத் தாய்ப்பாலில் போட்டு ஓரிரவு முழுவதும் ஊறவைக்க வேண்டும். மறுநாள் காலை அரைத்துப் பிழிந்து கொடுக்க வேண்டும். காலையில் மட்டும் மூன்று நாட்களுக்கு இதைக் கொடுக்க வேண்டும். மாலையில் பத்து மிளகைச் சாம்பலாக்கி சீரகம் 2கி. எடுத்துப் பொரிய விட்டு 80மி.லி. நீர்விட்டு இரண்டு கொதி வந்தவுடன் வடிகட்டிக் கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்ய கணம் குணமாகும். *(புத்.476-64,65,477-134)*

## கணம் வகைகள்

கணத்தின் வகைகள் இங்கு மூன்று வகைகளாகப் பகுத்துக் கொள்ளப்பெற்றுள்ளன.

1. முழுநிலை விளக்கம் பெற்ற கணங்கள்.
2. குறிகுணம் மட்டும் சொல்லப்பட்ட கணங்கள்.
3. மருத்துவம் மட்டும் சொல்லப்பட்ட கணங்கள்.

### 1. அக்கரகணம் - குறிகுணங்கள்

தாதுவானது துடித்து நிற்றல், மூக்கு, வாய் இவற்றில் சூடான ஆவியானது வருதல், அழகிய முகமானது வெளுத்துவிடுதல், சுரங்காய்தல், தலை, நாக்கு இவை வெப்பத்தால் வெந்து போதல், மூக்கிலே நீர் கொட்டுதல், தலை வலித்தல், உடலானது குளிர்ச்சியடைந்திருத்தல் ஆகியவை அக்கர கணத்தின் குறிகுணங்களாகும். *(சர.வை.மு-32)*

### அந்தகக்கணம் - குறிகுணங்கள்

சுரம் காய்ந்து அச்சுரமானது முதலில் உச்சியில் ஏற்பட்டு மூளையையும் பற்றி உடல் முழுவதுமுண்டாதல், நா அதிகமாக உலருதல், கண்கள் வெளுத்துப் போதல், பச்சை மஞ்சள் அல்லது பசும் பொன்னிறம் போல் முகம் மினுமினுத்தல் ஆகிய இக்குறிகள் காணப்பட்டால் அந்தகக் கணமாகும். *(புத்.476-86,477-152,482-71)*

### பொன்னாங்காணிக் கற்கம்

பொன்னாங்காணிக்கீரை, சிறுகீரை, அவுரிவேர்ப்பட்டை, தேற்றான் கொட்டை, கடுக்காய்த்தோல் இவற்றை வகைக்கு 35கி. எடுத்து சேர்த்து அரைத்து ஆவின் வெண்ணெயுடன் கூட்டிக் கொள்க. அதைக் கொட்டைப்பாக்களவு மூன்று நாள் காலை, மாலை இருவேளையும் கொடுத்தால் அந்தகக் கணம் நீங்கும்.

அரைத்த மருந்தை வெண்ணெயுடன் கலக்காமல் தாய்ப்பாலிற் கலந்து தலையில் பற்று போடவும். அது உலர்ந்துவிட்டால் அதை நீக்கி மீண்டும் போட்டு வந்தால் மூன்று நாளில் அந்தகக் கணந்தீரும்.
*(புத்.477-152,476-86-87,482-71)*

### 2. ஆமகணம் - குறிகுணங்கள்

சுரம் தோன்றல், அச்சுரம் ஏறுவதும் இறங்குவதுமாக இருப்பதோடு 3 மணிநேரம் விட்டு விட்டு காய்தல், தண்ணீர் வேட்கையுண்டாதல், உடம்பு மிக இளைத்தல், சீறிச் சீறியழுதல், பசியின்மை, சிந்தைமாறல், உடல்நடுங்கல், சுழித்துச் சுழித்துப் பொருமுதல், கழிச்சலாதல், மூச்சு மிக உண்டாதல், கழுத்தைக் கீழே தொங்கவிட்டிருத்தல், கை, கால் குளிருதல். கண் மூடி இருத்தல். சிலவேளை அதிக சுரம் தோன்றி சீறித்திடுக்கிடுதல் ஆகியவை ஆமகணக் குறிகுணங்கள்.
*(ஏடு.941-33,6218-34,109-226-227,476-12)(கை.பி.98-179)*

### *ஆமகணத்தில் வரும் சுரத்திற்குக் குடிநீர் வகைகள்*

1. குரோசாணி ஓமம், ஓமம், பாவட்டை, வேலிப்பருத்தி வேர், நன்மிளகு, சிற்றேரண்டம் ஆகிய இவற்றைச் சேர்த்து குடிநீராக்கிக் கொடுக்க ஆம கணத்தில் சுரம் நீங்கிப் போகும்.

*(ஏடு.362-42,6218-34)*

2. பத்து ஈருள்ளியை எடுத்துப் பொடியதாய் நறுக்கி எடுத்துக் கொள்க. வில்வம், ஆவாரை, நிலவிளா, துரிஞ்சி ஆகிய மூலிகைகளைச் சிவக்க வறுத்துக் காய்ச்சி சிறுவர்க்கு மூன்று நாள் கொடுக்க கணம் நீங்கி விடும். *(ஏடு.6218-35)*

## எண்ணெய் வகைகள்

### *1. இண்டெண்ணெய்*

இண்டம் வேர்ச்சாறு, இண்டந்தண்டுச் சாறு ஆகிய இரண்டும் வகைக்கு 1.3லி. எடுக்க. குமிழ், மாசிப்பத்திரி, புங்கு, நிலத்துளசி, உள்ளி, முடக்கத்தான், தூதுவளை, நுணாயிலை, வல்லாரை, கஞ்சாங்கோரை ஆகிய இவற்றின் சாறு வகைக்கு 325மி.லி. எடுத்து இச்சாறுகளையெல்லாம் ஒரு மண்சட்டியிலூற்றி அதில் 1.3லி. சிற்றாமணக்கு எண்ணெய் சேர்த்துக் கொள்க. அத்துடன் சாதிக்காய், கிராம்பு, ஏலம், கடுகுரோகணி, கடுக்காய்த் தோல், வால்மிளகு, ஓமம், வசம்பு, சுக்கு இவ்வொன்பதையும் வகைக்கு 35கி. வீதமெடுத்து இவற்றைத் தனித்தனியாக இளவறுப்பாக வறுத்து இடித்துத் தூளாக்கி வடிகட்டி அவ்வெண்ணெயிற் சேர்த்துக் கொள்க. பிறகு அடுப்பேற்றி எரித்துப் பக்குவமாகக் கடுகுதிரளும் பருவத்தில் இறக்க வேண்டும். அதை நாள்தோறும் காலையில் மட்டும் ஒரு வேளைக்கு 10 மி.லி. வீதம் 5 நாளைக்குக் கொடுக்க வேண்டும். மாலையில் போதுமான நிலத்துளசியைப் பிட்டவித்துப் பிழிந்த நீரை வடிகட்டி 20 மி.லி. கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்தால் ஆமகணம் நீங்கும். ஐயத்தை வளர்ச்சியடையச் செய்யும் பண்டங்கள், வாயு பண்டம் இவற்றை நீக்க வேண்டும்.

*(புத்.482-72,476-88-89,477-155) (கை.பி.98-179-180)*
*(ஏடு.109-227-228)*

### *2. எண்ணெய்*

சிற்றாமணக்கெண்ணெய் 289மி.லி., காட்டுமல்லிகை வேர்,

மஞ்சட்கடுக்காய்த்தோல், கருஞ்சீரகம், உலர்த்தின மருட்கிழங்கு, கடுகுரோகணி, வெள்ளைப்பூண்டிதழ், செம்முள்ளிவேர், குட்டிவிளா வேர், புரசம் விதைப் பருப்பு இவை வகைக்கு 45கி. எடுத்துக் கொள்க. சாதிக்காய், சாதிபத்திரி இவை வகைக்கு 6கி. எடுத்துக் கொள்க. மேற்கண்ட மருந்துச்சரக்குகளைத் தண்ணீர் வார்த்து மைபோலரைத்து எண்ணெயிற் கலக்கி மூன்றுநாள் வெயிலில் வைத்து நான்காம் நாள் அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்துக் கடுகுத் திரள்பதத்தில் வடிகட்டிப் பத்திரப்படுத்த வேண்டும். அதனை (4கி, 2கி, 1கி.,) என்ற அளவில் ஆமகணம் உள்ள குழந்தைகட்கு கொடுக்க தீரும்.

*(கை.பி.கோ.187-188)*

### *3. வேலிப்பருத்தி எண்ணெய்*

வேலிப்பருத்தி வேர், கோழியவரைவேர், கிளுவைவேர், பொடுதலை, சிவதை, கள்ளி, பச்சைவெளிச்சை, வசம்பு, உள்ளி, கடுகுரோகணி, சீரகம், கருஞ்சீரகம் ஆகிய இவற்றை வகைக்கு 5கி. வீதமெடுத்து இடித்து வெள்ளாட்டுப் பாலையும் நன்றாய்க் கலந்து மண்சட்டியிலிட்டு அதில் மேற்படி அரைத்த மருந்துகளைக் கரைத்து சிற்றாமணக்கெண்ணெயையும் சேர்த்து அடுப்பேற்றிச் சிறு தீயால் எரித்து பக்குவமாக இறக்கி வடித்து பால்குடிக்குமிடத்தில் தடவிக் குழந்தையைப் பால் குடிக்கும்படிச் செய்தால் 3 முதல் 5 நாளில் ஆமகணம் தீரும். இவ்வெண்ணெயைக் கர்ப்பமாயிருப்பவர்களுக்குக் கொடுத்தால் பிறக்கும் குழந்தைக்கு ஆமகணம் உண்டாகாது.

*(புத்.482-72,476-89,477-156), (கை.பி.98-179-180)*
*(ஏடு.109-227-228)*

4. தகரை, பொன்னாங்காணி நரிப்பயறு, வட்டக்கிலுகிலுப்பை ஆகியவற்றின் வேர்கள், வல்லாரை, வெங்காயம் ஆகிய சரக்குகளை வகைக்கு 4கி. எடுக்க. அனைத்தையும் பொடித்து கல்வத்தில் போடுக. விலாமிச்சம் வேர், சாதிக்காய், சாதிபத்திரி, பேரீச்சம்பழம், கொத்துமல்லி விதை, சீரகம்,சிறுநாகப்பூ, பெருநாகப்பூ, கோட்டம், அதிமதுரம், அக்கராகாரம், கற்கண்டு, ஏலக்காய், திராட்சைப்பழம், குரோசாணி ஓமம் ஆகிய சரக்குகளை வகைக்கு 4 கி. எடுத்து நன்றாக இடித்து சூரணித்து முன் சொன்ன கலவையுடன் சேர்க்க. இதனுடன் 5.2லி. விளக்கெண்ணெயைச் சேர்த்து சூரியபுடமாக வைக்கவும். இதனைத் தினமும் 5-10மி.லி கொடுக்க ஆமகணம் குணமாகும். எலும்புச்சுரம், வறட்கணம், இரத்தகணமும் நீங்கும். உப்பு, புளி, நீக்குக.

*(சர.வை.முறை.105-106)*

### *5. ஈரவெங்காய எண்ணெய்*

வெங்காயம், மிளகு, கடுகுரோகணி, கருஞ்சீரகம், சீரகம், கடுக்காய், மிளகுக்காயின் காம்பு இவற்றை வகைக்கு 8கி. எடுத்து சூரணம் செய்து ஈரவெங்காயச்சாற்றையும் விளக்கெண்ணெயையும் வகைக்கு 1.3லி. எடுத்து ஒன்று கலந்து வைக்க. மூககிரட்டைவேர், வெள்ளைச் சாரணைவேர், வெள்ளைப்பூண்டு இவற்றை இடித்தரைத்து மேற்கூறப் பட்ட எண்ணெயில் குழப்பி பதமாகக் காய்ச்சி வடித்திறக்கவும், இதை விடியற்காலையில் அளவறிந்து உள்ளுக்குக் கொடுக்கவும், நன்றாகப் பேதியான பின் கஞ்சி காய்ச்சிக் கொடுக்கவும். கடினமான குடல் உள்ளவர்கட்குச் சதுரக்கள்ளித் தண்டை நறுக்கி அவ்வெண்ணெயைச் சேர்த்து பதமாக எரித்து அளவறிந்து கொடுக்க கழிச்சலாகி ஆமகணத்துடன் அனைத்து நோய்களும் நீங்கும். *(சர.வை.மு-109)*

### *மருந்து*

பேய்மருட்டி, நெல்லி, வேம்பு, புளி, ஆகிய இவற்றைச் சமபங்கு எடுத்துக் கொள்க. தாமரையீர்க்கு அதிகமாக எடுத்துக் கொள்க. சீரகம், கிராம்பு, திப்பிலி ஆகியவற்றை ஒன்று சேர்த்து அனைத்தையும் முடிந்து போட்டுக் காய்ச்சி பக்குவமாக எடுத்துக் கொள்க. அதனைச் சிறுவர்களுக்குக் கொடுக்க. ஆமகணம் நீங்கும். *(எடு.941-33)*

### *தானலரும் ஆமகணம் - குறிகுணங்கள்*

மார்பு துடித்தல், சிறுநீர் மஞ்சள் நிறமாயிறங்கல், அந்நீரில் புகையைப் போல் அதிக ஆவி தோன்றல், உடம்பு கடுத்தல், கழுத்து, உடம்பு இவ்விடங்களில் இயற்கை நிறம் மாறி வேறு நிறமாகக் காணல், சிலவேளை உடம்பு கனத்து மிகவும் ஊதுதல், உடம்பு முழுவதும் அதிகமாக நோவுண்டாதல், வயிறு இரைதல், அதிகமாகத் தலைநோதல், மூக்கு மேலுக்குக் கிளம்பிக் காட்டுதல், அதிகமாக மேல்மூச்சுண்டாதல், தோல் வறளல், உடம்பு இளைத்து துரும்பு போலாதல் ஆகிய இக்குறிகள் காணப்படின் ஆமகணமாகும். இக்கணம் ஓராண்டு வரைக்கும் தொடர்வதாகும். *(புத்.477-154-155, 476-88) (கை.பி.போ.187)*

### *3. நீராமகணம் - குறிகுணங்கள்*

தண்ணீரும் சீதமும் கலந்து கழிதல், அத்தண்ணீர் பச்சை மஞ்சளை அரைத்து கலக்கிய நீர் போன்றிருத்தல், சீதம் வெண்மை நிறமாயிருக்காமல் அத்தண்ணீரின் நிறமான மஞ்சளையே அடைத்து நெய்ப்பாயிருத்தல். கண்களில் பீளை சேர்ந்து நீர்வடிதல், வயிறு

கடுத்தல், உடல் சோர்வடைதல், குடிக்கின்ற தண்ணீர் அப்படியே குடித்தது போலவே நீராய்க் கழிதல், இவை கண்டால் நீராம கணமாகும். இது தீராத நோயாகும். *(புத்.476-89,477-154)*

### *மணித்தக்காளி நெய்*

பசுவின் வெண்ணெயை எலுமிச்சங்காயளவு எடுத்து ஒருமண் சட்டியிலிட்டு உருக்க வேண்டும். அவ்வெண்ணெய் நன்றாய் உருகும்போது மணித்தக்காளியிலையைக் கொட்டைப்பாக்களவு அரைத்துக் கலக்கி எரித்து இளம் பதத்தில் இறக்கி ஆறவைக்க வேண்டும். அதைச் சிறு பிள்ளைகளுக்கு 2கி. வீதமும் பெரிய பிள்ளைகளுக்கு 4கி. வீதமும் காலையும் மாலையும் 5 முதல் 7 நாட்கள் கொடுக்க நீராமகணம் தீரும். *(புத்.476-89-90,477-154)*

### *4. பேராமகணம் - குறிகுணங்கள்*

கை, கால்கள் குளிர்ந்திருத்தல், கண் வட்டமிடுதல், சுரமடித்தல், பால் செரிக்காமை, குடித்தபடியே வாந்தியாதல், குழந்தை திடுக்கிடுதல், ஏங்குதல், சோர்வடைதல், கழிச்சலேற்படுதல், சில குழந்தைகளுக்கு வயிறு பொருமிப் பிறகு மலம் வெளிப்படுதல், சிலருக்குச் சாதாரணமாகக் கழிச்சலாதல், நெற்றியில் வலி எடுத்தல், பால் சரியாகக் குடிக்காமை, பயந்த பார்வையாய்ப் பார்த்தல் என்னும் இக்குறிகள் பேராமகணத்திற்குரியவை. *(புத்.477-160,476-93,482-72)*

உடம்பில் நீர் அதிகமாகக் கோர்த்தல், வீக்கமாய் இருத்தல், துன்பம் அதிகமாக ஏற்படுதல், தூங்கிக் கொண்டிருக்கிற கண்ணும் அடிக்கடி திறத்தல். வெளுத்துக் காணல், தாகம் ஏற்படுதல் என்னும் இக்குறிகள் பேராமகணத்திற்குரியவை. *(ஏடு.362-72,6218-51)*

### *எண்ணெய்*

தும்பை, பொடுதலை, கொழுஞ்சி ஆகியவற்றின் வேர், சீரகம், மோதகம், இந்துப்பு, திப்பிலி ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுக்க. பசுவின் மோர் 1.3லி. எடுத்து அதில் மேற்சொன்னவற்றை அரைத்துக் கலக்கி காய்ச்சிக் கொள்ள போராம கணம் நீங்கிப் போகும். *(கை.பி.98-182)*

### *தும்பைப் பக்குவ மோர்*

தும்பைவேர், பொடுதலைவேர், உத்தாமணிவேர் ஆகிய மூன்று பொருட்களையும் வகைக்கு ஒரு பலம் (35கி.) எடுத்து இடித்து ஒரு

மண் சட்டியிலிட்டு அடுப்பேற்றி எரித்துக் கடைந்து சாம்பலாக்கி, அச்சாம்பலைக் கொட்டிவிட்டு அதில் 1.3லி., எருமை மோர் விட்டுக் கொழுஞ்சி வேர்ப்பட்டை, சிறு திப்பிலி, சீரகம், ஓமம், இந்துப்பு ஆகிய 5 பொருட்களையும் வகைக்கு 5கி. வீதமெடுத்து மேற்கூறப்பட்டுள்ள மோரால் அரைத்துக் கலக்கிச் சுடவைத்துக் காலை, மாலை இரு வேளையும் குழந்தைகட்கு 15-30 மி.லி. கொடுக்கப் பேராமகணம் நீங்கும். *(புத்.476-93,477-160,482-72)*

### *5. இரத்தகணம் - குறிகுணங்கள்*

குழந்தை இடைவிடாது முக்குதல், முக்கும்போது இருமலேற்படுதல், இரத்த கழிச்சலேற்படுதல், தொடை, இடுப்பு ஆகிய இடங்களில் இழுப்புண்டாதல், தாகவிடாய் இருத்தல், சுரமிருத்தல், மனவாட்டமிருத்தல். பசியின்மை, சோறு திண்ண முடியாமை, மலத்துடன் இரத்தம் விழுதல், மூலத்தில் சூடுண்டாதல், நாடிநடை தளர்ந்து மெலிந்து காட்டல், நாக்கில் அட்சரம் தோன்றல், (நாவில் படிந்து) அடிதள்ளல் தொடக்க நிலையில் ஏற்படுதல், புறங்கால் வீங்குதல், உடம்பு வற்றுதல், கடுப்போடு கழிச்சலேற்படுதல், வயிற்றில் வலியுண்டாதல், மூலந்தள்ளல், முன்னங்கை, புறங்கை கனமாகயிருத்தல். மலமும் இரத்தமுங்கலந்து கழிச்சலேற்படுதல், அடிவீழ்தல் ஆகியவை இரத்த கணத்தின் குறிகுணங்கள்

*(புத்.476-97-98,477-160) (ஏடு.601-54)*

#### *கற்க வகைகள்*

1. ஈரவெங்காயம், புளியிலை இவற்றைச் சேர்த்து இடித்து நன்றாய் தண்ணீர் விட்டு பிழிந்து கொண்டு அதில் சீரகம், தாளிசம் இவற்றைச் சேர்த்து அரைத்து அதனைக் கொடுக்க இரத்த கணம் நீங்கிப் போகும். *(ஏடு.424-20)*

2. சிறு புள்ளடி சமூலம், வெந்தயத்தைக் கூட்டி வறுத்து இதனைக் குடிநீராக்கிக் கொள்க. சாதிக்காயைச் சேர்த்து குழப்பி கொடுக்க இரத்தகணம் நீங்கிப் போகும். *(ஏடு.424-21)*

### *3. செங்கழுநீர்க் கற்கம்*

செங்கழுநீர்ப்பூ, சீரகம், ஏலரிசி, சண்பகப்பூ, அதிமதுரம், சாதிக்கோட்டம், தூதுவளை, நன்னாரிவேர் ஆகிய இவ்வெட்டுப் பொருட்களையும் சரியாக எடுத்து தாய்ப்பால்விட்டு அரைத்து வேளைக்குக் கொட்டைப்பாக்களவாகக் காலை, மாலை இரண்டு

வேளையும் நெய்யில் குழைத்து உள்ளங்கையில் வைத்து நக்கவேண்டும். இதை 3 முதல் 5 நாட்கள் சாப்பிட வேண்டும். *(புத்.482-81,476-98,477-161)*

### *4. வில்வ இலைக்கற்கம்*

வில்வஇலை, வில்வவேர், கருவேலங்கொழுந்து, வேப்பம்விதைப் பருப்பு, சீரகம், ஆவாரம்பூ, ஏலரிசி, சாதிபத்திரி, சாதிக்காய், இலவங்கம் ஆகிய இப்பத்துப் பொருட்களையும் வகைக்கு 1கி. எடுத்து தாய்ப்பால் விட்டரைத்து ஒரு வேளைக்குக் கொட்டைப்பாக்களவு வீதம் காலையிலும் மாலையிலுமாக 3 முதல் 5 நாட்கள் கொடுத்தால் இரத்தகணம் நீங்கும். *(புத்.482-81,476-98,477-162)*

### *இரத்தகணத்தினால் அடிதள்ளினதற்கு-கரிசாலைக்கற்கம்*

கரிசலாங்கண்ணியிலை, பழம்புளி இவை இரண்டையும் சரியெடை எடுத்து அரைத்து வேளைக்குப் புன்னைக்காயளவாக ஏழு அல்லது எட்டுநாள் காலை, மாலை இரண்டு வேளையும் கொடுக்க மேற்கூறியுள்ள நோய் நீங்கும். இச்சாபத்தியத்துடன் பெரியவர்கட்கும் வழங்கலாம். *(புத்.477-161)*

## எண்ணெய் வகைகள்

### *1. சாதிக்காய் எண்ணெய்*

420 கி. சிற்றாமணக்கெண்ணெய், 210கிராம் பசுவெண்ணெய், 500கி. முருங்கையிலைச்சாறு ஆகிய இம் மூன்று பொருட்களையும் ஒரு மண்சட்டியிலூற்றி அதில் சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், இலவங்கப்பட்டை, கொத்துமல்லி, சாதிக்கோட்டம், கோரோசனம், சண்பகப்பூ, கார்போகரிசி, அதிமதுரம், இலவங்கப்பத்திரி, சீரகம், செங்கழு நீர்க்கிழங்கு, ஏலம் ஆகிய இப்பதினான்கு பொருட்களையும் வெந்நீர் விட்டரைத்துப் போட்டு பக்குவமாக எரிக்க வேண்டும். மெழுகுப் பதத்தில் வடித்து அதை வேளைக்கு 35கி. அளவினதாகக் காலையில் மாத்திரம் கொடுக்க வேண்டும். இவ்வாறு மூன்று நாள் கொடுத்து வந்தால் இரத்தகணம் தீரும். *(புத்.482-81,477-161)*

### *2. குமரி எண்ணெய்*

325 மி.லி. முத்தெண்ணெய், விளாங்காயளவு குமரிச்சோறு, இரண்டு தும்மட்டிக்காயின் சோறு, அரிந்த வெள்ளை வெங்காயம் பத்து ஆகிய இந்நான்கு பொருட்களையும் சேர்த்து அடுப்பேற்றிக்

காய்ச்ச வேண்டும். மெழுகுபதமாக இறக்கி வடித்து நான்கு நாட்களுக்கு ஒரு முறை 4 கி. காலையில் மட்டும் கொடுக்க இரத்த கணம் தீரும்.
*(புத்.482-81,476-99,477-160)*

3. செப்பு நெருஞ்சி, தகரை, பழம்பாசி, ஓரிலைத்தாமரை, நன்னாரி, சங்கு, நொச்சி, சாரணை, ஆடாதோடை, சிறுவழுதலை, இம்பூறல், பற்படாகம், கற்றாழை, நாயுருவி, சங்கங்குப்பி, வேலிப்பருத்தி, சீதாசெங்கழுநீர், மூக்குரண்டி, சிற்றாமுட்டி, தூதுவளை, கண்டங்கத்திரி, மிளகுத்தக்காளி இவற்றின் வேர் வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. மிளகுத்தக்காளி, வல்லாரை, கரிப்பான், துளசி, செம்முள்ளி, வில்வபத்திரி, அகத்தி, முசுமுசுக்கை, முடக்கத்தான், சங்கு, விஷ்ணுகரந்தை, கருவேல், தகரை, வெதுப்படக்கி, பேய்மருட்டி இவற்றினிலையைச் சாறெடுத்து 1.3லி. எடுத்துக் கொள்க

திப்பிலி, கத்தூரி மஞ்சள், கடுகுரோகணி, வசம்பு, சீரகம், மாசிக்காய், அரத்தை ஆகிய இவற்றை வகைக்கு 12கி. எடுத்துக் கொள்க. திப்பிலிமூலம், செவ்வியம், சித்திரமூலம், தேசாவரம் எனும் கண்ட திப்பிலி, ஓமம், கருஞ்சீரகம், கடுக்காய், வெங்காயம் வகைக்கு 70கி. எடுத்து அரைத்து 1.3லி. சிற்றாமணக்கெண்ணெயிற் போட்டுக் கொள்க. கிராம்பு, சாதிக்காய் வகைக்கு 4கி. பூண்டு 20கி. எடுத்து சாறுவகைகளையும் பதமாய்க் கலந்து கொள்க. அதனைக் காய்ச்சிக் கொண்டு மாதம் மூன்று முறை கொடுத்து உப்பு, புளி தள்ளிப் பத்தியமாயிருக்க இரத்தகணம் நீங்கும். *(புத்.482-82)*

4. கற்றாழைச்சாறு, விஷ்ணுகிரந்திச்சாறு, இளநீர், ஆவின் பால் வகைக்கு 1.3லி. எடுத்துக் கொள்க. வேப்பஞ்சாறு 675 மி.லி.. சிற்றாமணக் கெண்ணெய் 3.9லி. எடுக்க. அனைத்தையும் ஒன்றாகச் சேர்க்க. சந்தனம், கணப்பூடு, சிங்கி வகைக்கு 35கி. சண்பகப்பூ 17.5 கி. பச்சைப் பூலாங்கிழங்கு, ஏலம், விலாமிச்சு, வெட்டிவேர், நன்னாரி, சாதிக்காய், சாதிபத்திரி, கொத்துமல்லி, மதுரம், கோட்டம், கடுகுரோகணி, கிராம்பு, முத்தக்காசு, சன்னலவங்கம், கருஞ்சீரகம், நற்சீரகம், சிறுநாகப்பூ இவற்றை வகைக்கு 4கி. எடுத்து அரைத்து எண்ணெயிற் கலந்து பதமாய்க் காய்ச்சிக் கொள்க. அதனை 4கி. இருவேளை கொடுத்துவர இரத்தகணம் நீங்கும். *(புத்.482-100)*

இரத்த மூலகணம் மூலமும் கணமும் கலந்திருப்பதால் வரும்நோய் இரத்த வொழுக்கு மிகுதியால் ஏற்படும்.

மாத்திரை சாதிக்காய், மாசிக்காய், கிராம்பு, கோரோசனை, சீரகம், பூந்திக்காய், திப்பிலி ஆகிய இவற்றைச் சமமாய் எடுத்து மிளகளவாய் உருட்டி நிழலில் உலர்த்தி தாய்ப்பாலில் கலந்து கொடுக்க இரத்த மூலவறட்கணம் நீங்கும். *(புத்.477-162,476-99)*

### *6. உணக்கு கணம் - குறிகுணங்கள்*

ஒருநாளிலே தேகம் வற்றிவிடுதல், கண்ணும் வெளுத்துப்போதல், சுரம் காய்தல், ஒவ்வொரு நாளும் குடலைப்பிரட்டி பின் மந்தம் ஏற்படுதல், கண்கள் மஞ்சளாக இருத்தல் ஆகிய இக்குறிகுணங்கள் ஏற்படின் அது உணக்கு(உண்) கணமாகும். *(ஏடு.601-69)*

### *மருந்து*

சர்க்கரை வெண்ணெயுடன் கலந்துக் கொண்டு அதனைக் காலை, மாலையில் கொள்ள உணக்கு கணம் நீங்கிவிடும். பசுவின் நெய், நல்லெண்ணெய், சிற்றாமணக்கெண்ணெய் ஆகிய மூன்றுங் கலந்த முக்கூட்டெண்ணெயைத் தேய்த்து தலைமூழ்கி வந்தால் உணக்கு கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-70)*

### *7. உலரிக்கணம் - குறி குணங்கள்*

தாகம் அதிகமாக ஏற்படுதல், மலசலங்கள் மஞ்சளாக ஆதல். அதிகமான சூடு ஏற்படுதல், உணவேற்காமை, உடல் மெலிவாதல், கடைவாய் புண்ணாதல். உலர்ந்து போதல் ஆகியவை உலரிக்கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.424-22)*

### *பற்பம்*

வெள்ளைக் கீழ்க்காய் நெல்லியை ஒருபிடி எடுத்துக் கொள்க. வெள்ளாட்டுப்பாலில் கலந்து பிழிந்து எடுத்துக் கொள்க. பலகரைப் பற்பத்தைக் கூட்டிக் கொள்க. அதனைப் பத்தியமாக உட்கொள்ள உலரிக் காய்ச்சல் விட்டுப்போகும். *(ஏடு.424-23)*

### *8. உள்ளுரோகக் கணம் - குறி குணங்கள்*

உடம்பு ஊதிடுதல், உடம்பு காய்ந்து தலை, உடல் வற்றுதல், வாய் வெந்துவிடுதல், நாற்றமடித்தல், உள்ளுக்குள்ளேயே நோய்கள் உண்டாதல். சுரம் ஏற்பட்டு உடல் குலைவுற்று ஈரல் வற்றிவிடுதல், இரத்தம் கருகுதல், தலையில் குருதி வடிதல், சுரம் இலேசாயுண்டாதல். உடல் குலைவுற்றுவிடுதல், இரத்தம் அதிகமாகச் சிவந்து உடல்

ஊதலாதல். இரத்தம் வற்றி உடல் கருகலாகி அயர்ச்சியாதல். இரத்தம் வற்றுதல் இவையே உள்ளுரோகக் கணத்தின் குணங்கள். *(ஏடு.601-55)*

### *நெய்வகைகள்*

1. பிரமி, வல்லாரை, நெருஞ்சி, சின்னி, விருசு, *முத்தாளி, பாசி, புள்ளடி, பொன்னாங்காணி, பாற்சொற்றி, தகரை, ஆரை, மாசிக்காய், மாந்தளிர், மருது, மாதுளை, துளசி, கொவ்வை, இசங்கு, கொத்தான் ஆகிய மூலிகைகளை எடுத்து சாறு பிழிந்து வகைக்கு 325 மி.லி. எடுக்க. ஆமணக் கெண்ணெயை மேற்கூறிய சாற்றின் அளவே எடுக்க.

முக்கடுகு (சுக்கு, மிளகு, திப்பிலி) கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஏலம், முண்டகம், அதிமதுரம், கோட்டம், கிராம்பு, வசம்பு, உள்ளி, கெருடப்பச்சை ஆகிய சரக்குப் பொருட்களை 5கி. எடுத்துக் கொள்க. வெங்காயத்தை 325மி.கி. எடுத்து அதனை அரிந்து போட்டு அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. முதிர்வுப் பதமாக வரும் போது நெய்யை வடித்து 5-10 மி.லி கொள்ள உள்ளு ரோகக்கணம் பதினெட்டும் தீரும். *(ஏடு.601-56)*

### *நெய் (வேறு)*

2. சிற்றாமணக்கு முத்து, பசுவின் பால் 2.6லி. வகைக்கு எடுக்க. பாலில் கொட்டையை அவித்துப் பிறகு அதனைக் காயவைத்து இடித்துக் கொள்க. அதனுடன் இளநீர் 6.5லி. சேர்த்துக் கொண்டு எண்ணெயாகக் காய்ச்சிக் கொள்க. அதில் சாதிக்காய், குரோசாணி, சாதிபத்திரி, கிராம்பு, சீரகம், வசம்பு, ஏலம், திப்பிலி, அதிமதுரம், மாயக்காய் ஆகிய சரக்குகளை வகைக்கு 1 1/4கி. எடுக்க. அதனைத் துளசிச்சாறு, வல்லரைச்சாறு வகைக்கு 162மி.லி. எடுத்து அதில் சரக்கு வகைகளை அரைத்துக் கொள்க. அரைத்த இவற்றை ஒன்று சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதமாக வரும்போது வடித்து 4கி. குடிக்க, உள்ளுரோகம் எட்டும் நீங்கும். *(ஏடு.601-57)*

3. கொடுப்பை, தகரை, பழம்பாசி, விருசி, அகத்தியிலை, கீழ்க் காய்நெல்லி, கொவ்வை, அமிர்தவல்லி, சித்திரப்பாலை ஆகிய ஒன்பது மூலிகைகளை எடுத்துக் கொண்டு சாறெடுத்து வகைக்கு 162மி.லி. எடுக்க. வெள்ளை வெங்காயம் 5கி. எடுத்து சாறு பிழிந்துக் கொள்க.

பூண்டு, அதிமதுரம், ஏலம், இலவங்கம், கடுக்காய், கல்நார், தேற்றான், மாயக்காய், திப்பிலி, கெருடப்பச்சை, சீரகம், துருசு, கிராம்பு, சாத்திரபேதி,

கூகைநீறு, சந்தனம், நன்னாரி, கருஞ்சீரகம், இலாமிச்சம் ஆகியவற்றின் வேர்களை வகைக்கு 5கி. எடுத்து மேற்கூறிய சாறு விட்டரைத்துக் கொள்க. ஈரவெங்காயத்தை எடுத்து அரைத்து ஒன்றாக வழித்துக் கொள்க. வழித்த மருந்துடன் சாறுகளையும் சேர்த்து 1.3லி. நெய்யையும் சேர்த்துக் கலக்கி அடுப்பேற்றி காய்ச்சி மெழுகு பதமாக வரும்போது இறக்கி சீலை கொண்டு வடிகட்டி குடிக்க உள்ளுரோகக் கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-58-59)*

## *9. ஊதுகணம் - குறிகுணங்கள்*

காது, கண், உடம்பு இவைகள் பளுவாக வீங்கி பின் வற்றுதல், நாக்கு புண்ணாதல், அதனால் சுரம் உண்டாதல். உணவு செல்லாமை, கை, கால் சோர்ந்து விடுதல், உடல் வெளுத்தல், மலம் சிக்கல், இருமல் ஏற்படுதல் இக்குறிகுணங்கள் காணப்படின் அது ஊது கணம் என்றறியலாம். *(புத்.477-148,476-85)*

## *நீர்முள்ளி, நாய் வேளைக் கற்கம்*

நீர்முள்ளிச் சமூலத்தைச் சுட்டெடுத்து அக்கரியைக் கரிசலாங் கண்ணிச்சாறு விட்டரைத்து வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்துக் காலையிலும், மாலையிலுமாக மூன்று நாள் வெந்நீரில் கலக்கிக் கொடுக்கலாம்.

நாய்வேளை, வேர்ப்பட்டையைக் கரிசலாங்கண்ணிச்சாறு விட்டரைத்து வேளைக்குக் கொட்டைப் பாக்களவு வீதம் காலையிலும் மாலையிலுமாக மூன்று நாட்களுக்குத் தாய்ப்பாலில் கலக்கிக் கொடுத்தாலும் ஊது கணம் தீரும். *(புத்.477-148,476-85)*

## *நெய்*

தேங்காய் நான்கை எடுத்துத் துருவி பாலாக 5.2லி எடுத்துக் கொள்க. பிறகு மஞ்சள், திப்பிலி, முந்திரிகைப்பழம், அதிமதுரம், சிறுநாகப்பூ, கிராம்பு, சிங்கி, அரத்தை ஆகிய சரக்குப் பொருட்களை 7.5கி. எடுத்துக் கொள்க. இவற்றைத் தேங்காய்ப்பால் விட்டரைத்து கரைத்துக் கொள்க. அதனைக காய்சசி வேகவைத்து நெய்யாக வடித்தெடுத்துக் கொள்க. அதனை 4கி. கொடுக்க ஊது கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-64)*

## *எண்ணெய் வகைகள்*

1. கழற்சிக் கொடி இலையை ஒரு பிடி எடுத்து கசக்கி வாய்பேசாது

கொண்டு வந்து விளக்கெண்ணெய் 325 மி.லி-ல் போடவும்; பின்பு வெங்காயத்தைச் சிறிது சிறிதாக அரிந்து போட்டு, காலை வெயிலில் சூரியபுடமாக வைக்கவும், நன்றாகக் கிளறி எடுத்து வைத்துக் கொள்ளவும். இதைத் தினமும் 5-10 மி.லி எடுத்து சாப்பிடவும். *(சர.வை.மு-104)*

2. செப்பு நெருஞ்சி, தகரை, பழம்பாசி, ஓரிலைத்தாமரை, நன்னாரி, சங்கு, நொச்சி, சாரணை, ஆடாதோடை, சிறுவழுதலை, இம்பூறல், பற்பாடகம், கற்றாழை, நாயுருவி, சங்கங்குப்பி, வேலிப்பருத்தி, சீதா செங்கழுநீர், மூக்குரண்டி, சிற்றாமுட்டி, தூதுவளை, கண்டங்கத்திரி, மிளகுத் தக்காளி இவைகளின் வேர் வகைக்கு 9கி. எடுத்துச் சாறாக்கிக் கொள்க. மிளகுத் தக்காளி, வல்லாரை, கரப்பான் துளசி, செம்முள்ளி, வில்வபத்திரி, அகத்தி, முசுமுசுக்கை, முடக்கத்தான், சங்கு, விஷ்ணுகரந்தை கருவேர், தகரை, வெதுப்படக்கி, பேய்மருட்டி, இவைகளின் சாறு வகைக்குச் சமஅளவு எடுத்துக் கொள்க.

திப்பிலி, கத்தூரி மஞ்சள், கடுகுரோகணி, வசம்பு, சீரகம், மாசிக்காய், அரத்தை வகைக்கு 12கி. திப்பிலி மூலம், செவ்வியம், சித்திரமூலம், தேசாவரம், ஓமம், கருஞ்சீரகம், கடுக்காய், கிராம்பு, சாதிக்காய் வகைக்கு 4கி. பூடு 20கி., ஈருள்ளி 70கி., எடுத்துக் கொண்டு இவைகளெல்ல ாவற்றையும் அரைத்து 1.3லி. சிற்றாமணக் கெண்ணெயிற் போட்டு மேற்கூறியுள்ள சாறு வகைகளையுங் கலந்து கொண்டு பதமாய்க் காய்ச்சிக் கொள்க. மாதம் மூன்று முறை கொடுத்து உப்பு, புளி தள்ளி பத்தியமாயிருக்க ஊதுகணம் நீங்கும். *(புத்.482-82)*

### *3. ஆமணக்கெண்ணெய்*

ஆமணக்கெண்ணெய் 1.3லி., காட்டெருமைப்பால் 162மி.லி., எடுத்துக் கொள்க. குறிஞ்சா, வேலிப்பருத்தி, தூதுவளை, பிரமி, நொச்சி, குப்பைமேனி, வேம்பு, மிளகுத்தக்காளி, சங்கங்குப்பி ஆகியவற்றின் சாறை 335 மி.லி., எடுக்க. பெருங்காயம், ஓமம், சதகுப்பை, கிராம்பு, வாளம், கருஞ்சீரகம், வசம்பு, இந்துப்பு, திப்பிலி, வெண்கடுக்காய், சாரம் ஆகியவற்றைச் சமமாக 5கி. எடுத்துக் கொள்க. அனைத்தையும் வகைக்கு 5கி. எடுத்தரைத்து கரைத்து வைத்துக் காய்ச்சிப் பதமாக வடித்துக் கொள்க. வடித்துக் கொண்டு அதனை 5-10 மி.லி. கொள்ள ஊதுகணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-64-65)*

### *4. வேலிப்பருத்தி எண்ணெய்*

வேலிப்பருத்திக் கொழுந்து ஒருபிடி, வெள்ளைப் பூண்டு 2 பல், வசம்பு, ஓமம், கடுக்காய் இவற்றை வகைக்கு 4கி. எடுக்க. இச்சரக்குகளை ஒன்று சேர்த்து நல்லெண்ணெய் தேவையான அளவு சேர்த்து அடுப்பின் மேல் வைத்துப் பக்குவமாக எரித்து இறக்கி வைக்கவும். 5-10மி.லி. தினமும் கொடுக்க ஊதுகணம் நீங்கி நலமாகும், *(சர.வை.மு-104)*

### *5. செங்கழுநீர் எண்ணெய்*

செங்கழுநீர்க்கிழங்கு, வெண்தாமரைக்கிழங்கு, செந்தாமரைக் கிழங்கு, ஓரிலைத்தாமரைக்கிழங்கு ஆகியவற்றின் சாறுகளை வகைக்கு 325மி.லி, மாதுளம்பழச்சாறு, வல்லாரையிலைச்சாறு, தேங்காய்ப்பால் இவற்றை வகைக்கு 325மி.லி. ஆமணக் கெண்ணெய் 1.3லி. எடுக்க. அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொள்க. அதில் கண்டங்கத்தரிவேர், செங்கத்தாரி வேர், மாயக்காய், கடுக்காய்த்தோல், அதிவிடையம், வால்மிளகு, வசுவாசி இவற்றை வகைக்கு 10கி. எடுத்து சூரணமாக்கிப் போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து வைக்க. அதனை 5-10மி.லி. அளவு காலை, மாலை கொடுக்க. ஊது கணம் நீங்கும். தாய் உப்பு, புளி நீக்கவும். *(ஏடு.527-41)*

### *10. ஊதுமாந்தகணம் - குறிகுணங்கள்*

ஊதுமாந்தக் கணத்தில் கால், கண், உடல் இவை ஆலிலைபோல் வீங்குதல், இவற்றில் வீக்கம் உண்டாதல். நாக்கு புண்ணாதல், சுரங்காய்தல், உணவும் தண்ணீரும் ஏற்காமை, காலும் கையும் சோருதல், மேல் மூச்சுண்டாதல், இந்நோய் 12 ஆண்டு காலம் வரை இருக்கும். *(கை.பி.98-169), (புத்.476-68,477-148) (ஏடு.798-28, 109-212)*

### *எண்ணெய்*

முள்ளி, நீர்முள்ளி, இண்டுவேர், கையாந்தகரை, சிவகரந்தை, கண்டங்கத்திரி, மாதுளம்பழம், ஓரிலைத்தாமரை, தாமரை, செங்கழுநீர், முருக்கு, வல்லாரை ஆகிய இவைகளின் சாறு வகைக்கு 325 மி.லி. எடுக்க. தேங்காய்ப்பால் 325மி.லி. எடுக்க. 1.3லி. விளக்கெண் ணெயையும் அத்துடன் கலந்து கொள்க. பெருங்காயம், வசம்பு, ஏலம், வெட்பாலையரிசி, வட்டத்திருப்பி, பற்பாடகம், கோரைக்கிழங்கு, சூரத்தாவரை, விளாம்பிசின், வாகைப்பிசின், மருக்காரைப்பிசின்,

இலவம்பிசின், செங்கத்தாரி, மாசிக்காய், கடுக்காய், அதிவிடையம், வால்மிளகு, சாதிபத்திரி இவற்றை வகைக்கு 9கி. வீதமெடுத்துப் பொடித்து மேற்கூறிய சாறுவிட்டரைத்து மேற்சொன்ன கலவையில் கலக்க வேண்டும். பின்பு அடுப்பேற்றிக்காய்ச்சிப் பக்குவமாக வடிக்க வேண்டும். அதில் 4கி. அளவு வீதம் காலையில் மூன்று நாள் கொடுக்க வேண்டும். அப்படி குழந்தைக்குக் கொடுத்தால் ஊதுகண மாந்தம் நீங்கிப் போகும். புளிப்பு, உப்பு, புகை, எள், கவிச்சுப் பொருட்கள் இவற்றைத் தாயும் குழந்தையும் நீக்க வேண்டும்.

*(புத்.476-69,477-149), (கை.பி.98-169-170), (ஏடு.109-212-213,798-28-29)*

### *11. எரிகணம் - குறிகுணங்கள்*

உடல் முழுவதும் படுக்க முடியாதபடி எரிச்சலுண்டாதல், அவ்வலிகாரணமாக குழந்தை துடித்தல், வாய்வழியே மூச்சு விடுதல், வாயில் ஒருவகை வெப்பு நாற்றமுள்ள உமிழ் நீர் வடிதல், இந்நோய்களைத் தாங்க முடியாது அழுதல், தலைகவிழ்ந்து கீழ் நோக்கல், முகத்தை நேரே வைக்க முடியாமல் சாய்த்து வைத்துக் கொள்ளுதல். இக்குறிகள் காணப்பட்டால் எரிகணமாகும்.

*(புத்.477-153)*

### *குரும்பை எண்ணெய்*

தென்னங்குரும்பைச்சாறு, தகரைச்சாறு வகைக்கு 325மி.லி. பழம் பாசிச்சாறு, நுணாப்பட்டைச்சாறு, வெங்காயச்சாறு, குமரிவேர்ச்சாறு, வல்லாரைச்சாறு ஆகிய இவ்வேழு வகைச்சாறுகளையும் வகைக்கு 650 மி.லி. எடுத்து ஒரு மண்சட்டியில் ஊற்றி கலக்க வேண்டும். அத்துடன் ஏலம், இலவங்கப்பட்டை, கோட்டம், சீரகம், சந்தனம், அதிமதுரம் ஆகிய ஆறு பொருள்களையும் வகைக்கு 2.5கி. வீதமெடுத்து இடித்து மேற்படி சாற்றாலரைத்துச் சேர்த்துப் பக்குவமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ள வேண்டும். இவ்வெண்ணெயை 4கி. வீதம் காலையில் கொடுக்க வேண்டும். இவ்விதம் 5 முதல் 7 நாட்கள் கொடுத்தால் எரிகணம் நீங்கும். *(புத்.482-71,477-154)*

### *மாத்திரை*

ஏலக்காய், கோட்டம், மாசிப்பச்சை, இலாமிச்சை வேர், சண்பகப்பூ, சாதிபத்திரி, அதிமதுரம் இவற்றை வகைக்கு 4கி. எடுக்க. கோரோசனை 12கி. எடுக்க. அனைத்துச் சரக்குகளையும் சூரணித்து நிலவேம்பு

வேரை இடித்து அச்சாற்றினால் அரைத்து கடலை அளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்தி வைக்க. இதைத் தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க வயிற்றுக்கடுப்பு, கணச்சூடு தீரும். பெரியவர்கட்குக் கொடுக்க சுரம் நீங்கும். *(சர.வை.மு.107-108)*

### *எலும்பு அக்கிகண வறட்சிக்கு எண்ணெய்*

கொத்து மல்லி 9கி., வெந்தயம் 9கி., சீரகம் 9கி., ஈரவெங்காயம் 17கி., சாதிக்காய், தான்றிக்காய் வகைக்கொன்று மாசிக்காய்-2 அதிமதுரம், கோட்டம், சிறுதேக்கு, சிற்றரத்தை, சுக்கு, திப்பிலி, குரோசாணி, ஓமம், குங்குமப்பூ இவற்றை எடுத்துக் கொள்க. மிளகுத் தக்காளிச்சாறு., வேலிப்பருத்திச்சாறு, கிரந்திநாயகம், குப்பைமேனிச் சாறு வகைக்கு 325மி.லி., பசுவின் பால், எலுமிச்சம் பழச்சாறு, இளநீர்த்தண்ணீர் வகைக்கு 650மி.லி., ஆகிய சாறு வகைகளை இணைத்துக் கொள்க. மருந்துச் சரக்குகளைச் சேர்க்க. அனைத்தையும் கூட்டி விளக்கெண்ணெயில் வேகவைத்து உள்ளுக்குக் கொடுக்க எலும்பு அக்கிகணம் வறட்சி நீங்கி சுகமாகும். *(ஏடு.612-7-8)*

### *11. கரப்பன் கணம் - குறிகுணம்*

உடல் வறட்சியாதல், நாக்கு உலர்ந்து போதல், சிரங்கு சொறி அதிகமாக ஏற்படுதல், தாகவறட்சி ஏற்படுதல், தண்ணீர் குடிக்க வேண்டுமென்றிருத்தல், உடலில் புண்போல் ஏற்பட்டு எரிச்சல், நோவுண்டாதல், இவையே கரப்பன் கணத்தின் குறி குணங்களாகும். *(ஏடு.601-66)*

### *நெய்*

சீனிப்பாகு 70கி., வசம்பு, திரிகடுகு, கார்கோலம், கருஞ்சீரகம், கிராம்பு, கோட்டம், சாதிக்காய், ஏலம், கத்தூரி மஞ்சள், துத்தம், துருசு, வேம்பாடம் பட்டை ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. சங்கங்குப்பி, குப்பைமேனி, கழுதை விட்டை, தகரை, 5கி. எடுக்க. முசுமுசுக்கைச் சாறு 1.3லி., ஆவின் நெய் 1.3லி. எடுக்க. இத்திரவத்தில் அந்த மருந்துச் சரக்குகளை இடித்துப் போட்டு காய்ச்சி வடித்துக் கொள்க. அதை 5-10மி.லி கொடுக்க கரப்பான் கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-66-76)*

### *13. கழிகணம் - குறி குணங்கள்*

சீதமாகக் கழிதல், கெட்டபால் போல் மலங்கழிதல், கருந்தண்ணீர்

போல் கழிதல், கால் குளிர்ந்து விடுதல், ஒரு சமயத்தில் சூடு ஏற்படுதல், இந்தக் குணங்கள் ஏற்படின் அது கழிகணமாகும்.
*(ஏடு.362-30,6218-23)*

### *குடிநீர்*

இலந்தை, நாரத்தை, புளி, கணப்பூடு, நெல்லி ஆகிய இவற்றை ஒன்று சேர்த்து காய்ச்சி உண்ண கழிகணம், வறட்சிக் காய்ச்சல், தாகம், ஆகியவை நீங்கும். *(ஏடு.6218-23,362-30)*

### *மருந்து*

வெங்காயம் பத்து, ஒருபிடி கருவேல்ஈர்க்கு, சீரகம் 8 கி. வெந்தயம் தேவையான அளவு ஆகியவற்றை பதத்துடன் வறுத்து பதமறிந்து நீர் விட்டுக் காய்ச்சி அளவறிந்து கொடுக்க கழிகணம் தீரும்.
*(ஏடு.6218-23,362-30,941-24)*

## *14. குடல் சோகைக்கணம் - குறி குணங்கள்*

மருட்சியுடன் பார்த்தல், வயிறு பொருமுதல், வலி ஏற்படுதல், கண், நாக்கு உலர்ந்து விடுதல், உடம்பு வற்றுதல், உடம்பில் சூடு அதிகமாகி சுரங்காய்தல், கண்களிருண்டு வருதல். ஆகியவை குடல் சோகைக் கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.601-60)*

## *15. குடலேற்றம் கணம் - குறி குணங்கள்*

குடல் பொருமி குத்தலேற்படுதல், வயிறு இரைதல், மரத்திருத்தல், குடலைக் கலத்தல், குடல் வெளியே வருவது போல வலித்தல், ஈரலும் வலித்தல், வேம்பு போல் மலங்கழிதல், இவையே குடலேற்ற கணத்தின் குறிகுணங்களாகும். *(ஏடு.601-60)*

### *குடிநீர்*

கருவேம்பின் காம்பு, முருங்கை, வேம்பு இவற்றின் காம்புகள், வாழை, கொழிஞ்சி, பெரியதும்பை, ஆகியவற்றின் வேர்கள், சுக்கு, மிளகு, திப்பிலி, இஞ்சி, வசம்பு, மஞ்சள், பொடுதலை, வேலிப்பருத்தி ஆகிய இவற்றை எடுத்துக் கொள்க. அனைத்தையும் நன்றாக இடித்துக் கொண்டு தண்ணீர் விட்டுக் காய்ச்சிக் கொடுத்திட குடலேற்ற கணம் விட்டுப் போகும். *(ஏடு.601-60)*

### *ஆமணக்கெண்ணெய்*

ஏரண்டெண்ணெய் 650மி.லி., எடுக்க; வேலிப்பருத்தி, தும்பை,

பிரமி, கொன்றை, பேய்ப்பீர்க்கு, குறிஞ்சா, தூதுவளை, மிளகுத் தக்காளி, பேரண்டம் ஆகியவற்றின் சாறுகளை வகைக்கு 1.3லி. எடுத்துக் கொள்க. அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கடுகுரோகணி, சிவதை, நேர்வாளம் ஆகியவற்றைச் சமமாக எடுத்து சாற்றில் அரைத்துக்கொள்க. அனைத்தையும் ஒன்று சேர்த்து வேகவைத்து கொடுக்க குடலேற்ற கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-61)*

## *16. குன்றியக்கர கணம் - குறி குணங்கள்*

சிறுநீர் மஞ்சளாயிருத்தல், இடைக்கு மேல் சுரங்காய்தல், கொடிய இருமலுடன் மேல்மூச்சு காணல், குரல் கம்முதல், உடல் வெளுத்தல், உலர்ந்து விடுதல், உணவில் வெறுப்பு, ஈரல் வெந்து புண்ணாய்ப் போதல் ஆகிய்வை குன்றியக்கர கணத்தின் குறிகுணங்கள். *(சர.வை.மு.-33)*

## *17. கொதிப்புக் கணம் - குறிகுணங்கள்*

நெஞ்சு, விலா ஆகிய விடங்களில் அதிகக் கொதிப்பு இருத்தல், நெற்றி முழுவதும் வியர்வை யுண்டாதல், கண்கள் பஞ்சு போன்று வெளுத்துக் காணல், பார்க்கும் பார்வை பலவிதமாய்த் தோன்றுதல், தூங்கமுடியாமல் அடிக்கடி இருமல் உண்டாதல், அதனால் தலை தூக்க முடியாத அளவு வலி ஏற்பட்டுத் துன்பம் உண்டாதல். குரல் கம்முதல், இவைகள் கொதிப்புக் கணத்தின் குறிகுணங்களாகும். *(புத்.476-85,477-150)*

## *கற்றாழை எண்ணெய்*

1.3லி. விளக்கெண்ணெய் எடுக்க. எலுமிச்சம் பழச்சாறு இலந்தைச்சாறு, ஈருள்ளிச்சாறு வகைக்கு 325மி.லி. எடுத்து நான்கையும் கலந்து ஒரு மண் சட்டியிலூற்ற வேண்டும். பின் 9கி. கருஞ்சீரகம் எடுத்து அதை மேற்படி சாற்றாலரைத்து மண் சட்டியில் வைத்திருக்கும் கலவையோடு சேர்த்து கற்றாழஞ் சோற்றை ஏழு முறை கழுவி அதில் 35கி. எடுத்துச் சட்டியில் போட்டு அடுப்பில் வைத்துக் காய்ச்சவேண்டும். கற்றாழைச்சோறு சிவக்கும் போது கீழிறக்கி வடிகட்டி அதைக் காலை, மாலையில் இருவேளையும் ஒரு கரண்டி வீதம் சில நாள் கொடுக்க வேண்டும். இதனால் கொதிப்புக் கணம் நீங்கிப் போகும். இது பெரியோர்க்கும் சிறியோர்க்குமாகும். *(புத்.476-85-86,477-150-151)*

### *18. சத்திக்கணம் - குறி குணங்கள்*

உடம்பெல்லாம் வற்றி மாலையில் கண் சொருகிக் கொள்ளுதல், உணவில் வெறுப்புண்டாதல், எப்போதும் தண்ணீர் தாகம் ஏற்படுதல், நெடிய மூச்சு, மயக்கம் மிகவுமேற்படுதல் ஆகியவை சத்திக்கணையின் குறிகுணங்கள். *(ஏடு.601-54)*

### *19. சர்ப்பக் கணம் - குறி குணங்கள்*

கண்ணில் வெதுப்புண்டாதல், வெப்பமுடன் வயிறு கழிதல், உடல் வறட்சியாதல், அடிவயிறு தள்ளுதல், அகலமாக ஆகி மூலந்தள்ளுதல் ஆகியவை சர்ப்பக் கணத்தின் குறிகுணங்கள். இதை அசாத்திய மென்று கூறுவர் பெரியோர். *(ஏடு.601-62)*

### *20. சிங்கி மாந்தக் கணம் - குறி குணங்கள்*

உந்தியிலிருந்து ஒருவகைச் சூடு மேலெழும்புதல், அதனால் ஈரல் வெந்து புண்படுதல், அதன் பயனாகக் கடினமான மேல்மூச்சும் இழுப்பும் உண்டாகி உடல் முழுதும் வறட்சியடைந்து சுரம் ஏற்படுதல், மூச்சுத்தடங்கல் ஏற்பட்டு மயக்கம் வருதல் ஆகிய குறிகுணங்கள் சிங்கி மாந்தக் கணத்தினுடையவை. இந்நோய் குழந்தைகளைப் பதின்மூன்று வயது வரை வதைக்கும்.

*(புத்.477-163,476-77,482-66)*

### *முருவிலிக் குடிநீர்*

(முருவிலி) வவ்வாலொட்டி, நன்னாரிவேர், வெங்காயம், வசம்பு, இந்துப்பு, கடுக்காய்த்தோல், நெல்லிவற்றல், நாரத்தைவேர், எலுமிச்சம் வேர், வேளைவேர், மலைதாங்கிவேர், கீழ்க்காய் நெல்லிவேர், நிலப்பூசனை வேர், பாற்சொற்றி, குரட்டைவேர், விஷ்ணு கிரந்தி ஆகிய சரக்குகளை எடுத்துக் கொள்க. தண்ணீர் எடுத்து அனைத்தையும் போட்டுக் காய்ச்சிக் குடிநீராக்கிக் கொள்க. அதனைக் கொடுக்க சிங்கி மாந்த கணம் நீங்கிப் போகும். *(புத்.477-179,476-68)*

### *அமிர்தாதிக் குளிகை*

அதிமதுரம், கோட்டம், ஏலம், சாத்திரபேதி, சண்பகப்பூ, மாசிக்காய், இலவங்கப்பூ இவ்வேழு பொருட்களையும் வகைக்கு 9கி., எடுத்துப் பொடி செய்து கல்வத்திலிட்டுப் பின்னர் கோரோசனம் கூட்டிக்கொள்க. வெட்டிவேர், மாசிப்பத்திரிவேர், கருந்துளசி, விலாமிச்சம்வேரின் ஓடு ஆகிய நான்கு வகைச் சரக்குகளையும் ஒன்றன் பின் ஒன்றாக இட்டு,

ஒவ்வொன்றிலும் 6 மணிநேரம் அரைத்து 130மி.கி. அளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்திக் கொள்க. அதனை மாசிப்பத்திரி குடிநீரில் ஒருமாத்திரை வீதம் காலையிலும் மாலையிலும் கொடுக்க சிங்கி மாந்தக் கணம் நீங்கும். *(புத்.482-66,477-164,476-77)*

## *21. சித்திரக் கணம் - குறி குணங்கள்*

குரல் கரகரப்பாக இருத்தல், இருமலேற்படுதல், உடல், கை, விரல் கால் ஆகியவை குளிர்ந்திருத்தல், உடல் மெலிந்து போதல், வற்றி விடுதல், ஆகிய இக்குறிகுணங்கள் ஏற்படின் அது சித்திரக் கணமாகும். *(ஏடு.601-65)*

## *22. சிலேத்தும கணம் - குறி குணங்கள்*

உடல் முழுவதும் தினவும் சொறியும் உண்டாதல், அது உடம்பில் ஊறி கை, கால்களில் வீக்கம் உண்டாதல், வாய் நாற்றம் ஏற்படுதல், சுரமடித்தல், மார்பில் சளி கட்டுதல், தொண்டை புகைந்து அதனால் இருமல் உண்டாதல், மேல்வாய் வெடித்துப் புண்ணுண்டாதல், எப்பொழுதும் களைப்பாக இருத்தல் இவைகள் சிலேத்தும கணத்தின் குறிகுணமாகும். *(கை.பி.98-167)* *(புத்.482-63,476-60,477-132)* *(ஏடு.798-25)*

### *எண்ணெய்*

கோட்டம், சண்பகப்பூ, வெங்காயம், அவுரி, குமிள், கிராம்பு, விலாமிச்சு, கடுகுரோகணி, ஆகிய இவற்றை 5கி. எடுத்துக் கொள்க. நெய், நல்லெண்ணெய் ஆகியவற்றைச் சமமாக எடுத்து மருந்துச் சரக்குகளைப் போட்டு காய்ச்சி வடித்துக் கொண்டு 4கி. உள்ளுக்குக் கொடுக்க சிலேத்தும கணம் நீங்கும். *(கை.பி.98-167-168)* *(ஏடு.798-25)*

## *23. சுரக்கணம் - குறி குணங்கள்*

உடல் வற்றி கை, கால் வீங்கி மினுமினுத்து காணப்படுதல், தேகம் வெதும்புதல், பல்லைக் கடித்து அலறுதல், தலை குளிர்ச்சியாக இருத்தல், இருமல் ஏற்படுதல், சுரமும் வருதல் ஆகியவை சுரக்கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.601-33)*

### *குடிநீர்*

ஆடாதோடை, தூதுவளை, அமிர்தவல்லி, கூவிளைவேர், சங்கங்

குப்பி, நன்னாரி, முத்தக்காசு, இலந்தை, சித்தாமுட்டி, நிலவேர் ஆகிய இவற்றின் சாறுகளைச் சமமாக எடுத்துக் கொள்க. அதில் திப்பிலி, செவ்வியம், திப்பிலிமூலம், சிறுதேக்கு, அதிமதுரம், சீரகம், கொத்துமல்லி, மிளகு, நெல் பொரி ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்து இடித்துப் போட்டு காய்ச்சி எட்டிலொன்றாகக் குறுக்கி குடிநீராக்கி நான்கு நாள் குடிக்க சுரக்கணம் நீங்கும். *(ஏடு.601-34)*

### *நெய்*

வாழைப்பூ, கமுகன்பூ, (பாக்கு) தென்னம்பூ, தாழை, தாமரைப்பூ, தண்ணீர் விட்டான்கிழங்கு, கூவிளை, கொடுப்பை, வல்லாரை, கொவ்வை இலை ஆகியவற்றைச் சமமாய்க் கூட்டிக் கொள்க. பசு நெய்யை 1.3லி. அளவு எடுத்துக் கொள்க. சாதிக்காய், மாயக்காய், கல்நார், சாதிபத்திரி, கிராம்பு, ஏலம், சாத்திரபேதி, சீரகம், கெருடப்பச்சை, வசுவாசி (மீனமரம், வேங்கை) ஆகிய இவற்றை 5கி. எடுத்து பொடித்துப்போட்டுக் கொள்க. வெங்காயத்தை 325மி.கி. எடுத்து சாறு பிழிந்து மேற்சொன்ன கலவையுடன் சேர்த்து அரைத்துக் கொள்க. இக்கலவையைக் காய்ச்சிக் குழவிக்குக் கொடுக்க சுரக்கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-34-35)*

## *24. தனிச்சுரக்கணம் - குறி குணங்கள்*

மலம் சிக்கிக் கொள்ளுதல், கண்ணிலிருந்து நீர் கசிதல், உடம்பு அனலாகக் கொதித்தல், தலையது நோதல், கண்கள் சிவப்பாக ஆதல், தலை, வயிறு அனல் போல் கொதித்தல், தாய்ப்பாலில் உணவில் நாட்டமின்றி உண்ண மாட்டாமை, பலப்பல குணங்கள் ஏற்படுதல், தண்ணீர் மட்டும் அதிகமாகக் குடித்தல் ஆகியவை தனிச்சுரக்கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.601-36)*

### *குடிமருந்து*

கற்பூரவள்ளி, கணப்பூடு, இகண்டி, வெங்காயம் ஆகியவற்றின் சாறுகளை எடுத்துக் கொள்க. அதைக் காய்ச்சிக் கொள்க. அதில் தாய்ப்பாலையும் சேர்த்துக் கொடுக்க தனிச்சுரக் கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-36)*

இக்குடிநீரைக் கொடுக்க முறைச்சுரம் நீங்கிப்போகும். உடம்பில் ஏற்படும் கொப்புளங்கள் மாறிப்போகும். தனிச்சுரக்கணம் நீங்கும். *(ஏடு.601-37)*

## *25. அத்திச் சுரக்கணம் - குறி குணங்கள்*

உணவில் நாட்டமிருக்காமை, தாகம் மிக உண்டாதல், சுரங்காய்ந்து உடம்பு மெலிதல், வாந்தியெடுத்தல், தளர்ச்சியேற்படுதல், இருமல் உண்டாகுதல், ஈழை வெளிவருதல், வயிறு கழிதல், இவையே அத்திசுரக் கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.601-38)*

### *குடிநீர்*

தூதுவளை, கண்டங்கத்திரி, ஆடாதோடை, இசங்கு, குப்பைமேனி, ஆகிய மூலிகைகளைப் பிடியாக எடுத்துக் கொள்க. இஞ்சி, உள்ளி, மிளகு, சீரகம், அரத்தை, சுக்கு ஆகிய சரக்குகளை 5கி. எடுக்க. இவற்றை இடித்துப் போட்டு பிட்டவியல் செய்து பிழிந்து கொடுக்கில் அத்தி சுரக்கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-38)*

### *நெய்*

அணில்பிள்ளை, முயல் ஆகியவற்றின் இரத்தம், வல்லாரை, கொடுப்பைச் சாறு, முசுறுமுட்டை, குப்பைமேனிச்சாறு ஆகியவற்றை ஒன்று சேர்த்துக் கொள்க. அதில் அதிமதுரம், ஏலம், கிராம்பு, வால்மிளகு, குப்பைமேனி, இலவங்கம், ஆகிய சரக்குகளை 5கி. எடுக்க. ஆவின் நெய் 1.3லி, தேன் 325மி.லி., எடுத்துக் கொண்டு அதனுடன் சேர்த்து காய்ச்சி அதனை 4 கி. உட்கொள்ள சுரக்கணை, இருமல் போன்றவை விட்டுப்போகும். உடல் தெளிவாகும். *(ஏடு.601-39)*

## *26. சுழிகணம் - குறி குணங்கள்*

வயிறு, ஈரல், போன்றவை புண்ணாதல், சில சமயங்களில் பெருமூச்சு சுவாசம் ஏற்படுதல், சுரம் வந்தது போல் வருத்தமுண்டாகி மயக்கமேற்படுதல், இவ்வாறு ஏற்படின் சுழி கணமென்று கூறுவர். *(ஏடு.941-22)*

மூச்சுத்திணறல், குளிர் காய்ச்சல் உண்டாதல், கண் பஞ்சடைதல், உடம்பிலுள்ள மூட்டுக்கள் எல்லாம் முடங்கினாலும் நீட்டினாலும் நோதல். மனம் ஒரு வகையாக வெறுத்துக் கலங்கும்படி நெஞ்செறிதல், தலை உச்சி பள்ளமாய் குழி விழுதல். வாந்தி, இருமல் ஏற்படுதல், முகம், மார்பு, கழுத்து இவைகள் வீங்குதல். வயிறு, ஈரல், நெஞ்சு, தொண்டை, நாக்கு, இவைகள் வெந்து தாய்ப்பால் குடிக்க முடியாமல் அலறி அலறி அழுதல், நாரை துவளல் போல் உடம்பு துவளல், கை, கால்கள் குளிர்ந்து சில்லென்றிருத்தல், வயிறு பொருமி ஊதல், மிகவும்

அதிகமாகச் சுரங்காய்தல், வாயில் நுரையாகவும் கோழையாகவும், நீர் வெளிப்படல், நாவறளல், கண் சொருகுதல், முகம் மஞ்சள் போல் நிறம் மாறல், மயக்கம், தலை, தோள் நோதல்; இவைகள் ஏற்படின் சுழிகணமாகும். *(ஏடு.362-31, 941-24-25,612-4) (புத்.477-143)*

## குடிநீர் வகைகள்

### *1. உள்ளிக் குடிநீர்*

உள்ளியையும், வசம்பையும், சீக்கராம் பட்டையையும் எடுத்து அவற்றைத் தனித்தனியாகப் பொடியாக்கி அப்பொடியில் 35கி. எடுத்து அதை 1.3லி. நீரில் போட்டுக் காய்ச்சிக் கொள்க. அதை 170மி.லி. யாக வற்றியவுடன் இறக்கி வேளைக்கு 15 மி.லி. வீதம் காலை, மாலை ஆகிய இரு வேளையுமாக ஐந்து நாளைக்குக் கொடுக்க வேண்டும் இவ்விதம் செய்ய சுழிகணம் குணமாகும்.

*(ஏடு.169-37,362-32) (புத்.477-144)*

### *2. குடிநீர்*

வசம்பு, வெள்ளைப்பூண்டு, கோழியவரை, பேராமுட்டி, நொச்சி, வெதுப்படக்கி ஆகிய ஆறு பச்சிலைகளையும் எடுத்திடித்து சாறெடுத்து அதை முறித்துக் கிராம்புத்தூள் சேர்த்து சாப்பிடக் கொடுத்தால் கணக்கழிச்சல் நிற்கும். அப்போது வயிற்றுப் பொருமல் கண்டால் ஓமத்தைச் சட்டியிலிட்டுக் கருக்கி அதனுடன் கிராம்பு 6 எடுத்து பச்சையாகப் போட்டுக் குடிநீர் செய்து கொள்க. குடிநீர் நன்றாக வற்றியபின் கிராம்புகளை எடுத்துச் சிறிது குடிநீர் விட்டு நன்றாக அரைத்து மீதமுள்ள குடிநீருடன் குழப்பிக் கொள்ளவும்.

வசம்பின் மேல் உப்பைக் கரைத்துத்தடவி வெதுப்பவும். பின்பு உப்பை நீக்கி விட்டு வசம்பைச்சுட்டு தண்ணீர் சேர்த்து சுருக்குக் குடிநீர் போட்டுக் கொடுக்க பொருமல் தீரும். *(சர.வை.மு -119)*

### *3. கற்கடக சிங்கிக் குடிநீர்*

கண்டங்கத்திரி, முசுமுசுக்கைச்சமூலம், முள்ளிக்கீரை, சிறுதிப்பிலி, தூதுவளைச் சமூலம் இவற்றை வகைக்கு 9கி. வீதம் எடுத்துக் குறுக அரிந்து சிவக்க வறுத்து கற்கடக சிங்கி, சீந்தில்கொடி வில்வப்பழஓடு, அதிவிடையம், கடுகுரோகணி முதலியவற்றை இடித்துப் போட்டு 650மி.லி. நீர்விட்டு 170மி.லி. யாகக் காய்ச்ச வேண்டும். அதை வேளைக்கு 15 மி.லி வீதம் காலை, மாலை இருவேளையிலுமாக 3

(அல்லது) 5 நாள் கொடுத்து வந்தால் சுழிகணம், காசம் நீங்கும்.
*(புத்.477-147)*

### *4. குடிநீர்*

வில்வப்பத்திரி, துத்தி, வெங்காயம், பெருங்காயம், வெந்தயம் ஆகியவற்றைச் சமபங்கெடுத்து நன்கு வறுத்து தண்ணீர் வார்த்துக் கொதிக்கவிட்டு அதில் சீரகத்தைப் போட்டுக் குடிநீராக்கிக் குடிக்க சுழிகணம் நீங்கிவிடும். *(ஏடு.941-23)*

## கற்க வகைகள்

### *1. ஈருள்ளி கற்கம்*

35கி. ஈருள்ளியும், 35கி. துருசும் எடுத்து பொடித்து அதில் 650மி.லி. நீர்விட்டு 170மி.லி.யாக வற்றச் செய்து குடிநீராக்கி அதில் 10கி. இலுப்பைப் புண்ணாக்கைக் கரைத்துக் குழந்தைக்குக் காலையிலும் மாலையிலுமாக மூன்று நாள் கொடுத்தால் சுழி கணம் நீங்கும். *(ஏடு.362-32,941-25,169-38) (புத்.477-145)*

### *2. தூதுவளை கற்கம்*

தூதுவளை, துளசி, நுணா, சங்கு, இண்டு, பொடுதலை, செம்முள்ளி ஆகிய இவற்றின் சாறுகள் வகைக்கு 170மி.லி. எடுத்து 650மி.லி. பசுவின் நெய்யில் கூட்டி 9கி. சீரகத்தைக் கற்கமாய்ப் பசுவின் பாலில் அரைத்துக் கூட்டிக் காய்ச்சிக் காலை, மாலை இருவேளையும் மூன்று நாள் 5-10 மி.லி. வீதம் கொள்ள சுழிகணம் நீங்கும்.
*(புத்.477-145) (ஏடு.169-38,941-25)*

### *3. குப்பைமேனி எண்ணெய்க் கற்கம்*

குப்பைமேனிச் சாறு எடுத்து அதில் போதுமான உப்பை அரைத்துக் குழைத்து சிறிதளவு வேப்பெண்ணெய் கூட்டிக் கலந்து வேளைக்கு 520மி.கி. வீதம் காலை, மாலை இரு வேளையும் கொள்ள சுழி கணம் நீங்கும். *(புத்.477-145)*

### *சூரணம்*

குப்பைமேனி, சாரணை, உத்தாமணி ஆகிய மூலிகைகளின் இலைகளை வதக்கிச் சாறு பிழிந்து கொள்க. திப்பிலி, கிராம்பு, கத்தூரி மஞ்சள், கருஞ்சீரகம், கம்பிப்பிசின் ஆகிய மருந்துச் சரக்குகளைச் சமஅளவெடுத்து பொன் வறுவலாக வறுத்துச் சூரணித்துக் கொள்க.

மேற்கூறப்பட்ட சாற்றில் இச்சூரணத்தைக் கலந்து குழந்தைகளுக்கு கொடுக்க சுழிகணம் நீங்கும். *(சர.வை.மு-122)*

### *துளசி நெய்*

துளசி, தூதுவளை, நுணா, நற்சங்கன், ஈயக்கொழுந்து, பொடுதலை, செம்முள்ளி ஆகியவற்றின் சாறுகளை வகைக்கு 170மி.லி. எடுத்து ஒரு மண்சட்டியில் ஊற்றி 650மி.லி. பசுநெய்யையும் சேர்த்து அடுப்பேற்றி சிறுக எரித்து பக்குவத்துடன் இறக்கி 5-10மி.லி காலை, மாலை இருவேளையுமாக 3 முதல் 5 நாட்கள் கொடுக்க சுழிகணம் குணமாகும். *(புத்.477-146)*

## எண்ணெய் வகைகள்

### *1. ஈயக் கொழுந்து கதிர்ப்புட எண்ணெய்*

இண்டங்கொழுந்து, கண்டங்கத்திரிவேர் இம்பூறல்வேர், கடுக்காய்த்தோல் ஆகிய இந்நான்கு பொருட்களையும் வகைக்கு 18கி. எடுத்துப் பொடி செய்து அதை 325மி.லி. முத்தெண்ணெயில் கலக்கி பத்து நாள் கதிர்ப்புடம் வைத்து காலை வேளை மட்டும் கொடுக்க வேண்டும். இதை 3 முதல் 5 நாட்கள் கொடுக்க சுழிகணம் நீங்கும். *(புத்.477-144) (ஏடு.169-38,362-32)*

### *2. குன்றிமணிவேர் கதிர்ப்புட எண்ணெய்*

குன்றி, கிலுகிலுப்பை, முசுமுசுக்கை, துளசி, வில்வம் ஆகிய இவ்வேர் வகைகளை வகைக்கு 18கி., எடுத்துப் பொடியாக்கிக் கொள்க. 325மி.லி. முத்தெண்ணெயில் கலந்து 10 நாள் கதிர்ப்புடம் வைத்துக் காலையில் மட்டும் 3 முதல் 5 நாட்கள் கொடுக்க சுழிகணம் தீரும். *(ஏடு.362-32,169-38,941-25) (புத்.477-144)*

### *3. தாய்ப்பால் எண்ணெய்*

கடுக்காய்த்தோல், காட்டுமல்லியிலை, ஆலின்புல்லுருவியிலை, இண்டங்கொழுந்து, ஈருள்ளி ஆகிய இவ்வைந்து பொருட்களும் வகைக்கு 9கி. வீதம் எடுத்து இவற்றைத் தாய்ப்பால் விட்டு நன்றாக அரைத்து 325மி.லி. ஆமணக்கெண்ணெயில் கூட்டிக் காய்ச்சி காலையில் மட்டும் தக்க அளவில் கொடுக்க சுழி கணம் நீங்கும். *(ஏடு.362-52,169-36) (புத்.477-145)*

### 4. கடுக்காய் எண்ணெய

கடுக்காய்த்தோல், காட்டுமல்லிகை, கற்றாழை, வெந்தயம், சீரகம், சாரணைவேர், ஈருள்ளி ஆகியவற்றை வகைக்கு 18கி. எடுத்து அதை வெந்நீர் விட்டு நன்றாக அரைத்து 650மி.லி. ஆமணக்கெண்ணெயில் கலந்து பக்குவமாகக் காய்ச்சி வடித்து அதை 5-10 மி.லி வீதம் காலையில் மட்டும் மூன்று முதல் ஐந்து நாட்கள் கொடுத்தால் சுழிகணம் விட்டுப் போகும். *(ஏடு.362-53) (புத்.477-146)*

5. முன்னை இலையை ஒரு குத்தளவெடுத்து தேவையான அளவு விளக்கெண்ணெயில் போட்டுப் பக்குவமாகக் காய்ச்சி இறக்கவும். இதில் 5-10மி.லி. எண்ணெயெடுத்து கொடுக்க சுழி கணம் தீரும்.

கோரோசனை, கிராம்பு, இழைத்த சுக்கு இவற்றைச் சமஅளவெடுத்து கொம்புப் பாகலிலைச் சாறு விட்டரைத்து தினமும் மூன்று முறை கொடுக்க சுழி கணம் தீரும். *(சர.வை.மு-121-122)*

### 6. நந்தியாவட்டை எண்ணெய்

நந்தியாவட்டைவேர், நாய்த்துளசி வேர், சிவதை வேர், காட்டு மல்லிகை வேர் என்ற இவைகள் ஒவ்வொரு வேரையும் புன்னைக்காயளவு அரைத்துக் கண்டங்கத்திரி, தூதுவளை, சின்னி, மணித்தக்காளி, கொட்டைக்கரந்தை, குப்பைமேனி, கோழியவரையிலை இவைகளின் சாறு வகைக்கு 650 மி.லி. எடுத்துக் கொள்க. 1.3லி. விளக்கெண்ணெயை உடன் சேர்க்க. இவ்வெல்லாவற்றையும் கலந்து அடுப்பேற்றி பக்குவமாக எரித்து வடித்துக் குழந்தைகட்கு 4 கி. வீதம் காலையிலும் மாலையிலும் 3 முதல் 5 நாட்கள் கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்ய சுழிகணம் நீங்கும். தாய் இச்சாபத்தியம் காக்க வேண்டும். *(புத்.477-146)*

7. குட்டிவேல், முள்ளி, அப்பையின் கிழங்கு, தேங்காய், கிலுகிலுப்பையின் வேர், தகரை, தூதுவளை, முடக்கத்தான், குதிரைவாலி, நெருஞ்சில், செப்பு நெருஞ்சில், சிறுபுள்ளடி, கணத்தின் பூடு, சாதிக்காய், தாமரை இலையின் வகை பத்து ஆகியவற்றைக் கூட்டி அனைத்தையும் நறுக்கிக் கொள்க. எண்ணெயை அதன் மீது மிதக்கவிட்டு பத்து நாள் சூரியனில் வைத்து அதனைக் குழந்தைக்கு நோயின் வன்மைக்குத் தக்கஅளவு கொடுக்க சுழிகணம் குணமாகும். *(ஏடு.169-35)*

8. வெள்ளிண்டு கொண்டு வந்து நன்றாக நறுக்கி தாய்ப்பால் விட்டு இடித்துப் பிழிந்து எடுத்த சாற்றிற்குச் சமமாக விளக்கெண்ணெய் விட்டு வெள்ளைப்பூண்டு, வசம்பு, வெங்காயம் ஆகிய மூன்று சரக்குகளையும் எள் அளவுள்ள சிறுசிறு துண்டுகளாக அரிந்து சாறு கூட்டிய எண்ணெயில் கலந்து அடுப்பின் மேல் வைத்து பக்குவமாக எடுத்து வடிகட்டி 5-10மி.லி. உள்ளுக்குக் கொடுத்து, மேலேயும் தடவவும். குழந்தைகளின் கணம் தீரும். *(சர.வை.மு-127)*

9. ஈருள்ளி, கருஞ்சீரகம், கடுக்காய், நாட்டுக் கடுகுரோகணி ஆகியவற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. வச்சிரப்பாலையும் அதனுடன் சேர்த்துக் கொள்க. இவற்றை ஏரண்டெண்ணெயில் சேர்த்தெரித்து சுழிகணம் உள்ளவர்களுக்கு அளவறிந்து கொடுக்க அந்நோய் நீங்கிப்போகும். *(ஏடு.169-37)*

10. தகரை எண்ணெய் 1.3மி.லி. ஊற்றின ஆமணக்கு எண்ணெய், தகரைச்சாறு 1.3லி., இதை ஒன்று சேர்த்து அதில் நாயுருவிவேர், தைவேளைவேர், நாய்வேளைவேர், கொழுஞ்சிவேர், மூக்குரட்டைவேர் ஆகிய இவ்வைந்து சரக்குகளிலும் வகைக்கு எலுமிச்சங்காயளவு அரைத்துக் கலக்கிக் கொள்க. வசம்பு, ஓமம், கத்தூரி மஞ்சள், வாய்விடங்கம், வகைக்கு 20கி. வெள்ளுள்ளி 70கி., கருஞ்சீரகம், வெந்தயம், கடுகுரோகணி வகைக்கு 35கி., எடுத்து எல்லாவற்றையும் நீர்விட்டு அரைத்துக் கலக்கி மறுசட்டியில் வைக்க. அனைத்துச் சரக்குகளையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி வடித்து குழந்தைக்குக் காலையில் மாத்திரம் 3 அல்லது 5 நாட்கள் வரை புகட்டிவர சுழிகணம் நீங்கும். *(புத்.477-78-79)*

### *11. சண்பகப்பூ எண்ணெய்*

40 கி. சண்பகப்பூ, 4 கி. சாதிபத்திரியையும், 2 கி. கோரோசனையையும் எடுத்துப் பொடியாக்கி 1.3லி. விளக்கெண்ணெயில் சேர்த்துக் காய்ச்சி பக்குவ பாகத்தில் இறக்கி காலையில் 5-10 மி.லி. வீதம் கொடுத்து வந்தால் சுழிகணம் நீங்கும். *(ஏடு.169-37), (புத்.477-144)*

## *27. சூலிக்கணம் (கர்ப்பகணம்) - குறிகுணங்கள்*

சுவாசம் அதிகமாக எழும்புதல், இருமல் அதிகமாக உண்டாதல், நெஞ்சும் வாயும் மிகவும் குளிர்ந்திருத்தல், தொண்டை, நாக்கு, வெந்து சோர்வடைதல், பொருமல் ஏற்பட்டு வயிறு உப்பிக் கொள்ளல், குழந்தை தாய்ப்பாலை உண்ணாமை, முகம் மிகவும் நாற்றமடித்தல்,

உடல் வெளுத்தல், நாக்கு, உதடு, பற்கள் வெந்துபோதல், தாய்ப்பால் அருந்தாமை, நீர் எரிச்சலுண்டாகி சிவப்பாகி விழுதல், மலம் பிசின் போலிருத்தல். நுரைத்தும் விழுதல், வயிற்றில் வெப்பம் அதிகமாதல் ஆகிய இக்குறிகுணங்கள் ஏற்படின் அது கர்ப்பகணம் ஆகும்.

*(கை.பி.போ.183,98-173) (புத்.476-81,482-68)*

### *எண்ணெய் வகைகள்*

1. துளசி, நிலத்துளசி, வில்வம், சாதிபத்திரிவேர், உள்ளி, கஞ்சாங்கோரை ஆகிய மூலிகைகளின் சாற்றைத் தேவையான அளவு எடுத்துக் கொள்க. விளக்கெண்ணெய் 1.3லி. எடுக்க. தேன் 8கி. எடுத்து அனைத்தையும் ஒன்று சேர்த்து அடுப்பேற்றி காய்ச்சி பதமாக வடித்துக் கொள்க. அதனை மூன்று நாளும் 8கி. அளவு உள்ளுக்குக்கொடுக்க சூலிகணம் தீரும். *(கை.பி.98-173)*

2. சிற்றாமணக்கெண்ணெய் 325மி.லி. எடுக்க. துளசிச்சாறு, நிலத்துளசிச்சாறு, 160மி.லி. எடுக்க. கஞ்சாங்கோரை, மாசிப்பத்திரி யையும் எடுத்துக் கொள்க. இவற்றை ஒன்று சேர்த்துக் காய்ச்சி கடுகு பதம் வரும்போது சுக்கு, மிளகு, திப்பிலியை வறுத்து இடித்து உடன் சேர்க்க. 8கி. தேனையும் கலந்து நன்றாகக் கிண்டி கடுகு பதத்தில் இறக்கிக் கொள்க. அதனை 8 கி. எடுத்து குழந்தையின் தன்மை அறிந்து கொடுக்க. ஐந்து மாதக் குழந்தைக்கு எண்ணெய் ஐந்து நாள் மட்டும் கொடுக்க. ஒரு வருடம் ஆன குழந்தைக்கு ஒரு மண்டலம் (40 நாள்) கொடுக்க சூலிகணம் நீங்கும். ஐந்து வருடம் வரை இக்கணம் தொடரும். *(கை.பி.பா-183), (புத்.476-82,477-143) (எடு.424-19)*

### *மருந்து*

வல்லாரை, வெந்தயம், வெங்காயம் ஆகியவற்றைச் சமமாக எடுத்து ஒன்று சேர்த்து நன்கு வறுத்துக் கொள்க. அதற்கேற்ப நீர் சேர்த்து எட்டிலொன்றாகக் காய்ச்சிக் கொடுக்க கர்ப்பகணம் நீங்கிப் போகும்.

*(எடு.424-19,20)*

## *28. தூங்கு கணம் - குறிகுணங்கள்*

உடல் மிகவும் பலவீனமாய்ப் போயிருத்தல், உடம்பு முழுவதும் வெப்பமாக இருத்தல், கறுத்துக் காட்டுதல், குரல் குன்றி சொற்கள் குளறி வருதல் ஆகியவை தூங்கு கணத்தின் குறிகுணங்கள்

*(எடு.601-50)*

### *நெய்*

காராவின் நெய் வகைக்கு 1.3லி. எடுத்துக்கொள்க. கடுக்காய், மஞ்சள், இஞ்சி, திப்பிலி, நெல்லி, உள்ளி ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. பிரமிச்சாறு 325மி.லி. எடுக்க. 1.3லி. நெய் எடுத்துக் கொள்க. மேற்கூறிய அனைத்தையும் சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதம் வரும் போது வடித்துக் கொள்க. அதனை 5கி. அளவு கட்டியாய் எடுத்து ஏழு நாட்கள் அதுபோன்றே உட்கொள்ள ஈழை, மாந்தம் இவை வெளியேறி தூங்கு கணம் நீங்கிப்போகும். *(ஏடு.601-50)*

### *எண்ணெய்*

1. கோடகசாலை, விடத்தேரி இலை, சிறுபுள்ளடி, வசம்பு, குதிரைவாலி (முதியார் கூந்தல்) இம்பூறல், பழம்பாசி, வெள்ளுள்ளி ஆகிய மூலிகைகளைச் சம அளவு நறுக்கி நல்லெண்ணெயில் குழப்பி பதமாக எரித்து வடித்திறக்கவும். பொதுவாக கணத்திற்கு இவ்வெண்ணெயை 5-10மி.லி. அளவறிந்து கொடுக்கலாம். தூங்கு கணத்திற்கு ஆமணக்கெண்ணெயில் எடுத்து அளவறிந்து புகட்டவும். *(சர.வை.மு-112)*

### *29. தெற்கத்துக்கணம் - எண்ணெய்*

வசம்பு, ஓமம், வெள்ளுள்ளி, பெருங்காயம் ஆகிய இந்நான்கையும் வகைக்கு 9கி. எடுத்துப் பொடித்து 675மி.லி. வேப்பெண்ணெயில் கலக்க. அதனை 25 நிமிடம் வரையிலும் தண்ணீரில் கொதிக்க வைத்தெடுக்க. பிறகு அந்தச் சட்டியின் வாயில் துணிகட்டி ஆறுநாள் கதிர்ப்புடம் வைத்து எடுத்துக் கொள்க. குழந்தையின் நிலை அறிந்தும் தன்மையறிந்தும் கொடுக்க தெற்கத்துக் கணம் நீங்கிப் போகும்.

தாய்க்கும் மழலைக்கும் மிளகு நீரும் சோறும் பத்தியம் வைக்க வேண்டும். *(புத்.482-78,477-175)*

### *30. தெற்கத்து மாந்த கணம்*

### *எண்ணெய் வகைகள்*

1. வெள்ளிண்டு, தூதுவளை, சங்கங்குப்பி, வேலிப்பருத்தி, பூவரசு, குப்பைமேனி, ஆடாதோடை, சாரணை, பூலா, நரிபயிற்றங்கொடி, பிரமி, வேளை, கற்றாழை ஆகிய பதின்மூன்று மூலிகைகளின் வேரை இடித்தெடுத்தசாறு 1.3லி எடுக்க. விளக்கெண்ணெய் 2.6லி. எடுக்க. கருஞ்சீரகம், புனுகு, ஓமம், பூண்டு, கோரோசனை, சண்பகப்பூ, வசம்பு,

சாதிக்காய், தான்றிக்காய் ஆகிய இம்மருந்துச் சரக்குகளை 17.5 கி. எடுத்து சாறுவிட்டு நன்றாக அரைத்து எண்ணெயிற் கலந்து கொள்க. நன்றாகக் காய்ச்சிப் பக்குவபதத்தில் இறக்கி ஒரு கரண்டி அளவு கொடுக்க தெற்கத்து கணம் நீங்கிப்போகும். *(புத்.476-104)*

2. வேப்பெண்ணெய் 675 மி.லி., வேலிப்பருத்தி, குப்பைமேனி, வெள்ளெருக்கம் பழுப்பு ஆகிய இவைகளின் சாறு வகைக்கு 325மி.லி. எடுக்க. வெள்ளெருக்கு, நொச்சி, முருங்கை இவைகளின் பட்டை வகைக்கொரு பிடி, ஒருத்தலைப்பூடு 35கி., வசம்பு, அரத்தை வகைக்கு 4கி. எடுத்து இவற்றைத் தட்டி ஒன்றாய்க் கலந்து காய்ச்சி 5-10 மி.லி வீதம் 3 நாள் கொடுக்க தெற்கத்து கணமாந்தம் நீங்கும். *(புத்.482-78)*

### *31. நிரம்பக்கணம் - குறிகுணங்கள்*

வயிற்றில் அதிகமாய் வலியுண்டாதல், நீராகவும் சீதமாகவும் இரத்தமாகவும் பச்சையாகவும் மஞ்சள் போலும் கழிச்சல் ஏற்படுதல், கண்ணில் நீர் வடிதல், பீளையுந்தள்ளல், கருப்பாகி உளைச்சலுடன் வாடி இருத்தல். ஆகியவை நிரம்பக்கணத்தின் குறிகுணங்கள். *(கை.பி.98-180)*

### *32. நீர்க்கணம் - குறிகுணங்கள்*

கண்ணின் நிறம் வேறாதல், மருட்சியாகப் பார்த்தல், உச்சியில் குழிவிழுதல், கணத்தில் மாறுபாடுண்டாதல். குரல் கம்மி வார்த்தைகள் குழறுதல், முகத்தில் குருக்களும் வேர்வையுமுண்டாதல். வயிறு சூடாக இருத்தல். *(ஏடு.941-31,362-38)*

தலையில் நீரேறிக் கனமாகிக் கொள்ளுதல், சளி பிடித்தாற் போல் நீரேறிக் கொள்ளுதல், உடம்பு, மார்பகங்கள் இவற்றில் நீர் கோர்த்துக் கொண்டு நடக்க முடியாமை, ஓடவும் முடியாமை, மலமும் சிறுநீரும் சிவக்கும், வாயில் நீரூறி அருவருப்பையுண்டாக்கும். *(ஏடு.601-67)*

அதிக நீர் வேட்கை ஏற்படும். உடலில் கை, கால்களில் வேர்வை அதிகமாக ஏற்படும். உடனே வெதுப்பேறபடுதல், கண்கள் பார்க்க முடியாத படி தாழுதல், நாக்கு, வாய் இவைகளில் நீர் வறண்டு புண்ணாதல், நாவெடிப்பு, நீராகக் கழிதல், முகத்திலும் புறங்கை, புறங்காலில் அதிக மினுமினுப்புக் காணுதல், மயக்கம் உண்டாதல், உடலிற் சோர்வு ஏற்படுதல், நீங்காத வயிற்று நோயுண்டாகுதல். சோகமாக இருத்தல், முதலில் சிறு சூடுண்டாகி பின் அச்சுரமானது அப்படியே விட்டு விட்டுக் காய்தல், பனிநீர் போன்று கழிச்சல் அடிக்கடி

ஏற்படுதல், துடையிடுக்குகளில் உஷ்ணம் உண்டாதல், மூக்கிலிருந்து நீர் வடிதல், தாகத்துடன் கடுமையான தலைவலியுமேற்படல் ஆகிய இக்குறிகுணங்கள் நீர்க்கணத்தினுடையவை. *(புத்.477-141,476-78) (சர.வை.மு-27)*

### *சாரணைக் குடிநீர்*

சாரணைக்காய், மூக்குரட்டைக்காய், பொடுதலைக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, துளசியிலை, சீரகம் ஆகிய சரக்குகளை வகைக்கு 4கி. எடுத்து இடித்து மண்சட்டியிலிட்டு 170மி.லி. தண்ணீர் விட்டு 65மி.லி. யாகக் குறையக் காய்ச்சிக் கொடுக்கவும். இவ்விதம் வேளைக்கு வேளை புதிதாகப் போட்டு 3 நாளைக்கு காலையிலும். மாலையிலும் கொடுத்து வந்தால் நீர்க்கணம் நீங்கும்.

*(ஏடு.362-38) (புத்.477-141, 482-67)*

### *நெய்*

முசுட்டையிலை, ஆவாரைவேர், உள்ளி விதை ஆகியவற்றோடு கொடுப்பை, ஆடாதோடை, மருதந்தோல், கைதோன்றி, கண்ணுப் பீளை, தூதுவளை ஆகிய இவற்றின் சாறுகளை வகைக்கு 675 மி.லி. எடுத்துக் கொள்க.

ஏலம், அதிமதுரம், சாதிக்காய், கோட்டம், சதகுப்பை, கொத்துமல்லி, சீரகம், கிராம்பு, கருஞ்சீரகம், திரிகடுகு, இருவேலி ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. நன்றாக அரைத்து ஆவின்நெய்யை 1.3லி. எடுத்து ஒன்று சேர்த்து எரிக்கவிட்டு நன்றாகக் காய்ச்சி நீர்க்கணம் உள்ள குழந்தைகளுக்குக் கொடுக்க நீங்கிப்போகும். *(ஏடு.601-67-68)*

### *மருந்து*

ஆல், ஆவாரை, விடத்தாரை, கருவேல் ஆகிய மூலிகைகளின் கொழுந்து பட்டை, அகத்திப்பட்டை, தெங்கு மொக்கு ஆகியவற்றைச் சம அளவு எடுக்க. சீரகம், அதிவிடையம், கிராம்பு, சாதிக்காய் ஆகியவற்றைத் தீயில் வாட்டிப் பொடித்துக் கொள்க. விளாவின் பிசினை எடுத்துப் பொடித்துக் கொள்க. மேற்கூறியவற்றை ஒன்று சேர்த்துப் போட்டு தண்ணீர்விட்டு எட்டிலொன்றாகக் காய்ச்சிக் குடிக்க நீர்க்கணம் நீங்கிப்போகும். *(ஏடு.941-31-32)*

### *33. நீர்மாந்தகணம் - குறி குணங்கள்*

மூக்கில் நீர் வடிதல், இருமல் இருத்தல், விட்டு விட்டு காய்ச்சல் இருத்தல், வயிறு பொருமி இரைதல், பலவிதமாகப் பேதியாதல், கண் சொருகுதல், உடம்பு முகம் சோர்ந்து காணுதல், தலைபிரட்டல், மயக்கமுண்டாகுதல் இக்குறி குணங்கள் காணப்பட்டால் அது நீர்மாந்த கணமாகும். *(புத்.477-142)*

### *அமிர்தாதிக் குளிகை*

அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், கோரோசனம், சாத்திரபேதி, வெட்டிவேர், கோட்டம், மாசிப்பத்திரி, விலாமிச்சம் வேர் ஆகிய இவைகளைச் சரியளவு எடுத்து இடித்து அதை ஆதொண்டைச் சாறு விட்டு 3 மணி நேரம் அரைத்து 130மி.கி. அளவு மாத்திரை செய்து வேளைக்கு ஒரு மாத்திரையாக தாய்ப்பாலில் கலந்து காலையிலும் மாலையிலுமாக மூன்று நாள் கொடுக்க வேண்டும். அவ்விதம் கொடுத்து வந்தால் கணத்தால் பெருகுநீர், மாந்தகணம் நீங்கிப் போகும். *(புத்.477-142)*

### *34. பட்சிக்கணம் - குறி குணங்கள்*

உடல் வற்றிப் போகுதல், கண்ணில் சுக்கிரன் (வெள்ளைப் பூ) உண்டாதல், அடி தள்ளி கடுப்புடன் சலம் விழுதல், வயிறு வலித்தல், இத்தகு குறிகுணங்கள் ஏற்படின் அது பட்சிக் கணமெனப்படும். *(ஏடு.601-62)*

### *35. பாலக் கணம் - குறி குணங்கள்*

உடல் வற்றிப்போதல், குடலில் பாலும் தங்காமை, நெஞ்சும் குவிந்து, நோதல், உடல் நிறம், மொழி ஆகியவை வேறுபாட்டினை யடைதல், தூக்கம் வருதல், கண் வெப்பமாக விருத்தல். இத்தகு குறிகுணங்கள் பால கணையினுடையவை. *(ஏடு.601-69)*

### *சண்பகப்பூ மாத்திரை*

சண்பகப்பூ, வால்மிளகு, உண்ணி, ஓமம், வசம்பு, கிராம்பு இவற்றை வகைக்கு 5கி. எடுத்து பொடுதலைச் சாற்றால் 12 மணி நேரம் அரைத்து தூதுளங்காயளவு மாத்திரை செய்து கொள்க. அவற்றை நொச்சி, துளசி, முசுமுசுக்கை ஆகிய மூலிகைகளின் இலைகளை வகைக்குப்பிடி எடுத்திடித்து பிட்டவித்து சாறு பிழிந்து கொள்க. அச்சாற்றில் ஒரு மாத்திரையை இழைத்துக் கொடுக்க பாலகணம் நீங்கும். *(புத்.527-40)*

## *36. பித்தகணம் - குறி குணங்கள்*

உடல் தகதகவென எரிதல், நாளாக ஆக உடல் உலருதல், மார்புபிடித்தல், நாக்கிலும் கடைவாயிலும் புண்ணுண்டாதல், சுரமிருத்தல், அதனால் உடல் எரிதல், மஞ்சள் நிறமாய் வயிறு மிகக் கழிதல், மயக்கம் அடிக்கடி உண்டாதல், தலை கிறுகிறுப்புமிருத்தல்.
*(புத்.482-63,477-132,476-60) (ஏடு.7313-22,798-24)*

உணவில் வெறுப்பாய் இருத்தல், உடல்வெளுத்தல், வாய் கசத்தல், வயிறு பொருமி குத்தி வலித்தல், உடலைப்புரட்டியெடுத்தல், வாந்தி ஏற்படுதல், வயிறு சூடாயிருத்தல், உடலும் சூடாயிருத்தல் ஆகியவை பித்தகணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.435-44)*

### *குடிநீர் வகைகள்*

1. முத்தக்காசு, வில்வயிலை, முதியோர்கூந்தல், துளசி, வல்லாரை, கொடுப்பை, மருதந்தோல், நத்தைச்சூரிவேர் ஆகிய இம்மூலிகைகளின் வேர்களை வகைக்கு ஒரு கைப்பிடி அளவு எடுக்க. ஏலம், சீரகம், சிங்கி, சண்பகப்பூ, கோட்டம், அதிமதுரம், விலாமிச்சு, சிறுவேலி ஆகிய சரக்குகளை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. அனைத்தையும் பொடித்து தண்ணீரில் கலந்து எட்டொன்றாய்க் காய்ச்சிக் குடிக்க பித்தகணம் நீங்கிப் போகும். *(ஏடு.435-44-45)*

2. சிறுதேக்கு, வாய்விடங்கம், வால்மிளகு, கடுகுரோகணி, சுக்கு, ஏலம், திப்பிலி, இலவங்கம், தான்றி, தக்கோலம், கசகசாப்பால் ஆகியவற்றை வகைக்கு 9கி. எடுத்துக்கொள்க. இச்சரக்குகளைப் பொடித்து 2.6லி. தண்ணீர் எடுத்து காய்ச்சி எட்டொன்றாகக் குறுக்கிக் கொடுத்திட பித்தகணம் விட்டேகும். *(புத்.572-51)*

### *நெய்*

பொன்னாங்காணி, சிறுகீரை, துளசி, மாதுளை, கூவிளை, முசுமுசுக்கை, வல்லாரை, தாமரை, அமிர்தவல்லி ஆகிய இவற்றின் சாறுகளை வகைக்கு 325 மி.லி. எடுத்துக் கொள்க. வெங்காயத்தின் சாற்றினை 325 மி.லி. எடுக்க. இஞ்சி, ஏலம், சன்ன லவங்கப்பட்டை, கிராம்பு, சாதிக்காய், மாயக்காய், அரத்தை, வசுவாசி, அதிமதுரம், சாத்திரபேதி, சதகுப்பை, நெல்லி, சாரபருப்பு ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுக்க. மேற்சொன்ன சாறுகளின் கலவையில் இம்மருந்துச் சரக்குகளை அரைத்துக் கொள்க. பிறகு 1.3லி. நெய்யைக் கூட்டி காய்ச்சிக் கொள்க. அதனை மெழுகுபதத்தில் வடித்துக் கொள்க.

அதில் சீனியிட்டு பித்த கணமுள்ளவர்க்குக் கொடுக்க நீங்கிப் போகும். *(ஏடு.601-35-36)*

## எண்ணெய் வகைகள்

### *1. ஏரண்டெண்ணெய்*

ஆமணக்கெண்ணெய் 165மி.லி. எடுத்து அதில் கருஞ்சீரகம், கடுகுரோகணி, காட்டு மல்லிகையிலை, ஈரவெங்காயம் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து தட்டிப்போட்டு நன்கு காய்ச்சிக் கொள்க. அதில் 5-10மி.லி. அளவெடுத்து தாய்ப்பாலில் கலந்து கொடுக்க பித்த கணம் நீங்கும். *(புத்.527-39-40)*

2. கடுக்காய், வெங்காயம், நீலி, கூவிளைவேர், ஆகிய இவற்றை வகைக்கு 15கி. எடுத்துக் கொள்க. விளக்கெண்ணெய் 1.3லி. எடுக்க. மேற்சொன்ன சரக்குகளை நீர்விட்டரைத்துக் கொள்க. பிறகு எண்ணெயில் கலந்து காய்ச்சி இறக்கிப் பதமாய் வடித்துக் கொள்க. அதனை 4கி. குழந்தைக்கு கொடுக்க பித்த கணம் நீங்கிப்போகும். *(கை.பி.98-167), (ஏடு.798-24,7313-22)*

### *37. பிரளிகணம் - குறி குணங்கள்*

வயிறு பொருமுதல், வீங்குதல், ஏப்பமுண்டாதல்; சில சமயம் மலச்சிக்கலேற்படுதல், சில வேளை இடித்த மாவைப்போல் கழிதல். உடல் புண் போல் நோதல், குடலைப் புரட்டி வலித்தல், பால் உண்ணாமை, உடம்பு வலிமையைக் கெடுத்தல், வாயுலருதல், மேல் மூச்சுண்டாதல், கண்கள் சுழலல், உடல் இளைத்தல், அடிக்கடி முக்குதல், மூக்கிலிருந்து முத்துப்போல் நீர் வடிதல், இத்தகைய குறிகுணங்கள் பிரளி கணத்திற்குரியவையாகும். *(கை.பி.98-174-175) (புத்.477-142,476-82-83,482-69)*

முகத்தில் மஞ்சள் போல் மணமுண்டாகுதல், மலம் கட்டுதல் ஆகியவையும் பிரளி கணத்திற்குரியவை ஆகும். *(கை.பி.98-174-175)*

## எண்ணெய் வகைகள்

### *தும்மட்டிக்காய் எண்ணெய்*

1.3 லி. சிற்றாமணக்கெண்ணெயில் 4 தும்மட்டிக்காயையும் 2.6லி. வெங்காயத்தையும் சிறுக அரிந்து போட வேண்டும். அத்துடன் மாகாணிப் பணவெடை கருஞ்சீரகத்தையும் அரைக்கால் பணவெடை

கடுகுரோகணியையும் மாகாணிப்பணவெடை கத்தூரி மஞ்சளையும் சேர்த்திடித்துப் பொடியாக்கிப் போட்டுக் கொள்ள வேண்டும். பிறகு அடுப்பேற்றிக் காய்ச்சிப் பதமாக இறக்கி 16மி.லி. அளவு எடுத்துக் காலையில் மட்டும் 3 நாள் கொடுக்க வேண்டும். இவ்வெண்ணெயால் கழிச்சலாகும். மாமிசம் கொடுக்கக்கூடாது, பத்தியங் கொள்ளல் வேண்டும். *(புத்.476-83,477-143,482-69)*

2. சிற்றேரண்டெண்ணெய் 1.3லி. எடுக்க. பேய்க்குமட்டிக்காய் 4, வெண்காயம் 2 எடுத்து இடித்துப் போடுக. கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள் ஆகியவற்றை மாகாணிப் பலம் எடுக்க. கடுகுரோகணி 4.5 பலம் எடுத்துக் கொள்க. இவற்றைப் பொடித்து மேற்சொன்ன எண்ணெயிலிட்டுக் காய்ச்சி மெழுகு பதமாக வரும்போது இறக்கிக் கொள்க. அதனை 16 மி.லி. 3 நாள் அந்தி சந்தி கொடுக்க பிரளி கணம் நீங்கும். கஞ்சி குடித்தல் பத்தியம். *(கை.பி.98-175-176)*

### *38. பிறக்கணம் - குறி குணங்கள்*

வயிறுப்பி உப்பி பச்சென்றாவது, கட்டியும் நீருமாகவாவது வெள்ளை நிறமாகவாவது கழியும், நன்றாகத் தோய்ந்த தயிர் போல வெள்ளை நிறமாகவாவது கழியும், தூக்கம் அதிகமாகும். பால் நன்றாகக் குடிக்கும். பிறகு அதைக் கக்கவிடும், உடல் காயும், கண்சொருகும், கண்கள், கால்கள் சில்லென்றாகிவிடும், தலைபுரட்டும் ஆகியவை பிறக்கணத்தின் குறிகுணங்கள். *(புத்.477-151,476-83)*

### *எண்ணெய் வகைகள்*

1. வல்லாரை, கோழியவரை, கஞ்சாங்கோரை, சானகிப்பூண்டு, ஒற்றைப் பேய்மருட்டி, இரட்டைபேய்மருட்டி, துடரி, சிறுபுள்ளடி, ஆகிய மூலிகைகளின் சாறுகளை எடுத்துக் கொள்க. சாற்றின் அளவாகவே சிற்றாமணக்கெண்ணெயை எடுத்துச் சேர்க்க. அதில் உள்ளி, கருஞ்சீரகம், வசம்பு ஆகிய சரக்குகளை வகைக்கு 5கி. எடுத்து இடித்துப் பொடித்து அதில் சேர்த்து காய்ச்சி 4கி. மூன்று நாட்களுக்குக் கொடுக்க பிறக்கணம் நீங்கிப் போகும். *(புத்.477-152,476-83-84, 482-69-70,482-69)*

2. வல்லாரை, கோழியவரை, சானகியிலை, வேளை, தும்பை, பெருமுட்டை பீநாறி, இரட்டை பேய்மருட்டி, உப்பிலிக்கொடி, சிறு புள்ளடி ஆகியவற்றின் சாறுகளை 280மி.லி. எடுத்துக்கொள்க. வசம்பு, கருஞ்சீரகம், கண்டங்கத்திரி ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்துக்

கொள்க. எண்ணெயை 280மி.லி.. எடுத்துக் கொள்க. எண்ணெயையும் சாறையும் சேர்த்து மருந்துச் சரக்குகளின் பொடியைக் கலந்து காய்ச்சி வடித்துக் கொள்ளவும். *(ஏடு.619-9)*

### *39. பொருமு கணம் - எண்ணெய்*

சாணக்கி ஒருபிடி, வெள்ளைப்பூண்டு 1, வசம்பு 1 எடுத்து இவற்றை வதக்கி இடித்துச் சாறு பிழிந்து கொள்க. அதில் 15-30மி.லி. உள்ளுக்குப் புகட்டி குழந்தையின் உடம்பின் மேலேயும் தடவவும். இவ்வாறு மூன்று நாட்களுக்கு இரண்டு வேளை வீதம் செய்து வர பொருமு கணம் தீரும். *(சர.வை.மு-126)*

### *40. மகாகணம் - குறி குணங்கள்*

முகம், புறங்கால், புறங்கை இவைகள் வீங்கி, மினுமினுத்தல், இரண்டு கண்களும் வெளுத்துக் காணுதல், நஞ்சுண்டது போன்ற மயக்கம் உண்டாதல், உடம்பில் மிகுதியாகச் சுரம் ஏற்படுதல், நாவும் உதடும் வெடித்துப் புண்ணாதல், இவை மகாகணத்தின் குறிகுணங்களாம். இதனை மகர கணமென்றும் கூறுவர். *(கை.பி.98-174) (புத்.482-69,476-82,477-147) (ஏடு.941-23,362-29)*

### *சிறுகீரை வேர்க்குடிநீர்*

சிறுகீரைவேர், விட்டுணுகிராந்திச்சமூலம், கீழாநெல்லிச்சமூலம், சிறுபீளையிலை, எருமுட்டை பீநாறியிலை, சீந்திற் கொடி, ஆடாதோடையிலை, இவற்றில் இலை வகைகளை வகைக்கு 1.3லி. எடுத்துக் குறுக அரிந்து இளவறுப்பாய் வறுத்துக் கொள்க. சீந்திற்கொடி 9கி., சிறுகீரை வேர் 9கி., எடுத்து நறுக்கிப் போட்டு 650மில்லி தண்ணீர் விட்டு 85மி.லி. யாகக் காய்ச்சி காலையிலும் மாலையிலுமாக 3 முதல் 5 நாட்கள் கொடுத்தால் மேற்படி மகாகணம் நீங்கிப் போகும். *(கை.பி.98-174) (புத்.482-69,476-82,477-147) (ஏடு.941-23,362-29)*

### *41. மகேந்திரகணம் - குறி குணங்கள்*

மாலைக்கண் போல தோற்றமளித்தல், மதியத்தில் மந்தமாக இருத்தல், சீதக்கழிச்சல் ஏற்படுதல், சோர்வாக இருத்தல், கண்ணில் நீர் வடிதல், வரிவிழுதல், உடல் இளைத்தல், உடல் காய்ந்து சுரம் வருதல், கண்கள் பாழாகி விடுதல், வயிறு மிகவும் பருத்தல், கருவிழிக்குக் கீழாக பிறை போல வளர்ந்துவிடுதல், சுக்கிரன் வந்தால் மரணம் ஏற்படுதல் ஆகியவை மகேந்திரக் கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.601-45-46,601-59)*

### *நெய் வகைகள்*

1. மதுரம்பட்டை, வில்வம், நன்னாரி, கருவேலிலைப்பட்டை, சிற்றாமுட்டியின் வேர் ஆகிய இவற்றை 35கி. எடுத்துக் கொள்க. இவற்றை இடித்துத் தூளாக்கி நீர்விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி எடுத்துக் கொள்க. துளசி, கீழாநெல்லி, தண்ணீர் விட்டான், நற்கோவை, கொடுப்பை, வல்லாரை, விரிசு, பழம்பாசி ஆகிய மூலிகைகளின் சாறு 325மி.லி. எடுத்துக் கொள்க. மேற்கூறிய குடிநீரையும் சேர்த்துக் கொள்க.

கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி, சீரகம், மதுரம், கல்நார், திப்பிலி ஆகிய சரக்குகளை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. இவற்றை அரைத்துக் கொள்க. நெய் 1.3லி. எடுக்க. அனைத்தையும் ஒன்று சேர்த்து காய்ச்சி மெழுகு பதமாக ஆகிவரும்போது இறக்கி 4கி. கொடுக்க மகேந்திரகணம் நீங்கிப் போகும். *(ஏடு.435-40-41,59)*

2. மாதுளை இலையும் பிஞ்சும், அத்தி, ஆல் மொட்டுகள், தூதுவளை, துளசி, வல்லாரை, பருத்திப்பிஞ்சு, பழம்பாசி, கொடுப்பை, முசுமுசுக்கை, நற்கோவை, தண்ணீர்விட்டான் ஆகியவற்றின் சாறுகளை வகைக்கு 325 மி.லி. எடுக்க. மதுரம், சாதிக்காய், சீரகம், சாதிபத்திரி, ஏலம், கல்நார், கெருடப்பச்சை ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. நெய் 1.3லி. எடுக்க. அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதமாக வரும்போது வடித்துக்கொள்க. 4 கி. கொடுக்க தீரும். *(ஏடு.435-41-42)*

### *42. மந்தாரகணம் - குறி குணங்கள்*

கணமும் மாந்தமும் ஒன்று சேர்ந்தால் மாலை நேரங்களில் சுரம், மயக்கம், விடா மேல்மூச்சு, வயிறுப்புதல் எனும் குறிகள் ஏற்படும். இவை மந்தார கணத்தினுடையவையாகும். *(புத்.476-87,477-153)*

### *நாயுருவி எண்ணெய்*

நாயுருவி, கரிசாலை, வல்லாரை, கவிழ்தும்பை, கண்டங்கத்தரி, கருநொச்சி ஆகிய இம்மூலிகைகளின் சாற்றை 325மி.லி. எடுத்துக் கொள்க. வெள்ளுள்ளி, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த்தோல், நெல்லி வற்றல், தான்றிக்காய்த்தோல் ஆகியவற்றை வகைக்கு 35கி. எடுக்க. வசம்பு, இலவங்கம் இவற்றில் 8கி. எடுக்க. 10.7 லி. நீர் விட்டு மேற்சொன்ன கடைச்சரக்குகளை இடித்துப் போட்டு காய்ச்சி குடி நீராக்கிக் கொள்க. சிற்றாமணக்கு எண்ணெயை 1.3லி. எடுத்து

மேற்கூறிய சாறுகளையும் குடிநீரையும் சேர்த்து காய்ச்சி கடுகு பதத்தில் சிவந்து வரும்போது பக்குவத்தில் வடித்துக் கொள்க. இதைக் காலையில் 5-10 மி.லி வீதங் கொடுக்க மந்தார கணம் முதலிய எண்கணங்கள் நீங்கும். *(புத்.477-153,476-87)*

### *43. மாந்தகணம் - குறி குணங்கள்*

தாயானவள் தலைக்கு எண்ணெய் தேய்த்து சுத்தநீரில் முழுகி உணவு உண்டவுடன் மயக்கம், கோபம், தாகம் முதலியவைகளால் படுத்து உறங்கிவிட்டால், அதன் காரணமாக மேல் நோக்குங்கால் மிகுதிப்பட்டு மிகுந்த விரக துன்பம் நேரிடும். இதன் காரணமாகப் புருட சையோகஞ் செய்வதால் உடல் நொந்து நடுக்கால் வெளிப்பட்டு உந்தியிற் புகுந்து குளிர்ச்சியையுண்டாக்கல், அதன் காரணமாக ஏழு நாள் வரை தலையிடிப்பு, கபாலசூலை உண்டாதல். அதன் பிறகு ஏழு நாள் கழிந்து, உடல் வெளுத்தல், வயிறு நோதல் ஆகிய குணங்களேற்படும். 'சூதக நோய்' என்றும் பாசி போல் நாபியில் அழுக்கு சேர்ந்து இருக்குமென்றும் அழற் சூட்டால் உந்தி முதல் வெந்து போன நோயென்றும் தந்திர வாயுவால் உண்டான சன்னி என்றும் கூறுவர்.

இப்படிப்பட்ட காலத்தில் தங்கிப் பிறக்கும் குழவிக்குப் பத்து நாள் வரை பால் கிடைக்கும். பிறகு மூலச் சூட்டால் பாலானது கல்போல் கட்டுதல், இப்பாலைப் பருகிய குழந்தைக்கு உடம்பு இளைத்தல், தலைவலி, வாந்தி, வாய்நீர் பெருகுதல், தலைச்சுற்றுண்டாதல் ஆகியவை உண்டாகும்.

இரண்டு ஆண்டு கழிந்தபிறகு அப்பிள்ளை தேங்காய், வாழைப்பழம், தித்திப்பு, வடை, பாயாசம், பலாப்பழம், மீன், அரிசி, அடை இவற்றைச் சாப்பிடுவதால் மாந்த கண நோயுண்டாகும்.

மாந்தநோயால் கணம் பற்றிய குழந்தை அந்நோய்கண்ட எட்டு நாளைக்குள் பொருமலேற்பட்டு வாந்தி செய்தல், தலை சுற்றல், வயிறு இரைச்சலுடன் பச்சையாகக் கழிதல், விழி சுழன்று நாக்கு உலருதல், நடப்பதில் அசதி, அழுதல், அதிக தாகம் ஏற்படுவதால் வருந்துதல், இளைப்பேற்படுதல் இவை முதல் நான்கு நாட்கள் வரை கொடுமையாயிருத்தல். போன்ற குறிகுணங்கள் ஏற்படின் அது மாந்தகணம். *(ஏடு.7313-23) (கை.பி.167-168) (புத்.477-135)*

*பச்சிலைச்சாறு*

நொச்சியிலை, துளசியிலை, முசுமுசுக்கையிலை ஆகிய இம்மூன்றையும் வகைக்கு ஒருபிடி வீதம் எடுத்துப் பிட்டவியலாகச் செய்து சாறு பிழிந்து அதைக் காலையிலும் மாலையிலும் 15 மி.லி. கொடுத்து வர மாந்தகணம் நீங்கும், *(புத்.477-137)*

## குடிநீர் வகைகள்

### *1. விட்டுணுக்கிரந்திக் குடிநீர்*

விட்டுணுக்கிரந்தி, துளசி, திப்பிலி, மாமரத்துப்புல்லுருவி ஆகிய நான்கு சரக்குகளையும் வகைக்கு 4கி. வீதம் எடுத்து 325மி.லி. நீர்விட்டு 85மி.லி.யாகக் குறுக்கி குடிநீர் செய்து 15 மி.லி. வீதம் காலையிலும் மாலையிலும் கொடுத்து வந்தால் மாந்த கணம் நீங்கும். *(புத்.477-137)*

### *2. புங்கு ஈர்க்கு முடிக்குடிநீர்*

புங்கு, புளி, நொச்சில், மா, வேம்பு, கருவேப்பிலை, நாரத்தை, பொன்னாவாரை இவைகளின் ஈர்க்கு, பொடுதலை, வேலிப்பருத்தி, சங்கன், அவுரி இவைகளின் இலை வகைக்குப் பிடியொன்று சட்டியிலிட்டுக் கொள்க. அதில் கடுகுரோகணி, ஓமம், இந்துப்பு ஆகியவற்றை வகைக்கு 4கி. வீதமெடுத்துச் சீலையில் முடிந்து வைத்துக் கொள்க. அதில் 1.3லி. நீர் விட்டுச் சுண்ட எரித்தபின் சீலை முடிச்சை எடுத்து அதனுள் வெந்திருக்கும் மருந்தை அரைத்து மீதமுள்ள குடிநீரில் கரைத்து வேண்டிய நாளளவு வேளைக்கு 30 மி.லி. வீதம் கொடுத்தால் மாந்த கணம் நீங்கும். *(புத்.477-140-141)*

### *3. நன்னாரிக் குடிநீர்*

நன்னாரி, சிறுகீரை, காட்டு மல்லிகை ஆகியவற்றின் வேர்கள், நாவற்பட்டை, ஈயத்துண்டு, சங்கம்வேர், பாவட்டைவேர், அவுரிவேர், கொழுஞ்சி வேர்ப்பட்டை, வட்டக்கிலுகிலுப்பை ஆகிய 10 சரக்குகளையும் வகைக்கு 9கி. வீதமெடுத்து இடித்து ஒரு மண் சட்டியில் 650 மி.லி. தண்ணீர் விட்டு அதில் மேற்படி இடித்து வைத்திருக்கும் சரக்குகளைப் போட்டு அதை 85 மி.லி. யாக வற்றக் காய்ச்சி அதை வேளைக்கு 30 மி.லி. 3 முதல் 5 நாட்கள் கொடுத்து வந்தால் மாந்தகணம் நீங்கும். *(புத்.477-139)*

4. துளசி, செம்முள்ளி, தும்பை, கஞ்சாங்கோரை, தைவேளை

ஆகியவற்றின் இலைகளை எடுத்துக் கொள்க. நற்சீரகத்தையும் சேர்த்துப் போட்டு வேகவைத்துச் சாறு பிழிந்து கொடுக்க மாந்தகணம் தீரும்.

சாரணை வேர்ப்பப்டை, தேசாவரம் ஆகிய இவற்றைச் சமமாய் எடுத்து தண்ணீர் விட்டு குடிநீராய்க் காய்ச்சிக் கொடுக்க மாந்த கணம் நீங்கும். *(புத்.482-77)*

ஒருதலைப்பூடு 35கி., வசம்பு, அரத்தை வகைக்கு 4கி., எடுத்து இவையனைத்தையும் தட்டி, நசுக்கி, ஒன்றாய்க் கலந்து காய்ச்சி 16மி.லி. வீதம் மூன்று நாட்கள் கொடுக்க மாந்த கணம் நீங்கும். *(புத்.482-78)*

### *வால்மிளகுக் கற்கம்*

வால்மிளகு, வெள்ளைப்பூண்டு, ஓமம், வசம்பு, கருஞ்சீரகம், கிராம்பு, சண்பகப்பூ ஆகிய இவ்வேழு சரக்குகளையும் வகைக்கு 1கி. வீதமெடுத்து அதைப் பொடுதலைச் சாற்றால் 12 மணிநேரம் அரைத்து சுண்டைக்காயளவு காலையிலும் மாலையிலும் தேவையான அளவில் 3 முதல் 5 நாட்கள் அல்லது நோய் வன்மைக்குத் தக்கவாறு கொடுத்தால் மாந்த கணம் நீங்கும். *(கை.பி. 98-168-169) (புத் 477-139) (ஏடு.7313-25)*

## நெய்வகைகள்

### *1. வெள்ளாட்டுப்பால் நெய்*

வெள்ளாட்டுப்பால் 2.6லி., ஆமணக்கு நெய் 1.3லி., திருகுக்கள்ளிப்பால் 35கி., இண்டங் கொழுந்து ஒருபிடி, சண்ட கப்பூ, அதிமதுரம், சாதிக்காய், சாதிபத்திரி, வசம்பு, இலவங்கம், ஏலரிசி, ஒருதலை வெள்ளுள்ளி, சீரகம், கருஞ்சீரகம், வசம்பு, விலாமிச்சம் வேர், வெட்டிவேர், நன்னாரி வேர், சிறு நாகப்பூ, கோரைக்கிழங்கு, கிச்சிலிக் கிழங்கு, கடுக்காய்த்தோல், கடுகு ரோகணி, பச்சிலை, சுக்கு இவற்றை வகைக்கு 2கி. சேர்த்திடித்து வெள்ளாட்டுப்பாலால் அரைத்துக் கலக்கிக் கொள்க. அத்துடன் கோரோசனையைத் தூள்செய்து கூட்டி அடுப்பில் வைத்து எரித்து பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக்கொள்க. குழந்தைகட்கு 16.மி.லி. அளவு தாய்ப்பாலுடன் கலந்து காலையில் மாத்திரம் 3 அல்லது 5 நாட்கள் கொடுக்க வேண்டும். அதனால் மாந்த கணம் நீங்கிப் போகும். *(புத்.477-135-136)*

### *2. வேலிப்பருத்தி நெய்*

175கி. எருமை வெண்ணெயைச் சட்டியிலிட்டு அது காய்ந்து வரும் நேரத்தில் உத்தாமணிச் சமூலம், வெள்ளைச்சாரணைவேர், குட்டிவிளாவேர், பூண்டு, வேளைவேர், சுட்ட வசம்பு, வெள்ளை வெங்காயம், கொம்மட்டி ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்து அரைத்து சேர்த்துப் பதமாய் காய்ந்த பின் வடித்து வைத்துக் கொண்டு 16 மி.லி எடுத்து 30 மி.லி தாய்ப்பாலில் கூட்டி நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுத்தால் மாந்த கணம் நீங்கும்.

*(ஏடு.7313-24) (கை.பி.98-168), (புத்.477-139)*

3. வசம்பு, கடுக்காய், திப்பிலி, கருஞ்சீரகம், அரத்தை, அசமதாகம், சேங்கொட்டை, பூலாவிருட்சம், சந்தனம், கொடிவேலி, பருத்தி, மாவிலை, ஆவரையின் கொழுந்து, சாரணையின் வேர் ஆகிய சரக்குகளைச் சமமாய் எடுத்துக் கொள்க. இவையனைத்தையும் அரைத்து நல்லெண்ணெயில் சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. அதனைக் காசள்வு கொடுக்க மாந்த கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-73)*

### *சாரணை இளகம்*

சாரணை வேர்ப்பட்டையும், திப்பிலி மூலமும், சமவெடை எடுத்து இடித்து வடிகட்டி இளக முறைப்படி போதுமான அளவு தேன்விட்டு இளகமாக்கி நோய் வன்மைக்குத் தக்க அளவு குழந்தைகளுக்குக் கொடுத்து வந்தால் மாந்தகணம், பொருமல் நீங்கிச் சுகமாகும்.

*(புத்.477-141)*

## எண்ணெய் வகைகள்

### *1. வல்லாரை எண்ணெய்*

பொன்னாங்காணி, வல்லாரை, புளியாரை ஆகிய கீரை வகைகள், கீழாநெல்லி, துளசியிலை, சிறுபுள்ளடியிலை, வறட்பூலாயிலை, தகரையிலை, ஓரிதழ்த்தாமரை, புங்கு, கோழியாவாரை, தூதுவளை, அம்மான்பச்சரிசி, துவரை, பீர்க்கு, வெண்ணொச்சி, அவரை, செந்நாயுருவி, முட்காய்வேளை, நிலக்கடம்பு, ஆடுதின்னாப்பாளை, உத்தாமணி, மிளகுத்தக்காளி, ஆடாதோடை, கருநொச்சி, நாய்வேளை, சிறுசின்னி, வேம்பு, காவட்டம்புல், கணப்பூண்டு, நுணா, முதியார் கூந்தல், சிறுகீரை, முசுமுசுக்கை, முருங்கை, பொன்முசுட்டை, அத்தி, நிலக்குமிழ், ஆவாரை, சுரை, விட்டுணுகிரந்தி, சங்கங்குப்பி, பீச்சங்கு, தாளி, நாவல்தளிர், கண்டங்கத்திரி, வில்வம், குட்டிவிளா ஆகியவற்றின்

இலைகள், நரிப்பயற்றங்கொடி, சீந்தில் கொடி ஆகிய சரக்குகளைச் சரி கூட்டிப் பிழிந்து அதிலிருந்து 1.3லி. சாறு எடுத்துக் கொள்க. அதனுடன் 2.6லி. சிற்றாமணக்கு நெய் கலந்துக் கொள்க. அதில் சீரகம், கிராம்பு, வசம்பு ஆகியவற்றை 4கி. எடுத்து 335மி.லி. நீர்விட்டு 85மி.லி. குடிநீர் செய்து கொள்க. அதனைச் 30 மி.லி வீதம் காலையிலும் மாலையிலும் கொடுத்து வந்தால் மாந்த கணம் நீங்கும்.

*(புத்.477-136-137)*

## *2. வல்லாரை எண்ணெய் (வேறு)*

வல்லாரை, பிரமி, சிறுசெருப்படை, நீர்முள்ளி, மணித்தக்காளி, முசுமுசுக்கை, பெரிய தக்காளி, துளசி, கோழியவரை, நெய்ச்சிட்டி ஆகிய பத்தையும் வக்கைக்கு ஒருபிடி எடுத்து இடித்துப் பிழிந்து 325மி.லி. சாறு எடுத்துக் கொள்க. 650மி.லி. சிற்றாமணக்கெண்ணெய், ஒருகைப்பிடி வெங்காயச்சாறு, ஒரு சிரங்கை தும்மட்டிக்காய்ச் சாறு, ஆகிய சாறுகளை எடுத்து ஒன்று சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. கடுகு பதத்தில் வரும் போது கார்போகி, பூண்டு, கருஞ்சீரகம், சுட்ட வசம்பு ஆகிய நான்கையும் வகைக்கு 4கி. எடுத்துப் பொடித்துச் சேர்த்து மெழுகு பதத்தில் இறக்கி வடிகட்டிக் கொள்க. அதனை 16மி.லி. வீதம் காலையில் கொடுத்து வர மாந்தகணம் நீங்கும்.

*(கை.பி.98-168) (புத்.477-140) (ஏடு.7313-23-24)*

## *3. புள்ளடி எண்ணெய்*

புள்ளடி, பொடுதலை, தகரை, மிளகுத்தக்காளி, கருநொச்சி, பழம்பாசி, வெள்ளுள்ளி, வசம்பு, வெங்காயம் ஆகிய இவைகளின் சாறு வகைக்கு 170மி.லி. எடுத்து சிற்றாமணக்கு எண்ணெய் 1.5லி. எடுத்து இரண்டையும் ஒன்றாய்க் கூட்டி எரித்துப் பக்குவ பாகத்தில் வடித்துக் காலையில் மாத்திரம் 16மி.லி. எடுத்து குழந்தைக்குக் கொடுக்க வேண்டும். அத்துடன் மாலையில் சுக்கு, ஓமம், வட்டத்திருப்பி, வேளைவேர், ஏலரிசி, சித்திரமூல வேர்ப்பட்டை, திப்பிலி இவ்வேழும் வகைக்கு 1 கிராம் வீதம் சமமாகக் கூட்டிக் குடிநீர் செய்து கொடுக்க வேண்டும். *(புத்.477-138)*

## *4. மருள் எண்ணெய்*

மருட்கிழங்கும், வெள்ளுள்ளியும் வகைக்கு 35கி. வீதமெடுத்து அத்துடன் எலுமிச்சம் பழச்சாறு 170மி.லி. சிற்றாமணக்கெண்ணெய் 325மி.லி.யும் சேர்த்து காய்ச்சி வடித்த எண்ணெயில் காலையில்

மட்டும் 16மி.லி, வீதம் வேண்டிய நாள் வரைக் கொடுத்து வர மாந்தகணம் விட்டுப் போகும். *(புத்.477-140)*

5. ஈரமுள்ள பேய்ச்சுரை வேர் 150கி. எடுத்து அதை நன்றாகக் கழுவி அனலில் வெதுப்பி இடித்துப் பிழிந்த சாறு 325மி.லி. எடுத்து, மிளகுப் பொடியைச் சேர்த்து அடுப்பின் மேல் வைத்துக் குழம்பாகக் காய்ச்சவும். அதில் குழந்தையின் வயது, நோயின் வன்மை, மென்மை அறிந்து அளவறிந்து தோய்ந்த தயிருடன் கலந்து கொடுக்க மாந்த கண நோய் தீரும். *(சர.வை.மு-126)*

### *6. நுணா எண்ணெய்*

1.3லி. சிற்றாமணக்கெண்ணெயும், 1.3லி. நுணா இலைச்சாறும், 1.3லி. வெங்காயச்சாறும் எடுத்து சேர்த்து அடுப்பில் வைத்துக் காய்ச்சிக் கொள்க. காய்ந்து வரும் நேரத்தில், வில்வக் கொழுந்து 2 பிடி, பொரித்த 4 கி. வெங்காரம், சீரகம் இவற்றை 8 கி. கடுக்காய்த்தோல் பொடி ஆகியவற்றைச் சேர்த்துப் பதத்தில் வடித்து வைத்துக் கொண்டு 15 மி.லி. வீதம் கொடுக்கத் தீரும். *(புத்.477-140)*

7. தூதுவளை, நாயுருவி, கரிப்பான், வல்லாரை, தும்பை, நொச்சி, கண்டங்கத்திரி ஆகிய இவற்றின் சாறு வகைக்கு 325மி.லி. சிற்றாமணக்கெண்ணெய் 1.3லி. எடுத்து இவற்றை ஒன்றாய்க் கலந்து அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், வெள்ளுள்ளி, வசம்பு ஆகியவற்றை வகைக்கு 15கி. வீதம் அரைத்து மேற்சொன்ன கலவையில் போட்டுக் காய்ச்சி 16மி.லி. கொடுக்க மாந்த கணம் நீங்கும். *(புத்.482-77)*

8. செப்பு நெருஞ்சி, தகரை, பழம்பாசு, ஓரிலைத்தாமரை, நன்னாரி, சங்கு, நொச்சி, சாரணை, ஆடாதோடை, சிறுவழுதலை, இம்பூறல், பற்படாகம், கற்றாழை, நாயுருவி, சங்கங்குப்பி, வேலிப்பருத்தி, சீதேவி செங்கழுநீர், முக்குரண்டி, சிற்றாமுட்டி, தூதுவளை, கண்டங்கத்திரி, மிளகுத்தக்காளி ஆகிய இவற்றின் வேர் வகைக்கு 9கி. எடுக்க. மிளகுத்தக்காளி, வல்லாரை, கரிப்பான், துளசி, செம்முள்ளி, வில்வப் பத்திரி, அகத்தி, முசுமுசுக்கை, முடக்கத்தான், சங்கு, விஷ்ணுகிரந்தை, கருவேல், தகரை, வெதுப்படக்கி, பேய்மருட்டி ஆகிய இவற்றின் சாறு வகைக்குச் சமஅளவு எடுக்க.

திப்பிலி, கத்தூரிமஞ்சள், கடுகு ரோகணி, வசம்பு, சீரகம், மாசிக்காய், அரத்தை ஆகிய இவற்றை வகைக்கு 12கி.மும், திப்பிலி மூலம்,

செவ்வியம், சித்திரமூலம், தேசாவரம், ஓமம், கருஞ்சீரகம், சாதிக்காய், கடுக்காய், கிராம்பு, வகைக்கு 4கி. பூடு 20கி., வெங்காயம் 70கி., எடுத்து இவையெல்லாவற்றையும் அரைத்தெடுத்துக் கொள்க. அரைத்ததை 1.3லி. சிற்றாமணக்கெண்ணெயிற் போடுக. மேலே கூறப்பட்டுள்ள சாறு வகைகளையுங் கலந்து கொள்க. அக்கலவையைப் பதமாய்க் காய்ச்சிக் கொண்டு மாதம் மூன்றுமுறை கொடுக்க. உப்பு, புளி, தள்ளிப் பத்தியமாய் இருக்க மாந்தகணம் நீங்கிப் போகும். *(புத்.482-82)*

## மாத்திரை வகைகள்

### *1. பாலசஞ்சீவி மாத்திரை*

பால்துத்தம், வெங்காரம், கோரோசனம், கொள்ளுக்காய்வேளை வேர், கடுகுரோகணி இவற்றை வகைக்கு 15கி. எடுத்துக் கொள்க. அகத்திக்கீரைச்சாறு விட்டு 3 மணிநேரமரைத்து 16 மி.கி உருண்டை செய்து கொள்க. அதனை வெந்நீரில் அரைத்துக்கொடுக்க மாந்த கணம் நீங்கிப் போகும். மாந்தகணத்தை நீக்க வல்ல சில இலைகள் பிட்டவித்த நீரில் அல்லது தாய்ப்பாலில் வேளைக்கொரு மாத்திரையாகக் காலை, மாலை இரு வேளையும் 3 நாள் கொடுக்க மாந்த கணம் விட்டுப் போகும். *(புத்.482-77,477-137)*

### *2. பாலசஞ்சீவி மாத்திரை (வேறு)*

தோல்சீவின சுக்கு, மிளகு, சிறுதிப்பிலி, வெங்காரம் இவற்றைச் சரி எடை எடுத்து இடித்துத் துணியில் வடிகட்டிக் கொள்க. அதனுடன் சாதிலிங்கத்தூள் கூட்டிக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றால் 3 மணிநேரம் அரைத்து 8 மி.கி மாத்திரையாய் உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க. துளசியிலை, செம்முள்ளி, ஆடாதோடை, தூதுவளை, விட்டுணுகிரந்தி, கண்டங்கத்திரி, வெதுப்படக்கி, பேய்ப்புடல், சங்கிலை, நொச்சியிலை, இவற்றைச் சரி எடை கூட்டிப் பிட்டவித்துச் சாறு பிழிந்து வேளைக்கு 16மி.லி. திரிகடுகுத்தூள் 165மி.லி. கூட்டி அதில் வேளைக்கொரு மாத்திரையும் சேர்த்து 3 நாள் கொடுக்க வேண்டும். *(புத்.477-138)*

### *44. முக்குக் கணம் - குறி குணங்கள்*

நாக்கு வெந்து புண்ணாதல், சோகமாய் இருத்தல், சுரத்துடன் தலையைத் தொங்கவிடுதல், தாகத்துடன் வயிறு கடுத்து சீதமும் இரத்தமுமாக விழுதல், உறுப்பு தள்ளுதல், வாந்தியுடன் பொருமல்

ஏற்படுதல், சுரம், தலைவலி, நாவறட்சி, சந்து பொருத்துகளில் உளைவு ஏற்படுதல், வயிற்றுக் கடுப்புடன் உடல் கறுத்து ஆசனவாயும் கடுத்து வலித்தல். இரத்தம் அதிகமாய்ப் போய் உடல் இளைத்தல்.

தாய்ப்பாலை உண்ணாமை, அப்படியே குடித்தாலும் வாந்தியெடுத்துவிடுதல், கை, கால் குளிர்ந்து விடுதல், உடல், கண் இவை சோர்ந்து விடுதல், ஆசனவாய் நெருப்பு பட்டாற் போல் எரிதல்.

அபானத்தில் வலி ஏற்படுதல், மலம் தீய்ந்து விடுதல், திணறுதல், முக்கல், பிரட்டல் இவை அதிகமாகயிருத்தல். இவையனைத்தும் முக்கு கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.424-23,362-39,941-30) (புத்.477-156,572-6) (கை.பி.98-183)*

***கற்றாழைச்சாறு***

ஏழு தடவை கழுவின கற்றாழைச் சோறு 35கி., 4கி. வெந்தயம், 35கி. பழச்சாறு ஆகிய மூன்றையும் சேர்த்து காய்ச்சி வடித்துக் குழந்தைக்குக் காலையில் மட்டும் 16மி.லி. கொடுக்க வேண்டும். இவ்விதம் 3 முதல் 5 நாட்கள் கொடுக்க முக்குக்கணம் நீங்கும். *(புத்.572-6-7,477-157,476-93-94)*

## குடிநீர் வகைகள்

### *1. இண்டங்குடிநீர்*

மாலையில் 35கி. சீரகத்தைப் பொரியவிட்டு அது பொரியும் போது 35கி. இண்டந்தண்டைத் துண்டித்து ஊதி, நறுக்கி அதிற்போட்டு 325மி.லி. தண்ணீர் வார்த்து எட்டொன்றாய்க் காய்ச்சி வேளைக்கு 30 மி.லி. அளவாக 3 முதல் 5 நாட்கள் கொடுக்க முக்குக் கணம் நீங்கும். *(புத்.477-156-157,572-6-7)*

2. ஆல், ஆவாரை, விடத்தலை, கருவேல் ஆகியவற்றின் கொழுந்தும், பட்டையும் எடுத்துக் கொள்க. அகத்திப்பட்டை, தென்னை மொக்கு ஆகியவற்றைச் சமமாய் எடுக்க. இவற்றைச் சேர்த்து குடிநீராக்கிக் கொள்க. சீரகம், அதிவிடையம், மாசிக்காய், கிராம்பு, சாதிக்காய் ஆகியவற்றை இளவறுப்பாய் வறுத்துப் பொடியாக்கிக் கொள்க. விளாம்பிசினையும் பொடியாக்கி மேற்சொன்ன நீரில் சேர்த்துக் கொள்க. அச்சட்டியினின்று மற்றொன்றிற்கு மாற்றுக. அதனை 30 மி.லி. அளவு குழந்தைகளுக்குக் கொடுக்க முக்கு கணம் நீங்கும். *(ஏடு.362-39)*

# எண்ணெய் வகைகள்

## *1. கத்தூரி எண்ணெய்*

கோரோசனை, கோட்டம், அதிமதுரம், சீரகம், திப்பிலி, தேவதாரம், சந்தனம், ஏலம், மாசிக்காய், வெந்தயம், சுக்கு, வெள்ளுள்ளி, கத்தூரி, வசம்பு, கடுகுரோகணி, மூங்கில் பச்சைத்தோல் ஆகிய இவற்றை வகைக்கு 4கி. எடுக்க; இவற்றை எருமுட்டை பீநாறிச் சாற்றில் அரைக்க. அரைத்ததனை வழித்து விளக்கெண்ணெய் 1.3லி. எடுத்து அதில் விழுதைக் கலந்து எரித்து பக்குவமாக இறக்கிக் கொள்க. இதனைக் குழந்தையின் நோயின் தன்மையறிந்து கொடுக்க முக்குக் கணம் நீங்கிப் போகும். *(புத்.476-56)*

2. முருங்கை, கழற்கொடி, வறட்பூலா, வெள்ளைச் சாரணை, மூக்கிரட்டை ஆகிய மூலிகைகளின் கொழுந்துகளை எடுத்து விடியற் காலத்தில் பறித்து வந்து அரைத்து மிளகு, வசம்பு இரண்டையும் சேர்த்துப் பொடித்து எல்லாவற்றையும் தேவையான நல்லெண்ணெயில் கலந்து சூரிய புடமாக வைத்து 5-10 மி.லி. கொடுக்கவும். இதனுடன் கடுகு, பீர்க்கிலை, உள்ளி, வசம்பு இவற்றை நறுக்கி சேர்த்து உடம்புக்குத் துவாலையிடவும்.

## *3. வில்வ எண்ணெய்*

1.3லி. எண்ணெய், 325மி.லி. கற்றாழைச் சாறு, 325மி.லி. தாய்ப்பால், 85மி.லி. பழச்சாறு ஆகிய இந்நான்கையும் ஒரு சட்டியிலிட்டுக் கலந்து கொள்க. அதில் வில்வவேர், விலாமிச்ச வேர், விட்டுணுகிரந்தி வேர், கோரைக்கிழங்கு, ஓரிதழ்த்தாமரை வேர், முருங்கை வித்து, துளசி வித்து, கோங்கிலவம் பிசின், ஆவாரம் பிசின், கோட்டம், அதிமதுரம், அக்கராகாரம், தாளிசபத்திரி ஆகிய இப்பதின்மூன்று பொருட்களையும் வகைக்கு 35கி. எடுக்க. அதனை வறுத்து இடித்து அச்சட்டியிலுள்ள கலவையோடு சேர்த்துக் கடுகு பதத்தில் எண்ணெய் வடித்து அதை 4கி. அளவு குழந்தைகளுக்கு 3 நாட்கள் காலையில் மட்டும் கொடுக்க வேண்டும்.

*(புத்.572-6-7,477-156-157)*

4. இண்டு, தூதுவளை, குப்பைமேனி, சங்கங்குப்பி, பூலா, பூவரசு, ஆடாதோடை, கற்றாழை, பருத்தி, சாரணை, பிரமி, வேளை, நரிப்பயறு ஆகிய இவற்றின் சாறுகளை வகைக்கு 1.3லி. எடுக்க. ஏரண்டெண்ணெய் 2.6லி. எடுக்க. வசம்பு, உள்ளி, ஓமம்,

கோரோசனை, சண்பகப்பூ, சாதிக்காய், தான்றி, கரிய சீரகம் ஆகியவற்றை வகைக்கு 18கி. எடுத்துக் கொள்க. இவற்றை அரைத்து ஒன்று சேர்த்து கலக்கி அடுப்பிலேற்றிக் காய்ச்சிப் பதமாயிறக்கிக் கொள்க. பாத்திரத்தில் பத்திரப்படுத்தி வைக்க. அதனை 5-10 மி.லி கொடுக்க முக்குக்கணம் நீங்கிப் போகும். *(கை.பி.98-183-184)*

***மாத்திரை***

மாந்துளிர், இலுப்பை, நாவல், மாதுளை, கீழ்க்காய் நெல்லி, நீர்ப்பூலா, சிறு புள்ளடி, வல்லாரை, பேய்மருட்டி, வறட் பூலா, ஞாழல் ஆகியவற்றைத் தளிரும் கொழுந்துமாக எடுத்துக் கொள்க. இவற்றை நன்கு இடித்துப் பிட்டவியலாக்கிக் கொள்க. சிறு நாகப்பூ, தக்கோலம், சுக்கு, இலவங்கப்பட்டை, கிராம்பு, ஏலம், தாளிசபத்திரி, சாதிக்காய் ஆகிய சரக்குகளை இடித்து வைத்துக்கொள்க. கிழிகட்டி நடுவில் வைத்து மூடி பிட்டவியலாக்கிக் கொள்க. அவ்வாறு செய்து பிழிந்தெடுத்த சாற்றால் முன் சொன்ன மருந்துகளையரைத்துக் கொள்க, அரைத்த விழுதை 130மி.கி அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்க. பிறகு அதனை அரைத்தப் பிட்டவியல் சாற்றிலுரைத்து குழந்தைகட்குக் கொடுக்க முக்குக் கணம் போன்ற அனைத்து கணங்களும் நீங்கிப் போகும். *(ஏடு.424-24-25)*

***மருந்து***

கோழியாவரங்கொழுந்து ஒரு பிடி எடுக்க. வசம்பு சிறிதளவெடுக்க. வெள்ளைப்பூண்டு சிறிதளவெடுக்க, இவற்றைக் கல்வத்திலிட்டு இடித்து நன்றாக அரைத்து அதைக் குழந்தையின் உடம்பின் மேல் துவாலையாக இடவும். இதில் 250மி.கி. அளவு உள்ளுக்கும் கொடுத்திடவும். புளி, கைப்புச் சுவையுள்ள பண்டங்களைத் தள்ளவும், ஏழு நாட்களுக்குள் முக்குக் கணம் தீரும். *(சர.வை.மு-110)*

***நசியம்***

மிளகு, வசம்பு, வெதுப்படக்கி ஆகிய மூலிகைகளை எடுத்து இடித்துச் சாறு பிழிந்து கொள்ள வேண்டும். அதனை வெதுப்பி மூக்கில் இதமாக விட முக்குக் கணம் நீங்கிப்போகும். *(ஏடு.424-23)*

## *45. முட்டிலோகக்கணம் - குறி குணங்கள்*

தலைகனத்திருத்தல், குரலடைத்துக் கொள்ளுதல், மூக்கில் நீரோடுதல், உடலில் மலம் சேருதல், சுரங்காய்தல், இவையே முட்டிலோகக் கணத்தின் குறிகுணமாகும். *(ஏடு.601-71)*

## *46. மூலகணம் - குறி குணங்கள்*

வளியும் பித்தமும் மிகுந்து எலும்பிற் சேர்ந்தமை, அதனால் மூலத்தில் கொதிப்புண்டாய் புண்பட்டு சீதமும் இரத்தமுமாய்க் கழிதல், வயிற்றுளைச்சல், ஆசனத்தில் காற்று சேர்ந்து கொண்டு படபட என்ற ஒலியுடன் வெளிப்படுதல், சுரம் வயிற்றிரைச்சல், மிகுதியாகத் தலைநோதல், முகங்கறுத்தல், சிவத்தல், பலவிதமாய் இருத்தல், அடித்தள்ளுதல் ஆகிய குறிகள் காணப்படின் மூலகணமாகும். இந்நோய் 10 ஆண்டுவரை தொல்லை தரும்.

*(புத்.476-11-90,477-157,482-73,572-13) (ஏடு.941-32,362-40)*

### *சாறு*

கற்றாழையைக் கொண்டு வந்து அதன் சாறெடுத்துக் கொள்க. வெந்தயம், எலுமிச்சம் பழச்சாற்றையும் ஒன்று சேர்க்க. இக்கலவையைக் காய்ச்சிக் கொடுக்க குழந்தைகட்கு வரும் மூலரத்தமும், இரத்தக் கடுப்பும் நீங்கிப் போகும். *(ஏடு.362-41)*

### *குடிநீர்*

ஆலங்கொழுந்தும் பட்டையும், ஆவாரம் கொழுந்தும் பட்டையும், விட்டாரிக் கொழுந்தும் பட்டையும், நாவல் கொழுந்தும் பட்டையும், கருவேலங் கொழுந்தும், பட்டையும், அத்திப் பட்டை, தென்னை மொக்கு ஆகிய ஏழு பொருட்களையும் ஒரு வேளைக்கு வகைக்கு 9கி. எடுத்து இடித்து ஒரு மண் சட்டியிலிட்டு 650மி.லி. தண்ணீர் விட்டு 170மி.லி. யாகக் காய்ச்சி வடித்து அதில் சீரகம், அதிவிடையம், மாசிக்காய், கிராம்பு, சாதிக்காய், விளாம்பிசின் ஆகிய இவ்வேழு பொருட்களையும் வகைக்கு 1கி. வீதமெடுத்துப் பொடி செய்து தூவி நீரில் கரைத்து வேளைக்கு 20மி.லியாக இரண்டு வேளையும் 3 முதல் 5 நாட்கள் கொடுக்க மூலகணம் நீங்கிப் போகும். மறுசட்டியில் மாற்றிக் கொடுக்க வேண்டும். *(புத்.476-91,477-159)*

### *கற்க வகைகள்*

### *1. பெருமரம், பருத்தி, ஓதி, மாதுளைக் கற்கங்கள்*

ஒருவேளைக்கு 18கி. பெருமரப்பட்டையை 80மி.லி. வெள்ளாட்டுத் தயிரில் அரைத்துக் கரைத்துக் கொடுக்கலாம்.

ஒரு வேளைக்கு 80மி.லி. பசும்பாலில் 9கி. பருத்திப் பிஞ்சையும் 9கி. சீரகத்தையும் சேர்த்தரைத்துக் கொடுக்கலாம்.

ஒரு வேளைக்கு 18கி. ஓதியம்பட்டையை 80மி.லி. பசுவின் பாலில் அரைத்துக் கலக்கிக் கொடுக்கலாம்.

மாதுளம் பிஞ்சைத் தயிரிலரைத்துக் கொடுத்தாலும் மூலகணம் தீரும். *(புத்.476-91,477-158)*

2. சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சன்னலவங்கப்பட்டை, மாசிக்காய், ஏலம், சீரகம், நீருள்ளி ஆகியவற்றை 4கி. அளவாய் எடுக்க. ஆவாரைப்பூ, கருவேலங் கொழுந்து ஆகிய இவை இரண்டையும் இணைத்து எலுமிச்சம்பழச்சாற்றில் அரைத்து அதனை எலுமிச்சம்பழச் சாற்றில் கலந்து இருவேளையும் கொடுக்க மூலகணம் நீங்கிப் போகும். *(ஏடு.362-41)*

3. வேப்பம்விதைப்பருப்பு, வில்வஇலை, வில்வபத்திரிவேர், கருவேலங் கொழுந்து, நற்சீரகம், ஆவாரம்பூ, ஏலரிசி, சாதிபத்திரி, சாதிக்காய், கிராம்பு ஆகிய சரக்குகளை எடுத்துக் கொள்க. 1கி. எடுத்து தாய்ப்பாலில் அரைத்துக் கொடுக்க மூலகணம் விட்டுப் போகும். *(புத்.477-162,476-98) (ஏடு.362-50)*

### *ஏலாதி வடகம்*

ஏலம், வேப்பம் விதை, தோல்சீவின சுக்கு, வெற்றிலைக் காம்பு ஆகிய இந்நான்கு பொருட்களையும் சரி எடை எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் கொண்டு அதை 4 கி. அளவு வில்லை செய்து நெய்யில் பொரித்தெடுக்க வேண்டும். பிறகு வேளைக்கு ஒரு வடகமாக எடுத்து அதைப் பாலில் கலக்கி காலை, மாலை ஆகிய இரு வேளையும் கொடுக்க வேண்டும். இவ்விதம் கொடுக்க மூலகணம் நீங்கிப்போகும். *(ஏடு.362-49) (புத்.477-159,476-91)*

### *அதிவிடைய இரசாயனம்*

அதிவிடையம், கடுக்காய்தோல், சுக்கு, பரங்கிச் சக்கை, கசகசா, விலாமிச்சம் வேர், சந்தனத்தூள், சாதிபத்திரி, நெல்லிவற்றல், சிற்றாமுட்டி, செம்பருத்தி, வில்வவேர் ஆகிய இப்பன்னிரெண்டு பொருட்களையும் 35கி. சீரகத்தூளையும் பொடித்துச் சேர்த்துக் காய்ச்சி பக்குவத்தில் இறக்கிக் கொள்ள வேண்டும். தினந்தோறும் காலை, மாலை ஆகிய இருவேளையும் 2 கி. வீதம் 7 நாட்கள் சாப்பிட்டால் மூலகணம் தீரும். *(புத்.572-14,482-73,477-157,476-90)*

### *கீழாநெல்லி எண்ணெய்*

1.3லி. ஆமணக்கு நெய், 1.3லி. பசும்பால், 325மி.லி. கீழா

நெல்லிச்சாறு ஆகிய இம்மூன்றையும் ஒரு மண்சட்டியில் ஊற்ற வேண்டும். அதிமதுரம், விட்டுணுகிரந்திவேர், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், தோல்சீவின சுக்கு, துளசியிலை, தூதுவளைவேர், பசலைக்கீரை ஆகிய இவ்வெட்டுப் பொருட்களையும் வகைக்கு 35கி. வீதமெடுத்து அதில் போதுமான இளநீர் விட்டரைத்து மேற்சொன்ன எண்ணெயுடன் கூட்டிக் கலந்து கொள்ள வேண்டும். பிறகு எரித்துப் பக்குவமாக வடித்தெடுக்க வேண்டும். அதனை இரவு உணவிற்குப்பிறகு 16மி.கி. கொடுத்து உறங்கச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் காலையில் பேதியாகும். மூலகணம் நீங்கிப் போகும். *(புத்.477-150)*

### *பழம்பாசித்தயிர்*

பழம்பாசிச் சமூலத்தைச் சிதைத்து 1.3லி. வெள்ளாட்டுப் பால்விட்டு காய்ச்சி நன்றாக வெந்தபின் கோதுநீக்கிவிட்டு 35மி.லி. பழச்சாற்றை அதில் கூட்டித் தயிராக்கி அத்தயிரில் வேலம்பட்டையை இடித்து ஊற வைத்தெடுத்த நீர் 35கி.மும், அதிமதுரம் 4கி.மும், ஏலரிசி 4கி. மும், எடுத்து வறுத்துத் தூள் செய்து வடிகட்டிச் சேர்த்துக் கலக்க வேண்டும். அதைக் காலையில் மாத்திரம் 45மி.லி. யாக 3 முதல் 5 நாட்கள் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் மூலகணம் நீங்கும். *(ஏடு.362-40,941-32) (புத்.482-73,477-158,476-91)*

## மருந்து வகைகள்

### *1. பருத்திக்காய் மருந்து*

பருத்திப்பிஞ்சு, சாதிக்காய், கிராம்பு, அதிவிடையம், அசமதாகம், இலந்தை, வெற்றிலைச் சாறு ஆகியவற்றைச் சமமாய் எடுக்க. தயிரிலரைத்துக் கொண்டு அதனைத் தேனில் கலந்து கொடுக்க மூலகணம் நீங்கிப்போகும். *(ஏடு.362-40)*

### *2. மருந்து*

அன்னம், நெய், பால், கடலை, புன்னை, தேங்காய், வெல்லம், வாழைக்காய் ஆகியவற்றை உண்டால் குளிர் மூலக் கணத்தின் கொதிப்பும் நீங்கிப் போகும்.

### *47. மூல இரத்த கணம்*

விளக்கெண்ணெய் 1.3லி., கற்றாழைச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, ஈருள்ளிச்சாறு ஆகியவற்றை வகைக்கு 325மி.லி. எடுத்துக் கொள்க.

ஆவினெய் 675மி.லி., (ஆவின்பால் 675மி.லி.) எடுத்து அனைத்தையும் ஒன்றாகக் கலந்து கொள்க. அதில் கோட்டம், அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், சன்னலவங்கப்பட்டை ஆகிய சரக்குகளை வகைக்கு 9கி., வெந்தயம் 35கி. எடுத்து பொடித்துப் போட்டுக் கொள்க. இக்கலவையைக் காய்ச்சி மெழுகு பதமாய் வரும்போது இறக்கிக் கொள்க. ஆறிய பிறகு 8 மி.லி. அளவு குழந்தைகட்குக் கொடுக்க மூல இரத்த கணம் நீங்கிப்போகும். *(புத்.477-162,476-95,482-81)*

### *48. மேகக்கணம் - நெய்*

தேங்காயெண்ணெய், எள்ளெண்ணெய், பசுவின் நெய் ஆகியவற்றை முறையே 1.3லி., 325மி.லி., 675மி.லி., எடுத்துக் கொள்க. ஒன்றாகச் சேர்த்த அக்கலவையில், அமுதுவல்லி, விஷ்ணுகிரந்தி, பேய்ப்புடல், முசுமுசுக்கை, ஆனையடி, சிறுபுள்ளடி, ***வெண்குடங்கல், கருங்குடங்கல்,** கைதோன்றி, தாமரையின் வளையம் ஆகிய சரக்குகளை 35கி. எடுத்து சாறு பிழிந்து நெய்யில் கலந்து கொள்க. எலுமிச்சம்பழம் 12 எடுத்து சாறு பிழிந்து கலக்கிக் கொள்க. சதை அதிகமான கோழியெடுத்து இரத்தத்தைக் கீழே விடாது உயிரைப்போக்கி இடித்துக் கொள்க. தேங்காய்ப்பால் 2.6லி. எடுத்து அதில் நன்றாகப் பிழிந்தெடுத்துக் கொள்க. இவை அனைத்தையும் ஒன்றுசேர்த்துக் கொள்க.

சுக்கு, மிளகு, திப்பிலி, அதிமதுரம், ஏலம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, நற்சீரகம், கருஞ்சீரகம், கார்போகரிசி, வாலுளுவையரிசி, திப்பிலியரிசி, வெட்பாலையரிசி, மூங்கிலரிசி, ஏலரிசி ஆகிய சரக்குகளை வகைக்கு 5கி. எடுக்க. சித்திர மூலத்தைச் சுத்தி செய்து 35கி. எடுத்து அரைத்துக் கொள்க. இதனைக் கலவையில் சேர்த்து காய்ச்சிக் கொள்க. காய்ந்து வரும்பொழுது சர்க்கரையை 35கி. போட்டுப் பதமாகும் வரை காய்ச்சி இறக்கிக் கொள்க. காய்ச்சிய நெய்யை நோயின் தன்மை, வயது, அளவறிந்து மூன்று நாள் காலை, மாலையில் கொடுக்க மேகக்கணம் நீங்கிப் போகும். *(கை.பி.98-46-47)*

### *49. வறட்டுக்கணம் - குறிகுணங்கள்*

நாக்கு உலர்ந்திருத்தல், கண்ணின் வெண்படலத்தில் சிராம்பு இருப்பது போல பற்றிக் கொண்டிருத்தல், நெஞ்சு வற்றல், வாய் உலரல், சுர தாபங்காணல், அடிக்கடி கண்களில் பீளை கட்டல், நா வறட்சியாதல், குரல் கம்முதல், குழந்தை அழமுடியாத நிலையிருத்தல் ஆகியவை வறட்டுக் கணத்தின் குறிகுணங்கள்.

மார்பு துடித்தல், புகைந்து புகைந்து இருமுதல், உடல் நிறம் மாறுதல், வறண்டிருத்தல், நாக்கு கறுப்பு நிறமடைதல், சில சமயங்களில் சுரம் காய்தல், சில சமயங்களில் புகைந்திருமுதல், புகைச்சல் இன்றி அதிகமாக இருமுதல், வயிற்றிலிரைச்சல் உண்டாதல், உடம்பு மெலிந்து வன்மையும் குறைந்துவிடுதல், துவண்டு விடுதல், எலும்பைப் பற்றிய சுரக்குறி காணுதல், உடற் கொதிப்பினால் உமிழ்நீர்க்கோளம் வற்றி நீர் வேட்கை எடுத்தல், உடல் வெளுத்தல், எரிச்சலுண்டாதல், நெஞ்சு, அடிவயிறு எரிதல். சிறுநீர் வெண்மை நிறமடைதல், சிறிதுநேரம் வயிறு நொந்து திடீரென்று வன்மையாகக் கடுத்தல். உடம்பு முழுமையும் வற்றுதல், உஷ்ணமாதல், நாக்கில் மஞ்சள் நிறமான முள்ளைப் போலவும் வெள்ளை நிறமுள்ளைப் போலவும் ஒருகை முள்தோன்றும். அவற்றுடன் மூன்றுகீற்றாக வெடிப்புண்டாதல், பிள்ளைகளின் இயற்கைநிலை கெடுதல், உடம்பு பருக்காமல் இளைத்தல், மூக்கில் சளி மிகுந்து மூக்கை அடைத்தல், முகம் மஞ்சள் பூத்தது போலிருத்தல், தூக்கம் அதிகமாதல், மயக்கமுண்டாதல், சோர்வு ஏற்படுதல் ஆகிய இக்குறிகுணங்கள் ஏற்பட்டால் வறட்டுகணமென்று அறியவும்.

*(கை.பி.98-177) (ஏடு.601-39,169-39,941-26,362-33,6218-26) (புத்.476-84, 477-149, 482-70) (சர.வை.மு-27)*

## நெய்வகைகள்

### *1. பூசனிக்காய் நெய்*

பூசனிக்காய்ச்சாறு, இளநீர், பசுவின் பால், நெய், தண்ணீர்விட்டான் கிழங்குச் சாறு ஆகியவற்றை வகைக்கு 1.3லி. எடுத்துக் கொள்க. கடுகுரோகணி, சண்பகம், வெட்டிவேர், கடல்பச்சை, அதிமதுரம், இலவங்கம், பேராமுட்டி, சிற்றாமுட்டி, திப்பிலி, சந்தனம், ஏலம், இலாமிச்சை, கோட்டம், விளாம்பிசின், பொன்முசுட்டை ஆகிய சரக்குவகைகளைக் காசெடை எடுத்து அரைத்து அக்கலவையில் கலந்து கொள்க. பின்பு காய்ச்சி பதமாகும்போது இறக்கி வடித்துக் கொள்க. இதனைக் குழந்தைகட்கு நாள்தோறும் கொடுக்க வறட்டுக்கணம் நீங்கிப் போகும். *(ஏடு.362-37.6218-30)*

### *2. வல்லாரை நெய்*

வல்லாரைச்சாறு, புளியாரைச்சாறு, துளசிச்சாறு ஆகியவற்றை வகைக்கு 1.3லி. எடுக்க. பசு நெய்யையும் அவ்வளவே கலந்து கொள்க. சீரகம், ஏலம், அதிமதுரம், கல்நார் ஆகிய சரக்குகளை

வகைக்கு 5 கி. எடுத்தரைத்து முன் சொன்ன கலவையில் கலந்து காய்ச்சி வெந்த பின் பக்குவமறிந்து இறக்கிக் கொள்க. 5கி. நெய்யில் இம்மருந்தை 5-10மி.லி. அளவு கலந்து இரு வேளையாக அருந்த வறட்டுக் கணம் குணமாகும். *(ஏடு.601-63)*

3. பொன்னாங்காணிச்சாறு, கண்டங்கத்தரிச்சாறு, இவற்றோடு சிற்றாமணக்கெண்ணெய் 325மி.லி. எடுக்க. சாறுகளைக் கலந்து கொள்க. பிறகு தான்றிக்காய், ஈருள்ளி, கிராம்பு, வசம்பு, கோட்டம், வெந்தயம், கெருடப்பச்சை, அதிமதுரம் ஆகிய சரக்குகளை வகைக்கு 9கி. எடுக்க. இவற்றையரைத்து அக்கலவையில் ஒன்று சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதமாக வரும் போது இறக்கி வடித்துக் கொள்க. அதனை 8மி. அளவு கொடுக்க குழந்தைகட்கு வரும் வறட்சிக் கணம் நீங்கும். *(ஏடு.601-39-40)*

### *4. பருத்திக்காய் நெய்*

சாத்திரபேதி, கோட்டம், சந்தனம், ஏலம், சீரகம், கொன்னைக்காய், பிசின், உருத்திராக்கம், சங்கம், பருத்திப்பூ, கலைமான் கொம்பு, நெல்லிக்காய் வற்றல், சண்பகப்பூ, கொத்துமல்லி, விலாமிச்சு, ஆகியவற்றைக் 4கி. எடுத்தரைத்துக் கொள்க. பாத்திரத்தில் 1.3லி. நெய் ஊற்றிக் கொள்க. பருத்திக்காய்ச் சாறு, பொன்னாங்காணிச்சாறு ஆகியவற்றை வகைக்கு 325மி.லி. எடுக்க. இக்கலவையில் அரைத்த விழுதைக் கலந்து கொள்க. அடுப்பெரித்து காய்ச்சிக் கொள்க. கிண்டிவிட்டு பதமாக வரும்போது 325 மி.கி. சர்க்கரையைத் தூவி மேலும் கிளறி அளவறிந்து அதனைக் குழந்தைகட்குக் கொடுக்க வறட்கணம் நீங்கி விடும். *(புத்.477-294) (ஏடு.6218-28,362-35)*

### *எண்ணெய் வகைகள்*

1. கற்றாழைச்சாறு, விட்டுணுகிரந்திச்சாறு, ஆவின்பால், இளநீர் ஆகியவற்றை வகைக்கு 1.3லி. எடுக்க. எலுமிச்சம் பழச்சாறு 675மி.லி. எடுக்க. சிற்றாமணக்கெண்ணெய் 3.9லி. எடுத்து மூன்றையும் கலந்து கொள்க. சந்தனம், கணப்பூடு, கலைக்கொம்பு 35கி, சண்பகப்பூ, 18கி. எடுக்க, **எச்சைப்பூலா,*** ஏலம், இரண்டு வாசவேர் (விலாமிச்சு, வெட்டிவேர்) நன்னாரி, சாதிக்காய், சாதிபத்திரி, கொத்துமல்லி, அதிமதுரம், கோட்டம், கடுகுரோகணி, கிராம்பு, முத்தக்காசு ஆகியவற்றை 18கி. எடுக்க. சன்னலவங்கப்பட்டை, நற்சீரகம், கருஞ்சீரகம், சிறுநாகப்பூ, ஆகிய சரக்குகளை 4கி. அளவெடுக்க. இவற்றை அரைத்து எண்ணெயில் கலந்து பக்குவமாய் எரித்துக்

கொள்க. பதமான பிறகு புல்லுருவியை 4 கி. தூவி விடுக. பிறகு அவ்வெண்ணெயை குழந்தைக்கு இருநேரமும் கொடுக்க வறட்கணம் நீங்கி விடும். *(புத்.482-100) (ஏடு.6218-28-29,362-36-37)*

## *2. செம்முள்ளி எண்ணெய்*

முள்ளிவேர், செவ்வள்ளிக்கொடி, தண்ணீர்விட்டான் கிழங்கு, முசுமுசுக்கை வேர், தூதுவளைவேர், கண்டங்கத்திரிவேர், திருகுக்கள்ளி வேர், மணித்தக்காளிவேர், கம்பிப்பிசின், கருஞ்சீரகம், நற்சீரகம், வெள்ளுள்ளி, வசம்பு ஆகிய இப்பதின்மூன்று பொருட்களையும் வகைக்கு 4கி. எடுத்திடித்துப் பொடியாக்கிக் கொள்க. 455கி. சிற்றாமணக்கு எண்ணெய் எடுத்து அதை ஒரு மண்சட்டியில் ஊற்றி அதில் மேற்சொன்ன சரக்குப் பொடியைச் சேர்த்துப் பக்குவமாய்க் காய்ச்சி வடிக்க வேண்டும். பின் அதை 16மி.கி. வீதம் காலையில் மாத்திரம் உள்ளுக்குக் கொடுக்க வேண்டும். இவ்வாறு 3 முதல் 5 நாட்கள் கொடுக்கவேண்டும். அத்துடன் மேலுக்குத் தடவ வேண்டும். இவ்வாறு செய்ய வறட்கணம் நீங்கிப் போகும்.

*(புத்.482-70,476-85,477-150) (கை.பி.98-177-178)*

## *3. கீழாநெல்லி எண்ணெய்*

ஆமணக்கு நெய், பசும்பால் இவற்றை வகைக்கு 1.3லி., பொன்னாங் காணிச்சாறு, நெல்லியின் சாறு வகைக்கு 325மி.லி. எடுத்துக் கொள்க. அதிமதுரம், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த் தோல், தோல்சீவின சுக்கு, விட்டுணுகிரந்தி வேர், துளசியிலை, தூதுவளைவேர், பசலைக்கீரை ஆகிய சரக்குகளை எடுத்து இளநீரில் அரைத்துக் கொள்க. அவ்விழுதை மேற்சொன்ன கலவையில் சேர்த்தெரித்து குழந்தைகளின் வன்மை, நோயின் தன்மையறிந்து கொடுக்க வறட்கணம் நீங்கும். உணவுக்குப் பிறகு இதனைக் கொடுக்க பேதி ஆகும். இந்நோய் சரியாகும். *(கை.பி.98-177), (ஏடு.169-39,6218-26,362-33-34), (புத்.477-149,476-84-85,482-70)*

## *50. வாதகணம் (அல்லது) வளிக்கணம்*

வயிறிரைதல், மந்தமாகி உள் மலம் கருகி விழுதல், நாவறளுதல், புகைச்சலும் இருமலுமுண்டாதல், அதிகத்தாகமேற்படுதல், உடல் முழுவதும் சுரமிருத்தல், பசியுண்டாகாமை, நீர்ச்சுருக்குண்டாதல், குழந்தையின் உடல் கனத்திருத்தல், இரைப்பேற்படுதல், மலம் கருகுதல் இவை வாத (வளி) கணத்தின் குறிகுணங்களாகும். *(கை.பி. 98-166) (ஏடு.798-23), (புத்.482-63,476-60,477-132)*

## *51. வாய்வுக் கணத்தின் - குறிகுணங்கள்*

வயிற்றைப் புரட்டி வலியெடுத்தல், வாய்நீர் கசந்து வாந்தியெடுத் தல், உடம்பு வற்றிவிடுதல், உண்ட உணவு செரிக்காமை, வயிறு பொருமிக் கொள்ளுதல், ஊதிவிடுதல் ஆகிய இக்குறிகுணங்கள் ஏற்படின் அது வாய்வுக்கணமென்று சொல்லப்படும். *(ஏடு.601-68)*

### *குடிநீர் வகைகள்*

1. வெங்காயம், வெந்தயம், வில்வபத்திரி ஆகியவற்றைச் சமமாக எடுத்து இடித்துப் போடுக. அதில் நீர்விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிக் குடிக்க வாத கணம் நீங்கிப் போகும். *(கை.பி.98-166)*

2. வில்வயிலை, நற்சீரகம், வெந்தயம் ஈரவெங்காயம் இவற்றைச் சமஅளவெடுத்து முறைப்படி குடிநீராக்கி 15-30மி.லி. அளவறிந்து காலை, மாலை இருவேளை கொடுக்க வாதகணம் நீங்கும். *(புத்.527-39)*

### *சூரணம்*

தாளிசபத்திரி, சீரகம், கிராம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஏலம், வால்மிளகு, கருஞ்சீரகம், கடுகுரோகணி, தாளிசபத்திரி, ஆகிய மருந்துச் சரக்குகளை வகைக்கு 5கி. எடுத்து இளவறுப்பாய் வறுத்துக் கொள்க. அவற்றைப் பொடியாக்கிக் கொள்க. அச்சூரணத்திற்குச் சமமாய்ச் சர்க்கரை சேர்த்துக் கொள்க. அதனைக் குழந்தையின் தன்மை அறிந்து வெந்நீரில் கலந்து கொடுக்க வாய்வுக் கணம் நீங்கும். *(ஏடு.609-69)*

### *எண்ணெய் வகைகள்*

1. கருஞ்சீரகம், கடுகுரோகணி, உசிலிலை, வெங்காயம், சாதிபத்திரி, வில்வபத்திரி, காட்டுமல்லி, கடுக்காய் ஆகிய மருந்துச் சரக்குகளைச் சமமாய் எடுத்துக் கொள்க. ஆமணக்கு நெய்யில் மேற்சொன்ன சரக்குகளைப் பொடித்துப் போட்டு காய்ச்சிக் கொள்க. பிறகு அதனில் தாய்ப்பால் சேர்த்து குழந்தைகட்குக் கொடுக்க வாதகணம் தீர்ந்து போகும். *(ஏடு.798-24) (கை.பி.98-166)*

### *2. எண்ணெய்*

இண்டவேர், இண்டங்கொழுந்து, நாய்வேளைவேர், இலை, வசம்பு, வெள்ளைவெங்காயம், கருஞ்சீரகம், கடுக்காய், கத்தூரி மஞ்சள் ஆகியவற்றைச் சமமாய் எடுத்துக் கொள்க. சிற்றாமணக்கு எண்ணெயில்

மேற்சொன்ன சரக்குகளைப் பொடித்துப் போட்டு வேகவைக்க. பதமாய் ஆன பிறகு இறக்கி வடித்து 4 கி. குழந்தைகட்குக் கொடுக்க வளி கணம் நீங்கும். இவ்வெண்ணெயைச் சூரிய உதயத்திற்கு முன் கொடுக்கவும். *(ஏடு.612-7)*

### *3. சூரியபுடத் தைலம்*

பொன்னாங்காணிவேர், புளியிலையின் நுனி, வேப்பிலையின் நுனி இவற்றை வகைக்குப் பிடி எடுக்க. கோழியவரை வேர் 20கி. எடுக்க. அனைத்துச் சரக்குகளையும் சூரணித்து ஆமணக்கெண்ணெய் 325மி.லி.யில் போட்டு சூரியபுடம் வைத்து 5-10மி.லி. வீதம் காலை, மாலை கொடுக்கவும். *(புத்.527-39)*

4. பேய்க்குமட்டிப்பழம், அதனிலைச்சாறு, கருஞ்சீரகம், கடுக்காய், கத்தூரி மஞ்சள், கடுகுரோகணி, தேசாவரம், அக்கராகாரம், நீர்வள்ளி, சிற்றரத்தை, கிராம்பு ஆகிய சரக்குகளை ஒன்று சேர்த்துக் கொள்க. பொடித்து விளக்கெண்ணெயில் போட்டு வேக வைத்துக் கொடுக்கவும். குழந்தைகளுக்கு இதை உண்ட பிறகு பேதி காணும். பேதியான பிறகு மோருஞ்சோறுங் கொடுக்கவும். *(ஏடு.612-7)*

### *52. வாலேந்திரக்கணம் - குறி குணங்கள்*

உடம்பு காய்தல், நாக்கு வழுவழுத்தல், கண்களில் சிராம்பிருப்பது போலிருத்தல், வயிறு மிகவும் கடுத்து சலமும், சீழும் இரத்தமும் விழுதல், கழிச்சலேற்படுதல், முகமானது வீங்கி, மார்பு வற்றி, வயிறு பொருமி, எலும்பின் சந்துகள், புறங்கை, கால்கள் வீங்குதல், உடலானது மெலிதல், இக்குணங்கள் ஏற்படின் அது வாலேந்திர கணம் என்று கண்டறியலாம்.

எலும்புக்குள்ளே அனலடித்தல், உடலானது வற்றிவிடுதல், வெப்பமாயிருத்தல், மூலந்தள்ளுதல், முதுகுத்தண்டெலும்பு சூடாயிருத்தல், கை, கால்கள் குளிர்ச்சியடைதல், இவை வாலேந்திரக் கணத்தின் குறிகுணங்கள். இதை வாசனைமிக்க நெய்யை அருந்திச் சரி செய்து கொள்ளலாம். *(ஏடு.601-40-41)*

### *வாலேந்திரம் - சாத்திய குணம்*

தாய், தந்தையின் வெப்பமாகிய நோயாலும், தாய் நீராடி முடித்த நான்காம் நாளில், எத்தன்மையான குணங்களைப் பெற்றுள்ளாரோ அது அக்குழந்தையைச் சென்றடையும். *(ஏடு.601-41)*

### *குடிநீர்*

வாழைப்பூ, வல்லாரை, முசுமுசுக்கை, கீழ்க்காய்நெல்லி, கொச்சங்காய், கொடுப்பை, பழம்பாசி, பசலை ஆகிய சரக்குகளை எடுத்து 1.3லி. தண்ணீர் விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி இறக்கிக் கொள்க. அதில் பசுவெண்ணெய் 2.2கி. விட்டு 5 நாட்கள் இருபொழுது குடித்தால் சூடு மாறும்; நெய்குடித்தாலும் மாறிவிடும். *(ஏடு.601-44)*

### *நெய்வகைகள்*

1. சிறுபீளை, மணித்தக்காளி, திருத்தாளி, தொட்டால்வாடி, அறுகு, கரிசாலை, நிலப்பனை, சீதேவி மருப்பவம், (ஒட்டொடிப்புல்) பிரமி, எழுத்தாணிமூலி, வல்லாரை, சிறுகுடக்கால், பொன்னாங்காணி ஆகியவற்றை எடுத்துச் சாறெடுத்துக் கொள்க. வகைக்கு 325 மி.லி. எடுத்த சாற்றினுக்குப் பாதியளவு நெய்யைச் சேர்த்துக் கொள்க. பிறகு சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, தேவதாரம், கெருடப்பச்சை, கல்நார், கோட்டம், வசம்பு, ஏலம், அதிமதுரம், வசுவாசி, இலவங்கப்பத்திரி, அகில், அக்கிரா ஆகிய மருந்துச் சரக்குகளை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. அவற்றைப் பொடித்து முன்கூறிய சாறுவிட்டரைத்துக் கரைத்துக் கொள்க. அரைத்ததனை அடுப்பேற்றிப் பதமாய்க் காய்ச்சி, மெழுகு பதமாக இறக்கி வடித்து வைத்துக் கொள்க. இந்த நெய்யை 5-10 மி.லி. அளவு குழந்தைகட்குக் கொடுக்க வாலேந்திரக்கணம் நீங்கும். *(கை.பி.98-56)*

2. தெற்றிப்பூ, பருத்திப்பிஞ்சு, மாதுளம்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, கதலிப்பிஞ்சு, பொன்னாவாரை, வல்லாரை, ஆலினுடைய கொழுந்து ஆகிய இம்மூலிகைகளின் சாறுகளை வகைக்கு 325மி.லி. வீதம் எடுத்துக் கொள்க. காராவின் நெய்யை 1.3லி. எடுத்து சாறுடன் சேர்த்துக் கொள்க. பசுவின் பால் 1.3லி. சேர்க்க. அதிமதுரம், கெருடப்பச்சை, இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம், மாயக்காய், சாத்திரபேதி, வசுவாசி, ***கிருஷ்ணசாதி,** நற்சீரகம், பெருஞ்சீரகம், கல்நார் ஆகிய மருந்துச்சரக்குகளை வகைக்கு 5கி. வீதமெடுக்க. இவற்றைப் பசுவின் பால் விட்டரைத்துக் கொள்க. அரைத்த விழுதை முன்சொன்ன கலவையில் சேர்த்து நெய்யை வார்த்து, அடுப்பெரித்து காய்ச்சிக் கொள்க. மெழுகு பதமாக வரும் போது இறக்கிக் கலத்தில் வடித்துக் கொள்க. அதனை 4கி. அளவு இரு போதும் குழந்தைகட்கும் கொடுக்க வாலேந்திரக் கணம் நீங்கிவிடும். *(கை.பி.98-57)*

### *எண்ணெய்*

அத்தித்தோல் 175கி., இத்திப்பட்டை 175கி., எடுத்து அரிந்து இடித்துப் பாத்திரத்திலிடுக. தண்ணீர்விட்டுக் காய்ச்சி எட்டொன்றாகக் குறுக்கி வடித்துக் கொள்க. கரிப்பான் சாறெண்ணெய் 1.3லி. எடுத்துக் கொள்க. அதிமதுரம், தேவதாரம், கார்கோல், சந்தனம், மிளகு, கரியசீரகம், சடாமாஞ்சில், நெல்லிமுள்ளி, கோட்டம், நற்சீரகம் ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. இவற்றை இளநீர் விட்டரைத்துக் கொள்க. இவ்விழுதை எண்ணெயில் சேர்த்து தலைமுழுக வாலேந்திரக் கணம் நீங்கும். *(கை.பி.98-59)*

### *அடை*

பச்சரிசி மாவை எடுத்து அடை ஏழு செய்து வைத்துக் கொள்க. முருக்கிலையில் பொதிந்து கட்டிக் கொள்க. பழம்பாசி, குப்பைமேனி, குழிமீட்டான், கீழ்க்காய்நெல்லி, எழுத்தாணிப்பச்சை, வல்லாரை (வெள்ளை, கறுப்பு) சீதேவிசெங்கழுநீர் ஆகிய மூலிகைகளை ஒரு பிடி எடுத்துக் கொள்க. அதில் கோட்டம், அதிவிடையம், ஓமம், அதிமதுரம், இருவேலி, செஞ்சந்தனம், விலாமிச்சு, கத்தூரி மஞ்சள் ஆகிய இவற்றை 35கி. எடுத்து இடித்துப் பாத்திரத்திலிட்டுக் கொள்க. 5.2.லி. தண்ணீர் விடுக. அதன் மீது அவ்வடைகளை வைத்து மூடி, அந்த சந்துகளுக்கு சீலை மண் செய்து அடுப்பிலேற்றுக. தீயெரித்து முக்காலாக வற்றும் போது, நெருப்பை மாற்றி அடைகளை எடுத்து விடுக. காலை, மாலைக்கு ஓரடை வீதம் குழந்தைகட்குக் கொடுக்க வாலேந்திர கணம் நீங்கும். குடிநீரை மூன்று நாட்களுக்குக் கொடுக்க நேத்திர நோய்கள் நீங்கிப் போகும். *(கை.பி.98,58-59)*

## மை வகைகள்

1. துத்தம், சீனக்காரம், பீதரோகணி ஆகியவற்றைச் சமமாய் எடுத்துக் கொள்க. குழிமீட்டான், கீழ்க்காய்நெல்லி, கையாந்தகரை, சித்திரப்பாலை, விட்டுணுகிரந்தி, சீதேவி, உத்தமதாளி, எழுத்தாணி மூலி, செம்பொன்னெருஞ்சி, வெற்றிலை, எலுமிச்சம்பழம் ஆகிய மூலிகைகளின் சாற்றினையெடுத்துக் கொள்க. கோழிமுட்டைக் கருவையும் சேர்த்து முன் சொன்ன மருந்துடன் கலந்தாட்டிக் கொள்க. ஆட்டிய விழுதை வழித்தெடுத்து வெண்மையான சேலை, மாதவிடாயான சேலை ஆகிய இவ்விரண்டிலொன்றில் இட்டுக் கொள்க. அதனை நிழலிலுலர்த்தித் திரியாகத் திரித்துக் கொள்க. திரியை

விளக்கிலிட்டு பசுநெய் வார்த்து விளக்கேற்றி எரித்து சேர்ந்து வரும் புகையை வழித்தெடுத்து தூய்மையான குப்பியிலடைத்துக் கொள்க.

விலாங்குத்தோல், துரிசு ஆகிய இரண்டையும் ஆவின் நெய்விட்டு வறுத்துக் கரியாக்கிக் கொள்க. அதனை எடுத்தரைத்து முன் சொன்ன மையையும் இதனுடன் சேர்த்துக் கொள்க. பசுவின் நெய்யில் இம் மையைக் குழைத்துக் கண்ணிலிட வாலேந்திரக் கணத்தால் குழந்தைகட்கு வரும் நோய்கள் நீங்கிப்போகும். *(கை.பி.98-55)*

2. முயலின் உதிரத்தைப் பிடித்து வெள்ளைத் துணியிலிட்டு நிழலில் காயவைக்க வேண்டும். அதன் பித்து, ஈரல், அரிசி வகை ஐந்து (புழுங்கலரிசி, யவா (அல்லது) வாற்கோதுமையரிசி, கோதுமையரிசி, சவ்வரிசி, கருங்குருவையரிசி) ஆகியவற்றை ஒன்று சேர்த்தரைத்து மூன்று முறை உருட்டி நிழலிலுலர்த்தித் திரியாக்கிக் கொள்க. அத்திரியை விளக்கிலிட்டு விளக்கெண்ணெய் வார்த்து பற்ற வைக்க. எரிந்து வரும் மையை வழித்து தூய்மையான பாத்திரத்தில் வைத்துக் கொள்க.

அதனை எடுத்து பசு நெய்யில் குழைத்துக் கண்ணில்போட கணத்தினால் வந்த வாலேந்திரம் நீங்கிப் போகும். *(கை.பி.98-54)*

## *53. வால் சந்திரக் கணம் - குறிகுணங்கள்*

உடலெல்லாம் சூடு காணும். கண்கள் வெளுக்கும்; உடம்பு மெலியும், புறங்கை, கால்கள் வீங்கும். அன்னம், நீர் செல்லாது, முகம், கண் புத்துணர்ச்சியின்றி வெளுத்துக் காட்டும். கண்ணில் பிரால் முற்றி விடும். உடல் சுருங்கும். கண்ணில் வரியில் பிறைபோல இருக்கும். ஆகியவை வால் சந்திரக் கணத்தின் குறிகுணங்கள் *(ஏடு.601-43)*

விழியில் கோர்த்துக் கொள்ளும்; வேர்வை அதிகமாகும். மூக்கில் நீர் கோர்த்துக் கொள்ளும். கண்களில் சுக்கிரன் வந்துவிடும். கழிச்சல் வந்து கைகால் வீங்கிக் கொள்ளும். சீதமும் இரத்தமுமாய் விழும், கீழ் மூலம் வெளித்தள்ளி நிற்கும். சோறினை வெறுக்கும். தாகம் அதிகமாக ஏற்பட்டு தண்ணீரை அதிகமாகக் குடிக்கச் செய்யும். உடல் மெலிந்து விடும். தாய், தந்தைக்கிருக்கும் நோயானது பாலரை வந்தடையும். கண்ணில் சுக்கிரன் வந்து பூவெடித்து விடும். இவையே வால்சந்திரக் கணத்தின் குறிகுணங்கள். இது 1, 2, 3, 5 வயதுகளில் அறுதியாகத் தீர்ந்துவிடும். *(ஏடு.601-42)*

### நெய்

பூலாதி, வெருடத்தோலி ஆகிய சரக்கைக் கூட்டி அரைத்துக் கொள்க. அதனை ஆவின்நெய்யில் கலந்து கொள்க. நெய்க்கொட்டான், பழச்சாற்றைச் சமமாய் சேர்த்துக் கொள்க. அனைத்தையும் சேர்த்துக் காய்ச்சி மெழுகு பதமாக வரும் போது வடித்திறக்கிக் கொள்க. அதனை 4கி. அந்தி, சந்தி ஏழு நாட்கள் கொள்ள, வால்சந்திரன் தீரும். புளிப்பை நீக்க வேண்டும். *(ஏடு.601-45)*

## 54. விஷக்கணம் - குறி குணங்கள்

வயிற்றில் சூடு அதிகமாகும். ஈரல், உதரம் வெந்துவிடும், உடலில் சூடுண்டாகும். சுரமேற்படும். அடிக்கடி சுவாசம் முட்டும். மேல் சுவாசமேற்படும். உடலிளைக்கும், இளைத்து மேல் நோக்கும். இந்நோய் மருந்துக்குள்ளே அடங்கிடாது. இந்த நோய் குழந்தைக்குத் தோடமாகி விடும். இவையே விஷக்கணத்தின் குறிகுணங்கள்.

*(ஏடு.7313-27), (கை.பி.98-170,171)*

### குளிகை

மாசிப்பத்திரி, அதிமதுரம், கோட்டம், ஏலம், சண்பகம், மாசிக்காய், இலவங்கம், விலாமிச்சம், வெட்டிவேர், புஷ்பம், கோரோசனை ஆகிய சரக்குகளை எடுத்து கருந்துளசி சாற்றாலாட்டிக் கொள்க. 130மி.கி. அளவு மாத்திரைகளாகச் செய்து கொள்க. மாத்திரையை நிழலிலுலர்த்தி மாசிப்பத்திரிக் குடிநீரில் உரைத்துக் கொடுக்க விஷக்கணம் நீங்கிவிடும்.

*(ஏடு.7313-28) (கை.பி.98-171)*

## 55. விஷ நீர்க்கணம் - குறி குணங்கள்

சுரமானது விட்டு விட்டுக் காயும், தண்ணீர்த்தாகம் ஏற்படும்; கண்குழிவிழும், தலைசுழலும், வயிறு வலிக்கும், கால் கைகள் சோர்ந்து விடும். குளிர் வரும் முகம், புறங்கை, கால் ஆகியவை பளபளப்பாதல், குழந்தை பயந்து அலறுதல் ஆகியவை விஷநீர்க்கணத்தின் குறிகுணங்கள்.

### குடிநீர்

சாரணை, முசுட்டை, தனிப்பொடுதலையின்காய், சீரகம், மிளகு, சுக்கு, திப்பிலி ஆகிய சரக்குகளை வகைக்கு 5கி. எடுக்க. நாரத்தைச் சாறு விட்டுக் காய்ச்சிக் கொள்க. காய்ச்சிய பதத்துடன் வடித்துக் கொடுக்க விஷநீர்க்கணநோய் நீங்கும். *(கை.பி.98-171-172)*

## *56. விஷபாகக்கணம் - குறி குணங்கள்*

உடலனைத்தும் தடித்துவிடும், தூங்கிய பிறகு கண்ணில் வெள்ளைப்பூ விழும், தண்ணீர்த் தாகமேற்படும், சொல் மிகவும் மெலிதாகும், உடலானது வீங்கும். வெளுக்கும்; இவையே விஷபாகக் கணத்தின் குறிகுணங்களாகும். *(ஏடு.601-62)*

## *57. விஷமாந்தக் கணம் - குறி குணங்கள்*

கண் விழிக்காது, உடல் நடுங்கும்; வெதும்பும்; உதடு, நாக்கு காய்ந்து விடும், தாகம் ஏற்படும். ஆகியவை விஷ மாந்தக் கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.612-10)*

### *குடிநீர் வகைகள்*

1. சுக்கு, திப்பிலி, வசம்பு, பெருங்காயம், வெள்ளைப்பூண்டு, கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள், அதிமதுரம், அசமதாகம் (ஓமம்), பவளப்புத்து, பொன்முசுட்டை வேர், நீர்ப்பூலாவேர், வாய்ப்பூலாவேர், சங்கம்வேர், கருஞ்சூரை வேர், நாய்க்கடுகு வேர், குருந்தை வேர், செம்முள்ளி வேர், சிறு கிளாவேர், தைவேளை வேர், நெய்க்கொட்டான் வேர் ஆகிய மூலிகைகளைச் சமமாக எடுத்துக் கூட்டி அவற்றைத்தட்டி வேப்பெண்ணெயில் போட்டு வேக வைத்துக் கொள்க. பதமான பிறகு இறக்கி வடிகட்டிக் கொள்க. இதனை விஷமாந்த கணம் உள்ள குழந்தைகட்கு உள்ளுக்குக் கொடுக்கவும். உடம்பின் மேலும் பூசிவிடவும். இதற்குப் பத்தியம் ஒன்றும் கிடையாது. விஷமாந்தக் கணம் நீங்கி நலமாகும். *(ஏடு.612-10)*

2. முருவிலி, நன்னாரி, வெண்காயம், வசம்பு, இந்துப்பு, கடுக்காய், முள்ளி, நாரத்தை, எலுமிச்சை, வேளை, மலை தாங்கி, கீழ்க்காய் நெல்லி, பூசனி, பாற் சொற்றி, குறட்டை விட்டுணு கரந்தை இவற்றை வகைக்குச் சம அளவு எடுத்து தண்ணீர் ஊற்றிக் காய்ச்சி (15-30) மி.லி. அளவறிந்து கொடுக்க விஷமாந்தக்கணம் குணமாகும். *(புத்.476-68)*

## *58. விரத்திகணம் - குறி குணங்கள்*

மூத்திரப்பை போல் உடம்பு ஊதும். உணவு செல்லாது, செரியாது, முகமும் ஒளியிழந்து போகும். பார்ப்பவர் சோகை என்று சொல்லத்தக்க அளவு முகம் ஊதிக் கொள்ளும், இவையே விரத்திக் கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.601-70)*

## *59. வீக்ககணம் - குறி குணங்கள்*

உடம்பு முழுவதும் அதிகமாகக் காயும்; உடம்பில் ஆங்காங்கு சிவந்து காணும்; செரியாது மலம் கட்டும், சூடு அதிகமாயிருப்பதால் வீக்கம் ஏற்படும். இக்குறிகுணங்கள் காணப்படின் அது வீக்கக் கணம் என்றறியலாம். *(புத்.477-151)*

### *உள்ளியெண்ணெய்*

உள்ளி, வசம்பு, ஓமம், அதிமதுரம், கோட்டம், கிராம்பு, சுக்கு, மிளகு, ஏலம், கூத்தன்குதம்பைவேர் ஆகிய இப்பத்துப் பொருட்களையும் வகைக்கு 4கி. வீதமெடுத்துப் பொடி செய்து கொள்க. 280கி. சிற்றாமணக்கு எண்ணெயை ஒரு மண் சட்டியிலூற்றிக் கொள்க. இவ்வெண்ணெயில் மருந்துப் பொடியைக் கலக்கிக் கொள்க. அக்கலவையை 6 மணிநேரம் கதிர்ப்புடத்தில் வைத்து அதனை 8 மி.லி. அளவு காலையில் மட்டும் 3 முதல் 5 நாட்கள் கொடுத்தால் குழந்தைகட்கு வரும் வீக்க கணம் நீங்கும்.

*(புத்.482-78,476-86,477-151)*

## *60. வீங்குகணம் - குறி குணங்கள்*

உடம்பு வெளுக்கும், தண்ணீரை அதிகமாகக் குடிக்கும், உடல் மிகவும் அதிகமாக வீங்கும், அவ்வாறு வீங்கி உயிருக்கு அதிகமான துன்பத்தைக் கொடுக்கும் ஆகியவை வீங்கு கணத்தின் குறிகுணங்கள்.

*(ஏடு.601-52)*

### *நெய்*

தேன்குரும்பைச்சாறு தகரைச்சாறு, கற்றாழைச் சாறு வரையின்சாறு (மாசிப்பத்திரி, கற்பாசி) பழம் பாசி (கொடிப்பாசி, கொட்டைப்பாசி, வேலிப்பாசி) இவற்றை வகைக்கு 325மி.லி., எடுத்துக் கொள்க. சிற்றாமணக்கு எண்ணெய் 1.3லி. எடுத்துக் கொள்க. அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. ஏலம் 10கி, இலவங்கப்பட்டை 20கி.; கோட்டம், சீரகம், அதிமதுரம் ஆகியவற்றை 5கி. எடுத்துக் கொள்க. இவையனைத்தையும் பொடித்து அதில் போட்டு காய்ச்சி பதமான பிறகு இறக்கி வடித்துக் கொள்க. வடித்த எண்ணெயில் 4கி. எடுத்து குழந்தைகட்குக் கொடுக்க வீங்கு கணம் மாறுமென்று முனிவர் சொன்னார். *(ஏடு.601-53)*

## *61. வெப்புக்கணம் - குறி குணங்கள்*

உடல் காயும், நாவறட்சி ஏற்படும், தண்ணீர் அதிகமாகக் குடிக்கும், உடலில் வீக்கமேற்படும், உணவையேற்காது. உடல் சுருங்கும், கழிச்சல் பலவிதமாக ஏற்படும், வயிறுசூடாயிருக்கும். உண்ட சோறு செரியாது. சீதம் விழும், சுரங்காயும்; பசி ஏற்படாது ஆகியவை வெப்புக் கணத்தின் குறிகுணங்கள். *(ஏடு.601-51)*

## குடிநீர் வகைகள்

1. கறுத்த குழிமீட்டானரிசி ஒரு மாங்காயளவு பறித்துக் கொண்டு வருக. அதைச் சட்டியிலிட்டுக் கொள்க. கிராம்பு 12 எடுத்து ஒரு வெள்ளையான துணியிலே சுற்றி அதிலே போடுக. 3.9லி., தண்ணீர் அதிலே ஊற்றிக் காய்ச்சுக. நன்றாகக் காய்ந்து 165மி.லி. ஆன உடனே இறுத்துக் கொள்க. அக்குடிநீரில் மேற்படி துணியிலிருக்கும் மருந்தை அரைத்து அதிலேயே கலக்கிக் கொள்க. சங்கிலே விட்டு மூன்று நாள் மூன்று வேளை கொடுக்க வெப்புக் கணம் நீங்கிப் போகும். *(ஏடு.601-95)*

2. புளியாரை ஒரு தேங்காயளவு கொண்டு வந்து அதை 1.3லி. தண்ணீர் விட்டு நீர் வற்றும் அளவு வேகவைத்துக் கொள்க. பிறகு அந்தப் புளியாரையை எடுத்து நன்கு பிசைந்து கொள்க. மீதமுள்ள குடிநீரை வடிகட்டி வைத்துக் கொள்க. அதில் 165மி.லி. வெள்ளாட்டுப் பால், 165மி.லி. தண்ணீரும் சேர்த்துக் காய்ச்சுக. தண்ணீர் வற்றியவுடன் அப்பாலை இறக்கி ஆற வைத்துக் கொள்க. அதில் மறுபடி புளியாரையைப் போட்டெரித்துக் கொள்க. நற்சீரகத்தை 488 மி.கி. எடுத்து வறுத்துப் பொடி செய்து போடுக. இம்மருந்தை மூன்று நாள் ஆறு வேளை கொடுக்க வெப்புக்கணம் குணமாகும். *(ஏடு.601-99)*

3. நாவல்பட்டை, குவளைவேர், துளசி, வல்லாரை, கதலிப்பூவிதழ், முத்தக்காசு ஆகிய மூலிகைகளை இடித்துப் பாத்திரத்திலிட்டுக் கொள்க 1.3லி. தண்ணீர் விட்டுக் காய்ச்சுக. எட்டொன்றாய்ச் சுருக்கிக் கொள்க. அக்குடிநீரில் சாதிக்காயையரைத்து குடித்தால் வெப்புக்கணம் நீங்கும் *(ஏடு.601-99)*

4. கொச்சங்காய், நன்னாரி, வாழைப்பூவிதழ், மருதம்பட்டை, ஈருள்ளி, நற்சீரகம், அதிமதுரம், சாதிக்காய் ஆகிய மூலிகைகளை எடுத்துக் கொள்க. தண்ணீர் விட்டு எட்டொன்றாய்ச் சுருக்கிக் காய்ச்சிக் கொள்க.

அதிலிருந்து வெந்த மருந்தையெடுத்துக் கொண்டு நன்கு கலக்கிக் குடித்து வந்தால் வெப்புக் கணம் நீங்கும். *(ஏடு.601-100)*

5. அத்தி, ஆல், அரசு மொட்டுகள், மருதம்பட்டை, அத்திப்பிஞ்சு, பருத்திப்பிஞ்சு, நத்தைச்சூரிவேர், முத்தக்காசு ஆகிய மூலிகைகளை எடுத்து வறுத்துக் கொள்க. அதனுடன் கிராம்பு, சீரகம், அதிவிடையம், சாதிக்காய், ஓமம் ஆகியவற்றை 5கி. எடுத்து தண்ணீர் விட்டுக் காய்ச்சி எட்டொன்றாகக் குறுக்கிக் குடிநீராக்கிக் கொள்க. குடிநீராக்கிய பிறகு சாதிக்காயையும் அதிவிடையத்தையும் குடிநீரிலிருந்து எடுத்து அக் குடிநீரையே விட்டரைத்துக் கொள்ள வேண்டும். அரைத்ததைக் குடிநீரில் கலக்கிக் கொடுக்க வேண்டும். குழந்தைகளின் வயது, நோயின் வன்மைதன்மையறிந்து மருந்தைக் கூட்டியும் குறைத்தும் கொடுக்க வேண்டும். *(ஏடு.601-100-101)*

## நெய் வகைகள்

1. காராம்பசுவின் பால் 1.3லி., நெய் 1.3லி., கொவ்வை, வல்லாரை, முசுமுசுக்கை, ஆலின் கொழுந்து, தகரை, பழம்பாசி, கூவிளை, கீழ்க்காய் நெல்லி, சுரை, விருசு, போராளிக் கிழங்கு, பொதியன் கிழங்கு, ஓரிலைத் தாமரை ஆகிய மூலிகைகளின் சாறுகளை வகைக்கு 325மி.லி. எடுத்துக் கொள்க. ஏலம், இலவங்கம், கெருடப்பச்சை, கிராம்பு, வசம்பு, தேற்றான், ஈருள்ளி, கோட்டம், நெல்லி, சண்பகம், திப்பிலி, சாத்திரபேதி, மாயக்காய், கூகைநீறு, கோரோசனை, சீனி ஆகியவற்றைச் சேர்த்து அரைத்தெடுத்துக் கொள்க. மேற்கூறிய நெய்யை இதனுடன் சேர்க்க. தீயெரித்துக் காய்ச்சி பதத்தோடு இறக்கி வடித்துக் கொள்க. அதனை 4கி. அளவு குழந்தைகட்குக் கொடுக்க வெப்புக் கணம் நீங்கி விடும். *(ஏடு.601-51-52)*

2. ஆரையிலையை நெல்கொள்கிற பெட்டிநிறைய கொண்டு வந்து ஆற்று மணலை வறுத்துக் கூட்டி குலுக்கி சிறிது நேரம் வைத்தெடுக்க. பிறகு மணலை தட்டிவிட்டு இலையை உரலிலேயிட்டு தண்ணீர் தெளித்திடித்து பிழிய சாறு வரும். இலையில் வழுவழுப்பு இருக்காது. அந்நெய்யை ஆறுநாள் பன்னிரெண்டு பொழுது கொடுக்க குணமாகும். கண நோயில் வரும் கழிச்சல், இரத்தக் கழிச்சல் இவற்றிற்குக் கொடுக்க குணமாகும். *(ஏடு.601-102)*

3. பசுவின் வெண்ணெய், அத்திப்பிஞ்சு இடித்த சாறு, பருத்திப் பிஞ்சு

இடித்த சாறு செவ்விளநீர் குதம்பையிடித்த சாறு ஆகியவற்றை வகைக்கு 325மி.லி. எடுத்து இச்சாறுகளைத் தனித்தனியே இடித்துப் பிழிந்து வடிகட்டி ஒன்றாய்க் கலந்து கொள்க.

ஏலம், இலவங்கம், கொத்துமல்லி, நற்சீரகம், ஓமம், கோட்டம், அதிவிடையம், பெருங்காயம், மாயக்காய், வாய்விடங்கம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, அதிமதுரம் இவற்றை வகைக்கு 1 1/4 கி. எடுத்துக்கொள்க. இவையனைத்தையும் மேற்சொன்ன சாறு வகையை விட்டரைத்துக் கொள்க. மேற்கூறப்பட்டுள்ள நெய்யில் சேர்த்துக் கொள்க. வயல்நத்தை 6, காட்டு நத்தை 6 சேர்த்து வேகவைத்து மெழுகு பதமானவுடன் வடித்து வைத்துக்கொள்க. அதனை ஒரு ரூபாயளவு நெய்யை 5நாள், 10பொழுது கொடுக்க வெப்புக்கணம் தீரும். அண்டந்தள்ளியிருப்பினும் உள்ளே வாங்கும். *(ஏடு.601-102)*

### *கற்பம்*

வல்லாரைச்சமூலம், எலுமிச்சங்காயளவு எடுத்து அரைத்து 325மி.லி. பசுவின்பாலிலே கலக்கிக் கொடுக்கவும். இவ்வாறாக ஒரு மாதத்திலே மூன்று வேளை கொடுக்கவும். வெப்புக்கணம் நீங்கும். *(ஏடு.601-96)*

### *நசியம்*

பேய்ப் பீர்க்கங்காயைக் 1.3 லி கொண்டு வந்து காய்க்குள்ளே இருக்கிற பஞ்சைச் சுனப்போடு எடுத்துக் கொள்க. அதனைத் தாய்ப்பாலிலே போட்டு பிழிந்து கொள்க. அந்தப்பாலை இரண்டு துளி மூக்கிலே விட, வெப்புக் கணம் தீரும். *(ஏடு.601-95)*

## *62. வெளுப்புக்கணம் - குறி குணங்கள்*

மெய்வெளுத்து முகம் மிகவும் வீங்கும், கழுத்து நீண்டு கண் வெளுக்கும், உடலுறுப்புகள் தளர்ந்து மயக்கமுண்டாகும். பழுத்த பழம் போல் உடம்பு வெளுக்கும். பச்சை நரம்பு அதிகமாகத் தெரியும், உடல்மிகவும் காயும். உணவில் விருப்பு இல்லாது போகும். *(ஏடு.601-53)*

### *நெய்*

நாயுருவி, சிறுகீரை, பொன்னாங்காணி, சீரகம், அதிமதுரம், ஏலம், மாயக்காய், கெருடப்பச்சை, வெங்காயம், கிராம்பு, மஞ்சள், பெருங்காயம், மான்கொம்பு, அகியவற்றை 5கி. வீதமெடுத்துக் கொள்க. அனைத்தையும் அரைத்து வடித்துக் கொண்டு 4கி. உள்ளே கொடுத்தால் வெளுப்புக் கணம் நீங்கும். *(ஏடு.601-54)*

# கணம் - பாடல்கள்

## *நோய் வரு வழி*

ஐயது கூடிற் றென்றால்
அரிவையர் துயரந் தன்னால்
செய்ய பற்புன லருந்திச்
செறிசல தோடந் தன்னால்
பையர வல்கு லாளும்
பசியுட னிருந்த தாலும்
துய்யதோர் குழவி கட்குக்
கணங்களுந் தோன்று மன்றே.

*(புத்.476-59,477-130)*

காப்பெனு முலகந் தன்னில்
கருதிடு மைந்தர்க் கேதான
காப்பெனக் கணங்கள் வந்து
சாருவ தேதோ வென்றால்
வாப்பெனுந் தந்தை மாதர்
வருமனு போகந் தன்னால்
நோப்பதா மூணின் கோளை
நேரிழை பாவத் தாலே.

பாவமும் பலவி காரம்
பற்றிய சிகப்பு ரோகம்
தாபமும் தணித்த தோஷம்
தாய்முலை யுண்டதோஷம்
ஆவமுன் செய்த தோஷம்
அருஞ்சல தோஷத் தாலும்
மேவுறு கணமீ ரெட்டும்
மெய்தனில் சாரும் பாரே.

*(ஏடு.798-22,109-206) (கை.பி.98-165)*

## *குறிகுணம்*

நடுங்கியதோர் பித்தமது கோபங் கொண்டு
நல்லவா யுவைப்பற்றி யழுத்திக் கொள்ளும்
கடித்திருந்த பிள்ளைக்குக் கதித்த சூடு
கனகனப்பு மெந்நேரங் கைவிடாது
ஒடுங்கியே வாயுலர்ந்து தண்ணீர் கேட்கும்
உண்மையாய் மலபேதி வழும்பாய் வீழும்

மடங்கியே நுண்கழுநீ ராபன வாசல்
மறவாம லெப்போதும் வருடம் பாரே.

சீதரத்த மாய்க் கழியும்
திரும்பக் கெட்ட பால்போலப்
பேதங் கறித்த ணீரதுபோல
பின்னும் கழியும் வயிறுப்பும்
ஏதங் கைகால் முகங்கருகி
எரிந்து குளிர்ந்து வெதுப்புண்டாம்
கோதை யிரும லுண்டாகும்
குறிதா னறிவாய் கணங்கட்கே.

மலமுஞ் சலமு மிகத்தீய்ந்து
மார்பி லதிக சுரங்காயும்
மலமும் வயிறு மிகவெரியும்
வளமாய்த் தலையு மிக மயக்கும்
சலமும் வறள்தீ தான்குறையும்
சண்டா ளம்போ லுட்சுரமாம்
தலமே பனிரண்டாண்டு மட்டும்
தனதாய் வரூஉங் குணமிதுவே.

*(புத்.477-131)*

பாரே கணத்தைப் பகரக்கேள்
பகரும் உடம்பில் சுரம்வீசும்
பாரே உட்சுர மிதுதானே
பகரும் கணமலம் உட்சேரும்
பாரே மார்புக் கூண்டெழும்பிப்
பதமாய் தேக மிகவற்றிப்
பாரே வாயு மிகநாறும்
பதமாய் மலமும் வெட்டையன்றே.

*(சர.வை.மு-26)*

மாந்த முதிர்ந்து சுழிக்குங்கோ
வயறு நொந்து நாவெந்து
ஏந்தும் எதிரே மூச்செறிந்து
இரும லிருமி சத்திக்கும்
போந்த உடம்பு பலவிதமாய்
பொறுத்துச் சுரம் உண்டாம்

காந்தள்மலர்போல் கரமுடையீர்
கணத்தின் வகையென் றுரை.

விழிநிறம் வேற தாகும்
வெறித்து உருட்டிப் பார்க்கும்
குழிவிழுந் துச்சித் தாழ்ந்து
குணாகுணம் பலவுஞ் செய்யு
மொழிவது மிடறு கம்மி
முகங்குறு வேர்வை யுண்டாம்
கவிவது வயிறு காய்ந்தால்
கணமெனக் கருது வாயே.

*(புத். 572-11, 476-60-61, 477-132)*

ஓதியதோர் பிள்ளைகட்குக் கணந்தான் கண்டா
லுற்றமெய்யில் கதகதப்பாய் சுரமுங் காணும்
பேதியது கெட்டபால் கருநீர்ப் போலாம்
பெருக்கும்வ யிறுங்கால்கை குச்சி போலாஞ்
சீதமோடி ரத்தங்கள் தாகங் காணுஞ்
சிறந்தகால்கை குளிர்ந் திருமலுண்டாம்
நீதியுடன் கண்குழிந்து மூக்குநாக்கு
நேராக வெந்துடலும் வெளுத்துப்போமே'

*(சர.வை.மு.-26)*

### வகைகள்

பார்கண மீரெட் டாகும்
பாடினோர் வாத பித்தம்
நேர்கப கணமும் மாந்தம்
நீர்கணம் பிரளி சூலி
சார்வூது சுழிக்க ணந்தான்
தடுமா மைக்கணம் வறட்சி
கூர்கொதிப் பிறக்க ணந்தான்
குறும்பல வீக்கந் தானே.

தான்தே ரைக்கண முமுறு
தருமூலம் போர்க்க ணந்தான்
ஊவிளக் கனவு ரத்தம்
ஊது - மந்தார மாந்தம்

கோளுறு காரந் தானும்
குணமிரு பத்தி மூன்றில்
பானபதி னாறு மட்டும்
பாலகன் சடத்தி லாமே.
*(ஏடு.798-23, 109-207) (கை.பி.98-166)*

### கணங்களின் தொகுப்பு

கணங்கட்பேர் விரித்தறையக் கேளு கேளு
கணவாத கணம்பித்தக் கணங்கு ளிர்ந்த
மனமான சேஷ்மகணம் பிள்ளை கட்கு
மாந்தகணம் அதிற்பிரிவு ஐந்தாம் இப்பால்
துன்மாநீர் கணம்பிரளிக் கணமும் நல்ல
சூலிகணசுழிகண மகாக ணந்தான்
குணமான ஊதுகணம் வறட்க ணந்தான்
கொதிப்புகணம் வீக்ககணம் இன்னங் கேளே.

கேளேநீ பிறக்கணமும் அந்த கன்தன்
கணமும்மந் தாரகணம் எரிக ணந்தான்
மூளேநீ ராமகணம் ஆமகண மெற்ற
முக்கணம் மூலகணம் பேரா மத்தின்
வாளேநீ கணம்இரத்த கணமாம் எல்லாம்
வகுத்துரைத்த திருபத்து மூன்று மாக
கோளேது இதுதானே ஆயுர்வேத
குறிப்பறிந்தார்க் கல்லாமல் மற்றோர்க் கேதே.
*(புத்.476-60)*

### எண்வகை கணங்களாவன

உரையாய்க் கணங்காரியும் உண்மை மகாகணந்தான்
நிரையாய் உதடுவெடி நேருமே-குரைசேர்
சுழிகணந்தான் வயிறுபோம் காணவிலா இரண்டும்
சுழிக்குங் கணமென்றுஞ் சொல்.

சொல்லாய் வறட்கணந்தான் சுரம்அஸ்தி யில்நிற்கும்
செல்லாய் நீர்க்கணம் வேர்வை செய்யும்-நல்லாய் கேள்
முக்குக்கண முக்கும் மூலகணஞ் சீதரத்தம்
தக்கும் அடிதள்ளுந் தான். *(ஏடு.362-5) (புத்.476-11)*

### 1. வில்வ இலைக் குடிநீர்

வில்வ பத்திரி துத்திவெண் காயமும்
நல்ல வெந்தயம் ஒக்கநன் றாய்வறு
வல்ல நல்லநீர் வார்த்துப்பின் சீரகம்
சொல்லக் காய்ச்சிக் கொடுகணம் சோருமே.

*(புத்.476-63, 477-134)*

### 2. மணித்தக்காளிக் குடிநீர்

மணித்தக் காளி ஒருபிடியும்
மானே வெந்தயம் பலம்நாலு
துணித்தீ ருள்ளி தான்மூன்று
துட்டெடை யெல்லாம் பொன்னிறமாய்க்
குணித்து வறுத்தே யிரண்டுபடி
குசம்விட் டெட்டொன் றாய்காய்ச்சிக்
கணித்து மூன்று நேரங்கொள்
கணம்வாய் நாற்ற மிருமல்போம்

*(புத்.477-135, 476-65)*

### 3. நீர்முள்ளிக் குடிநீர்

நீர்முள்ளி யீருள்ளி திரிப லாதி
நேராகப் பசுமோரிற் கியாழஞ் செய்தே
ஏரெட்டொன் றாய்க்காய்ச்சி யிறக்கிக் கொண்டே
இருப்புமொந் தைதனிலே வார்த்து வைத்துச்
சீராக வொருசங்கன் றிரண்டு சங்கு
தினங்கொடுக்கத் தீராத கணமுந் தீரும்
சார்ந்தலருங் குழல்மடவாய் மருந்தி னோடு
சங்கம்வேர் ஒக்கச்சா ரித்துக் கொள்ளே.

*(புத்.477-174)*

### 4. குடிநீர்

நவ்வல் பட்டை கூவிளம்வேர்
நாடுந் துளசி வல்லாரை
செவ்வல் கத்தளம் பூவிதழ்
சிறக்க முத்த மோரொன்று
கவ்வல் தேபிடி கீசர்
காய்ச்சி யெட்டொன் றானபின்பு

தாவல் சாதிக் காயரைத்து
தானே கொடுக்க நோய்போமே. *(ஏடு.435-42)*

### *5. குடிநீர்*

அத்தியால் அரச மொட்டு
அதினுட மருதம் பட்டை
பத்தியா மத்திப் பிஞ்சு
பருத்தியின் பிஞ்சு மொக்க
நத்தமாஞ் சூரி வேரும்
நலமுடன் முத்தக் காசும்
சித்தியாம் பண்பி லொக்கச்
சிறக்கவே வறுத்து வையே.

வைத்ததோர் மருந்தி னூடே
மறுபடி கிராம்பு சாதி
கைத்ததோர் விடையஞ் சாதிக்
காயுட னெனுவா யோமம்
மெய்த்ததோர் சமனாய்க் கூட்டி
விதையைநீ வறுத்துக் கொண்டு
பொய்த்ததோர் கிழியைக் கட்டி
போட்டுநீ காய்ச்சிக் கொள்ளே. *(ஏடு.435-43,44)*

### *கற்கம்*

கெச்சக் காயும் நன்னாரி
கூரிய வாழைப் பூவிதழு
மெச்ச மருதம் பட்டையுடன்
வேண்டு மீருள் ளிமரம்
பச்ச முடனே சீரகமும்
பகரு மதுரஞ் சாதிக்கா
யுச்சம் பிறவேக் குடிநீரில்
ஒக்க காய்ச்சி வடிகொண்டு.

கேளே வெந்த மருந்துதனை
இண்டிச் சரக்கை யரைத்ததனை
நாளே கலக்கித் தான்கொடுக்க
நாடுங் கணைநோய்க் கடுப்புளதும்

பாளே தீரும் உண்மையிது
    பரிவாய்ச் செய்ய வல்லீராய்
கேளே கணைநோ யில்லையெனக்
    கீந்தார் கேட்டி டுமே. *(ஏடு.435-43)*

### *1. வல்லாரை நெய்*

கணமான கணமதற்கு மருந்து சொல்வேன்
    கிரியையென்ற வல்லாரை மாசிப் பத்திரி
கணமான வில்வமொடு விளாவின் சாறும்
    கடியான அத்திப்பா லாலம் பாலும்
திணமான வுள்ளிநீர் நிம்பச் சாறும்
    திறமான முலைப்பாலு மாவின் பாலும்
கிணமான வாவினெய் வெள்ளாட் டின்பால்
    கேள்சிவந்த கொம்புத்தேன் கொவ்வைச் சாறே

சாறிதெலாம் வகைப்படியோ வரைதான் வாங்கிச்
    சமர்த்தான தெங்கங்காய்ப் பாலு நாழி
சாறிதெலா மொருசட்டி தனிலே யூற்றிச்
    சாதிக்காய் சாபத்திரி யேலங் கிராம்பு
சாறதிலே திரிகடுகு திரிப லாதி
    சடாமாஞ்சி லதிவிடய மாசிக் காயும்
சாறதிலே வகைப்பலமோ வொன்று வாங்கிச்
    சன்னமாய்த் தூளிடித்து வைத்துக் கொள்ளே.

வைத்துக்கேள் சந்தனத்தூ ளறுகங் கட்டை
    வலிவான வெட்டிவேர் விலாமிச் சோடு
கைத்திறமா யிடித்துவகைப் பலந்தான் வாங்கிக்
    காற்படிதா னீரதிலே யிதனைப் போட்டு
மற்றுப்பார் கஷாயமது பாதி வாங்கி
    மகத்தான சாறதிலே யொன்றாய் வார்த்து
வைத்துப்பா ரடுப்பேற்றி யெரித்து மேதான்
    மச்சமாய் நீர்சுண்டி நெய்போ லாமே.

நெய்போலாம் பதத்திலே மருந்தைக் கொட்டி
    நேசமுடன் பூரணமாய்க் கிண்டு கிண்டு
நெய்போலாங் குழம்பாகும் பதத்தைக் கண்டு
    நேசமா யிறக்கிவைத்துத் தேவி தன்னை

நெய்யான நெய்யிதுதான் வலுத்துப் போச்சு
நினைவாக லட்சமுரு நீதா னோது
நெய்யான நெய்யிதுதான் வலுத்துப் போச்சு
நிகரில்லாச் சஞ்சீவி யிதுதான் பாரே.

பாரேதான் கரண்டிநிறை மண்டலமே கொண்டால்
பாழாக்கு முன்சொன்ன கணமெல் லாம்போம்
பாரேதான் வாதத்தா லெழுந்த நோய்கள்
பன்னிமுன் னோடுமே பின்பா ராமல்
பாரேதான் புளிகசப்பு வாதப் பண்டம்
பற்றறவு மாகாது தள்ளிப் போடு
பாரேதான் தேரைகணம் தேரை போலப்
பழுதில்லை யெட்டாண்டு மட்டுண் டாமே.
*(புத்.476-62,63, 477-133,134, 572-11.13)*

## *2. நெய்*

ஈரவெங்கா யம்பசுவின் நெய்நற்சீ
ரகமூன்று மியல்பாய்க் கொண்டே
வேருடனே சிறு அம்மான் பச்சரிசி
விதமொன்று மேசமூலம் வார்முள்
கருவேலங் கொழுந் தோர் பிடியிது
விரண்டும் வாய்பே சாமல்
ஏருடன் கொண்டேமுன்மருந் திம்மருந்தும்
வெந்ததனை யேபி டித்தே

பிடித்துப்பார்த் தால்மொருகு மொருகென்றா
லப்பதத்திற் பிடித்தி றக்கி
எடுத்துக்கொண் டேயிரண்டு துட்டளவு
தினசரியெ டுத்து நல்கு
கடுகெனயிப் படிமாத மூன்றுதிரங்
கொடுசகல கணமுந்தீரும்
விடுபுளியுப் பினையென்று வேந்தனார்
சரபேந்திரர் விளம்பினாரே *(சர.வை.மு-117-118)*

## *3. சண்பகப்பூ நெய்*

கோட்டம்நல் லெண்ணெய் நெய்யும்

குறித்தசண் பகப்பூ கந்தம்
நீட்டிய அவுரி துய்ய
நிலக்குமிழ் கடுகு ரோகணி
நாட்டிலா மிச்சை மிக்க
நலந்தரு கிராம்பு பாகம்
ஈட்டியே சாறு கொண்டு
எரித்துண்ணக் கணம்போ மின்னே.
*(புத்.477-170, 476-64)*

### *4. நெய்*

புத்திரருக்கு அடக்கவொரு நெய்தான் கேளு
புலாத்தி வேருடனே பூங்கதலிப் பிஞ்சு
மத்திப்பின் பிஞ்சுடனே முத்தக் காசு
மகத்தியிலை முசுமுசுக்கை கீழ்க்காய் நெல்லி
சத்திச் சாரனை தூதுவளை மாதுளையின்
தகுவான மலைதாங்கி தக்காளி விலம்
சித்தியுள்ள வல்லாரை கரிசலாங் கண்ணி
சிறுநெருஞ்சி பெருநெருஞ்சி சிறுபுள் ளடியே.

அடியான செருப்படியும் சிறுகீ ரைதான்
ஆம்பலோடு முள்ளிகொட்டி ஆகுநெய்தல் கிழங்குங்
செடியான கண்டங் கத்திரியி னோடு
சிவமுருங்கை கருந்துளசி சிவந்தநா யுருவி
கடியான முணப்புரண்டி செங்கழுநீர்க் கிழங்கு
கருதுநில வேம்பு சிறு காஞ்சொறியின் பிஞ்சுப்
படியான குருந்தொட்டி ஆடா தோடை
பருத்திப் பிஞ்சுடனே கதலிப் பூவே.

பூவான பொடுதலையும் பிரம தூது
புகளான நருநின் ஓரிதழின் மூலம்
காவான செந்தொட்டி கன்னிசிறு பீளை
கானத்தாலம் விழுதுடனே கஞ்சாங் கோரை
நாவான அமிர்தவல்லி குழிமீட்டான்...
நவந்த-அம்மான் பச்சரிசி விட்டுணு கிரந்தி
தேவான கரந்தையொடு-பழம் பாசிதான்
சிவந்திருந்த யிலந்தையின் தம்பலமு மென்னே.

பலமான மூலிகைதான் வகைஒன் றுக்கு
பலமொன்று படிசலமா யளந்து விட்டு
செலமான தெட்டொன்றாய் வற்றக் காய்ச்சி
செய்ததுக்கு நாலிலொன்று நறுநெய் சேர்த்து
குலமான அதிமதுரம் கோஷ்ட்ட மேலம்
குரோசாணி குந்தரிக்க நறுக்கு மூலம்
பிலமான திரிகடுகு திரிப லாதி
பேரான அதிவிடைய மரிசிவகை வாரே.

ஆறான மையோடு கலங்கொம்பு ருத்திராட்சம்
அதிகமாங் கெருடப்பச்சை சாஷ்த்திர பேதி
கூறான மருந்துவகைக் கால்பலமாய் வாங்கி
குமுறஅரை வெள்ளாட்டுப் பாலை விட்டு
சேறாகக் கலக்கியதைப் பாகு செய்து
திரிநாளில் மெழுகுபதஞ் சேர வாங்கு
வாறான கணபதிக்குப் பூசை செய்து
மைந்திருக்குக் காசிடைதான் வரிசை கேளே.

*(ஏடு.362-74.75)*

### *5. நெய்*

சிற்றாமணக்கு முத்திரு நாழி
சிறந்தாவின் பாலிரு நாழி
யொத்ததை விட்ட ரைத்து
உலர்த்தியே யிடித்துக் கொண்டு
சித்தமாய் இளநீர் வெள்ளம்
சிறக்கவஞ்சி நாழி தள்ளே
உற்றதேராக் கலக்கி காய்ச்சி
உடனெண்ணெ யூற்றிக் கொள்ளே

கொள்ளவே சாதிக் காயும்
குரோசாணி சாதி பத்திரி
நள்ளவே கிராம்பு சீரகம்
நலமுடன் வசம்போ டேலம்
தெள்ளிய திப்பிலி மதுரம்
சிறக்கவே மாயக் காயும்
மன்னிய மருந்து தன்னே
இதின்வகை கழஞ்சி காலே.

இதுவகை யரைக்கக் கேளு
    இதனுடன் துளசிச் சாறும்
மதித்தவல் லாரைச் சாறும்
    வகையின்சா றாழாக் கோடு
இத்துட னரைத்துக் காய்ச்சி
    இசல்மெழுகு பதம்வ டித்து
காதித்த காசிடை குடிக்க
    கணைபதி னெட்டும் போமே. *(ஏடு. 601-57)*

### *8. நெய்*

கருவான பாலகருக் குள்ளு ரோகம்
    கணைப்புடனே அச்சரம் செங்கரப்பன் வாய்ப்புண்
பொருளாகத் தீருதற்கு நெய்தா னொன்று
    புளியன்விதை தோல்சிரங்கை பொடிய தாக்கி
தெரியான தேங்காய் துடைத்து லேசாய்
    துருவியதில் தூள்கலந்து ரவியில் காய்ந்து
உருவான எண்ணெய்தனைப் பிழிந்து கொண்டு
    உற்றபசு நெய்யதிலோர் படிதான் சேரே.

சேர்த்திடுவாய் தெற்றிப்பூ தெற்றிப் பட்டை
    சிறந்தவேர்ப் பட்டை காக்கலம்வேர்ப் பட்டை
வார்த்திடுவாய் சுண்டை சிறுசுண்டை தூது
    வளையுடன் நன்னாரி மலைதாங்கி வேர்த்தோல்
தீர்த்திடுவாய் விரிசந்தோ லத்திப் பட்டை
    சிறுபீளை ஒடுவடக்கி குப்பை மேனி
சார்த்திடுவாய் துளசிமுறி பொருத்திக் கூட்டித்
    தக்காளி முருக்குபொடு தலையுங் கூட்டே.

கூட்டடா தென்னம்பூ மாதுளையின் பிஞ்சு
    குணமான யீருள்ளி சமன்கழுநீர் வார்த்து
தீட்டடா துவைத்துநன்றாய்ப் பிழிந்தி றுத்து
    செவ்விளநீர் நாழி பசுவின்பால் நாழி
வாட்டடா எண்ணெயொடு நெய்யுங் கூட
    வருமளவு சாறுவகை யெல்லாம் நேராய்
காட்டடா யதினோடு இளநீர் பாலும்
    கலந்ததிலே மருந்துவகை கருதிக் கேளே.

கேளப்பா திரிசாதி ஏலமில வங்கம்
கெருடப்பச்சை மாயக்காய் சாத்திர பேதி
ஆளப்பா கத்தூரி மஞ்ச ளோமம்
அதிவிடையம் திரிகடுகு அக்கி ராவும்
வாளப்பா வால்மிளகு நன்னாரி சந்தம்
அகில்பூ வதிமதுரம் வசம்பு தேற்றான்
மீளப்பா சிறாமிச்சத் திருகச் சேலம்
நெல்லிகடுக் காய்கூகை நீறுங் கூட்டே.

நீருடனே குரோசாணி யரத்தை சந்தம்
நேர்மையிரு சீரகம் ராமிச்சம் வேரும்
வீருடனே சண்பகப்பூ வரிசி யாறும்
வகைபூலா விருட்சங்கோ ரோசனையுங் கூட
வேருடனே வகையொன்று வராக னொன்று
பிசகாமல் பசுவின்பால் வார்த்த ரைத்து
வீருடனே முன்மருந்தில் கலக்கிக் காய்ச்சி
மெழுகுபதம் வடித்திறுத்து விளம்பு வேனே.

விளம்புவேன் காசிடைதா னந்தி சந்தி
விருதான பத்தியமாய்க் கொடுத்தா யானால்
கிளம்பவே யோடிவிடு முள்ளு ரோகம்
கிரந்திகணை யுள்காச்சல்....... .......
...... ...... ...... ......
சகலவித நோயுமிதில் சாந்த மாமே.*(ஏடு.109 41,42)*

### *6. வல்லாரை நெய்*

சித்திர மான புதுமை - நல்ல
சீரான வல்லாரை நெய்இஃ-தருமை
நத்தின பேருக் குரிமை - அந்த
நாதாக்க ளறிவார்க ளிதனது பெருமை.

பத்திரமாம் பச்சை மூலி - நல்ல
பாங்கான வல்லாரை பலநூறு சாலில்
வைத்திடு நீரெட்டுப் படியாய் - இதை
வகையாக விட்டெரி யெட்டொன்ற தாகச்
சுத்தாவின் நெய்யொன்று விட்டே - இதில்
கூட்டவே கடைச்சரக் கவைகளை மூட்டு
வித்தான சுக்கது தீட்டு - நல்ல

விதமான வேலங் கலைக்கொம்பு மாட்டு

சத்தான சாதிக்காய் நீட்டு - நல்ல
சாதக மானதோர் தாளீசம் கூட்டு
எத்தான பத்திரி போட்டு - நல்ல
இதமான கோட்டம் விலாம்வெட்டி நாட்டு

சிங்கார மான நற்சீரம் - நல்ல
சீரான தான்றிதக் கோலம்பொன் னாரம்
வெங்காரம் வில்லை யக்காரம் - நல்ல
வீரான சண்பகப் பூவும் கோரம்

சங்கார குங்கங் கத்தூரி - மஞ்சட்
சாதக மானதோர் இம்பூறல் வேரும்
நங்கார் குளிக்குங் கச்சோலம் - நல்ல
நலமான மல்லியும் ரோகணி வேரும்

இத்தனை யான சரக்கும் - இதில்
ஏற்றங் குறைச்ச லில்லாம லெவர்க்கும்
கத்தனைப் போற்றி நினைக்கும் - வகைக்
கண்டு வராக னெடையது தூக்கும்

அத்தனை யும்படி ஆவின் - பாலி
லாட்டியே அம்மியி லரைத்திடு வீரே
வற்றின வல்லாரை நீர்க்குள் - வகை
யாகவே சேர்த்த சரக்கைக் கரைத்துக்

கண்டித்துப் பாண்டத்தி லூற்றிச் - சொன்ன
கருனாவி நெய்யதை ஒருபடி யூற்றி
விண்டித்து நீயன லேற்றி - நல்ல
விதமாக மொண்டதைத் திரள்பதத் தூற்றிக்

கிண்டிட்டுத் தான்பதம் பார்த்து - நல்ல
கெடியான பீங்கானில் துடியாய் வடித்துச்
சண்டித்த நோய்களுக் கேற்று - மிந்தச்
சதிரான வல்லாரை நெய்தினங் குடித்து
இட்டிடும் வல்லாரை நெய்க்கு - விட்டே
ஏகம் வியாதியை யிதமுடன் சொல்வேன்
மட்டுப் படாத்தொந்த மாந்தம் - இன்னம்

மாறாட்ட மாய்வந்த வல்லப்போர் மாந்தம்.

கட்டுக் கடங்காத மேகம் - பொல்லாக்
காச ரோகமென்ற வருவிட நோயும்
முற்றின வீளை இரைப்பு - காந்தும்
மூல கணங்களும் உட்சுர மேலும்

சுத்திடுஞ் சர்த்தி இருமல் கொடுங்
காசம் போலே கக்கும் சுவாச சுரமும்
பற்றிடும் நோயென்ற தெல்லாம் - நல்ல
பாங்காக வேரண்டு நேர மருந்தே.

*(புத்477-164-165, 476-102-103)*

### *7. மாதுளை நெய்*

தேறவே இன்னமொரு கருவைக் கேளாய்
சிவனெனக்குச் சொன்னபடி சொல்லு கின்றேன்
ஆறவே மாதுளைதன் சமூலம் வாங்கி
அமுதசர்க் கரைசேர்த்துக் குழம்ப தாக்கி
ஊறவே ஆவெண்ணெய் கூடச் சேர்த்தே
உறப்பாகப் பருவமாய்க் கிண்டி வைத்துக்
கூறவே சாதிக்காய் சாதி பத்திரி
குணமுடனே ஏலரிசி கூடப் போடே.

போட்டதனை யனலில்வைத்து வெதுப்பி நீதான்
புனிதமுடன் மெழுகுபதம் வடித்துக் கொண்டு
நாட்டதனைக் குழந்தைகட்குக் கரண்டி யிட்டால்
நகருமே நோய்களெல்லாம் நாற்பத் தொன்றில்
பூட்டதனி லிதுபூட்டு கணங்கட் கெல்லாம்
புகழாகச் சொல்லிவிட்டே னறிந்து பாரு
தேட்டதனைத் தேடாதே நெய்யைத் தேடு
திறந்துவிட்டேன் குழந்தைகட் கிதுநெய் யாமே.

நெய்யதனை குழந்தைகள்தான் கொண்ட தானால்
நேரான கணரோகம் பதினெட் டும்போம்
பொய்யதனைச் சொல்லவில்லை தோடம் போகும்
புதுமையுள்ள வயிற்றிரைச்சல் கழிச்சல் போகும்
பையதனைப் பயல்களுக்குங் கொடுக்க லாகும்
பருவமுள்ள குழந்தைகட்கும் கொடுக்க லாகும்
உய்யதனை ஒளியாமல் சொல்லி விட்டேன்

ஒருவருக்குஞ் சொல்லாமல் ஒளித்து வையே.
(புத்.477.167,168, 476-105)

### 9. கணைகளுக்கு நெய்

பாரப்பா கணைகளுடன் கிராணி தானும்
பறந்தோடக் கிருதமொன்று பகரக் கேளு
பேரப்பா காராவின் நெய்யீ ருள்ளி
பூங்கதலிச் சாறுவகை வகைக்கோர் நாழி
சாரப்பா பூவிரி மாதுளையின் பூவு
தன்சா றொன்றுவீதம் சரியாய்க் கூட்டி
சேரப்பா கற்கமதி லளந்து விட்டு
திருத்தவே கற்கவகை செப்பு வேனே.

செப்புவே னதிமதுரம் கெருடப் பச்சை
சிற்றேல மாயக்காய் சமன தாக
மப்புகின்ற இலவங்கம் பஞ்சிக் கன்னார்
வகையொன்றுக் கோர்கழஞ்சி வீதந் தூக்கி
ஒப்புகின்ற முன்சரகந் தன்னா லாட்டி
ஒன்றாக வார்த்துவார்த் தடுப்பி லேற்றி
தப்புகின்ற அனல்மூட்டிப் பதமாய்க் காய்ச்சி
சாந்தமாய் மெழுகுபதம் தன்னில் கேளே.

பதமறிந்து சாதிக்காய் பத்திரி கிராம்பு
பகர்விடையம் வசுவாசி முத்தக் காசு
விதமறிந்தொன் றிருகழஞ்சி வீதந் தூக்கி
வெதுப்பிநன்றாய்ப் பொடித்துவடி கலசத்திட்டு
இதமறிந்து வடித்துக்கா செடைமூன் றூட்ட
ஏகிவிடும் ....கணை ..... ....
....... ...... ...... .......
..... ...... குணமுண் டாமே.

(கை.பி.98-48-49)

### காரை இரசாயனம்

காரைநற் கனியின் சாறு
கரும்பினிற் பஞ்ச தாரை

ஒரொரு வகைக்கு நாழி
உடனேநா நாழி ஆப்பால்
சேரவே விட்டுப் பாகாய்த்
திரளநெய் யுழக்கு விட்டுச்
சார்நா னெரித்துட் கொள்ளச்
சகலமா கணமும் போமே. *(புத். 477-174)*

## *இளகம்*

கடுக்காய்ப்பிஞ்சு அதிவிடையம்
கசகசா பரங்கிப் பட்டையுடன்
துடுக்காஞ்சீரஞ் சந்தனத்தூள்
துய்ய சாதிப் பத்திரியும்
அடுக்காம் நல்ல வற்றலொடு
அரிய சிற்றா முட்டியுமாம்
துடுக்காம் கூவிளம் செம்பருத்தி
துய்ய ராமிச் சிதுவாமே.

இதுகள் வகைக்குப் பலமொன்று
இடித்துச் சீலை வடிகொண்டு
புதிய சீனி கற்கண்டு
போடு ரண்டு பலமுடனே
புதிய ஆவின் நெய்யஞ்சு
பலமுங் கூட்டி லேகியமாய்
மதியாய்ச் செய்து பாக்களவு
வாங்கும் நீலக் கணம்நோயே. *(கை.பி.98-182)*

## *1. குமிழ்வேர் எண்ணெய்*

பாருமே யிக்குணத்தால் கணங்க ளென்று
பரிவாகக் கண்டறிநீ புத்தி யாகச்
சாருதற்குக் குமிழவேருஞ் சித்ரப் பாலை
சார்ந்தருக்கன் காந்திவேர் பொன்னாம் பூவேர்
போரான மதிமயக்கி கணப்பூண்டு வேரும்
போதாவாய்ப் பட்டைவகைப் பலமே தூக்கு
மீறிஅரை மெழுகதுபோல் எண்ணெய் நாழி
வெந்தபின்பு பீங்கானில் இறுத்தி வையே.

இறுத்திட்ட எண்ணெய்க்குப் பொடியைச் சொல்வேன்

ஏலம்சீ ரகம்மதுரம் பலமே வாங்கி
வறுத்திடித்துப் பொடித்திடுவாய் மயனம் போல
மாரிஎண்ணெய் மேல்தூவிக் குறுக்கி வைப்பாய்
நிறுத்துமொரு காசெடையாய் மூன்று நாள்தான்
நேராக முலைப்பாலில் கலந்து வாரு
துரத்திவிடும் அபானத்தால் சொரிந்த ரத்தம்
தோன்றினதோர் கணமெல்லாந் தூரப் போமே.
*(புத்.476-62, 477-133)*

## *2. எண்ணெய்*

கற்றாழை மடல்வட்டத் துத்திவேர்
கடுகுரோ கிணி கடுக்காய்
நற்சீரகங் கருஞ்சீரகத் துடன் வெந்த
யமுஞ்சார டைவேர் தானும்
பற்பலநாட் பழம்புளியீ ரவெங்காய
முங்கூட்டிப் பரிந்துரைத்து
வற்கவிளக் கெண்ணெயினி னுற்பனமா
சுப்பிழிந்து வடித்துக் கொண்டே

வடித்தெடுத்து வார்க்கவுங்கை கண்டதிந்த
மருந்துதின்றால் வன்மையாகப்
பிடித்திடவேண் டும்பத்தியம் பேசிலொன்றா
காதெனவே பேசுவாரென்
றடுத்தவருக் கருள்புரியு மண்ணல்சர
பேந்திரனா ரருளிச் செய்தே
கொடுத்தவிந்த முறையிதனைக் குவலயத்தோ
ரனைவருங்கொண் டாடுவாரே
*-(சர.வை.மு.-112-133)*

## *3. பால சஞ்சீவி எண்ணெய்*

இம்பூறல் சிறுகீரை முசுக்கை கொவ்வை
எலிச்செவியுங் குரும்பைபொன் னாங்காணி யிண்டு
அம்பான குப்பையுட மேனி தானும்
அவுரியுடன் பொடுதலைநல் லாடா தோடை
வம்பான வல்லாரை துளசி வாலி
வளர்தூது வளைகோழி யவரை கொன்றை
முன்பான தகரைகையாந் தகரை யோடு

முருங்கையிலைப் பட்டைவிட்னு காந்தி கூட்டே.

கூட்டுமோ ரிதழ்வனசம் படகம் நிம்பங்
கொள்ளானை நெருஞ்சில்நரிப் பயறீ ருள்ளி
வாட்டுநறு விழியினிலைச் சுரச மெல்லாம்
வாங்கியெண்ணெய்க் கொன்றிரட்டி வகையாய்ச்
சேர்த்துப்
பூட்டுகற்கம் பஞ்சமூ லஞ்சா திக்காய்
புதியகருஞ் சீரகமும் சாதிப் பத்திரி
நாட்டுபஞ்ச திரவியமோ டுள்ளி துத்தம்
நற்கோரோ சனைகாய்ச்சுக் கட்டி தானே.

கட்டிக்கம்பிப் பிசினியொரு கழஞ்சு கூட்டிக்
கலந்தரைத்து மெழுகுபதம் வடித்துக் கொண்டு
திட்டமுட னருந்திவிட அச்சரங்கள் காய்ச்சல்
சேர்ந்தபதி னெண்கணமும் திரைகெட் டோடும்
வட்டதனப் பெண்ணரசே பத்தி யங்கேள்
வகையான யீருள்ளி முருங்கைக் கீரை
சட்டமுட னேஉண்ணச் சொன்னேன் பால
சஞ்சீவி இந்தஎண்ணெய் பலந் தானே.

*(புத்.477-167, 476-104-105)*

### 4. எண்ணெய்

மாசிக்காய் சீரகமோ டதிமதுரம்
வகைக்கோர்பல மாங்கிராம் போர்
காசிடைகோ ழியினவரை வேர்பலம்பத்
தீரவெங்கா யமுமோர் சேரு
மீசுரமாய்ச் சிறுகவரிந் தொன்றரைச் சேர்
விளக்கெண்ணெய் மீதினிட்டே
வாசமுறப் பொன்னிறமாய் வரவேக
விட்டுவேர் வகையெடுத்தே

எடுத்திதனைப் பஞ்செனப்பிச் சிப்போடவுங்
கண்டகொண் டிடுமருந்தை
யிடித்துப்போ டவுமிந்தப் பதத்தின்ம
றுலேசத்தி லெடுத்து வார்த்துங்
கொடுத்துக் கொள் ளவுமெந்தக் கணத்திற்குங்

குணமிரத்தக் கணமேயாதி
படுத்துமகணம் பதினெட்டும் பறக்குமெசை
சரபேந்திரர் பகர்ந்திட் டாரே *(சரா.வை.மு.-124)*

### *5. குமரி எண்ணெய்*

ஆட்டிய எண்ணெ யதுபடி யொன்று
கூட்டெழு சுத்திக் குமரிச் சோறது
மீட்டித் தேங்கா யளவு வெந்தயம்
ஊட்டித் துட்டெடை யூறப் போட்டிடே

ஊறியதோர் சலத்தோடே வெந்தயமுங் கூட
ஊற்றிவிடு எண்ணெயிலே கலந்தொன் றாகக்
கூறியாஈ ருள்ளிபலம் அரிந்து போடு
குமுறவே யடுப்பேற்றி மெழுக தாக
ஆறியபின் வடித்தெடுத்து வைத்துக் கொண்டே
அழகாக நேரமொரு கரண்டி வீதம்
கோறிகொடு பதினெட்டுக் கணமுந் தானே
குணமாகுங் கணவெட்டை சுரங்கள் போமே.
*(புத்.482-7, 477-169)*

### *6. வல்லாரை எண்ணெய் கணச்சூடு தனிய*

சிற்றா மணக்கின் எண்ணெய்படி
திறமாய் ஒன்று வல்லாரை
சற்றாச் சாறு படி அரையும்
தானே வெந்தயம் பலம் இரண்டு
அற்றாப் பசுப்பால் விட்டரைத்து
அந்த எண்ணெ யிற்கலந்து
வற்றா எரித்து அயிரிட்டு
வார்க்கக் கணச்சூ டதுபோமே.
*(புத்.477-170, 476 65)*

### *7. எண்ணெய்*

பேய்க் கொம்மட் டிக்காய்மூன் றெடுத்துமே
லிருக்கிறதோற் புரணி வாங்கிச்
சீக்கிரம தாயறுத்துள் ளேயிருக்கும்
விரைதீர்த்துச் சிறுகத்தானே
பாக்குவெட்டி யானறுக்கி வெங்காய

மேற்றோலைப் பரிகரித்து
மோர்க்கநன்றா யரைத்துவிளாங் காயளவு
விழுதுமொம்மட் டிக்காயுள்ளே'

இக்காயி னிற்கதையும் விளக்கெண்ணெ
யோர்படியு மிதிலேயிந்தப்
பக்குவமா, மருந்திரண்டுஞ் சேர்த்தடுப்பி
லேயெரித்துப் பருவமாய்க் காய்ச்
சிக்கோரோ சனையரைக்கா சிடையொருகா
சிடையேலத் தினைப்பொடித்தே
அக்கணமே போட்டிறக்கி பிக்கணந்தீர
சிறுகரண்டி யளவுட்கொண்டே' *(சர.வை.மு-115)*

### *8. கருஞ்சீரக எண்ணெய்*

கருகருஞ் சீரம் கடுகு ரோகணி
விடுவன மல்லிகை மீறும் இண்டிலை
இடுமுலைப் பாலிலீ ருள்ளி உசிலையும்
கொடுவிளக் கெண்ணெய் கூறு கணங்களே.
*(புத்.476-64, 477-170)*

### *9. பொன்னாங்காணி எண்ணெய்*

பொன்னாங் கண்ணி வேருடனே
புளிய னீர்க்கு வேப்பீர்க்கு
மின்னே ஒவ்வோர் பிடியதனில்
விதமாய்க் கோழி யவரையின்வேர்
சொன்னோம் பலமரை யாகவே
துவள் நறுக்கி யெண்ணெய்விட்டு
யுண்ணே பானு புடம்வைத்தே
ஓடுங் கணமும் வாராதே.
*(ஏடு. 362-59) (புத்.477-171, 476-64)*

### *10. சிறுபுள்ளடி எண்ணெய்*

சிறுபுள் ளடியும் கழற்கொழுந்தும்
சிறந்த அவுரி சாணாக்கி
நறுமென் பொடுதலை ஒருபிடியும்
நைய நறுக்கி நல்லெண்ணெய்
நிறுமுன் அரையாய்க் கதிரோன்முன்

நேரே வைத்து நீயருந்த
நறுமென் குழலாய் மேல்பூச
நாத னருளால் கணந்தீரும்.
*(புத்.477-171, 476-64 )*

### *11. வில்வ எண்ணெய்*

விளக்கெண்ணெய் வில்வநீர் மீறவுரி யுள்ளி
உளக்க வகைக்கோ ருழக்காம்-விளக்கக்
கடுக்காய்த்தோல் கூட்டியது காலைசிறு வோர்க்குக்
கொடுக்கக் கணம்போகுங் கூறு.
*(ஏடு.6218-39) (புத்.476-64, 477-171)*

### *12. எண்ணெய்*

சீரகம்வெந் தயஞ்சாதிக் காயிலவங்
கப்பட்டை சண்பகப்பூ
யீரவெங்கா யங்கோட்டந் திப்பிலிதிப்
பிலிமூல மேலங் கிராம்பு
பேருளசெங் கழுநீருங் கருஞ்சீர
கமும் வெளிச்சைப் பிசின்கணப்பூண்
டேருளசா திப்பத்திரி யித்தனையு
மெண்ணெயிலே யியல்பாயிட்டே

இட்டிதெலாம் வைத்தொன்றி லெடுத்துச்சூ
ரியபுடமிட் டெடுத்துக் கொண்டே
மெட்டுடனே கணமென்னப் பட்டதற்குக்
கொடுத்திடவும் வெந்நீர் சோறுந்
திட்டமிடு தின்னவுமென் றட்டதிசை
கொண்டாடுஞ் செழுநீர் பொன்னி
யிட்டவளஞ் சரக்குஞ்சோ ணாட்டிறைவர்
சரபேந்திர ரியம்பினாரே' *(சர.வை.மு-116)*

### *13. தும்மட்டி எண்ணெய்*

விளக்கெண்ணெய் படியொன்று தும்மட்டிக் காய்தான்
வெள்வைக்கோல் சுட்டதனீர் படிதான் காலும்
முளக்கமெனுந் தக்காளிச் சாறு காலும்
முதிர்ந்தவெங்கா யச்சாறு படிதான் காலும்
இளக்கியெண்ணெ யினில்போட்டுக் கடைம ருந்தும்

இயம்புகிறேன் வால்மிளகு பணம ரைக்கால்
அளக்குகோ ரோசனமும் பணம ரைக்கால்
அறையுங்கத் தூரிமஞ்சள் வெந்தயமு மாமே.

வெந்தயந்தான் சிற்றரத்தை பேர ரத்தை
விதமான கருஞ்சீரம் லவங்கப் பட்டை
சிந்தனையில் லாப்பெரிய லவங்கப் பட்டை
திறமான மாகாணிப் பணந்தான் தூக்கு
முந்தவே இடித்தெண்ணெ யதனிற் போட்டு
முக்கியமாய் பதத்திறக்கிக் கரண்டி கொள்ள
வந்தகணஞ் சகலமுந்தான் போகு மென்று
வசனித்தார் மிளகுநீர்ச் சாறுஞ் சோறே.

*(புத் 477-173)*

### *14. பழத்தெண்ணெய்*

போக்கிய கணந்தீ ராமல் பொங்கிய கடுப்புக் கண்டால்
தாக்கியா மணக்கி ணெண்ணெய் தனில் நிம்பச் சாறுவிட்டு
நீக்கிய வெந்தயத்தை நிறைந்தரைத் ததனிற்போட்டுச்
சீக்கிர மாகப் பண்ணிச் செலுத்திட சிலுகாவென்றே

*(புத் 477-173)*

### *15. இண்டெண்ணெய்*

வெள்ளிண்டு தூதுவளை சங்கங் குப்பி
வேலியோடு பூவரசு குப்பை மேனி
நள்ளாடா தோடைசா ரணைப்பூ லாவும்
நரிபயிற்றங் கொடிபிரமி வேளை கன்னி
பள்ளவே பதின்மூன்று வேர்களி யாவும்
பரிந்திடித்த சாறுபடி யொன்ற தாகும்
கள்ளமிலா விளக்கெண்ணெய் படியி ரண்டு
கருஞ்சீரம் புழுகோமம் பூண்டு தானே.

பூண்டுகோ ரோசனமுஞ் சண்ப கப்பூ
புகழ்வசம்பு சாதிக்காய் தான்றிக் காயும்
தாண்டுடனே வகைக்குப்பல மரைய தாகச்

சமரசமா யரைத்தெண்ணெ யதிற்க லந்து
நீண்டுடனே காய்ச்சியொரு கரண்டி வீதம்
நினைவாகக் கொடுத்துவரத் தீரு நோய்கேள்
கூண்டுடனே மாந்தமொன் பதுவுந் தீரும்
கொடியதொரு தோடமொன் பதுவும் போமே.

போமே குழந்தைகட்கு பொல்லாப் பதினெண்கணம்
தாமேவி யாதியெலாந் தான்தீரும் - தேமே
மலர்மாதே தெற்குக் கணம்எல்லாம் ஈங்கு
தலமீது தீருமுண்மை தான். *(புத்.477-174)*

## *16. எண்ணெய்*

திப்பிலிகத் தூரிமஞ்சள் சண்பகப்பூ
கிராம்புகருஞ் சீரகஞ்சுக்
கப்பாம்புக் கட்டங்கோட் டம்மேலம்
பொன்முசுட்டை யவுரிவேரும்
கொப்பினிலே றிப்படருஞ் சிற்றவரை
தூதுவளை கொடிவேலிவேர்
வெப்பில் விடத் தேரைவேர் நன்னாரி
வேர்வசம்பு வெள்ளைப் பூண்டே

பூண்டுடனே சுடலையினில் முளைத்தபூண்
டேதேனும் போட்டுக்கூட்டி
தோண்டியினா லெண்ணெயிலா குதல்பசுவின்
னெய்யாதல் சுகமாய்ப்பண்ணி
மீண்டதனை யெடுத்துநக் கவுந்தீருங்
கணமென்னும் வியாதியென்றே
யாண்டகையாஞ் சரபேந்திர ரவுனியுளோர்க்
கன்புடனே யருள்செய்தாரே *(சர.வை.மு.113-114)*

## *17. செப்பு நெருஞ்சி எண்ணெய்*

செப்பு நெருஞ்சி புள்ளடி
சிறிய அம்மான் பச்சரிசி
கொப்புத் தகரை வேருடனே
கூறு நரிப்பயற் றங்கொடியும்
அப்பும் அகத்திப் பட்டையினம்

அருவெண் காய மிவ்வகைக்கு
நட்புக் கழற்சிக் காயளவு
நறுக்கி விளக்கெண் ணெயுமாமே.

## *18. எண்ணெய்*

மணித்தக்கா ளியும்வேலிப் பருத்திச்சாறிவ்
வகையுடன்குப் பைமேனி வகையின்சாறும்
உணர்ச்சியுடன் றன்னிலொக்க வோரிருநாழி
யுங்கொண்டோர்பசு வினெய்யுரியா
மணக்கெண்ணெயுழக்கு
மிணக்குமுள்ள நல்லெண்ணெ யுழக்கிதெல்லாங்
கூட்டி
யெரித்துநல்கக் கணப்பிணிபோ மென்பதனை
யெண்ணிக்
குணக்குரிசில் சரபேந்திரர் கூறுமுறைதன்னைக்
குவலயத்தின் மானிடர்கள் கொண் டாடுவாரே'
*(சர.வை.மு.-125)*

ஆமே யரைக்கால் படிதனிலே
அன்பாய்ப் போட்டுத் தான்கலக்கித்
தாமே சூரிய புடமாகச்
சாம மிரண்டு தான்வைத்துத்
தோமே துட்டெடை யீந்தக்கால்
தோகாய் சகல கணந்தீரும்
பாமே முக்கல் நின்றுவிடும்
பத்திய மாக வைப்பாயே. *(புத்.477-175)*

## *19. புள்ளடி எண்ணெய்*

புள்ளடி செப்பு நெருஞ்சில்வல் லாரைபூ லாவுடனே
தெள்ளடிக் கோழி யவரையின் சாறொடு சேரொருக்கால்
தள்ளடி யாமணக் கெண்ணெய் சேர்குரோ சாணியுடன்
துள்ளடி ரோகணி சூழும் வெளிச்சையுஞ் சொல்லிடுமே.

சொல்லிடு மால்புல் லுருவியு மாஞ்சியுஞ் சொன்னவகை
எல்லைஇ ரண்டு பணவெடை யாக விதில் கலந்து
துள்ளவெ ரித்துப் பதமா யிறக்கிநல் துட்டளவாய்

பிள்ளைகட் கீயக் கணங்களும் காய்ச்சலும் போய்விடுமே.
*(ஏடு.362-60, 6218-44) (புத்.477-290)*

### *20. எண்ணெய்*

மணித்தக் காளி யிலைத்துளசி
வளருந் துத்திப் பிரமியிலை
கணித்த வில்வம் வல்லாரைக்
கையாந் தகரைப் பொடுதலையும்
தணித்த நுணாபுங் கிலைச்சங்குச்
சமனிவை யிடித்துச் சாறுபடி
துணித்த ஒன்று தான்றிக்காய்ச்
சுக்கு கடுக்காய் திப்பிலியே.

திப்பிலி பொத்தோ டரத்தை
திகழும் ஓமம் வசம்புடனே
மப்பிலி யான கத்தூரி
மஞ்சள் வகைக்குப் பலமரையாய்
இப்பிலி சாதிக் காயொன்று
இவைக ளிடத்துச் சாற்றிலிடு
எப்பவி ளக்கெண் ணெய்படியொன்
றிட்டு எரித்துப் பதமெழுகே.

மெழுகுப் பதமதி லெண்ணெய்
வடிவிடு மொருகரண்டி தனயர்க்கு
அழகு பெரியோர்க் கிருகரண்டி
ஐந்து ஏழு நாளிடவே
கழுகு மாந்தம் அட்சரமும்
கணங்கள்...... .......
தீரும் பைங்கொடியே. *(புத்.476-38)*

### *21. எண்ணெய்*

தளச்சட்டி தனிநெருமை தலக்கொம்பைச்
சீவிமெல்லி தாகப்போட்டு
பிளக்கும்விற கினையடுப்பிட் டெரித்திடவும்
பிடிக்குமந்தப் பொரியைப்பேணிக்
களிப்பக்குவந் தனிற்றிருகு கள்ளிமேற்பொ
ருக்கினைமுக் காசிடையே
வளப்பமுடன் பொடித்ததனின் விளக்கெண்ணெ

யொருபடியே வார்த்துக் கிண்டே

கிண்டியிரு நாள்வெயிலில் கிடக்க வைத்து
மூன்றுநாள் கிளறெடுத்துக்
கொண்டொருதுட் டெடையளவே கொடுத்திடவே
கணமெட்டுங் குணமாமென்றே
திண்டிறலார் சரபேந்திரர் செப்பினரிம்
முறையிதனைத் தெளிவுள்ளோர்கள்
கண்டுநிதி கிடைத்ததெனக் களிக்கின்றார்
கணந்தீர்தல் கைகண்டோரே'

*(சர.வை.மு.-114-115)*

## 22. எண்ணெய்

கருஞ்சீர கங்கடுக்காய் சீரகங்கத்
தூரிமஞ்சள் கலந்தின்னான்கு
மருந்தினைநெய் யினிலாதல் தேனினிலா
தல்வகையாய் வறுத்துப் போட்டு
இருந்தசீ யக்காய்கொஞ் சம்போட்டுப்
பருத்திப்பிஞ் சிரண்டுகூட்டி
யெரிந்தவெந் நீரினிலா தல்முலைப்பா
லிலேயாத லிட்டரைத்தே

இட்டரைத்திட் டதின்பிறகே யெண்ணெயைக்காய்ச்
சியுமொருசே ரென்னத்தானே
வெட்டுப்பூ லாங்கொழுந்து மேலுசிலங்
கொழுந்துடமா னிக்கொழுந்தும்
பொட்டெனவே கடுக்காய்நீர் பூண்டுள்ளி
யுஞ்சேர்த்துப் பொங்கக் காய்ச்சி
யுட்கொளநல் கீர்வெங்கா யத்துடன்கஞ்
சியும்பத்திய முதவுவாயே *(சர.வை.மு.-122-123)*

## 27. குமரியெண்ணெய்

முனிவேர்சித் தாமணக்கு முத்திளநீர் தனிலவித்து
செனிவாகு மெண்ணெய்படி சேர்ந்தபால் படியிரண்டு
தணிவாகுங் குமரியினீர் தன்னிலரைப் படியாகத்
துணிவாய் மெழுகுபதம் செல்லும்படி யேக்காய்ச்சி.

காய்ச்சியிறுத் தெண்ணெய்தனில் கற்கமினி சீரகமும்

மாச்சிக்காய் கோட்ட மதுரங்கிராம் புபலந்தான்
தாச்சிவ ராசசுக்குந் தனிவகைக்கோர் காசெடைதான்
கூச்சமன்றி வெந்தயமும் கூறும்பலங் கால்காணும்.

காண-வறுத் திடித்து கலந்திடுமே யெண்ணெயினில்
வேண - யிரு போதருந்த வேககாய்ச்ச லுட்காய்ச்சல்
நானஉடம் பிளைத்தாக்கால் நல்லகண மாந்தமுடன்
அல்லவென் றுசொல்லி வாராதெட்டிப் பாராதே.
*(ஏடு.362-34.35)*

## *28. பால் எண்ணெய்*

திறமான வெள்ளாட்டுப் பாலுமிரு நாழியுந்
திருவிளக்கெண் ணெயும் நாழி
திருகுகள்ளி யோர்பல மிண்டங்
கொழுந்துமிடி சண்பகப்பூ மதுரமும்

உரமான சாதியின்காய் பத்திரி லவங்கம்
ஏலம் ஒருபூடு வெள்ளுள்ளியும்
ஓதுமிரு சீரகமும் வசம்பிலா மிச்சமும்
முரைவெட்டி நன்னாரியும்

சிறுநாக முத்தமொடு பூலாங் கிழங்குடனே
சீருலவு கோரோசனை சேர
கடுகுரோகிணி கோஷ்டமுடனே
பச்சை சேவநாகறஞ் சமனதாய்

சரமாகவே அரைகாசிடை அரைத்திடுந் தனலி
எரிபத மாக்கிய தய்யலே
பாலெண்ணெய் உண்டிட கணமாந்தம்
தான்விட்டு ஓடு மிதுவே. *(ஏடு.362-58,59)*

## *29. எண்ணெய்*

மருதுகோ வளவெள்வே லோகருவேலோ
வரசுடன்மாம் பட்டை செப்பு
நெஞ்சியினற் கொழுந்து துடரிக் கொழுந்து
மாதுளத்தி னிற்கொழுந்து
வறட்பூலா நீர்ப்பூலா விடத்தேரை
கருவேல மரக்கொழுந்து
கருஞ்சீர கங்கம்பிப் பிசின் வசம்பே

லரிசியுநா கரமுமாமே.

நாகரிகச் சண்பகப்பூ சதகுப்பை நற்
சீரகம்ல வங்கப் பட்டை
பாகனைய வதிமதுரஞ் சரிகட்டி
வைத்திந்தப் பல சரக்கோ
டேகொழுந்து பட்டையுட னிம்மூன்று
வகையினையு மேநல் லெண்ணெய்
சேகரமா யெரித்திறக்கும் போது நெய்யு
நாலுதுள்ளி தெரித்தே பின்னும்

கின்னுமுருங் கையினிலையு மிரண்டுமணங்
கொளக்கூட்டிப் பிரியமாகத்
தின்னுகண மென்பதெல்லாந் தீருங்கா
சளவுள்ளே செலுத்தி மேலு
முன்னிதமா முடம்பிடவு மொருவருந்தீர்க்
காதகண மோடுங் கைகண்
டின்ன முறை தனைச் சரபேந் திரமன்னர்
மனமிரங்கி யியம்பினாரே *(சர.வை. மு-119-120)*

### *எண்ணெய் - 30*

மூக்கரட்டைச் சாரணையும் முடக்கொத் தானும்
முத்தெருக்கன் செவியுடனே முயலக் கேளிர்
பார்க்கவினத் தாமரைச் சாறுடனே கூட்டி
பகருஞ்செப்பு நெருஞ்சிவகை படியொன் றாக
ஏற்கவிளக் கெண்ணெ யிரண்டு படியுமுர
யிரகுபல மொன்று கலந்திதமாய்க் காய்ச்சி
ஆற்குமிடம் பாதம் நீங்கி யேதான்
ஆதரக் களிந்தே கணங்களகலப் போமே.

*(ஏடு 362-53)*

### *31. பொன்னாங்காணி எண்ணெய்*

பொன்னாங் காணி யிலையுடனே
புகழுந் துளசி தகரையிலை
மின்னார் கீழ்வாய் நெல்லியிலை
வெண்ணொச் சிலையும் சின்னியிலை
பன்னார் நாயுரு வியினிலையும்

பகரம் மான்பச் சரிசியிலை
நன்னார் கருநொச் சியினிலையும்
நாடு மிலைக னெட்டொன்றே.

ஒன்றே நாவ லின்கொழுந்து
முயரா வாரை யின்கொழுந்தும்
ஒன்றே வேப்பங் கொழுந்துடனே
விளக்குஞ் சூரை யின்கொழுந்தும்
ஒன்றே முடக்கற் றான்கொழுந்து
முருங்கைத் துளிப்புங் கன்கொழுந்தும்
குன்றே யனைய தனத்தாளே
கோதில் லாத கொழுந்துகளே.

கொழுந்து வகைக ளோரேழு
கூறும் ஓரிதழ்த் தாமரையும்
வழும்புளி யாரை வல்லாரை
வாகா கச்சிறு புள்ளடியும்
எழுந்த நரிப்பயற் றங்கொடிதான்
இண்டந் தண்டு முசுமுசுக்கை
வழுந்த வகத்திப் பழுப்புடனே
வீறு சீந்திக் கொடியாமே.

ஆமே ஆடா தோடைசெழும்
ஆடு தின்னாப் பாளையொடு
காமே விட்ணுக் கரந்தையுடன்
கதித்த முட்கா வேளையுமே
தாமே யிவைகள் பதின்மூன்று
தருமா வரை தன்வேரும்
நாமே சொன்னோம் விடத்தலைவேர்
நல்ல நிலக்குமி ழின்வேரே.

வேரே சிறுகீ ரையின்-வேரும்
வில்வ வேருத் தாமணிவேர்
தாலே மிளகுத்தக் காளிவேர்
தைவே ளையின்வேர் சங்கம்வேர்
காலே கண்டங் கத்திரிவேர்
கனத்த நாய்வே ளையின் வேரும்
பாரே குட்டிவி ளாவின்வேர்

பகருஞ்சங் கங்குப் பியின்வேரே.

குப்பி பதின்மூன் றாம்வகைக்குக்
கொள்ளு மொவ்வொரு பிடியாக
வைப்ப வேர்வகைக் கியாழமிட்டு
மற்றவை யெல்லாஞ் சாறெடுத்துத்
தப்பிச் சிற்றா மணக்கெண்ணெய்
தானே படியொன் றதில்சொன்ன
ஒப்பிக் கியாழம் சாறுகளும்
ஊற்றிக் கடைச்சரக் கைக்கேளே.

கேளே கமடத் தோடோமம்
கிளருங் கடல்நுரை சீரகமும்
தானே திப்பிலி ரோகணியும்
சார்ந்த கிராம்பு கருஞ்சீரம்
காளே திகழ்பற் படகமொடு
நல்ல பூவந் திப்பழமும்
ஆளே வசம்பு பெருங்காய
மான செங்கத் தாரிப்பட்டை.

பட்டை யிவைவகை பதின்மூன்றும்
பகரும் வகைக்குக் கழஞ்சொன்றாய்
இட்டு வத்திர காயஞ்செய்
தெண்ணெயி லிட்டே யடுப்பேற்றி
வட்ட மெழுகு பதத்திறக்கி
வடித்தே யந்தி சந்தியுமே
துட்டெடை யெண்ணெ யுட்கொள்ளத்
தொலையு நோய்கள் சொல்வோமே.

சொல்வோ மச்சர கணமுடனே
துடுக்காய் விடாம லேவலிக்கும்
வல்லக் குமரி தலைநோயும்
வறட்கண முடனே சுழிகணமும்
வெல்வோ மாந்த கணமோடு
மீறு நீர்க்கண மிகவுகணம்
புல்வோம் கொட்டா விக்கணமும்
போரா டியமுக் குக்கணமே.

முக்குக் கணமு முறுக்குகணம்

மூல கணமும் வலிகணமும்
சொக்குஞ் சொருக கணத்தோடே
துட்ட சயித்தி யக்கணமும்
ஒக்கும் பொருமல் மலக்கணமும்
ஊது கணமும் விக்கல்கணம்
தொக்கு மிகுந்த தூங்குகணம்
சொல்லிவை யெல்லாந் தீர்ந்திடுமே.

தீருந் தசநாட் கொருதரந்தான்
சேரிரண்டு-துட் டெடைகொடுத்துப்
பாருஞ் சகல வியாதியுமே
பதறி யோடும் பத்தியங்கேள்
காருங் கவிச்சு புளியிறைச்சி
கரப்பான் பண்டந் தள்ளிவிடு
சாரு மிளகு நீர்ச்சோறும்
சாப்பிடக் கைவல் லியமாமே.

*(புத்.477.168,169, 476-105-107)*

### *32. கிளுவை எண்ணெய்*

வேண்டும் விளக்கி ணெண்ணெய் படி
வெள்ளாட் டுப்பா லவ்வளவு
நீண்ட கிளுவை கருவேலும்
நினைவாய்ப் பட்டை யீருள்ளி
ஈண்டங் கொழுந்து மொருபிடிதா
னிவைக ளெல்லா மோரளவாய்த்
தூண்டும் பலமே சீரகமும்
துதிகால் காய்ச்சுக் கட்டியதே.

கட்டிப்பொடி மற்றவையே கடியதட்டி யெண்ணெயிற்குள்
கெட்டிஅனல் தனிலேற்றிக் கேள்மெழுகு பதமாகப்
பொட்டெனவே பாலகர்க்குப் பொங்கக் கரண்டியிட
அட்டகண தோஷமுதல் அணுகாது மாந்தமுமே.

*(புத்.477-166, 476-102)*

### *33. எண்ணெய்*

ஆவின் வெண்ணெய் தேசிக்கா
யளவே சட்டி தனிலிட்டு

வேவ வுருகி வரும்போது
விளம்பு மணித்தக் காளியது
தாவுங் கொட்டைப் பாக்களவு
தயவா யரைத்துப் போட்டெரித்து
வேவ யிறக்கிக் காசளவு
விதமாய் ஐந்து நாள்கொள்ளே. *(கை.பி.98-181)*

### 1. உருண்டை

சீறிங்கொடை துத்தாரை வெண்காரம்
கோரோ சினைதிகள் வகைக்கு
களங்சிக மலம்விடு கடுகுரோகணி
முக்க ழஞ்சு சேரவே
உலர்ந்ததோர் மருந்து தன்னை.
உற்றதோர் வியாதிக் கெல்லாம்
நலம்பெற முலைப்பால் வெந்நீர்
தனி லொரு உருண்டை
நலுங்கலு முடும் மாந்தம்
இஷ்ட கணங்கள் சுரந்தாலை *(ஏடு.6218-44)*

### 2. பூபதி மாத்திரை

சந்தனம் நன்னாரி புளியம்வித் தோட்டுடன் சாத்திர பேதியு முத்தமும்
தாமரை சிறுகீரை நாயுருவி வல்லாரை சாதிக் காயும் பத்திரி
இந்தவகை சண்பகம் க்ல்நாரு திப்பிலி யிருவாட்சி வேரு மதனில்
இருசீரகத்தினோ டிலவங்கப் பட்டையு மேலம் ருத்ராஷ முதலாய்
விந்தைகோ ரோசனை காணிவேர் திருமேனி விரிகலைக் கொம்பு சமனாய்
விடுநீரும் வல்லாரை காணியின் நீர்தனில் விதமாக வேயரைத்தே
அந்தமுள தேற்றுவித் தென்னவு முலர்த்தியே யனுபான மீதி லீய
அஷ்டகண முதலாக விட்டோடு மெனமுனிவ ரருளினார் பூப தியிதே.
(புத்.476-101-102, 477-166)

### 3. உருண்டை

விளக்களஞ்சி வசம்பு ஓமம்
வெள்வெங் காயம் பொடுதலையும்
இளங்கா மிளகு திப்பிலியும்
மெதுவாய் ஆமை யோட்டுடனே

களங்கா திலையின் சாற்றரைத்து
கடலை அளவாய் செய்திடவே
.... .... .... ....
.... கணமாந்தத் துண்டையிதே. *(ஏடு. 6218-46)*

### *4. அமிர்த சஞ்சீவிக் குளிகை*

சாத்திர பேதி கோட்டமுடன்
தானே யேல மிலவங்கம்
காத்திர மான சந்தனமும்
கடுகு ரோகணி யிலுப்பைப்பூ
தோத்திர மான நன்னாரி
துய்ய விலாமிச் சிருவேலி
மாத்திரை யாக வரைப்பதற்கு
மருந்தோ வின்னஞ் சொல்வோமே.

சொல்லிய திப்பிலி யதிமதுரம்
துலங்கு முத்தக் காசுடனே
வல்ல முந்திரி கைப்பழமும்
வளர்பே ரீந்துப் பழமுடனே
எல்லா மெடுத்துச் சமன்கொண்டே
யிதமாய்க் கருப்பஞ் சார்விட்டு
நல்லாய் அரைத்துக் கடலை நிறை
நலமாய் நிழலி லுலர்த்திடுமே

உலர்ந்ததோர் மருந்து தன்னை
உற்றதோர் வியாதிக் கெல்லாம்
நலம்பெறு முலைப்பால் வெந்நீர்
தன்னிலோ ருண்டை நல்கில்
கலந்திடு மாந்த மட்ட
கணங்களும் சுரந்தா கம்போம்
அலங்குறு முனியு ரைத்த
அமிர்தசஞ் சீவி யாமே.

*(புத்.476-101, 477-165,166)*

### *5. பாலசஞ்சீவி மாத்திரை*

கல்நார் கிராம்பு இலவங்கபத்திரி
காகதி செவ்விய மதிவிடையம்

அல்லுந் தான்றி கருஞ்சீரம்
    அக்கிரா காரம் கடுகுரோகணி
நல்லுஞ் சாதிக் காயுடனே
    தக்க சாதி பத்திரியும்
நல்ல கற்கடக சிங்கியுடன்
    நவில கத்தூரி கற்பூரம்

பூரம் சீரம் ரோசினையும்
    புகழுங் குங்கும மோர்நிறையாய்ச்
சேருமிஞ்சி கைதோன்றிச்
    சிறந்த சாற்றி லோர்சாமம்
நாரங் கனிச்சார் முச்சாமம்
    நன்றா யரைத்துப் பயிறளவு
சேர வுலர்த்தி முலைப்பாலில்
    சிறந்த குளிகை யொன்றிடுமே.

.... .... ....
    .... .... ....
.... .... ....
    .... .... ....
திடமாய்த் தீரும் கணபிணிகள்
    சேர வுரைத்தார் செந்திருவே. *(கை.பி.98-181)*

செயலான கல்நாருங் கிராம்பு பத்திரி
    செவ்வியந்திப் பிரிவிடையந் தான்றி யோடு
முயலான கருஞ்சீர மக்கரா காரம்
    முருகடுகு ரோகணியும் சாதிக் காயும்
வயலான பத்திரிகற் கடக சிங்கி
    வசனித்த குரோசாணி கத்தூரி பூரம்
மயலாஞ்சீ ரங்கோரோ சனையோ டொக்க
    மதித்திட்ட குங்குமப்பூ சமன தாமே.

சமனிஞ்சிச் சாறரைப்புச் சாம மொன்று
    தனிக்கையான் சாறரைப்புச் சாம மொன்று
கமன்நார்த்தங் கனிச்சாறு கடிகை மூன்று
    கல்லிலரை பயறளவாய் நோய்கட் கீய
.... .... .... ....
    .... .... .... ....

எமனில்லை .... கணமு மாந்தம்
ஏதமில்லை பாலசஞ்சீவி யென்றே.
*(புத்.476-101, 477-165) (கை.பி.98-18)*

### *கீழா நெல்லிப் பால்*

கீழ்க்காய் நெல்லி வேர்ப்பட்டை
கேள்கறி வேப்பிலை சீரகமும்
வாழ்க்காய்ப் பச்சை நெல்லுமிதான்
வகைக்கு வராகன் ஒன்றாக
மூழ்க்காய்க் குயப்பா லிற்போட்டு
முழுதும் இரவில் ஊறியபின்
காழ்க்காய்க் கால மேஅரைத்துக்
கடுகப் பிழிந்து முக்காலே.

காலை மூன்றுமே கொடுத்துக்
கதிக்கச் சாயங் காலத்தில்
ஆலை மிளகு பற்பமதாய்
ஆக்கி சீரக மும்சற்றே
சாலப் பொரிய வேவிட்டுத்
தண்ணீர் ஊற்றிக் காய்ச்சிக்கொடு
வேலைப் பழித்த விழியாளே
மிகுத்த கணமும் போமன்றே.
*(புத். 476-64,65, 477-134)*

### *அக்கரகணம் - குறிகுணம்*

இருந்ததொரு வக்கரமாங் கணத்தின் செய்கை
யியம்புவோந் தாதுமெத்தத் துடித்து நிற்கும்
வருந்துகின்ற நாசிவா யாவி தோன்று
மதிமுகந்தான் வெளுத்துவிடுஞ் சுரங்களுண்டாந்
திருந்துதலை நாக்கிவைகள் வெந்து போகுஞ்
சீரியதோர் மூக்கினாற் சலமுங் காணும்
பொருந்து சிரம் வலித்திடுமெய் குளிர்ந்தி ருக்கும்
பொல்லாதிதற் கவுடதம் புகலக் கேளே
*(சர.வை.மு-32)*

பதமறிந்து சாதிக்காய் பத்திரி கிராம்பு
பகர்விடையம் வசுவாசி முத்தக் காசு

பிதமறிந்தொன் றிருகழஞ்சி முத்தக் காசு
விதமறிந்தொன் றிருகழஞ்சி வீதந் தூக்கி
வெதுப்பிநன்றாய்ப் பொடித்துவடி
கலசத் திட்டு... ....
இதமறிந்து வடித்து காசெடைமூன் றூட்ட
ஏகிவிடும் கிராணிகளை .... ....
.... .... ....
.... .... குணமுண் டாமே. *(ஏடு.109-50)*

### *அந்தகக் கணம் - குறிகுணம்*

உச்சி மூளை தனைப்பற்றி
உடலம் எங்கும் வெதுப்புண்டாம்
மிச்ச மாக நாவுலரும்
விழிக ளிரண்டும் வெளுப்பெய்தும்
பச்சை மஞ்ச ளதுபோலே
பசும்பொன் னிறமாய் முகமினுக்கும்
அச்சம் புரியும் முலையாளே
அந்தகக் கணமென் றறிந்துரையே.
*(புத்.476-86, 477-152)*

கொடிதான அந்தகமாங் கணத்தைச் சொல்வேன்
கூறுகின்ற வந்தியிலே கண் தோன்றாது
கடிதான சுரந்தோன்று மிரத்தம் போகும்
கால்சந்து கலகலவாய்ச் சத்தம் பேசும்
வடிவான முகந்தானு மஞ்சள் போலா
மார்புமே டாயெழும்பு மயக்க முண்டா
மிடியான யருசிகண்டு தேகம் வற்றி மேலான
மூளையைத்தான் பற்றும் பாரே *(சர.வை.மு-31)*

### *பொன்னாங்காணிக் கற்கம், பற்று*

பொன்னாங் காணி சிறுகீரை
பூலா அவுரி வேருடனே
பண்ணும் தேற்றான் கடுக்காயும்
பலமோ ரொன்றாய்த் தானரைத்துப்
பொன்னே ஆவின் வெண்ணெயுடன்
புரட்டி யருந்த அதனுடனே
மின்னார் முலைப்பால் கலந்தொக்க
வீறு சிரத்தில் தப்புவதே.

தப்பு மருந்து உணர்ந்தவுடன்
தள்ளிப் பின்னுந் தப்புவிக்கச்
செப்பு மருந்து தனைத்தினமும்
தின்னப் பார்த்துத் தான்கொடுக்கக
கொப்புக் குழையா யிப்படியே
கொடுக்க மூன்று தினந்தானும்
தப்பு விதியா லுந்திரும்பும்
தயவா யென்னச் சாற்றினரே.

*(புத்.477-152, 476-86,87)*

### ஆமகணம் - குறிகுணம்

ஆம கணத்தின் குணங்கேளு
ஆடவாய் வாகம் வெதும்பாகுஞ்
சாம நேரம் வெதுப்பிருக்குந்
தண்ணீ ருழலை யுண்டாகுஞ்
சேம மாக உடம்பிளைக்குஞ்
சீறி யழுகும் பசியில்லை
நாமந் தளரு மிதுதானும்
நடுக்கி யிருக்குங் கண்டீரே.

*(ஏடு.941-33, 6218-34)*

ஆமக் கணமாம் சீதகணம்
அறைவேன் சாம மதில்வெதும்பும்
நாமத் தாகம் பசிமந்தம்
நாளுக்கு நாள்தே கம்வற்றும்
சிம்மல் அலறித் தானெழுந்து
சீறி யழுது நாவுலரும்
நாம நயனம் முழியாது
நல்ல புருவம் சுழித்திடுமே.

சுழித்து வயிறு மந்தித்து
சுருளப் பொருமு மிரைச்சலுடன்
கழியுஞ் சுவாச முண்டாகி
கையும் காலு மேகுளிரும்
பழியும் வந்து கூடிடுமுன்
பார்த்து அறிந்து அவிழ்தங்கள்

வழியாய்ச் செய்யப் பலபிணிகள்
மாறு மென்றங் கருளினதே.

*(ஏடு.109-226) (கை.பி.98-179)*

சுழிக்கும் பொருமும் வயிறிழியும்
சுவாசம் மிகவும் உண்டாகும்
கழுத்தை நாணிக் கால்குளிர்ந்து
கண்ணை மூடி விழியாது
அழுத்த மான சுரந்தோன்றும்
அயர்ந்து சீறித் திடுக்கென்னும்
சுழிக்கும் ஆம கணமென்று
சொன்னார் அரனார் தோகைக்கே.

என்றே ஆம குணங்கேளு
இனிதாய் நெஞ்சு தான்துடிக்கும்
வண்டே சிறுநீர் மஞ்சள்நிறம்
வகையாய் புகையு மேல்கடுப்பு
கண்டம் உடம்பு நிறம்வேறாம்
கனமாய் வந்தே ஒருவேளை
நன்றா யூதல் சர்வாங்கம்
நலமாய் நோதல் மிஞ்சுமென்றே.

மிஞ்சும் வயிற்றில் இரைச்சலுடன்
மிகவும் தலையி னோவாதல்
கஞ்ச மூக்கு மேலெழும்பும்
கனமாய் சுவாச மிகவெழும்பி
துஞ்சம் உடம்பு மேல்வறண்டுத்
துரும்பு போலே வடிவெடுக்கும்
கெஞ்சும் ஆம கணமிதுதான்
கேளா யிந்நோய் ஓராண்டே.

*(புத்.476-88,477-154,155)*

போமென்ற ஆமகண குணத்தைக் கேளாய்
பொருமியே சீதரத்தம் பரந்து காணும்
ஆமென்ற சுவாசம் விழி கழித்தல் காய்ச்சல்
அடிவயிற்றில் வலிவேர்வை கழுத்து நாணல்
ஓமென்ற மூக்குவெந்து திடுக்கென் றேதான்
உளைந்தெழுந்து கைகாலுங் குளிர்ந்து காணும்

நாமென்ற கண்மூடி விழித்தி டாது
நலிந்துபோ மருந்ததற்கு நயமாய்க் கேளே
(சர.வை.மு-30)

### *1.குடிநீர்*

கூறுகின்ற பாவட்டை கொண்டமுடனே
வீறுடனே வேலிப்பருத்தி வேரிவையும் - காருகின்ற
நன்மிளகு கூட்டியே நயமாய் கிஷாயமிடில்
சென்மமில்லை யாம்சுரம் செப்பு. (ஏடு.6218-34)

### *2. குடிநீர்*

போமே யீருள்ளி பத்து
பொடியதாய் நறுக்கி வில்வம்
ஆமே யாவரை நிலவிளா
வறஞ்சி சிவக்க வறுத்திதனை
வேமே காய்ச்சி சிறுவோர்க்கு
விதமாய் மூன்றுநாள் கொடுக்க
தாமே யாரும ரத்தைசுரம்
தணியும் கணமும் வாராதே. (ஏடு.6218-35)

### *1. ஆமகணத்தில் வரும் சுரத்துக்குக் குடிநீர்*

கூரியம் பாவட்டை கொண்டசிற் றேரண்டம்
வீரோமம் வேலிப் பருத்திவேர் - காருகின்ற
நல்மிளகு கூட்டி நயமாகக் கஷாயமிடில்
போமில்லை ஆமைசுரஞ் செப்பு. (ஏடு.362-42)

### *1. இண்டெண்ணெய்*

அருள்வா ரிண்டு வேர்த்தண்டும்
அழகாம் சாறு படியொன்று
புரள்வார் குமிழ்மா சிபத்திரி
புங்கு நீலத் துளசியுடன்
கருந்தூ தளையு முடக்கொத்தான்
கஞ்சாங் கோரை வல்லாரை
பிரியு முள்ளி நுணாவொன்று
பிழியுஞ் சாறு படிகாலே.

காலே ரண்டத் தெண்ணெய்படி
கிராம்பு ஏலம் சாதிக்காய்

வாலு மிளகு கடுரோகணி
　　வசம்பு சுக்கு பலமொன்று
சேலே வறுத்துப் பொடியாக்கி
　　சேர்த்து மெழுகுப் பொடியாக்கி
பாலே ஐந்து நாட்கொள்ளப்
　　பறக்கு மின்னஞ் சொல்வேனே.

*(ஏடு.109-227) (கை.பி.98-179,180)*

ஆண்டென்ன இண்டம்வேர் இண்டந் தண்டு
　　அன்பான சாறதிலே நாழி வாங்கிப்
பூண்டென்னக் குமிழினொடு மாசிப் பத்திரி
　　புங்கினொடு நிலத்துளசி யுள்ளிச் சாறு
தாண்டென்ன முடக்கொற்றான் தூதுளையின் சாறு
　　தனதான நுணாஇலையின் சாற்றி னோடு
வாண்டென்ன வல்லாரை கஞ்சாங் கோரை
　　வகைக்கிதுகால் பழச்சாறு வாங்கு வாங்கே.

வாங்கியே எண்ணெய்படி ஒன்று விட்டு
　　வகையான சாதிக்காய் ஏலம் கிராம்பு
வாங்கியே கடுகுரோ கணிக டுக்காய்
　　வால்மிளகு ஓமமுடன் வசம்பு சுக்கு
வாங்கியே வகைக்குப்பலம் நிறுத்துக் கொண்டு
　　வறுத்துமே தூளிடித்து வகையாய்ச் சேரு
வாங்கியே அடுப்பேற்றிக் காய்ச்சிக் கொண்டு
　　வற்றியபின் கடுதிரண்டால் இறக்கி டாயே.

இறக்கிடாய் மனோன்மணிதன் பூசை செய்து
　　எகாட்சர பூரணத்தை மனதில் போற்றி
இறக்கிடாய் நாலஞ்சு கரண்டி வீதம்
　　இதமாய்க் கொடுத்துவிடு அஞ்ச வேண்டாம்
இறக்கிடாய் முன்சொன்ன நோய்க ளெல்லாம்
　　எளிதான ஆமகணம் பறந்து ஓடும்
இறக்கிடாய் ஆமகணம் மாந்த மெல்லாம்
　　என்னசொல்வேன் தீருமிந்த வித்தை பாரே.

வித்தைபார் சேத்மபண்டம் வாயு பண்டம்
　　விருப்பமுடன் தள்ளிவிடு இதற்கா காது
வித்தைபார் நீர்த்துளசி பிட்ட வித்து
　　விதமாகப் பிழிந்தந்தி கொடுத்து வாநீ

வித்தைபார் உதயத்தில் எண்ணெய் வாரு
விவரமாய் அந்தியிலே கியாழம் ஏற்று
வித்தைபார் பிள்ளைவலி ஆமம் மாந்தம்
வீறிட்டு மோடுமே இதனால் பாரே.
*(புத்.477-155,476-88,89)*

### *3. வேலிப்பருத்தி எண்ணெய்*

சொல்வே னுத்தா மணிகிளுவை
துலங்கும் கோழி யவரையுடன்
வெல்வேன் பொடுதலை வேர்க்கள்ளி
வேரும் வெளிச்சிப் பிசினுள்ளி
வல்வேன் கருஞ்சீர கடுரோகணி
வசம்பு வகைக்கு ஒருகழஞ்சி
நல்லா யிடித்து முத்தெண்ணெய்
நன்றா யதனில் சேர்ப்பதுவே.

சேருஞ் சாகினிப் பாலுடனே
சிறக்கக் காய்ச்சி மெழுகுபதம்
வாரு மெண்ணெய் கலசத்தில்
வடித்து வண்டு கட்டிநீ
மாரில் தடவிப் பாலருக்கும்
மகிழ்ந்தே யன்னை முலையூட்ட
பாரி லில்லைக் கணமெல்லாம்
பரிவா யறிந்து செய்திடுமே.
*(ஏடு109-227,228) (கை.பி.98-179-180)*

வேலிப் பருத்திகோழிய வரை
வேரும் கிளுவை பொடுதலையும்
பாலிற் பெரிய சிவதைகள்ளி
பச்சை வெளிச்சை வசம்புள்ளி
சீலக் கடுகு ரோகணியும்
சீரங் கரிய சீரகமும்
ஏலக் குழலாய் நிறைகழஞ்சொன்
றிதமாய்க் கூட்டிக் கொள்வாயே.

நீலச் சிற்றா மணக்கெண்ணெய்
நிகர்வெள் ளாட்டுப் பாலிலிட்டுச்
சால வெரித்து முலைக்காம்பில்
சற்றே தடவி முலைகொடுக்க

ஆலித் துண்ணும் பிள்ளைதனக்
 காமம் வாரா நன்றியுமே
சூலிக் கெண்ணெய் கொடுத்தாலும்
 தோன்றா தாமம் தோன்றாதே.

*(புத்.477-156,476-89)*

### *4. எண்ணெய்*

தகரைபொன்னாங் காணிநரிப் பயிற்றைவட்டக்
 கிலுகிலுப்பை தானின்னாலு
வகையும் வேர் வல்லாரை ஈரவெங்கா
 யத்துடனிவ் வகைகளாறும்
யிகழாம லேயிடித்துப் பானையில் போட
 புங்க மிலாமிச்சம் வேர்
பகருஞ் சாதிக்காய் சாதிபத்திரி
 பேரீச்சம் பழமுமாமே.

ஆங்கொத்த மல்லிசீர கம்கோட்ட
 மதிமதுர மக்கிராகாரம்
தீங்கற்கண் டேலமுமுந் திரிகையினற்
 பழத்துடனே சிறுநாகப்பூ
வாங்குபெரு நாகப்பூ குரோசாணி
 யோமமிந்த வகைவகைக்கே
யீங்கொருநால் வராகனெடை யிடித்துமுன்செய்
 மருந்தினிலே எடுத்துப்போடே

எடுத்துப்போட் டதுதனிலே விளக்கெண்ணெய்
 நாலுபடி யெடுத்துவிட்டுத்
திடத்துடன்சூ ரியபுடமாய் வைத்திதனைக்
 கொடுக்கவுமே தீருநோய் தான்
கடுத்தரத்தக் கணமாமக் கணமந்தச்
 சுரமும்வரற் கணமுந் தீரும்
யிடுக்கணாஞ் சருவகண முந்தீரு
 முப்புப்புளி யீந்திடாதே. *(சர.வை.மு.104-105)*

### *5. ஈரவெங்காய எண்ணெய்*

ஈரவெங்கா யமிளகு கடுகுரோ
 கணிகருஞ்சீ ரகமிதோடே
சீரகமுங் கடுக்காயும் பொடிசெய்து
 மிளகுகாய் திருத்து காம்பை

யோரிருகா சிடைபொடித்து மொருசிமிழிட்
டேவைத்து முறைக்குமிந்த
யீரவெங்கா யச்சாற்றை விளக்கெண்ணெ
யிதில்விட்டு மிதமாய் வைத்தே.

இதமாய்மூக் கரட்டைவேர் வெள்ளைச்சா
ரணைவேரு மிடித்தரைத்திட்
டதில்வெள்ளைப் பூண்டுமிடித் தேபோட்டுக்
காய்ச்சிவடித் தெடுத்துக் கொண்டு
அதையும்வடிக் கட்டிக்கொண் டாதித்த
னுதையத்தோ ரளவதாகப்
பதறாம லுள்ளுக்குக் கொடுத்திடவும்
வயிறுநன்றாய்ப் பேதியாமே

பேதியான தின்பிறகு கஞ்சிகாய்ச்
சிக்கொடுப்பாய் பேதியாகா
தோதியகற் குடலாகி லுயர்சதுரக்
கள்ளியிலோர் துண்டம் வெட்டிச்
சாதுரிய மாயதனைச் சன்னபின்ன
மாய்நறுக்கித் தானேயெண்ணெய்
மீதிலிட்டுக் காய்ச்சிநல்கப் பேதியாம்வி
யாதியெல்லாம் விட்டுப்போமே. *(சர.வை.மு.108)*

### *மருந்து*

நெல்லியுடன் வேம்பு புளிக்கிரந்தி தானும்
நேரு மிறுமிரட்டி நிலையொன் றாகச்
சொல்லு-மிதனை....தாமரையீர்க் கதிகம்வைத்து
சுகமாக வேநறுக்கி வறுத்தொகை யேகேள்
உள்ளபடி சீரகம் கிராம்பு திப்பிலி
யொன்றாகவே முடிந்து யொக்கக் காய்ச்சி
வள்ளவரை சிறுவோர்க்கு கொடுக்க வேதான்
வெதுப்பாறு மாத்தையிது விட்டுப் போமே.
*(ஏடு.941-133)*

### *நீராமகணம் - குறிகுணம்*

தண்ணீருஞ் சீதத் தோட
தான்பச்சை மஞ்ச ளாகும்
கண்ணீரும் பீளை பாய்ந்து
கடுப்புடன் வலித்துச் சோரும்

உண்ணீரு முத்துப் போல
　　ஓடவே கழிந்த தாகில்
தெண்ணீராம் நீரா மத்தை
　　எவருளார் தீர்க்க வல்லோர்.

*(புத்.475-89,477-154)*

### *மத்தக்காளி நெய்*

சட்டியைக் காய வைத்துத்
　　தவளவான் வெண்ணெய் தானும்
அட்டெலி மிச்சங் காயின்
　　அளவது போட்டு ருக்கிக்
கொட்டிய மணித்தக் காளி
　　கொட்டைப் பாக்கள வரைத்தே
இட்ட அந் நெய்யிற் போட்டே
　　எரித்திளம் பதத்தி றக்கே.

இறக்கியே ஆற வைத்தங்
　　கெழில்சிறு பிள்ளை கட்கே
அறக்கிக்கா சளவு தானும்
　　ஐந்துநாள் கொடுக்க மற்ற
உறக்கிய பெரிய பிள்ளைக்
　　கொருநல்துட் டெடைகொ டுக்கக்
கறுக்கி வெள்ளைச் சீத
　　கணமது தீருந் தானே.*(புத்.477-154,476-89,90)*

### *பேராமகணம் - குறிகுணம்*

கையுமே கால்கு ளிர்ந்து
　　கண்ணுமே வளைய மாகும்
குய்யவே சுரமுந் தோன்றும்
　　குடித்தபால் சர்த்திப் பண்ணும்
துய்யவே திடுக்கிட் டேங்கும்
　　சேர்ந்துதான் வயிறு போகும்
பொய்யல்லக் கேளா யிந்த
　　பேராமக் கணத்தின் வாறே.

பேராம குணமே கேளு
　　பொருமிடும் வயிறு தள்ளும்
நேராக வயிறு போகும்
　　நெற்றியில் வலிப்புத் தோன்றும்

சீராக முலையுண் ணாது
    சீறியே வெருவிப் பார்க்கும்
கார்குழல் தனத்தி னாளே
    கண்டதிக் குணங்கள் தானே.
*(புத்.487-93,477-160)*

### *பேராமக்கணக் குணம்*

வீங்குஞ் சலமு மிகக்கோர்க்கும்
    மிகுந்தே பொருமு முடம்பெங்கும்
வாங்கு முதலைந் தனைத்தேடு
    மருகித் துயர மிகுந்திருக்கும்
தூங்குங் கண்ணு மறவெளுத்து
    சுவைநீர் தானுந் தாபிக்கும்
யேங்கு மிதுவே பேராம்பல்
    இதுவே செய்யுங் குணமாமே.
    (இடரே) *(ஏடு.362-72,6218-51)*

### *பேராமகணம் - எண்ணெய்*

தும்பை பொடுதலையுங் கொளிஞ்சி
    துலங்க விதின்வேர் சீரகமும்
திம்பு மோதக மிந்துப்பு
    திப்பிலி யோரொன்று கழஞ்சாக

நம்பு மாவின் மோர்நாழி
    நன்றா யரைத்துக் கலக்கியதை
ஏம்பக் காச்சி யுட்கொள்ள
    ஏகும்பே ராமக் கணமே. *(கை.பி.98-182)*

### *தும்பைப் பக்குவ மோர்*

தும்பைப் பொடுதலைவேர் துய்யவே லிப்பருத்தி
கும்ப மதிக்கக் கொட்டியந்தச் சட்டியிலே
கொம்பெருமை மோர்நாழி கொஞ்சிவேர் திப்பிலியும்
உம்பாதி சீரகமு மோமமித்துப் போடெடையே.
எடைசேர் மருந்தனைத்து மியல்பாகவே சேர்த்தங்
கடைவா யரைத்துக்க ரைத்தனலில் காய்ச்சியபின்
குடையிற் குழவிகட்குக் கொள்ளக் கொடுத்திடவே
புடைபோலே வாயுவதும் பேராமம் போய்விடுமே.

*(புத்.476-93,477-160)*

### *இரத்தகணம் - குறிகுணம்*

இடைவிடா முக்கி முக்கி
யிருமலுங் கழிச்ச லுண்டாம்
அடைபடாக் கழிச்ச லாகி
யடிக்கடி யிரத்தங் காணும்
தொடையிடை வலிக்குந் தாகம்
சொல்லொணாச் சுரமுங் காயும்
தடைப்படா வியாதி யென்று
சாற்றினர் முனிவர் தானே.

நாடி அயர்ந்தே யுளம்வாடி மெத்தவு நாசபசி
கூடி யசனம் புசிக்கவொட் டாதுகு ழந்தைகட்கே
ஓடிய ரத்த மலத்தினிற் சேர்ந்துறு மூலமதால்
சாடிக்கும் ரத்த கணமென வேமுனி சாற்றினாரே.
*(புத்.477-160,476-97,98) (சர.வை.மு-34)*

கால்வீங்கும் உடம்புவற்றும் கடுப்போடுதாங் கலந்து வீழும்
மூலந்தள்ளும் மேல்காயும் முன்னங் கைகால் கனப்பிக்கும்
சீலமிரெத்தக் கணையென்று செரிந்தே யறிந்து
கொண்டபின்பு
கோலமுடைய பண்டிதரே குறிசொன்னோம் குணமிதுவே.
*(ஏடு.601-54)*

வந்திடு முடல மெல்லாம்
வயிற்றினில் வலியுண் டாகு
முகத்திடுஞ் சுரமு முளதோ
வுடம்பெலாம் மிகவே நொந்து
மெத்தவே மலமி ரத்தம்
வீழ்ந்திடு மடியுங் காணு
மித்தனை குணமுண் டானா
லிதுரத்தக் கணமு மாமே.

ஈரவெங் காயத் தோடே
யிளம்புளி யிலையுஞ் சேர்த்து
நேரதா யிடித்து நன்றாய்
நீர்விட்டுப் பிழிந்து கொண்டு

சீரகந் தாளி சந்தான்
சேர்த்தரைத் திதனை வார்க்கத்
தூரமே யேகும் ரத்தக்
கணமெனச் சொல்லி னாரே. (ஏடு.424-20)

தீர்த்திடா திருந்து தானாஞ்
சிறியபுள் ளடியி னோடு
மாத்துவெந் தயத்தைக் கூட்டி
வறுத்திதைக் கியாழம் வைத்து
தேய்த்திடு சாதிக் காயைச்
சேர்த்ததைக் குழப்பி வார்க்கச்
சாத்திய மாகும் ரத்தக்
கணமென சாற்றி னாரே. (ஏடு.424-21)

### 3. செங்கழு நீர் கற்கம்

செங்கழு நீர்சீரகமேலம்
சண்பக மலரு மதிமதுரம்
நங்குறு கோட்டந் தூதுளைவேர்
நன்னா ரியின்வேர் சமனாகக்
கொங்கைப் பால்விட் டரைநெய்யில்
குழைத்துள் ளங்கை யில்விட்டுத்
தங்க நக்கிட ரத்தகணந்
தானே யோடிப் போமன்றே. (புத்.477-161,476-98)

### 4. வில்வ இலைக் கற்கம்

ஓடும்வில்வ பத்திரிவேர் உற்றகரு வேல்கொழுந்து
நாடுதனில் நிம்பவிதை நற்சீரம் - கடுவளர்
ஆவாரம் பூவரிசி அஞ்சாதி பத்திரிகாய்
தேவார் கிராம்புடனே சேர்.

சேருமின்னார் பாலில் சிறுகொட்டைப் பாக்களவு
கூறும் படியரைத்துட் கொண்டாக்கால் - ஆறும்
இரத்தகண மூலகணம் எய்து மதிசாரம்
பெற்ற சிறுவோர்க்குப் பேசு. (புத்.476-98,477-162)

## *இரத்தகணத்தினால் அடிதள்ளினதற்கு கரிசாலைக் கற்கம்*

கரிசலாங் கண்ணி பழம்புளியும்
கதிக்க விவைகள் நெகிழரைத்துச்
சரியாய்ப் புன்னைக் காயளவு
சந்தம் எட்டு நாள்கொடுக்கப்
பிரியா துள்ளடி தள்ளினதும்
பேசா தோடும் மடமயிலே
பரிவாய் நாஞ்சொன் னோமிச்சாப்
பத்திய மானது நன்றன்றே. *(புத்.477-161)*

### *1. சாதிக்காய் எண்ணெய்*

கண்டி டுஞ்சாதிக் காய்சாதி பத்திரி
உண்டி டும்வலங் கமலவங் கப்பட்டை
கொண்டி டுமல்லி கோஷ்டங்கோ ரோசனம்
செண்டி டுஞ்செண் பகமலர் சேர்த்திடே

சேர்த்துக் கார்போ கரிசி மதுரமும்
பார்த்து மேலவங் கப்பத்ரி சீரகம்
ஏர்த்துச் செங்கழு நீர்க்கிழங் கேலமும்
கார்த்தி டோர்வகைக் கால்பல மாட்டிடே.

ஆட்டி டாமணக் கெண்ணெயா நீர்பலம்
சூட்டி டாய்பசு வெண்ணெ யறுபலம்
மாட்டி டாயெள்ளி னெண்ணெயில் மூன்றுதான்
காட்டி டாமுருங் கையிலைச் சாற்றிடே.

சாற்றி டாயெடை தான்ஈரெட் டுப்பலம்
சேற்றி டாயெறிந் தேமெழு காம்பதம்
வார்த்தி டாய்பல மாமுறை மூன்றுநாள்
காத்தி டாவுதி ரக்கணந் தாழுமே. *(புத்.477-161)*

### *2. குமரி எண்ணெய்*

எண்ணெய்படி கால்குமரிச் சோறு தானும்
எழில்விளாங் காயளவு கழுவிக் கொண்டே
அண்ணிரண்டு துமட்டிக்காய்ச் சோறுங் கூட்டி
அதிவீர காயம்பத் தரிந்து போட்டுக்
கண்ணவே மெழுகுபத மாயெ ரித்துக்
கனமான துட்டளவி லெண்ணெய் தானும்
நண்ணவே நாலுநாட் கொருபோ தீய
நாடாது ரத்தகணந் தீருந் தானே.

*(புத்.476-99,477-160)*

### *இரத்த மூல வறட்கண - மாத்திரை*

சாதிக் காயுடன் மாசிக்காய்
  கிராம்பு கோரோ சனைசீரம்
பூதிக் காயுடன் திப்பிலியும்
  பொருந்த வரைத்து மிளகளவாய்
நீதிக் காமென நிழலிலுலர்த்தி
  நிகர்முலை யின்ன முதிலிடவே
.... .... .... ....
  மூல வறட்கண மோடிடுமே. *(புத்.476-99,477-162)*

### *உணக்கு கணம் - குறிகுணம்*

நாளிலே வற்றுந் தேகம்
  நயனமும் வெளுத்துக் காணும்
கோளிலே சுரமுங் காயும்
  குடல்தனைப் பிரட்டி நாளும்
குலவயிற் மந்த மாகும்மானே
  மஞ்சள் போல கண்கள்
மலரும் நாளி லேயுணரும்
  தேனே யுண்க ணையென்று
  திறமாய் சாற்ற லாமிதுவே. *(ஏடு.601-69)*

### *மருந்து*

அமுர்து - சர்க் கரை - சீனி யாம் - வெண்ணெய் விரவி
குமுர்தமுடன் அந்தி சந்தி கொள்வீரேல் தேறும்
அமுர்தமுடனே முக்கூட்டெண் ணெய்மூழ்கி வரும்போது
சமுர்தமுடனே வுடல்தெளியும் சதிர்மறையின் முறையிதுவே.
*(ஏடு.601-70)*

### *உலரிக் கணம் - குறிகுணம்*

தாகமும் மிகுந்து மெத்தச்
  சலமல மஞ்ச ளாகி
வேகமும் வெதுப்பு முண்டாய்
  மிக்க தீபனஞ் செல்லாது
ஆகமு மெலிவுண் டாகி
  யந்திக்கண மாலை யாகி
யோகிய கடைவாய் புண்ணா
  முலரியாங் கணம தாமே. *(ஏடு.424-22)*

### *பற்பம்*

நிலவிய வெள்ளைக் கீழ்க்காய்
நெல்லியைப் பிடித்துக் கொண்டு
குலவுவெள் ளாட்டுப் பாலிற்
குழப்பியே பிழிந்து வாங்கிப்
பலகறைப் பற்பங் கூட்டிப்
பத்திய மாக வுண்ண
வுலவிய வுலரிக் காய்ச்சல்
.... ..... போமே. *(ஏடு.424-3)*

### *உள்ளுரோகக் கணம் - குறிகுணம்*

ஊதிடும் உடம்பு காய்ந்து
உடல்தலை வற்றி யங்கே
வேதப் பலதும் உண்டாம்
வெந்திடும் வாயும் நாறும்

மதினுள்ளில் ரோகஞ் செய்யும்
குணமிதுவே என்ன வாகி
.... நவர்ச்சி ரோகஞ்
செய்குண மிதுவே சொல்வோம்.

உதிரமுஞ் சுரமுங் கூடி
உடல்குலைந் தீரல் வற்றி
உதிரமுங் கருகி மேலில்
அற்பமாய் சுரமுண் டாகும்
மிதிரமாய் வேதினைக் கொண்டு
சிரசினில் குருதி பாயும்
கதிரவ னுள்ளு ரோகக்
கணையுட குணங்கள் தானே.

உதிரமுஞ் சிவந்து உடலூதி
உடலே குலைந்து ரெத்தம்
வற்றியகமே கருகி மேலுலர்த்தி
அயர்த்திடும் குருதி வற்றும்
கதிரவ னுள்ளில் ரோகக்
கணைக்குண மிதுவே யென்ன
பொதிகையில் வாழு மீசன்
புகன்ற நூலி தாமே. *(ஏடு.601-55)*

## 1. நெய்

யோகிய ரோகந் தீர
பிரமிவல் லாரை வண்ணன்
வீசிய நெருஞ்சி சின்னி
விருசுவெண் கணைமுத் தாளி

பாசி புள்ளடி காணி
பாச்சோற்றித் தகரை யாரை
மாசி மாந்தளி ரம்மருது
மாதுளை துளசி கொவ்வை.

முண்டிய யிசங்கு கொத்தா
னிடிவகைச் சாறு ழக்கு
முண்டே யோண்ட மோப்பம்
முக்கடுகு பலையு மேல
மண்டக மதிரங் கோட்டம்
கிராம்பது வசம்போ டுள்ளி
கண்டபால் கெருடப் பச்சை
காரக மகிரா யுலுவாய்

இதுவகை கழஞ்சி கொண்டு
ஈருள்ளி யுழக்கு தன்னே
சதுரமா யரிந்து போட்டு
சரக்கெல்லா மரைத்துக் காய்ச்சி
முதிர்பதம் வடித்து நீயும்
முழங்கவே கரண்டி கொள்ளில்
போம்பல பிணியுந் தீரும்
பிள்ளைதன் தோஷம் போமே (ஏடு.601-56)

## 2. நெய்

சிற்றாமணக்கு முத்திரு நாழி
சிறந்தாவின் பாலிரு நாழி
யொத்ததை விட்ட வித்து
யுலர்த்தியே யிடித்துக் கொண்டு
சித்தமாய் இளநீர் வெள்ளம்
சிறக்கவஞ்சு நாழி தன்னே
உற்றதேராக் கலக்கிக் காய்ச்சி
உடனெண்ணெ யூற்றிக் கொள்ளே.

கொள்ளவே சாதிக் காயும்
குரோசாணி சாதி பத்திரி
நள்ளவே கிராம்பு சீரகம்
நலமுடன் வசம்போ டேலம்
தெள்ளிய திப்பிலி மதுரம்
சிறக்கவே மாயக் காயும்
மன்னிய மருந்து தன்னே
இதின்வகை கழஞ்சி காலே.

இதுவகை யரைக்கக் கேளு
இதினுடன் துளசிச் சாறும்
மதித்தவல் லாரைச் சாறும்
வகைகளின்சா றாழாக்கு கோரு
இத்துட னரைத்துக் காய்ச்சி
இசல்மெழுகு பதம்வ டித்து
காதித்த காசெடை குடிக்க
கணைபதி னெட்டும் போமே
(உள்ளுரோக மெட்டும் போமே) *(ஏடு.601-57)*

## *3. நெய்*

கொடுப்பை தகரை பழம்பாசி
குணமாம் விருசு யகத்தியிலை
அடுத்த கீழ்க்கா நெல்லிகொவ்வை
அமுர்த வல்லி சித்திரப்பாலை
தொடுக்கும் மருந்து ஒன்பதுதான்
சொல்லும் வகைக்கு சாறாழாக்கு
கடுத்தே பிழிந்த வெள்ளுள்ளி
கழஞ்சி வேரை யரைத்திடுமே.

அரைக்கும் மருந்து அதிமதுரம்
அணிசேர் ஏல மிலவங்கம்
உரைக்கும் கடுக்காய் கன்னாராம்
உள்ளித் தேற்றான் மாயக்காய்
வரைக்கும் திப்பிலி கெருடப்பச்சை
வகைசீ ரகமுந் துருசுடனே
இசைக்கும் கிராம்பு சாத்திரபேதி
இன்னும் மருந்து சொல்லுகிறேன்.

சொல்லுங் கூவ நீருடனே
துகளுஞ் சந்தம் நறுநன்றி
சொல்லு மாத்தகருஞ் சீரகமும்
சில்லு ராமிச்சத மதனுடனே
சேர்ந்த வேரொன் றோர்கழஞ்சி
சொல்லு மீரவுள்ளி யொன்றாய்
ஒன்றா யரைத்துத் தான்வழித்து
யகலும் பருவ மினிச்சொல்வேன்.

வழித்த மருந்து மிகச்சாறும்
வகையாய் நறுநெய் நாழிதன்னில்
அழித்தே கலக்கி அனல்வைத்து
ஆட்டு மெழுகு பதமானால்
கழித்தே சீலை வடிகொண்டு
கடிதா யருந்த குடிபோமே. *(ஏடு.601-58,59)*

### ஊதுகணம் - குறிகுணம்

காதுடன் கண்ணு உடம்பு
கனக்கவே வீங்கும் வற்றும்
போதவே நாவும் புண்ணாய்ப்
பொருந்திய சுரமும் உண்டாம்
வேதுகை காலுஞ் சோர்ந்து
வெளுத்திடும் அன்னந் தன்னை
ஊதுநற் கணமாம் என்றே
உரைத்தனர் முனிவர் தாமே.
*(புத்.477-148,476-85)* *(சர.வை.மு-33)*

மேனியு மூதிக் காட்டி
சிக்கிடும் வலமுஞ் சற்றே
சடமெல்லாம் ஊதும் வற்றும்
சன்னேயா யிருமும் சற்றே. *(ஏடு.601-63)*

### நீர்முள்ளி, நாய்வேளைக் கற்கம்

நீர்முள்ளி சுட்டரைத்து நீள்கரிப்பான் தன்னுடைய
சாறதனில் வெந்நீ ரிடத்தணியும் - சாறதனில்
நாய்வேளை வேர்அரைத்து நல்லமுலைப்பா லூதுகண
நோய்போகு மென்றே நுவல். *(புத்.477-148,476-85)*

### நெய்

தேங்காய் நாலுந் தன்னைத்
திருகி சிறக்கப்பிழிந்து நாலுபடி
பாங்காய் மஞ்சள் திப்பிலியும்
பகரும் முந்திரிகைப் பழத்துடனே
வாங்காய் மதிரம் சிறுநாகப்பூ
மருவும் கிராம்பு சிங்கியுடன்
சொன்னே னரத்தை வகையொன்று
துகைசே ரொன்றரை கழஞ்சியெடை.

இடைசேர் மருந்தும் தேங்காய்ப்பால்
இடிய வரைத்துத் தான்கரைத்து
துகையாய் வெந்து நெய்வடித்து
துட்டுக் காசெடை யளவருந்த
வகையே தீரு மூதுகணை
படிந்து போகும் கண்டீரே. *(ஏடு.601-64)*

### 1. எண்ணெய்

கழற்கொடியி னிலையோர்பிடி கசக்கிவாய்
பேசாமற் கையிற் கொண்டு
விளக்கெண்ணெ யினிற் போட்டு மீரவெங்கா
யமரிந்து மேலேபோட்டுக்
கிழக்குதய மானபின்பு சூரியபுட
மாகவைத்துக் கிளரித் தானே
யுழக்கினிலீர் துட்டிடையிட் டுகைகொடுப்
பாயுப்புப் புளிப் பொண் ணாதே. *(சர.வை.மு104)*

### 3. ஆமணக்கு எண்ணெய்

ஆமணக் கெண்ணெய் நாழி
அதினுடன்காட் டெருமைப்பா லாழாக்கு
தாமணக் குறிஞ்சா வேலிப்
பருத்தி தூதுளை பிரமி
வாமண நொச்சி மேனி
மருவு வேப்பிலை தக்காளி
யோமண சங்கங் குப்பி
ஒரொன்று சாறு ழக்கே.

சாற்றுமுன் காயம் ஓமம்
சதகுப்பை கிராம்பு வாளம்
யேற்றும்கருஞ் சீரகம் வசம்பு
இந்துப்பு திப்பிலிதா னாலும்வாய்
ஆற்றுவெண் கடுக்காய் சாரம்
அஞ்சுடன் சமனாய்க் கூட்டே.

கூட்டிய வகைக்கோ ரொன்று
கழஞ்சாறு துகைத்த ரைத்து
நாட்டமாய்க் கரைத்து வெந்து
வடித்துக்கா செடையே கொள்ளில்
ஈட்டமாங் கணையின் வீக்கம்
இசலுடன் தீரு மென்று
நாட்டமாய் முனிவர் தானும்
நலம்படி வருளிச் செய்தார். *(ஏடு.601-64,65)*

### *4. வேலிப்பருத்தி எண்ணெய்*

வேலிப்ப ருத்திக்கொழுந் தோர்பிடி வெள்
வெங்காயம் வசம்பு ஓமம்
மேலுக்கடுக் காயிதினல் லெண்ணெய்மித
மாய்வார்த்து மேயெரித்திட
டாலக்க ரண்டிதனி லெண்ணெயளித்
துக்குழப்பிக் கொடுக்கவுமே
தூலப்பொ ருமல்வாடு மெனச்சொன்னார்
சரபேந்தி ரதுரையே *(சர.வை.மு.104)*

### *ஊதுமாந்த கணம் - குறிகுணம்*

அரிய பால னுடலதுதான்
ஆலிலைபோல தான் வீங்கும்
எரிய சுரமுந் தான்காயும்
யேற்ற நாவும் புண்ணாகும்
செரியா தன்னமுஞ் செல்லாது
சேருங் கையுங் காலோயும்
பெரிய ஊது மாந்தகணம்
பின்னுஞ் சுவாச முண்டாமோ.
*(ஏடு.798-28,109-212) (கை.பி.98-169)*

தானே ஊது மாந்தகணம்
  தனதாய் உரைப்பேன் மடமயிலே
வானே காலுங் கண் உடம்பும்
  வளமாய் வீங்கி நாயுண்ணாய்
ஆனே கேளாய் சுரம் உண்டாய்
  அன்னந் தண்ணீா் கொள்ளாது
கானே காலும் கைசோர்ந்து
  கனத்த சுவாசம் அதிகமன்றே.

அதிகமாய் ஊது மாந்த
  கணமது பனிரண்டாண்டு
அதிகமாம் அந்நாள் மட்டும்
  ஆமிது நோயின் காலம்
அதிகமாம் மருந்து கேளாய்
  அன்புடன் உரைப்பேன் தானே
அதிகமாம் தேவி வாலை
  அருளினால் உரைப்பேன் கேளே.

*(புத்.477-48,476-68)*

### *எண்ணெய்*

உண்டாம் சூரத் தவரையுடன்
  ஓரிலைத் தாமரை யின்கிழங்கு
இண்டார் பாடகம் வல்லாரை
  இசைந்த முள்ளிக் கரப்பானும்
வண்டார் மேனி தானருந்த
  வட்டத் திருப்பி யும்முருக்கு
திண்டார் கண்டங் காரியுடன்
  செந்தா மரைசெங் கழுநீரே.

கழுநீர் கிழங்குச் சாறுடனே
  கதித்த தென்னங் காய்ப்பாலும்
குழலே வகையொன் றோருழக்கு
  கூட்டே ரண்டத் தெண்ணெய்படி
வழலே இண்டின் வேர்காயம்
  வசம்பு முத்தக் காரேலம்
விழலே சாதி பத்திரியும்
  விடையம் மாயக் காய்தானே.

மாயக்காய் வெட்பா லரிசி
    வளர்செங் கத்தாரிப் பட்டையுடன்
வாயுவி ளாத்தி மருக்காரை
    வாகை யிலவம் பிசினுடனே
சாய வாலின் மிளகொன்று
    தானே கழஞ்சி சமன்கூட்டி
ஆய யிடித்துச் சாறுவிட்டு
    அரைத்து நன்றாய்க் கலக்குவதே.

கலக்கி யடுப்பி லேற்றியெரி
    காய்ந்து மெழுகு பதமானால்
பிலக்க வடித்துத் துட்டெடைகொள்
    பிலமாய் மூன்று நாளுந்தான்
நிலைத்த உப்புடன் புளித்தவிடு
    நேரே யிச்சா பத்தியமாய்
உலைத்த ஊது மாந்தகணம்
    ஓடிப் போகும் செந்திருவே.

*(ஏடு.109-212, 213,798-28,29) (கை.பி.98-169,170)*

உரைப்பேன் எந்தன் குருவருளால்
    ஓது .முள்ளி நீர்முள்ளி
திரைப்பேன் ஈண்டு வேர்க்காயம்
    தேங்காய் நெற்றுப் பாலுடனே
கரைப்பேன் கையான் கரந்தையுடன்
    கண்டங் கத்திரி வசம்பேலம்
திரைப்பேன் வெட்பா லரிசியொடு
    திகழும் மாதுளம் பழச்சாறே.

பழமே வட்டத் திருப்பியுடன்
    பற்ப டாகநன் முத்தமுடன்
தழமே ஓரிதழ்த் தாமரையும்
    தண்தா மரையும் செங்கழுநீர்
மழமே சூரத் தாவரை
    வல்லா ரையின்தன் சாறுடனே
வழுமே விளாவின் பிசின்வாகை
    மருக்கா ரைப்பிசி னுஞ்சேரே.

சேரே இலவம் பிசின்சேரு
  செங்கத் தாரி முருக்கஞ்சாறு
மாரே மாசிக் காயுடனே
  மகிமை கடுக்காய் அதிவிடையம்
சீரே வாலின் மிளகோடு
  சிவந்த சாதிப் பத்திரியும்
வாரே எல்லாம் வகைக்குக்கால்
  வளமாய்ப் பொடித்து ஒன்றாக்கே.

பொடித்திடு மருந்தி னோடே
  புகழ்விளக் கெண்ணெய் வார்த்தே
அடுத்ததோர் அடுப்பி லேற்றி
  அழகாகத் தீயை மூட்டி
வடித்துக் கடுகு திரண்டக்கால்
  வளமதாய் இறக்கிக் கொண்டு
தடுத்ததோர் தேவி மாதைத்
  தயவாய்ப்பூ சித்துப் போற்றே.

போற்றிய எண்ணெய் தன்னைப்
  புகழ்ந்துதுட் டெடைதா னீய
ஆற்றிய மூன்று வேளை
  அழகதாய்க் கொள்ளச் சொல்லு
மாற்றிய புளிப்பு தள்ளு
  வகையுப்புப் புகையு மாகா
ஏற்றிய கவிச்சே எள்ளு
  இவையெலாம் ஆகா வென்னே.
*(புத்.477-149,476-69)*

### *எரிகணம் - குறிகுணம்*

பாயில் கிடக்க ஒட்டாது
  பதைத்தே எரிவு மிகவுண்டாம்
வாயில் மூச்சுப் பரிந்துவிடும்
  வாச உமிழ்நீர் வடிந்துவிழும்
நோயில் பட்டு மிகஅழுமே
  நோக்குங் கீழே முகஞ்சாய்க்கும்
ஆயுள் வேத வைத்தியருக்
  கறைந்தோம் இதுவே எரிகணமே. *(புத்.477-153)*

குலையான வெரிகணத்தின் குணத்தைச் சொல்வோங்
குலையெரிச்சல் மேலெரிச்சல் தாகம் வாந்தி
யலைமோதிப் புரண்டுபுரண் டவதிப்பட்டங்
கழுத்துமிக வசமழிந்து முகங் கீழாகித்
தலையசைந்து வாயாலே மூச்சுண்டாகித்
தாங்காத வாராட்டங் கண்டதானால்
மலைபோலுந் திரண்டமுலை வனிதைமாதே
மருந்தினுட விவரத்தின் வாறுகேளே
*(சர.வை.மு. - 28)*

பசவாய்க் கொள்ளு மெதிரெடுக்கும்
பாயிற் கிடந்து முலையோடே
யிசையமோதிக் கொள்ளும் பெருமூச்
செறியுமுகங்கீ ழாய்க்கிடக்கும் *(சர.வை.மு-106)*

### *குரும்பை எண்ணெய்*

தென்னங் குரும்பைச் சாறுழக்கு
சீராந் தகரைச் சாறுழக்கு
வண்ண முலையீர் பழம்பாசி
வகையீ ருழக்குச் சாறுள்ளி
இன்னங் குமரி வேர்ச்சாறு
மினிய வல்லாரை மஞ்சணாத்தி
கன்னங் கறுத்த எண்ணெய்உரி
கலந்தே ஒன்றாய்க் காய்ச்சுவரே.

ஏலமும் அரைக்க ழஞ்சா
மிலவங்கப் பட்டை கோட்டம்
சாலநற் சீர கந்தான்
சந்தனம் மதுரந் தாக்கிக்
காலமே வடித்த எண்ணெய்
காசெடை உள்ளே கொள்ள
ஆலமாங் கணங்கள் எட்டும்
அறுமென்றே ரிஷிசொன் னாரே. *(புத்.477-154)*

பகரும் வகைக்கோர் காசெடையே
பகுத்துச் சாதிப் பத்திரியில்
வகையோ டேதா னதிமதுரம்
வராகனெடையொன் றேயாகும்

முகருங்கோரோ சனைதானு
முக்காசிடையோ டித்தனையும்
தொகையாய்க் கொண்டு வேடன்வேர்த்
துண்டு நறுக்கிச் சாறுகொண்டே

கொண்டிந்தச் சாறுவார்த் தரைத்திதனை
கடலையெனக் கூறக்கையா
லுண்டைபண்ணி முலைப்பாலி லூட்டிடக்க
ணமும்வயிற் றுக்கடுப்பும்
விண்டேகும் பெரியவர்க்குச் சுரமிவையெல்
லாந்தீரும் விந்தைதான் கை
கண்டதெனச் சரபேந்திரர் காசினியுள்
ளோர்க்குரைத்தார் கருணையாலே
*(சர.வை.மு-106-107)*

### *கரப்பன்கணம் - குறிகுணம்*

தேகம் வறண்டு நாவுலரும்
சிரங்கும் சொறியும் மிகப்பெருகும்
தாக முடனே மேலுலரும்
தண்ணீர் வேண்டும் நகையெய்தும்
யாக்கம் புண்போல் நொந்துளைந்து
வழலுஞ் சொரியும் கரந்தலுமாய்
தோகையள் யாயி குறிகேட்கத்
தோன்றும் கரப்பன் கணையிதுவே.*(ஏடு.601-66)*

### *நெய்*

சீனப் பாவு பலமிரண்டு
சிறந்த வசம்பு திரிகடுகு
கான கார்கோல் கருஞ்சீரகம்
கிராம்பு கோட்டம் சாதிக்காய்
மானே யேலம் கத்தூரி
மஞ்சள் துத்தம் துருசுடனே
யேனம் படவே வெம்பாடை
யிதுவே வகைக்குகழஞ் சொன்றாமே.

ஆமே சங்கு குப்பிகுப்பை
ஆறவே மேனி கழுதைவிட்டைசொல்

தகரை கழஞ்சி மொசுமொசுக்கை
சொன்னோம் வகைக்குச் சாறுரியாய்
கூட்டி ஆவின் நெய்நாழி
பதமாய் வெந்து வடிகொள்ளே.

கொள்ளே கரண்டி நெய்குடிக்க
கூறக் கேளீர் மடமாதே
விள்ளே கரப்பன் கணையெல்லாம்
விட்டே யோடும் விஷகரப்பான்
நள்ளே பொதிகை மாமுனிவன்
நவின்றார் நூலின்முறை கண்டுகொள்ளே
*(ஏடு.601-66,67)*

### *கழிகணம் - குறிகுணம்*

சீதங் கழியும் மலங்கழியும்
திரும்பக் கெட்டி பால்போல்
போதங் கழியும் கருந்தண்ணீர்
போதும் பின்னே கழிந்துவரும்
ஓது முள்ளங் கால்குளிர்ந்து
ஒருக்கா வெதுப்பு முண்டாம்
கோதே யிந்தக் குணங்கண்டால்
குலாவு மிதன்பேர்க் கழிகணமே.
*(ஏடு 6218-23,941-24,362-30)*

### *குடிநீர்*

இலந்தை நாரத்தையுளி யினியக் கணப்பூடும்
கலந்துநெல்லி நாக்குடனே காய்ச்சியுண்ண-யிளங்கோதாய்
கழிகண முள்வறட்சிக் காய்ச்சலுடன் தாகம்
பழிவருமென் றேப்போகுமே பார். *(ஏடு.6218-23,362-30)*

### *மருந்து*

உண்ணு மீருள்ளி பத்து
ஒருபிடி கருவே லீர்க்கு
ஒண்ணுஞ் சீரக மோர்க்காசு
இரண்டு கூற வெந்த யந்தான்
பண்ணு நல்பல பதமறிந்து
வறுத்துநீர் விட்டுக் காய்ச்சி

திண்ணமாய்க் கொடுக்க பேதி
கழிகணந் தீருந் தானே.
*(ஏடு.941-24,6218-23,362-30)*

### குடல் சோகைக் கணம் - குறிகுணம்

மானே குடல்சோகை கணைதனக்கு
வயிற்றைப் பொருமும் - வலியுண்டாம்
தானே கண்ணில் மிகப் பார்க்கும்
சற்றே நாவு முலர்ந்துவரும்
ஊனே உருக்கும் உடல்வற்றும்
உள்ளே அகன்று சுரங்காயும்
காணே நயன மிருண்டுவரும்
கடிய கணையென் றறிவீரே. *(ஏடு.601-60)*

### குடலேற்றக்கணம் - குறிகுணம்

குடலே செருமி குத்தும்
குமிறு மிரையும் மரத்திருக்கும்
குடலைக் கலக்கும் வாரதுபோல்
கதரி வலிக்கு மீரலுள்ளே
நடமே வயிறு பேதிநிறம்
நலவேம்புபோல் - மலங் கழியும்
குடலேற் றத்தின் கணைகுணங்கள்
சொல்லும் வகையென் றறிந்துகொள்ளே.
*(ஏடு.601-60)*

### குடிநீர்

கருவேப் பின்நெட் டுந்தான்
காமுருங்கைத் தானெட்டு வேப்பினெட்டு
காணே வாழை கொழுஞ்சிவேர்
கடிதாம் பெரிய தும்பையுடன் கேளே
ஆதித் திரிகடுகோ டிஞ்சி
அதில்வசம் புடனே மஞ்சள்தான்
பொடுதலையும் வேலிப் பருத்தி
யோடிவை களெல்லாம்
செப்பிடவே துப்பிக் கொண்டு
நன்சலம் விட்டுக் காய்ச்சி
கும்பிட வருத்திக் கொண்டு
குடித்திடக் கிராணி போமே. *(ஏடு.601-60)*

### *ஆமணக்கெண்ணெய்*

ஏரண் டெண்ணெய் யரைப்படியும்
யுகலும்வேலிப் பருத்தியுடன் தும்பை
சீரண்ட மாம்பிரமி துகலும்
கொன்றை பேய்ப் பீர்க்குடனே
சீறும் குறிஞ்சா தூதுளையும்
சிந்த முராது தக்காளி பேரண்டம்
பேணிச்சார் வகைக்கோ ரொன்று
உரியாய்ப் பேணிச்சொல்வேன் கடமருந்தை
திரிகடு கோடு திரிபலையும்
சிறுகடுகு ரோகணி சிவதை
யிந்துப் போர் நேர்வாளம் பிரிவுற்று
பேணி வகையோ ரொன்றுரைத்து
வெந்து குறியாயிதுக்குக் காசளவு
கொள்வீர் கணைகள் குடிபோமே. *(ஏடு.601-61)*

### *குன்றியக்கரகணம் - குறிகுணம்*

மாதேகேள் குன்றியக்க ரக்கணத்தின்
வாறுகேள் சிறுநீர்தான் மஞ்சளாமப்
போதேதா னிடைக்குமேல் சுரமுங்காணும்
பொல்லாத விருமலுடன் சுவாசங்காணும்
ஓதாமற் குரல்கம்மி வெளுக்குந் தேக
முலர்ந்துவிடுந் தாகமென்ன துவேஷமுண்டாஞ்
சூதாகி யீரல்வெந்து புண்ணாய்ப் போகுஞ்
சுளுவாக மருந்திதற்குச் சொல்லுவேனே
*(சர.வை.மு.-33)*

### *கொதிப்புக்கணம் - குறிகுணம்*

நெஞ்சு கொதிக்கும் விலாக்கொதிக்கும்
நேரே நெற்றி வேர்வையிடும்
பஞ்சைப் போலக் கண்வெளுக்கும்
பார்க்கும் போது பலவிதமாம்
துஞ்ச ஒண்ணா இருமல்வந்து
துயரப் பட்டுத் தலைநோவாம்
கொஞ்சுங் குரலும் கம்மிவிடும்
கொதிப்புக் கணத்தின் குணமாமே.
*(புத்.477-150,476-85)*

### *கற்றாழை எண்ணெய்*

சிற்றா மணக்குநெய் படியொன்று
சிறந்த பழச்சா றிலந்தைச்சாறு
வற்றா ஈருள்ளி யின்சாறும்
வகைக்குக் கால்படி தானாக
நற்றா மரைமலர் முகமாதே
நகிலம் பொற்சை லத்துறமும்
கற்றைக் குழலே மலர்விழியே
கரிய சீரக முங்காலே.

காலாகும் இவையெல்லாம் எண்ணெயிலே போட்டுக்
கருங்கற்றா ழஞ்சோறு பலமு மொன்று
காலாக ஏழுசுத்தி செய்து போடு
கனமாக அடுப்பேற்றி மெழுகுபத மாக்குக்
காலாகக் குமரிச்சோறு சிவக்கும் போது
கண்டிறக்கி ஆறவைத்து நாளொன் றுக்குக்
காலாகக் கரண்டிநிலை அந்தி சந்தி
களிற்கொண்டு வரத்தீரும் நோயைக் கேளே
*(புத்.477-150-151,476-85,86)*

### *சத்திக்கணம் - குறிகுணம்*

சத்தியாங் கணைவள நூற்றத்தான்
செய்யுங் குணத்தைக் கேளாய்
வற்றிய உடம்ப தெல்லாம்
மாலையில் மருவுங் கண்ணும்
மத்தியே பத்தி காயு
மரோசிப்பு மிகவு முண்டாம்
நித்தலுந் தண்ணீர் தாகம்
நெடுமூச்சு மயக்க முண்டாம் *(ஏடு.601-54)*

### *சர்ப்பக் கணம் - குறிகுணம்*

தனக்குத்தானே கண்ணில் பிற்பாடு
வெப்ப முடனே வயிறொழுகும்
மேனி வறண்டு வற்றி வரும்
அளவே சொன்னேன் அண்டித் தள்ளும்
அகண்டு மூலந் தன்னதிலே
அல்ப்பந் தானென் றெண்ணாதே

.... .... ....
அசாத்திய மென்று கூறுவதே. (ஏடு.601-62)

### *சிங்கி மாந்தக் கணம் - குறிகுணம்*

பேரான சிங்கிமாந்த கணத்தைக் கேளாய்
பெருமையாய் உந்திதணல் மேலெ ழும்பி
வாரான ஈரலுமே புண்ணாய் வெந்து
வலுமையாய்ச் சுவாசமேல் இழுப்பு மாகிச்
சீரான தேகஞ்ச மூலங் காய்ந்து
சிவசிவா தழல்போலே சுரமும் வீசும்
வீரான சுவாசமது திக்குமுக் காடி
வெகுளியாய் மயக்குவிக்குஞ் சிங்கிகணம் பாரே.

சிங்கிகணம் பிள்ளைகட்குச் சுரமி ருந்தால்
சிவசிவா மாந்தசுர மிதுதா னென்பார்
சிங்கிகண மாந்தமிது ஏதென் றக்கால்
சீரகற்றிப் பதின்மூன்று பிராய மட்டும்
சிங்கிகண மாந்தமி திருக்குங் காலம்
சிறுவனென்ற பிள்ளைகளுக் கச்சு ரந்தான்
சிங்கிகணம் ஒழிவதற்கு அமுதாதி தன்னைச்
செணமதிலே விள்ளுகிறேன் இதனைப் பாரே
(புத்.477-163,476-77)

### *முருவிலிக் குடிநீர்*

முருவிலிநன் னாரியொடு வெங்கா யந்தான்
முதிர்வசம்பு இந்துப்புக் கடுக்காய் முள்ளி
மருவியநா ரத்தைஎலு மிச்சை வேளை
வாகான மலைதாங்கிக் கீழ்க்காய் நெல்லி
வருவியதோர் பூசனையு மேபாற் சோற்றி
வளர்குரட்டை மால்கரந்தை வகைஒன் றாக்கி
பெருகுநல்ல நீர்விட்டுக் காய்ச்சிக் கொள்ளப்
பிலத்தவிட மாந்தகண(ம்) ....... போமே.
(புத்.477-179)

### *அமுதாதிக் குளிகை*

இதனைப்பார் அதிமதுரம் கோஷ்டம்ஏலம்
இனியகோ ரோசனமும் சாத்திர பேதி
இதனைப்பார் சண்பகப்பூ மாசிக் காயும்
இலவங்கப் பூவுடனே வகைக்குக் கால்தான்

இதனைப்பார் இவையெல்லாங் கல்வத் திட்டே
எழில்வெட்டி வேர்மாசிப் பத்திரி வேரும்
இதனைப்பார் கருந்துளசி விலாமிச் சோடும்
இன்பமதாய் நால்வகையுஞ் சார்பி ழிந்தே.

பிழிந்துமே கல்வத்தில் வார்த்த ரைத்துப்
பலமாக இருசாமம் விடாம லாட்டிக்
கழிந்துமே குன்றிபோ லுண்டை செய்து
கண்மணியே நிழலுலர்த்திச் செப்பில் வைத்து
வழிந்துமே வாலைமனோன் மணியைப் போற்றி
வகையான மாசிப்பத்திரிக் கியாழந் தன்னில்
அழிந்துமே குளிகையொன்று கொடுத்துப் போடாய்
அரகரா முன்சொன்ன மாந்தம் போமே.

*(புத்.477-164,476-77)*

### *சித்திரக் கணம் - குறிகுணம்*

குரலரித் திருமுஞ் சற்றே
குளிர்ந்திடும் கையும் மேனி
விரல்கை கால்குளிர்ந்து காணும்
மெலிந்துடந் துடலி லிருந்து
காணும் யிக்கணையி னாலும்
வற்றிடுந் தேகந் தானே
நீர்முழித் திடிருந் துண்டஞ்
சித்திரக் கண-மீ தாமே. *(ஏடு.601-65)*

### *சிலேத்தும கணம் - குறிகுணம்*

கண்ணு முடலில் தான்தினவு
கைகால் சொரியும் வீக்கமுமாய்
கண்ணும் வயிறு வாய்நாற்றம்
உற்ற தொண்டை புகைந்திருமல்
கிண்ணும் வெப்புள் கோழையொடு
கீழும் மேலும் வாய்வுடனே
விண்ணும் வெடித்துப் புண்ணாகும்
விளங்கும் சேற்பக் கணமிதுவே.

*(கை.பி.98-167) (ஏடு.798-25)*

குணமாஞ் சேட்ப கணத்தியல்பைக்
கூறக் கேளாய் உடலமெலாம்

உணவாய்த் தினவு மெடுத்துசொறி
ஊறிக் கரங்கால் வீக்கமதாம்
மணவாய் நாறும் வெப்புடனே
மார்பிற் கோழை இருமலுடன்
அணமே வெடித்துப் புண்ணாகும்
ஆறாத் தவன மருந்திடுமே.*(புத்.476-60,477-132)*

### *எண்ணெய்*

இதுவே கோஷ்ட்டம் செண்பகப்பூ
ஈர வுள்ளி நீலிகுமிள்
கதுவே கிராம்பு ராமிச்சு
கடுகு ரோணி கழஞ்சுநிறை
பதுவே நெய்யும் நல்லெண்ணெய்
பற்றக் காய்ச்சி வடிகொண்டு
இதுவோ் காசிடை யுள்ளூட்ட
ஏகுஞ் சேற்பக் கணந்தானே.
*(கை.பி. 98-167) (ஏடு.798-25)*

### *சுரக்கணம் - குறிகுணம்*

சுரக்கணையின் குணங்கேளாய் முன்னார்
தொகுப்பத் தேகம் வற்றும்
கானேகரமுடன் காலும் கையும்
கனத்துநீர் குளிர்ந்து கட்டும்
மருவியே வெதும்புந் தேகம்
பல்கடித் தலறும் சற்றே
சிரமும் குளுத்தி யுண்டாம்
திடனே யிருமும் சுரந்தானே. *(ஏடு.601-33)*

வாறான சுரகணந்தான் பெருமை மெத்த
மகத்தான தாகசுரம் பிதற்றல் தாகஞ்
சீரான சரீரமிக விளைத்துப் போகுஞ்
சிக்கிவிடு மலந்தன்னை யிரும லுண்டாம்
வேரான கண்மஞ்சள் சிறுநீர் மஞ்சள்
மிக்கவயி றிரைந்துகந்து முலைகண்கூடுந்
தாரான திவையெல்லாங் கணத்தின் பேதஞ்
சாற்றுகிறே னவுடதத்தால் சாந்தி தானே
*(சர.வை.மு. - 32)*

### *குடிநீர்*

ஆடா தோடை தூதுளையும்
அழுது வள்ளி கூவிளவேர்
தேடதி சங்கு நன்னாரி
சிறந்த முத்தக் காசுடனே
நாடியிலந்தை சித்தாமுட்டி
நலமாய் நிலவே ரோரொன்று
கேடாய் சாறுக ளிவைகூட்டி
கொடிதாய் கற்க வகைசொல்வேன்.

கேளே திப்பிலி செவ்வியம்
கிளரும் திப்பிலி மூலமுடன்
நாளே சிங்கி சிறுதேக்கு
நல்ல மதுரம் சீரகமும்
வாளே கொத்தம் பாலரிசி
வழங்கும் மிளகு நெல்பொரியும்
கூட்டி வகைக்கோர் கழஞ்சிட்டு
குறுகி நலமாய் நாலுநாள்குடி
வாட்ட மறவே சுரக்கணையும்
மற்றும் பலப்பல நோய்களெல்லாம்
காட்டில் விழுந்து பாய்ந்தோடும் *(ஏடு.601-34)*

### *நெய்*

வாழைப் பூவு கமு கன்பூ
வளரும் தென்னம் பூவுடனே
தாழை தாமரைப் பூவதுவும்
தண்ணீர் விட்டான் கிழங்கதுவே
கூவிளை கொடுப்பை வல்லாரை
கூறும் கொவ்வை இலைகூட்டே.

கூடிச் சமனதாய்க் கொண்டு
கூறும் கோவின் நெய்கொள்ளே
கொண்டார்ப் படியும் சாதிச்சார்
கூறும் பத்திரி கிராம்பேலம்
மாட்டும் மாயச் சாறுடனே
வளர்கன் னாராம்வசு வாசி
வாசோ சாத்திர பேதியுடன்
வளரும் சீரக கெருடப்பச்சை.

கண்ட மருந்தோ ரிவையொன்று
  கழஞ்சுட னிவைசரியாய்க் கூட்டி
வளரும் யீருள் ளியிது
  வகைக்கோ ருழக்கு நடையாளே
சேர்த்தே அரைத்துடனே காய்ச்சி
  சிக்கறத் தீரும் நோய்கேளாய்
கேளா யோடும் கணையெல்லாம்
  குடிபோய் கெடியில் விழுந்திடுமே.

*(ஏடு.601-34,35)*

### *தனிச்சுரக் கணம் - குறிகுணம்*

ஊனே உத்தாம தனிலுகந்தே
  தோற்று மகிளம் மலத்துடனே
சிக்கியே சேர்ந்த போது
  தெருகண் ணுநீர் வழியும்
கிளந்துதான் வெதும்பிக் காயும்
  தனிச்சுரக் குணத்தைக் கேளே.

தலையது யிடித்து கண்களைத்தான்
  சிவப்பாகச் சீரிதை தலைவயிர் தன்னிலங்கே
கணைவிடி சுரமுங் காயும்
  முலையுட னசனந் தன்னே
ருசிப்பார் உண்ண மாட்டார்
  பலப்பல குணமுண் டாகும்
பாணிநீர் தன்னைக் கொள்ளும் *(ஏடு.601-36)*

### *குடிநீர்*

கொண்டிடும் சுரங்கள் தீர
  குடிமருந் திதனைக் கேளாய்
கண்டகற் பூரவள்ளி தன்னை
  மலர்கணப்பூடு இகண்டியு மீருள்ளி
இடியிவை சாறு தன்னில்
  முண்டகொல் கரமு முன்னி
முலையினில் பாலுங் கூட்டே.

முண்டிடி லுறுப்பைப் பற்றி
  முறைச்சுரம் கழிந்து மங்கே

கொண்டநீர் தகைத்துச் சீறி
 திருகிகொப் பளதுவும் மாறும்
விண்டிடில் வேதந் தான்
 விதிமுறை யெழுத்தை யென்னே
ஆண்டவர் கேட்க வங்கே
 அருந்தவ முனிவர் சொன்னார். *(ஏடு.601-36,37)*

### *அத்திச்சுரக் கணம் - குறிகுணம்*

அத்திச் சுரத்தின் கணைதனக்கு
 அதிக தாக முண்டாகும்
மெத்த வெதும்பும் தேகமெல்லாம்
 மெலிந்தே பொசிப்பு வேண்டாது
சத்தி லெடுக்கும் தளர்ச்சையுண்டாம்
 சன்ன யிரும லீழையதாய்
பற்றி வயிறு கழிந்திருக்கும்
 பகர்ந்தே சிகிச்சை பரிவுசெய்யே. *(ஏடு.601-37)*

### *குடிநீர்*

தூதுளை கண்டங் கத்திரி
 சோரி . . . . .
தோடைதன் விசங்கு மேனி
 தோதாய் பிடியா ரென்று
காதென யிஞ்சி யுள்ளி
 காருநல் மிளகு சீரம்
சாலமா மரத்தைச் சுக்கு
 சரிசமன் கழஞ்சி கூட்டே.

கூட்டி யிடித்துப் பிட்டவியல்
 கூராய் வெந்து பிழிந்துகொண்டு
வாட்டிய தானே கொடுக்கிடுகில்
 மாறும் அத்திச் சுரக்கணைதான். *(ஏடு.601-37,38)*

### *நெய்*

அண்ணிய பிள்ளை முசல்ரெத்தம்
 அறவே பனீநீ ராடி
வருகு வல்லாரை கொடுப்பைச்சார்
 வளரும் முசுறு முட்டையுடன்

துலங்கும் இவையொன் றாய்தான்
கூட்டித் துணித்தோர் மேனிச்சாறுடனே
கிளர்ந்தோ ரிவ்வகை மருந்ததனை
கிருபையாய்ச் சேர்த்துத் தான்வையே.

வைய்யே மதுர மேலமுடன்
வளரும் கிராம்பு வால்மிளகு
வைய்யே குப்பை யிலவங்கம்
வையே வகைத்தா னோர்கழஞ்சே
பொருந்தும் நெய்யின்மாவின் நாழி
புகல்வேன் சிறுதே னுழக்குவிட்டு
விட்டே விரைவாய் தான்காய்ச்சி
விரைவாய் வத்த நெய்யதனை.

காய்ச்சி யுடனே காசெடைகொள்
காணேயத்தி சுரக்கணைதான் போகும்
கூச்ச மறவே யுடல் தெளியும்
கொண்ட யிரும லீளையும்போம்
வைத்த மருந்து மிதுசெய்யில்
மறுத்துப் பிணிகள் வாராது
போச்சே பெரிய பொதிகை - முனி
புகன்று உரை செய்வார்கடவுள் உண்மையிதே.

*(ஏடு.601-38,39)*

### *சுழி கணம் - குறிகுணம்*

மின்னே கேளாய் சுழிகணந்தான்
மேவும் வாந்தி யிருமலுண்டாம்
பொன்னே முகமு மார்பு கண்டம்
புடைத்துக் காணு முண்மையிது
சொன்னோம் வயிறு மீரல்நெஞ்சு
தொண்டை நாவு மிவை வெந்து
அன்னை முலைப்பால் குடியாமல்
அலறி யழூமீ தறிவாயே.

செருமு நாரை போற்றுவளும்
சேர்கை காலுங் குளிர்ந்திருக்கும்
பொருமு வயிறு தானூதும்
பொல்லாச் சுரமு மிகவுண்டாம்

அரிவாய் நுரையுங் கோழையுமாம்
அருநா வறளுங் கண் சொருகும்,
தருமே மஞ்சள் முகமயக்கம்
தலையு நோவாஞ் சுழிகணமே. *(புத்.477-143)*

உந்திதனைப் பத்தியீர லளவும் புண்ணாய்
யொருக்காலே சுவாசந்தா னுண்டா மெத்த
வந்துசுரம் பூசினாப் போலத் தாழ்ந்து
வருத்தமாய்த் திட்டுமுட்டாய் மயக்கங் காணும்
இந்தவகை கணக்காய்ச்ச லென்று நாளும்
இயம்புவார் புவிமீதில் மனித ரேகேள்
கொந்தளக் குழல்மடவா ளுமையாள் பாகன்
குறுமுனிக்குப் பகர்ந்தவிதங் கூறு வீரே.
*(ஏடு.941-22)*

சுழியெனும் கணமே சொல்லில்
சுழியவே சுவாசம் வாங்கும்
தளிருடன் சுரமுந் தோன்றும்
நயனம்பஞ் சடைந்து காணும்
தெளிவுடன் சந்து நொந்து
திகைக்கநெஞ் செரிப்புக் காணும்
குழியுமே யுச்சி தாழிற்
குணமிஃ தறிந்து சொல்லே. *(புத்.477-143)*

மெலிந்துவருஞ் சுழிகணத்தின் பெருமைகேளாய்
வெய்யசுவா சஞ்சுழித்துச் சுழித்துவாங்கும்
நலிந்துபற் பலவிதமாய்க் கழிந்து சோர்ந்து
நரம்புகளைப் புடைத்துமிகு சுரங்களாகிப்
பொலிந்தசிறு வாயாலே வாந்தி கோழை
புகழ்நாக்கு நெஞ்சீரல் வெந்து போகும்
கலந்தமுலை குடியாம லிளைத்துப் போகும்
கண்சொருகி நாசியுப்பல் காணுந் தானே
*(சர.வை.மு-28)*

மின்னே கேளாய் சுழிகணைதான்
மேவிச் சுவாச மிருமலுண்டாம்
பின்னே மார்பு முகநரம்பு
புடைத்துக் காணு முண்மையிது

சொன்னோம் வயிறு ஈரல்நெஞ்சு
    தோன்றும் நாவு மிவைவெந்து
அன்னை முலையுங் குடியாமல்
    அலத்திக் கிடக்கும் அறிவாயே.

இருமும் பொருமும் மேல்மூச்சும்
    இருகை காலுங் குளிர்ந்திருக்கும்
பொருமும் வயிறு தானோகும்
    புண்போல் சுரமு மிகவுண்டா
மருவி முலையுண் ணாது
    அசந்து வெதுப்பி லலறியெழும்
சொருகுங் கண்ணு ணாவறட்சி
    சுழி கணை சொல்லுங் குணமிதுவே.
*(ஏடு.362-31,941-2,25,612-4)*

## *1. உள்ளிக் குடிநீர்*

கேளுந் துட்டெடை இட்டிட வேசுரம்
    இறுக றென்ன வயங்குஞ் சுழிகணம்
சூழு நோயும் இருமலும் தீர்ந்திடும்
    சுழிக ணத்தின் சஞ்சீவி தாமென
வாழும் உள்ளி வசம்பும் உசிலையின்
    வாய்ந்த பட்டைஇம் மூன்று நறுக்கியே
நாழி நீரினில் ஊறூறி இறுத்திடு
    தணியு மேசுழி தன்கணம் இன்றுமே.
*(ஏடு.169-37,362-32) (புத்.477-144)*

## *2. குடிநீர்*

வசம்புள்ளி வெதுப்படக்கி கோழியவ
    ரைபேரா முட்டி நொச்சி
யிசைந்தவா றையும் நறுக்கி முறித்திறுத்து
    மிலவங்கத் தூள்மேலிட்டு
நிசங்கமுட னேகொடுக்கக் கணங்கழிச்ச
    னிற்கும்வயி றேபொருமி
லசமதா கங்கருக்கிக் கிராம்பாறு
    பூபச்சை யாகப்போட்டே

போட்டிதெலாங் கியாழம்வைத் திறுத்துலவங்
கப்பூவைப் பொறுக்கரைத்து
மீட்டுமிதி லிட்டூட்டு மேல்வசம்பி
லுப்பரைத்து மேலிட்டேதீக்
காய்ச்சு சற்றே வெதுப்பியுப்பைக் கையாறறட்
டியேநறுக்கிக் கனல்மேற்சட்டி
போட்டதனைக் கருகவறுத் துக்கருக்கா
யிட்டுதவு பொருமல்போமே. *(சர.வை.மு, -118)*

### *3. கற்கடகசிங்கிக் குடிநீர்*

சிங்கிகற் கடகம் சீந்தில்
சீரகம் வில்வ ஓடு
உங்கதி விடையந் தானும்
உரோகணி கண்டங் காரி
பொங்கமா முசுக்கை முள்ளி
புகல்கணை தூது வேளை
கங்கைநீர் காய்ச்சிக் கொள்ளக்
கணஞ்சுழி சுவாசம் போமே. *(புத்.477-147)*

### *4. குடிநீர்*

வில்லப்பத் திரிதுத்தி வெங்காயமுங் காயமும்
நல்லவெந் தியமொகமு நன்றாய் வறுத்து
நல்லநீர் வார்த்த தின்பின் சீரகஞ்
சொல்லுங் கற்கஞ் சுழிகணஞ் சோருமே.
*(ஏடு.941-23)*

### *1. ஈருள்ளிக் கற்கம்*

பாரு மீருள்ளி துருசுடன் வெந்தநீர்ப்
பாலாக் கியவிலுப் பைப்புண் ணாக்கையும்
நீரி லேகரைத் தெளிவு குழவிக்கு
நீங்கு மிளைப்பி ருமல்சு ழிகணம்.
*(ஏடு.362-32,941-25,169-38) (புத்.477-145)*

### *2. தூதுவளை கற்கம்*

காரு தூது துளசி நுணாசங்கு
கருதும் இண்டுப் பொடுதலைச் செம்முள்ளிச்

சாறும் ஆவின்நெய் சீரக கற்கமும்
தணலெ'ரிக்கச் சுழிகண மாறுமே.
*(ஏடு.169-38,941-25) (புத்.477-145)*

### *3. குப்பைமேனி எண்ணெய் கற்கம்*

குப்பை மேனிச் சாற்றில் உப்பைக்
கூடக் கலந்து வேப்பெண்ணெய்
செப்ப மாக மத்தித்துத்
தேனே மூன்று நாள்புகட்டத்
தப்பில் லாம லேயிளைப்புத்
தானே சுழிகணம் ......
..... ....... ......
...... கெட்டோ டுமன்றே. *(புத்.477-145)*

### *சூரணம்*

குப்பைமேனிச் சாறணையுத் தாமணியை
வதக்கிக்கைக் கொடுபிழிந்தே
திப்பிலியோ டிலவங்கங் கத்தூரி
மஞ்சள்கருஞ் சீரகங்கம
ரிப்பிசினும் வறுதுமேன் பொலிதூவிக்
கொடுத்திடவும் பிள்ளைகட்கே
யெப்படியுஞ் சுழிகணந்தான் நீருமெனச்
சரபேந்திர ரியம்பினாரே' *(சர.வை.மு.-122)*

### *துளசி நெய்*

நாடுந்துளசி தூது நுணா
நல்ல சங்க னிண்டோடு
பூடும் பொடுதலை செம்முளிநீர்
புகழு மாவி னெய்தனிலே
சாடுந் தணலி லிட்டு நன்றாய்த்
தானே கொடுக்க வேமாறும்
ஆடுஞ்சுழிகண மானதெல்லாம்
ஆறிப் போகுங் கண்டாயே' *(புத்.477-146)*

### *1. ஈயக் கொழுந்து கதிர்ப்புட எண்ணெய்*

இரண்டு காரியு மிம்பூரல் வேரோடு
இதைப்பொ டித்து விளக்கெண்ணெய் தனிலே

மண்டு பானு புடம்வைத் தெடுத்திட
மதலைக் குச்சுழி மாந்த மறுத்திடும்.
*(ஏடு.169-38,362-32) (புத்.477-144)*

### *2. குன்றிம வேர் கதிர்ப்புட எண்ணெய்*

குண்டு மாமணி வேர்கிலு கிலுப்பைவேர்
கூறுந் துளசி முசுக்கைநற் கூவிளம்
கண்டு முன்புடம் போலதை யெண்ணையில்
கலந்தி டச்சுழி காணாது பாருமே.
*(ஏடு.362-32,169-38) (புத்.477-144)*

### *3. தாய்ப்பால் எண்ணெய்*

முலைப்பால் கடுக்காய் காட்டுமல்லி
முதிர்ந்த ஆவின் புல்லுருவி
இலைப்பா யிரண்டு யீருள்ளி
இவையா மணக்கு எண்ணெயுடன்
துலைப்பா யடுப்பில் எரித்தெண்ணெய்
சொன்ன படியே கொடுத்திடவே
குலைப்பாய் வந்த சுழிகணமும்
குலைந்தே யோடிப் போய்விடுமே.
*(ஏடு.362-52,169-36) (புத்.477-145)*

### *4. கடுக்காய் எண்ணெய்*

கடுக்காய் காட்டு மல்லிகையும்
கடிய குமரி வெந்தயமும்
மிடுக்காய் சீரகம் இத்துடனே
மேவுஞ் சாரணை ஈருள்ளி
முடுக்காய் ஆமணக் கெண்ணெயுடன்
முடுகா தெரித்துக் கொடுப்பீரேல்
துடுக்காய் வந்த சுழிகணந்தான்
சொல்லா தோடிப் போய் விடுமே' *(புத்.477-146)*

### *5. எண்ணெய்*

முன்னியிலை யொருகுத்து விளக்கெண்ணெய்
யிட்டெரித்து முறைமாயாகத்
தின்னெனவோர் துட்டெண்ணெய் கொடுத்திடவுஞ்
சுழிகணந்தான் தீர்ந்துபோகு

மின்னங்கோ ரோசனைகொம் புப்பாகற்
சாறுகிராம் பிழைத்தேசுக்கும்
நன்னயமா கக்கூட்டி நல்கிடின்மும்
முறையினினோய் நடந்து போமே' *(சர.வை.மு.121)*

### *6. நந்தியாவட்டை எண்ணெய்*

நந்தியா வட்ட வேரும்
நல்லதாய்த் துளசி வேரும்
கந்திய சிவதை வேருங்
காட்டுமல் லிகையின் வேரும்
அந்திய புன்னைக் காயின்
அவரைத் திப்பால் கேளாய்
சுந்தர கண்டங் கத்திரி
தூதுளை கிள்ளி யாமே.

சின்னியு மணித்தக் காளி
செழிந்த கொட்டைக்க ரந்தை
கொன்னிய குப்பை மேனி
கோழியின் அவரைப் பத்ரம்
இன்னிவை சமன தாக
இடித்துரைப் படிச்சா றாகும்
மின்னிய மாசி லாத
விளக்கெண்ணெய் படியொன் றாமே.

ஒன்றதாய்க் கலந்தெ ரித்தே
உண்மையாய் வடித்து வைத்துத்
துன்றிய பால கர்க்குத்
துட்டெடை புகட்ட வேதான்
கொன்றிடுஞ் சுழிக ணத்தைக்
குலவிய தொண்டைக் கட்டு
என்றது தீரும் பத்யம்
இன்பமாய்க் காத்தி டாயே. *(புத்.477-146)*

### *7. எண்ணெய்*

சுழிகணத் தென்ணெ தன்னைச்
சொல்லுவேன் குட்டி வேலும்
அழிவற முள்ளி னோடு
அம்பையின் கிழங்கு தேங்காய்

அளவொடு கிலுகி லுப்பை
  அதின்வேரு மைந்தின் கூட்டி
ஒளிதருந் தகரை தூது
  வளைமுடக் கொற்றா னோடே.
ஓடுங் குதிரை வாலி
  ஒண்ணிலா வகையி னோடு
சேதியா நெருஞ்சில் செப்பில்
  சிறியபுள் ளடியி னோடு
நீதியாங் கணத்தின் பூடு
  நின்னப் பயிற்றி னோடு
சாதிடயா மோரி லை(யின்)
  தாமரை வகைபத் தாமே.

பத்துநே ராக வேரு
  பண்டுகோல் மூன்றுங் கூட்டி
சுத்தமாய் நறுக்கி யெண்ணெய்
  துவளமேல் கொள்ள விட்டு
உத்தநாள் பத்து மிக்க
  உற்ற சூரியனில் வைத்து
அத்துடன் குழவிக் கீய
  ஏகுமே வியாதி கேளே.

கேளே கணமுஞ் சுழிகணமு
  ..... ...... .....
....... ...... ......
  ...... ...... .....
தாளை படுமுன் காசுநெய்தான்
  தயிரை மோரை விட்டுவிடு
வேளே யெரித்த பிரான்குட்டி
  வேலா மென்னே யிதுவாமே. *(ஏடு.169-35,36)*

### *8. எண்ணெய்*

வெள்ளிண்டு கொண்டுவந்து நறுக்கிமுலைப்
  பால்விட்டு மேபிழிந்து
மெள்ளவிளக் கெண்ணெய்சரி விட்டுள்ளி
  வசம்பீர வெங்காயத்தை

யெள்ளளவா கவுநறுக்கி யிட்டெரித்துள்
    ளுக்குதட விடுமேலெங்கும்
பிள்ளைகணந் தீருமென் றுசரபேந்
    திரனாரும் பேசினாரே' *(சர.வை.மு.-127)*

### *9. எண்ணெய்*

காட்டும் வன்கை யீருள்ளி
    கருஞ்சீ ரகமும் கடுக்காயும்
நாட்டுக் கடுகு ரோகணியும்
    நல்ல வச்சிரப் பாலுடனே
கூட்டி யேரண் டெண்ணெய்தனில்
    குணமா யெரித்துக் கொடுத்திடவே
..... ...... ......
    ..... சுழிகணம் போய்விடுமே. *(ஏடு.169-37)*

### *10. தகரை எண்ணெய்*

வெந்தவித் தூற்று கின்ற
    விளக்கெண்ணெய் நாழி தன்னில்
அந்தந்த கரையின் சாறும்
    அதுபடி யேதா னொன்று
தந்தநா யுருவி வேரும்
    தைவேளை நாயின் வேளை
முந்தவே கொழுஞ்சி வேரும்
    மூக்கரைச்சா ரணையின் வேரே.

வகைக்கொரு வெலுமிச் சங்காய்
    அளவுசாந் தரைத்துக் கொண்டும்
பகைப்பிலா வசம்பு ஓமம்
    பண்புகத் தூரி மஞ்சள்
மிதப்புடன் சரிவி ளங்கம்
    மிருவகைக் கரைய தாகத்
திகைத்தவெள் ளுள்ளி தானுஞ்
    சேர்ந்திரு பங்கு கூட்டே.

கருத்தசீ ரகமும் வெந்தயங்
    கடுகுரோ கணிவ கைக்கு
நிறுத்தொக்க வொருபங் காக
    நீர்விட்டுத் தான ரைத்து

மறுத்தசட் டியிற்க லந்து
வகையுட னொன்றா யூற்றிப்
பொருத்திடு மெழுகு பாகம்
பிழையற வடித்துக் கொள்ளே.

பிள்ளைக்குத் தக்க எண்ணெய்
தானது புகட்ட இந்தப்
பிள்ளைத்தாய் தனக்கே உப்புக்
கைப்புடன் தவிர்த்திட் டாக்கால்
...... ..... .......
சீரிய சுழிக ணந்தான்
...... ...... .....
...... ..... போமே. *(புத்.477-78, 79)*

### *11. சண்பகப்பூ எண்ணெய்*

பத்துக் காசெடை சண்பகப் பூவுடன்
பகருஞ் சாதியின் பத்திரி காசெடை
முற்றுங் கேளரைக் காசெடை ஆவினில்
முளைத்தெ ழுந்தகோ ரோசனை மூன்றுமாய்
எத்துங் கேளிவை நுண்பொடி யாய்விளக்
கெண்ணெ யானதில் ஓர்படி தன்னிலே
சற்றுந் தீயிற் கொதியிட் டிறக்கியே
தனய னார்க்கிடுந் தான்விதங் கேளுமே.

கேளுந் துட்டெடை இட்டிடவே....
கிறுகி றென்ன வயங்குஞ் சுழிகணம்
.... ..... ..... தீர்ந்திடும் *(ஏடு.169-37) (புத்.477-144)*

### *சூலிக்கணம்(கர்ப்பக்கணம்)-குறிகுணம்*

நெஞ்சுவாய் தொண்டை நாவு
நேருற வெந்து புண்ணாய்
துஞ்சல்தன் முலையுண் ணாது
சுவாசமோ டிரும லுண்டாம்
தஞ்சமாய் வயிறு பொருமித்
தாய்முலை யுண்ணொட் டாது
கஞ்சலை முகமும் நாறும்
கணசூலிக் கணமி தாமே. *(கை.பி.98-173)*

உடலது வெளுத்து நாவும்
   உதடுக ளெயிறும் வெந்து
திடமுடன் முலையுண்ணாது
   சிவந்துநீ ரெரிந்து வீழும்
அடர்ம லம்பிசின் போலா
   தல்லது நுரைத்து வீழ்தல்
படர்சுரம் வயிற்றி லுண்டாம்
   பகர்கொர்ப்ப கணம தாதே. *(ஏடு.424-19)*

உண்டாஞ் சூலிக் கணங்கேளு
   உத்த சுவாச மேல்எழும்பி
தண்டா யிருமல் மிகவுண்டாம்
   தன்மை நெஞ்சு வாய்மட்டும்
தொண்டை நாவு வேவெந்து
   சோரும் பொருமி வயிறுப்பும்
வண்டார் முலையுங் குடியாது
   வகையாய் முகமும் நாறுமென்றே.
*(புத்.476-81,477-143)*

### *1. எண்ணெய்*

தாமிரு துளசி வில்வம்
   சாதி பத்திரி வேருள்ளி
வாமிசேர் கஞ்சாங் கோரை
   வஜைசா றஞ்சுவடி தாகும்
நாமிரு ஏரண்டத் தெண்ணெய்
   நாழிதான் கலந்த போது
மேவிய சிறுதேன் ரெண்டு
   விராகனும் கலப்ப தாமே.

கலந்ததை யடுப்பி லேற்றிக்
   கருத்துடன் கிண்டிக் காய்ச்சி
விதம்பெற வடித்து ரண்டு
   விராகனு முள்ளுக் கூட்டு
குலம்பெற மூன்று நாளும்
   கூறிடை யாகும் போது
தலம்பெறத் தீரு மென்று
   சாற்றினா ருண்மை தானே. *(கை.பி.98-173)*

## 2. எண்ணெய்

முகமாம் எண்ணெய் கால்படிதான்
முகிழ்சேர் துளசி நீர்சாரம்
தகமாய் நிலத்தின் துளசிச்சாறு
தன்மை அரைக்காற் படிகட்டு
வகமாங் கஞ்சாங் கோரையுடன்
வண்மை மாசிப் பத்திரியும்
உண்பாய் எண்ணெய் அடுப்பேற்றி
உருளுங் கடுகின் பதந்தனிலே.

தனிலே இந்தக் கடைமருந்தைத்
தயவாய்ப் போட்டுக் கிண்டிடுநீ
வனியே இறங்கிக் கணபதியை
வகையாய்த் தொழுது மடிவணங்கி
மணியே சூலி கணந்தனக்கு
மைந்தன் தாயைச் சாந்திசெய்து
தொனியே மைந்தன் தொண்டைதனில்
தொடுநீ காசெடை யேயிரண்டு.

எடையே ஐந்து மாதமென்றால்
எண்ணெய் ஐந்து நாள்மட்டும்
தடையாம் இச்சா பத்தியமிது
தனதாய்ப் பிராயம் ஐந்துமட்டும்
இடையில் இருக்கும் சூலிக்கணம்
இதனைக் கண்டு தீர்ந்திடுங்காண்
படையாய் வருடம் ஆனகணம்
பலிக்கும் ஒருமண் டலங்கொள்.

*(புத்.477-143,476-82)*

### *மருந்து*

மிக்கவல் லாரை யோடு
வெந்தயம் வெங்கா யந்தா
னொக்காவே சுட்டி நன்றா
யுடன்பட வறுத்துக் கொண்டு
தக்கநீர் விட்டுக் காய்ச்சித்
தகவுடன் வார்த்து வந்தால்
தொக்கெனுங் கெர்ப்பத் தோடே
துடர்கணம் நீங்கிப் போமே. *(எடு.424-20)*

### தூங்குகணம்-குறிகுணம்

ஆங்கொத்த தேகம் பாழாய்
    அறைவேனப்பா பதிவே காட்டி
பாங்கொத்த மெய்க ளெல்லாம்
    மடிகளே கருத்து காட்டி
சேங்கொத்த குரலுங் குன்றி
    தவறிடும் சொற்கள் தானும்
தூங்குமாங் கணைக ளென்று
    சொன்னவர் நல்லோர் தானே. *(ஏடு.601-50)*

### நெய்

கன்றாவின் நெய்நாழி தன்னில்
    கடுக்காயும் மஞ்சளோ டிஞ்சி
என்றேதான் சேர்க்கும் படிக்கும்
    மேவுந்திப்பிலி நெல்லி யுள்ளி
ஒன்று வகைக் கோர்க ழஞ்சி
    உகந்த பிரமி சாறுழக்கு
துன்றுந் தினந்தேன் மொழியே
    சொன்னோ மொருபடி நெய்யும் விட்டே.

இட்டே காய்ச்சி மெழுகுபதம்
    இயல்பாய் வடிகொண் டொருகழஞ்சு
கட்டியாய் ஏழு நாள்கொள்ள
    கண்களுடனே வாச்சே பத்தி
மூட்டியயழை காய்
    முதுகுட லேற்ற மாந்தம்
திடமாய்த் தீரு மென்று
    சிவனார் உரை செய்த நூலே. *(ஏடு.601-50)*

### எண்ணெய்

கோடகசா லைவிடத்தே ரிலைசிறுபுள்
    ளடிவசம்பு குதிரைவாலி
தோடின்பூ ராபழம்பா சியினுடன்வெள்
    ளுள்ளியிவைற் றினைநறுக்கிச்
சூடிநல்லெண் ணெயிலெரிக்கத் தூங்குகணத்
    திற்குவிளக் கெண்ணெய்தன்னிற்
போடிதெல்லா மிட்டெரித்துப் புகட்டிரண்டு
    காசளவு புகட்டத்தானே

அற்பமானா லிந்தப்பச் சிலையைந்தி
னைநறுக்கிய தைக்கை கொண்டே
யற்பணமாய்ச் சாறுபுகட் டவுங்கழியுங்
கணத்துக்கென் றுரைத்தாரெங்கள்

விற்பன்னனாஞ் சரபேந்திர ரென்றிந்த
முறையிதனை விவரமாக
நற்பரிசா லிம்மருந்தை நசல்தீர
வைத்தியர்கள் நல்கினாரே. *(சர.வை.மு.-112)*

## *தெற்கத்துக் கணம்*

வசம்போமம் வெள்ளுள்ளி காயந் தானும்
வகைவகைக்குக் கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
நிசம்பெறவே தூள்செய்து வைத்து மேலும்
நினைவாக வேப்பெண்ணெய் படிய ரைக்குள்
தசம்பெறவே தூள்போட்டே யொருநா ழிதான்
தணலிலே கொதிக்கவைத் தாறு நாளும்
கசம்பெறவே ரவிபுடந்தான் வைத்த பின்பு
கனத்ததிப் பிலியுடன்வேடு கட்டிக் கொள்ளே.

கொள்ளவே குழந்தைகளின் நிதானம் பார்த்துக்
கொடுத்து வந்த தெற்கத்துக் கணந்தா னேது
...... ...... ....... .....
..... ....... ..... .....
மெள்ளவே தாய்தன்னைப் பத்தியத்தில் வைத்து
மிளகுநீர் சாதமிட் டுண்ணச் சொல்லு
வள்ளியமாம் பொதிகைமுனி அருளி னாலே
மகாநோய்கள் பறந்துவிடும் வண்மை பாரே.
*(புத்.477-175)*

## *தெற்கத்து மாந்தக் கணத்துக்கு எண்ணெய்*

வெள்ளீண்டு தூதுவளை சங்கங் குப்பி
வேலியோடு பூவரசு குப்பை மேனி
நள்ளாடா தோடை சாரணை பூலாவும்
நரிபயற்றங் கொடிபிரமி வேளைக் கன்னி
பள்ளவே பதின்மூன்று வேர்கள் யாவும்
பரிந்திடித்த சாறுபடி யொன்ற தாகும்

கள்ளமிலா விளக்கெண்ணெய் படியி ரண்டு
கருஞ்சீரகம் புனுகோமம் பூண்டு தானே.

பூண்டுக்கோ ரோசினையுஞ் சண்ப கப்பூ
புகழ்வசம்பு சாதிக்காய் தான்றிக் காயும்
தாண்டுடனே வகைக்குப்பலம் அரைய தாக
சமரசமா யரைத்தெண்ணெ யதிற்க லந்து
நீண்டுடனே காய்ச்சியொரு கரண்டி வீதம்
நினைவாகக் கொடுத்துவரத் தீரும் நோய்கேள்
போகுமே குழந்தைகட்குப் பொல்லாபதி னென்கணமும்
தாமே வியாதியெல்லாந் தாந்தீரும் தேமே
....... ...... ...... ......
மலரளக மாதே மாயதெற் கத்துக்கணம்
தனமீது தீருமுண்மைதான். *(புத்.476-104)*

### *நிரம்பக் கணம்*

அறிந்துபா ருதரந் தன்னி
லதிகமாய் நோவுண் டாகி
அறிந்துநீர்ச் சீத ரெத்தம்
பச்சையா மஞ்சள் போலும்
வழிந்துமே கழியுங் கண்ணில்
வடியும்நீர்ச் சலமும் பீளை
மறியவே கடுத்து ளைந்து
வாடியே மயங்குந் தானே. *(கை.பி.98-1800)*

### *நீர்க்கணம் குறிகுணம்*

விழிநிறம் வேற தாக்கி
வெறிவுடன் மிரட்டிப் பார்க்குங்
குழியென உச்சி தானுங்
குணாகுண மலைவுஞ் செய்யும்
மொழிவது மிடறு கம்மும்
முகங்குரு வேர்வை யுண்டாம்
கழிவென வயிறு காய்ந்தால்
கருதுநீர் கணமா மென்றே. *(ஏடு.362-38,941-31)*

தலையும் கனத்து நீரேற்றும்
சளிபோல் நீரும் தானூறும்

முலையும் சரீரம் நீர்கலந்து
வோட நடக்க வொட்டாது
மலவும் சிறந்த நீர்சிவக்கும்
வானீ ரூறி யருவறுக்கும்
சிலையுஞ் சிறந்த நீர்க்கணைதான்
செய்யுங் குணங்கள் இவையாமே. *(ஏடு.601-67)*

இனிதான நீர்க்க ணந்தான் கண்டு தானா
லிருகைகால் முகமினுப்பாய் மயக்க முண்டாம்
பனிநீர்போ லடிக்கடி கழிச்ச லாகிப்
பகர்நாக்கு புண்ணாய்வாய் வறண்டு போகும்
நனிவேர்க்குஞ் சந்துகளில் வெப்பங்காணும்
நன்மூக்கில் நீர்வடியும் தாகங் காணுந்
தனியான தலைவலியு மிகுந்து நிற்குஞ்
சார்வான லவுழ்தங்கள் சாற்றக்கேளே.
*(சரவை.மு.-27)*

நீர்க்கணக் குணமே கேளாய்
நீர்வேட்கை யுடலி லன்றி
வேர்க்குங்கை கால்க டம்மில்
வெதுப்புறுங் கண்க டாழும்
நாக்குவாய் வறண்டு புண்ணாம்
நாவெடிப் புறுநீர்ப் பேதி
பார்க்கிலோ நீர்க்க ணத்தின்
பற்பல குணங்கள் தாமே.

முகமும் புறங்கால் புறங்கையும்
மோதி மினுமினுப் புண்டாகும்
கனகசேர் மயக்க முடல்சோர்வு
தணியா வயிற்று நோவுண்டாம்
விகவே சோகம் வெதுப்புண்டாம்
விட்டு விட்டுச் சுரங்காயும்
மகமே ரொத்த தனத்தாளே
வருநீர் கணத்தின் வகையாமே.
*(புத்.477-141,476-78)*

### *சாரணைக் குடிநீர்*

சாரணைக்காய் மூக்கரட்டை தன்காய் பொடுதலைக்காய்
பூரணமா முக்கடுகு பூந்துளசி - வாரணியும்
மங்கையரே சீரகமும் மாட்டிக் குடிநீராய்
உண்கவே நீர்க்கணந்தான் ஓடும்.

*(ஏடு.362-38) (புத்.47-141)*

### *நெய்*

முசுட்டை யிலையு மாவரைவேர்
முதுநீ ருள்ளி விரையுடனே
நெசிட்ட மான வறவே கொடுப்பை
சிறந்தாடா தோடை மருதந்தோல்
அசிட்ட மான கைதோன்றி
கண்ணுப் பீளை தூதுவளை
அசிட்டமாக வகைச்சாறு
ஆறு வகைக்கு அரைப்படியே.

படியே யேல மதிரமுடன்
பாங்காய் சாதிக் காயும்
கூட்டியே கோட்டம் சதகுப்பை
கொத்து மல்லி சீரகமும்
கொடிதாய் கிராம்பு கருஞ்சீரகம்
கூர்த்த உலுவாய் தாகடுகு
விடுவேல் அந்த மிருவேலி
விதமாய் வகைக்குக் கழஞ்சொன்றே.

ஒன்றாய் அரைத்து ஆவின்நெய்
உரிதான் விட்டு வேகவிடு
நன்றாய்க் காய்ச்சி உடன்கொள்ள
நாடாய் நீரின் கணைபோமே. *(ஏடு.601-67,68)*

### *மருந்து*

ஆலா வாரை விடத்தாரை நவ்வா
லாகிய கருவேலும் ஆனக் கொழுந்து
பட்டையும் நல்ல அகத்திப் பட்டையுடன்
சேலா தெங்கு மொக்குடனே சமன

தேடிக் குடிநீராய் சீரகம் விடைய
மாகிக் கிராம்புதன் சாதிக்காயும்
மேலா தீயில் வாட்டி விளாவின்
மேவுமதின் பிசினுள் மிதைப் பொடியாக்கி

நீரில் மெத்த னவேக ரையா
பாலர் பேதி மூலக் கண்டன்
பாரியல் முக்கல்சுரம் பாரிடுமே மறுசட்டியில்
மாத்தியிதை பாலர் குடித்திட பறந்தோடுமே.
*(ஏடு.941-31,32)*

### *நீர்மாந்தக் கணம் - குறிகுணம்*

இருமும் மூக்கில் நீர்பாயும்
இடையில் இடையிற் சுரங்காயும்
பொருமி வயிறு இரைச்சலுண்டாம்
போதப் பலவித மாய்க்கழியும்
சொருகுங் கண்ணும் உடம்புமுகம்
சோர்ந்து தலையும் புரட்டலுண்டாம்
மருவி மயக்கம் உண்டாகும்
வருகு நீர்க்கண மாந்தமுமே. *(புத்.477-142)*

### *அமிர்தாதிக் குளிகை*

அருளினார் அமிர்தமெனும் குளிகை தானும்
அதிமதுரம் செண்பகப்பூ ஏல மோடு
திருவுகோ ரோசினையுஞ் சாத்திர பேதி
சிறந்தவெட்டி வேர்கோஷ்டம் மாசிப் பச்சை
திரவெனவே விலாமிச்சம் வேருங் கூட்டிச்
சரியாக ஆதொண்டைச் சாறு விட்டுப்
பருவமதாம் ஒருசாமம் அரைத்துக் குன்றிப்
பருமனாம் முலைப்பாலில் பருகி டீரே.
பருகிடில்ஓர் உண்டைதான் முலைப்பால் தன்னில்
பகைத்துவருங் கணமாந்தம் எட்டுந் தீரும்.
*(புத்.477-142)*

### *பட்சிக்கணம் - குறிகுணம்*

வறண்டுடல் வற்றிக் கண்ணில்
மருவு சுக்கிர னுண்டாகும்

கரண்டுதா னண்டி தள்ளி
கடுப்புடன் சலமும் வீழும்
பரண்டியே வயிறு முத்தி
பற்றியே வலிக்கும் பின்னே
பறந்திடும் சாத்தி யந்தான்
பட்சியின் கணையி தாமே. *(ஏடு.601-62)*

### *பாலக்கணம் - குறிகுணம்*

கொஞ்சியே உடம்பு லர்ந்து
குடல்தனில் பால்தேங் காமல்
நெஞ்சுங் குனிய வாங்கி
நிறமொழி வேற தாகும்
துஞ்சிலுங் கண்ணுங் காந்தும்
துண்ணு மாமயி லன்னவே
பண்ணார் மொழியமெல் லடியினாளே
பாவக் கணையின் குணந்தானே. *(ஏடு.601-69)*

### *பித்த கணம் - குறிகுணம்*

இடுமே பித்த கணம்பாலன்
இருமும் மஞ்சள் போல்கழியும்
திடுமே நாக்குமங் கடவாயும்
தீரப் புண்ணாங் கிறுகிறுப்பும்
எடுமே எரியுஞ் சுரங்காய்ச்சல்
ஏங்கித் தியங்கு மின்னேரம்
வருமே மயக்க மடிக்கடிதான்
மருந்து செய்ய வல்லீரே.
*(ஏடு.7313-22,798-24)*

கேளே பித்த கணத்தியல்பைக்
கெடியா யுடலும் எரிச்சலுண்டாம்
நாளே உலர்த்தி மார்பிடிக்கும்
நாக்குங் கடைவாய்ப் புண்ணாகும்
பாளே சுரமுங் காய்ந்தெரிக்கும்
பருகக் கழிய மஞ்சளைப்போல்
தானே மயக்கும் தலைகிறுக்கும்
சாற்றும் சேட்ப குணங்கேளே.
*(புத்.477-132,476-60)*

பித்தக் கணையின் பிரிவுதனைப்
பேசக் கேளாய் பெய்வளையே
மெத்தப் பொசிப்பு வேண்டாது
மேனி வெளுக்கும் வாய்கசக்கும்
குத்தி வ்யிறு பொருமிவரும்
குடலைப் பிரட்டி வாந்திசெய்யும்
பத்தி வயிறு காந்திருக்கும்
பரிந்தே யுடலுங் காய்ந்திடுமே. *(ஏடு.435-44)*

### *1. குடிநீர்*

முத்தக் காசு வில்வயிலை
முதியோர் கூந்தல் மானையும்
மத்த துளசி வல்லாரையும்
மப்பே கொடுப்பை மருதந்தோல்
நத்தைச் சூரி வேருடனே
நன்றாய் வகைக்கு ஒருபிடியே.

பிடியே லஞ்சீ ரகமும்
பெருத்த சிங்கி சண்பகப்பூ
படியே கோஷ்ட்ட மதுரமுடன்
பண்பாய் லாமிச் சிறுவேலி

கடிதா யொன்றொன் றோர்கழஞ்சு
காய்ச்சி யெட்டொன் றானபின்பு
குடிநீர் பித்த கணையெல்லாம்
குடிபோம் ...... ....... *(ஏடு.435-44,45)*

### *2. குடிநீர்*

வாய்க்கவே சிறுதேக்கு வாய்வி ளங்கம்
வால்மிளகு ரோகணியும் சுக்கோ டேலம்
சாய்க்கவே திப்பிலி இலவங்கந் தான்றி
தக்கோல மோஸ்தகப்பால் வகைவ கைக்கு
மயக்கவே கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
வன்மையாய் தூளிடித்து பாண்டத் திட்டு
காய்க்கவே இருநாழி சலமும் விட்டுக்
கடுகவே எட்டொன்றாய் காய்ச்சி றக்கே.

இறக்கியே கொடுத்திடவே...... ......
...... ....... ...... ......
...... ..... ..... .....
...... ...... ...... .....
நறுக்கிவிடும் பித்தகணம் ..... எல்லாம்
நமன்ஓடிப் போவான்பார் கியாழத் தாலே.
*(புத்.572-51)*

### *நெய்*

பொன்னாங் காணி சிறுகீரை
புகழும் துளசி மாதுளையும்
நன்னார் கூவிளை முசுமுசுக்கை
நலமா மிதுசேர் வல்லாரை
முன்னே தாமரை யமுதுவல்லி
முணங்கும் வகைக்குச் சாறுழக்கு
முன்னா நீருள்ளி யதும்கருப்பஞ்
சாறு வகையு ழக்கே.

இஞ்சி ஏலம் சன்னமும்
இணங்கும் கிராம்பு சாதிக்காய்
வருமோ தகமும் மாயக்காய்
வளரும் மரத்தை வசுவாசி
தடுமோ கண்ணாம் மதிரமுடன்
சாத்திர பேதி சதகுப்பை
பொருநெல் விசார பருப்புடனே
போற்றும் வகைக்கொரு கழஞ்சிகொள்ளே.

கொள்ளே நறுநெய் நாழிதன்னில்
கூட்டிச் சாற்றி லரைத்திட்டு
நானே காய்ச்சி மெழுகுபதம்
நன்றாய் வடித்து சீனியிட்டு
உள்ளே காசெடை கொண்டிடுகில்
பேணிக்கொள்ளில் பித்தகணை யெல்லாம்
பிள்ளை பலநோய் வெதும்பிவிடும்
மடமயிலே யிதுசெய்ய வல்லீரா
லாறிப் போகுங் கைகண்டதே.
*(ஏடு.601-35,36)*

## *2. எண்ணெய்*

வல்ல கடுக்கா யீருள்ளி
வருந்தும் நீலி கூவிளைவேர்
சொல்லும் வகைக்கு திரிகழஞ்சி
துலங்கு மேரெண் டெண்ணையுரி
எல்லா மரைத்துத் தான்காய்ச்சி
இறக்கிப் பதமாய் வடிகொண்டு
மெள்ளக் காசெடை உட்கொள்ள
லாகும் பித்தக் கணமிதுவே.

*(கை.பி.98-167) (ஏடு.799-24,7313-22)*

## *பிரளிகணம்-குறிகுணம்*

திண்ணமாய் வயிறு பொருமி
திகைத்துட னேற்ப முண்டாய்ப்
புண்ணென நொந்து மேனி
புகழவே துடக்க தெங்கும்
விண்ணினி லறுமான் போலே
விடித்தமாப் போலே பேதி
பின்னியே கழியு மப்பா
பிரளிதன் கணத்தி னாரே.

கணத்தினால் மலமுங் கட்டி
கனவயிற் பொரும லாகி
சினத்தினி லடுத்த டுத்து
திகையது மூட்டு விக்கும்
இணைத்ததோர் குடற்பி ரட்டி
இளைத்துநீர் முத்துப் போல
வணக்கமாய் முலையுண் ணாது
வாயது விலகுந் தானே.

உலர்ந்துமேல் மூச்சுண் டாகி
உள்மூக்கில் நீரா யோடும்
பிலத்ததோர் முகத்தில் மஞ்சள்
போலென மணமுண் டாகும்
குலைத்திடுங் குணங்கள் கண்டால்
கூறுவேன் மருந்து தானும்

நலத்தினி லறியும் பேர்க்கு
நன்றெனச் சொன்னார் கேளே.

(கை.பி.98-174-175)

மிகுந்த பிரளிக் குணத்தியல்பை
விரிக்கக் கேளு செருக்கறவே
விகுந்தமாக வயிறு விம்மி
மேலே ஏப்ப முண்டாகும்
சகித்த வுடல்புண் போனொந்து
துடித்தே ஏங்கி யழுதலுறும்
பகுந்த மலமும் மாப்போலப்
பாக்கக் கழியுந் தவித்திடுமே.

போதா பிரளிக் குணங்கேளாய்
பொருமி வயிறு மதைப்புண்டாம்
கோதா மலமும் போகாது
குடலைப் புரட்டித் தான்வலிக்கும்
மாதா முலையு முண்ணாது
வலிவைக் குலைக்கும் வாயுலரும்
மீதா மேல்மூச் சுண்டாகும்
விழியுஞ் சுழலு மேசித்தம்.

சித்தாக வேயிளைக்கும் திட்டுத்திட் டெனமுக்கும்
முத்தாக மூக்கினீர் மூண்டோடும் - தெத்தாரம்
மஞ்சட் படீர மணக்கும் மதிவதன
வஞ்சிப் பிரளிகுண மாம்.

(புத்.477-142,476-82-83)

### *1. தும்மட்டிக்காய் எண்ணெய்*

அவித்தசிற்றா மணக்கெண்ணெய் படிதான் ஒன்று
அதில்நாலு குமட்டிக்காய் அரிந்து போடே
இவித்தீர வெண்காயம் படியி ரண்டு
இதமாக அரிந்துபோட் டின்னங் கேளாய்
கவித்தகருஞ் சீரகந்தான் பணமா காணி
கடுகுரோ கணிபணம் அரைக்கா லாகும்
தவித்தகத் தூரிமஞ்சள் பணமா காணி
நறுக்கிப்போட் டடுப்பேற்றிக் காய்ச்சிக்கொள்ளே.

கொள்ளவே பதமறிந்து கரண்டி வீதம்
கூறவே துட்டெடைதான் குடிக்கும் போது
கள்ளமில்லா விரோசனமாம் இதற்குத் தானே
கதறியே பிரளிகணங் காணா தோடும்
....... ...... ..... .....
...... ...... ......
விள்ளவே பத்தியந்தான் பிடித்தல் வேண்டும்
விரும்பாதே மாங்கிசந்தான் கிட்டா காதே.
*(புத்.477-143,476-83)*

### *2. எண்ணெய்*

கேளப்பா சிற்றேரண் டெண்ணெய் நாழி
கீர்த்தியாய்க் கலமதிலே விட்ட போது
வேளப்பா பேய்க்குட்டிக் காயும் நான்கு
வெண்காயம் ரெண்டிடித்து முறித்துப் போடு
மாளப்பா கருஞ்சீரகம் கத்தூரி மஞ்சள்
மாகாணி பலங்கடுகு ரோகணி தானும்
ஆளப்பா பலமரைக்கால் பொடித்த ரைத்து
அடுப்பேற்றிச் சிறுதீயா யனலை மூட்டே.

மூட்டியே மெழுகுபத மாகும் போது
முதிராமல் வடித்திறுத்துக் கலசத் திட்டு
ஈட்டுவாய் துட்டெடைதான் குறைவில் லாமல்
இதமாக மூன்றுநா ளந்தி சந்தி
பூட்டுவாய் பத்தியமாய்க் கஞ்சி கொண்டு
புத்தியுட னிப்படியே ஊட்டும் போது
தாட்டிகமாய்ப் பிரளிக்கண மாந்த முதலாய்
தவறுண்டு போகுமடா தயவு தானே.
*(கை.பி.98-175-176)*

### *பிறக்கணம் - குறிகுணம்*

தாக்கிடுவாய் முன்போலே மூன்று நாள்தான்
தடவிவிட புண்சூடு தானது போகும்
தூக்கிடுமே மலபேதி பச்சென் றேதான்
தோய்ந்தயிர் போலவுமே வயிறு முப்பித்
தூக்கமிகும் பாலருந்தும் சுக்கும் காயும்
செருகிவிழி கால்கைகள் சில்லென் றேதான்

ஏற்கையிலே தலைபுரட்டல் குணங்கள் கண்டால்
இயல்பான பிறக்கணமென் றியம்ப லாமே.
*(புத்.476-83,477-151)*

### *1. பிறக்கணத்துக்குக் கெண்ணெய்*

இயம்பாரை கோழிகோரை ஜனகி வேளை
இலைவெதுப்பி மிரட்டிபுவி இடுகால் புள்ளு
சுயமாக வகையெல்லாஞ் சாறு வாங்கிச்
சூட்டதிலே எண்ணெய்ச்சேர் சமன தாக
வயம்உள்ளிக் கரியமணி இருஷி மூலம்
வகைக்கழஞ் சிடித்திட்டுத் தீயை மூட்டு
நயமாக. முன்போல் காசெடையே வாரு
நாள்மூன்றில் பிறக்கணமும் நாடா தென்றே.
*(புத்.476-84,477-152)*

### *பொருமுகணத்திற்கு எண்ணெய்*

சாணக்கி உள்ளியொரு தலைப்பூண்டு
வசம்பொன்று தான் வதக்கி
தாணாக்கியே நறுக்கிபிழிந் தோர்சங்கு
புகட்டிடவுந் தானந் தன்னிற்
கோணாம லேதடவிக் கொண்டுநேர்
மூன்றுகொ டுவதக்கா
தூணாகத் தட்டிநாள்மூன் றாறுபொ
ழுதுகொடுத்து தவுவாயே' *(சர.வை.மு.-126)*

### *மகாகணம் - குறிகுணம்*

நாவுட லுதடும் பின்னால்
நல்லுடல் சுரமுண் டாகி
வேவுடன் மயங்கும் பாலன்
விழியது வெளுத்துப் போகும்
மேவிய புறங்கை கால்கள்
மினுமினுப் பதுவே யாகு
மாவிசேர் பால கர்க்கு
மகரத்தின் குணமாம் பாரே. *(கை.பி.98-174)*

முகம்பு றங்கால் புறங்கை
மோதியே மினுமி னுக்கும்

நகம்விழி வெளிறிக் காட்டும்
 நஞ்சுண் டார்போல் மயங்கும்
மிகமிக வெதுப்பு முண்டாம்
 வெடித்துநா உதடு புண்ணாய்ச்
சுகமில்லை மந்தந் தோன்றுஞ்
 சொல்லுமகா கணத்தின் வாறே.
*(புத்.476-82,477-147) (ஏடு.941-23,362-29)*

### *சிறுகீரைவேர்க் குடிநீர்*

பார்த்திடு மாடா தோடை
 பகர்வெதுப் படக்கி சீந்தில்
தீர்த்திடும் விஷ்ணு மூலி
 சிறுகீரை கீழ்க்காய் நெல்லி
சார்சிறு பீளை வேரும்
 சமனிது கிஷாய மிட்டு
பார்விழி மானே ஊட்டப்
 பறந்திடுந் திண்ணந் தானே. *(கை.பி.98-174)*

சிறுகீரை வேர்க்காந்தி கீழ்க்காய் நெல்லி
 சிறுபீளை எருமுட்டைச் சீந்தில் தோடை
நறுகீரை யாகுமித் தகைவு மொன்றாய்
 நறுக்கியே நல்லதொரு பாண்டந் தன்னில்
வறுகீரை இவைறுப் பாக வேதான்
 வறுத்ததனைக் குடிநீராய் வற்றக் காய்ச்சி
இறக்கியே வைத்திறுத்துக் கொடுப்பீ ராகில்
 ஏகும்மகா கணமென்றே இயம்பி னாரே.
*(புத்.477-147,476-82) (ஏடு.941-23,362-39)*

### *மகேந்திரகணம் - குறிகுணம்*

மகேந்திர கணையின் செய்கை
 மாலைகள் போலத் தோற்றும்
மதியமந்த மாகத் தானே
 மகாசீதங் கழியும் பின்னே
வயிறித மாக கண்ணில்
 வரிவிழும் வயிறு மேனி
சயந்திடும் நயனம் பாழாம்
 சடுதியில் கழிப்பு செய்யே.

மானே கேளாய் மயேந்திரத்தில்
வந்திடும் குணங்கள் தன்னை
சீதமே கழிந்து பின்னே
சோர்ந்துடல் வெதும்பிக் காயும்
மாந்தமாய் வேறு மேனி
நயனத்தில் வரியும் வீழும்
சாதமாய் நயனம் பாழாம்
சடுதியில் கழிப்புச் செய்யே. *(ஏடு.601-45-46)*

மகேந்திர கணையின் செய்கை தன்னை
வகுத்துக் கேளாய் வஞ்சியரே
சகோதரம் வாலேந்திரம் தானுடன்
கூடிமாய உடம்புதான் வற்றி
......... .......... ..........
........ ....... ..........
வகுந்தே வயறு மிகத் தள்ளி
வளமாய்க் கண்விழியில் நீர்ப்பாயும்

பாயும் கண்ணீர் தான் இரட்டில்
பகர்ந்தே பிராலும் தான்பற்றி
தேயும் பிரால்போல் தானுலர்ந்து
சேர்ந்த கருவிழிக் கீழாக
மாயமாய் பிறை போலத்தான்
வளர்ந்திடும் வெள்ளைச் சுக்கிரன்
நேயமாய் சாறுத் தசுக்குரல்
நேரிடில் மரணந் தானே. *(ஏடு.601-59)*

## *1. நெய்*

பிள்ளைப் பிணியின் கணைதனக்கு
பிரித்த நெய்தான் வகைகேளாய்
வள்ளாய் மதுரம் பட்டையுடன்
மற்றும் வில்லை நன்னாரி
கள்ளா கருவே லிலைப்பட்டை
கடிய சித்தா முட்டியின்வேர்
உள்ள படியே கொஞ்சங்காய்
ஒக்க வகைக்குப் பலமொன்றே.

ஒக்க விடித்து உதக
மிட்டு வுடனே யிதிலிட்டு
ஒக்கக் காய்ச்சி எட்டொன்றாய்
எரித்தே வடித்து மேல்மருந்து
தக்க துளசி கீழாநெல்லி
தண்ணீர் மிட்டான் நற்கோவை
புக்கக் கொடுப்பை வல்லாரை
பொருந்தும் விரிசு பழம்பாசி.

பச்சை மருந்து வேரொன்று
பரிவாய் இச்சாறு தானுழக்கு
மெச்சுங் கிஷாயங் கூடவிட்டு
விரைவாய் அரைக்கும் மருந்துகேள்
குத்த கிராம்பு சாதிக்கா
யுடனே பத்திரி சீரகமும்
வச்ச மதுரம் கன்னார்
வகைசேர் வேதத் திப்பிலியு

மிச்ச மாக வேரொன்று
விரைவாய் கழஞ்சி கூட்டிவையே.
கூட்டி யரைத்து நெய்யுரியில்
கூராய் வெந்து மெழுகுபதம்
மாட்டிடும் படியே காசெடைகொள்
மாறும் ........ கணைநோயும்
..... ...... .......
...... ...... ......
சாட்சி யாகத் தீருமென
சாகா முனிவ ருரைசெய்தார். *(ஏடு.435-41-42)*

### *2. நெய்*

மாதுளை இலையும் பிஞ்சுடனே
வகையாய் மத்தி யால்மொட்டு
தூதளை துளசி வல்லாரை
துலங்கும் பருத்திப் பிஞ்சுடனே
சீதளை யான பழம்பாசி
சிறந்த கொடுப்பை முசுமு சுக்கை
சாதனை யானநற் கோவை
தண்ணீர் விட்டான் சாறுழக்கே.

உழக்கே வகைக்குச் சார்சமனாய்
ஒக்க இடித்து வடிகொண்டு
வழக்காய் மதுரஞ் சாதிக்காய்
மருவுங் காமன் சீரகமும்
விளக்காய் பத்திரி ஏலமுடன்
விரைவாங் கன்னார் கெருடப்பச்சை
துளக்காம் வகைக்குக் கழஞ்சொன்று
சொல்லும் நறுநெய் யுரியாமே.

உரியே யிட்டு யெரியிட்டு
உடனே மெழுகு பதம்வடித்து
வடிசேர் மதலை தங்களுக்கு
வருந்திக் காசெடை நெய்கொடுக்கில்
.......... ...... ......
தீரும் பித்த கணைதெளியும்
சொரிசேர் கலசம் நீர்தெளித்து
துலங்க விடிநோய் தோற்றிடுமே.
*(ஏடு.435-41-42)*

### *மந்தார கணம் - குறிகுணம்*

மந்தார கணத்தின் வாறு
வகையறிந் திடவே கேளாய்
முந்தியே கணமு மாந்த
மோதியே இசைந்து கூடில்
சந்தியில் சுரம யக்கும்
சார்ந்திடும் சுவாசம் வாங்கும்
கந்தியே வயிறு உப்பும்
கணத்தில்மந் தார மாமே. *(புத்.477-153,476-87)*

தாழந்துவரும் மந்தாரக் கணத்தைக் கேளாய்
தாக்கிவயி றுப்பிசமாய் மலத்தைக் கட்டிச்
சூழ்ந்துநளிர் சுரமயக்கம் இரும லுண்டாய்ச்
சுவாசமொடு தலைவேர்வை முலையுண் ணாது
வாந்திதிடுக் கிட்டலற லிளைத்துப் போதல்
வடிந்துவரு மூக்கினாற் சலங்கள் மிஞ்சி
ஏந்துமிளங் கொங்கை நல்லாய்! மருந்திதற்கே
இயம்புகிறேன் பலமாக வெடுத்துத்தானே'
*(சர.வை.மு.31)*

### *நாயுருவி எண்ணெய்*

நாயுருவிச் சாறுடனே கரிசலாங் கண்ணி
நல்லதொரு வல்லாரைச் சாறுடனே இன்னம்
தூயகவிழ் தும்பைகண் டங்கரிய நொச்சில்
சொற்சா றுழக்குவகை எண்ணெய்படி யொன்று
பாயும்வெள் ளுள்ளிதிரி கடுகுதிரி பலையும்
பாகபலம் இலவங்கம் வசம்பிருவ ராகன்
ஆய்பதக்கு நீர்வற்றக் கடுகுமது சிவந்தால்
ஆமெட்டுக் கணங்களையும் அடக்குமது தானே.
*(புத்.477-153,476-87)*

### *மாந்த கணம் - குறிகுணம்*

செ_லாமம் கருவி லான
சிசுவதற் கின்னங் கேளாய்
விடலமாம் கணமாந் தந்தான்
மிகுங்குறி குணத்தைப் பாராய்
அடலம தாகப் பெண்ணாள்
அடைவதாய்த் தலைக்கு எண்ணெய்
தடமதாய்த் தோய்த்துச் சுத்த
சலத்தினில் மூழ்கி னாலே

முழுகியே அன்ன முண்டு
முடுக்கென எழுந்த போது
அழகிய மயக்க சோப
தாபமு மிகுதி யாலே
தழுவியே படுக்க மாது
சடுதியில் உறக்கங் காணில்
விழுகியே உதார வாய்வால்
விரகலா கிரிதா லாமே.

நாகுமே அவள்மோ கத்தால்
நாயக னோடே சேர்ந்து
நோகவே தேக மெல்லாம்
துசிதமல் லாரும் போது
தாகபோ கத்தால் அந்தச்
சமானனாம் வாய்வெ ழும்பி
ஏகிடுங் கமலம் புக்க
இருந்திடுங் குளிர்மை வந்தே.

குளுமையாய் ஏழு நாளும்
கூறிய தலையி டிக்கும்
எளுமையாம் பெண்ணா ருக்கும்
எழுப்பிடுங் கபால சூலை
வளுமையாம் பின்னும் ஏழு
வளம்பெற நாள்சென் றக்கால்
வெளுமையாய்த் தேக மெங்கும்
வெளுத்துடன் வயிறு நொந்தே.

நொந்தத்தால் சூத கத்தில்
நோயிஃ தென்று சொல்வார்
பந்துபோல் நாபி தன்னில்
பாசிபோல் இருக்கும் என்பார்
வெந்துதான் பித்தச் சூட்டால்
மிகுந்ததோர் நோயி தென்பார்
தந்திர வாய்வி னாலே
சந்தியும் இதுவென் பாரே.

இதுவே கணமாந் தத்தால்
ஏறியே பெண்ணா ளுக்கு
வதுவெனக் கருவின் பற்றி
மஞ்சனும் பிறந்த தானால்
பதுவென மாதுக் கேதான்
பாலது மிகுதி யாகும்
அதுபத்து நாளுந் தானும்
அமிர்தமே பெருகுந் தானே.

பெருகிடும் பத்து நாளும்
பின்புநாள் மேலே சென்றால்
கருகிடும் மூலச் சூட்டால்
கல்லுபோல் கட்டும் பாலும்
மருகிடும் அதுநாள் கொண்டு
மஞ்சனுக் கிளைக்கும் தேகம்
தருகிடும் வாந்தி வாய்நீர்
தலையது சுழற்ற லாமே.

தலையது சுழற்றல் காணும்
தான்வரும் நாளே கேளாய்

கொலையது தந்தை தாயார்
கொடுமைசெய் வினையி னாலே
நிலையதாய்க் கரும நோய்தான்
நிலைத்திடுஞ் சிசுவுக் கேதான்
அலையுறப் பிறந்த பிள்ளை
அஃதிரண் டாண்டு பின்பே.

பின்புமே வருகு நோய்தான்
பிலத்ததோர் வினையைக் கேளார்
தென்புடன் தேங்காய் வாழை
தித்திப்பு வடைபா யாசம்
அன்பலாச் சுளையும் மீனும்
அரிசியின் அடையுந் தானும்
நன்பது குழந்தைக் கேதான்
நாட்டிடில் கணந்தா னாமே.

கணம்வரு மாந்தத் தாலே
காதலன் குணத்தைக் கேளாய்
துணம்எட்டு நாளை தன்னில்
துலங்கிடுஞ் சத்தி காணும்
பணவயி றிரைச்ச லாகிப்
பாசிபோல் பேதி யாகும்
வினவழி சுழன்று சோர்ந்து
விடவிடென் றுலரும் நாவே.

நாவதில் சலமி ராது
நடைமுதல் அசதி காணும்
காவது என்று பாலன்
கதறிடும் எடுக்குந் தாகம்
கூவது என்று நாளு
நாளது கோட மாகும்
தானது கணமாந் தந்தான்
தாயினாள் அணுகும் வாரே. *(புத்.477-135)*

தானே தாக மிளைப்புண்டாய்
தங்காப் பொரும லொடுவாந்தி
தேனே வாய்வீர் தலைசுழற்றல்
செத்தார் போலே சோபமுமாய்

பானே வயிறுந் தானிரைந்து
பாசி போல வேகழியும்
மானே சுழலும் நாவுலரும்
மாந்தக் குணத்தின் கணமறியே.
*(கை.பி.98-167-168) (ஏடு.7313-23)*

### பச்சிலைச் சாறு

நொச்சியிலை துளசியிலை முசுமு சுக்கை
நோக்கியே மூன்றுமொரு சமனாய்க் கொண்டு
கூச்சமுடன் பிட்டவிய லாகச் செய்து
சாறெடுத்தே ஒருசங்கு பால கர்க்கே
இச்சையுடன் நான்கொடுக்க மாந்த மேதே
எழிலான மாந்தகண மோடிப் போகும்
கச்சணிந்த பொற்சயில நகிலத் தாளே
கடல்சூழ்ந்த மண்டலத்திற் கருதிப் பாரே.
*(புத்.477-137)*

### 1. விட்டு காந்திக் குடிநீர்

மாந்த கணம்போகும் வல்லப் பொருமல்போம்
சேர்ந்திருமல் போகுஞ் சிலேஷ்மம்போம் - காந்தி
துளசியும் திப்பிலியும் சொல்லும்மா புல்லுரீஇ
களசி எரித்திருந்தக் கால். *(புத்.477-137)*

### 2. புங்கு ஈர்க்கு முடிக்குடி நீர்

புங்குபுளி நொச்சிம்மா வேம்போ டொக்கப்
பொடுதலைவே லிக்கருவேப் பிலைநா ரத்தை
சங்கவுரி பொன்னவரைப் பிடியொவ் வொன்று
தானும்இலை ஈர்க்கெடுத்துச் சட்டி யிட்டு
சங்குரோ கணியுமின் தோம மும் முடிந்து
தான்போட்டுத் தண்ணீரும் நாழி வார்த்து
அங்கெரித்து வற்றமுடித் தம்ம ருந்தை
அரைத்துக்கொடு மாந்தகணம் அகன்று போமே.
*(புத்.477-140-141)*

### 3. நன்னாரிக் குடிநீர்

நன்னாரி யும்சிறு கீரைவனமல்லி நாவல்இண்டு
பொன்னுனாரு சங்கம்வேர் பாவட்டை நீலிபொ ருந்துகொஞ்சி

எந்நாளும் காய்க்கின்ற வட்டக் கிலுப்பை இவைகளெல்லாம்
மின்னார்பிள் ளைக்கீய மாந்த கணம்விரண் டோடிடுமே.
*(புத்.477-139)*

### *வால்மிளகுக் கற்கம்*

இழையும் பூண்டு வால்மிளகு
ஏற்ற கிராம்பு வசம்போமம்
அலையும் செண்பகப் பூவுசமன்
அரிய பொடுதலை தன்சாற்றில்
குழையும் நான்கு சாமமரை
குறிய சுண்டைக் காயளவு
தழையு மந்தச் சாற்றிடுகில்
தைத்த மாந்தக் கணமறுமே.
*(ஏடு.7313-25) (கை.பி.98-168-169)*

வாலரிபூண் டோமம் வசம்புகருஞ் சீரகமும்
சாலகி கிராம்புடனே சண்பகப்பூ - கால்சரியாய்த்
தூக்கிப் பொடுதலைநீர் சேரவரைத் துக்கொடுக்கப்
போக்குங் கணமாந்தம் போம். *(புத்.477-139)*

### *1. வெள்ளாட்டுப் பால் நெய்*

திறமான வெள்ளாட்டுப் பாலுமிரு நாழி
திகழ்விளக் கெண்ணெய் நாழி
திருகுகளி யோர்பலம் திண்டங் கொழுந்துபிடி
செண்பகப் பூம துரமும்
உரமான சாதிக்காய் பத்திரி லவங்கேல
மொருபூ டுவெள் ளுள்ளியும்
ஓதுமிரு சீரகம் வசம்பிலா மிச்சமும்
உறுவெட்டி நன்னாரியும்

சிறுநாக முத்தமொடு பூலாங் கிழங்குடன்
சீரு லவுகோ ரோசனம்
சேர்கடுகு ரோகணியும் கோட்டமுட னேபச்சை
திருநாக ரஞ்ச மனதாய்ச்
சரமாக வேயரைக் காசெடை அரைத்துவிடு
தணலிலெரி பதம் தாக்கித்
தையலே பால்எண்ணெ யுண்டிடிற் கணமாந்தம்
தரணிவிட் டோடி விடுமே. *(புத்.477-135-136)*

## *2. வேலிப்பருத்தி நெய்*

வீச்சம் வேலிப் பருத்திவிரை
வெள்ளுள்ளிச் சாரணை கொம்மட்டி
அச்ச மிவையின் வேருடனே
அழகு லசுண மொடுவசம்பே.
வயம்பு வகைக்கு ஒருகழஞ்சு
வளரும் மேதி நெய்யுரியில்
நசுங்க வரைத்துக் கரைத்தெரித்து
நல்ல பருவ மதில்வடித்து
பிசுங்கு முலைப்பால் தான்கலந்து
பிசகா துள்ளுக் கூட்டிவரில்
நிசமாய்த் தீரு மாந்தகணம்
நேவி யுரைத்தா ரேந்திழையே.
*(கை.பி.98-168) (ஏடு.7313-24)*

வேலிப் பருத்தி சமூலமுடன்
வெள்ளைச் சாரணைக் குட்டிவிளா
மூலி வேளை வேர்வசம்பு
முதிய வெள்ளை வெண்காயம்
கோலி நறுக்கி சாற்மேதி
கொடுத்த வெண்ணெய் தனிலெரித்து
சீல முலைப்பால் தனில்கொடுக்க
சேர்ந்த மாந்த கணம்போமே. *(புத்.477-139)*

## *3. நெய்*

மாந்த கணைக்கு மருந்துகேள்
வசம்பு கடுக்காய் திப்பிலியும்
ஆய்ந்த கருஞ்சீரக மரத்தை
அசம தாகஞ் - சேங் கொட்டை
சேர்ந்த பூலா விருட்ஷமுடன்
சேருஞ் சந்தனம் கொடிவேலி
ஆய்ந்த பருத்தி மாவிலை
ஆவரை யின்கொழுந்து மிகவாமே.

ஆமே சாரணை யின்வேரும்
அளவா யொக்க யொருப்போலே
சமன்கூட்டி மிகவ ரைத்து
தனிநல் லெண்ணெய் தனில்வெந்து

குட்லேகக் காசளவு நன்றாய்
மாந்தமடை படுமே யென்று
குருவுரைத்தார் பொய்யல்லா மெய்யாமே.

*(ஏடு.601-73)*

### *மாந்தகணப் பொருமலுக்குச் சாரணை இளகம்*

விட்டிடுஞ் சாரணை வேர்ப்பட்டை
தட்டி விதமுடனே
சிட்டிடுந் தேசா புரஞ்சமன்
கூட்டிக் கிளர்பொடியாய்
மட்டிடுந் தேனில் இலேகிய
மாக்கி மதலைக்கிட
பொட்டென மாந்த கணத்தில்
பொருமலும் போய்விடுமே. *(புத்.477-141)*

### *1. வல்லாரை எண்ணெய்*

மாற்றிடு பொன்னாங் காணிவல் லாரையோ
டேற்றி டும்புளி யாரைகீழ் வாய்நெல்லி
சேர்த்தி டுந்துள சிச்சாறு புள்ளடி
போற்றி டும்வறட் பூலா தகரையே.

தகரை ஓரிதழ்த் தாமரை புங்கிலை
அவரை தூதுளை யம்மானாம் பச்சிலை
துவரை பீர்க்கிலை சூரைவெண் ணொச்சிலை
அவரை செந்நா யுருவிகா வேளையே.

வேளை முத்திருக் கன்செவி ஆடுணாப்
பாளை வேலிப் பருத்தி மிளகுதம்
காளி ஆடாதோ டைக்கரு நொச்சினா
வேலை சின்னிவேம் புவட்டப் புல்லிதே.

புல்லி துகணப் பூணட் நுணாத்துளிர்
சொல்லி துபரி வாலிச் சிறுகீரை
வெல்லி துமுசுக் கைவேர் முருங்கிலை
சொல்லி துபொன்மு சுட்டையும் பாங்கிடே.

பாங்கி டத்தி நரிப்பயற் றங்கொடி
நீங்கி டத்தி நிலக்குமி ழாவரை
வேங்கி டத்தி சுரைவிட்ணு காந்தியும்
தாங்கி டத்திசங் கங்குப்பி தாக்கிடே.

தாக்கி டாய்சங்கு தாளிநா வல்துளிர்
மேக்கி டாய்கண்டங் கத்தரி வில்வமும்
தேக்கி டாய்சீந்தில் குட்டிவி ளாசமன்
ஒக்கி டாய்இடித் தோர்படிச் சாறுமே.

சாறுஞ் சீரகம் கிராம்பு வசம்பொடு
சேறு உள்ளியுந் திப்பிலி பற்படம்
ஊறு மேகடு ரோகணி மஞ்சளும்
பாரும் பூவந்திப் பழமும் ஈருள்ளியே.

உள்ளி டாமைது டுங்கருஞ் சீரகம்
வள்ளி டாழி நுரைவகைக் கேபலம்
தெள்ளி டாட்டிச்சிற் றாமணக் கெண்ணெய்சேர்த்
துள்ளி டாய்ப்படி தோற்றிரண் டேற்றிடே.

ஏற்றிட் டேளித் தேயிறுத் தேயுடன்
தேற்றிட் டேழ்தினத் துட்டெடை உள்ளுக்கு
வாற்றிட் டேகண மாந்தம்ஓர் ஏழையும்
சாற்றிட் டேபுளி உப்பிலை சுண்டிடே.

### *2. வல்லாரை எண்ணெய்*

அறியும் பிரமி வல்லாரை
அரிய மொசுக்கை நீர்முள்ளி
சிறிய துளசி நெய்சிட்டி
சேருங் கோழி யாவரையும்
பறியு மணத்தக் காளியிலே
பண்பாய் வகைக்குப் பிடியொன்று
அறியப் பிழிந்து சாறுழக்கு
ஆம ணக்கு ரசமுறியே.

உரியீ ருள்ளி யதின்சாறு
 உயர்ந்த பேய்க்கு மட்டிக்காய்
வருமே சாறு படிகாலும்
 வசம்பு கருஞ்சீரம் வெள்ளுள்ளி
கருமே கார்கோ லரிசிவகை
 கனத்த விராக னெடையொன்று

தருமே யரைத்துக் கலக்கியதில்
 தக்க பதத்தில் காய்ச்சுவதே
காச்சி வடித்துக் காசெடைதான்
 காணு மிச்சா பத்தியமாய்
வாச மருந்து யிவைசெய்யில்
 மாந்தக் கணமுந் தீர்ந்துவிடும்

*(கை.பி.98-168) (ஏடு.7313-23-24)*

வல்லாரைப் பிரமிசெருப் படைநீர் முள்ளி
 மணக்குமணித் தக்காளி முசுமு சுக்கை
சொல்லெருமைத் தக்காளி துளசி தானும்
 துடிகோழி அவரைநெய்ச் சிட்டி யெல்லாம்
நல்லதோர் வகைவகைக்குப் பிடியொன் றாக
 நவையில்லா இலைகளெல்லாம் கொண்டு வந்து
கல்லதுவைத் துப்பிழிந்து படிகால் சாறு
 கனமான எண்ணெய்ப்படி அரைய தாமே.

அரையதாம் தும்மட்டிக்காய் துவைத்த சாறும்
 அரியவெண்கா யச்சாறும் ஒருசெ ரங்கை
நிரையதாம் விட்டெல்லாங் கலந்து காய்ச்சி
 நேர்க்கடுகு பதமாகும் போதி லேகேள்
கரையதாம் கார்போக அரிசி பூண்டு
 கருஞ்சீரகம் வசம்புவகை வகைக்குத் தானே
விரையதாம் வராகனொன்று நறுக்கிப் போட்டு
 மெழுகுபத மானவுடன் இறக்கி டாயே.

இறக்கி யேவடி கட்டி இதமுஞ்
சிறக்க வேகொடு செம்மலுக் கன்புடன்
வறக்கி டும்நல்ல மாந்த கணமுடன்
சிறக்கும் அட்சரம் தீருமி துண்மையே.

*(புத்.477-140)*

### 3. புள்ளடி எண்ணெய்

புள்ளடிப் பொடுத லைச்சாறு
புசிப்பதோர் தகரைச் சாறு
மெள்ளமி ளகுதக் காளி
மிகுகரு நொச்சில் பாசி
வெள்ளைப்பூண் டும்வ சம்பு
வெண்காயச் சாறு தானும்
தெள்ளிதாய்ச் சமன்கொண் டெண்ணெய்ச்
சேர்த்தெரி பாயுங் காலே.

காலமே இந்த எண்ணெய்
கடியசாய்ங் காலந் தன்னில்
சீலமாஞ் சுக்கோ டோமம்
சேர்ந்தபொன் முசுட்டை வேளை
ஏலமாம் நாட்டு மூலம்
இதமாய்த்திப் பிலியுங் கூட்டி
மேலநீர்க் காய்ச்சிக் கொள்ளக்
கொடுமாந்தக் கணமும் போமே. *(புத்.477-138)*

### 4. மருள் எண்ணெய்

போகவே இன்னும் புகலுவோங் கேளு
ஆகம ருளின்கி ழங்குடன் உள்ளி
தாகவே நிம்பச் சாறது வாங்கி
ஏகவே எண்ணெய் எரித்துநீ உண்ணே.

உண்ணக் கணங்கள் ஓடும் மெய்யா
மண்ணில் மாந்த கணநோய்ச் சேத்துமம்
கண்ணிற் காணா கதறிடும் பாரு
எண்ணுமே இந்த எண்ணெயைச் செய்திடே.
*(புத்.477-140)*

### 5. எண்ணெய்

பேய்ச்சுரைவே ராறுபலங் கழுவிச் சற்றே
பெருந்தணலி லேவெதுப்பிப் பிடித்தி டித்த
தாய்ச்சாறு பிழிந்து கொண்டச் சாறுழக்கிட்
டான்மிளகும் பொடித்திட் டதனிற்கூட்டிக்
காய்ச்சுகுழம் பாகுபதத் தினிலி றக்கிக்
கரத்திலொரு காசெடை மட் டா யெடுத்துத்

தோய்த்ததயி ருடன் கலந்தது கொடுக்க மாந்தத்
துடநோய்கள் கணநோய்கள் துலைந்துபோமே
*(சர.வை.மு. - 126)*

### *6. நுணா எண்ணெய்*

விளக்கெண்ணெய் ஒருநாழி நுணாயிலைச் சாறு
விருப்பமுடன் ஒருநாழி தானே ஆகும்
இளக்கமாய் ஈருள்ளிச் சாறு நாழி
எழில்வில்வத் தின்கொழுந்து பிடியி ரண்டு
துளுக்கநற் சீரகம் இரண்டு விராகன் தானும்
துவர்க்கடுக்காய் நாலதுவும் பொடியே செய்து
விளக்கமாம் வெண்காரம் வராகன் ரண்டு
விபரமுட னேபொரித்து அதனிற் கூட்டே.

கூட்டியே கொதிக்கையிலே சரக்கைப் போட்டுக்
குணமாகப் பதம்பார்த்து தானி றக்கி
ஆட்டியே வடித்துவைத்துக் கொண்டு நீயும்
அழகாகச் சங்கெடையாய்ப் புகட்டி வந்தால்
வாட்டியே எழுந்தபொல்லா வியாதி யான
மாந்தகணஞ் சொல்லாமல் ஓடிப் போகும்
காட்டியே கைப்புளி கவிச்சி றைச்சிக்
கருதாமல் பத்தியத்தில் தாயை வையே.
*(புத்.477-140)*

### *1. பாலசஞ்சீவி மாத்திரை*

சீர்கொண்ட துத்தம் வெங்காரமொடு ரோசனம்
திகழ்கின்ற நற்கொழுஞ்சி சிக்குமலம் வீழ்கடுகு
ரோகணி கழஞ்சுதிரிசேரவே சேர்த்து நன்றாய்
வேர்கொண்ட சத்தியிலை நீர்விட் டரைத்துமே
மெள்ளஒரு சாமமட்டும் விசைகொண் டழுத்தி
அரைசிறுபய றுபோலவே மேன்மைபெறவுண்டை செய்து.
கார்கொண்ட குழலழகு பெண்ணணங் கேயழற்
காய்ந்தநீர் துணைமருந்தாம் கற்கம் அறிந்தல்ல
தொருபத்திரிப் பிட்டிலுங் கன்னிஇள மாதுசித்ர
வார்கொண்ட மென்முலைப் பாலிலும் இடுவதிது
வன்பிணிச் சகலசுரமும் வயிறுளைவு பொருமிங்
கணமாந்தமும் வாராது வாலசஞ்சீவி யென்றே.
*(புத்.477-137)*

### 2. பாலசஞ்சீவி மாத்திரை

திரிகடுகு வெங்காரஞ் சாதி லிங்கம்
சிறந்திடவே யைமருந்துஞ் சமன தாக
நெறிபடவே யெலுமிச்சம் பழத்தின் சாற்றால்
நெடுவரைத்தே ஒருசாம நிறையதாகக்
குறியுடனே யுண்டதனைப் பயற்றிற் பாதி
குளிர்ந்தநிழல் தனிலுலர்த்திக் குழவிக்கீய
மறிபடவே பாலசஞ் சீவி யென்று
வகுத்துரைத்தார் மலையின்முனி மண்ணுள்ளோர்க்கே.

மலையின் முனி தானுரைத்த வகையே தென்னில்
மாந்தகண சுரதோடம் வயிற்றி னோட்டம்
கொலைசெய்யும் பித்தமுதி ரிருமல் வாந்தி
குலைத்திடுநோ யுள்ளதுவுங் குடிதான் போக
நிலைபெறவே பத்திரியைப் பிட்ட தாக்கி
நீர்வாங்கித் திரிகடுகு கற்க மாக்கி
உலையுயர்ந்த பிழிநீரில் கற்கத் தோடே
உண்டையொன்று தானெடுத் துரைத்தி டாயே.

உரைத்திடவே சுரமிருமல் கணநா முள்ளு
முகந்துகோ ரோசனமு மொக்கக் கூட்டிக்
கரைத்திடுங்கா லிரத்தகண மூலங் கண்டால்
கடுதவே சாதிக்காய் புளிவித் தோடே
அரைத்திடுமே யுருண்டையொன்று சுக்குங் கூட்டி
அருந்திடவே வில்வப்பழச் சதைக்குள் வைத்து
வரைத்திடுமென் றருள்முனிவன் விபரஞ்சொன்ன
வாலசஞ் சீவியென்று வகுக்க லாமே.

வகுக்குங்கால் பத்திரிதன் வகையைக் கேளாய்
மணித்துளசி செம்முள்ளி ஆடா தோடை
பகுத்திடுவாய் தூதுவளை விஷ்ணு காந்தி
பண்புசெறி கண்டங்கத் திரியி னோடு
நிகழ்த்திடுமே வெதுப்படக்கி பேய்ப்பு டோலும்
நின்றசங்கின் இலைநொச்சி நிறைதான் கூட்டிச்
செகுத்திடுமே சுவாசசுர கணதோ டங்கள்
தெரிந்துரைத்தார் மாமுனியுஞ் சீவி யென்றே.

*(புத்.477-138)*

## முக்குக்கணம் - குறிகுணம்

சோகமாய் நாக்கு வெந்து
சுரமுடன் தலையும் நாணி
தாகமாய் வயற்றைப் பற்றி
தான்ரெத்த முஞ்சீதம் விழும்
பாகையா லுறுப்பு தள்ளி
ஆபத்து படுமே யாகில்
தோகைநீ கேளாய் முக்குக்
கணமெனச் சொல்லு வாயே.

*(ஏடு.362-39,941-30) (புத்.477-150)*

பகர்வேன் வாந்தி யொடுபொருமல்
பற்றுஞ் சுரமும் தலைவலியும்
நிகர்வேர் வாந்தி நாவறட்சை
நீண்ட சந்து பொருத்துளைவு
தகர்வேலி கழிச்சல் ரெத்தமொடு
தக்க சீதச் சலமுடனே
முகவி மண்டி தள்ளலும்போம்
முலைச ரியாயுண் டிடுமே *(கை.பி.98-183)*

கொள்ள முக்குக் கணக்குணங்கேள்
குழந்தை நாவு மிகவெந்து
தள்ளாச் சுரமுந் தலைவலியுந்
தாக முடனே நாவறண்டு
மெள்ள வயிற்றுக் கடுப்புடனே
மேனி கறுத்து ஆசனமும்
விள்ள இரத்த மாய்விழுந்து
வீணில் தேகம் வற்றுமென்றே. *(புத்.572-6)*

இருந்ததொரு முக்குக்கணத் தியல்பைக் கேளா
யினியமல முக்கிமுக்கி யடியுந் தள்ளி
வருந்திமலத் தோடிரத்தங் கூடச் சேரும்
வாந்திசுரந் தாகமுக மினுப்பாய் நிற்குந்
திருந்துமுலை யுண்ணாது நாக்குவேகுஞ்
சிறந்ததுடை வலிக்குந் தலை கீழாகும்
விரிந்துகைகால் குளிர்ந்திருக்கும் பவளவாய்தான்
வெங்கடுப்பா முடலிளைக்கும் வித்தை தானே

*(சர.வை.மு.-29)*

கக்கு முலையும் உண்ணாது
காலுங் கையுங் குளிர்ந்திருக்கும்
சொக்கும் உடலும் கண்சோரும்
தொக்கு மிளைக்கு முடல்கறுக்கும்
நிற்குங் கடுக்கும் ஆசனவாய்
நெருப்புப் பட்டாற் போல்எரியும்
முக்குக் கணத்தின் குணமிதென்று
மொழிந்தோம் இதனைப் பாராயே. *(புத்.477-156)*

அருக்கிய நீரு முண்டாய்
அபானத்தில் வலியுண்டாகி
நெருக்கிய மலமுந் தீய்ந்தது
நிறைந்தசீ தரத்த முண்டாய்
பெருக்கிய திணறல் முக்கல்
பிரட்டலு மிகவுண் டாகு
மெருக்கியிக் குணமே கண்டா
லிதுமுக்குக் கணமென் பாரே. *(ஏடு.424-23)*

### *கற்றாழைச் சாறு*

கற்றாழை கொண்டு வந்து
கழுவின சோறெ டுத்தே
எற்றான வெந்த யத்தோ
டெலுமிச்சம் பழச்சா றிட்டுச்
சுத்தமாய்க் காய்ச்சிப் பின்னைச்
சுகம்பெறப் பால கர்க்குச்
சற்றுநீ கொடுத்தால் முக்குக்
கணமது தரியா தன்றே.
*(புத்.572-6-7,477-157,476-92,476-93-94)*

### *1. இண்டங் குடிநீர்*

பொரித்துநீ யிண்டந் தண்டைப் பொறுமையா யூதிப்போட்டுத்
தரித்துநீ யதனிற் போட்டுத் தண்ணீகாற் படிதான் வார்த்து
வறுத்துநீ யெட்டொன் றாக்கி வார்ப்பது மூன்று வேளை
தெறிக்குமே கணமுன் சொன்ன தெல்லாந்தா னோடிப் போமே

ஓடிடு மைந்து வேளை உறுதியாய்க் குடிக்கச் சொல்லு
வாடிடு முதய வேளை வசனித்த வெண்ணெ யைநீ
ஆடிடு மவுழ்தந் தன்னால் அடங்கிடும் நோயெல் லாந்தான்
தேடிடும் தருமம் வந்துச் சிக்கென வெய்துந் தானே *(புத்.477-157)*

### *2. குடிநீர்*

ஆலாவரை விடத்தலை வாலாகிக் கருவேலு
மாளகௌமுந்து பட்டை நல்லகத்திப் பட்டை
சேலாதெங்கு மொக்குடனே சமன்தேடி குடிநீராய்
சீரகம்விடைய மாசிகிராம்பு தினஞ்சா திக்காயும்
மேலாதியில் வாட்டி விளாவின் மேவுமதின் பிசினும்
மேலுமிதைப் பொடியாக்கியே நீரில்மெத் தக்கரைத்து
பாலகர்பேதி மூலகணத்துடன் பாரியல் முக்கல் சுரம்
மறுசட்டி மாத்தியிதைப் பாலர் குடித்திடவே.

*(ஏடு.362-39)*

### *1. கத்தூரி எண்ணெய்*

ஏகநாயகன்றன் இணையடியைப் போற்றி செய்து
வாகுடனே எண்ணெய் வசனிப்பேன்-யோகமுள்ள
கோரோ சினையும் கோஷ்டம் அதிமதுரம்
சீரந் திப்பிலி தேவதாரமுடன்-பேரான
சந்தனமும் ஏலம் தன்னுடனே மாசிக்காய்
வெந்தயமுஞ் சுக்கு வெள்ளுள்ளி-அந்தமுள்ள
பேரான கத்தூரிப் பெருவசம்பு ரோகணியும்
பாரமுள்ள மூங்கில் பச்சைத்தோல்சீராய்
வகைக்கு வராகனெடை வாடநிறுத்து வருத்துத்
தொகையாய் அரைப்பதற்கு சொல்லக்கேள்-தகைமையுடன்
எருமுட்டைப் பீநாறி இசைந்ததொரு சாற்றில்
வருந்தி அரைத்து வழித்ததனைத்திரும்ப
விளக்கெண்ணெய் ஓர்படியும் விட்டெரித்துத் தானிருந்து
மலைக்காமல் நோய்க்கெல்லாம் வைப்பாய்-கலக்கமற
பிள்ளைப் பிணிக்குப் பேராகத் தான் கொடுக்க
உள்ளநோய் போகும் ஓதக்கேள்கள்ள
.... .... .... ....
.... .... .... ....
.... .... .... ....
முக்குக் கணமும் முதிர்ப்பால் கிரிச்சினமும்
.... .... .... அக்கணமே
இத்தனை நோயெல்லாம் இருப்பிடத்தை விட்டுவிட்டு
கத்திவிழுந் தோடுங் காண். *(புத்.477-56)*

### *2. எண்ணெய்*

முருங்கைகழற் கொடிவறப் பூலாவுடன்சா
றணைக் கொழுந்து மூக்கரட்டை
தருங்கொழுந்து மதிகாலந் தனிற்பறித்து
வசம்புடனே தட்டிக் கொண்டு
யிருந்திடுநல் லெண்ணெயிலே யிட்டுமிள
கும்பொடித்திட் டிதையொன்றாக்கி
வருங்கதிர்முன் னாகவைத்து நாலுகா
சளவுகொள்ளிம் மருந்தைத் தானே.

மருந்துடனே கடுகினையுங் கூடவரைத்
துக்கொள்வாய் வசம்போடுள்ளி
யரிந்துபீர்க் கிலையுடனே நறுக்கிமேனி
யிற்றுவளையா யிட்டிருதல்
மருந்தினையோர் காசளவு தானுள்ளே
புகட்டவுமென் றாரிவ்வையத்
திருந்தரசா ளுஞ்சரபேந் திரரென்ன
யுவ்வுலகோ ரியம்புவாரே *(சர.வை.மு.-110)*

### *3. வில்வ எண்ணெய்*

வற்ற வில்வம் விலாமிச்சு
வகையாய் விட்டுணு காந்தியுடன்
முத்தம் ஓரிதழ்த் தாமரையும்
முருங்கை வித்துத் துளசிவிதை
சுற்ற கோங்கின் பிசினோடே
கனத்தா வரைப் பிசின்கூட்டி
அத்தங் கோஷ்ட மதுரமுடன்
அக்கார காரந் தாளிசமே.

தாளிச மெண்ணெய்நாழி
தார்பெறு மருந்தெல் லாந்தான்
வாளிசம் வறுத்தி டித்து
வகைக்கொரு பலமே சேரு
மாளியம் குமரி நீர்கால்
வகைமுலைப் பால்கா லாகும்
ஆளிசம் படிய ரைக்கால்
அழகுள நிம்பச் சாறே.

சாறிது எண்ணெ யென்றாய்ச்
    சமரசங் கலந்து கொண்டு
வாரிது அடுப்பி லேற்றி
    வகையதாய்த் தீயை மூட்டிக்
காரிது கடுகு கண்டால்
    கடுகநீ யிறக்கிக் கொண்டு
மாரிது வடுகன் பூசை
    மனோன்மணிப் பூசை செய்யே.

செய்துநீ யெடுத்துக் கொண்டு
    செயம்பெறத் துட்டெ டைதான்
வைதுநீ வைத்து வாயில்
    வகைமூன்று நாள்தான் வாரு
கைதுநீ யிண்டநந் தண்டைக்
    கண்டமாய் நறுக்கிக் கொண்டு
.... .... ....
    .... .... ....
வாடிடு முதய வேளை
    வசனித்த வெண்ணெயைநீ
ஆடிடு மவுழ்தந் தன்னால்
    அடங்கிடும் நோயெல் லாந்தான்.

*(புத்.572-6-7,477-156-157)*

## *4. எண்ணெய்*

இண்டு தூதுளை மேனி
    யிசங்கின் குப்பி பூலா
கண்டம் பூவரசு தோடை
    கற்றாழை படர்ப ருத்தி
விண்ட சாரணை பிரமி
    வேளை யும்நரிப் பயறும்
துண்டகல யிடிபி ழிந்து
    துகைவகைச் சாறு நாழி.

சாறுடன் ஏரண் டெண்ணெய்
    தானிரு படிவ சம்பு
கூறுடன் லசுண மோதம்
    கோரோசினை செண்ப கப்பூ

வீறுடன் சாதி தான்றி
　விளம்பிய கரிய சீரம்
வாறுட னிதுகள் தானும்
　வகையரைப் பலம தென்றே.

அரைத்தெல்லாம் கலந்த போது
　அடுப்பினி லேற்றிக் காய்ச்சி
உரைத்ததோர் பதத்தைக் கண்டு
　உபாயமாய் வடித்துப் பின்னே
கரகத்தி லடைத்து வைத்துக்
　கரண்டி யின்னவே யூட்ட
வருத்தமாங் கணமீ ரெட்டும்
　மாந்தமு தோஷம் போமே. *(கை.பி.98.183-184)*

### *மாத்திரை*

மாந்துளி ரிலுப்பை நாகல்
　மாதுளை கீழ்காய் நெல்லி
சேர்ந்தநீர்ப் பூலா நெல்லி
　சிறியபுள் ளடிவல் லாரை
போந்தபேய்மிரட்டி நூணா
　புகழ்வறப் பூலா ஞாழல்
சார்ந்ததோர் வகைக ளெல்லாந்
　தளிருடன் கொழுந்து வாங்கே.

வாங்கிய கொழுந்தை யெல்லாம்
　வளம்பெற விட்டு நன்றாய்
காங்கறப் பிட்டு வைத்துப்
　பகர்சிறு நாகற் பூவே
மோங்குதற் கோலஞ் சுக்கு
　முயர்சிறு லவங்கப் பட்டை
தாங்கிய கிராம்போ டேலம்
　தாளிசஞ் சாதிக் காயே.

கண்டிடுஞ் சரக்கை யெல்லாங்
　கணம்பெற விடித்துக் கொண்டு
நன்றுறக் கிளிதான் கட்டி
　நடுவினில் வைத்து மூடிச்

சென்றுபிட் டவிய லாக்கித்
திடம்பெற பிழிந்த சாற்றால்
பண்டுள்ள மருந்தை யெல்லாம்
பதம்பெற வரைத்துக் கொள்ளே.

அரைத்திடு மருந்தை யெல்லாம்
அடிவுடன் குன்றி போல
நிரைத்திடுங் குளிகை யாக்கி
நிழல்தனி லுலர்த்திக் கொண்டு
அரைத்துபிட் டவியற் சாற்றி
லுரைத்துண்ண விரத்தஞ் சீதம்
புரைத்திடு கணங்க ளெல்லாம்
போகுமென் றருளி னாரே. *(ஏடு.424-24-25)*

### *மருந்து*

கோழியா வரங்கொழுந்தோர் பிடிபறித்து
வசம்புள்ளி கூடக்கூட்டி
யாழுங்கல் வத்திடையிட் டரைநறுக்கித்
துவளையுடம் பதனிலிட்டுச்
சாழிகைக் காசொன்றள வுதானுள்
ளேபுளிதான் கைப்பாகா
தேழுநா ளினிலிந்த முக்குகண
மகலுமென வியம்பலாமே. *(சர.வை.மு. - 110)*

### *நசியம்*

மிளகொடு வசம்பு கூட்டி
வெதுப்படக் கிலையுஞ் சேர்த்து
வளமுட னிடித்துப் பச்சை
சாறது முக்கால் வார்த்து
தளமுடன் வதக்கி யந்தச்
சாறது மூக்கில் வார்க்க
உளமதை விட்டு முக்குக்
கணமகன் றோடிப் போமே. *(ஏடு.424-23)*

### *முட்டிலோகக் கணம் - குறிகுணம்*

தலையும் கனத்து குரலடைத்து
தறாகா மூக்கில் நீரோடும்

மலஞ்சே ருடலில் சுரங்காயு
முதாம வறண்ட குப்பிசமாய்
குலயா முட்டி லோகத்து
குணத்தி னிதுவே யறியவென்று
கலைசேர் வல்ல தமிழ்வாணர்
கண்ட பேரும் பேசுவாரே. *(ஏடு.601-71)*

### *மூலகணம் - குறிகுணம்*

சீதமும் ரெத்தமு மேகழியுந்
தினமு மாசனங் கடுத்துளையும்
மீதுங் காய்ச்சல் வயற்றிரைச்சல்
விடாதே தலைநோ யதிகமதாம்
பேதப் படவே முகந்தானுங்
கறுக்குஞ் சிவக்கும் பலவிதமாய்
ஓது முறுப்பு மிகத்தள்ளும்
உமையே மூலக் கணத்தடவே.

*(ஏடு.941-32,362-40)*
*(புத்.572-13,477-157,476-90)*

அதீதம்பார் மூலகண மேதென் றக்கால்
அத்தியிலே வாதபித்த மதிக மாகி
அதீதம்பார் சீதமுடன் ரத்த மூற்றும்
அதிலுளச்ச லாசனத்தில் காற்று மோங்கும்
அதீதம்பார் சுரமுடனே வயிற்றி ரைச்சல்
அதிகதலை நோய்வரும்வி டாது பாராய்
அதீதம்பார் சண்டாள மூல ரோகம்
அதட்டுமே பத்தாண்டு மட்டும் பாரே.

*(புத்.477-157)*

கொள்ளவே மூலத்தின் கணத்தைச் சொல்வேன்
கொடியமலம் பலநிறமாய் விழுந்து மென்மேல்
துள்ளவே யிரத்தமது மிகுந்து வாய்வு
தொந்தமா யாசனத்திற் கடுப்புண் டாகி
வெள்ளையாய்ச் சடலமது வெளுத்து தாகம்
வெப்பமொடு தலைவலியு முகமுஞ் சூம்பி
உள்ளுகின்ற துடையதுவும் வற்றி நன்றா
உணவுண்ணா திளைத்துப் போ முடலுந்தானே

*(சர.வை.மு-29)*

### *சாறு*

கற்றாழை கொண்டு வந்து
கருவினாலச் சாற தாக்கி
இத்தநாள் வெந்த யத்தோ
டெலுமிச்சஞ் சாற்றை விட்டு
சத்தமாய்க் காய்ச்சிப் பின்னை
சுகம்பெற பால கர்க்கு
சத்துநீர்க் கொடுத்தால் ரெத்தக்
கடுப்புகள் தரியா தென்றே. *(ஏடு.362-41)*

### *குடிநீர்*

ஆலா வாரை விடத்தேர் நாவ
லாகிய கருவேலின் ஆன கொழுந்தும்
பட்டையுநல் லத்திப் பட்டை யுடன்
சேலாத் தெங்கின் மொக்குட னேசமன்
தேடிக் குடிநீராய் சீரகம் விடய
மாசிகி ராம்பு தின்னுஞ் சாதிக்காய்
மேலாந் தீயில் வாட்டி விளாவின்
மேவுந் தன்பிசினும் மேலு மிதைப் பொடி
யாக்கிய நீரில் மெத்தன வேகரையாய்
பாலாய்ப் பேதி மூலக ணத்துடன்
.... .... பாறிடு மேமது
சட்டியில் மாற்றிப் பாலர்க் கீந்திடவே.
*(புத்.477-159,476-91)*

### *1. பெருமரம், பருத்தி, ஓதி, மாதுளைக் கற்கங்கள்*

பெருமரத்துப் பட்டைதனை வெள்ளாட்டுத் தயிரில்
பிறகரைத்து மேயதனைக் கொடுக்கத் தீரும்
திருவான பசுப்பாலிற் பருத்திப் பிஞ்சும்
சீரகமு மரைத்துமே கொடுக்கத் தீரும்
பரிவான சாறதனிற் சீரகமும் கூட்டிப்
பண்புடனே வழங்கிடவே தீரும் பின்னர்
பெருமோதியம் பட்டைபா லினிலே யீக
பிறங்குமா துளம்பிஞ்சுந் தயிரு மீயே.
*(புத்.477-158,476-91)*

### 2. கற்கம்

சாதிக்காயும் பத்திரி கிராம்பு
 சன்ன லவங்க முடன்தானு
மாசி யேலம் சீரகஞ்
 சமநீ ருள்ளி யுடன்பாதி
காசெடை யளவாய் ஆவாரைப்பூ
 வகையுடனே பகருங் கருவேலங் கொழுந்தும்
நிம்பநீர் பாக மரைத்து
 வேதிக்காய் நிம்பச் சாத்தில்
விட்டிரு போதுண் ணவே
 வெள்ளேச் சீயும் மூலகணமும்
வேப்போதே ஓடி விடும்
 சீதக்காரி ரெத்த கணமுஞ்
சீறா வயிறுக டுப்புளது
 தேவ நோய் போகுமென்று
செப்பி விட்டா ரவோ. *(ஏடு.362-41)*

### 3. கற்கம்

ஓடும்வில்வ பத்திரிவேர் உற்றகரு வேல்கொழுந்து
நாடுதனில் நிம்பவிதை நற்சீரம்-காடுவளர்
ஆவாரம் பூவரிசி அஞ்சாதி பத்திரிக்காய்
தேவார் கிராம்புடனே சேர்.

சேருமின்னார் பாலில் சிறுகொட்டைப் பாக்களவு
கூறும் படியரைத்துட் கொண்டாக்கால்-ஆறும்
.... மூலகணம் .... ........ ........... ....
பெற்ற சிறுவோர்க்குப் பேசு
*(ஏடு.362-50) (புத்.477-162,476-98)*

### ஏலாதி வடகம்

நின்னேல மிம்பவிதை சேர்ந்தசிறு மாச்சுக்கு
மின்னேகேள் வெற்றிலையின் மேற்காம்பு-நன்றாய்நீ
தேசிப் பழச்சாற்றில் செப்பமுட னேயரைத்துக்
காசளவு வில்லைசெய்வை காண்.

செய்யும் படியரைத்துச் சேர்ந்தவித மேழுதரம்
நெய்யிற் புடம்போட்டு நேர்த்தியாய்த்-தையவே

பாலிலுண்ண வேகடுப்பு பாலகர்க்குச் சீதரத்தம்
மூலகண மோடுமென்றார் முன்.

*(ஏடு.362-49) (புத்.477-159,476-91)*

### *அதிவிடைய இரசாயனம்*

பார்க்கவே யதிவிடயம் கடுக்காய் சுக்கு
பறங்கிச்சக் கைகசகசா விலாமிச் சோடு
பார்க்கவே சந்தனத்தூள் சாதி பத்திரி
பண்பான நெல்லியொடு சிற்றா முட்டி
பார்க்கவே செம்பருத்தி வில்வ வேரும்
பதமாக வகைக்குப்பலம் நிறுத்தி டித்துப்
பார்க்கவே சூரணித்து வைத்துக்கொண்டு
பண்பான கற்கண்டு பலமி ரண்டே.

பலமிரண்டா மைந்துபல மாவின் நெய்சேர்
பாலிகையி லேற்றுசட்டி நெய்யை வார்த்துப்
பலமிரண்டாங் கொதிக்கையிலே மருந்தைப்போடு
பதமாகச் சீரகமும் பலந்தான் போடு
பலமிரண்டாங் கற்கண்டு பொடித்துத் தூவு
பதம்பார்த்துக் கிண்டிவரில் கிருத மாகும்
பலமிரண்டா மிம்மருந்தை யிறக்கிக் கொண்டு
பரிவுடனே பூசித்துப் பணிந்து போற்றே.

பணிந்துமே பாக்களவி லுள்ளே கொள்ளு
பண்பாக வேழுநா ளுண்ணும் போது
பணிந்துமே யோடிவிடு மூலகண மெல்லாம்
பதறாதே பத்தியந்தா னிச்சா பத்தியம்
பணிந்துமே முன்சொன்ன ரோக மெல்லாம்
பஞ்சுபோல் பறந்துவிடும் பாரிற் பாரு
பணிந்துமே யிந்நூலைப் பணிய வேணும்
பார்ப்பதுவு மிந்நூலைப் பாரு பாரே.

*(புத்.572-14,477-157,476-90)*

### *கீழாநெல்லி எண்ணெய்*

ஆமணக்கில் நெய்நாழி ஆனபசுப் பால்நாழி
தாமணக்கு மேஅரைக்கால் தான்கீழ்க்காய் நெல்லியின்சாறு
வாய்மணக்கும் மேல்மதுரம் வாய்த்தகடு தான்றிசுக்கு
பூமணக்கும் வேர்காந்தி பொன்துளசி தூதுவளை.

வளையாம் பசரையுடன் வாகுபட வேசேர்த்தே
இளநீர் தனிலரைத்தே எண்ணெய்தனில் விட்டெரித்துக்
கிளர்அன்னம் உண்டதன்மேல் கேளுங் குடித்துறங்கக்
களையாக வேபேதி காலமே தானாகும்.

ஆகும் .... .... ....
.... .... .... ஆலகணம்
பாகுமொழி மாமயிலே பத்தியாய்த் தீருமென்று
தோகைஉமை யாள்பாகன் சொன்னார் முனிவோர்க்கே.
*(புத்.477-150)*

### *பழம்பாசித் தயிர்*

பழம்பாசி சமூலமுடன் வெள்ளாட் டுப்பால்
பாங்குடனே நன்றாகப் போட்டுக் காய்ச்சி
செழும்பாக வெந்தபின்பு கோது நீக்கித்
தேசியெனும் பழச்சாற்றைக் கூட விட்டுக்
குழம்பாக விழுந்தயிரைக் குடிக்கும் போது
குணமாகு மூலகணங் கோதை கேளாய்
அழங்குகரு வேல்பட்டை தண்ணீ ரோடே
அதிமதுரஞ் சீரகமு மேலங் கூட்டே.
*(ஏடு. 941-32,362-40) (புத்.477-158,476-91)*

### *1. பருத்திக்காய் மருந்து*

பருத்திப் பிஞ் சாதிக்காய்
பகருங் கிராம்பு மதிவிடைய
மரைத்து அசம தாகமுடன்
அளவா யிலந்தைத் தம்பலமுங்
கருத்தாய் சமனாய் நேகவரைக்கத்
தயிர்தேன் கலந்து கொள்ள
வருத்த மான மூலகணம்
.... .... மாறிடுமே. *(ஏடு.362-40)*

### *2. மருந்து*

அன்னமும் நெய்யும் பாலும்
அடிவியல் பழகுங் கடலை
பின்னையும் பயிறு தேங்காய் வெல்லம்
பெரியதோர்க் கதலிக் காயும்

தின்னிக்கால்க் குளிரும் .....
 தீயென வெதுப்பு மீறாய்
ஒண்ணிலாற் பிள்ளைக் கம்மா
 உகந்துநீர் காருங் கண்டீர். (ஏடு.362-41)

### மூலரத்தகணம்

இதுவே கேளாய் பிறக்கெண்ணெய்
 ஏற்கப் படிதா னொன்றாக
மெதுவாங் குமரி நிம்பமுடன்
 வேண்டு மீருள் ளியின்சாறும்
அதுவே வகைக்குக் கால்படிதா
 னாவின் பாலும் படியரைதான்
மிதுவே விசைக ளொன்றாக்கி
 மீறுங் கற்கந் தனைக்கேளே.

கேளே கோட்ட மதிமதுரம்
 இளகுஞ் சண்பகப் பூவேலம்
நாளே சன்ன லவங்கமுடன்
 நன்றாய் வகைக்குக் காற்பலமாய்த்
தூளே யாக்கிக் கலந்துவிடு
 சொன்னோம் வெந்தய மோர்பலத்தை
ஆளே யிதனை யுடையாம
 லரைத்தே யதிலே கலக்கிடுமே.

இடுமே யதனை யடுப்பேற்றி
 யிறக்கு மெழுகு பதமானால்
ஆடுமே யெண்ணெ யாறியபின்
 அடையா யொருசிறு கரண்டிநிறை
கொடுமே மூல ரத்தகணம்
 .... .... ....
பிடுமே .... ....
 வேறே மருந்து வேண்டாமே.

(புத்.477-162,476-95)

### மேகக்கணத்திற்கு நெய்

உற்பனமாம் நெய்யொன்று சொல்லக் கேளு
 உய்ந்திடுந் தேங்காயெண்ணை பசுநெய் மூன்றும்

விற்பனமாம் படிகால் காலரைநே ரான
  விட்டதிலே யமுதுவள்ளி விஷ்ணு கிரந்தி
அற்புதமாம் பேய்ப்புடோல் முசுமு சுக்கை
  ஆனையடி சிறுபுட்கால் பிறுத்தி மண்டை
கற்புலவும் வெண்குடங்கல் கருங்கு டங்கல்
  தோன்றி தாமரையின் வளையுங் கூட்டே.

வளையமொடு தேசிக்காய் யீரா றுந்தான்
  வகையொன்றுக் கோர்பலம தாகக் கூட்டி
களங்கமற யிடித்துச் சார் பிழிந்து நெய்யில்
  கலந்துடனே சதைகறுத்த கோழி யொன்று
புளகமுறுங் குருதிவிடா துயிரை மாட்டி
  போட்டிடித்து தேங்காய்ப்பால் படிரெண்டுக்குள்
தளகமுறப் பிழிந்தெல்லா மொன்றாய்ச் சேர்த்து
  தானதிலே கற்கவகை சாற்றக் கேளே.

கேளடா திரிகடுகு மதிர மேலம்
  கிருபையுள்ள சாதிக்காய் பத்திரி கிராம்பு
வாளடா சீரகம் ரெண்டரிசி யாறு
  வளமாக வகைவகைக் கோர்க ழஞ்சு
சூழடா சிவந்ததொரு சித்திர மூலந்தான்
  சுத்திசெய்து பலமொன்று சேர்த்த ரைத்து
மாளடா நெய்தனிலே கரைத்துக் காய்ச்சி
  வரும்பொழுது சர்க்கரையோர் பலந்தான் போடே.

போட்டதனை வயதுகண்டு வடித்துக் கொண்டு
  புகட்டிவிடு மூன்றுநா ளந்தி சந்தி
காட்டிடவே மேக .... .... ....
  கணையுடனே .... .... .... ....
.... .... .... ....
ஓடிவிடும் கணைகொண்டோர்க் காவின் நெய்யில்
  .... .... .... ....
வைத்தருந்தத் தேகவலு வாகுந் தானே.

*(கை.பி.98-46-47)*

### *வறட்டுக் கணம் - குறிகுணம்*

தானே மானே சொல்ல கணை
  திரண்டு சேதப் படவேதா னுலர்ந்து

திரண்டு நாவு முலர்ந்தி ருக்கும்
கண்ணின் வெள்ளை விழிதனிலே
கரந்தே பற்றும் சிலாம்பதுபோ லாமே. *(ஏடு.601-63)*

நெஞ்சு துடிக்கும் புகைந்திருமும்
நிறமும் வேறே குணமாகும்
வஞ்ச மதுவா யென்னேரம்
வறண்ட மேனி யாயிருக்கும்
மிஞ்ச வயிறு மிரைச்சலுண்டாம்
விட்டு விட்டுத் துரும்பெடுக்கும்
மஞ்சார் குழலாய் வறக்கணத்தின்
வாரா மிதனை யறிவீரே.
*(ஏடு.169-39,941-26,6218-26,362-33)*
*(புத்.477-149,476-84)*

அத்தியில் சுரமுந் தோன்றும்
அழன்றுநீர்த் தாக மாகும்
முற்றியே சிறுநீர் தானும்
முறுக்கியே வெண்மை காணும்
சற்றுத்தான் வயிறு நொந்து
சதிருடன் கடுப்பு மாகும்
வற்றிடுஞ் சரீர மெங்கும்
வறட்கணம் என்று சொல்லே.

நாக்கில் மஞ்சள் வெள்ளைமுள்ளு
நடுவே வெடிப்பு மூன்றாகும்
பார்க்கப் பிள்ளை ஈடழியும்
பருக்கா துடலு மிளைத்துவிடும்
மூக்கிற் சளியும் மிகுதலுடன்
முகமு மஞ்சள் பூத்திருக்கும்
தூக்க மிகவே மயக்கமுண்டாஞ்
சோரும் வறளின் கணமிதுவே. *(புத்.477-149)*

ஓடுகின்ற வறட்கணந்தான் வந்ததானா
லுடலிளைத்துத் தாகமத்தி சுரமுங் காணும்
நீடுகண்டம் புகைந்துபுகைந் திருமலாகி
நீர் வெள்ளை யாயிறங்க மூச்சையுண்டாம்

வாடுகின்ற நாக்குமஞ்சள் வெள்ளை முள்ளாய்
மயக்கமுடன் முகமஞ்சட் பூத்துநிற்கும்
நாடுகின்ற வயிற்றுவலி சற்றேகாணும்
நலமான வவுடத்தை நாட்டக் கேளே
(சர.வை.மு-27)

*வறட்கணமாந்தம் - குறிகுணம்*

நெஞ்சுவற்றி வாயுணரு முடம்பு காயும்
நீண்ட கண்பீ ளையுஞ்சாரு நேரந்தோறும்
மிஞ்சிடுந்தண் ணீர்த்தாகங் குரலுங் கம்மு
மேயழமாட் டாததற்கு வெள்வெங்காயம்
முஞ்சாணா கம்வசம்பு முதிர்துழாயின்
முத்திலையுங் கூட்டியுள்ளுக் குங்கொடுத்தே
யஞ்சுவிர லாற்றுவளிட் டிடவப்போதே
யனல்மாந்தம் வறள்கணமு மகன்றுபோதே
(சர.வை.மு-127)

உடம்பது துவண்டு தேயும்
தேகமும் எரிவுண் டாகும்
திடம்பெற வலமுஞ் சித்தி
திட்ட முடன்வெ ளுக்கும்
சடம்பெரி நாவு பூத்து
சளிசல மிரும லுண்டாய்
மடமயில் மாதே தீரும்
மருந்துதா னியம்பக் கேளே. (ஏடு.601-39)

வறட்சியென்ற கணம்குணத்தை வகுக்கக் கேளு
மைந்தருட லுஷ்ணமாய்ச் சுரமுந் தோன்றி
நிறைந்ததொண்டை புகைந்திருமிக் கருகும் நாவும்
நெஞ்சுடனடி வயிறெரிவு மயக்கம் தூக்கம்
மறைந்துரெத்தம் சளியுடனே யுலருந் தேகம்
மஞ்சளைப்போல் முகம்பழுத்துக் காணும் பாரு
கறைபுகழும் கணமிதுவே தீர வென்றால்
கருத்தாகத் தயிலமொன்று கழறு வேனே.
(கை.பி.98-177)

## 2. நெய்

வல்லாரைச்சாறு நாழி
மருவிய புளியாரைச்சாறு

சொல்லிய துளசிச்சாறு
சுகமுடன் மூன்றுங் கூட்டி
சொல்லிய ஆவின் நெய்யும்
சிறக்கவே நாழி கூட்டி
எல்லையாய் சீரகம் ஏலம்
இசையு மதிரம் கன்னாரும்

இம்மருந் தொன்று தானும்
இசையவே கழஞ்சி கூட்டி
அம்மியில் அரைத்துச் சேர்த்து
அடுப்பினில் வெந்தி றக்கி
விம்மிய கழஞ்சி நெய்யில்
இருபொழு தருந்தில் வெப்பு
தும்மிய சுரமுங் காந்தல்
துரைத்துமென் றுரைத்தார் வல்லோர்

(ஏடு.601-63)

### 3. நெய்

காணியும் காரிகா ணேப்பு
காரைப் பாசி யோடு
ஊணவே சாறு ழக்கு
ஒப்பமோ ரெண்டி யெண்ணெய்
தாணியும் மீர உள்ளி
தருகிராம்போடு வசம்பு கோட்டம்
கேணித வெந்தயமு மேலே
கெருடப்பச்சை யொடுமதுர மாமே.

காணவே வகைக்குக் கால்தான்
மாத்திரை சரிதான் வேண்டி
சதிரமா யரைத்து நன்றாய்
தான்மெழு காகக் காய்ச்சி
மதிரமாய் வடிக்க எண்ணெய்
மதியரை கரண்டி கொள்ள
ளூர்த்தினா லுள்ள தோழ
மூழ்வினை கழிந்து தீரும். (ஏடு.601-39-40)

### 4. பருத்திக்காய் நெய்

சாத்திர பேதி கோட்டமதுரஞ் சந்தன
 மேலஞ் சீரகமுந் தானுங் கொன்றைப்
 புலியினோடு சார்ந்த சங்கர ருத்ராக்கம்
காத்திர மான்கொம் புட நெல்லிக் காய்வற்
 றல்சண் பகமொக்கு கனிகொத் துமலி
 விலாமிச்சை காசள வென்ன வேயாட்டிப்
பாத்திர மதனில் நெய்நாழி பருத்திக்
 காயி னற்சாறு பகருங் காணிச்
 சாறுவகை காலும் பதமாய் வடியிட்டுத்
தோத்திர மாகச் சர்க்கரைக்கால் துவள
 கரண்டி வீதமிடத் தோன்றிய ....
 .... வறட் கணமுஞ் சொல்லா தோடிடுமே.

*(புத்.477-294) (ஏடு.362-35,6218-28)*

### 1. எண்ணெய்

கத்தா ளஞ்சார் பாலுடனே
 கிரந்திநீர் விளநீர் வகையும்
வத்தா வகைக்குப் படியாக
 வாகா நின்ப மதில்பாதி
சித்தா மணக்கெண்ணெய் மூன்றுபடித்
 துரித மாகக் கலந்திட்டு
சத்தே சந்தனங் கணப்பூடும்
 தானொவ் வோர்பலங் கலங்கொம்பே.

பலமே அரைதான் செண்பகமும்
 பச்சைப் பூலா ஏலமுடன்
நலமாய் ரெண்டு வாசவேர்
 நன்னாரி சாதிக் காய்பத்திரி
நிலமே வளருங் கொத்துமல்லி
 நீகேள் மதுரங் கோஷ்ட்டமுடன்
பிலமே கடுகு ரோகணியும்
 பெண்ணே கிராம்பு முத்தமுமே.

முத்தம் சன்ன லவங்கமுடன்
 மொழியுஞ் சீரக மிருவகையுஞ்
சுத்த நாகஞ் சிறுநாகஞ்
 சொல்லுங் காசெடை ஓரளவா

யித்தை யரைத்து யெண்ணைதனி
 லிதமாய்க் கலந்து யெரியிட்டு
அத்தை வடித்துப் புல்லுருவி
 ஆன காசெடை தூவிடவே.

தூவி மெண்ணெய் காசெடைதான்
 சுகமாய் ரெண்டு நேரமுமே
மேவிக் குழவிக் கிடும்போது
 மிகுந்த .... வறட்கணமும்
கூவி யோடிடும் .... .... ....
 .... .... .... .... .....
பாவை யோர்க்கு யிடுங்காணும்
 பகரக் கத்தாளை யெண்ணெயென்றே.

*(ஏடு.6218-28-29,362-36-37)*

### *2. செம்முள்ளி எண்ணெய்*

முள்ளிவேர் செவ்வள்ளி தண்ணீர் மிட்டான்
 முசுமுசுக்கை தூதுவளை கண்டங் காரி
தெள்ளுகம் பிப்பிசின்கா ரசைநற் சீரம்
 திருகுகள்ளி வேருடனே மணித்தக் காளி
வெள்ளுள்ளி வசம்பினோ டொவ்வொன் றுக்கு
 வராகனெடை விளக்கெண்ணெய் சமன்வ டித்த
உள்ளுக்குக் கொடுத்துப்பின் மேலும் பூச
 ஓடியிலை பூக்கும் வறட் கணமுந் தானே.

*(புத்.476-85,477-150) (கை.பி.98-177-178)*

### *3. கீழாநெல்லி எண்ணெய்*

ஆமணக்கின் நெய்நாழி ஆனபசுப் பால்நாழி
தாமணக்கு மேஅரைக்கால் தான்கீழ்க்காய் நெல்லியின்சாறு
வாய்மணக்கும் மேல்மதுரம் வாய்த்தகடு தான்றிசுக்கு
பூமணக்கும் வோகாந்தி பொன்துளசி தூதுவளை.

வளையாம் பச்சையுடன் வாகுபட வேசேர்த்தே
இளநீர் தனிலரைத்தே எண்ணெய்தனில் விட்டெரித்துக்
கிளர் அன்னம் உண்டதன்மேல் கேளுங் குடித்துறங்கக்
களையாக வேபேதி காலமே தானாகும்.

ஆகு மிருமல்கணம் .... .... .... ....
.... .... வறட்கண .... .... .... ....
பாகுமொழி மாமயிலே பத்தியாய்த் தீருமென்று
தொகைஉமை யாள்பாகன் சொன்னார் முனிவோர்க்கே.
*(ஏடு.362-33-34,941-26,169-39,6218-26)*
*(புத்.477-149,476-84-85) (கை.பி.98-177)*

### *வாதகணம் (அல்) வளிக்கணம்*

வாத கணத்தின் குணத்தியல்பை
வகுப்போம் உடலும் பாரமதாய்ப்
போத இரைக்கும் நாவறளும்
புகைந்தே இருமுந் தாகமுடன்
வாத கணத்தின் குணத்தியல்பை
வகுப்போம் உடலும் பாரமதாய்
பேத மாக நீர்ச்சுருக்காம்
.... .... .... .... *(புத்.477-132,476-60)*

சடமது கனத்து ழன்று
தகையுட னிரும லுண்டாய்
உடன்வயி றிரைந்து மந்தம்
உள்மலம் கருகி வீழும்
நடுவயி றிரைந்து வாய்வு
நாவது வறட்சி யாகி
விடுவது நீர்ச்சுருக்கு
மெய்வாதக் கணமி தாமே.
*(ஏடு.798-23) (கை.பி.98-166)*

வயிற்றைப் பிரட்டி வலியுண்டாய்
வாய்நீர் சுழற்றி வாந்திக்கும்
பாராய் உடலும் வற்றியது
பாவையோ லுலர்ந்து தான்வற்றும்
பொசித்த வன்னஞ் செமியாது
பொருமும் வயிறு மூதிவரும்
கற்ற வாய்வுக் கணையென்று
கண்ட பேரும் பேசுவரே. *(ஏடு.601-68)*

### *1. குடிநீர்*

கணமது தீர வென்றால்
கருதிய மருந்து கேளு
வளிகனீ ருள்ளி யோடு
மருவுவெந் தயமுங் கூட்டிக்
குணமுடன் வில்லப் பத்திரி
கூட்டியே கிஷாய மாக்கி
கிணமிது கொடுக்க வாதக்
கணமது போகுந் தானே. *(கை.பி.98-166)*

### *சூரணம்*

தாளிச பத்திரி சீரகமும்
தக்க கிராம்புத் திரிகடுகு
வாளிச மொத்தத் திரிபலையும்
வகைசே ரேலம் வால்மிளகு
தாச மென்னும் கருஞ்சீரகம்
காம கடுகு ரோகணியும்
தாளிச மென்னும் கழஞ்செடுத்து
தானே வறுத்துப் பொடிசெய்யே.

பொடிசெய் வெருகடி சரிசீவி
பொருந்தக் கலந்து வெந்நீரில்
கடிதாய் விரவிக் கொள்வீரால்
கடிய வாய்வுக் கணைபோமே *(ஏடு.609-69)*

### *1. எண்ணெய்*

தான்கருஞ் சீரம் ரோணி
தனிஉசி லிலையீ ருள்ளி
கானக யிரண்டு பத்திரி
காட்டினில் மல்லி யோடு
யேனக கடுக்காய் சமனாய்
யேரண் டெண்ணெய் தனில் காய்ச்சி
மானக முலைப்பா லூட்ட
வாத கணமுந் தீர்ந்திடுமே.
*(ஏடு.798-24) (கை.பி.98-166)*

### *வாலேந்திரக்கணம் - குறிகுணம்*

திடமாய்த் திரமதனைக் காயும்
தேனே நாவு வழுவழுக்கும்
சிறந்தே நயனம் சிலாம்பேறும்
தானே வயிறு மிகக்கடுத்து
சலமும் சீயும் தான்வருமே.

வந்தே கழியும் முகமதைத்து
மார்பு வற்றி வயிறுபொருமி
சந்தே தொட்டீ புறங்கால்வகை
தானு மதைத்து உடல்மெலியும்
இந்தக் குணங்கள் இவைகண்டால்
இவைவா லேந்திரக் குணந்தானே
தையலே முனிவர் தான்சொன்ன
தமிழா லுரைத்தார் முனிவோரே.

வன்னம் பிரியுட் வகைகேளாய்
வாலேந் திரத்தின் வகையறிய
முன்னமே உடல்வெ தும்பும்
உள்ளெலும் புள்ளே சார்ந்து
மின்னேகேள் நயனந் தன்னில்
மீன்சிலாம் பதுபோல் பற்றில்
கன்னவர்க் கடுப்பு சீதம்
கழிந்திடும் தேகம் வற்றும்.

வற்றுமே தேக மெல்லாம்
வயிறது பொருமிக் காயும்
உற்றுமே மூலந் தள்ளும்
முகுதுதண் டெலும்பு காயும்
ஆற்றுமே புறங்கால் கைகள்
குளிர்ந்துதான் குளிர்ச்சி யுண்டாம்
மாற்றுமேக் களிப்புச் செய்து
நறுநெய்யும் குடிக்க நின்றாம். *(ஏடு.601-40-41)*

### *வாலேந்திரம்-சாத்திய குணம்*

தந்தைதாய் தனக்குஉஷ்ணம்
தானுடல் ரோகத் தாலும்

விந்தைசேர்க் கின்றி மாதா
விடைவந்த நாலாம் நாளில்
அந்தமாய் குணங்கள்தன்னில்
அவர்சென்று குளிக்கும் போது
சுந்தத மிகுந்த கவியின்
..... குணமி தாமே. *(ஏடு.601-41)*

### *குடிநீர்*

வாழைப் பூவும் தானுளும்
வல்லாரை முசுமு சுக்கை
நீளக்கா வரையி னெல்லி
கீழ்க்காய் நெல்லி கொச்சங்காயும்
சூள்காங் கொடுப்பை பழம்பாசி
சொல்லு நல்ல பசலியொடு
வேளைகா யுதகம் ரண்டுபடி
விட்டுநீ வெந்து கொள்ளே.

கொள்ளுநீ ஆவின் வெண்ணெய்
பாக்கள வதிலே விட்டு
மெள்ளவே அஞ்சு நாள்தான்
மெள்ளவே இருபொழு தருந்தி விட்டால்
வளருமே வால சந்திரன்
மருவிசய வெதுப்பு மாறி
நள்ளுமே .... ....
.... .... .... *(ஏடு.601-44)*

### *1. நெய்*

உரைப்பான வாலேந்திர மதுக்கோர் நெய்தான்
உரைக்கிறேன் சிறுபீளை மணித்தக் காளி
அருள்பாயுந் திருத்தாளி தொட்டால் வாடி
அறுகு கரி சாலை நிலப் பனை சீ தேவி
மருப்பால பிரமி யெழுத் தாணி மூலி
வல்லாரை சிறுகுடக்கால் பொன்னாங் காணி
நிரப்பாக எடுத்துச்சார் படிகால் வீதம்
நின்றதில் நேர்பாதி நறுநெய்தான் சேரே.

சேர்த்தவுடன் சாதிக்காய் பத்திரி கிராம்பு
திரிபாலை திரிகடுகு தேவ தாரம்
வார்த்ததொரு கெருடப்பச்சை கன்னார் கோட்டம்
வசம்புலுவா யேலமதி மதுரத் தோடு
நேர்த்தியுறும் வசுவாசி யிலவங்கம் பத்திரி
நேசமிகும் அகிலுடன் அக்கி ராவும்
பூர்த்தியுடன் வகைக்குவேர் கழஞ்சு வீதம்
பொடித்துமுன்சார் விட்டரைத்துக் கரைத்தி டாயே.

கரைத்ததனை யடுப்பேற்றிப் பதமாய்க் காய்ச்சி
கருத்தாக மெழுகுபத மதனில் வடித்து
வருத்தமறப் பாலகர்க்கோர் கரண்டி வீதம்
வரிசையாய் நாளொன்றி லிருபோ தூட்ட
விரைத்தமுறு வாலேந்திரக் கணை ....
.... .... .... யோடும். *(கை.பி.98-56)*

## *2. நெய்*

நவிலுகின்ற நெய்யதுதா னின்ன மொன்று
நலமான தெற்றிப்பூ பருத்திப் பிஞ்சு
கவிலுகின்ற மாதுளம்பிஞ் சத்திப் பிஞ்சு
கதலிப் பிஞ்சோடு பொன்னாவரை வல்லாரை
குவிலுகின்ற ஆலினுட கொழுந்துச் சாறு
குறையாமல் வகைக்குழக்கு வீதம் கூட்டி
திவிலுகின்ற காராநெய் யோர்படிதான் கூட்டி
சிதைவில்லா தளந்தொன்றாய்ச் சேர்ப்ப தாமே.

சேர்ப்பாய்நீ ஆவின்பால் படிதா னொன்று
சேகரமாய்க் கலந்ததனில் செப்பக் கேளு
தீரப்பா யதிமதுரம் கெருடப் பச்சை
திரிசாதி மாயக்காய் சாத்திர பேதி
கூறப்பா வசுவாசி கிருஷ்ண சாதி
குளுந்தநற் சீரம்பெருஞ் சீரகமுங் கன்னார்
நேரப்பா வகைவகைக்கோர் கழஞ்சி வீதம்
நேராவின் பாலுவார்த் தரைத்தி டாயே.

அரைத்துநன்றாய் கலக்கி நெய் யதனில் வார்த்து
அனல்மூட்டி மெழுகுபத மாகக் காய்ச்சி
நிரைத்துமோர் கலசமதில் வடித்தி றுத்து
நித்தமிரு போதோர் காசு தாக்க
வரைத்ததோர் .... .... ....
.... வாலேந்திரக் கணையும் தீரும். *(கை.பி.98-57)*

### *முழுக எண்ணெய்*

பாரப்பா முழுகுதற்குத் தயில மொன்று
பாடுகிறே னத்தித்தோல் பலமோ ரைந்து
கூறப்பா யித்தியின் பலந்தான் பட்டை
குணமாக அரிந்திடித்துப் பாண்டத் திட்டு
வாரப்பா நீர்குறுக்கி விட்டுக் காய்ச்சி
வற்றவைத்து எட்டொன்றாய் வடித்து வாங்கி
காரப்பா கரிப்பான்சா றெண்ணெய் நாழி
கலந்ததனில் சரக்குவகை கழறு வேனே.

கழறுவே னதிமதுரம் தேவ தாரம்
கார்கோல்சந் தனமிளகு கரிய சீரம்
குளைவதாஞ் சடாமாஞ்சி நெல்லி முள்ளி
கோட்டம்நற் சீரகவகை கழஞ்ச தாக
விளலிலா திளநீர் விட்டரைத்து வார்த்து
வெந்துவடித் திறுத்ததனை முழுகும் போது
மூறலாய் .... .... வாலேந்திரம்
.... .... .... போமே. *(கை.பி.98-59)*

### *அடை*

ஆமப்பா பச்சரிசி மாவோ டொக்க
அரைத்தடையோ ரேழாகப் பிடித்துக் கொண்டு
தாமப்பா முருக்கிலையில் பொதிந்து கட்டி
சாற்றுகிறேன் பழம்பாசி குப்பை மேனி
ஏமப்பா குழிமீண்டான் கீழ்க்காய் நெல்லி
எழுத்தாணிப் பச்சை யதினுடன்வல் லாரை
சேமப்பா வெள்ளை கறுப்புரண்டி னோடு
சீதேவி யோர்பிடிதான் தெரிந்து வாங்கே.

வாங்கியதில் கோட்ட மதிவிடைய மோமம்
மதிரமிரு வேலிசெஞ் சந்தனம்ரா மிச்சம்
ஓங்கியதோர் கத்தூரி மஞ்சள் தானும்
ஒரொன்றுக் கோர்பலம தாகத் தூக்கி
பாங்குடனே யிடித்ததனைப் பாண்டத் திலிட்டு
படிநான்கு நீர்விட்டு மடல்பொழியால் காண்டம்
தாங்கியதன் மீதிலடை வைத்து மூடி
சந்துவாய் சீலைமண் செய்தடுப்பி லேற்றே.

அடுப்பேற்றி தீயெரித்துப் படியோர் முக்கால்
ஆகவற்றும் போது எரிப்பதனை மாற்றி
எடுப்பாய்நீ யோரடைதான் கொடுத்து மற்ற
தெல்லாந்தான் சதித்திடா தனத்திப் போடு
கொடுப்பாயோ ரடைவீத மந்தி சந்தி
கொண்டதன்பின் கஷாயம் நாளோர் மூன்று
தொடுப்பாகக் கொடுத்திட ..... .....
துடர்வா லேந்திரக்கணையும் துனாயும் பாரே.

*(கை.பி.98-58-59)*

### 1. மை

விட்டோடு மின்னமொரு விவரங் கேளு
விருதுபெற்ற மையிதுதான் விள்ளப் போகா
மட்டோடு மயில்துத்தம் சீனக் காரம்
வளர்பீத ரோகணியும் வகைநேர் கூட்டி
கட்டோடு குழிமீண்டான் கீழ்க்காய் நெல்லி
கையான் சித்திரப்பாலை விஷ்ணு கிரந்தி
விட்டோடும் சீதேவி உத்தம தாளி
எழுத்தாணி மூலிசெம்பொ னெருஞ்சி யாமே.

நெருஞ்சியொடு வெற்றிலைசம் பழத்தின் சாறு
நேர்மையுறு கோழியண்டக் கருவுங் கூட
வான்செயு முன்மருந் துடன்விட் டாட்டி
வழித்தனை வெண்சீலை வீர வாளி
நிரஞ்சனமா யிலைரெண்டி லொன்றி லூட்டி
நிழலுலர்த்தித் திரித்ததனை பசுநெய் வார்த்து
கான்சிறந்த விளக்கேற்றி எரித்து மேல்மை
பற்றவைத்து வழித்தெடுத்துப் பகரு வேனே.

பகருகின்ற விலாங்குத்தோல் துரிசு ரண்டும்
பதியாவின் நெய்விட்டு வறுத்து நன்றாய்
பகருகின்ற கரியாக்கி யெடுத்த ரைத்துமுன்
புகந்த மையு மிதோடே சேர்த்து
கருகுகின்ற பசுவின் நெய்யில் குழைத்து
கண்ணிலிட்டுவரச் சிறியோர்கள் நயன மீது
கருதுகின்ற வாலேந்திரக் கணையில் வந்த
ரோகமறும் .... .... .... (கை.பி.98-55)

## *2. மை*

தினம்பொருந்தும் வாலேந்திரந் தனக்கு கண்ணில்
தீட்டிடவோர் மையதுதான் செப்பக் கேளு
கனம்பொருந்து முயலதின் கா ருதிரம் வெள்ளை
கலையூட்டி நிழலுலர்த்திக் காய்ந்த பின்பு
வனம்பொருந்து மதின்பித் தீர லோடு
வல்லாதைத் தேரண்டத் தரிசி அய்ந்தும்
மனம்பொருந்தும் படியரைத்து மூன்று ருட்டி
வளமாக நிழலுலர்த்தித் திரிய தாக்கே.

திரித்துருட்டி எடுத்ததனை விளக்கிற் போட்டு
சிறப்பான ஏரண்டத் தெண்ணெய் வார்த்து
எரித்துடனேமை பற்றவைத்து வழித்து நன்றாய்
எடுத்ததனைப் பசுவின்நெய்யில் குழைத்துச்சற்றே
கரித்திடு நேத்திரத்திலிடக் .... .... .... ....
.... .... .... .... ..... .....
விரித்தகணை யதனாலே வாலை கட்கும்
விழியில்வந்த வியாதியெல்லாம் விட்டுப்போகும்.
(கை.பி.98-54)

## *வால் சந்திரக்கணை - குறிகுணம்*

வால சந்திரக் கணையினாலே
வருவ துகுணங் கேளீர்
சீல மாய்குணங் கேடாகும்
சீறிபிச்சும் காயும் மேலெல்லாம்
விழநீ ரேற்றுந் தான்வெளுத்துநீ
ருடம்பு வற்றும் காலத்தில் புறங்கால்
வீங்கி கைகொண்டையும் வற்றுமானால்
யேவேலிட்டுப் போவரிது குணம்வராதென்றே.

வீங்கிடும் கைகால் தானும்
விழுமது கூடி நிற்கும்
தாங்கிடு மன்ன தாகம்
தானதே வெறுப்பில்லா தாகும்
தூங்கிடும் முகமும் கண்ணும்
சுத்தமாய் வெளுத்துக் காட்டும்
வீங்கியே நீங்கும் கண்டாய்
இதுகுணம் வாலேந்திரந் தானே.

கண்ணது ஒன்று கூட
கண்ணிலும் பிராலும் முற்றி
வண்ணமா யுடல்சு ருங்கு
மாமகேந்திரம் கணையில் கூடும்
கண்டீர் கண்ணினில் கீழ்வாயில்
கண்டிடும் பிறைபோல் மெள்ள
கன்னத்தில் கண்ட பின்னே
கருதும்பேர் சொல்லக் கேளே. *(ஏடு.601-43)*

***வால்சந்திரம் - சாத்திய குணம்***

சால சந்திர கணையின் குணந்தன்னை
சால மீதினில் சாற்றுகிறேன் கேளுநீர்
கோல வேல்விழி தாய்-தந்தை சரத்தால்
பாலர் தங்களுக்கு நொய்து சாருமே.

சாறு மிழையில் வேர்வை கொண்டுதான்
நீரும் நாசியில் நீத்தலும் மூன்றிடும்
கருங்கல் குழைந்தி காந்திடும்
சீருடன் கடைக்கண் சிந்தைக்குமே.

சிதைக்கும் கண்களில் சுக்கிரன் வந்திடும்
அதைக்கும் கைகால் அதிசாரம் பற்றியே
முதைக்குடஞ் சீதமும் ரெத்தமும் வீழ்ந்துதான்
குதைக்கும் கீழ்மூலம் குன்றுதான் தள்ளுமே.

தள்ளினா லன்னந் தன்னை வெறுத்தால்
தாகம் தாக்கி தண்ணீரை வாங்கிடும்
உள்ள மொக்க உருகி மெலிந்திடு
மொளிவான கரண மால்ம யங்கி

மெள்ளவே கண்ணில் வந்திடும் சுக்கிரன்
மீறி யேபூத் தன்மை வெடித்தது
கள்ள மில்லை இதுவால சந்திரன்
கணைய தாகும் பரிகாரஞ் சொல்லுவேன்.

*(ஏடு. 601-42)*

## *நெய்*

சீர்சிறக்கும் பூலாதி வெருடத் தோலியும்
சிறந்தீர அள்ளியதும் சிறப்பாய்க் கூட்டி
பேர்பெறவே அரைத்துருட்டி ஆவின் நெய்யில்
இசவாக நெய்க் கொட்டான் பழனுரையும் சமனாய்
பார்புகழும் கற்கமதை யதனில் சேர்த்து
பண்புடனே மெழுகுபதம் வடித்து வாங்கே.

வாங்கிடுவாய் புளிப்புமிக தகர்த்து
வாரமொரு காசெடைதா னந்தி சந்தி
பாங்குடனே யேழாம்நாள் கொள்வா யானால்
பண்புகெடும் ..... ..... .....
ஓங்கியதோர் வால சந்திரன் தீரும்
..... ...... ..... ...... .....
தேனேகேள் மொழியுரைத்த சுலோகம் பார்த்து
சீர்பெறவே செப்பினார் தின்னந் தானே.

*(ஏடு.601-45)*

## *விஷக்கணம் - குறிகுணம்*

அதிகமா யுந்தி தன்னில்
அழல்கன லேறி யூறல்
உதரமும் வெந்து புண்ணாய்
உடலாதி யந்த முந்தான்
அதிகமாய்ச் சுரமுந் தோன்றி
அடிக்கடி சுவாச முட்டும்
சுதிரமாய் மேல்சு வாசம்
தன்னுட விளைக்கு மாமே.

இளைத்துமேல் நோக்கு மாகி
லிதுவிஷக் கணமே யாகும்
தளைத்தநோய் மருந்துக் குள்ளே
தானிது அடங்கி டாது

குளைத்தருங் குழவிக் கிந்தக்
கொடும்பிணி தோஷ மாகும்
பிழைக்கவோர் மருந்து தானும்
பேசுறே னவனி மீதே.
*(கை.பி.98-170-171) (ஏடு.7313-27)*

கணமென்ற விஷகணத்தின் குணத்தைக் கேளாய்
கைகாலு மதைத்து நெற்றி வலியுண்டாகுங்
குணமில்லாச் சாணியைப் போற் பேதியாகுங்
குரல்கம்மி முலையுண்ணா திருமலுண்டா
மிணையிலா முகம் வெளுத்துச் சுரமுங் காணு
மெந்நேர நெஞ்சுவிலா கொதிப்புண் டாகுந்
துணையான கண்சிவக்கு மிளைத்துப் போகுஞ்
சொல்லுகின்ற தேகம்பல விதமாந் தானே'
*(சர.வை.மு.-30)*

## *குளிகை*

அவனியில் மாசி பத்திரி
அதிமதுரங் கோட்ட மேலம்
இவனி செண்பக மாயக்காய்
இலவங்கம் புஷ்பம் பேதி
குவனிரா மிச்சம் வெட்டி
கோரோ சினைகருந் துளசி
கவனிய சாற்றா லாட்டி
தருகுன்றி யுண்டை செய்யே.

உண்டையை நிழலு லர்த்தி
உடன்மாசிப் பத்திரி கிஷாயம்
கண்டுநீ யூட்டத் தீரும்
கருதிய வங்க புஷ்பம்
கொண்டுநீ கஷாயத் தூட்டி
கொடுமாந்த சுரமும் வாந்தி
விண்டலை முலைப்பால் தன்னில்
விரும்பிநீ புகட்டக் கேளே.
*(கை.பி.98-171) (ஏடு.7313-20)*

### *விஷநீர்க்கணம் - குறிகுணம்*

கருதியே சுரம்விட்டு விட்டுக்
காய்ந்திடுந் தண்ணீர்த் தாகம்
விரைவு றுகண் குழியும்
வெகுண்டது அலறும் பிள்ளை
வருதலை சுழன்று கொண்டு
வயிறது நோகுந் தானே.
.......... ............. ............
........... ............ ............
நொந்துகால் கைகள் சோர்ந்து
நோக்கமாய்க் குளிரு முண்டாய்
புந்தியு முகத்தி னோடு
புறங்கால் கைமினுமி னுக்கும்
வந்தயிக் குணங்க ளெல்லாம்
வகையுட னறிந்த போது
சிந்தைநீர்க் கணமி தென்று
சியலுட னறிந்து கொள்ளே. *(கை.பி.98-171-172)*

### *குடிநீர்*

சாரணை முசுட்டை யோடு
தனிப்பொடு தலையின்காயும்
சீரக மிளகு சுக்கு
திப்பிலி வகைக ழஞ்சு
நாரமும் விட்டுக் காய்ச்சி
நலம்பெறக் கொள்வீ ராகில்
காரமாம் நோய்க ளெல்லாம்
கெடிவிழுந் தோடு மென்றே. *(கை.பி.98-172)*

### *விஷபாகக்கணம் - குறிகுணம்*

தாங்கியே சரீர மெல்லாம்
தடித்துடன் கனத்து விம்மி
தூங்கிய நயனந் தன்னில்
சுக்கிர னெழுந்து மோதி
பாங்குடன் தண்ணீர் வேண்டும்
பருகிசொல் தாமை யாகும்

வீங்கியே வெளுக்கும் மேனி
விஷபாக கணையி தாமே. *(ஏடு.601-62)*

### *விஷமாந்த கணம் - குறிகுணம் - (சிங்கிகணம்)*

பேரான சிங்கிமாந்த கணத்தைக் கேளாய்
பெருமையாய் உந்திதணல் மேலெ ழும்பி
வாரான ஈரலுமே புண்ணாய் வெந்து
வலுமையாய்ச் சுவாசமேல் இழுப்பு மாகிச்
சீரான தேகஞ்ச மூலங் காய்ந்து
சிவசிவா தழல்போல சுரமும் வீசும்
வீரான சுவாசமது திக்குமுக் காடி
வெகுளியாய் மயக்குவிக்குஞ் சிங்கிகணம் பாரே.
*(புத்.476-77)*

### *2. குடிநீர்*

முருவிலி நன்னாரியொடு வெண்கா யந்தான்
முதிர்வசம்பு இந்துப்புக் கடுக்காய் முள்ளி
மருவிய நாரத்தை எலுமிச்சை வேளை
வாகான மலைதாங்கிக் கீழ்க்காய் நெல்லி
மருவியதோர் பூசனியு மேபாச் சோற்றி
வளங்குறட்டை மால்கரந்தை வகைஒன்றாக்கி
பெருகுநல்ல நீர்விட்டுக் காய்ச்சிக் கொள்ளப்
பிலத்தவிஷ மாந்தகணம் ...... போமே.
*(புத்.476-68)*

### *விரத்திகணம் - குறிகுணம்*

ஊத்தாம் பெட்டிபோ லூதிவரு
முள்ளே யசனஞ் செல்லாது
பார்த்தார் முகமும் தூட்டைகெட்டும்
பகரும் சோறும் செமியாது
மூத்தார் சோகை எனச்சொல்வார்
முகிந்தால் பலபல விதமாகும்
வீத்தால் பெரிதாய் வீற்றிருக்கும்
விரத்திக் கணையின் விவரமிதே. *(ஏடு.601-70)*

### *வீக்க கணம் - குறிகுணம்*

வீக்க கணமே சொல்லக்கேள்
விரிவா யுடல மிகக்காயும்

சேக்கு மவ்வவ் விடந்தோறும்
  செரியா மலமே கட்டிவிடும்
ஆக்கு முடல முழுதிலுமே
  யாகும் வீக்கம் சூடதானால்
போக்கும் வழியைக் கண்டறிவாய்
  புகலு முறையாய்ச் செய்துவிடே. *(புத்.477-151)*

### *உள்ளி எண்ணெய்*

உள்ளியும் வசம்பு மோமம்
  உயரதி மதுரம் கோஷ்டம்
வெள்ளில கிராம்பு சுக்கு
  மிளகுடன் ஏல மிப்பால்
கொள்ளக்கூத் தன்கு தம்பைக்
  கூறிய வேர்வ கைக்குப்
பொன்னிய வராகன் ஒன்று
  பொடிசெய்து பின்பு கேளே.

கேள்விளக் கெண்ணெ யொன்றில்
  கிரமமாய்ப் போட்டு மேலும்
வாள்பெற இரண்டு சாமம்
  வளர்ஒளிப் புடத்தில் வைத்து
நாள்சிறு கரண்டி எண்ணெய்
  நல்கிடில் மதலை கட்குக்
காள்வினை யானே வீக்க
  கணமது தீரு மன்றே. *(புத்.477-151,476-86)*

### *வீங்குகணம் - குறிகுணம்*

வீங்கு கணையின் குணமதனை
  மிகவே செய்யுங் குணங்கேளாய்
தாங்கு முடம்பு தான்வெளுக்கும்
  தானே குடிக்கும் தண்ணீரை
ஓங்கி வீங்கி உடம்பெல்லாம்
  உயிரை வதைக்கும் கண்டாயே
பாங்கா யிறுக்கு நறுநெய்தான்
  பகரக் கேளீர் ஒண்ணுதானே. *(ஏடு.601-52)*

### நெய்

தேன்கு ரும்பைச் சாறுழக்கு
சிறந்த தகரைச் சாறுழக்கு
இன்னன் குமரிச் சாறுழக்கு
இனிய வரையின் சாறுழக்கு
இந்தவஞ் சொரியும் பழம்பாசி
வகையோ ரொன்று தான்காலே
கன்னங் கருத்த யெண்ணையுரி
கலந்தே யொன்றாய்க் காய்ச்சுமிதே.

யேல மிருக ழஞ்சு
இயல்வாகப் பட்டை யிதில்ரெட்டி
சாலவே கோட்டம் சீரகம்
மதிரங் கழஞ்சாய்த் தான்கூட்டி
காலமே வடித்த யெண்ணெய்
காசெடை கொள்வீ ராகில்
வாலையாம் கண்க ளெல்லாம்
மாறுமென் றருளிச் சொன்னார் (ஏடு.601-53)

### வெப்புக்கணம் - குறிகுணம்

வெப்புக் கணையின் குணம்கேளாய்
மிகவே காயு முடலதுவும்
செப்பு மூலயிர் நாவறண்டு
தினமுந் தண்ணீர் தான்குடிக்கும்
பேரே வீக்கம் மேலுண்டாய்
அன்ன மறுக்கும் உடல்சுருங்கும்
மெய்யாய்க் கழிச்சல் பல்விதமாய்
உலியும் மூலத் தடிதனிலே.

வெப்புறு கணையின் செய்கை
மிகுந்ததோர் தண்ணீர்த் தாகம்
ஒப்பறு வயறு காந்தல்
உண்டசோறு செமியா தாலும்
தப்புறு மூலச் சீதம்
மத்தியில் சுரமுங் காயும்
தப்புறப் பசியுந் தானே
தடைபடும் தடங்கண் மாதே. (ஏடு.601-51)

### 3. குடிநீர்

நாவல் பட்டை குவளைவேர்
நாடும் துளசி வல்லாரை
செவ்வே கதலிப் பூவிதழும்
சிறக்கு முத்த மோரொன்று
கவ்வைப் படாதே ஓர்ப்படியாய்
கலந்தே காய்ச்சி யெட்டொன்றாய்
தவ்வும். சாதிக் காயரைத்து
தயவாய்க் குடிக்கில் கணைபோமே. *(ஏடு.601-99)*

### 4. குடிநீர்

கோச்சங் காயும் நன்னாரி
கூறிய வாழைப் பூவிதழும்
மோச்ச மருதம் பட்டையுடன்
மிகவே யீர உள்ளியுமாய்
பாச்ச முடனே நல்சீரகம்
பகரு மதிரம் சாதிக்காய்
உச்சம் பெறவே குடிநீராய்
உரைக்கும் வகையை யினிகேளே.

கேளே வெந்த மருந்துதனில்
கிளறிச் சரக்கை யெடுத்துவைத்து
நாளே கலக்கித் தான்குடிக்கில்
நடுங்கும் கணைநோய் .... ....
பாளே தீரும் முன்னேயிது *(ஏடு.601-100)*

### 5. குடிநீர்

அத்தியால் அரசு மொட்டு
அதனுடன் மருதம் பட்டை
பத்திஆல் அத்திப் பிஞ்சு
பருத்தியின் பிஞ்சு தானும்
நத்தமாஞ் சூரி வேரும்
நலமுள முத்தக் காசு
சித்தியாம் பணப்புல் லொக்க
சிறுகநீ வறுத்து வையே.

வைத்ததோர் மருந்தி னோடே
மறுபடி கிராம்பு சீரம்

கைத்ததோர் விடயஞ் சாதிக்
காயுட லுலுவா யோமம்
திட்டமாய் கழஞ்சோ ரொன்று
முறுநீர் காய்ச்சிக் கொள்ளே.*(ஏடு.601-100-101)*

### *1. நெய்*

காராவின் பால்நாழி நெய்தான் நாழி
சதிக்கொள்ளை வல்லாரை முசுமு சுக்கை
பார்மீதி லானின் கொளுத்து ...... ......
பகர்தகரை பழம்பாசி கூளைதா ணப்பா
சீரான கீழ்க்காய் நெல்லியின் ..... .....
சிறந்தநல்ல சுரையில் விருசும் கூட்டி
பேராளி கிழங்குடனே யடைபொதியன் கிழங்கும்
பெருத்தநல்ல ஓரிலைத் தாமரையின் சாறே.

சாரான வகையொன் றுழக்கு சாறு
கடையினுட மருந்துவகை சொல்லக் கேளு
பேரான யேலம் யிலவங்கம்
பெருங்கிராப் பச்சை கிராம்புடனே வசம்பு
தேற்றான யீருள்ளி கோட்டமும் நெல்லி
செண்பகமும் திப்பிலியும் சாத்திர பேதி
வாரான மாயக்காய் கூவ நீறு
வரும்கோ ரோசனையும் சீனி கூட்டி.

கூட்டியே மருந்தெல்லா மரைத்துக் கொண்டு
கூரான நெய்யோடே கலக்கிக் கொண்டு
மாட்டுவாய் தீயெரித்துப் பதத்தோ டேதான்
வடித்துநீ காசெடைதான் கொடுக்கும் போது
தாட்டிமொய் ...... வெப்புக்கணை .....
தவறாமல் ..... ...... தீரும்
சட்டமுடன் வேத சாஸ்த்திரத்தைப் பார்த்து
செப்பினார் குறுமுனிவன் செப்பி னாரே.
*(ஏடு.601-51-52)*

### *வெளுப்புக் கணம் - குணம்*

வெளுப்புக் கணைதான் மெய்கலந்தால்
வெளுத்தே முகமும் மிகவீங்கும்

கழுத்துந் திறந்து கண்வெளுத்து
கருவி தளர்ந்தே மயக்கமுண்டாம்
பழுத்த பழம்போல் மெய் வெளுத்து
பச்சை நரம்பு மிகவெடுத்து
பழிக்கு முடலும் மிகவுலர்ந்து
நளிந்தே யன்னஞ் செல்லாதே. *(ஏடு.601-53)*

## *நெய்*

நாயுருவி சிறுகீரை பொன்னாங் காணி
நலமான சீரகமும் மதிரம் ஏலம்
நெறியகலும் மாயக்காய் கெருடப் பச்சை
நேர்மையதா யீருள்ளி கிராம்பு மஞ்சள்
காயமரை யொன்று கழஞ்சு வீதம்
கட்டாகத் தானரைத்து வடித்துக் கொண்டு
நேசமுடன் காசளவு உள்ளே கொள்ளில்
நில்லாது கணைநோயும் பறந்து போமே.
*(ஏடு.601-54)*

# தோடம்

***வேறு பெயர்:-*** *தோஷம், வேறுபாடு*

***இயல்:*** *இயல்பு மாறுபாட்டால் ஏற்படும் குற்றம்.*

***நோய் வருவழி***

இது மூன்று திங்கள் முதல் ஓராண்டுவரை குழந்தைகளைப் பாதிக்கும். கையால் தொடுதல், கண்ணால் பார்த்தல், தீவினைகள், பறவைகளின் நிழல் படுதல் ஆகிய காரணங்களால் இந்நோய் வரும். வீட்டு விலக்கானவள், கர்ப்பம் அழிந்தவள் இவர்கள் குழந்தைகளைத் தொட்டுத் தூக்குவதினால் தோடம் ஏற்படும். கணவனோடு கூடியவள் குளித்து எதிர்ப்படும் குழந்தையைப் பார்ப்பதினாலும், எடுப்பதினாலும் தோடம் வரும். குழந்தைப் பேறில்லாதவள் குழந்தை வேண்டி குளிசம் கட்டிக்கொண்டு வரும் பொழுது எதிர்ப்படும் குழந்தையைப் பார்ப்பதினால் தோடம் ஏற்படும்.

அந்தி சந்தி நேரங்களில் கூண்டை நோக்கியோ அல்லது கூண்டை விட்டு வெளியிலோ செல்லும் பறவைகளின் நிழல் குழந்தையின்மீது படுவதினாலும் விஷபூச்சிகளின் எச்சம் அல்லது காற்று படுவதினாலும் குழந்தைக்குத் தோடம் ஏற்படும்.

மனிதரின் உணவாலும், பார்வையிலும், செயலாலும், பறவைகளின் நிழல் குழந்தையின் மீது படுவதாலும், தேரையாலும் மற்றும் பல காரணங்களாலும் 'தோடம்' எனும் நோய் குழந்தைகளைத் தாக்கும்.

***பொது குறிகுணம்***

பின்வரும் குறிகுணங்கள் தோஷமேற்பட்ட குழந்தைகட்குக் காணப்படும்.

உச்சியில் பள்ளம் விழும். தலையில் கனம் ஏற்படும். வாய் கறுக்கும். உலரும். முகத்தில் மினுமினுப்பு ஏற்படும். முகம் மஞ்சள் நிறமடையும்.

கண் சொருகும், எப்போதும் கண்விழித்திருக்கும். கண்கள் குழி விழுந்து சோர்ந்து, குளிர்ந்து கண்ணீர் சொரியும். கண்மணி ஒதுங்கி அரைக்கண் போல் இருக்கும். கண்களில் பீளை ஏற்படும்.

சிலபோழ்து பொருமி பொருமி அழும். சில நேரங்களில் கதறியோ, பறவையின் குரல்போன்று குரலெடுத்தோ அழும். இதனால் தொண்டை கம்மும். குடித்த பால் தங்காமல் வெளியேறும். பால் உண்ண மறுக்கும்.

சில போழ்து இருமலும், அதைத் தொடர்ந்து விக்கலும் ஏற்படும். நெஞ்சு மேலெழுந்து வலிக்கும்.

வயிறு புடைந்து உப்பி வீங்கும். இதனை வானம்போல் வயிறூதல் என்பர். சீதளமாகவும், வெள்ளையாகவும், கருநிறமாகவும் மாறி மாறிக் கழிச்சல் ஏற்படும். சில போழ்து பச்சென்று இரைச்சலுடன் பேதியாகும்.

உடல் நிறம் மாறி வெளுக்கும். உடல் துர்நாற்றம் வீசும். வியர்வை உண்டாகும். நரம்பு புடைக்கும். மேனி வாடும். விலாவும் முதுகும் வலித்து உடல் நோகும். சுரம் காயும். சுரம் அதிகமாகித் தாகம் எடுக்கும்.

கை, கால்கள் குளிரும். கை கால்களில் அழுக்கு சேரும். கால் வீக்கம் காணும்.

## *தோடங்கட்களுக்கான பொதுமருத்துவம்*

தோடங்களின் வகைகளுக்கான மருத்துவம் தனியே பின்னர் விளக்கப்படும். இங்கு தோடங்களின் பொது மருத்துவமாகக் கூறப்பட்டுள்ளவை முதலில் விளக்கப்படுகின்றன. கீழ்க் குறிப்பிடும் இம்மருந்துகளை உண்ண அனைத்துத் தோடங்களும் நீங்கும் என்று கூறப்படுகிறது.

### *சுரசம்*

துளசி, செம்முள்ளி, ஆடாதோடை, தூதுவளை, விட்டுணுகாந்தி, கண்டங்கத்திரி, வெதுப்படக்கி, பேய்ப்புடல், சங்கிலை, நொச்சி ஆகிய மூலிகைகளைச் சமமாக எடுத்துக் கொள்க. அவற்றைக் காய்ச்சி 15-30.மி.லி. அளவு குடிப்பதற்குக் கொடுக்க தோடங்கள் நீங்கிப் போகும். *(ஏடு.362-16)*

### *சாறு*

புளியிலை, விளாயிலை, ஆவரையிலை, வசம்பு, சீரகம் ஆகியவற்றைச் சமனெடுத்து ஒன்று சேர்க்க. அவற்றின் சாறுகளை எடுத்து கலந்து 15-30 மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூச அனைத்துத் தோடங்களும் நீங்கிப் போகும். *(ஏடு.612-15)*

### *குடிநீர்*

கோட்டம், சீரகம், ஏலம், சுக்கு, கூவிளைவேர், அதிமதுரம்,

ஆமையோடு, சந்தனம், கலைமான் கொம்பு, பூலாவேர், நெற்பொரி ஆகியவற்றைச் சம அளவு எடுத்துக் கொள்க. மருந்துச் சரக்குகளைப் பொடித்துப் போட்டு குடிநீராக்கி 15-30 மி.லி. குடிக்க தாகத்துடன் கூடிய நாவறட்சி, மயக்கம், தோடம் நீங்கிப் போகும். *(ஏடு.362-16)*

***கற்கம்***

கோரோசனையுடன் அதிமதுரம், திப்பிலி ஆகியவற்றைச் சேர்த்துப் பாலில் கலந்தரைத்து 30 மி.லி. அளவு குழந்தைக்குக் கொடுக்க தோடம் நீங்கும். *(ஏடு.169-19, 362-15, 4552-14, 6218-10)*

***பிட்டு***

முருங்கைவேர், நீர்ப்பூலா ஆகியவற்றின் வேர், பட்டையைத் தேவையான அளவு எடுத்துச் சிதைத்து கருங்குருவை அரிசியையும் சேர்த்துப் பிட்டாக்கிக் கொள்க. அதனைத் தாயுண்டு பாலைக் குழந்தைக்குக் கொடுக்க தோடம் நீங்கும். *(ஏடு.612-16)*

***நெய் வகைகள்***

1. உத்தமதாளி, சாரணை, மிளகுத்தக்காளி, அகத்தி ஆகியவற்றின் வேர், கருஞ்சீரகம், மிளகு, உள்ளி, வசம்பு ஆகியவற்றையும் சேர்த்து பசுவின் பால் விட்டரைத்துக் கொள்க. தேவையான அளவு நெய் சேர்த்துக் காய்ச்சி அளவறிந்து குழந்தைகட்குக் கொடுக்க தோடம் தீரும். *(ஏடு.612-14)*

2. பிரமி, வல்லாரை நெருஞ்சி, சின்னி, பாசி, பொன்னாங்காணி, பாச்சொற்றி, தகரை, ஆரை, மாதுளை, துளசி, கோவை, இண்டிலை, சங்கு, கொத்தான் ஆகியவற்றின் சாறு 1.3லி எடுக்க, சுக்கு, மிளகு, திப்பிலி, முப்பால் (காய்ச்சுப்பால் திரட்டுப்பால், குழம்புப்பால்) அதிமதுரம், கோட்டம், வசம்பு, ஏலம், கருடபச்சை, கிராம்பு ஆகியவற்றை எடுக்க. கொடுப்பை, தக்கை, பழம்பாசி, அகத்தி இலை, கீழாநெல்லி, கோவை, அமுதுவள்ளி, துருசு, சித்திரை ஆகியவற்றின் சாறு 1.3 லி. எடுக்க. வெள்ளை அவுரி 5.கி. எடுத்து அரைக்க. அதிமதுரம், இலவங்கம், கடுக்காய், முறுக்கு மாயக்காய், திப்பிலி, கருடபச்சை, சீரகம், துருசு, கிராம்பு, சாத்திதரபேதி, கூகை நீறு, சந்தனம், கருஞ்சீரகம் ஆகியவற்றை வகைக்கு 5.கி. எடுக்க. ஈருள்ளிச் சாற்றால் மேற் சொன்னவற்றை அரைத்து வழித்து எடுத்து 1.3 லி. நெய்யையும் சேர்த்து அனலில் மெழுகுபதமாய் காய்ச்சி அளவறிந்து கொடுக்க தோடம் நீங்கும். *(ஏடு.435-49,51)*

3. பருத்திக்காய், சிறுகாய், சிறுகீரை, பொன்னாங்காணி, ஆகியவற்றின் சாறு 335 மி.லி. எடுத்துக் கொள்க. அதிமதுரம், சம்பங்கிப்பூ, நற்சீரகம் உதகம் (மழை நீர்) ஆகியவற்றை 4.4.கி. எடுக்க. பசுவின் நெய் 1.3லி. எடுக்க, இச்சரக்குகளை நெய்யில் சேர்த்துக் காய்ச்சி குழந்தையின் தோடத்தின் வன்மை, மென்மை அறிந்து 5-10 மி.லி. அளவு கொடுக்க நீங்கும். *(ஏடு.4552-16, 604, 519,-15)*

### *சாதிக்காய் இளகம்*

சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், இலவங்கப்பட்டை, சுத்தி செய்த அதிவிடையம் ஆகியவற்றை வகைக்குச் சமமாக எடுத்து எல்லாவற்றையும் சேர்த்திடித்துக் கொள்க. அவ்வெடைக்குச் சமமாக சர்க்கரையைச் சேர்த்துக் கொண்டு அதனைப் பாகு செய்து அப்பாகில் மேற்சொன்ன சரக்குகளின் சூரணத்தைத் தூவி கிளறிவிடவும். சரியான பதத்தில் இளகி வரும் போது இறக்கி வைக்க.

அதனை 135 மி.கி. அளவு எடுத்துத் தேனில் கலந்து கொடுக்கவும். *(கை.பி.போ.360-261)*

### *எண்ணெய் வகைகள்*

1. திப்பிலி, சித்தரத்தை, அதிமதுரம், முள்ளி, அக்கிராகாரம், வசம்பு , சங்கங்குப்பி ஆகியவற்றின் வேர் வகைக்கு 5 கி. எடுக்க. நாய்வேளை, குப்பைமேனி, வெண்ணொச்சி ஆகியவற்றின் சாறு வகைக்கு 335 மி.லி. எடுத்துக் கொள்க. இச்சரக்குகளை அரைத்து வேப்பெண்ணெய் 1.3லி. எடுத்து அதில் சேர்த்துக் கொள்க. பின் எரித்துக் கொள்க. நிலவேரை அதில் சேர்க்க. மேலும் நன்கு காய்ச்சி பத்திலிறக்கிக் கொள்க. அதனை உள்ளுக்கு 5-10 மி.லி. புகட்டவும். மேலேயும் தடவவும். தோடமனைத்தும் விட்டோடும். *(கை.பி.98.23)*

### *2. வறட்சுண்டி எண்ணெய்*

வறட்சுண்டி, சாறுவேளை, மணித்தக்காளி, கழற்சி, கரிசாலை, துளசி, அவுரி ஆகிய இவற்றைச் சரி எடை எடுத்து இடித்துப் பிழிந்து 170 மி.லி. எடுத்துக் கொள்க. அத்துடன் பசு நெய் 170 மி.லி. சேர்த்துக் கொள்க. கத்தூரி மஞ்சள், கோட்டம், கருஞ்சீரகம் , கடுகுரோகணி ஆகியவற்றை வகைக்கு 3 கி. எடுத்து இடித்துப் பொடி செய்து கூட்டிக் காய்ச்சிப் பக்குவாய் வடித்து 3 நாட்களுக்குக் காலையில் மட்டும் 5-10 மி.லி. உள்ளுக்குக் கொடுக்க அனைத்துத் தோடங்களும் போகும். *(புத்.477-78)*

3. அதிமதுரம், சீரகம், முத்தக்காசு, ஏலம், சாதிபத்திரிக்காய், கிராம்பு, சண்பகம், இலவங்கப்பட்டை ஆகியவற்றை வகைக்கு 4 கி. எடுக்க முசுமுசுக்கையிலை, பொன்னாங்காணி, சிறுகீரை வேர், சீந்தில் ஆகிய மூலிகைகளை வகைக்கு 35 கி. எடுக்க. ஈருள்ளிச் சாறு 335 மி.லி, ஆமணக்கெண்ணெய் 2.6 லி. எடுத்து மேற்சொன்னவற்றை அரைத்து இதில் கலந்து கொள்க. அடுப்பிலிட்டு காய்ச்சிப் பதமாக இறக்கிக் கொள்க. அதனை 15-30 மி.லி. வீதம் குழந்தைக்குப் புகட்ட தோடங்கள் வராதென்பர் பெரியோர்.

*(ஏடு.169-19,604,519-14,6218-10,4552-15,362-15)*

4. பொன்னாங்காணி, மணித்தக்காளி, ஆலக்கணைப்பூடு, தகரைப்பாசி, ஏலம், வசம்பு, கோட்டம், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கிராம்பு, உள்ளி, அதிவிடையம், சாதிபத்திரி, பெருங்காயம், மாசிக்காய் சீரகம், திப்பிலி, வெந்தயம், கருடப்பச்சை, அதி மதுரம் ஆகியவற்றை வகைக்குக் 19 கி. எடுத்து, முன் சொன்ன செடிகளின் வேர்களைச் சேர்த்தரைத்து மெழுகாய்க் காய்ச்சி எண்ணெயை வடித்துக் கொள்க. அவ்வெண்ணெயை 5-10 மி.லி. கொடுக்க குழந்தைகட்குள்ள தோடம் நீங்கிப்போகும். *(ஏடு.435-51-52)*

5. அதிமதுரம், வசம்பு, குக்கில், கடுகு, அறுவகை அரிசி, வெண் கோட்டம், தேவதாரம், வெள்ளை அரத்தை, திரிகடுகு, உள்ளி, மரமஞ்சள், உலுவாய், அத்தி, திப்பிலி, பூலா விருட்சம், சிவதைவேர், கல்மதம், மஞ்சிட்டி, தேசாவரம் எனும் கண்ட திப்பிலி ஆகிய மருந்துச் சரக்குகளை வகைக்கு 5 கி. எடுத்துப் பொடித்துத் தூளாக்கிக் கொள்க. மயிலிறகு 9 கி. முசுறுமுட்டை, 18 கி. நண்டுகொழுப்பு, நிலவேர் ஆகியவற்றை வகைக்கு 35 கி. எடுத்துக் கொள்க. அனைத்தையும் ஒன்று சேர்த்து பதமாய்க்காய்ச்சி மெழுகு பதத்திலிறக்கிக் கொள்க. அதனை வடித்து பாத்திரத்திலிட்டு பத்திரப்படுத்திக் கொள்க.

அத்தைலத்தை விரலில் தொட்டு குழந்தையின் நாவில் தடவ வேண்டும். பிறகு கை, கால், தலை ஆகியவற்றில் தடவ அனைத்துத் தோடங்களும் நீங்கிப் போகும். (கை.பி.98,200-25-26).

***மாத்திரை வகைகள்***

1. திரிகடுகு, வெங்காரம், சாதிலிங்கம் ஆகியவற்றை ஒரு நிறையாய்

எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றால் 3 மணி நேரம் நன்கு அரைத்து 62 மி.கி. அளவு உருண்டை செய்க. துளசி, செம்முள்ளி, ஆடாதோடை, தூதுவளை, விட்டுணுகாந்தி, கண்டங்கத்திரி, வெதுப்படக்கி, பேய்ப்புடல், சங்கு, நொச்சி ஆகிய மூலிகைகளின் இலைகளை இடித்துப் பிட்டவித்துச் சாறு பிழிந்ததில் மேற்படி உருண்டையையுங் கோரோசனையும் உரைத்து திரிகடுகு வெதுப்பிப் பொடித்துத் தூளாய் கலந்து கொடுக்கத் தீரும். *(புத்.482-98)*

2. அதிமதுரம், மரமஞ்சள், முத்தக்காசு, அதிவிடையம், வசம்பு, கடுக்காய், தேவதாரம் ஆகிய சரக்குகளைச் சமமாய் எடுத்து சூரணித்து வகைக்கு 17 கி. எடுக்க. இவற்றைப் பொடுதலைச் சாறு விட்டு 130 மி.கி. அளவில் மாத்திரை செய்து கொள்க. அதனை 1, 1/2 என்று அளவறிந்து பாலில் 6 மணி நேரமரைத்து அல்லது தேனில் இழைத்துக் கொடுக்க தோடமெல்லாம் பறந்து சமுத்திரத்திற்குள் ஒளிந்து விடும் என்பர். *(ஏடு.169-19,941-13,4552-14) (புத்.482-49,476-26) (கை.பி.போ.260).*

### *3. மாதுளம் குளிகை*

ஏலம், அதிமதுரம், வங்கம், கச்சோலம், தக்கோலம், மாசிக்காய், கருடப்பச்சை, வசுவாசி, கிராம்பு, சாதிபத்திரி, திப்பிலி, சீனக்காரம், சாத்திரபேதி, ஆகியவற்றை வகைக்கு 5 கி. எடுத்துக் கொள்க. மாதுளத்தை எடுத்து அதனுள்ளிருக்கும் விதைகளை நீக்கிவிடுக. மேற்சொன்னவற்றை நன்கு அரைத்து அதனுள் வைத்து எருமைச் சாணிதனில் பொதிந்து வைத்துக் கொள்க. உமிப்புடமிட்டு 65 மி. கி. அளவு உருட்டிக் கொள்க. அதனைத் திப்பிலியுடன் சேர்த்துக் கொடுக்க அனைத்து தோடங்களும் நீங்கிப்போகும். *(ஏடு.601-12-13)*

### *4. மாத்திரை*

அதிமதுரம், கோட்டம், திப்பிலி, திரிசாதம், சந்தனம், சாத்திரபேதி, இலவங்கம், இலவங்கபத்திரி, பற்பாடகம், வசுவாசி ஆகிய இவற்றை வகைக்கு 4 கி. எடுத்துக் கொள்க. கோரோசனை 16 கி. எடுத்துக் கொள்க. இவற்றை இளநீரிலரைத்து 130 மி.கி. அளவு உருட்டிக் கொண்டு சர்க்கரையிற் கொடுக்கத் தீரும்.

### *மருந்து*

சுக்கையும் நிலக்குமிழையும் எடுத்து ஒன்று சேர்த்து காய்ச்சி

தேவையான அளவு வெல்லத்தைச் சேர்த்துக் கொடுக்க தோடம் நீங்கிப்போகும். *(ஏடு.6218-36)*

### *1. துவாலை வகைகள்*

1. வசம்பு, வெள்வெங்காயம், வேலிப்பருத்தி, உயிருடனிருக்கும் நண்டு நான்கு ஆகிய இவற்றை எடுத்துக் கொள்க. காடி தெளிவினை விட்டரைத்து துவாலையிட அனைத்துத் தோடமும் நீங்கும். *(ஏடு.435-37).*

2. சின்னி, விளா, நொச்சில், சீந்தில், வேம்பு ஆகியவற்றை எடுத்து நறுக்கிக் கொள்க. வசம்பு, உள்ளி ஆகியவற்றை எடுக்க. இம்மூலிகைகளை இடித்து துவாலை செய்து கை, காலில் கட்ட அனைத்துத் தோடங்களும் நீங்கிப் போகும். *(ஏடு.604,519-14,4552-15,362-16) (புத்.476-26,482-49)*

### *நிவர்த்தி வகைகள்*

1. பாவட்டை, சிவந்த வெட்டி வேர் இவற்றை ஒன்று சேர்த்து சாறு எடுத்துக் கொள்க. அதனை உடலில் பூசுக. குழந்தையின் தலையைச் சொரிக. பிறகு வெள்ளைக் கல்லை வைத்து செபித்துக் கொள்க. அதனை முன்கையில் வைத்து மூடிக் கொண்டால் தோடங்கள் அனைத்தும் நீங்கி விடும். *(ஏடு.7313-84)*

### *தியானம்*

நம்மைப் பரமேசுவரனாகக் கொண்டு வந்தவனைப் பரமேசுவரி யாகவும் தியானித்துக் கொண்டு பிள்ளையைப் பிடித்த பிணியை மண்டோதரியாகவும் தியானித்துக்கொண்டும் பிள்ளையைச் சுப்பிரமணி யனாகத் தியானித்துக் கொள்க. நான்தான் இவ்வனத்திலே பிச்சைக்கு எழுந்தருளி வருமளவும் நீரே சாதித்துத் தரவேணும் என்று கூற வேண்டும். *(ஏடு.7313-84)*

### *2. நிவர்த்தி*

வங்கிங் என்றும் சி-வ-ய-ந-ம என்றும் எழுதிக்கொள்க. வ-ந-சி-ம-ய என்றும் எழுதிய அத்தகட்டை, குழந்தைக்குக் கையில் கட்ட சகல தோடமும் நிவர்த்தியாகும்.

கீழ்க்காய் நெல்லியின்வேர், முடக்கொத்தான் வேர், நாயுருவிவேர், கஞ்சாங்கோரை, விடத்தலைவேர், நிலக்கடம்பு, சிறுபுள்ளடி,

பேய்ச்சுரையின் வேர் ஆகிய எட்டுவித வேர்களை வாங்கிக் குளிசமிட்டு குழந்தைக்குத் தாயானவள் கட்ட அனைத்துத் தோடங்களும் நீங்கிப் போகும். *(புத்.482-49,476-26)*

## கட்டுவதற்கு வேர்

சிறுபுள்ளடி, வசம்பு, கீழ்க்காய் நெல்லியின்வேர் ஆகிய மூன்றையும் சேர்த்து துணியிலே கட்டி அதைக் குழந்தையின் முன்கையில் கட்ட அனைத்துத் தோடங்களும் நீங்கிப் போகும். *(ஏடு.7313-98,601-26)*

மஞ்சள் துத்தி வேரை ஞாயிற்றுக் கிழமையில் எடுத்து வந்து தூபதீப வழிபாடு செய்து அறுந்து போகாமல் சுத்தமான இடத்தில் எடுத்து வைத்துத் தோடந்தீர மந்திரத்தை 108 முறை மனதிற்குள்ளேயே சொல்ல வேண்டும். பின் அதை 1.25 அளவு துண்டு செய்து அதில் மஞ்சள் நூலைச் சுற்றி குளிசஞ் செய்து குழந்தைக்குக் கட்ட வேண்டும்.

## தோடத்திற்குப் புகை

நத்தைச்சூரி, சின்னி, கீழ்க்காய் நெல்லி, செருப்படி ஆகிய மூலிகைகளின் மூலத்தை எடுத்து துண்டாக நறுக்கி ஒன்று சேர்த்து வளையமாக்கி நூல் சுற்றிக் கொள்க.

சாம்பிராணி, பாம்புத்தோல், கத்தூரிமஞ்சள், இவற்றை எடுத்து இடித்து உடம்பின் மேல் பூச அனைத்து தோடங்களும் நீங்கிப் போகும். *(ஏடு.185-12)*

## தோடத்தின் வகைகள்

பாலவாகடத்தில் தோடத்தின் வகைகள் 25 ஆக கூறப்பட்டுள்ளது. அவை பட்சியால் வருவன நான்கு. புள்ளால் வருவன பத்து. பெண்களால் வருவன ஆறு. பிறவகை ஐந்து.

**பட்சி தோடம்** 1. ஆண்பட்சித்தோடம், 2. பெண்பட்சித் தோடம், 3. மலட்டுப் பட்சித்தோடம், 4. அலிப்பட்சித் தோடம் என்பவை இதில் அடங்கும்.

**புள் தோடம்** 1. வீங்கு புள் தோடம், 2. தூங்கு புள் தோடம், 3. விளக்கொளிக்கண் புள் தோடம், 4. வெங்கண் புள் தோடம், 5. கருடக்கண் புள் தோடம், 6. செங்கண் புள் தோடம், 7. வறட் புள்

தோடம், 8. பேய்க்கண் புள் தோடம், 9. அந்திப் புள் தோடம், 10. நீர்ப்புள் தோடம் என்னும் 10 வகைகளும் இதில் அடங்கும்.

### *பெண் தோடம்*

1. ஆணுடன் கூடிய பெண் குளித்தவுடன் துணிகளைத் களையாததற்கு முன் குழந்தையைக் காண்பதால் ஏற்படும் தோடம்.

2. மாதவிடாய் கண்டவள் குளித்தவுடன் குழந்தையைப் பார்க்கும் தோடம்.

3. குளித்தவள் குழந்தையை எடுக்கும் தோடம்.

4. கருச்சிதைவு ஆனவள் குழந்தையைப் பார்க்கும் தோடம்.

5. குழந்தை வேண்டி குளிசம் கட்டிக் கொள்ளும் காலத்து எதிர்ப் படும் குழந்தையைப் பார்த்தலால் ஏற்படும் தோடம்.

மேற்கூறியவை தவிர கண்ணேறு அல்லது விஷப்பூச்சிகளின் எச்சில் அல்லது காற்று படுவதால் எச்சிற் தோடமும் எட்சி எனும் தேவதையால் எட்சி தோடமும் ஆண் தோடமும் தேரையின் காற்றால் தேரைத் தோடமும் பறவைத் தோடமும் ஆக ஐந்து தோடங்கள். மேற்கூறப்பட்ட தோட வகைகளுடன் அழிதோடம், சலதோடம், கிருஷ்ணதோடம், சன்னிதோடம், நாமுள் தோடம், நீர் தோடம், பித்த தோடம், விடதோடம் ஆகிய தோடங்கள் டி.வி. சாம்பசிவம் பிள்ளை அகராதியிலும் ஏட்டுச் சுவடிகளிலும் கூறப்பட்டுள்ளன. காணாப்புள் தோடம், படுக்கை தோடம், சையோக தோடம், அத்திதோடம், இரத்த தோடம், இரைத்தோடம், குதிரைத்தோடம், குவளைத் தோடம், கூகைத் தோடம் கெம்பீர தோடம், கெர்ப்பதோடம், கொடி தோடம், சுரதோடம், சுழியன் தோடம், மாந்த தோடம், மாந்த சுரதோடம், மலதோடம், மூர்ச்சை தோடம், வலி தோடம், வாத தோடம், வால்பச்சியத் தோடம், விரணதோடம், வீக்க தோடம், வெப்பு தோடம் ஆகிய தோடங்களும் குறிகுணங்களும் ஏட்டுச் சுவடிகளில் மட்டும் கூறப்பட்டுள்ளன.

### *1. முதல் வகை*

3 வகையாகப் பகுக்கப்பட்ட தோடங்களில் முதல் வகையினதாக அதாவது தோடத்தின் குறிகுணமும் மருத்துவமும் சொல்லப் பட்டனவாக எட்சிதோடம், சன்னிதோடம், சுரதோடம், தேரைத்தோடம்,

நாமுள்தோடம், விடதோடம், கர்ப்பம் அழிந்ததோடம், முட்டுதோடம், குளிதோடம், பெண்தோடம், ஆண்தோடம், புள்தோடம், கருக்கண்புள் தோடம், காணாப்புள் தோடம், அந்திப்புள்தோடம், சங்கண்புள்தோடம், தூங்குபுள் தோடம், பேய்க்கண் புள்தோடம், வறட்புள்தோடம், விளக்கொளி கண்புள் தோடம், வெங்கண்புள் தோடம், வீங்குபுள் தோடம், பறவைத் தோடம், பட்சிதோடம் ஆகியன பற்றிய விளக்கங்கள் இத்தலைப்பின் கீழ் விளக்கப்படுகின்றன.

### *2. மருத்துவம் மட்டும் சொல்லப்பட்டவை*

இதன்கீழ் இரைதோடம், கழிச்சல்தோடம், செவிதோடம், மாந்ததோடம், மாந்தசுரதோடம், ஆகியன விளக்கப்படுகின்றன.

### *3. குறிகுணம் மட்டும் சொல்லப்பட்டவை*

அத்திதோடம், இரத்ததோடம், எட்சிதோடம், கிருஷ்ணதோடம், குதிரைத்தோடம், துவளைத்தோடம், கூகைத்தோடம், கெம்பீரதோடம், கெர்ப்பதோடம், கொடிதோடம், சலதோடம், தீராத்தோடம், தீரைத்தோடம், மலதோடம், மூர்ச்சைதோடம், வலிதோடம், வாததோடம், பால்பச்சியத்தோடம், விரணதோடம், வீக்கதோடம், வெப்புதோடம் ஆகியன இப்பகுதியின் கீழ் சொல்லப்படுகின்றன.

### *தோடத்தின் வகைகள் - பாகுபாடு*

இதுவரை கிடைத்துள்ள தோடங்களை 3 வகையில் பகுத்துக் கொள்ள முடிகிறது. சிலவகை தோடங்கட்கு அதன் குறிகுணமும், மருத்துவமும் கூறப்பட்டுள்ளது. இது முதல்வகை. அடுத்து இரண்டாம் நிலையில் குறிகுணம் சொல்லப்படாமல் அந்தத் தோடத்திற்குரிய மருந்து மட்டுமே சொல்லப்பட்டுள்ளது. இந்த இரண்டிலும் சேராது வெறும் குறிகுணம் மட்டுமே சொல்லப்பட்டுள்ள தோடங்கள் இறுதி வகையாகும்.

1. முதல்வகை.
(தோடக் குறிகுணமும் மருத்துவமும் சொல்லப்பட்டவை)
2. இரண்டாம் வகை - மருத்துவம் மட்டும் சொல்லப்பட்டவை
3. மூன்றாம் வகை - குறிகுணம் மட்டும் சொல்லப்பட்டவை.

### *அத்திதோடம் - குறிகுணங்கள்*

சோகை போல் உடலூதல், இருமல், உணவை வெறுத்தல்,

சாப்பிட்டாலும் கக்கல், பார்வை மங்கல், பாலுண்ணாமை, கடுஞ்சுரங்காய்தல், விட்டு விட்டு சுரம் காய்தல், குளிருண்டாதல், வாய் புண்ணார்தல், கால்கள் வீங்குதல், மலத்தில் இரத்தம், சளி காணல் ஆகிய குறிகுணங்கள் அத்தி தோடத்தினுடையவை. *(ஏடு.185-10)*

### *இரத்த தோடம் - குறிகுணங்கள்*

சுரம் காய்தல், பிறகு இரத்தப்போக்கேற்படல், தாகம் மிகுதியாக எடுத்தல், உடல் வருத்தமடைந்து மென்மைப்பட்டுவிடல், உடல் வியர்த்தல், வயிறு பொருமல், பல் கடித்தல் ஆகிய குறிகுணங்களைக் காணும் போது இரத்ததோடமென்று அறியலாம். *(ஏடு.185-10)*

### *இரைத்தோடத்திற்குக் கற்கம்*

தாயின் அல்லது குழந்தையின் உணவின் குற்றத்தினால் குழந்தைக்கு ஏற்படும் தோடமிது.

பெருங்காயம், மஞ்சாடி, ஓமம் ஆகியவற்றை வகைக்கு 2 1/2கி. எடுத்துக் கொள்க. இச்சரக்குகளைக் குழந்தையின் வன்மை, மென்மைக்கேற்றவாறு அளவினைக் கூட்டியுங் குறைத்தும் எடுத்துக் கொள்க. இவற்றை ஒன்றாயரைத்து காடித் தெளிவில் கலந்து கொடுக்க இரைத் தோடம் நீங்கிப் போகும்.

நன்னாரி வேரைக் குளிர்ந்த தண்ணீரில் அரைத்துக் கொடுக்க இரைத்தோடம் நீங்கும்.

### *எச்சிற்தோடம் - குறிகுணங்கள் (கண்ணேறு தோடம்)*

ஒருவரின் கண்ணேற்றினால் குழந்தைக்கு ஏற்படும் தோடமாகும். குழந்தை தாய்ப்பாலைப் பிடித்து குடிக்காமை, தலையைத் தூக்காமை, ஆற்றல் இழந்து மயங்கிய நிலையிலிருத்தல், உடல் வாடல், இயற்கை நிறம் மாறி வேறு நிறமாய்க் காணல், பூதசுரம் போல் உடம்பு காய்தல், தாயைப் பார்த்து சீறிச் சீறி அழுதல், சிறிது சிறிதாகப் பலமுறை கழிச்சலாதல், கண்கள் ஒட்டிக் கொள்ளல் அதனால் அதை நிமிண்டிக் கொண்டு மண்ணில் புரண்டு புரண்டு அழுதல் ஆகியவை எச்சிற் தோடக் குறிகுணங்கள். (புத் 477-20) (ஏடு. 4485-2)

### *எட்சிதோடம் - குறிகுணங்கள்*

இது கெட்டதேவதையால் அதாவது எட்சி என்னும் பெண் பிசாசின் குற்றத்தினால் குழந்தைக்கு ஏற்படும் ஒரு வகைத் தோடம்.

அறிவு, சக்தியை இழத்தல், தலையெடுத்தல், இருகண்கள் சோர்ந்து போதல், உடல் பலவிதமாக வெதும்பி நிற்றல், புத்தி பேதலித்தல், விலா, முதுகு அதிகமாக வலித்தல், வயிறு அடிக்கடி கழிதல், வாய் நீரூறல், சிலேற்பனத்தால் கழிச்சலாதல். குழந்தையின் உடல் இளைத்தலோடு நாற்றமும் ஏற்படுதல், தாயைக் கண்டு அருவருப்படைந்து பால் குடிக்கும் எண்ணத்தையும் அறவே மறந்துவிடுதல், கழிச்சலுடன் காய்ச்சலும் அடித்தல், பாயும் புலி போன்று பதறிப் பதறி அழுதல், குழந்தைகளைப் பார்த்துக் கொண்டேயிருத்தல், மண்ணில் அடிக்கடி புரளல், கண்களைப் பிசைதல், சன்னியில் காணுவது போல் பலப்பல மாறுதல்கள் காணல். இரத்தம் சூடாகி தலைக்குச் சென்று மயக்கமாதல், தலை கனத்து தூக்க முடியாது திணறுதல், கண்கள் வறண்டு பீளை கட்டுதல், அதனால் கண்களைத் திறக்க முடியாதிருத்தல் ஆகியவை எட்சி தோடக் குறிகுணங்கள். *(புத் 572-58,572-20,482-45,477-19-20,476-15-16)*
*(கை.பி.போ.242-243) (ஏடு.4485-2,435-11,7313-92)*

### *குடிநீர்*

வில்வயிலையுஞ் சீரகமுங் கூட்டிக் குடிநீர் செய்து கொடுக்க எட்சி தோடம் குணமாகும். *(ஏடு.4485-2-3,435-45)*

### *குளிச வகைகள்*

1. வெள்ளிக்கிழமையில் 'அமுக்கிராக்கிழங்கு' செடி இருக்குமிடத்தைச் சுத்தம் செய்க. அதில் மஞ்சள் நூல் காப்புக் கட்டி தூப தீப ஆராதனை செய்து ம,ந,சி,வ,ய என்று 108 முறை சொல்ல வேண்டும். பிறகு வடக்கு நோக்கி செல்லும் வேரை தேவையான அளவெடுத்து பட்டு நூல் சுற்றி குளிசமாகச் செய்து கொள்க. பின் மண்ணால் பார்வதி தேவி போன்று வடிவம் செய்து செடிக்கருகில் வைத்து வாழைப்பழம் முதலிய பொருட்களால் படையல் செய்து தூய்மையான செம்பில் நீர் வைத்து அம்மையை நினைத்துத் தோட மந்திரத்தைக் கூறி தண்ணீர் தெளித்துக் குளிசத்தை எடுத்துக் கட்ட வேண்டும். இவ்வாறு செய்ய எட்சி தோடம் நீங்கும்.

### *2. குளிசம் (வேறு)*

ஆல விழுதுக்குத் தீப தூபம் காட்டி வேண்டிய அளவெடுத்து அதற்கு ஐந்து நிறநூலைச் சுற்றி குளிசமாக்கிக் கொள்க. அதைக்

குழந்தைக்குக் கட்டி கோழியைப் பலி கொடுத்து குழந்தையின் தலையைச் சுற்றி அப்பால் போடுக.

### *குளிப்பாட்டும் நீர் வகைகள்*

1. வேல மரத்திலிருக்கும் புழுவின் கூட்டிற்கு மஞ்சள் நூல் சுற்ற வேண்டும் மஞ்சளரைத்துப் பூச வேண்டும். பின் அதற்குத் தூபதீப வழிபாடு செய்து அக்கூட்டை எடுத்து வர வேண்டும். பின்பு நல்ல தண்ணீருள்ள குளம் மூன்றிலிருந்து நீர் கொண்டு வந்து செப்புப் பாத்திரத்தில் நிரப்பி அதில் அக்கூட்டைப் போட்டு குழந்தையின் தலையில் தெளிக்க வேண்டும்.

### *2. குளிப்பாட்டும் நீர் (வேறு)*

நிலவிளா, வில்வம் இவற்றின் இலைகளைச் சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. அந்நீரால் குளிப்பாட்ட வேண்டும். இவ்வாறு செய்ய எட்சி தோடம் குணமாகும். *(கை.பி.போ.242-243)*

*(புத் 482-45,477-19-20,476-15-16) (ஏடு.4485-2-3)*

### *கழிச்சல் தோடத்திற்கு உப்பிலி நெய்*

வாத, பித்த, கபம், ஆகிய முத்தோடத்திலேற்பட்ட குற்றத்தினால் ஏற்பட்ட ஒரு வகைக் கழிச்சல்.

நறுக்கின உப்பிலாங்கொடி 100கி. எடுக்க. அத்துடன் 100கி. பசுவின் நெய் சேர்த்து ஒரு மண் சட்டியில் ஊற்றி 12 மணி நேரம் கதிர்ப்புடம் வைத்துக் கொள்க. பதமானவுடன் எடுத்து 5-10 மி.லி. கொடுக்க கழிச்சல் தோடம் நீங்கும். *(புத் 477-326,482-99)*

### *கிருஷ்ண தோடம் - குறிகுணங்கள்*

நாக்கு, வாய் கறுத்தல், கண் மருளல், பாலுண்ணாமை, உடலெங்கும் அனல் போல் காய்தல், கண் குளிரல், சிறுநீர் கட்டல், தாகமுண்டாதல், வயிறு கிளர்ந்திருத்தல் ஆகிய குறிகுணங்களைத் தோற்றுவிக்கும் இத்தோடம். *(ஏடு.185-9)*

### *குதிரைத் தோடம் - குறிகுணங்கள்*

சுரமுண்டாகல், மலம், நீர் அடைத்துக் கொள்ளல், விலா நெஞ்சு இழுத்து வாங்கல், கபமும் அதிகமாகல், உடல் நடுங்கல், விழி மேல்நோக்கிப் பார்த்தல், கையும் காலும் வலித்தல், ஆகிய குறிகுணங்களைக் காட்டி 18 நாட்களுக்குள் மரணமடையச் செய்யும். *(ஏடு.185-8)*

### *குவளைத் தோடம் - குறிகுணங்கள்*

சீழ், தண்ணீர், இரத்தம் ஆகியவை தோன்றல், சுரமடித்தல், இருமல், வயிறு வலித்தல், வேதனை மிகுந்து வேப்பம் பூ போல் கழிதல், வயிறும் நெஞ்சும் வீங்குதல், விலாவும் சுரந்து வீங்குதல் ஆகிய குறிகுணங்களைக் காட்டி 21 நாளில் மரணத்தையுண்டாக்கும். *(ஏடு.185-8)*

### *கூகைதோடம் - குறிகுணங்கள்*

கண் எப்போதும் திறந்திருத்தல், பாலுண்ண இயலாமை, வயிறூதல், கொலுகொலென மலம் போதல், இழுத்து வாங்கல்,தலை தளர்ந்திருத்தல், சுரம் காணல், கை கால் வலித்தல், நாக்கு தள்ளுதல், பற்களைக் கடித்தல், சில நேரங்களில் கண்மூடல் ஆகிய குறி குணங்களைத் தோற்றுவித்து 16 ஆம் நாள் மரணத்தைத் தோற்றுவிக்கும். *(ஏடு.185-9)*

### *கெம்பீர தோடம் - குறிகுணங்கள்*

அலறியழுதல், தாய்ப்பால் உண்ணாமை, விழி திறக்காமலிருத்தல், சிறுநீர், மலம் இரண்டும் கட்டிக் கொள்ளுதல், வயிறூதல், நாக்கு வறளல், கபம் தொந்தித்தல், கை கால் வெட்டல், மயக்கம், அனல் போல் காயல், 12 நாட்களுக்குள் கொல்லுதல், ஆகியவை கெம்பீர தோடத்தின் குறிகுணங்கள். *(ஏடு.185-2-3)*

### *கெர்ப்ப தோடம் - குறிகுணங்கள்*

மலம், சிறுநீர் கட்டுதல், வயிற்றுப் பொருமல், இருமல், சுவாசம் மூச்சிழுப்புண்டாதல், தாகமெடுத்தல், 5 நாளில் மரணமேற்படல் ஆகியவை கெர்ப்ப தோடத்தின் குறிகுணங்கள். *(ஏடு.185-5)*

### *கொடி தோடம் - குறிகுணங்கள்*

சுரம் காய்தல், மலத்தில் இரத்தம், சளி விழல், குதத்தில் மூலம் வெளிவரல், கபம் உண்டாகி இருமல் காணல், சுரம் அதிகமாகல், குடல் தன் தன்மையை இழத்தல் ஆகிய இக்குறிகுணங்கள் கொடி தோடத்தினுடையவை. *(ஏடு.185-21)*

### *சலதோடம் - குறிகுணங்கள்*

கழிச்சல் தண்ணீராயாதல், வயிறூதல், சத்தில்லாது போதல், கை கால்கள் அசதியாதல், தாகமுண்டாதல், சீதமும் மிகுதியாகத் தோன்றல்,

தோல் சுருக்கமாதல், குழந்தை பால் குடித்தால் கக்கி விடுதல், வேதனை மிகுதியாதல் ஆகிய குறிகுணங்களைக் காட்டி 2 நாளில் மரணத்தையுண்டாக்கும்.

### *சன்னிதோடம் - குறிகுணங்கள்*

நெற்றி, முகம் சிவப்பாதல், சத்தம் போட்டுக் கொண்டிருத்தல், குடித்த பாலானது மூக்கு, வாய் வழியே வெளிவரல், உடலெல்லாம் முறுக்கின் பூ நிறமாகல், கபம் இளகல், கை கால் வெட்டல், நிறம் மாறி விடல், மயக்கம் ஏற்படல், வயிறூதல், 16 நாட்களுக்குள் மரணமாதல், ஆகியவை சன்னி தோடத்தின் குறிகுணங்கள். *(ஏடு.185-2)*

சுரம் காய்தல், வயிறூதல், நெஞ்சு திடுக்கிடல், கண்களைச் சுழற்றி பார்த்தல், வாய்கடித்து அலறுதல், நடுங்கல், கரங்கள் முறுக்கல், மலத்தில் இரத்தம் காணல் ஆகிய குறிகுணங்களைக் காட்டி ஏழு நாட்களில் மரணத்தை ஏற்படுத்தும். *(ஏடு.185-6)*

### *உருண்டை*

சன்னியைப் போல் இரத்தம் கபாலத்திற்குப் பாயாமல் இரத்தாதிக்கத்தினால் வெறும் குறிகள் மட்டும் காணும்; மயக்கம், வாய் குளறல் தோன்றும்.

சாதிக்காய், கிராம்பு, ஓமம், கருஞ்சீரகம், சுக்கு, திப்பிலி, கத்தூரி மஞ்சள், வசம்பு, பெருங்காயம், வெள்ளைக் காக்கணான் வேர்ப்பட்டை ஆகிய மருந்துச் சரக்குகளைச் சமன் கூட்டி வெந்நீரிலரைத்து 130மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து உலர வைத்துக் கொள்க. அவ்வுருண்டையை வெந்நீரில் இழைத்து மூன்று நாட்களுக்குக் கொடுக்க குழந்தைகட்கு வரும் சன்னிதோடம் நீங்கிப் போகும். பேதி அதிகமானால் வசம்பைச்சுட்டு நீரில் கலக்கிக் கொடுக்க தீரும்.

*(புத்.482-106)*

### *சுரதோடம் - குறிகுணங்கள்*

கடுஞ்சுரங்காய்தல், பல்லைக் கடித்தல், பாறை போல் வயிறு ஊதல், கபம் கல்லைப்போல் கட்டுதல், மலத்தில் இரத்தம் விழல், உடல் நடுங்கல் ஆகிய குறிகுணங்களைக் காட்டி 3 நாளில் மரணத்தையுண்டாக்கும். *(ஏடு.185-7)*

### *எண்ணெய்*

ஆமணக்கெண்ணெய் 1.3லி, நுணாச்சாறு 675மி.லி., ஈருள்ளிச்சாறு 375மி.லி. எடுக்க. வெந்தயம் 17 1/2கி. எடுக்க. எண்ணெயைக் காய்ச்சி நற்பதத்தில் இறக்கிக் கொள்க. அவ்வெண்ணெயைக் குழந்தைகட்கு 5-10மி.லி. கொடுக்க சுரதோடம் நீங்கி குழந்தை நலம் பெறும்.

*(புத்.476-124)*

### *பாலசஞ்சீவி மாத்திரை*

சுக்கு, மிளகு, திப்பிலி, வெங்காரம், சாதிலிங்கம் ஆகிய ஐந்து மருந்துகளைச் சமனெடுக்க. அவற்றை எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்துக் கொள்க. 3 மணி நேரம் ஆட்டி 32மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து கொள்க. அவற்றை நிழலிலுலர்த்திக் கொள்க.

மணித்துளசி, செம்முள்ளி, ஆடாதோடை, தூதுவளை, விட்டுணுகாந்தி, கண்டங்கத்திரி, வெதுப்படக்கி, பேய்ப்புடல், சங்கிலை, நொச்சி ஆகிய மூலிகைகளைச் சமன் எடுத்துக் கொள்க. அவ்விலைகளைப் பிட்டவித்து நீர் எடுத்து திரிகடுகைக் கற்கமாக்கிக் கொள்க. இக்கற்கத்தில் மேற்சொன்ன உருண்டையை இழைத்துக் கொடுக்க சுரதோடம் நீங்கி குழந்தை நலமாகும்.

*(476-124-125), (பா.செ.மு.கு.).*

### *சுரதோட கழிச்சலுக்குக் குடிநீர்*

சுக்கு, கோரைக்கிழங்கு, ஓமம், சித்தரத்தை, சிறுதேக்கு, இருவேலி, பற்பாடகம், கருவேம்பு, தும்பை, பொடுதலை, கொழுஞ்சி, வேலிப்பருத்தி ஆகிய மூலிகைகளின் சமூலத்தைச் சமனெடுத்து வறுத்து முறைப்படி குடிநீராக்கி அளவறிந்து குழந்தைக்குக் கொடுக்க சளி, இரத்தம் விழல் நின்று போகும். சுரம் விட்டு விடும்.

*(ஏடு.185-12)*

### *சுழியன் தோடம் - வகைகள்*

குதிரை தோடம், கூகை தோடம், காகதோடம், முசல்தோடம், சன்னிதோடம் ஆக சுழியன் தோடம் 5 வகைப்படும். *(ஏடு.185-8)*

### *செவிதோடத்திற்கு எண்ணெய்:-*

வசம்பு, கருஞ்சீரகம், ஏலம், அரத்தை, மிளகு, இசங்கு, மஞ்சள், நற்சீரகம், ஈருள்ளி ஆகியவற்றை வகைக்கு 2கி. எடுத்துக் கொள்க.

நல்லெண்ணெயைத் தேவையான அளவெடுத்து அதில் மேற்சொன்னவற்றைப் பொடித்துப் போடுக. அக்கலவையை நன்கு காய்ச்சி வெந்தவுடன் வடித்திறக்கிக் கொள்க. அதனை இளஞ்சூட்டில் பக்குவத்துடன் செவியில் விட செவித்தோடம் நீங்கும். செவிப்புண்ணில் தடவ ஆறும். *(ஏடு.601-10)*

### *தீராத்தோடம் - குறிகுணங்கள்*

கண் மிகவும் சொருகுதல், சீதமுந்தண்ணீருமாய்ச் சேர்ந்து கழிதல், உடல் கறுப்பாதல், நாற்றமெடுத்தல், மலவாய் மாங்காய் போலாதல், வெளித்தள்ளி நிற்றல், உடலிளைத்தல், வயிறு அதிகமாக ஊதுதல், வானம் போல வயிறு ஆதல், தாய்ப்பாலைக் குடிக்காமை, பாலை அருவருத்தல், அருவருப்பையுண்டாக்குதல், காய்ச்சலடித்தல், கண் குழிவடைதல் ஆகியவை தீராத் தோடத்தின் குறிகுணங்கள்.
*(புத்.477-27,476-27,572-26) (கை.பி.போ.26)*

### *தீரைத்தோடம் - குறிகுணங்கள்*

குடல் திரண்டு மேனி மெலிந்து வயிறு வலித்துத் துன்புறுத்தல், கொலு கொலுவென்று வயிறிரைந்து மலம் கழிதல், துடிதுடித்து குழந்தை அலறுதல், விழி மருளுதல், கை கால்கள் வலித்து குளிர்ச்சியாதல், உடல் வில் போல் வளைதல் ஆகிய குறி குணங்களைக் காட்டும். மரண பயம் இல்லை என்று சொல்லலாம்.
*(ஏடு.185-6)*

### *தேரைத் தோடம் - குறிகுணங்கள்*

சதை வற்றி உடம்பு உலரல், நெஞ்சு கூடாதல், கண் சிறுத்துக் காணல், கை, கால்கள் முடங்கிப் போதல், வயிறு பக்கவாட்டில் புடைத்தல், மலந்தீயல், வாயுலர்தல், நீர்வேட்கை, தொப்புள் மலரல் போன்றவைகளுடன் குரல் மாறும். குழந்தையினது முகம் வாடிவிடல், காது சரியாய்க் கேட்காமை, பால் குடிக்காமை, மேல் மூச்சு வாங்கல், கை, கால்கள் வறண்டு போதல், கை, கால்களைக் கட்டிப் போட்டது போன்று உடல் சோர்ந்து காணல். உடலும் வறண்டு வெளிறிப்போதல், குரல் தெறித்தல், எவ்வளவு பால் குடித்தாலும் உடம்பு தேறாமை இத்தகு குறிகள் குழந்தையிடம் கண்டால் அது தேரைத் தோடமாகும்.
*(ஏடு.4485-6,941-10,604,519-11,7313-97,4552-11),*
*(கை.பி.போ.258).*

### *புள்ளடி நெய்*

புள்ளடி, நீராரைக்கீரை, சிறுகீரை, பொன்னாங்காணி, நீர் முள்ளி இவற்றின் சமூலங்களை எடுக்க, களா காட்டுமல்லி, குமரி, அவுரி, கரிசலாங்கண்ணி, முடக்கொத்தான் இவற்றை வகைக்கு 60கி. எடுத்துக் கொள்க. அவற்றை மண் சட்டியிலிட்டு 3.9 லி. நீர் ஊற்றி அதனை 1 லிட்டராகச் சுருக்கி வடித்துக் கொள்க. பிறகு அதிமதுரம், 9கி. மிளகு எடுத்து பசுவின் பால்விட்டு அரைத்து அதில் கலக்க வேண்டும். அத்துடன் 2.6லி. நெய் விட்டு எரித்து பக்குவமானவுடன் இறக்கிக் கொள்க. இதைக் காலை, மாலை 5-10மி.லி. கொடுக்க, இப்படி 3 (அல்லது) 5 நாட்கள் கொடுக்க. இப்படிக் கொடுக்க தேரைத்தோடம் நீங்கும். *(ஏடு 941-10-11,604,519-11,362-12,169-16,4552-12), (புத்.476-25-26,477-25-26,482-49) (கை.பி.போ.259)*

### *குளிசம்*

நாகதாளி, தலைச்சுருளி, வள்ளி ஆகிய மூலிகைகளின் வேர்களை எடுத்துக் கொள்க. தேங்காய் நீரைச் சொரிந்து கோழியைப் பலி கொடுக்க அம்மருந்தைக் குளிசமிட்டுக் கட்ட வேண்டும். தேரைத் தோடம் நீங்கும். *(ஏடு.4485-7)*

### *நாமுள்தோடம் - குறிகுணங்கள்*

பெண்ணின் துயரத்தாலும், குழந்தை பிறந்தபோது ஏற்பட்ட தோடத்தாலும் தாயின் பசியாலும், வருத்தத்தாலும் குழந்தைக்கு பாலூட்டினால் நாமுள் தோடம் ஏற்படக்கூடும். *(கை.பி.போ.262).*

இந்த நோய் அதிகமாகும் போது இருமல், மேல் மூச்சுண்டாதல், இரண்டு கண்களில் நீர்சொரிதல், தலைவலி, சுரம், தாய்ப்பால் அருந்தாமை, விலாவிரண்டும் தூக்கிப் போடுதல், வாயில் நாமுள் ஏற்படுதல், தொண்டையும் முள்ளாதல், தலை நடுங்கி பேசமுடியாத படிக்கு தொண்டையில் சிலேத்துமம் உண்டாதல். *(கை.பி.போ.362) - (புத்.476-154).*

இரு கண்ணும் விழித்திருத்தல், பாலுண்ணாது சீறிச் சீறி அழுதல், அதிகமாக வாந்தியெடுத்தல், குழந்தை கையில் தங்காமை, உடம்பு நெருப்பு போல் சூடாதல், வெள்ளை நிறத்தில் கழிதல், இவையே நாமுள் தோடத்தின் குறிகுணங்களாகும். *(கை.பி.போ.262-263) (புத்.572-15-16,476-154).*

***சாறு வகைகள்***

1. மஞ்சள் கடுக்காய் ஒன்றைப் பொடி செய்து கொள்க. சோற்றுக் கற்றாழஞ்சாறு எடுத்துக் கொள்க. சீரகத்தையும் அதனுள் போட்டு தாய்ப் பாலையும் கலந்துகொள்க. 5-10மி.லி. எடுத்து மூன்று நாள் அதைக் குழந்தைக்குக் கொடுக்க நாமுள் தோடம் நீங்கும். *(கை.பி.போ.262-263), (புத்.476-155).*

2. சங்கங் கொழுந்து, நெருஞ்சில் முள், மிளகு, மிளகுத்தக்காளியிலை, மஞ்சள், வெங்காயம் ஆகிய மூலிகைகளை எடுத்து சாறு பிழிந்துக் கொள்க. அச்சாற்றினை 5-10 மி.லி. குழந்தைக்குக் கொடுக்க நாமுள் நீங்கி விடும். *(புத்.572-16, 477-155)*

3. மணித்தக்காளி இடித்த சாறு 4 கி. எடுத்து தனியாக வைத்துக் கொள்க. இதனைக் காலை, மாலை இருவேளையும் 5-10மி.லி. அளவறிந்து கொடுத்து வர நாமுள் தோடம் நீங்கும். *(கை.பி.போ.264)*

4. மணித்தக்காளி இறுத்த சாறு 4கி. எடுத்து தனியாக குழந்தைக்குப் புகட்டி வரவும். இதனைக் காலை, மாலை இருவேளையும் கொடுத்து வர நாமுள் தோடம் நீங்கும்.

இந்த நாமுள் தோடத்திற்கு சூடான மருந்துகளை உபயோகிக்கக் கூடாது. மணித்தக்காளித் தீநீரை மட்டும் நிதானமாகவும் பொறுமையாகவும் உபயோகித்து வந்தால் தானே குணமாகிவிடும். அவசரப்பட்டு வேகமான (சூடான) மருந்துகளை உபயோகித்தால் நற்குணத்திற்குப் பதிலாக கெட்ட குணமே உண்டாகும். *(கை.பி.போ.264).*

***நீர்த்தோடம் - குறிகுணங்கள்***

சுரம் காய்தல், இடுப்புக்குக் கீழ் வீங்குதல், வயிறு, முகம், புறங்கை வீங்குதல், முக்கல், தாகமெடுத்தல், இரத்தம், சளி மலத்தில் விழுதல் ஆகிய குறிகுணங்களைக் கண்டால் இது நீர்த் தோடம்.

***பித்த தோடம் - குறிகுணங்கள்***

உடல் தளர்தல், உச்சி, கண் குளிரல், பொருமல், கழிச்சல், இருமல், சிறுநீர் கட்டடல், விழி தளர்தல், வயிறிரைப்பு தோன்றல், அழுதல், கை, கால் குளிர்தல், 11 நாட்களுக்குள் மரணம் ஆதல் ஆகியவை பித்த தோடத்தின் குறிகுணங்கள். *(ஏடு.185-5).*

### *மலதோடம் - குறிகுணங்கள்*

மலத்தில் இரத்தமும் சளியும் காணப்படல், நாற்றமுண்டாதல், பெருங்கழிச்சல் ஏற்படல், வயிறு, கால், கை வீக்கமாதல், பிடரி நோதல், வேதனை பலவாறாக ஆதல், சோறு செல்லாமை, சுரம் காய்தல், தாகமெற்படுதல் ஆகிய குணங்களைக் காட்டி 10 நாளில் மரணத்தையுண்டாக்கும்.

### *மாந்த தோடத்திற்கு எண்ணெய்*

முடக்கொத்தானிலை, காட்டுச்சாரணை எனும் மூக்கரைச்சாரணை வேர், இலை, கொழுந்து, குப்பைமேனியிலை ஆகியவற்றைச் சமமாய் எடுத்தரைத்து விளக்கெண்ணெயிற் போட்டு பதமாய்க் காய்ச்சிக் குழந்தையின் வயது, நோயின் மென்மை, வன்மைக்குத் தக்கவாறு 5-10மி.லி. கொடுக்க மாந்த தோடம் குணமாகும். *(புத்.482-59).*

### *மாந்த சுரதோடத்திற்கு எண்ணெய்*

ஆமணக்கெண்ணெய், நுணாச்சாறு இவற்றை வகைக்கு 1.3லி. ஈருள்ளிச் சாறு 335மி.லி. வெந்தயம் 9கி. ஆகியவற்றை எடுத்துக் கொள்க. வெந்தயத்தை அரைத்து எண்ணெயில் சேர்க்க. அதனைப் பதமாய்க் காய்ச்சிக் குழந்தைகளின் நோயின் வன்மை, மென்மைக்குத் தக்கவாறு 5-10மி.லி. அளவறிந்து கொடுக்க மாந்த சுரதோடம் நீங்கிப் போகும். *(புத்.482-97).*

### *மூர்ச்சை தோடம் - குறிகுணங்கள்*

விலா இரண்டும் சிகப்பாகத் தோன்றுதல், நெஞ்சு குழி, பிடரி, உந்தி இவை பலாப்பூ போல் நிறமாதல், அனல் போல் சுரங்காய்தல், கபமுண்டாதல், மயக்கமாதல், விழி திறக்காமலிருத்தல், தாய்ப்பால் உண்ணாமை, நகக்கண் கறுப்பாதல், சிறுநீர் கட்டிவிடுதல், 13 நாளில் மரணமாதல் ஆகிய குறிகுணங்கள் மூர்ச்சை தோடத்தின் குறிகுணங்கள். *(ஏடு.185-3).*

### *வலி தோடம் - குறிகுணங்கள்*

சூரிய ஒளி போல் அனல் மிகுந்து சுரங்காய்தல், உடல் குலுங்கல், பல் கடித்தல், பாலுண்ணாமை, சன்னி தோன்றல், உடல் வில் போல் வளைதல் ஆகிய குறி குணங்களைக் கண்டால் அது வலி தோடம். *(ஏடு.185-11).*

கெட்டியான மலம் போதல், வயிறு பொருமிக் கொள்ளல், வயிறு பாறை போல கெட்டியாதல், சுரம் காய்தல், வலியும் நடுக்கமும்

ஏற்படல், கைகால் வலித்தல், குளிரல், வாய் திறந்து அழாமை, தீயென அனலடித்தல், மெலிதல், மேல் மூச்சு வாங்கல், ஆகிய குறிகுணங்களைக் காட்டி 8 நாட்களில் கொல்லும். *(ஏடு.185-7).*

***வாத தோடம் - குறிகுணங்கள்***

வாத, பித்த, தோடமாகிய மூன்று வகைகளுள் வாத தோடத்தில் உடல் தளர்தல், வயிறூதி முக்கல் தோன்றல், குற்றங்கள் உடலில் சேரல் ஆகிய குறிகுணங்கள் தோன்றும்.

வாதத்தினோடு கபம் சேர்ந்து கொண்டால் மேல் மூச்சு, நடுக்கம் தோன்றி 4ஆம் நாளில் உயிர் போகும். *(ஏடு.185-5)*

***வால் பச்சியத்தோடம் - குறிகுணங்கள்***

பெண்ணானவள் உணவை நன்றாக மென்று தின்னாமல் இருக்கும் போது அந்தப் பாலைக் குழந்தைகக்குக் கொடுக்கலாகாது. அவ்வாறு கொடுத்தால் சீதக்கழிச்சல் உண்டாகும். தொடர்ந்து பால் கொடுத்தால் சீதம் மேலும் அதிகமாகி வயிறு கழிந்து கொண்டேயிருக்கும்.

*(ஏடு. 601-1)*

***விடதோடம் - குறிகுணங்கள்***

ஆண்கள், பெண்கள் கலவி செய்த பின்பு தலை முழுகாமல் குழந்தைகளைத் தொடுவதினால் ஏற்படும் தோடம். (டி.வி.எஸ். அகராதி).

***குடிநீர்***

சிறுதேக்கு, வாய்விடங்கம், வால் மிளகு, கடுகுரோகணி, சுக்கு, ஏலம், திப்பிலி, இலவங்கம், தான்றி, தக்கோலம், கசகசாவின் ஓடு ஆகியவற்றை வகைக்கு 9கி. எடுக்க. அவற்றைச் சூரணமாயிடித்துக் கொள்க. அதனைப் பாண்டத்திலிட்டு 2.6லி. தண்ணீர் விட்டுக் காய்ச்சுக. எட்டொன்றாய்ச் சுருக்கி 15-30மி.லி. அளவறிந்து குழந்தைகட்குக் கொடுக்க விடதோடம் நீங்கிப் போகும். *(புத்.572-51).*

## மாத்திரை வகைகள்

***1. கத்தூரி மாத்திரை***

கத்தூரி 5கி., குங்குமப்பூ 10கி. கோரோசனை 15கி., எடுத்து மூன்றையும் கல்வத்திலிட்டுக் கொண்டு தாய்ப்பாலை விட்டு 3

மணிநேரமரைத்து 135 மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து கொண்டு நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்தி வைத்துக் கொள்க.

அந்த மாத்திரையை எடுத்து தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க விடதோடம் நீங்கும். *(புத் 572-37)*

### *2. ஏலாதி மாத்திரை*

ஏலம், கிராம்பு, முத்தம், அதிமதுரம், வெட்டிவேர், கடுகு, சுக்கு, கொடி முந்திரிப்பழம், கோரோசனை, நன்னாரி, நிலப்பனையின் வேர், தாளிசம், சடாமாஞ்சில், சந்தனத்தூள், இலுப்பைப்பூ, தேவதாரம், திப்பிலி, கடுகுரோகணி ஆகியவற்றை வகைக்கு 1 1/4கி. எடுத்துக் கொள்க.

அச்சரக்குகளைக் கல்வத்தில் போட்ட பின்பு செவ்விளநீரை வார்த்து 6 மணிநேரமரைத்துக் கொள்க. அவ்விழுதை மேலும் 6மணி நேரம் தாய்ப்பால் விட்டு அரைக்க. பின்னர் 135மி.கி. அளவாக உருண்டை செய்து 15 நாள் நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்க.

முதியார் கூந்தலைக் கியாழமிட்டு அதில் அந்த உருண்டையை இழைத்துக் கொடுக்க விடதோடம் நீங்கும். *(புத்.476-129-130)*

### *விரணதோடம்- குறிகுணங்கள்*

குழந்தைக்கு வாய்ப்புண்ணாதல், சிறுநீர்த்தாரை புண்ணாதல், பாலுண்ணாது வருந்துதல், உடலில் நீர் சேர்தல், கால், கை வீங்கல், சுளுக்கு பிடித்திருத்தல், சூரிய ஒளி போல இரவில் காய்ச்சலடித்தல், ஆகிய குறிகுணங்கள் 6 மாதம் தொடர்ந்திருப்பின் கபம் சிறிதளவாக உண்டாகி இருமல் தோன்றுதல், விலா இரண்டிலும் குழி தோன்றல், சிறுநீரிலே வெள்ளை மாவுபடிந்திருத்தல் ஆகிய குறிகுணங்களை மேலும் தோற்றுவித்து ஏழாம் மாதத்தில் மரணத்தையுண்டாக்கும்.

*(ஏடு.185-4)*

### *வீக்க தோடம் - குறிகுணங்கள்*

அடிவயிறு பலாசம் பூ நிறமாதல், பாலன் அலறியழும் முன் சிவந்த நிறமாக மாறுதல், கழுத்தடி, முகம், கைகால் இவற்றில் நீர் கோர்த்து வீக்கமாதல், ஒன்பது தினங்களில் இறத்தல், மலம், நீர் கட்டல் ஆகியவை வீக்க தோடத்தின் குறிகுணங்கள் *(ஏடு.185-3)*

### *வெப்புத்தோடத்திற்கு அமிர்தாதிக் குளிகை*

அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், கோரோசனை, சாத்திரபேதி,

வெட்டிவேர், கோட்டம், மாசிப்பச்சை, விலாமிச்சம் வேர் ஆகிய மருந்துச் சரக்குகளை ஆதொண்டைச்சாறு விட்டு 3 மணி நேரமரைக்க. அரைத்த விழுதை 135மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து கொள்க. அதனைத் தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க வெப்புத்தோடம் நீங்கும். *(புத்.647-76-77)*

### *இரண்டாம் நிலை தோடங்கள்*

### *அழிதோடம் - குறிகுணங்கள்*

கருவழிந்த போது குழந்தையைப் பார்ப்பதனாலும் எடுப்பதனாலும் உண்டாகும் தோடம். குடிக்கும் பால் தங்காமை, உடம்பு கூசல், வலித்தல், நெஞ்சு மேலெழுந்து மிகவும் வலித்தல், இருமுதல், பாலைக் கக்கிவிடுதல், சிலேத்துமம் அதிகமாகி கால்கை ஒய்ச்சலாக அழுக்கேறியிருத்தல் ஆகியவை அழிதோடக் குறிகுணங்கள்.

*(ஏடு.169-13,4552-9,362-10,6218-7)*

### *கர்ப்பம் அழிந்த தோடம் குறிகுணங்கள்*

கர்ப்பச் சிதைவுண்டாகி தீட்டாயிருக்கும் போது வேறு குழந்தைகளைப் பார்ப்பதனாலும் எடுப்பதனாலும் உண்டாகும் தோடம் இது.

குடித்தபால் உடனே வாந்தியாதல், உடல் மிகவும் வலித்தல், நெஞ்சு அயரல், அண்ணாந்து பார்த்தல், கழுத்து அதிகமாக வலித்தல், உடம்பில் துர்நாற்றம் ஏற்படுதல், கை கால்களில் அழுக்குபடிதல், குழந்தை பதைத்துத் துடித்து வருத்தமடைதல், கால்கள் பின்னுதல், உடலிளைத்தல், சிவத்தல், கண் சொருகுதல், அதிகமாக மயங்குதல், இவையே கர்ப்பம் அழிந்தவள் கண்ட தோடக் குறிகுணங்கள்.

*(புத்.477-25,476-25)*

### *மருந்து வகைகள்*

1. பருத்தி வேரை நீர் விட்டரைத்து ஒருவேளைக்கு 390மி.கி. வீதம் காலையிலும் மாலையிலும் கொடுக்க வேண்டும். இவ்வாறு 3 அல்லது 5 நாட்கள் கொடுக்க வேண்டும். அத்துடன் குளிர்ந்த நீரில் பனை வெல்லத்தைக் கரைத்துக் கொடுக்க வேண்டும்.

*(ஏடு.941-8) (புத்.482-48,477-25,476-25)*

2. கழுதை லத்திச் சாற்றில் பருத்தி வேரை அரைத்துக் கலக்கிக் கொடுக்க குணமாகும். பனைவெல்லத்தைக் கழுதை லத்திச் சாற்றில் கலக்கிக் கொடுக்க தீரும்.

### *குளிசம்*

காட்டாத்திவேரை அளவோடு கொண்டு வந்து முறைப்படி குளிசம் செய்து குழந்தைக்குக் கட்ட வேண்டும்.

### *குளித்தவள் கண்ட தோடம் - குறிகுணங்கள்*

உடம்பு தேயல், வெளுத்துப் போதல், கழிச்சலேற்படுதல், பால் சிறிது குடித்து பிறகு குடிக்காது விட்டு விடல், உடல் காய்தல், கண்ணினைப் பிசைதல், உடல் முழுதும் வியர்த்தல், வயிறு நோதல், குழந்தை நன்றாய் உறங்குதல், உறக்கத்திலேயும் விழித்துக் கொண்டிருக்கும் போதும் வாந்தியெடுத்தல், வாந்தியெடுத்த சிறிது நேரத்தில் பேதியாதல், விழி குழி விழுதல், உடலானது மெய் அயர்வில் உலர்ந்து போதல், வயிறு காய்தல், நீர்தாகமெடுத்துப் பின் குடித்தல், தரையில் படுத்துக் கிடத்தல் ஆகியவை குளித்தவள் கண்ட தோடக் குறிகுணங்களாகும்.

*(ஏடு.7313-95,435-32) (புத்.477-24,476-24,572-57-58)*

### *கடக்க நின்றவள் எடுத்த தோடம் (அல்லது) குளித்தவள் எடுத்த தோடம் - குறிகுணங்கள்*

தீண்டத்தகாத (மாதவிடாய்) நாளில் தாயானவள் குழந்தையைத் தூக்கும் போது குழந்தைக்கு உடல் வெதும்பல், தண்ணீர் தாகமெடுத்தல், கண் குளிர்ந்து விடுதல், உடல் வெளிறல், வற்றி விடுதல், நாற்றமெடுத்தல், கழிச்சல் அதிகமாதல், தளர்ச்சியேற்படுதல், விக்கலுண்டாதல், உடல் சூடாகி அதனால் தூங்கும் போது கண்களில் பீளை ஏற்படுதல் போன்ற குறிகுணங்களும் மேனிவாடி வலித்தல், கனத்தல், தங்காமல் தண்ணீர் போல வாந்தியாதல், நெற்றியில் குழி விழுதல், தலை உச்சியில் பள்ளம் விழுதல், நெற்றி, மூக்கு, இவற்றில் வியர்வை வருதல், கண் கீழ்ப் பார்வையாதல், வாய் கறுத்திருத்தல், கண்ணில் குழி விழுதல், வளையமிடுதல், வயிறிரைதல், கால்கள் ஒன்றோடொன்று பின்னுதல், குழந்தை கதறி அலறி அழுதல், சீறுதல், கண்களைத் திறந்து எதிரிலுள்ளவர்களை பார்த்துத் தாவுதல், வாய் வெளுத்தல், வயிறு அடிக்கடி வலித்தல், பால் குடியாமை ஆகிய குறிகுணங்களும் குளித்தவள் எடுத்த தோடத்தினுடையவை.

*(ஏடு.7313-93,9,601-26)*

### *முட்டுத்தோடம் - குறிகுணங்கள்*

மாதவிடாயான கன்னிகள் குழந்தையை எடுத்தால் முட்டு தோடம் உண்டாகும்.

அத்தோடத்தில் உடம்பு வாடுதல், மிகவும் நாறுதல், குழந்தைகள் பாலை மறந்திருத்தல், பால் தங்காமை, தாயைக் கண்டால் நிற்காமை, வாந்தியாதல், கண்குழி விழுதல், அப்போதைக்கப்போது வயிறு கழிதல், காய்ச்சலடித்தல், கண்ணைப் பிசைந்து கொள்ளுதல், நாக்கு, வாய் கறுத்துக் காணல், தொட்டவுடன் தூங்காமை, துடி துடித்து அழுதல், கண் பஞ்சடைத்துக் கொள்ளல், நா வறட்சியடைதல், உடலொடுங்கி விடுதல், கழிச்சலாதல் ஆகிய குறிகுணங்களுண்டாகும். *(ஏடு.4485-7)*

### *குடிநீர்*

கோரோசனை, திரிகடுகு, சீரகம் ஆகியவற்றை ஒன்று சேர்த்துக் குடிநீராக்கிக் கொடுக்க முட்டுதோடம் நீங்கும்.

*(ஏடு.169-17) (புத்.482-48)*

### *மாத்திரை*

அதிமதுரம், மரமஞ்சள், கோரைக்கிழங்கு, அதிவிடையம், சுட்டெரித்த வசம்புச்சாம்பல், மஞ்சள், கடுக்காய்த்தோல், தேவதாரம் ஆகிய இவற்றின் சூரணத்தை வகைக்கு 17 1/2கி. எடுத்துக் கொள்க.

மேற்படி சூரணங்களையெல்லாம் ஒன்றாகக் கலந்து கல்வத்திலிட்டு ஒரு மணி நேரமரைத்து எல்லாம் கலந்த பின்பு பொடுதலைச் சாற்றைச் சிறுக சிறுக வார்த்து 6 மணி நேரம் அரைத்து 135மி.கி. அளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்தவும். மாத்திரைகளை வயதிற்குத் தக்கபடி எடுத்து தேன், தாய்ப்பால் முதலியவற்றில் கலந்து கொடுக்க முட்டு தோடம் நீங்கிப் போகும். (கை.பி.போ. 260).

### *குளிச வகைகள்*

1. துத்திவேர், பாலைவேர் ஆகிய இரண்டையும் கலந்து ஒன்று சேர்த்து குளிசமிட்டு குழந்தைக்குக் கட்ட வேண்டும். கோழியைப் பலியிட்டு நீர்சொரிந்து மந்திரிக்க வேண்டும். *(ஏடு.4485-7)*

### *2. திருகுகள்ளி வேர்க் குளிசம்*

ஞாயிற்றுக் கிழமையன்று திருகுகள்ளிச் செடியின் வடக்கு நோக்கிச் செல்லும் வேருக்குக் காப்புக்கட்டி அதை எடுத்து குளிசம் செய்து குழந்தையைக் குளிப்பாட்டி அதற்குக் கட்டிவிட வேண்டும். தொடர்ச்சியாக மூன்று நாள் குளிப்பாட்டி அதற்குரிய கழிப்புகளைச்

செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் குளித்தவள் குழந்தையைத் தொட்டு எடுத்ததினால் உண்டாகும் தோடம் நீங்கும்.

### *3. குளிசம்*

தூதுவளை, குப்பைமேனி, குருவிச்சி, தும்பை ஆகிய நான்கு வேரையும் அளவாக எடுத்து ஒன்றாய் முறுக்கி விதிப்படி குளிசம் செய்து கட்ட வேண்டும். *(புத்.477-24)*

### *நிவர்த்தி*

தோடமந்திரம் கூறி குளிர்ந்த நீரை எடுத்துக் கொண்டு அதில் வேப்பிலையைத் தோய்த்து தாய் சேய் இருவர் முகத்திலும் தெளிக்கவும். இவ்வாறு இரண்டு வேளை ஏழு நாட்கள் செய்ய முட்டு தோடம் நீங்கிப்போகும். முருங்கை வேரையெடுத்து குளிசமாகக் கட்ட வேண்டும் *(ஏடு.4552-12-13,169,17,941-21)* *(புத்.477-21-22,572-22,476-22)*

## *குளிதோடம் (குளிச தோடம்)*

குழந்தையில்லாதவள் குழந்தையை விரும்பிக் குளிசங்கட்டுங் காலத்து எதிரில் வரும் குழந்தைகட்கு உண்டாகும் தோடம்.

### *குறிகுணங்கள்*

உச்சி, கண் இரண்டிலும் பள்ளம் விழுதல், கழிச்சல் அதிகமாதல், பல நிறத்துடன் அனல் போல் தேகம் எப்போதும் வெப்பமாக இருத்தல், ஆசனம் புண்ணாதல், உடல் மிகவும் வற்றிப் போதல், நாற்றமெடுத்தல், கண்கள் மயங்கியிருத்தல், வாந்தியெடுத்தல், வியர்வை அதிகமாதல், தண்ணீர் குடித்தல், நெஞ்சு காய்தல், கண்ணீர் சொரிதல், கால் வீங்குதல், கால் பின்னிக் கொள்ளுதல், கதறியழுதல், குழந்தை வாடிப் போதல், ஆகியவை குளி தோடக் குறிகுணங்கள். *(ஏடு.362-11, 941-9,4485-2,604,519-10,4552-10-11,424-5) (புத்.476-24,477-22)*

### *சாறு*

கீழ்க்காய் நெல்லி, அம்மான் பச்சரிசி, சிறுபுள்ளடி, வசம்பு, உள்ளி, ஓமம் ஆகியவற்றைச் சமனெடுத்து சாறெடுத்து 5-10 மி.லி. உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் துவாலை செய்ய குளிதோடம் குணமாகும். *(ஏடு.169-14-15,604, 519-10,4552-11,477-22-23)*

வடக்கே நோக்கிச் செல்லும் சாணாக்கியிலையைக் கசக்கிப் பிழிந்து 5-10மி.லி. உள்ளுக்குக் கொடுக்க குளிதோடம் நீங்கும். *(ஏடு.424-5)*

### *குடிநீர்*

வேப்பங் கொழுந்து ஒரு பிடி, வசம்பு, பத்து மிளகு, தோல் சீவின சுக்கு பத்து மிளகெடை, மலைதாங்கி பத்து மிளகெடை இவை அனைத்தையும் ஒன்றாய்க் கலந்து அரைத்துக் காய்ந்தாறின நீர் 85மி.லி. எடுத்து அதில் கலக்கி வடிகட்டி காலை, மாலை 3அல்லது 5 நாட்கள் கொடுக்க வேண்டும். ஒருவேளைக்கு 7மி.லி. கொடுக்க குளித்தோடத்தால் வரும் கழிச்சல் அனைத்தும் நீங்கும்.

*(புத்.476-24,482-48)*

### *நெய்*

பசுவின் நெய் 1.3லி., நல்லெண்ணெய் 650மி.லி. எடுக்க. நன்னாரி, தண்ணீர்விட்டான், கரந்தை, பொன்னாங்காணி ஆகிய மூலிகைகளை வகைக்கு 35கி. எடுக்க. ஏலரிசி, சீரகம் இவற்றைப் பசும்பால் விட்டரைத்து ஒன்று சேர்த்து அடுப்பில் வைத்து காய்ச்சிக் கொள்க. குழந்தையின் வன்மை, நோயின் தன்மை அறிந்து அளவாகக் கொடுக்க குளிதோடம் நீங்கிப்போகும். *(கை.பி.போ.257), (புத்.482-48,476-23)*

### *எண்ணெய்*

கற்றாழைச்சாறு, விட்டுணுகரந்திச்சாறு, இளநீர், ஆவின் பால் ஆகிய இவற்றை வகைக்கு 1.3லி. எடுத்துக் கொள்க. எலுமிச்சம் பழச்சாறு 335மி.லி., சிற்றாமணக்கெண்ணெய் 3.9லி. எடுத்து அனைத்தையும் ஒன்றாய் கலக்கிக் கொள்க. அதில் சந்தனம், கணப்பூடு எனும் சின்னம்மான் பச்சரிசி, சிங்கி ஆகிய இவற்றை வகைக்கு 35கி. எடுக்க. சண்பகப்பூ 9கி., பச்சைப் பூலாங்கிழங்கு, ஏலம், விலாமிச்சு, வெட்டிவேர், நன்னாரி, சாதிக்காய், சாதிபத்திரி, கொத்துமல்லி, அதிமதுரம், கோட்டம், கடுகுரோகணி, கிராம்பு, முத்தக்காசு, சன்னலவங்கம், கருஞ்சீரகம், நற்சீரகம், சிறுநாகப்பூ ஆகிய இவற்றை வகைக்கு 4கி. எடுக்க. இவற்றை அரைத்து எண்ணெயிற் கலந்து பதமாய்க் காய்ச்சிக் கொள்க. அதனை 5-10மி.லி. ஆக இருவேளை கொடுக்கத் தீரும்.

*(புத்.482-100)*

### *மாதுளைக் குளிகை*

ஏலம், அதிமதுரம், வங்கம், கச்சோலம், தக்கோலம், மாசிக்காய்,

கெருடப்பச்சை, வசுவாசி, கிராம்பு, பத்திரி, திப்பிலி, சீயக்காய்க்கொடி எனும் பரங்கிக்கொடி, சாத்திர பேதி ஆகிய இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. அதனுடன் இச்சரக்குகளைப் பொடித்து உள் வைக்க. அதனை எருமைச் சாணிக்குள்ளிட்டு உமிப்புடம் போட்டு அப்பொடியை எடுத்து அதனைத் தாய்ப்பாலில் அரைத்து 65மி.கி. அளவு உருட்டி குளிகைகளாகச் செய்து வைத்துக் கொள்க.

இதனைத் திப்பிலிச் சாற்றில் இழைத்துக் கொடுக்க குளித்தோடம் நீங்கும்; மற்றும் அனைத்து தோடங்களும் நீங்கிப்போகும்.

*(ஏடு.601-12-13)*

### மருந்து

மிளகு, கருஞ்சீரகம், வெள்வெங்காயம், வீழியிலை, பருத்தியிலை ஆகியவற்றைக் கசக்கி அரையில் கட்டவும். அம்மருந்தைச் சுவைத்து குழந்தையின் உச்சந்தலையில் துப்பவும். அவ்வாறு செய்ய தோடம் இருப்பின் ஒட்டும்; அன்றேல் ஒட்டாது. *(ஏடு.435-37)*

### குளிச வகைகள்

### 1. அறுகம் வேர்க் குளிசம்

குறுமுனிவர் கூற்றுப்படி காலையில் நீராடி சுடுகாட்டிற்குச் சென்று அங்கு முளைத்திருக்கக்கூடிய அறுகம் வேரை விடியலில் எடுத்து வந்து குளிசம் செய்து குழந்தைக்குக் கட்ட வேண்டும். அதனால் குளிசத் தோடம் நீங்கும்.

### 2. காட்டாத்திக் குளிசம்

ஓமச்செடிவேர், தண்ணீர்விட்டான் கிழங்குவேர், காட்டாத்தி, பருத்திவேர், பயற்றம் வேர் இவற்றைச் சேர்த்து முறுக்கி முறைப்படி குளிசஞ் செய்து கட்டி வில்வம், பேயத்தி முதலிய இலைகளைப் போட்டுக் காய்ச்சப்பட்ட நீரால் குழந்தையைக் குளிப்பாட்டிப் பின்னர் கோழியைப் பலி கொடுத்து அக்குழந்தையைச் சுற்றி பின்புறமாய் போட்டுவிட்டால் குளிசத்தோடம் தானே நீங்கும். (புத். 476-23-25)

### குளிப்பாட்ட நீர்

தழுதாழை, குட்டிவிளா, வசம்பு, சோம்பு, மஞ்சள், வேம்பு, சுக்கு, வாசம் எனும் வெட்டி வேர் ஆகிய இவற்றை அரைத்து வைத்துக் கொண்டு வாகையிலையையும் உடன் போட்டு நீரைக் காய்ச்சிக்

கொள்க. அந்நீரினால் தாய், குழந்தை இருவரையும் குளிப்பாட்ட வேண்டும்.

மூன்று கிணற்றின் தண்ணீர் கொண்டு வந்து அதில் மஞ்சளை மசிய அரைத்துக் கலக்கிக் கொள்க. ஸ்ரீயும் ஐயும் சவ்வுமென்று ஆறு நாட்காலையில் 108 தரம் ஓத வேண்டும். சூரிவேரைக் கொண்டுவந்து ஐந்துவித நூலையெடுத்து குளிசம் செய்து குழந்தைக்கு வலக்கையில் கட்ட குளிதோடம் ஓடிவிடும். *(புத்.477-22,572-22)*

### *கருட மைநீறு*

கூட்டினுள் இருக்கின்ற கருடமுட்டை ஓட்டைக் கொண்டு வந்து சுட்டுச் சாம்பலாக்க வேண்டும். அச்சாம்பலுடன் புனுகைச் சேர்த்து மையாகவும், அந்த ஓட்டைச் சுட்டு அச்சாம்பலைத் திருநீறாகவும் நெற்றியிலிட்டால் குளித் தோடத்தால் உண்டாகும் மயக்கந் தீரும். *(புத்.477-23)*

### *காப்பு*

வடக்கே நோக்கிச் செல்லுகின்ற அழிஞ்சி வேரை எடுத்து காப்பு கட்ட வேண்டும். *(ஏடு.424-5)*

### *படுக்கை தோடம் - குறிகுணங்கள்*

குழந்தையின் உடல் சூடாதல், கண்குழி விழுதல், நிறமும் குணமும் வேறுபடுதல், மாலை நேரத்தில் அதிகமாதல், தாய்ப்பாலைக் குடிக்காமை, பால் ப்ாலாக கழிச்சலாதல் ஆகியவை படுக்கை தோடத்தின் குறிகுணங்கள். *(ஏடு.7313-98)*

### *பெண் தோடம் (சதிபுருடாள் தோடம்)*

கலவியிலிருந்து எழுந்து வந்த பெண்ணை 5 மாத கர்ப்பமான பெண் காண்பதால், அவள் பின்னர் பெறப்போகும் குழந்தைக்குத் தோடமேற்படும். *(புத்.572-63-64)*

### *குறிகுணங்கள்*

தாய்ப்பாலைத் தானே குடிக்காமை, புகட்டினாலும் குடிக்காமை, உடலும் சுருங்கி வியர்வையுண்டாதல், அடிக்கடி சோர்ந்து மயங்குதல், நெஞ்சு வறட்சியாகிக் குளிர்ச்சியாதல், பால் குடியாமை, இரவு, பகல் தூங்காது அலறுதல், குழந்தையின் முகம் வியர்த்தல் ஆகியவை பெண் தோடக் குறிகுணங்கள்.

### *குடிநீர்*

கஞ்சாங்கோரையை நீரிலிட்டுக் காய்ச்சிக் கொண்டு வேளைக்கு 15-30மி.லி. 3 அல்லது 5 நாட்களுக்குக் கொடுக்க பெண்தோடம் நீங்கும். *(ஏடு.362-14,169-17)*

### *குளிசம்*

வேலிப்பருத்தி வேரைக் குளிசமிட்டுக் கட்டிக் கொள்ள வேண்டும். சின்னி, சிறுகீரை, உள்ளி, வசம்பு இவற்றின் வேர்களை முடிந்து கழுத்தில் கட்ட பெண்தோடம் நீங்கிப் போகும். *(ஏடு.362-14,169-17)*

சின்னி, விளா, நொச்சில் இவற்றைத் துவள வறுத்து அதனைக் கையில் கட்ட நீங்கும்.

*(ஏடு.6218-9,941-12,4552-13,169-20,362-14)*

### *ஐந்து நிறப்பூ தோடக்கழிவு*

ஒரு வாழையிலையில் மாவால் அந்தக் குழந்தையைப் போல் உருவம் அமைக்க வேண்டும். அதில் ஐந்து நிறப்பூவையும், ஐந்து நிற சோற்று உருண்டைகளையும், ஐந்து வெள்ளித் துட்டுகளையும் வைக்க வேண்டும். மாவிளக்கும் செய்து நெய்விட்டு திரிபோட்டுக் கொளுத்த வேண்டும். பின் தூப வழிபாடு செய்து இலையில் வைத்திருக்கும் உருவத்திற்குச் சாம்பிராணி வர்த்தி கொளுத்தி சொருக வேண்டும். மாலை வேளையில் அதை அத்தோடங் கொண்ட குழந்தையைச் சுற்றி முச்சந்தியில் கொண்டுபோய் வைத்துவிட வேண்டும். இதைச் செய்ய பெண்தோடம் நீங்கும். *(புத்.477-21,572-63-64)*

### *புருட தோடம் - குறிகுணங்கள்*

உச்சியிலும் கண்ணிலும் குழிவிழுதல், உண்ணுகின்ற பாலுந் தங்காமை, வயிறு பொருமுதல், பச்சென்று பேதியாதல், பறவையின் குரல் போல அழுதல், சீறிச்சீறி அழுதல், ஆகிய இக்குறிகுணங்களிருப்பின் அது புருடதோடமாகும்.

கலவி மேற்கொண்ட புருடன் குளிக்காது குழந்தைகளைப் பார்ப்பதனால் புருடதோடமுண்டாகும். *(கை.பி.போ.224)*

### *ஆண்தோடம் - குறிகுணங்கள்*

கலவியை முடித்து படுக்கையிலிருந்து எழுந்து வந்த ஆணால் ஏற்படும் தோடம் இது. குழந்தையின் உச்சியில் பள்ளம் விழுதல், கண்

குழி விழுந்து காணல், குழந்தை குடித்த பால் வயிற்றில் தங்காது வாந்தியாதல், வயிறு பச்சென்று பேதியாதல், பொருமிப் பொருமி அழுதல், அழுகுரல் பறவைக் குரல் போல் காணப்படல், கழுத்து குறுகல், சிலவேளை சீறிச் சீறிப் பெருங்குரலாயழல் ஆகியவை ஆண்தோடக் குறிகுணங்கள். *(புத்.477-25)*

### *உடும்புநாக்கு - குளிசங்கள்*

ஆண் உடும்பின் நாக்கைக் கொண்டுவந்து அதில் வெள்ளெருக்கன் நாரைச் சுற்ற வேண்டும். பின் அதை ஒரு தூய்மையான இடத்தில் வைத்து அதன்முன் வெற்றிலை, பாக்கு, பழம், முதலியன வைத்து 'நயவசிம' என்னும் மந்திரத்தை 108 முறை சொல்லித் தூப தீபம் காட்ட வேண்டும். ஒரு ஓணானைப் பலி கொடுத்து அக்குளிசத்தைக் குழந்தைக்குக் கட்ட வேண்டும். இவ்வாறு செய்ய ஆண்தோடம் நீங்கும். *(புத்.477-25)*

### *சையோக தோடம் - குறிகுணங்கள்*

தாய் தகப்பன் கலவி கொள்ளும் காலத்தில் குழந்தையைத் தலையில் தொட ஏற்படும் தோடம் இது. உடல் அனல் போல் கொதித்தல், புலால் நாற்றம் எடுத்தல், உச்சி தாழல், குடித்த பாலை வாந்தியெடுத்தல், கழிச்சலாதல், தலை குழையல், கண் மூடல், விலாவில் குழி விழுந்து வலியெடுத்தல் ஆகிய குறிகுணங்கள் சையோக தோடத்தின் உடையவை. வலியும் கபமும் இல்லாவிட்டால் துன்பமில்லை. உயிர் பிழைக்கும். அன்றேல் மரணமாகும். *(ஏடு.185-11)*

### *நிழல் தோடம் - குறிகுணம்:-*

தாய்ப்பாலைக் குடிக்க வாய்வைத்தல், சிறிது குடித்தல். பிறகு குடிக்காமை, உடல் மிகவும் நாறுதல், மந்தத்தைத் தருதல், வெதும்புதல், கழிச்சல் உண்டாதல், தூக்கம் வராமை, இருமல் ஆகியவை குளித்த பெண்களின் நிழலால் உண்டாகும் தோடத்தின் குறிகுணங்கள்.

உச்சி, கண் இவற்றில் குழி ஏற்படுதல், தாய்ப்பால் வயிற்றில் தங்காமை, பச்சை நிறம் போல் கழிச்சல் ஏற்படுதல், பறவையின் குரல் போல் சீறிச் சீறி அழுதல், கண்ணிலுள்ள மணி ஒதுங்கியிருக்க அரைக்கண் போலிருத்தல். இக்குறிகுணங்களைக் கொண்ட நிழல்தோடம் நீங்க மருத்துவம் செய்யலாம் என்பர். *(ஏடு.7313)*

### நிழல் தோடம் - தீராத குணங்கள்

கண் சிவப்பாதல், கழிச்சலுண்டாதல், வயிறு வெப்பமாக இருத்தல், சிறுநீர் இரத்தம் போன்று கழிதல், உடம்பின் நிறம் மேலும் கறுப்பாதல், உடம்பு அழிதல், குழந்தை மயக்கமாதல். இவையே நிழல் தோடத்தின் தீராக் குறிகுணங்களாகும். *(ஏடு.7313-97)*

### புள்தோடம் - பொது குறிகுணங்கள்

காக்கை போல் கத்துதல், கக்குதல், விக்கலுண்டாதல், கண் சொருகுதல், அப்போதைக்கப்போது குணம் மாறுதல், பூவின் நிறம் போல கழிச்சலாதல், உச்சி, கண் இவற்றில் குழி விழுதல், குடிக்கும் பால் தங்காமை, பச்சை நிறமாக வயிறு கழிதல், பறவையின் குரல் போன்று சீறியழுதல், தண்ணீர் தாகமெடுத்து நீர் குடித்தல், மெய் மறத்தல் ஆகியவை புள் தோடத்தின் குறிகுணங்கள்.

*(ஏடு.424-4,362-9)*

### புள்தோடம் - குறிகுணங்கள்

தண்ணீர் குடித்தல், நெஞ்சு காய்ந்து விடுதல், குழந்தை தளர்ந்து வருந்தி கண்ணீரைச் சொரிதல், கால் வீங்கி விடுதல். வாந்தி அதிகமாக எடுத்தல் ஆகியவை புள்தோடத்தின் குறிகுணங்கள். *(ஏடு.941-9-10)*

### துவாலை

அகத்தி, கீழாநெல்லி, அம்மான்பச்சரிசி, புள்ளடி, முள்ளி, வசம்பு, சாரணை ஆகியவற்றைச் சேர்த்து வகையாய்ப் பூச புள்தோடம் நீங்கும்.

*(ஏடு.941-9-10)*

### புள் தோடத்தின் வகைகள்

கருடக்கண், செங்கண், தூங்குபுள், பேய்க்கண், வறட்புள், விளக்கொளிக்கண், வீங்குபுள், வெங்கண் ஆகிய பறவைகளை அடிப்படையாகக் கொண்டு அமைந்த தோடங்கள் எட்டு.

*(புத்.476-16)*

### கருடக்கண்புள் தோடம் - குறிகுணங்கள்

நாகணவாய்ப்புள் முதலியவற்றின் குஞ்சுகளின் குணம் போலக் குழந்தையின் வயிறுந் தலையும் கனத்தல். கழிச்சலேற்படுதல், சொள்ளுநீர் வடிதல், தாய்ப்பாலைக் கக்கிவிடுதல், கண் பார்வையானது தாழ்ந்து போதல், கண்களின் இரு பக்கங்களிலும் பீளை சாருதல்,

பெரிய பிள்ளைகளுக்குண்டாவது போல குழந்தைகளுக்கு வயிற்று வலி ஏற்படுதல், குழந்தையின் வயிறுந் தலையும் கனத்திருத்தல். இவையே கருடக்கண் புள் தோடக் குறிகுணங்கள்.

### *கோரோசனைக் கற்கம்*

கோரோசனை, அதிமதுரம், திப்பிலி இவற்றை வகைக்கு 5கி. எடுத்து மூன்றையும் தாய்ப்பால் விட்டரைத்துக் கலக்கி 15-30மி.லி. அளவு மூன்று நாட்களுக்குப் புகட்ட கருடக்கண் புள் தோடம் குணமாகும். *(புத்.477-16,476-18)*

மேற்குறிப்பிட்ட சரக்குகளையே 3 மணி நேரமரைத்து 130 மி.கி. அளவு மாத்திரைகள் செய்து 1 மாதம் தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க கருடக்கண்புள் தோடம் குணமாகும். *(கை.பி.போ.248-249)*

### *காணாப்புள் தோடம் - குறிகுணங்கள்*

உச்சி, கண் ஆகியவற்றில் குழி விழுதல், குடிக்கின்ற பால் தங்காமை, பச்சை நிறமாய்க் கழிதல், பறவையின் குரல் போல குழந்தை அழுதல், வெச்சென்றிருத்தல், எப்போதும் தண்ணீரை எடுத்துக் குடித்தல் ஆகியவை காணாப்புள் தோடத்தினுடையவை. *(ஏடு.941-7,4485-6)*

### *குளிசம்*

ஆலம் விழுது, விடத்தலை வேர், கீழ்க்காய் நெல்லி வேர் ஆகியவற்றைக் கன்னியின் புடவையிலிட்டுக் குளிசமிட்டுக் கொள்க. மஞ்சளைத் தடவுக. கோழியைப் பலியிட்டு பூசை செய்ய குணமாகும். *(ஏடு.4485-6)*

### *அந்திப்புள் தோடம் - குறிகுணங்கள்*

அந்தி நேரத்தில் குழந்தையின் மேனி வாடல், கண் பயந்து கொண்டு மூடாமல் விழித்த வண்ணமாகவே இருத்தல், கை கால் குளிரல், குழந்தை சீறல், பாலைக் கண்டவுடன் கக்கி விடுதல், உடம்பின் மேல்பாகத்தில் நரம்பு புடைத்துக் காணல், உடல் வெளுத்தல், சுரம் அதிகமாயிருத்தல் ஆகியவை அந்திப்புள் தோடக் குறிகுணங்களாகும். *(புத்.467-19-20,477-18,482-47) (ஏடு.612-3)*

### *சின்னித் துவாலை*

சிறுசின்னி, விளா, நொச்சி, சீந்தில், வசம்பு, வேம்பு, வெள்ளைப்

பூண்டு ஆகிய இவ்வேழு பொருட்களையும் சமவெடை எடுத்து நறுக்கிக் கொள்க. அதைத் துணியில் முடிந்து கெண்டைக்காலில் கட்ட வேண்டும். இவ்வாறே 3 நாட்கள் செய்ய அந்திப்புள் தோடம் குணமாகும். *(புத்.476-19-20,477-18,482-47)*

### *செங்கண்புள் தோடம் - குறிகுணங்கள்*

குயில், செம்போத்து முதலியவற்றின் குஞ்சுகளின் குணம் போலக் குழந்தையின் கண்ணும் உடலும் சிவந்திருத்தல், கண்களிலிருந்து நீர் வடிதல், தலை நிமிர முடியாமல் குனிந்தேயிருத்தல்; உடலில் வெப்பு காணல். குழந்தை தவழ்ந்து நிலத்தில் படுத்தல். தன் கைகளைக் கொண்டு முகத்தைத் துடைத்தல், குழந்தை சீறியழுதல், உட்டிணத்தால் உண்டாவது போன்ற பேதி காணுதல். இக்குணங்கள் குழந்தைகளிடம் காணப்பட்டால் செங்கண்புள் தோடம் என்றறிக.

*(புத்.477-16,476-18) (கை.பி.கோ.252-253)*

### *அதிமதுர எண்ணெய்*

அதிமதுரம், சீரகம், கோரைக்கிழங்கு, ஏலம், சாதிபத்திரி, சாதிக்காய், இலவங்கம், சண்பகப்பூ ஆகியவற்றை வகைக்கு 4கி. எடுக்க. முசுமுசுக்கையிலை பொன்னாங்காணியிலை, சிறுகீரை, சீந்தில் வேர், கண்டங்கத்திரி வேர் ஆகிய இவ்வைந்தையும் வகைக்கு 40கி. எடுக்க. இவற்றை ஈருள்ளிச் சாறு விட்டு அரைக்க. அதனை 2.6லி. சிற்றாமணக்கு நெய்யில் கலந்து வைத்தெரிக்க. பதமாய் வடித்து 15-30மி.லி. அளவு காலையில் மட்டும் குழந்தைக்குக் கொடுக்க. இப்படி 3 அல்லது 5 நாட்கள் கொடுக்க செங்கண் புள்தோடம் நீங்கும்.

*(புத்.477-17,476-18)*

4கி. அல்லது 2கி. எடுத்துக் கொள்ளலாம். காலை, மாலை இருவேளையும் உபயோகிக்கலாம். எண்ணெயையும் சாறுகளையும் ஒன்று கலந்து கற்க வகைகளை அதனுள் போட்டுக் காய்ச்சுக.

*(கை.பி.போ.250)*

### *தூங்குபுள் தோடம் - குறிகுணங்கள்*

கொக்கு முதலியவற்றின் குஞ்சுகளின் குணம் போல குழந்தைகள் அரைக்கண் திறந்தபடியே தூங்கல். அத்தூக்கம் கெட்டு அலறி எழுந்திருத்தல், இரண்டு கண்களும் இருண்டு மேல் இமைக்குள் சொருகிக் கொள்ளுதல், அளவுக்கு மீறிய கழிச்சல் காணல்; அத்துடன்

வாந்தியுமிருத்தல், மற்றவர்களது முகத்தைப் பலமுறை திரும்பித் திரும்பிப் பார்த்தல், தாயின் முகம் பார்த்து பயந்து அழுதல், திடீரென எழுந்திருத்தல், அடிக்கடி நீர் குடித்தல்; பல்லைக்கடித்தல், நரநரவென ஓசையெழுதல், கவிழ்ந்த பார்வையாகப் பார்த்தல்.

குழந்தை எந்நேரமும் அழுது கொண்டேயிருத்தல். முகம், உடல் வேகுதல், சோர்ந்திருத்தல், மயங்கியிருத்தல்; அதிகமாயும் தூங்குதல், தலையில் உச்சியில் பள்ளம் விழுதல், மேல் மூச்சு வாங்குதல், உடல் இளைத்து விடுதல், முகக்குறி மாறி வேறுபட்டுக் காணுதல் இவையே தூங்கு புள் தோடக் குறிகுணங்கள். *(கை.பி.போ.246), (ஏடு.4485-5) (புத்.572-26,476-17,477-14-15,482-46)*

வில்வ வேரை அரைத்து 488 மி.கி. அளவு காலை மாலை 3 அல்லது 5 நாட்கள் பாலில் கலக்கிப் புகட்ட வேண்டும். இவ்வாறு கொடுக்க தூங்கு புள் தோடம் நீங்கும் *(புத்.477-15)*

***கற்கம்***

வில்வவேர்ப்பட்டையை 4கி. எடுத்து வெண்ணெய் போலரைத்து சிறிது வெந்நீரில் கரைத்து வடிகட்டி 4கி. தேனை அதில் வார்த்து காலை, மாலை இருவேளையும் குடிக்க கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்ய தூங்குபுள் தோடம் நீங்கும். *(கை.பி.போ.246)*

***கோரோசனை-அரைப்பு***

கோரோசனம், மஞ்சள், வசம்பு, ஏலம், வேப்பீர்க்கு, ஓமம், விளாவோடு ஆகிய இவ்வேழு பொருட்களையும் சரி எடை எடுத்து நீர் ஊற்றி நன்றாக அரைக்க வேண்டும். பின் அதைக் குழந்தையின் மேல் பூசி ஊற வைக்க வேண்டும். உடம்பில் நன்றாக ஊறிய பின் இளஞ்சூடான வெந்நீரால் தலை முழுகச் செய்து தோட மந்திரத்தை 108 முறை சொல்லி சாந்தி செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் தூங்குபுள் தோடம் நீங்கும். *(புத்.482-45,477-15,572-26)*

***வௌவால் இறகுக் குளிசம்***

தேவையான அளவுள்ள வௌவால் சிறகில் ஊமத்தை வேரையும் அறுகம் வேரையும் வைத்துச் சுருட்ட வேண்டும். அதைக்கன்னிப்பெண் நூற்ற நூலால் கட்டி சுருட்டி வைத்து செவ்வாய்க் கிழமையன்று கோழி ஒன்றைப் பலி கொடுத்து அக்குளிசத்தைக் குழந்தைக்குக் கட்ட தூங்குபுள் தோடம் நீங்கும் *(ஏடு.4485-5) (புத்.477-15)*

### *பேய்க்கண்புள் தோடம் - குறிகுணங்கள்*

கோட்டான் முதலியவற்றின் குஞ்சுகளின் குணம் போல குழந்தை அரற்றுதலைச் செய்யும். *(கை.பி.போ.252-253)*

### *வறட்புள் தோடம் - குறிகுணங்கள்*

சாக்குருவி முதலியவற்றின் குஞ்சுகளின் குணம் போல குழந்தையின் மேனி வாடிவிடுதல், கடலிரைந்தாற் போல் சத்தம் வயிற்றிலேற்படுதல், நாவறட்சியடைதல், சுற்றிச்சுற்றி நாலா திசையெங்கும் பார்த்திருத்தல், வாந்தி காணுதல், அடிக்கடி உறக்கம் வருதல், உடல் இளைத்தல், கண் குழிவிழுந்து காணப்படுதல், தலை நேராக இருக்காமல் சீறி ஆடுதல், நஞ்சு ஏறுவது போல் சுரம் அதிகமாகக் காணுதல், வெருளுதல், வேப்பம்பூ நிறத்தையும் மணத்தையும் போன்று கழிதல் ஆகியவையும்,

கண்ணில் நீர் வடிந்து கொண்டேயிருத்தல், தலை வலியேற்படுதல், புறங்கையால் மூக்கையாவது முகத்தையாவது துடைத்துக் கொண்டிருத்தல், தன் எதிரில் யாராவது நீர் குடிப்பதைப் பார்த்தால் தானும் குடிக்க வேண்டுமென்று தவித்தல், பசுக்குரல் போல் குரல் வேறுபட்டுத் தோன்றுதல், விலா குளிருதல், இக்குறி குணங்கள் காண அது வறட்புள் தோடமாகும்.

*(கை.பி.போ-250). (ஏடு.4485-4) (புத்.477-17,476-19)*

வாய் நீராதல், பால் எதிரெடுத்தல், தொண்டை, நாக்கு மிகவும் வறண்டு விடுதல், குடிப்பதற்குத் தவித்தல், வேப்பம்பழச்சாறு போல கழிதல், தலையை அசைத்தல், உடம்பு மிகவும் சூடாதல் ஆகியவையும் வறட்புள் தோடத்தின் குறிகுணங்கள். *(புத்.476-19)*

### *மாத்திரை*

அதிமதுரம், மரமஞ்சள், கோரைக்கிழங்கு, அதிவிடையம், சுட்டெரித்த வசம்புச் சாம்பல், மஞ்சள், கடுக்காய்த்தோல், தேவதாரம் இவற்றின் சூரணம் 17 1/2கி. எடுத்து ஒன்றாய்க் கலந்து கொள்க. கல்வத்திலிட்டு 1மணி நேரமரைக்க. எல்லாம் கலந்த பின்பு பொடுதலைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து 6 மணி நேரமரைத்து 135மி.கி. அளவுள்ள மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்துக. அதனைக் குழந்தையின் தன்மை, நோயின் வன்மை, மென்மை அறிந்து

அளவெடுத்து தேன் அல்லது தாய்ப்பாலில் கலந்து கொடுக்க வறட்புள் தோடம் நீங்கும். *(கை.பி.போ.260)*

செப்புத் தகட்டில் பட்சிராசனை எழுதி தண்ணீரைச் சொரிந்து கோழியைப் பலி கொடுத்து திலகமிட்டுக் கொள்க. *(ஏடு.4485-4)*

### *விளக்கொளிக் கண்புள் தோடம் - குறிகுணங்கள்*

காடை, காக்கை முதலியவற்றின் குஞ்சுகளின் குணம் போலக் குழந்தை விளக்கை நோக்காமை, குழந்தை குடித்த பாலை உடனே கக்கிவிடுதல், சுரம் அதிகமாதல், உடம்பில் காய்ச்சல் விட்டு விட்டு உண்டாதல், தாயின் முகத்தை அடிக்கடி பார்த்தல், தாய்ப்பால் உண்ணாமை, குழந்தைக்கு அதிகமான நீர் வேட்கை ஏற்பட்டு அதன் காரணமாக சோர்ந்து போதல், விளக்கொளியைப் பார்க்க முடியாமல் கண் கூசுதல், அதனால் கண்களை மூடிக்கொள்ளுதல், இவையே விளக்கொளிக் கண்புள் தோடத்தின் குறிகுணங்கள். *(புத்.477-15)*

### *குளிசம்*

சின்னி, வசம்பு, உள்ளி, நிலவிளா, இவற்றை எடுத்து ஒரு சீலையில் வைத்து முடிய வேண்டும். அதைக் குழந்தையின் மார்பில் படும்படியாகக் கட்டி வைக்க வேண்டும். அவ்வாறு செய்ய விளக்கொளிக்கண்புள் தோடம் நீங்கும்.

*(கை.பி.போ-247) (புத்.477-15)*

### *வீங்குபுள் தோடம் - குறிகுணங்கள்*

புள் வீங்கிக் கனப்பது போன்று குழந்தையின் உடம்பு கனத்தல், உச்சி குழி விழுதல், நாக்கில் நீர்ப்பசை இல்லாமல் உலர்ந்து போதல், பால் போல் வெண்மையாகவும், பித்த நீர் போன்று மஞ்சளாகவும் வாந்தி எடுத்தல். பச்சை நிறமாகவும், பால் நிறமாகவும் கழிச்சல் காணுதல், குழந்தை தன்கையால் முகத்தைத் துடைத்துக் கொள்ளுதல் ஆகியவை வீங்குபுள்தோடத்தின் குறிகுணங்கள்.

*(புத்.476-16-17,482-45-46,477-14) (கை.பி.போ.245)*

### *அதிமதுர மாத்திரை*

அதிமதுரம், கோரைக்கிழங்கு, அதிவிடையம், கடுக்காய்த்தோல், வசம்பு, தேவதாரம், மஞ்சள் இவற்றை வகைக்கு 10கி. எடுக்க. இவ்வேழையும் இடித்துக் கல்வத்திலிட்டு மலைநிலத்தில் விளையும்

பொடுதலைச் சாற்றால் 12 மணி நேரம் நன்கரைக்க. அதை மிளகளவு (3கி.) மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வைக்க. அம்மாத்திரையை காலை, மாலை 1 மாத்திரை வீதம் மூன்று நாட்களுக்குத் தாய்ப்பாலில் கொடுக்க வீங்குபுள் தோடம் நீங்கும்.

*(கை.பி.போ.245) (புத்.482-45-46,477-14,476-16-17)*

### *வெங்கண்புள் தோடம் - குறிகுணங்கள்*

குழந்தை பால் போல் வெண்ணிறமாய்க் கழியும். குழந்தை வெளுத்து துவண்டு போகும். சுரங்காயும். வயிற்றிரைச்சலுண்டாகும். பால் குடித்தவுடன் அப்படியே கழிச்சலாகி விடும். வயிற்றில் வலியேற்படும். வெங்கண் புள் (ஆந்தை)ளின் குஞ்சுகளின் குணத்தைப்போன்று குழந்தையும் பகற்பொழுதில் கண்ணைத் திறக்காமல் மூடியபடி இருக்கும். இவையே வெங்கண்புள் தோடத்தின் குறிகுணங்கள். *(புத்.476-18,477-15)*

### *கற்றாழை நீர்*

கற்றாழைச் சோற்றில் மஞ்சள் கடுக்காய்ப் பொடியைச் சேர்த்துப் பிசைந்து அதைச் சிறிது நேரம் வைத்திருக்க வேண்டும். அதிலிருந்து நீர் ஊறி வரும். அந்நீரை 15-30மி.லி. எடுத்து அதில் 260மி.கி. அளவுள்ள திப்பிலிப் பொடியைச் சேர்த்து காலை, மாலை 3 நாட்கள் கொடுத்தால் நல்லது. குழந்தைகளின் வயதிற்கேற்றவாறு கொடுக்க (8கி-12கி) வெங்கண்புள் தோடம் குணமாகும்.

*(புத்.482-46,477-16,476-18) (கை.பி.போ.248)*

### *கற்கம்*

கோரோசனை, அதிமதுரம், திப்பிலி இவற்றைச் சமமாயெடுத்து தாய்ப்பாலில் அரைத்து 15-30மி.லி. கொடுக்க வெங்கண்புள் தோடம் நீங்கும். *(ஏடு.583-86)*

### *பறவைத்தோடம் - குறிகுணங்கள்*

நெஞ்சு, உள்நாக்கு நன்கு வீங்கி வளர்ந்து பாலும் தங்காதிருத்தல், உடல் மிகவும் வலித்தல், பாலைக் கக்குதல், மரத்தின் கசப்பு போன்று நாற்றமடித்தல், கால், கை அழுக்கேறுதல், வருத்தத்தை அளித்தல் ஆகியவை பறவை தோடக் குறிகுணங்கள். *(புத்.572-24-25)*

குழந்தையின் உடம்பு காய்தல், குடலில் பாலுந் தங்காமை, நெஞ்சு,

நெற்றி வலித்தல், தூங்கிடும்போது திடீரென வலித்தல் இதுவே பறவைதோடக் குறிகுணமாகும். தலையில் கனலேறி உடல் நொந்து வெதும்புதல், கை,கால் துடித்து சுருக்கேறுதல், பேய்போலே சீறியழுதல், குடித்த பால் எதிரெடுத்தல், தலையிலும் வாயிலும் கண்களிலும் குழி விழுதல், அடிக்கடி திடுக்கிடுதல், ஏங்குதல், சீறியழுதல், தாகம் அதிகமெடுத்தல், குழந்தையைக் கையில் எடுக்க அது தங்காமை, எதிர்மூச்சு வாங்கல், கடுப்பாக வயிறு கழிதல், விழி வெளுத்தல், முகம் மஞ்சள் போலிருத்தல், வாந்தியெடுத்தல் இவையே பறவை தோடக் குறிகுணங்கள். *(புத்.482-45,572-57,476-14-15,477-10) (ஏடு.362-8,612-2,4485-1)*

காலை, மாலை இருவேளைக்கு 5-10 மி.லி. வீதம் 3 நாட்களுக்கும் கொடுத்து வந்தால் பட்சித் தோடம் நீங்கும். *(புத்.482-45,477-12), (ஏடு 169-12,362-8,583-84). (கை.பி.போ.244)*

***குடிநீர்***

சீரகம், ஈருள்ளி, வறட்பூலா வேர் ஆகிய மூன்றைச் சமனெடுத்து சேர்த்து நன்கு காய்ச்சி அக்குடிநீரை 15-30மி.லி. அளவு குழந்தைக்குக் கொடுக்க குழந்தைக்கு வரும் பறவைத் தோடம் நீங்கிப் போகும். *(புத்.482-45), (ஏடு.362-9,169-12) (கை.பி.போ.245)*

***கற்கம்***

ஈத்திண்ணி, வெள்ளைத் தேரை, நாகப்பாம்பு, பால் நண்டு, பசுவின் சாணந்திண்ணி, பூசனியின் பிஞ்சு ஆகியவற்றை எடுத்து அரைத்துப் பூசி 250-500மி.கி. அளவு உள்ளுக்குக் கொடுக்க பறவைத்தோடம் நீங்கும். *(ஏடு.612-22)*

***துவாலை வகைகள்***

**1.** மாமரத்து மேலுள்ள முசுறு, விளாவின் மேலுள்ள முசுறு, ஆவாரை ஆகியவற்றை எடுத்து காடி விட்டரைத்து குழந்தையின் உடம்பு முழுவதும் துவாலை செய்ய பறவை தோடம் நீங்கும்.

**2.** ஆவாரங் கொழுந்து பூ, அல்லி, நீர்ப்பூலா, பூவாரை ஆகியவற்றை எடுத்துக் கொள்க. பசுவின் வெண்ணெயை அதனுடன் சேர்த்தரைத்து துவாலை செய்ய பறவை தோடம் நீங்கிப் போகும். *(ஏடு.612-21-22)*

**3.** தாமரைக்கொழுந்து, முடக்கொத்தான், சின்னி, வல்லாரை, வசம்பு,

உள்ளி, பால்நண்டு ஆகியவற்றை எடுத்து காடி விட்டரைத்துத் துவாலை செய்ய குழந்தைகட்கு வரும் பறவைத் தோடம் நீங்கும்.

*(ஏடு.612-22)*

### *குளிசம்*

வெள்ளைக் குன்றியின் வடக்கே செல்லும் வேரை எடுத்துக் குளிசமிட்டுக் கொள்க. பொங்கல் செய்து படைத்துக் கொள்க. செவ்வாய்க் கிழமையன்று பொன்னிற் குளிசமிட்டுக் கட்ட பறவைத் தோடம் நீங்கும். *(புத்.572-24,25)*

ஆலின் துளிரைக் கொண்டு குளிசம் செய்து குழந்தைக்குக் கட்ட வேண்டும். *(புத்.482-45), (ஏடு.169-12,362-9)*

### *நிவர்த்தி*

பச்சை ஓலையில் பட்சிராசன் பெயரை எழுதிவைக்கவும்.

கோழியைப் பலியிடுக. குழிமீட்டான், விளா இவ்விரு இலைகளைச் சிதைத்துக் கலந்த தண்ணீரில் குளிக்க பறவை தோடம் குணமாகும்.

*(ஏடு.4485-1)*

### *பட்சிதோடம் - குறிகுணங்கள்*

இரத்தம் அதிகமாகக் கழிதல், நீராகக் கழிதல், கண்ணில் பீளை கட்டுதல், உடம்பு சூடாகி பேய் போல சீறுதல், குழந்தை பாலுண்ணாமை ஆனால் அதிகமாகத் தண்ணீர் குடித்தல், குடித்த பால் எதிரெடுத்தல், வாந்தியெடுத்தல், கண் மயக்கம் கொள்ளல், கண்ணில் குழி விழுகுதல், கண் வெளுப்பாதல், தலைவலி, உச்சி, மூளை, உடல் சூடாதல், நாக்கு உலரல், அழுதல், பேய் போல் சீறிப்புலம்புதல், கையில் வைத்திருக்கும் போதே வயிறு கடுகடுத்து கழிதல், அதிக சூடுண்டாகி பிறகு குளிர்ச்சியாகி விடுதல், பச்சையும் மஞ்சளும் சேர்ந்தாற் போன்று பசும் பொன்னிறமாய் முகம் மினுமினுத்தல், கண் குளிரல், முகம் சோர்வடைதல், கண்டமும் முகமும் சிறுத்தல்.

சில குழந்தைகட்கு வயிறு மட்டும் உப்புதலும் சில குழந்தைகட்கு கழிச்சலும் ஆதல், கழுத்து நீண்டு முகம் சுருங்கல், தலை கனத்து தூக்கிப் பார்க்க முடியாமை, சில சமயங்களில் காய்ச்சல் அதிகமாகவும் சில சமயங்களில் குறைவாகவும் இருத்தல். ஒரு சில சமயங்களில் வியர்வையுடன் காய்ச்சலடித்தல், பேய் பிடித்தவர் போல் குழந்தை

பதறி அழுதல் ஆகியவை பட்சி தோடத்தின் குறிகுணங்கள்.

*(கை.பி.போ. 2-3) (ஏடு.362-8,169-11,583-84)*

*(புத்.477-10,12,572-23,476-10,14)*

### *பட்சி தோடத்தின் வகைகள்*

அலிப்பட்சித் தோடம், ஆண்பட்சித் தோடம், பெண்பட்சித் தோடம், மலட்டுப் பட்சித் தோடம் ஆக நான்கு வகைப்படும்.

### *அலிப்பட்சித் தோடம் - குறிகுணங்கள்*

தோள், முதுகு, கழுத்து, முழங்கை முதலியவற்றில் குழி விழுதல், உச்சியில் பள்ளம் விழுதல், அதிகமாக வாந்தி எடுத்தல், கழிச்சல் மிகுதி அதிகதாகம் ஆகியவை பட்சித் தோடத்தின் குறிகுணங்கள்.

*(புத்.477-11)*

### *ஆண்பட்சித் தோடம் - குறிகுணங்கள்*

நீர் வேட்கை, அதிகமாதல், உடல் மிகுதியும் உலர்ந்து காணல், கண்களில் குழி விழுதல், நாக்கைப் பலமுறை நீட்டி உள் வாங்கல், கழிச்சல் அதிகமாதல், குரல் தாழுதல் ஆகியவை ஆண்பட்சித் தோடக் குறிகுணங்கள்.

### *பெண்பட்சித் தோடம் - குறிகுணங்கள்*

கழிச்சலாதல், உடல் கொதித்தல், நீர் வேட்கை அதிகமாதல், சீறிச்சீறி அழுதல், கண் சொருகுதல், சீத பேதியாதல், வயிறு கடுத்தல், விக்கல் ஏற்படுதல், கண்ணோயுண்டாதல், உடல் முழுவதும் நடுக்கமேற்படல், வாயிலிருந்து நீர் சுரத்தல், பால் குடிக்காமை, தோல் கறுத்துக் காணப்படுதல், மலவாய் வெளிப்படுதல் ஆகியவை பெண் பட்சித் தோடத்தின் குறிகுணங்கள்.

### *மலட்டுப் பட்சித் தோடம் - குறிகுணங்கள்*

உடலிளைத்தல், உச்சி குழி விழல், வாந்தி அதிகமாதல், மயக்கமேற்படல், கழிச்சலாதல், நா வறண்டு நீர் வேட்கையாதல், உடல் முழுதும் நன்றாகக் கொதித்தல் ஆகியவை மலட்டுப்பட்சித் தோடக் குறிகுணங்கள்.

### *பட்சி தோடத்திற்குச் சூரியபுட நெய்*

மணித்தக்காளி, வெள்ளைப்பூண்டு, பிச்சி வேர் இவற்றை வகைக்கு 1கி. எடுத்து நன்றாயரைத்து தேவையான அளவு நல்லெண்ணெய்

அல்லது விளக்கெண்ணெய் விட்டுப் பிசைந்து வெயிலில் வைக்க வேண்டும். அதைக் குழந்தையின் உச்சியில் தடவி காலை, மாலை வேளைக்கு 5-10 மி.லி. வீதம் 3 நாட்களுக்குக் கொடுத்து வந்தால் பட்சித்தோடம் நீங்கும். *(புத்.482-45,477-12) (ஏடு.169-12,362-8,583-84) (கை.பி.போ.244-11)*

### *நீலிப்பட்சியின் தோடம் - குறிகுணங்கள்*

குழந்தை பிறந்த நேரத்தில் 'நீலி' என்ற பெண்பட்சி விழித்தால் இத்தோடம் குழந்தையைத் தாக்கும். சீறியழுதல், கண்வலி வருதல், விக்கலெடுத்தல், வாய் நீரூறல் ஆகியவை நீலிப்பட்சி தோடத்தின் குறிகுணங்கள்.

### *மந்திரமும் நிவர்த்தியும்*

எண்ணெய் சட்டி ஒன்றெடுத்து அதில் மூன்று நிறத்தாலான புள்ளிகளை இடுவாயாக. மலர்களைச் சாத்திடுவாய். வெற்றிலை, குங்குமம் வைக்க வேண்டும். அன்றைய தினத்திலிருந்து பேயின் பெயரைச் சொல்லி ய-ந-ம-சிவ என்று 108 முறை ஓதி அதை வடதிசையில் கொண்டு வைக்க நீலிப்பட்சி தோடம் சரியாகும்.

பனையோலையிலே அம்மந்திரத்தை எழுதி மடித்து அதனைக் குளிசமாகக் கழுத்தில் கட்ட நீலிப்பட்சி தோடமானது நீங்கும். *(புத்.572-53)*

### *கத்தூரி எண்ணெய்*

கோரோசனை, கோட்டம், அதிமதுரம், சீரகம், திப்பிலி, தேவதாரம், சந்தனம், ஏலம், மாசிக்காய், வெந்தயம், சுக்கு, வெள்ளுள்ளி, கத்தூரி, வசம்பு, கடுகுரோகணி, மூங்கில், பச்சைத்தோல் ஆகியவற்றை வகைக்கு 4கி. எடுத்துக் கொள்க. இவையனைத்தையும் வறுத்துக் கொள்க. எருமுட்டை பீநாறிச் சாற்றில் அரைத்துக்கொள்க. அதனுடன் விளக்கெண்ணெய் 1.3 லி. எடுத்து ஊற்றிக் கொள்க. நன்கு எரித்து பதமாகக் காய்ச்சி வடித்திறக்கிக் கொள்க. இதனைக் குழந்தை தன் நோயின் வன்மை, மென்மைக்குத் தக்கவாறு 5-10மி.லி. கொடுக்க பட்சி தோடம் நீங்கும். *(புத்.476-56)*

### *மாதுளம் குளிகை*

ஏலம், அதிமதுரம், வங்கம், கச்சோலம், தக்கோலம், மாயக்காய்,

கெருடப்பச்சை, வசுவாசி, கிராம்பு, மாசிபத்திரி, திப்பிலி, சீனக்காரம், சாத்திரபேதி இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. சரக்குகளைச் சூரணித்துக் கொள்க. மாதுளம்பழத்தின் விதையைப் போக்கி அக்சூரணத்தை உள் வைக்க. எருமைச் சாணியினுள் அப்பழத்தை வைத்து உமிப்புடமிட்டு எடுத்துக் கொள்க. அதனைத் தேவையான அளவு தாய்ப்பால் விட்டு அரைத்து 65மி.கி. அளவு குளிகைகளாக உருட்டி வைத்துக் கொள்க. அதனைத் தக்க அனுபானத்தில் குழந்தைகட்கு அளவறிந்து கொடுக்க பட்சி தோடம் குணமாகும்.

*(ஏடு.601-12-13)*

### *குளிச வகைகள்*

1. செப்பேட்டுத் தகடு வாங்கி அதில் எண்கோணத்தை வரைந்திடுக. அதனுள் வட்டத்தைப் போடுக. அதில் சிங்கிரீயும் ஸ்ரீயுஞ் சவ்வும் எழுதுக. அதன்மேல் ஐந்து நிற நூலைக் கட்டி குளிசமாகச் செய்து குழந்தைக்குக் கட்ட வேண்டும்.

2. 1/4 பங்கு உளுந்தையும், 1 பங்கு பச்சரிசியையும் ஒரு பாண்டத்திலிட்டு சமைத்து எருக்கிலையில் வைக்க வேண்டும். பச்சரிசி மாவினால் மூன்று விளக்கு செய்து ஏற்ற வேண்டும். மந்திரத்தை 108 தரம் கூறி குளிசத்தைக் கட்ட பட்சிதோடம் நீங்கும். *(புத்.477-12, 572-23-24,476-14)*

3. **குளிசம் (வேறு)** பனைமரத்தின் வடக்கு நோக்கிச் செல்லும் வேரை தூபதீபங்காட்டி அறுந்து போகாமல் எடுக்க வேண்டும். அதை வேண்டிய அளவு துண்டாக வெட்டி அத்துண்டு வேரில் ஐந்து நிறமுள்ள நூலைச் சுற்ற வேண்டும். பின் மந்திரத்தை உச்சரிக்க வேண்டும். பின் அதைக் குழந்தையின் அரைஞாண் அல்லது கழுத்தில் கட்ட வேண்டும் அவ்வாறு கட்ட பட்சிதோடம் நீங்கி குணமாகும்.

*(ஏடு.362-8,169-12) (புத்.482-45,477-12) (கை.பி.போ.244)*

# தோடம் - பாடல்கள்

## *நோய்வருவழி*

ஐயமே தோஷத் தாலும்
மருவைதன் துயரத் தாலும்
செய்யமுன் னோய தாலும்
செறிசலத் தோஷத் தாலும்
வையர வல்கு லால்தன்
பசியொடு வருத்தத் தாலும்
அய்யதோர் குளவி கொட்டுந்
தோஷத்தின் குறிக ளாமே. *(ஏடு.169-9)*

## *தோடம் ஏற்பட ஏதுக்கள்*

பட்சி பறவை பகர்புள் ளெட்சி
எச்சில் பெண்ணா ணியன்ற தேரை
சீரா மிவற்றால் சேரெட் டென்னர்
கூறுந் தொகையிற் கூடும். *(புத்.477-10)*

## *தோடம் எட்டு*

நேராக திடுக்கிடுமே நின்ற புள்ளு-தோஷம்
வாராய்க்கழி யும்பச்சை வாறுபோல-சீராய்க்கேள்
அளிதோஷங் கால்பின்னு மாளுமது வாந்தி
குளி தோஷ மாமொன்று கூறு.

கூறுமது தேரைக் குணதேகம் வற்றுமே
மாறுமுட்டு தோஷமுலை மறக்குமே-வீறுடனே
பெண் தோஷந் தான்மயக்கும் பேராகு மெட்டும்
நண்பாக தோஷமதை நாடு.
*(ஏடு.169-7-8,941-,4552-4), (புத்.476-10)*

## *எட்டுவகைப் புள்ளின் பெயர்*

வீங்குப்புள் தூங்குப் புள்ளும்
விளக்கொ ளிக்கணன் வெங்கண்ணன்
தீங்குசொல் கருடக் கண்ணன்
செங்கணன் வறட்புள் தோடம்
பாங்குடன் கொடுபேய்க் கண்ணன்
பட்டதோர் எட்டுப் புள்ளும்

ஈங்குள்ள குணங்கள் கண்டால்
இன்னது இசைக்கின் றோமே. *(புத்.476-16)*

### *தோடத்தின் வகைகள்*

ஆண்பெண் மலட்டோ டலிப்பட்சி நான் கென்று
காண்பட்சி தோடங் கணி. *(புத்.477-10)*

### *புள் தோடத்தின் வகைகள்*

ஈண்டுப் புள்ளோ வீங்கல் தூங்கல்
விளக்கொளி வெங்கண் மிகுகரு டக்கண்
உளர்செங் கண்புள் ளோது வறட்புள்
பேய்க்க ணந்தி பெருகு நீர்ப்புள்
ஆய்ப்பஃ தாகு மவையுமன்றி. *(புத்.477-10)*

### *பெண் தோடத்தின் வகைகள்*

பெண்ணி லாறாப் பேசுவ ரவையே
நண்ணிப் பாயினில் நாடின ஞூறும்
முட்டாய் நின்ற மொய்குழ லூறும்
குளிச மணியும் கொடியிடை நோக்கும்
குளித்த வவளே கொண்டதும் கண்டதும்
கருவழிந் தவளே கண்ட தும்மென
வரூஉந் தோட வகையிரு பானைந்
திப்பார் மக்கட் கினிதாய்த்
தப்பா திசைத்தார் தனிமருத் துவரே. *(புத்.477-10)*

### *பிறதோடம் - வகைகள்*

வழங்குங்கால் பத்திரிதன் வகையைக் கேளீர்
வனதுளசி செம்முள்ளி ஆடா தோடை
களத்தறிவாள் தூதுவளை விட்டுணு கிரந்தி
பண்புசெங் கண்டங்கத் திரியி னோடு
நெகிழ்த்திடு வெதுப்படக்கி பேய்ப்புடலும்
நின்றசங்கினிலை நொச்சி நிறைதான் கூட்டி
திகழ்த்திடுமேல் சுவாசசுரம் கணைதோ ஷங்கள்
தெளிந்துரைத்தார் மாமுனி சஞ்சீவி யென்றே.
*(ஏடு.6218-45)*

### உள்ளுக்கும் மேலுக்கும் சாறு

புளியிலையும் விளாவிலையு மவரை யிலையும்
பேராக வசம்பிட்டு சீரகமும் போட்டு
தனி இலையே இடித்துநன்றாய்ச் சாறு வாங்கிச்
சாதகமா யுள்கொடுத்து மேலும் பூசக்
களி நிலையே தோஷமது மயக்கந் தீரும்
கையாலே முகந்துடைத்தல் நின்று போகும்
கிளி இலையே வந்தெடுத்த தோஷந் தீருங்
குறிப்பாக முனிவர்சொன்ன கதிய தாமே.

*(ஏடு.6218-15)*

### குடிநீர்

கோட்டமுட னேலஞ் சீரகம் சுக்கு
கூவிளம்வே ரதிமதுரம் கன்மத் தோடு
வாட்டமுடன் சந்தனமுங் கலைமான் கொம்பும்
வாசப்பூலா வேர்ப்பொரியும் வாகாய்க் கூட்டி
தேட்டமுடன் குடிநீரைக் குடிக்க வேதான்
தேகஞ்சிறு வோர்க்குத்தேனே கேளீர்
நாட்டமுட னேமயக்கத் தாப கோபம்
நாவறட்சி யுந்தீரு நாட்டுள் ளோர்க்கே.

*(ஏடு.362-16)*

### கற்கம்

தணியுங் கோரோ சனையுடனே
சாற்று மதுரந் திப்பிலியும்
அணிவா யிதழார் முலைப்பாலில்
அரைத்துக் கலக்கி யொருசங்கு
பிணியாங் குழவிக் கிடும்போது
பெருகு மனேக தோஷமெல்லாம்
தணியு மென்றே பெரியோர்கள்
தானே பாரில் மொழிந்தனரே.

*(ஏடு.169-19,362-15,6218-10,4552-14)*

### பிட்டு

முருங்கை வேரும் நீர்ப்பூலா
முதுந்த வேரு பட்டைதட்டிக்

கறுங் குருவை நெல்வாலில்
    கலந்தே இடித்துப் பிட்டாக்கி
மருங்கத் துவண்ட தாயுண்டு
    மருவி முலைப்பால் பிள்ளையுண்ண
அருங்க பிள்ளை நோயெல்லா
    மருகு மெண்ணெ குத்தியுண்ணே

*(ஏடு.612-16)*

## *1. நெய்*

உத்தம தாளி வேரு
    உசந்தசா ரணையின் வேரு
மத்திய மிளகு போல
    அடைந்த தக்காளி வேரும்
அகத்திய பிடிதா னொன்றுங்
    கரியசீ ரகமுங் கூட்டி
பத்திய மிளகு உள்ளி
    பரியதோர் வசம்பு கூட்டே.

கூட்டியே பசுவின் பாலால்
    குமுறவே அரைத்து நன்றாய்
நாட்டியே நெய்யி னுள்ளே
    நலம்பெறக் காய்ச்சி நன்றா
யூட்டியே கொடுக்க மாந்த
    மோங்கியே தோஷந் தீரு
மூட்டியே முனிவர் சொன்ன
    மூதண்ட வேதந் தானே *(ஏடு.612-14)*

## *2. நெய்*

பேசிய தோஷந் தீர
    பிரமிவல் லாரை வண்ணம்
வீசிய நெருஞ்சி சின்னி
    விகுசுவெங் கணைபுத் தாளி
பாசியுள் ளடின காணி
    பாச்சோற்றி தகரை யாரை
மாசிப்பாந் தளிர்ம ருந்து
    மாதளை முளசிக் கோவே

இண்டிலை சங்கு கொத்தா
  னிவை சாறு நாழி
முண்ட யேரண்ட மொப்பா
  முக்கடுகு முப்ப லாதி
யண்டக மதுரங் கோட்ட
  மக்கரா வசம்பு யேலங்
கண்டமால் கெருடப் பச்சை
  காரகங் கிராம்பு யவாய்

கொடுப்பை தக்கை பழம்பாசி
  குணமாம் விருசு அகத்தியிலை
அடுத்தகீழா நெல்லி கோவை
  அமுது வள்ளி சித்திரைப்பால்
தொடுத்த மருந்து ஒன்பதுவுஞ்
  சொல்லுஞ் சாறுநா லுழக்கு
கடுத்த வெள்ளை யவுரிவேர்
  கழஞ்சு கழஞ்சா யரைநீயே.

அரைக்கு மருந்து அதிமதுர
  மணிசே ரேல மிலவங்கம்
முறைக்குங் கடுக்காய் கண்ணூர
  முருக்கு நடுத் தான மாயக்காய்
வரைக்குந் திப்பிலி கெருடப்பச்சை
  வருஞ்சீ ரகமுந் துருசுடனே
யரைக்குங் கிராம்பு சாத்திரபேதி
  யின்ன மருந்து சொல்லுகிறேன்

சொல்லுங் கூகைநீ ருடனே
  தூக்குஞ் சந்தனம் நறுநன்றி
வெல்லு மாதல்சந்தனமு
  மிகவே கருத்த சீரகமும்
கில்லு மிராமிச் சிதுவுடனே
  கிளர்ந்தே ஒவ்வொன் றோர்கழஞ்சு
தல்லு யீருள் ளியுடன்
  சாற்ற லரைத்து வழித்திடுமே.

வழித்த மருந்து யிலைச் சாறும்
　வகையாய் நறுநெய் நாழிதன்னில்
அழித்தே கலக்கி அனலில்வைத்து
　அடலே மெழுகு பதமானால்
களித்தே சீலை வடிகொண்டு
　காய்ச்சிட நக்கக் கொடுப்பீரால்
யெழுத்தே கணைநோய் வாய்ப்புண்ணு
　முள்ளு ரோகம் போய் விடுமே.

*(ஏடு.435-49-51)*

### *3. நெய்*

பருத்திக்காய் சிறுக்கீரை பொன்னாங் காணி
　பகரவகைக்குச் சாறுழக்குப் பாங்காய்க் கூட்டி
தரித்தகா லதிமதுரம் சம்பங் கிப்பூ
　தற்சீரகம் மோதகந்தன் னிடையோர்க் காக
அரைத்தக்கால் நாழியுரி பசுவின் நெய்தான்
　ஆகவிது ஒன்றாக்கி அடுப்பி லேற்றி
யெரித்தாக்கா லிடுங்குளவி செங்க மாரி
　யேதுவரல் நீர்ச்சியு மேகு மென்றே.

*(ஏடு.4552-16,604,519-15)*

### *1. எண்ணெய்*

தேறவே யின்னமொரு சேதி கேளு
　திப்பிலி சித்தரத்தை மதுர முள்ளி
கூறவே யக்கிரா வசம்பு சங்கன்
　குப்பிவேர் வகைக்குவோர் கழஞ்சு தூக்கி
மீறவே வேளை/குப்பை மேனி
　வெண்ணொச்சிச் சாறொன்றோ றுழக்கு வீதம்
ஏறவே சரக்கெல்லா மரைத்து நின்ப
　எண்ணையோர் படிதனி லிட்டுச் சேரே.

சேர்த் தொன்றாய்க் கலந்தெரித்துக் காயும் போது
　சிறியமி சிரண்டநி வேருங் கூட
பார்த்தங்கே வெந்துபதந் தன்னில் வாங்கி
　பாங்காக வடித்திறுத்துக் கலசத் தூட்டு

வார்த்தங்கே யுள்ளுக்குப் புகட்டி மேலே
வசவுபொரி யோடுநகக் கண்ணெங்கும் போட
வீர்த்தங்கே நின்றயிளைப் பிரும லெச்சி
வீச்சுவலி தோஷமெல்லாம் விட்டுப் போமே
(கை.பி.98-23)

### *2. வறட்சுண்டி எண்ணெய்*

வறட்சுண்டி சாறு வேளை
மணித்தக்கா ளிக்க ழற்சி
கரிசாலை துளசி நீலி
கனசத்தம் சமனாய்க் கூட்டி
அரற்றியே இடித்த சாறா
ழாக்குமொன் றாவின் நெய்தான்
உரற்றிய வோரா ழாக்கு
முண்மையாய்க் கூடச் சேரே.

கூடக்கத் தூரி மஞ்சள்
கோட்டமும் கரிய சீரம்
வாடவே கடுகு ரோணி
வகைக்கரை வராகன் கூட்டிப்
போடவே பொடிதான் செய்து
புனிதமா கக்க வைத்து
நாடவே அடுப்பி லேற்றி
நலமொடு காய்ச்சிக் கொள்ளே

கொள்ளவே சந்தி தன்னில்
கொடுமேதுட் டெடைஉள் ளுக்குத்
தன்னலால் சகல தோடஞ்
சுருக்கினில் தீர்ந்து ரத்தம்
உள்ளவே பரவிப் பிள்ளை
உடலது பருக்கும் பின்பு
எள்ளலின் றிக்கு ளிர்ந்தே
யின்புடன் வளருந் தானே. (புத்.477-78)

### *3. எண்ணெய்*

மொழியு மதுரம் சீரகமும்
முத்தமே சாதி பத்திரியும்

பொழியும் கிராம்பு சண்பகமும்
பகரவே லவங்கப் பட்டையுடன்
கிளியும் மொழியே வராகனெடை
கேளு முசுக்கை இலையுடனே
தெளியுங் காணி சிறுகீரை
வேரும் சீந்தி பலமொன்றே.

பலமே சொல்லு மீருள்ளி
படிகா லெனவே காரிவேர்
வளமாய் ரெண்டு எண்ணெய்படி
வாகா யிதனை கலந்தடுப்பில்
நலமா யெரித்து குழவியர்க்கு
நன்றாய் சங்கு புகட்டிடவே
வறுமை யான தோஷபிணி
வாரா தெண்ணெய் வகுத்தாரே. *(ஏடு.6218-10)*

மொழியு மதுரஞ் சீரகமும்
முத்த மேலம் பருத்திக்காய்
பொழியுங் கிராம்பு சண்பகமும்
பொன்னே லவங்கப் பட்டையுடன்
தெளியும் வகைக்கு வராகனெடை
சேரு முசுக்கை விலையுடனே
வெளியுந் காணி சிறுக்கீரை
வேரும் சீந்திற் பலமொன்றே.

பலமே காரி வேரோடு
படிக்காலீ ருள்ளிச் சாறு
வளமா யிரண்டு படிஎண்ணெய்
வாகாய்க் கலந்து அடுப்பேற்றி
நலமா யெரித்துக் குழவிக்கு
நன்றாய்ச் சங்கு புகட்டிடவே
வறுமை யான தோஷமெல்லாம்
வாரா தென்று வகுத்தனரே.
*(ஏடு.169-19,604,519-14,4552-15,362-15)*

## 4. தோடத்திற் கெண்ணெய்

காணிதக் காளி ஆலக்
கணைப்பூடு தகரைப் பாசி
சேணிலேலம் வசம்பு கோட்டம்
திரிபலை கிராம்பு உள்ளி
பாணிசேர் விடையஞ் சாதிப்
பத்திரிக் காய் மாயக்காய்
வீணில் சீரகந் திப்பிலி
வெந்தயங் கெருடப் பச்சை

மதுரமும் வகைக்குக் காலாம்
மாத்திரை அதின்முன் வேருஞ்
சதுரமா யரைத்த ரைத்து
கருபத மெழுகாய்க் காய்ச்சி
மிதுனமாய் வடித்த யெண்ணெய்
மருமரைக் கரண்டி கொள்வீர்
பொதுபல நோய்கள் தீமை
பிள்ளைதன் தோஷம் போமே. *(ஏடு.435-51-52)*

## 5. உள்ளுக்கும் மேலுக்கும் எண்ணெய்

நவிலுவே னதிமதுரம் வசம்பு குக்கில்
நாயகன்றன் கடுகரிசி வகையோ ராறு
நவிலுவேன் வெண்கோட்டம் தேவ தாரம்
கண்டில் வெண்ணெ யரத்தை திரிகடுகோ டுள்ளி
திவிலுவேன் மரமஞ்ச ளுலுவா யத்தி
திப்பிலி பூலாவிருட்சம் சிவதை வேரும்
புவிலுவேன் கல்மதம்மஞ் சிட்டிதேசா வரம்
வகைக்கொவ்வோர் கழஞ்சிபொடித் திடித்துத் தூளே.

தூளாகச் சாறுவார்த் தரைத்துச் சேர்த்து
சொல்லுவேன் மயிலிறகு பலமும் கால்தான்
கூழாக்கி முசுறுமுட்டை பலமிரு கால்நண்டு
கொழுப்பு நிலவேர் வகைக்கோர் பலந்தான் போடு

கூழாக்கி யடுப்பேற்றி பதமாய்க் காய்ச்சி
குழம்பவே மெழுகுபதம் தன்னில் வாங்கி
ஆழாக்கு வடித்திறுத்து கலசத் தூட்டி
ஆதிதிருத் தாள்பணிந்து அருளைப் போற்றே

அருளான தயிலம்விரல் தன்னில் தொட்டு
அழகான பாலகர்க்கு நாவி லிட்டு
மெருவான சிரசுபதைப் புடம்பு கைக்கால்
மிசைதடவு தீரும் நோய் விளம்பக் கேளு
நெருளான குளிதோஷம் தேரைத் தோஷம்
நிழல்தோஷ மிளைத்தோஷம் பறவை தோஷம்
உருளான பேய்த்தோஷம் பட்சித் தோஷம்
உற்றபுள்ளுத் தோஷநால் மூன்றும் போமே.
*(கை.பி. 98-26)*

### *2. மாத்திரை*

மதுர முத்த மதிவிடைய
மாலே கடுக்காய் வசம்போடு
உதிருந் தேவ தாரமஞ்சள்
உடனே வகைக்கு ஓரளவாய்
அதிருங் குறிஞ்சா பொடுதலைச்சார்
அதனா லரைத்து உண்டைதனை
சதிர முலைப்பால் தனிலிடுநீ
தணியா தோஷந் தீர்ந்திடுமே.
*(ஏடு.169-18,4552-14,519-13,941-13,*
*362-15,6218-9) (புத்.476-26),*

### *3. மாதுளம் குளிகை*

மானே ஏலம் அதிமதுரம்
விளங்கும் வங்கம் கச்சோளம்
தக்கோல முடனே மாயக்காய்
தானே கெருடப் பச்சையுடன்
சீல முடனே வசுவாசி
சிறந்த கிராம்பு பத்திரியும்

வாள முடனே திப்பிலியும்
மருவுஞ் சீனக் காரமுடன்
வழிவாய் சாத்திர பேதியுடன்
வகைக்கோர் கழஞ்சி நால்கொண்டு
கொண்டே நிறுத்து மாதுளத்தின்
கூறும் விரையைத் தான்போக்கி
பண்டே யுள்ளே தான்வைத்து
பகரும் எருமைச் சாணிதனில்
ஊனே பொதிந்து செலவுடனே
உமிப்புட மிட்டு தனையெடுத்து
மண்டார் குழலாள் முலைப்பாலில்
அரைத்தே பெரும்பயி றளவுருட்டி
ஊனே சொல்வே னனுபானம்
ஓடுகைத் தோஷ முண்டானால்
சொல்லக் கேளாய் திப்பிலியே
சிறுத்த மாதுளங் குளிகையிதே. *(ஏடு.601-12-13)*

### *மருந்து*

எல்லசுரம் போம்மாந்த முடன்தோசம்போம்
கொல்ல லொருமேகம் சோகைபோம்-நல்லாய்கேள்
காலவெள்ளச் சுக்குடனே சற்றே நிலக்குமிளும்
காலமே காய்ச்சியுண்ணக் காண். *(ஏடு.6218-36)*

### *2. துவாலை*

வகுக்குந் துவாலை தனைக்கேளு
மானே சின்னி விளாநொச்சில்
பருக்குஞ் சீந்தித் தண்வேம்பு
பய்ய நறுக்கி வசம்புள்ளி
தொகுக்கத் துவல வறுத்திதனை
துவாலை கண்டங் கரமதனில்
மகிழ்க்க முடிந்து கட்டிடவே
விரைந்து தோஷம் போய்விடுமே.
*(ஏடு.604(519)-14,4552-15,362-16), (புத்.476-26)*

## *1. நிவர்த்தி*

குன்று தாங்கி பாவட்டை
 கூறுஞ் சிவந்த வெட்டியின்வேர்
ஒன்றாய் வைத்து சாறுவாங்கி
 பூசி கொங்கை தலையேந்தி
கொண்டே குழவி தலைசொரிந்து
 குறித்தே வெள்ளைக் கல்செபித்து
நன்றாய் முன்கை தனில்மூடி
 நாடா தோடும் தோஷமிதே. *(ஏடு.7313-34)*

## *2. நிவர்த்தி*

நிமையான தோஷசர் வாங்க மெல்லாம்
 நிமைப்போதில் தீருதற்கு மூலஞ் சொல்வேன்
வமையான வந-சி-ம-ய- என்று தானே
 வங்சிங் என்று சிவ-வ-ந-ம என்ன
தமையான தோஷ நிவர்த்தி தானாச்சு
 சொல்லவும் போகுமோ சூட்சா சூட்சம்
கமையான தோஷநிவர்த்தித் தன்னாலே
 கவலைநீங்கிக் காட்சிப் பெறுவாய் தானே.
*(புத்.476-26,572-27)*

கீழ்க்காயி னெல்லிவேர் முடக்கொத் தான்வேர்
 கிருபையுள்ள நாயுருவி கஞ்சாங் கோரை
தாழ்க்காயின் விடத்தலைவேர் நிலக்க டம்பு
 தழைத்தசிறு புள்ளடிபேய்ச் சுரையின் வேரும்
கோழ்க்காயின் எட்டுவித வேரு வாங்கிக்
 குளிசமிட்டுக் குழந்தைக்குத் தாய்க்குங் கட்ட
ஊழ்க்கால சகல தோஷங்க ளெல்லாம்
 ஓடிகட லிற்புக்கும் உண்மை தானே. *(புத்.476-26)*

## *புகை*

சுண்டான தோஷமது தீர்க்க வேண்டி
 சுடலையினி மாறணிந்த சூரிவேண்டான் குழி
மிண்டான் சின்னி கீழ்காய் வேக
 முள்ள செருப்படியும் மூலம் வாங்கி

துண்டாக தான்பிணைத்து வளைய மாக்கி
துகையாக நூல்சுற்றி புகையைக் காட்டே.
*(ஏடு.185-12)*

### *பிற தோடம் - வகைகள்*

வேமப்பா தோஷமென்ற தோஷம் கேளு
விருதான கிருஷ்ணதோஷம் ரெத்த தோஷம்
நாமப்பா நீர்தோஷம் அஸ்த்தி தோஷம்
நலமான கொடிதோஷம் வலிதோ ஷந்தான்
சாமப்பா சயியோக தோஷத் தோடு
சதுரான தோஷவகை யேழுந் தானே. *(ஏடு.185-9)*

### *அத்திதோடம் - குறிகுணம்*

சொல்லுகிறேன் அத்திசுர தோஷங் கேளு
சோகைபோல் உடலூதல் யிருமல் கக்கல்
நல்லுகிறேன் அசனமதை வெறுத்துக் கொள்ளும்
நல்பார்வை காணாது பாலுண் ணாது
வில்லுகிறேன் தீவிரமாய் சுரமும் காயும்
விட்டுவிட்டு சுரங் காயும் குளிருண் டாகும்
தெல்லுகிறேன் வாய்புண் ணாகும் கால்கள் வீங்கும்
தோகையரே சோரைசளி மிகவும் போமே.
*(ஏடு.185-10)*

### *இரத்ததோடம் - குறிகுணம்*

என்றதோர் ரெத்தமென்ற தோஷ மாகில்
யெழுந்த சுரம்கண்ட பின்னேரத்தம் போக்காம்
நன்றதோர் சுரதாகம் மோக மாகும்.
நயமாக குழைந்துவிடும் விசற்கும் தேகம்
கொன்றதோர் வயிற் பொருமும் பல்க டிக்கும்
கொல்குறிகண் பலவிதமாகி அறிய தோணும்
நின்றதோர் யிக்குறிகண் கண்ட போது
இதுரெத்த தோஷமென்று வகுக்க லாமே.
*(ஏடு.185-10)*

### *இரைத்தோடத்திற்குக் கற்கம்*

வருந்துகிறேன் மைந்தருக் கிரைத்தோ ஷந்தான்
மாறிடவே பெருங்காய மோர்மஞ் சாடி

அழுத்துகின்ற ஓமமரைக் கழஞ்சி தானும்
ஆறுதரங் கண்டறிந் தளவறிந்து கூட்டி
செழுத்துவ மில்லாதொன்றா யரைத்துக் காடித்
தெளிவதி லீயந்திடத் திரைத்தோ ஷம்போகும்
கொழுத்துதொரு நன்னாரி வேர்தான் பச்சை
குளுந்தநீர் தனிலரைத்து கொடுக்கத் தீரும்.
*(கை.பி.98-4)*

### *எச்சிற் தோடம்-குறிகுணம்*

ஆதி நழுங்க ளிவதுறா
அறிவொடு சத்தி மிகவுணராய்
இதமொடு தலையெ டுத்து
யிதுவிழி சாயல்
விதம்வித மாக மேனி
வெதும்பி யேவரு மானால்
தமது எச்சிற் தோஷ
மென்னவே செப்பி னாரே. *(ஏடு.4485-2)*

### *எச்சிற் தோடம் - குறிகுணம்*

எச்சிற் தோ டக்குறியை வியம்புங் காலை
எதிரிட்ட வொருவர்கண் ணேற தாகும்
வைச்சபா லுண்ணாமை தலைதூக் காத
மயக்கமுடல் வாடலதி னிறமு மாறல்
அச்சமுறு பூதசுரம் ஒருக்கால் தாயை
அண்டினார் சீறியழ லற்ப பேதி
விச்சலிமை யொட்டுகண் ணிமிண்டி மண்ணில்
மேல்விழுந்து புரண்டழுத லிவைக ளாமால்.
*(புத்.477-20). (சர.வை.-14)*

### *எச்சிற் தோடம்*

எச்சிதான் கலந்த பிள்ளை
இதுசெய்யும் குணங்கள் கேளாய்
அச்சிதன் முலையுண் ணாது
ஆவின்பா லுண்ண மாட்டார்
உச்சிகண் குழிந்தே காணும்
முடலிளைத் தோங்கார முண்டாம்

கொச்சித வயிறு போகும்
 கூறுவேன் சிகிச்சை கேளே. *(ஏடு.7313-91)*

### *எட்சி தோடம் - குறிகுணம்*

தேயும் உடம்பு மிகநாறும்
 செல்வன் முலைப்பால் மறந்திருக்கும்
தாயைக் கண்டா லொவ்வாது
 சற்றேவயிறு போஞ்சுரமாம்
பாயும் புலிபோல் பதறியழும்
 பாலரைக் கண்டால் பார்த்திருக்கும்
பாயும் விடையோன் தான்அறியப்
 பகராய் எட்சித் தோடமிதே.

மண்ணில் புரண்டே மண்ணைப்போல்
 மடிந்து புரளும் கண்பிசையும்
சந்திக் குணமா மாந்தமிது
 தான்சண் டாள சிசுரோகம்
வெண்ணி வேதஞ் சிலநூலோர்
 விளம்பும் இந்நோய் கண்டுகொள
எண்ணிப் பறக்கும் எட்சியென்ற
 இயல்பாந் தோட மிதுதானே.

போமேதான் எட்சிதோட குணத்தைக் கேளாய்
 பேரான உதிரத்தில் சூடு கொண்டு
வாமேதான் மயக்குவித்துத் தலையெ டாமல்
 வறண்டுமே கண்பீளை கட்டி மூடும்
காமேதான் உடல்வற்றிக் கனலே மீறுங்
 கர்மாதி வினையிதுதான் சிசுக்கட் கெல்லாம்
ஆமேதான் விதவிதமாய் மேனி மாறும்
 ஆகவுநீ எட்சிதோட குணந்தான் பாரே.
*(புத்.477-19-20,572-58,572-50,476-15-16),*
*(ஏடு.435-11-13,7313-92 ).(சர.வை.13)*

### *எட்சி தோடம் - குறிகுணம்*

தேயுமுடம்பு மிகநாறு
 செல்வன் முலையை அருவருக்கும்

தாயைக் கண்டா லொவ்வாது
    சற்றே சற்றே வயிறொழுகும்
காயுமுடம்பு கண் பிசையுங்
    கண்டாலிவைதா னறியீரோ
பாயும் விடையோன் தானறியப்
    பகரிலெட் சித் தோஷமிதே. *(சர.வை.13)*

### *1. குளிசம்*

தானே சுக்கிர வாரமதில்
    தனித்த அசுவ கந்திதான்
மானே காப்பு மீந்திட்டு
    ம.ந.சி.வ.ய.வென்றுரு வேற்று
பானே நூற்றெட் டுருவேற்றிப்
    பண்பாய் வடக்கின் வேர்பிடுங்கித்
தேனே பட்டுநூல் குளிசமிட்டுத்
    தேவி நிறுத்தி அருகில்வையே.

வையே பூசை நியமமதாய்
    வாழைக் கனிகள் அவைபடைத்துத்
துய்ய செம்மில் சலமொண்டு
    தோட நிவர்த்தித் தான்செய்து
தையல் தேவி தனைநினைத்துத்
    தண்ணீர் ஓதித் தான்தெளித்து
மையக் குளிசந் தனையெடுத்து
    மைந்தன் தனக்குக் கட்டிவிடே

### *குளிசம் - குளிப்பாட்டல்*

வேலமரப் புழுக்கூட்டில் கன்னிநூல் சுற்றி
    விளக்கு மஞ்சளதுபூசித் தூபங் காட்டிச்
சாலவுமே முக்குளநீர் மந்தி ரித்துத்
    தலைமீதே சொரிகநீள் ஆலம் வீழ்தைப்
பாலனுக்குக் குளிசமது கட்டிக் கோழி
    பலிகொடுத்துத் தலைசுற்றி அப்பால் போட்டு
மேலுக்கு நிலவிளா வாதல் வில்வ
    இலையாதல் போட்நீர் குளிப்பாட்ட நன்றே.

*(புத்.477-20,476-10).*

### *குளிப்பாட்டும் நீர்*

வேல மரத்தின் புழுக்கூட்டை
    விதமா யெடுத்து நூல்சுற்றி
சாலவே மஞ்சள் பூசி
    சாம்பிராணி தூபங் காட்டி
ஏலவே பிரமடைநீர் மந்திரித்து
    மாலையம் போது தாயார்
மடியில் வைத்துக் குளிசங்கட்டே.

நாளென்றுஞ் செவ்வா யன்று
    நிறகோழி பெலியு மிட்டு
ஆளவன் தலையைச் சுற்றி
    அகத்தி யப்பாலே போட்டு
விளாவிலை வில்லு மாதல்
    வெந்நீரில் போட்டுக் காய்ச்சி
ஏழுநா ழிகைக்கு ளிக்க
    எட்சியின் தோஷம் போமே. *(ஏடு.4435-3)*

### *கழிச்சல் தோடத்திற்கு உப்பிலி நெய்*

உப்பிலியின் பூண்டை உறநறுக்கி யாவினெய்
நற்புடனே சேர்த்துத்தான் நாற்சாமம்-செப்பக்
குலரவியில் வைத்துக் கொடுகழிச்சல் தோடம்
அலறியே யோடு மறி. *(புத்.477-326)*

### *கிருஷ்ண தோடம் - குறிகுணம்*

தானான நாக்குவாய் கறுப்ப தாமே
    தயவான கண்மருளும் பாலுண் ணாது
தேனான தேகமெங்கும் அனல்போல் காயும்
    சேர்ந்தரைக்க கண்குளிரும் சிறுநீர் கட்டும்
கோனான தாகமுண்டாம் மல்லு போகும்
    கிளந்த வயிறுடன் திவிடும் கெற்றலாகும்
ஏனான யிக்குறிகள் கண்ட போது
    யெதிரான கிருஷ்ணநீர் தோஷ மென்றே.
*(ஏடு.185-9)*

## குதிரைத் தோடம் - குறிகுணம்

மயக்கிடும் சுரமு முண்டாம் மலமும் நீரடைத்துக் கொள்ளும்
தியக்கிடும் விலாவும் நெஞ்சு சேரவே யிழுத்து வாங்கும்
நியக்கிய கபமும் மேலாயி நின்னுடல் நடுக்க லாகும்
பகருவாய் பதையும் தள்ளும் பார்விழி மேலே பார்க்கும்.

பார்த்திடும் திருக்கி மெத்த பய்யவே வலியுண் டாகும்
தீர்த்திடும் கையும் காலும் திருகவே வலிக்கும் பக்கம்
கோர்த்திடும் குணமே கண்டால் கொல்லும் குதிரைத் தோஷம்
பார்த்திடும் பதினெட் டுள்ளே படிந்திடும் சீவன் தானே.

*(ஏடு.185-8)*

## குவளைத் தோடம் - குறிகுணம்

நாளென்ற குவளைத் தோஷம் நலமுட னணுகு மாகில் தீளென்ற
திவளை தன்னில் சீழ்சல ரெத்தம் கொட்டி
கோளென்ற காய்ச்ச லுண்டாய் கொண்டிடும் யிருமல்
வாளென்ற வயிறு நோவும் வந்திடும் மலம்வேம்பூவே.
வேம்பதின் பூப்போல் பேதி வேதனை யாலே போகும்
தாம்பது வயிறும் நெஞ்சும் மலஞ்சலம் சுரந்து வீங்கும்
நாம்பது யிளைராம் விலாவும் நய்யவே சுரமும் தோன்றில்
யெம்பது ஏழுமூன் றென்றில் எமனிடம் சேரு மென்றே.

*(ஏடு.185-8)*

## கூகைத்தோடம் - குறிகுணம்

பறந்திடும் கூகைத் தோஷம் பற்றிடில் குணமே தென்றால்
திறந்தகண் ணடைத்தி டாது சிறுகபா லுண்ண மாட்டார்
கொறைந்திடும் வயிறும் ஊதும் கொலு கொலு மலவும்போகும்
தறைந்திடும் இழுத்து வாங்கும் தலைதளர்ந் திருக்கும் காணே.

காணவே சுரமும் உண்டாம் கால்கரம் வலிக்கும் சன்னி
பூணவே நாக்கு தள்ளும் பொடுபட கடிக்கும் பல்லு
தோணவே நயன மூடும் தோஷமென் றுரைக்க லாகும்
ஈணவே பதினாறாம் நாள் எமனிடம் ஒன்று சொல்லே.

*(ஏடு.185-9)*

### கெம்பீரதோடம் - குறிகுணம்

என்றதோர் கெர்ப்ப தோஷம்
எழுப்பிடில் குணமே தெனில்
நன்றதோர் மலநீர் கட்டும்
நிலம்வயிற் பொருமல் தோன்றும்
குன்றதோர் இருமல் சுவாசம்
குறுகமூச் சிமுப்புண் டாகும்
தன்றதோர் தாக மிச்சம்
சார்ந்திட மரண மஞ்சே. (ஏடு.185-5)

### கெர்ப்ப தோடம் - குறிகுணம்

நாட்டமென்ற கெம்பீர தோஷ மாகில்
நலமாக அலறியழும் முலையுண் ணாது
கூட்டமென்ற நயனமது துறந்தி டாது
குழந்தைக்கு நீர்மலமும் கட்டிக் கொள்ளும்
வேட்டமென்ற வயறூதும் வறளும் நாவும்
வேதனையாய் கபதொந்தம் கைகால் வெட்டல்
நீட்டமென்ற முக்கலுடன் சன்னி தொந்தம்
நிச்சயமாய் தான்மயக்கும் அனல்போல் காயும்.
காயுமே யீராறு தினத்தில் கொல்லும்
கண்டறிந்து கருத்தாக உணர்ந்து நில்லு.
(ஏடு.185-2-3)

### கொடிதோடம் - குறிகுணம்

போமேகேள் கொடிதோஷ குணத்தைக் கேளு
பொல்லாத சுரங்காய்ந்து வேவுண் டாகி
ஆமேகேள் சோரைசளி மிகவும் போகும்
அனல்போலே காய்ச்சலுண்டாய் அதைத்து வீங்கும்
காமேகேள் குதவாயில் மூலந் தள்ளும்
கபம் தோன்றி யிருமலுண்டாய் காய்ச்சல் மீறும்
பாமேகேள் பலநாள்தான் சொல்லும் போது
பால்குடல் மாண்டுவிடும் பனிகண் டாயே.
(ஏடு.185-11)

### *சலதோடம் - குறிகுணம்*

யென்றதோர் சலத்தின் தோஷம் எழும்பிய குணமே தனில்
நன்றதோர் சலந்தான் கொட்டும் நல்வயி றொழுகும் மூதும்
கன்றதோர் சத்தில்காணும் கால் கைகள் அசதி யாகும்
சின்றதோர் தாக முண்டாம் சீதமும் மிகுதி தோன்றும்.
தோன்றிடும் வயிறும் ஊதும் தோல்களும் சுருக்க லாகும்
கான்றிடும் பால்உண் டாக்கால் கக்கலும் உடனுண்டாகும்
தான்றிடும் வேதனை காட்டும் தலைகுறைந்த சதி யாகும்
மான்றிடும் மரண முண்டாம் மகிழ்ந்திரு நாளில் தானே.

*(ஏடு.185-7)*

எட்டிய தோஷத் தாலே எகிறிடும் குணத்தைக் கேளு
அட்டிய சன்னி தோஷம் அறைகிறேன் காய்ச்ச லாகும்
திட்டமா யூதும்உந்தி திடுதிடா யிடிக்கும் நெஞ்சு
வட்டமாயிழித்துப் பார்க்கும் வாய்கடித் தலறும் காணே.

காணவே நடுந டுக்கும் கரங்களும் முறுகும் பின்னே
தோணவே வானீ ரகலும் சோரையு மலத்தில் காணும்
ஏணவே மயக்க மாகும் ஏழுக்கு மரண மென்று
நாணவே முனிவன் சொன்ன நல்குறி கண்டு கொள்ளே.

*(ஏடு.185-6)*

### *சன்னி தோடம் - குறிகுணம்*

தானென்ற சன்னியுட தோஷ மாகில்
தலைதனிலே சிகப்புமுன்னே தோன்ற லாகும்
ஊனென்ற சத்துமதுங் கேட்டுக் கொள்ளும்
உண்டபால் நாசிவாய் வழியே தட்டும்
தேனென்ற மலங்கெட்டும் சிறுநீர் கெட்டும்
தேகமெல்லாம் வன்முறுக்கின் பூநிறம்போற் காணும்
கானென்ற கபமிளகும் கைகால் வெட்டும்
கண்டநிறம் மாறிவிடும் மயக்கம் தோன்றும்.

*(ஏடு.185-2)*

தோன்றுமே வயிறூதும் துரப்பு மேவும்
தோகையரே யீரெட்டு தினத்துக் குள்ளே
காணுமே மரணமென்று கருத்தாய் சொல்லு
கதித்தசன்னி தோஷமடா அறியொண் ணாது

வேணுமே முன்னூலில் வெளியாய்ச் சொல்வேன்
வேதாந்த சித்தரெல்லாம் ஒளித்து போட்டார்
நாணுமே நன்னூலாய் சொன்னேன் சொன்னேன்
நாயகமே யிந்நூலின் நாட்டம் பாரே. *(ஏடு.185-2)*

### *சுரதோடம் - குறிகுணம்*

கொல்லுமே சுரதோஷந்தான் கொடுஞ்சுர சர்ப்ப மாகி
பல்லது கடித்துக்கொட்டும் பாறைபோல் வயிறும் ஊதும்
கல்லென கபமும் கட்டி கண்டிடும் மலத்தில் சோரை
நல்லுடல் நடுக்க லாகும் நாள்மூன்றில் மரண மென்றே.
*(ஏடு.185-7)*

### *சுரதோடத்திற்கு எண்ணெய்*

ஆமணக் கெண்ணெயது நாழிதான்
அடுத்த நுணாச்சா றரைநாழி
பூமணக் கீருள்ளிக் கால்நாழிப்
போதரவாய்க் கும்மி யடியுங்கடி மன
தாதரவாய்க் கும்மியடியுங்கடி. *(புத்.476-124)*

### *பாலசஞ்சீவி மாத்திரை*

திரிகடுகு வெண்காரம் சாதி லிங்கம்
சிறந்திடவே ஐம்மருந்துஞ் சமன தாக
நெறிபடவே எலுமிச்சம் பழத்தின் சாற்றால்
நிகவரைத்து ஒருசாமம் நிரைய தாக
குறியுடனே உண்டைதனைப் பயிற்றிற் பாதி
குளிர்ந்தநிழல் தனிலுலர்த்திக் குழவிக் கீய
மறிபடவே பால சஞ்சீவி யென்று
வகுத்துரைத்தார் மலையின்முனி மண்ணுள்
ளோர்க்கே. *(புத்.476-124)*

வகுக்குங்கால் பத்திரிதன் வகையைக் கேளு
மணித்துளசி செம்முள்ளி ஆடா தோடை
பகுத்திடுவாய் தூதுவளை விட்ணுக் காந்தி
பண்புசெறி கண்டங் கத்திரியி னோடு
நிகழ்த்திடுமே வெதுப்படக்கிப் பேய்ப்பு டோலும்
நின்றசங்கின் இலைநொச்சில் விரைதான் கூட்டி

செருத்திடுமே சுவாசசுர மணதோ ஷங்கள்
    தெரிந்துரைத்தார் மாமுனி சஞ்சீவி யென்றே.
(புத்.476-125)

### *சுரதோட கழிச்சலுக்குக் குடிநீர்*

பாரென்ற சுக்கினோடு முத்தம் ஓமம்
    பாங்கான சித்தரத்தை சிறுதேக் கோடு
ஊரென்ற யிருவேலி பற்பாடகப் புல்
    உற்றகரு வேம்புநெடி தும்பை தானும்
சீரென்ற பொடுதலையும் கொழிஞ்சி வேலிப்
பருத்தியொடு சமம்வறுத்து கஷாய மாக்கி
கோரென்ற குழந்தைகட்கு கொடுக்கும் போது
    கொண்டசளி சோரையொடு சுரம்கா ணாதே.
(ஏடு.185-12)

### *சுழியன் தோடம் - வகைகள்*

சேர்ந்திடும் சுளியன் தோஷம் செய்குறி பேருங் கேளு
கான்றிடும் குதிரை கூகை காகனும் முசலும் சன்னி
ஊன்றிடும் அய்ந்த தாச்சு ஊரறி குணத்தைக் கேளு
தான்றிடும் குதிரை செய்யும் தன்மை கொள் மயக்கமாகும்.
(ஏடு.185-8)

### *செவி தோடத்திற் கெண்ணெய்*

உற்ற வசம்பு கருஞ்சீரம்
    ஏலம் அரத்தை மிளகுடனே
தசங்கு மஞ்சள் நல்சீரம்
    தானா யீர உள்ளியுடன்
ஒவ்வொன் றுடனோர் பாக்களவு
    ஒன்றா யிசைந்த நல்லெண்ணெய்
ஊனே ழிக்கல் வெந்திதமாய்
    வடித்துச் செவியில் தானடையே
அடைத்தே செவிப்புண் தான்தடவ
    அமர்ந்தே யோடும் செவித்தோஷம்.
(ஏடு.601-10)

### *தீராதோடம்*

செய்ய கண்ணு மிகச்சொருகும்
சீதந் தண்ணீ ராய்க்கழியும்
மைய மேனி கறுப்பாகும்
மாங்காய் போலே ஆசனமாம்
வைய தேகம் மிகவிளைக்கும்
வானம் போல வயிறாகும்
செய்ய தோட மிதுதானே
தீரா தென்று தான்உரையே.

சேயி னுடம்பு மிகநாறுஞ்
செல்லா முலைப்பால் அருவறுக்கும்
காயு முட்டம்பு கண்குழியுங்
கண்டால் இதுதான் அறியாயோ
தேயு மிடையாய் சிவனாணைத்
தீராத் தோட மென்றேதான்
ஆயுள் நூலி னளவுதனை
அகத்தீச் சுரனார் அருளினரே.

*(புத்477-27,476-27,572-26)*

### *தீரைத் தோடம் - குறிகுணம்*

கொள்ளப்பா தீரையென்ற தோஷம் சேரில்
கொலுகொலென்று வயிறிரைந்த மலமே போகும்
நள்ளப்பா தீரையது மிகுந்து சுரத்தில்
நலமாக துடிதுடித்து அலறும் பிள்ளை
வெள்ளப்பா விழிமருட்டும் வலிவ லிறாம்
வேதனையாம் கால்கரங்கள் குளிர்ச்சி காட்டும்
கள்ளப்பா வில்போலே வளைந்து காட்டும்
காணாது காலனென்று கருதி சொல்லே.

*(ஏடு.185-6)*

### *தேரைத் தோடம் - குறிகுணம்*

தேனோர் மொழியாய் நீகேளாய்
தேரைக் குணந்தான் இயம்புகிறேன்
ஊனே வற்றி யுடம்புலரும்
உயர்ந்தே நெஞ்சு தான்கூடும்

கானே கண்ணும் பொடித்திருக்கும்
 கையுங் காலுஞ் சுரிமுடக்கும்
மானே வயிறு புடைத்திருக்கும்
 மலமுந் தீயும் வாயுலரும். *(சர.வை.மு.15)*

உலருந் தண்ணீர் தாகிக்கும்
 உந்தி மலருங் குரல்வேறாம்
மலர்ந்த தாமரை போல்முகமும்
 வாடி யொடுங்கிச் செவிதாழும்
முலையின் பாலும் உண்ணாது
 மூச்சு வாங்கும் இதுதீரப்
பலருஞ் சொன்னார் என்னாமல்
 பழிச்சே தென்று கேட்டிடுமே.
*(ஏடு.7313-97), (புத்.477-26,476-25)*

காலுங் கையு மிகவற்றிக்
 கட்டிப் போட்டால் போல்பிள்ளை
மேலும் வற்றி வெளுப்பிட்டு
 வேறே குணமாய்க் குரல்நெறித்துச்
சால முலைப்பால் குடித்தாலுஞ்
 சற்றுந் தேறா திருப்பதெனில்
நீல வட்ட மலர்க்கண்ணாய்
 நிசமாம் தேரைத் தோடமிதே.
*(சர.வை.மு-15) (ஏடு.7313-97,941-10,519-11,4485-6,169-15,362-12), (புத்.477-26,476-25)*

### புள்ளடி நெய்

புள்ளடி சிறுகீரை நீராரை தன்னுடன்
 புகழ்காணி நீர்முள்ளியும்
பொய்யாமல் இவ்வகை சமூலமுட னேகளா
 புனமல்லி குமிள் நீலியும்
மொள்ளவரு கரிசலாங் காணியுட னேமுடக்
 கொத்தானின் வேர்சமனாய்
முந்நாழி நீர்தனை நாலிலொன் றாகவே
 முதல்பாக மாயிறக்கி

மெள்ள அதிமதுரமும் திப்பிலியி னோடேலம்
 மிளகுவகைக் கால்பலமதாய்
மென்பசுப் பால்விட் டரைத்துக் கலந்துமே
 யிருநாழி நெய்யுடனே
உள்ளபடி நன்றாய் எரித்ததை வடித்தபின்
 உரைத்திடு கரண்டியளவாய்
உண்டிடக் குளிதோடந் தேரையின் தோடமுடன்
 ஓடியே போய்விடுதே.

*(புத்.477-25-26,476-25-26,4552-12,941-10-11,604-11,362-12,169-7)*

### *தேரைத் தோடத்திற்குக் குளிசம்*

நாக தாளிதலைச்சுருளி
 நல்ல வள்ளி யதின்வேரும்
வேக முடைய பிறமடைநீர்
 மின்னே தெங்கம் நீர்சொரிந்து
வாகாய்க் கோழி பலிகொடுத்து
 வகையாய் மருந்து குளிசமிட
ஆருந் தேரை அஞ்சுந்தான்
 அடவாய் நெய்யிற்பொரித்துண்ணே. *(ஏடு.4485-7)*

### *நாமுள் தோடம் - குறிகுணம்*

பாரேநீ அரிவையர் தன் துயரத் தாலும்
 பாலனது முன்னாளிற் சனிக்கும் போது
ஆரேதான் அந்நாளில் தோஷத் தாலும்
 அன்னையுட பசியாலும் வருத்தத் தாலும்
வாரேதான் குழவிகட்கு நாமுள் தோஷம்
 வலுத்ததே இந்தநோய் வலுமை மெத்த
பாரேதான் இருமல்மிக மேல்மூச் சுண்டாம்
 மாசற்ற இருகண்ணீச் சொரியும் பாரே.

சொரியும்பார் தலைவலியும் சுரமுண் டாகும்
 சொற்பனமாய் பொறிகலங்கி முலையுண் ணாது
அரியும்பார் விலாவிரண்டும் அள்ளெ டுக்கும்
 ஆ-ஆ-ஆ- வாயெல்லா நாமுள் ளாகும்

வலியும்பார் தொண்டைபற்றி மிகமுள் ளாகி
வலுத்ததே விதியினுட வலுமை தன்னால்
மாயும்பார் தலைநடுக்கும் பேசொட் டாமல்
மாதொண்டைச் சேஷ்மந்தான் மருவிப் பாரே.

மருவிப்பார் இருகண்ணும் விழித்தி ருக்கும்
மாபாவ சண்டாள நாமுள் தோஷம்
மருவிப்பார் இக்குணத்தை அறிந்துக் கொண்டு
மகத்தான நோயிதென்று மனதி லெண்ணி

மருவிப்பார் மனதங்கிப் பொறுமை யாக
வளமையுடன் நோய்களைநீ சோதித் தேறி
மருவிப்பார் நாமுள்ளின் தோஷங் கண்டு
வருங்குணத்தில் இந்நோய்தான் தீரா தென்னே.
*(புத்.572-15-16,476-154)*

### *சாறு*

கடுக்காய் ஒன்று பொடிசெய்து
கற்றாழஞ் சாறுசீ ரகமும்
இடுவோர் சங்கி னளவாக
இதுபோல் மூன்று நாளதுதான்
கொடுமே இனிதாய் நாமுள்ளுக்
குலைந்தே யோடி விடுங்கையால்
விடுவேல் விழியாய் செய்யென்று
வேத முனிவர் உரைத்தனரே. *(புத்.476-155)*

### *2. சாறு*

சங்கன் கொழுந்து தனிநெருஞ்சில் முள்ளுக்காய்
கங்கு மிளகுதக் காளியிலைப் - பொங்கும்
பழமஞ்சள் உள்ளிப் பரிவாய் நறுக்கி
பொழியும் ஓர்சங்கிடவே போம். *(புத்.572-16,476-155)*

### *நீர்தோடம் - குறிகுணம்*

வகுத்திட்டேன் நீர்தோஷ குணமே தனில்
வகையான சுரம்காய்ந்து பழகும் போது
பதைத்திட்ட அரைக்குக்கீழ் அதைத்து வீங்கும்
பாலகர்தன் வயிறுமுகம் புறங்கை வீங்கும்

தொகுத்திட்டேன் முக்கலுடன் தாகம் காய்ச்சல்.
சோரைசளி மலமதிலே கலந்து போகும்
நிகுத்திட்டேன் இக்குறிகள் கண்ட போது
நீர்தோஷம் இதுக்குப்பேர் ஆய்ந்து சொல்லே.
*(ஏடு.185-10)*

## *பித்த தோடம் - குறிகுணம்*

தானென்னும் பித்த தோஷம்
சடமதில் அணுகு மாகில்
ஊனெனும் தளர்ந்து சுருத்தில்
உச்சிகண் குளிர்ந்து காணும்
ஏனெனும் பொருமல் பேதி
யிளைப்பதும் பொருமல் காணும்
கேனெனும் சிறுநீர் கட்டும்
கொடும்விழி தளரு மென்றே.

விழியது தளர்ந்து பார்க்கும்
விடுவிடுத்த லறாம் பிள்ளை
உழிவயி றிரைப்பு தோன்றி
உருண்டமும் குளிரும் கால்கை
பழியது செய்யு மப்பா
பதினொன்று தினத்துக் குள்ளே
வெளியுறு முனிவன் சொன்ன
வேதத்தின் முறையீ தென்றே. *(ஏடு.185-5)*

## *மலதோடம் - குறிகுணம்*

தானெனும் மலத்தின் தோஷம் தான் செய்யுங் குணத்தைக் கேளு
தேனெனும் வயப்பட்டு சோரையும் சளியும் தோன்றும்
நானெனும் நாற்ற முண்டாம் நழுகிடும் வ...ம் அங்கே
ஊனெனும் அதிசா ரத்தோடு உறுதியாயி சேருங் கண்டாய்

கண்டிடும் வயிறும் கால்கை கதித்ததோர் வீக்க மாகும்
வெண்டதோர் பிடரி நோகும் வேதனை பலதும் செய்யும்
கண்டதோர் அன்னம் தீண்டார் காய்ச்சலும் தாகம் பின்னும்
தீண்டதோர் குணங்கள் கண்டா லாதித்திரு பத்து நாளே.
*(ஏடு.185-8)*

### *மாந்த தோடம் - வகைகள்*

அஞ்சிய மாந்த தோஷம் அறைகிறேன் யிருநான் காகும்
செஞ்சிய சன்னி தீரை கொடும்வலி சுரதோ ஷந்தான்
வஞ்சியே வாய்வு தோஷம் மலதோஷம் சலத்தின் தோஷம்
நெஞ்சினில் குவளைத் தோஷம் நேரிட்ட தோஷ மெட்டே.

*(ஏடு.185-6)*

### *வெங்காயச்சாறு*

ஈரவெங் காய மெழுமுடக்கொத் தானிலையும்
பேர வெதுப்பிப் பிழிந்திட்டுச் - சேரவே
மூன்றுகா சூட்ட முறைமாந்தத் தோடமஃ
தூன்றுத லில்லாம லோடும். *(புத்.477-83)*

### *மூர்ச்சை தோடம் - குறிகுணம்*

தேயுமே மூர்ச்சையுட தோஷ மாகில்
சேர்ந்துவிலா ரண்டத்திலும் சிகப்பு தோன்றும்
நேயுமே நெஞ்சுகுழி பிடரி தன்னில்
நிசமாக உந்தியிலும் பினாசம் பூபோல்
ஆயுமே சிவந்தீறாம் அனல்போல் காயும்
அறிவதற்கு கபமுண்டாம் மயங்கும் சொல்லே.

சொல்லிய மயக்க மாகும் சேர்விழி திறந்தி டாது
நல்லிய முலையுண் ணாது நகமுகம் கறுப்பு தோன்றும்
கல்லிய சிறுநீர் கட்டும் கருதிய பதிமூன்று நாள்
வல்லியே மரண மென்று வாகடத் தியல்பு தானே.

*(ஏடு.185-3)*

### *வலிதோடம் - குறிகுணம்*

சொல்லிய வலியில் தோஷம் தோன்றிடில் குணத்தைக் கேளு
வல்லிய மலமும் போகும் வயிறது பொரும லாகும்
கல்லிய பாறை போலே கதித்திடும் பெருமும் உந்தி
மல்லி சுரமே காட்டி வலியோடு நடுக்கல் தானே.

வலித்திடும் குளிரும் கைகால் வாய்திறந் தழுதி டாது
சிலிர்த்திடும் குளிரும் காய்ச்சல் தீயென வெதும்பலாகும்
சலித்திடும் நயமை மூடும் சத்திலும் போதக் கேடாம்
மெலித்திடும் மேல்மூச் சாகும் மெய்யிரு நாக்கில் கொல்லும்.

*(ஏடு.185-7)*

6

### *வலிதோடம் - குறிகுணம்*

கண்டாயோ வலிதோஷ குணம்வந் துற்றால்
கதிரொளிபோல் சுரங்காய்ந்து வலியுண் டாகும்
மிண்டாயோ உடல்குலுக்கும் பல்க டிக்கும்
மிகவும்பா லுண்ணாது கரைவ தாகும்
திண்டாயோ காம முதிக்கும் சன்னி தோன்றும்
சரீர மெல்லாம் வில்போலே வளைவ தாகும்
எண்டாயோ இப்படியே சுரத்தில் கண்டால்
யெம்புறத்தில் யேகுமடா ஜீவன் தானே.

*(ஏடு.185-11)*

### *வளிதோடத்திற்குத் துவாலை:-*

வளிதோஷந் தனையகத்த முள்ளிவசம் பினோடு
வாய்ந்தசா ரணைகருத்து வகையாய்ப் பூச

*(ஏடு.941-10)*

### *வாத தோடம் - குறிகுணம்*

செப்பினேன் வாதபித்த சேர்ப்ப மூன்று
சிறந்த முத்தோஷமென்று வகுக்க லாகும்
ஒப்பினதோர் வாதமெனும் தோஷ மாகில்
உடல் தளர்ந்து வயிறூதி முக்கல் தோன்றும்
அப்பினதோர் நிர்மலங்கள் பிடித்துக் கொள்ளும்
அதினோடு கபம் சேர்ந்து சுழித்து வாங்கும்
எப்பினதோர் மேல்மூச்சு நடுநடுக்கல்
ஏகுமடா நாலாம்நாள் சீவன் தானே.

*(ஏடு.185-5)*

### *குடிநீர்*

வாய்க்கவே சிறுதேக்கு வாய்வி டங்கம்
வால்மிளகு ரோகணியும் சுக்கோ டேலம்
சாய்க்கவே திப்பிலி இலவங்கந் தான்றி
தக்கோலம் பொஸ்தப்பால் வகைவ கைக்கு
மாய்க்கவே கால்பலமாய் நிறுத்துக் கொண்டு
வன்மையாய் தூளிடித்து பாண்டத் திட்டு
காய்க்கவே இருநாழி சலமும் விட்டுக்
கடுகவே எட்டொன்றாய் காய்ச்சி றக்கே.

இறக்கியே கொடுத்திடவே ..........
இயல்பான ..........விஷதோ ஷங்கள்
நமன்ஓடிப் போவான்பார் கியாழத் தாலே.
*(புத்.572-51)*

### *1. கத்தூரி மாத்திரை*

எய்தாமல் கத்தூரி கழஞ்சு ஒன்று
இனிதான குங்குமப்பூ கழஞ்சு ரண்டு
எய்தாமல் ரோசினையும் கழஞ்சு மூன்று
இவைமூன்றுங் கல்வத்திலிட்டுக் கொண்டு
எய்தாமல் அமிர்தமென்னு முலைப்பால் விட்டு
இனியதொரு சாமம்ஒன் றரைத்துக் கொண்டு
எய்தாமல் குன்றிபோல் நிழலு லர்த்தி
எடுத்துநீ செப்புதனில் அடைத்தி டாயே.

அடைத்திட்ட மாத்திரைதா னொன்றெ டுத்து
அந்தெடைக்கு முலைப்பால்விட் டிழைத்துக் கொண்டு
விடைத்திட்ட முனைநாவில் தீட்டிட் டாக்கால்
விஷதோஷ ............. வீறிட் டோடும்
கடத்தெழுந்த ....................
கடைமருந்தின்போக்கறியார் கழுதை மான்பா
குஜடத்தெழுந்த குடநகில் மானே கேளாய்
குருவருளால் கத்தூரி குளிகை யாமே. *(புத்.572-37)*

### *2. ஏலாதி மாத்திரை*

நல்குவீர் நல்லேலம் கிராம்பு முத்தம்
நல்மதுரம் இருவேலி கடுகு சுக்கு
அல்குவீர் மதுரம் ரோசினைநன் னாரி
அரியநிலப் பனையின்வேர் தாளி சந்தான்
வல்குவீர் சடாமாஞ்சில் சந்த னத்தூள்
வகையிலுப்பைப் பூவுடனே தேவ தாரம்
மல்குவீர் திப்பிலி ரோகணி வகைக்கு
வரிசையாய் கால்கழஞ்சு நிறுத்துக் கொள்ளே.

நிறுத்துமே கல்வத்தில் போட்ட பின்பு
நிலையான செவ்விளநீர் தன்னை வார்த்து

வறுத்துமே இருசாமம் விடாமல் ஆட்டி
　வழிமைபோல் ஆகுமிந்த வரிசை பாரு
குறித்துமே முலைப்பாலால் சாமம் ரண்டு
　கூசாமல் அரைத்துமே வழித்தெ டுத்து
பருந்தகுன்றி யளவாக உண்டை செய்து
　பட்சமொன்று நிழலுலர்த்தி பதனம் பண்ணே.
*(புத்.476-129-130)*

### *விரணதோடம் - குறிகுணம்*

பாரென்ற விரணமென்ற தோஷ மாகில்
　பாலகர்க்கு வாய்புண்ணாம் தோஷம் புண்ணாம்
சீரென்ற சிறுநீர்போம் வழியும் புண்ணாம்
　சிறந்த பா லுண்ணாது உணங்கும் உன்னும்
நீரென்று தான்கலந்து யிருக்கும் தேகம்
　நிச்சயமாய் கால்புறங்கள் கையும் வீங்கும்
வேலென்ற சுளுக்கதுபோல் தேக மாகும்
　வெய்யவன் தன்ஒளிபோலே யிரவில் காயும்

காயுமப்பா யிப்படியே கண்ட தாகில்
　கருத்தாக யிருமூன்று மாதம் சென்றால்
தோயுமே சிறுகபம்போல் இருமல் தோன்றும்
　தொந்தித்து விலாவுரெண்டும் குழித்து வாங்கும்
சாயுழந்த நீர்தனிலே வெள்ளை மாப்போல்
　சாறந்த குறிகண்டறிந்ததால் தகமை சொல்லு
மாயுமே மரணமுண்டாம் ஏழா மாதம்
　மிகுத்தான விரணனுட மகிமை தானே.
*(ஏடு.185-4)*

### *வீக்கதோடம் - குறிகுணம்*

ஆகுமே வீக்கமென்ற தோஷ மாகில்
　அடிவயிற்றில் பிளாசம்பூ நிறம்போல் காணும்
நோகுமே பாலனதும் அலறிக் காட்டி
　நொடிக்கு முன் சிவந்தநிறம் படரும் மேலே
நீகுமே கழுத்தடியும் முகமும் எங்கும்
　நீர்கலந்து கைகாலும் வீக்க மாகும்
சாகுமே ஒன்பதென்ற தினத்தி லங்கே
　சார்ந்தமலம் நீரதுவும் பிடிக்கும் பாரே. *(ஏடு.185-3)*

### *வெப்பு தோடத்திற்கு அமுர்தாதிக் குளிகை*

அருளினா ரமுர்தமெனுங் குளிகை தானும்
அதிமதுரம் சண்பகப்பூ ஏல மோடு
திருவுகோ ரோசினையுஞ் சாத்திர பேதி
சிறந்தவெட்டி வேர்க்கோஷ்டம் மாசிப் பச்சை
தருவெனவே விலாமிச்சம் வேருங் கூட்டிச்
சரிவாக ஆதொண்டைச் சாறு விட்டுப்
பருவதமாய் ஒருசாம மரைத்துக் குன்றி
பருமனாம் முலைப்பாலிற் பருகி டீரே.

பருகிடில் ஓர் உண்டைதனை முலைப்பால் தன்னில்
பகைத்துவருங் ... ... ...
... ... ... ...
குலையெரிவு வெப்புமுதல் தோஷந் தீரும்
அருளெனவே முறியுரைத்தார் பாரின் மீது
அமுர்தாதிக் குளிகைதனை அரைத்தி டாயே.
*(புத்.476-16-17)*

### *அழி தோடம் - குறிகுணம்*

குடிக்கும் பாலோ தங்காது
கூசி யுடம்பு மிகநொந்து
இடிக்கும் நெஞ்சு மிகநோக
இருமுங் கக்குஞ் செடலாறும்
மடிக்கும் கால்கை புனைந்தழுக்காம்
வதைத்து வகுத்தப் படுமாகில்
துடிக்கும் சிறுத்த விடையாளே
சொல்லா தளிதாள் தோஷமிதே. *(ஏடு.169-13)*

குடித்த பாலுந் தங்காது
குச்சி யுடம்பு மிகநொந்து
மிடித்த நெஞ்சு முயன்றெழுந்து
மிகவே கறக்கும் செடினாலும்
படிக்குங் கால்கை புனைத்தழுக்காய்
பதைத்து வகுத்தப் படுமாகில்

துடிக்குஞ் சமனே ரிடையாளே
    சொன்னோ மளித்தாள் தோஷமிதே.
*(ஏடு.362-19,6218-7,4552-3)*

### கர்ப்பம் அழிந்த தோடம் குறிகுணம்

குடித்த பாலுந் தங்காது
    குஞ்சி யுடம்பு மிகநொந்து
மிடித்த நெஞ்சயர்ந்த தண்ணாந்து
    மிகவே நோக்குங் சடநாறும்
படியுங் கைகால் அழுக்கேறி
    பதைத்து வருத்தப் படுமானால்
துடிக்குச் சமனாம் இடையாளே
    சொல்லா யழிந்து தோடமிதே.

காலும் பின்னும் உடம்பிளைக்கும்
    கழியுஞ் சத்த மிகவுண்டாம்
மேலும் சிவக்கும் உடல்தானும்
    விழியுஞ் சொருகி மிகமயக்கும்
வேலுஞ் சேல்போல் விழியாளே
    வில்போல் பருவ முடையாளே
கேளுமிந்தக் குணங்கண்டால்
    கெர்ப்பம் அழிந்த தோடமிதே
*(புத்.477-25,476-25)*

### 2. காட்டாத்திக் குளிசம்

கெர்ப்ப மழியுந் தோடத்தில்
    கிலேசந் தீரக் கிரியைகேள்
கர்ப்பக் காட்டாத் தியின்வேரைக்
    கதிக்க வேகுளி சஞ்செய்து
அப்பப் பருத்தி வேர் அரைத்து
    அருந்தக் குளிர்ந்த தண்ணீரைக்
கற்பப் பனையில் வெல்லமதைக்
    கரைத்து நீரில் கொடுத்திடுமே.
*(புத்.477-25,476-25)*

கெர்ப்ப மழித்தாள் தன் தோஷங்
    கிலேசந் தீரக் காட்டாத்தி

பொற்பை வேரைகுளிசஞ்செ
யலுகாப் பறியும் சத்தேளி
அற்பப் பருத்தி வேரரைத்து
அருந்தக் குளிர்ந்த தண்ணீரை
கற்பப் பனையில் வெல்லமதை
கருதி நீரில் கொடுத்திடுமே. *(ஏடு.941-8)*

வேருவகை தூதுவளை குப்பைமேனி
விளங்குகின்ற குருவிச்சை தும்பையோடு
நீருடனே வேருவகை கொண்டு வந்து
நிச்சயமாய்க் குளிசம்நீ நிகழ்த்திக் கட்டே
*(புத்.477-24)*

## குளித்தவள் கண்ட ஃதாடம் குறிகுணம்

தாயின் முலையில் வாய்வைக்கும்
சற்றே யுன்கலந்த திகைத்திருக்கும்
தேய்வாய்த் தேயு மெய்வேர்க்கும்
சிறுக வெதும்பும் வயிறுளையும்
சாய்வாய் உறங்குஞ் சத்திக்குஞ்
சற்றே சென்றால் விரேசிக்கும்
பேய்நோய் கொண்ட தலைகுளித்த
பெண்ணாள் கண்ட தோடமிதே.

விழியுங் குழைத்து ஆழையதாய்
விரையு முகமும் விக்கல்சத்தில்
குழியுடல் வயிர்விற் றுலர்ந்து
கெனமான் குழவி மெய்வெளுத்து
கழியும் பேதம் பலவாய்நீர்
கனக்கும் குடிக்கும் தரைகிடக்கும்
மொழியுங் குழிதோஷத் தானிதுவு
முண்டாங் குணமென் றுரைப்பீரே.
*(ஏடு.7313-95,435-32), (புத்.477-24,476-24)*

தேயா நிற்கும் மேவெளுக்கும்
கீழே வெருப்பு பலமொழுகும்

தாயார் முலையில் வாய்வைத்து
சற்றே யுண்ணுந் திகைத்திருக்கும்
காயா துடம்பு கண்பிசையும்
கண்டா லிதுதான் அறியீரோ
பேயால் கண்ட தோஷமல்லப்
பெ ண்ணாட் குளித்துக் கண்டதுவே.
*(ஏடு.572-57, 58)*

### குளித்தவள் கண்ட தோடத்திற்கு நிவர்த்தி

கனமா யிதனைக் கண்டுணர்ந்து
காலை மாலை யிருவேளை
குணவாய் ஓது சடாட்சரத்தைக்
குருநீர் அதனை மேல்தெளிக்க
வனமாய்க் குளித்தவள் காண்தோட
மாறிப் போகு மிதுதன்னால்
தினமும் வேண்டாம் மூவைந்து
தினந்தான் தெளிக்க நோய்போமே *(புத்.477-24)*

### கடக்க நின்றவள் எடுத்த குணம்

காரியா தீண்டா நாளில்
கடக்க நின்றவள் தான்பிள்ளை
குருதிகொண் டெடுப்பா ளாகில்
தோன்றிடும் குணத்தைக் கேளாய்
மடுதியா யுச்சி நாளும்
மாளகி யுடல்வெ துப்பும்
படுதியாய் கண்வ ளர்ந்து
பக்கங்கள் போலுள காணும் கேளே.

கேளீர் தண்ணீர்த் தாகமுடன்
கெறுவாய் கண்ணும் குளிர்ந்திருக்கும்
மானே வெளிறும் முடல்வெதுப்பும்
வற்றியே சரீரம் தான்நாறும்
தாளி வயிறு தான்கழியும்
களர்ச்சை யெடுக்கும் விக்கலுண்டாம்
கேளாய் கடக்க நின்றவள்தான்
குழவியெடுத்த குணமென் றோதே.
*(ஏடு.7313-93-94,601-26)*

## *குளித்தவள் எடுத்த தோடம் - குறிகுணம்*

மதலையின் மேனி வாடி
வயிற்றினில் பாலுந் தங்கா
சதலையிற் குழியுண் டாகிச்
சத்தியும் எடுக்கு நீராய்
நுதலின்றி சலமு நண்ணி
நோக்கிய விழியுந் தாழ்ந்து
குதலைவாய் கருகித் தோன்றும்
குளித்தவ ளெடுத்தக் காலே.

பாலகன் பவள வாயிற்
பனியென வேர்க்கும் மூக்கு
ஆலகண் வளைய மாகும்
அடிக்கடி வயிறுபோகும்
காலது பின்னிக் கொள்ளுங்
கதறியே யலறிச் சீறும்
சீலமாய் விழித்துத் தாவுந்
தீதவ ளெடுத்த தாலே*(புத்.477-24) (சர.வை.மு.16)*

பாலகன் பவள வாயுவெண்
பனியென வெளுத்துக் காணும்
ஆலிலை வயிறு சுற்றி
அடிக்கடி நோவ தாகும்
சீலமாய் விழித்துப் பார்க்குந்
திடமில்லர் வருகை யுண்டாம்
கோலமா மேனி சோருங்
குளித்தவ ளெடுத்த தாலே. *(ஏடு.169-14)*

மதலையின் மேனி வாடி
வயற்றினில் பாலுந் தங்கா
அதலினிற் குழியுண் டாகி
நொந்துடல் கனத்து நிற்கும்
விதனமா யழுது பிள்ளை
வெம்பியே சோர்ந்து வீழும்
குதலைவாய்க் கறுத்தி ருக்குங்
குளித்தவள் தோஷந் தானே. *(ஏடு.612,546-3)*

மதலையின் மேனி வாடி
 வயற்றினில் பாலுந் தங்கா
தலையினில் குழியு முண்டாய்
 சத்தியு மெடுக்கு நீராய்
நுதலன்றி சலத்தை யுண்ணு
 நோக்கிய விழியுந் தாழ்ந்து
குதலைவாய்க் கருகித் தோன்றுங்
 குளித்தவ ளெடுத்த காலே.
*(ஏடு.362-11,941-9,604-10,7313-94,601-27)*

### முட்டுத் தோடம் - குறிகுணம்

போமென்ற குழந்தை மேனி
 பொன்னிறம் வாடி வேறாய்த்
தாமென்ற வயிற்றில் பாலுந்
 தங்காமல் வாயால் போகும்
நாமென்ற கண்கு ழிந்து
 நாக்குவாய் கருகித் தோன்றும்
காமென்ற மாத விடையின்
 கன்னிய ரெடுத்த கூறே.
*(புத்.477-21-22,476-22,572-22)*

தேயு முடம்பு மிகநாறும்
 செல்லா முலையு மறந்திருக்கும்
தாயைக் கண்டா லொவ்வாது
 சற்றே சற்று வயர்கழியும்
காயு முடம்பு கண்பிசையும்
 கண்டா லிதுதா னறியீரோ
பாயு மிடையோ லுமைதனக்கும்
 பகரு முட்டுத் தோஷமிதே. *(ஏடு.604-12,6218-8)*

தொட்ட வுடனே துஞ்சா
 தழுது துடிது டித்து
நீட்டு விழியும் பஞ்சடைந்து
 நாவறளும் நீரைத் தேடி
தட்டுப் படாதே உடலொடுங்குந்
 தறுகா வயறுந் தான்கழியு

முட்டுத் தோஷ மாமென்ன
    முன்னோர் சொன்ன முறைதானே. *(ஏடு.4485-7)*

### *குடிநீர்*

முட்டெனும் தோஷந் தீர
    உட்டிண வெந்நீர் தள்ளி
லோமயி ரோசனை விட்டு
    திட்டென வுழக்கு நீரில்
திரிகடு கருசீ ரகத்தை
    மட்டுட னரைத்து நீயும்
மாதுபோல் தள்ளி வைய்யே. *(ஏடு.169-17)*

### *1. குளிசம்*

சிறந்த துத்தி வேருடனே
    செய்யபாலை அதின்வேரும்
பொருந்த ஒன்றாய்க் குளிசமிட்டு
    போட்டுக் கோழி பெலியிட்டு
வருந்தும் பிறமடை நீர்சொரிந்து
    மந்திரித்துக் குளிசங் கட்டே. *(ஏடு.4485-7)*

### *2. திருகுகள்ளி வேர்க்குளிசம்*

கட்டுவாய் திருகுகள்ளி வடக்கு வேரைக்
    காப்பிட்டு ஞாயிறுநாட் பிடுங்கி வந்து
சீட்டுவாய்க் குளிசமுடன் நீர்சொ ரிந்து
    சுகமாகக் கட்டிடவே தோடந் தீரும்
மட்டாக மூன்றுநாள் நீர்சொ ரிந்து
    மதலைக்குச் சாந்திசெய்ய மயக்கந் தீரும்
தொட்டிருந்த தோடமெல்லாந் துடித்தே யோடுஞ்
    சொன்னபடிக் குளிசமும்நீர் சொரிந்தி டாயே.
*(புத்.477-24)*

### *3. குளிசம்*

ஆரியதோர் இன்னமொரு கிரியை கேளாய்
    அழகான பாலனுமே மெலிந்து வாடில்
சீருடனே குளித்தபெண் ணெடுத்த தோடம்
    தெறிபட்டுப் போவதற்குச் சேதி கேளாய்

வேருவகை தூதுவளை குப்பை மேனி
விளங்குகின்ற குருவிச்சி தும்பை யோடு
நீருடனே வேருவகை கொண்டு வந்து
நிச்சயமாய் குளிசம்நீ நிகழ்த்திக் கட்டே.

*(புத்.477-24)*

## *நிவர்த்தி*

கூறான மும்மந் திரத்தி னாலே
குளிர்ந்தசல மொண்டுவேப் பிலையா லோது
ஊரான தாய்ப்பிள்ளை யிருவ ருக்கும்
ஓதியே யிருவேளை சாந்தி செய்நீ
சீரான திப்பிடியே ஏழு நாள்செய்
சிவசிவா பறந்தோடு முட்டுத் தோடம்
வேரான மந்திரமே யிதில்வே றில்லை
வெகுவான நோயெல்லாம் ஓடிப் போமே.

*(புத்.477-21-22,572-22,476-22)*

"முட்டுடன் தோஷந் தீர
முருங்கைவேர் குளிச மாடி"

*(ஏடு.6218-8,362-13,4552-12-13,*
*169-17,941-11,12)*

## *குளிதோடம் - குறிகுணம்*

உச்சியுங் குழிந்தி ருக்கும்
உயர்விழி லைய மாகும்
மிச்சமாய் வாந்தி செய்யும்
வேர்வையு மிகவே காணும்
பச்சுப்பச் சென்று தானும்
பல பல வண்ணமாக
எச்சமாய் கழிச்ச லுண்டாம்
இதுகுளித் தோடந்தானே.

பாரே உச்சிக் கண்ணிரண்டும்
பரிவாய்ப் பள்ளம் வீழ்ந்திருக்கும்
சாரே கழிச்சல் உண்டாகும்
தணல்போல் தேகம் மிகக்காயும்

வாரே குய்யம் புண்ணாகும்
　　வளமா யுடலு லதிகவற்றும்
மாரே துப்ப மிகப்படும்பார்
　　எனையாள் குளித்துக் கண்டதுவே. *(புத்.476-22)*

தண்ணீர் குடிக்கும் நெஞ்சுலரும்
　　தளர்ந்து பிள்ளைத் தான் உலரும்
கண்ணீர் சொரியும் கால் வீங்கும்
　　கழியுங் சத்தி மிகவுண்டாம்
அன்னே நீ அஞ்சாதே
　　அறிந்து சொன்னோங் குளித் தோடம்.
*(புத்.476-22,477-22)*
*(ஏடு.941-9,362-11,604-519-10,4552-11).*

உச்சிக் குழிந்து கண்குழிந்து
　　ஓயாக் கழிச்சல் மிகவுண்டாம்
வெச்சென் றிருக்கு மென்னேரம்
　　வெளிறிக் குஞ்சியுடன் நாறும்
அச்ச மறவே உடல் வற்றி
　　அபதாரப பட்டது வறிய
நச்சுப் புழுவேல் விழிமானே
　　நவியுங் குளிபாத தோஷமிதே. *(ஏடு.4485-2)*

குழியது வாரு முச்சி
　　குறுமுகம் வியர்வை யாகும்
யது சுழன்று சோர்ந்து
　　மெய்குளிர்ந் தசதி யாகும்
சுழியுமே மேத்து நீருங்
　　கலங்கிய நீரும் போல
வொழி யாகு ..........
　　முயர் குழி தோஷந் தானே. *(ஏடு.424-5)*

***சாறு***

குளிதோஷந்தான் தீர சுடலை கல்லில்
　　குளித்து முளைத் தருகுதன்னைக் குளிச மாடி
குளி தோஷந் தனையகத்தி கீழ்க்காய் நெல்லி
　　புகழ்ந்தனா அம்மான் பச்சரிசி புள்ளடியி னோடும்

குளிதோஷந் தனையகற்று முள்ளி வசம் பினோடு
வாய்த்தசா றதனைக்கொடுத்து மேல் வகையாய்ப்பூச
குளிதோஷம் வாந்தியுடன் தாகந் தீரும்
கருணையுடன் முனியுரைத்த கருத்துத் தானே.
*(ஏடு.4552-11,941-10)*

குளிசதோ டந்தீரச் சுடலை தன்னில்
குளித்துமுளை யறுகம்வேர் குளிச மாடிப்
*(புத்.477-23)*

புகழ்ந்தம்மான் பச்சரிசி புள்ளடியி னோடு
வளி தோஷந் தனையகத்து முள்ளி வசம்போமம்
கருணை யுடன் முனியுரைத்த கருத்துத் தானே.
*(ஏடு.604-10)*

## குளித் தோடத்திற்குச் சாறு

வடகஞ்சா ணக்கி தன்னை
யடவுடன் கசக்கி வார்க்கத் தடக்குறு குளிதோ ஷந்தான்.
தான தாரு மன்றே. *(ஏடு.424-5)*

## மாதுளைக் குளிகை

மானே ஏலம் அதிமதுரம்
களங்கும் வங்கம் கச்சோலம்
தக்கோல முடனே மாயக்காய்
தானே கெருடப் பச்சையுடன்
சீல முடனே வசுவாசி
சிறந்த கிராம்பு பத்திரியும்
வாளமுடனே திப்பிலியும்
மருவும் சீனக் காரமுடன்

வலுவாய் சாத்திர பேதியுடன்
வகைக்கோர் கழஞ்சு தான் கொண்டு

கொண்டே நிறுத்து மாதுளத்தின்
கூறும் விரையைத் தான்போக்கி
பண்டே யுள்ள தான்வைத்து
பகரும் எருமைச் சாணிதனில்

ஊணே பொதிந்து செலவுடனே
உமிப்புட மிட்டு தனையெடுத்து
கண்டார் குழலாள் முலைப்பாலில்
அரைத்தே பெரும்பயி ரளவாகும்
ஊணே சொல்வேன் அனுபானம்
ஓடுமுருத் தோட முண்டானால்
சொல்லக் கேளாய் திப்பிலியே
சிறந்த மாதுளம் குளிகையிதே. *(ஏடு.601-12-13)*

### *குடிநீர்*

வேப்பங் கொழுந்துப் பிடியொன்று
மிளகு பத்து வசம்புசுக்கு
வாய்ப்ப மலையைத் தான் தாங்கி
வளமாய் சமனாய் அரைத்திட்டு
பாய்ப்ப அதனை வடித்திட்டு
பாங்காய் உள்ளே புகட்டிடவே
வாய்த்த தோடங் கழிச்சல்களும்
வயமாய் நிற்குங் கண்டாயே *(புத்.476-24,477-23).*

### *நெய்*

சொரிந்தாவின் நெய்உரியில் லெண்ணெயப் பாதி
சுகமான நன்னாரி தண்ணீர் விட்டான்
கரந்தைபொன்னாங் கண்ணியுமே பலமொன் றாகக்
கழஞ்சியே லரிசிச்சீ ரகமுங் கூட்டிப்
பொருந்தவே ஆவின்பால் வார்த்த ரைத்துப்
புகழடுப்பில் ஏற்றியே காய்ச்சிக் கொண்டு
திருந்தவே குளிதோடம் போவ தற்கு
சிறுகரண்டிப் புகட்டிடவே தெளியுங் காணே.
*(புத்.476-23,477-23)*

### *1. அறுகம் வேர்க் குளிசம்*

குளியது தோஷந் தீர
கூறுவேன் குளிசங் கட்ட
முழுகியே சுடுகாட் டுக்குள்
முளைத்திடும் அருகுதன்னை

வெளிவிடி நேரந் தன்னில்
  விளங்கவே பிடுங்கி வந்து
பழகிய குளிசங் கட்டப்
  பறந்திருங் குளிதோ ஷந்தான். *(ஏடு.169-15)*

### *2. காட்டாத்திக் குளிசம்*

ஓமந் தண்ணீர் காட்டாத்தி
  உயர்ந்த பருத்தி பயிற்றம்வேர்
ஆமே குளிச மதுகட்டி
  அன்பாய் சொரியும் புதுமடை நீர்
போமே கோழி பலிகொடுத்துப்
  புறமாய் சுற்றிப் போட்டாற்கால்
தாமே குழவிபிழைக்குமென்றுத்
  தையற்கரனார் சாற்றினரே. *(புத்.476-23-24)*

ஏமந் தன்னில் காட்டாத்தி
  எழுந்த பருத்தி பயிற்றம்வேர்
ஆமே குளிச மதுகட்டி
  அன்னீர் சொரியப் பிரண்டை நீர்
போமே கோழி பெலிகொடுத்து
  போதே சுத்திப் போட்டாலே
தத்திக் குழவிப் பிள்ளைக்குத்
  தெய்வ நாயகர் சாத்தினாரே. *(ஏடு.4485-2)*

### *குளிசத் தோடத்திற்கு அரைப்பு-முழுக்கு நீர்*

தோடமிது தழுதாழை குட்டிவிளா வேம்பு
  சோம்பு மஞ்சள் வசம்புடனே சுக்குங் கூட்டி
வாசமிது அரைப்பரைத்து வைத்துக் கொண்டு
  வாகையிலை போட்டு நீர்க் காய்ச்சி யேதான்
தேசமிது தாய்பிள்ளை யிருவ ருக்குந்
  தேய்த்துமே முழுக்காட்டிச் சொல்லு வேன்கேள்
பாசமிது முக்கிணற்றின் தண்ணீர் மொண்டு
  பசுமஞ்சள் அரைத்ததிலே கலக்கி டாயே

கலக்கிடாய் மங்ஸ்ரீயும் ஐயும் சவ்வும்
  கண்மணியே அறுகாலை நூற்றெட் டோதி

வலக்கிடாய் மேல்தெளித்துக் கடுக வாரு
வாசமுறுந் தேகமோ பசும்பொன் வீசும்
அலக்கிடாய் சூரிவேர் பிடுங்கி வந்து
அன்பாகப் பஞ்சநூல் குளிச மாடி
வலக்கிடாய் பாலகனுக்குக் கட்டிப் போடு
மகத்தான குளிசதோடம் பறந்து போமே.
*(புத்.477-22,572-22)*

### *கருடமை நீறு*

கேளுநீ கருடனுட கூட்டுக் குள்ளே
கிடந்தோர் முட்டையோ டெடுத்து வந்து
ஆளவே சுட்டதனைச் சாம்பலாக்கி
அழகாகக் குழந்தைகட்குத் திலகம் போடு
வாளவே முன்கூட்டைச் சுட்ட சாம்பல்
மைந்தனுக்கு நெற்றியிட மயக்கந் தீரும்
தாளவே குளிசதோடம் பட்சி தோடம்
தான்பறக்குந் தப்பாது தணித்துச் செய்யே.
*(புத்.477-23)*

### *காப்பு*

வடக்குறு மழிஞ்சி வேரை
வளமுடன் காப்புக் கட்டி
தடக்குறு குளிதோ ஷந்தான்
....................தாகு மன்றே. *(ஏடு.424-5)*

### *படுக்கை தோடம் - குறிகுணம்*

பால னுடல்வெ துக்கும்
பால்போல் பாலா வயிறொழுகும்
நில முடனே கண்குழியும்
நிறமுங் குறியும் வேறாகும்
மாலை நேர மதிகரிக்கும்
மாதர் முலை யுண்ணாது
காலை யனையு முன்மானே
கணவன் கையைப் பிடித்ததுவே. *(ஏடு.7313-98)*

### *பெண் தோடம் - குறிகுணம்*

நெஞ்சு வறண்டு கண்குழிந்து
நீடும் பெருமூச் சுண்டாகிப்
பஞ்சுபோலக் கண்வெளுத்துப்
பாலுங் குடியா தேயலறித்
துஞ்சா திரவும் பகலுந்தான்
சுருங்கித் தேக மும்வேர்த்து
செஞ்சொல் மயக்க முண்டாகில்
செப்பும் பெண்ணின் தோடமிதே.

*(ஏடு.362-14,941-12,169-17,4552-13)*
*(புத்.477-20-21)*

அரிவை யர்க்கும் ஆண்கட்கும்
அகனில் தோட மேதென்றால்
குணாம் அஞ்சு மாதத்தில்
காலி கலந்து தாய்முகத்தைப்
பெறுவாள் அந்தப் பிள்ளைக்குப்
பேனில் வயிற்றுவலி
கருகு முகமும்பேயின் குணங்
கண்டே யறிந்து சொல்வீரே. *(புத்.477-20-21)*

அரிவையர்க்கும் ஆண்பிள் ளைக்கும்
அதனிற் தோஷ மேதென்றால்
கருவாம் அஞ்சு மாதத்திற்
காணிற் கலந்த தாய்முகத்தை
பெறுவா ளந்த பிள்ளைக்கு
பேணி கருக்கும் வயிற்றுவலியும்
கருகு முகமும் பேயின் குணமும்
கண் அறிந்து செய்வீரே.

*(புத்.572-63,477-20-21)*

### *குடிநீர்*

பூவைகேள் கஞ்சாங் கோரை
புனல்தனில் காய்ச்சி யேதான்
தேவநீர் குடிகேள் *(ஏடு.362-14,169-17)*

## *நிவர்த்தி*

பாவைதன் தோஷந் தீர
வேலிப் பருத்திவேர் குளிசமாடி
பூவைகேள் கஞ்சாங் கோரை
புனல்தனில் காய்ச்சி யேதான்
தேவநீர் குடிகேள் சின்னி
சிறுவிளா வசம்போ டுள்ளி
காலை சீலையில் முடிந்துமாறா
கையுங்கால் தன்னில் கட்டே.
*(ஏடு.362-14,941-12,6218-0,4552-13)*

பாவை தோஷம் போம்வேலி
பருத்தி வேரைக் குளிசமிடு
பூவை கேளு கஞ்சாங் கோரை
புனலில் காய்ச்சிக் கொடுத்திடுநீ
தேவே சின்னி சிறுவிரை
திகழு முள்ளி வசம்போடு
காவேசீலை தனைமுடிந்து
கழுத்திற் கட்ட குணமாமே. *(ஏடு.169-17)*

வகுக்குந் துவாலை தனைக்கேளு
மானே சின்னி விளாநொச்சில்
தொகுக்குந் தூளை வறுத்திதனை
துவாலை கண்டங் கரமதனில்
மிகுக்கக் கொடுத்துக் கட்டிடவே
விரைந்தே தோஷம் பறந்தோடும். *(ஏடு.169-20)*

## *ஐந்திறப்பூ தோடக்கழிவு*

செய்யவே பஞ்சவண்ண மலரெ டுத்துச்
சேகரமாய்ப் பஞ்சவண்ண மான அன்னம்
ஐயமில்லா ஐந்துவெள்ளிப் பணமும் வைத்தே
அதனுடன் தீபதூபம் நெய்வி ளக்கும்
வைகதலி யிலையில்உரு எழுதித் தானே
வரைசோறுஞ் சாம்பிராணி வர்த்தி நட்டு
பொய்யல்ல நான்சொன்னேன் பண்டி தற்குப்
பொதுவாக முச்சந்தி அதில்வைப் பீரே.

வைத்திடவே தோடமெங்கே கிரக மெங்கே
 வலியெங்கே நோயெங்கே பறந்து போகும்
நைத்திடவே சிசுவுடைய பருவந் தன்னை
 நாட்டமுடன் கண்டறிந்து கருத்திற் கொண்டு
மெய்த்திடமாய் வசிட்டரைப்போல் பொறுமை பூண்டு
 மேலான சத்வகுணம் சாரு வோர்க்குப்
பைத்திடவே மோட்சமுண்டு நரகம் போச்சு
 பாதகருக் கில்நூதான் கிட்டி டாதே.
*(புத்.477-21,572-63-64)*

### *ஆண்தோடம் - குறிகுணம்*

போமே உச்சி கண்குழியும்
 பொருந்துண் பாலுந் தங்காது
போமே வயிறு பச்சென்று
 பொருமி யழுமே பறவைக்குரல்
தாமே குறுகும் ஒருவேளை
 தனியே தனியே சீறியழும்
காமே கறுத்த குயிலாளே
 கலந்த புருட தோடமிதே *(ச.வை.மு.15)*

### *உடும்பு நாக்கு குளிசம்*

புருடனென்ற உடும்பினுட நாக்கு வாங்கிப்
 புகழான எருக்குநார் குளிச மாடிப்
புருடனென்ற தாம்பூல முன்னே வைத்துப்
 பதுமையாய்ப் பூசைசெய்யச் சொல்வேன் கேளாய்
புருடனென்ற நயவசிம நூற்றெட் டோதி
 பூமாலையாய் பாலகர்க்குக் கட்டு கட்டு
புருடனென்ற குழந்தைகட்குக் கட்டும் போது
 புகழ்பலி ஒணான் கொடுக்கத் தோடம் போமே.
*(புத்.477-25)*

### *சையோக தோடம் - குறிகுணம்*

தானான சையோக தோஷ மாகில்
 தாய்தகப்பன் சையோக வேளை தன்னில்
தேனான பாலருட தலையில் தொட்டால்
 தேகமதில் அனல்போலே காய்ச்ச லுண்டாய்

ஏனான முடைநாறும் உச்சி தாழும்
எடுத்தபால் கொட்டிவிடும் ஒழுகும் பேதி
கோனான தலைகுழைந்து கண்ணும் மூடி
குழைந்துவிடும் விலாகுழித்து வலியுண் டாமே.
*(ஏடு.185-11)*

## *நிழல் தோடம் - குறி குணம்*

தாயார் முலையில் வாய்வைக்கும்
சற்றே யுண்ணும் மருளிருக்கும்
வாயு முடம்பு முடைநாறு
மந்திக்கும் வெதும்பும் வயிறொழுகும்
சாயு முறக்கம் வாராது
சற்றே இருமல் கொண்டுவிடும்
வாய மதாய் குளித்தப் பெண்கள்
மடவார் நிழலினை குணமிதுவே.

உச்சி குழியும் கண் குழியும்
உண்ணு முலைப்பால் தங்காது
பச்சை நிறம்போல் வயிறொழுகும்
பறவை குரல்போல் சீறியழும்
மெச்சை கண்ணும் அரைக்கண்போல்
விழியும் மணியும் ஒதுங்கிநிற்கும்
அச்சம் பெறவே யிதுதீர
வான சிகிச்சை செய்வீரே. *(ஏடு.7313-96)*

## *தீராத குணம்*

கண்ணுஞ் சிவந்து காணும்
சுழியும் வயிறு வெச்செனவே
எண்ணுஞ் சிறுநீர் ரத்தம்போல்
நின்று கழியு மிப்படியே
வண்ணங் கருகி மயமழிந்து
வாய்த்த குழவி மயங்கிடுகில்
திண்ணஞ் சிவனார் தம்மாணை
தீரா நிழலின் தோஷமிதே. *(ஏடு.7313-97)*

### புள் தோடம் - குறிகுணம்

உச்சியுங் கண்கு ழிந்து
உண்முலைப் பாலுந் தங்கா
பச்சென வயிறொ ழுகும்
பறவை குரல்போல் சீறியழும்
எச்சங் கிளர்ந்து யேமாந்து
எடுத்தேன் குடிக்குந் தண்ணீரைக்
கச்சையென்ற முலை மாதே
காணாப் புள்ளு தோஷமிதே. *(ஏடு.362-9)*

உச்சிக் கண்ணுந் தான் குழியும்
உண்ணும் பாலுந் தங்காது
பச்சை நிறம்போல் வயிறுவிடும்
பறவைக் குரல்போற் சீறியழும்
எச்ச மிளைக்குந் தண்ணீரை
எடுத்துக் குடிக்கும் மெய்மறக்கும்
கச்சையணிந்த முலைமாதே
காணும் புள்ளின் தோடமிதே. *(சர.வை.மு.13)*

### குடிநீர்

புள்ளின் தோடந் தீர
சிறுபுள்ளடி வேர்க்குளிசஞ் செய்து
மெள்ள ஓரிதழ்த் தாமரையும்
வெந்தய முடனே விடத்தேரும்
எள்ளத் தோரளவாய் மிளகும்
இதமா மதனைக் குடிநீராய்
உள்ளதோர் மனதா கியநீர்
உண்டிட நன்றென ஓதுமிதே.
*(ஏடு.362-9) (புத்.476-20)*

### கருடக்கண் புள்தோடம் - குறிகுணம்

புதுப்புனல் வடிந்து கொண்டு
புகழ்முலைப் பாலெ டுக்கும்
எதுப்படக் கண்ணுந் தாழும்
இருபக்கம் பீளை கட்டும்

முதிர்பிள்ளை படும்பா டாக
முந்தியே பற்றி நிற்கும்
விதத்தலை வயிறு பார
மிகுங்கரு டக்கண் ணற்கே.

### *கோரோசனைக் கற்கம்*

தணியுங் கோரோ சனையுடனே
சாந்த மதுரம் திப்பிலியும்
பணிவாய்த் தாயின் பால்தன்னில்
பகர்ந்தே அரைத்தங் கொருசங்கு
பிணியாங் குழவிக் கிடும்போது
பேரும் கருடக் கண்புள்ளின்
பிணியுந் தணியு மென்றேதான்
பேதைக் கரனார் மொழிந்தனரே. *(புத்.477-16)*

### *காணாப்புள் தோடத்திற்குக் குளிசம்*

ஆலம் விழுது விடத்தலைவேர்
அணிசேர் கீழ்க்காய் நெல்லிவேர்
கோலக் கன்னி யழியாப்பெண்
நூற்ற நூலால் குளிசமிட்டு
சீலை மஞ்சள் தான்தடவி
சிறக்கக் கோழி பலியிட்டு
நீல விழியாய் நீர்சொரியாய்
நிற்குங் காணாப்புள் தோஷமிதே. *(ஏடு.4485-6)*

### *அந்திப்புள் தோடம் குறிகுணம்*

பாலகன் மேனி வாடிப்
பசந்து கண் விழித்திட் டந்தி
சீலக்கை கால்கு ளிர்ந்து
சீறுப்பால் எதிரெ டுக்கும்
மேலெலாம் நரம்பு தோன்றி
மேனியும் வெளுத்துக் காயும்
ஆலமே யுண்ட கண்ணாய்
அந்திப்புள் தோடந் தானே.
*(புத்.477-18,476-19-20,612-3)*

## *சின்னித் துவாலை*

வகுக்குந் துவாலை தனைக்கேளாய்
மானே சின்னி விளாநொச்சில்
பகுக்குஞ் சீந்தில் தான்வேம்பு
பைய நறுக்கி வசம்புள்ளி
தொகுக்கத் துவளை தானிடித்துத்
துவாலை கெண்டைக் கால்தன்னில்
மிகுக்க முடிந்து கட்டிடவே
மீரு மந்தி தோடமதே. *(புத்.477-18,476-20)*

## *செங்கண்புள் தோடம் - குறிகுணம்*

சிவந்துகண் ணீரொ ரிந்து
சிரங்குனிந்திருக்கும் வெம்பித்
தவழ்ந்துபோய் நிலத்தில் வீழ்ந்து
தடக்கையால் முகந்து டைக்கும்
விவந்தியாய் அழுது பாலன்
வெப்புநீ ராய்ப்பே திக்கும்
சிறந்ததோர் குணங்கள் கண்டால்
செங்கண்புள் தோட மாமே. *(புத்.477-16,476-18)*

## *அதிமதுர எண்ணெய்*

மொழியு மதுரம் சீரகமும்
முத்தம் ஏலம் பத்திரிக்காய்
பொழியும் கிராம்பு சண்பகமும்
பொன்னே லவங்கப் பட்டையுடன்
கிளிசேர் மொழியாய் வராகனெடை
கேளு முசுக்கை யிலைநன்றாய்த்
தெளியுங் காணி சிறுகீரை
சீந்தில் வேரும் பலமொன்றே.

பலமே சொல்லும் ஈருள்ளி
படிகால் சாறு காரியின்வேர்
வளமா மணக்குநெய் ரண்டுபடி
வாகாய் இவைகள் கலந்தடுப்பில்
நலமாய் எரித்துக் குழவிகட்கு
நன்றாய்ச் சங்கு புகட்டிடவே

வலுமைச் செங்கண் புள்தோடம்
வாரா தென்று வகுத்தனரே. *(புத்.476-18,477-17)*

### தூங்குபுள் தோடம் - குறிகுணம்

தூங்குபுட் டோடமது தோன்றுகுறி தன்மைசெயல்
தொகுதியா யுரைசெய் திடின்
தூங்கலரை விழியில் புட்பார்ப்ப தென்னத்
தூக்கம்விட் டலறி யெழுதல்
தாங்குகண் ணிருண்டுமே லிமையினுள் ளேசொருகல்
தாங்கொணாக் கழிச்சல் வாந்தி
தகுமுகம் பலமுறைத் திருமியே பார்த்திடல்
சார்பயந் தழுதல் மிகவாய்

ஆங்கிருப் பதிலிருந் தெழல்முரட தாகவே
யருந்தனீா் பற்க டித்தல்
அடிப்பார்வை பார்த்தல்சோர் வுடல்மயக் கந்தலை
யதனுச்சி பள்ள மாதல்
வாங்கிடுதல் மேல்மூச் சிளைத்தலுடல் முகமாறல்
வருதலிவை காணு முலகர்
மனமிகு வருந்துவர் தீர்ந்திடாக் குறியென்று
வகையறிந் துரைப்பை யாலோ.
*(புத்.477-14-15,572-26,476-17)*

வாங்கி யூதமனை குடித்து
வயிறுங் கழியு மாப்பாகில்
பாங்கித் திரும்பி மிகப்பார்க்கும்
பயமா யழுது வீறெண்ணுந்

தாங்கித் துஞ்சம் புயர்மிசையாள்
சற்றே வச்சென் றெழுந்திருக்குந்
தூங்கின புள்ளின் தோஷமென்று
சொன்னார் முனிவர் சொன்னாரே. *(ஏடு.4485-5)*

நவ்வி வில்வ வேரரைத்து
நாட்டிற் றூங்கு புள்போமே. *(புத்.477-15)*

### *கோரோசனை அரைப்பு*

வீசுந் தணிய ரோசனமும்
மேவு மஞ்சள் வசம்பேலம்
வாச வேம்பின் ஈர்க்கோடு
வகையாய் ஓமம் விளாவோடு
பாச மதுவாய் அரைப்பரைத்துப்
பாலிற் காட்டி நூற்றெட்டு
கோச மோதிச் சாந்திசெயக்
குடிபோற் தூங்கு புட்செயலே.

*(புத்.477-15,572-26)*

### *வௌவால் இறகுக் குளிசம்*

வல்வால் சிறகு தன்னிலூ
மத்தம் அறுகம் வேர்சுருட்டிச்
செவ்வாய்க் கன்னிப் பெண்ணூற்ற
நூலைச் சிறகு தனில்சுற்றிக்
கவ்வாய்ப் புனலும் சொரிகுளிசம்
கட்டிக் கோழி பலிகொடுத்து
நவ்வி வில்வ வேரரைத்து
நாட்டிற் றூங்கு புள்போமே. *(புத்.477-15)*

### *நீர்ப்புள் தோடம்-குறிகுணம்*

நெஞ்சு வறண்டு கண்குழிந்து
நீடும் பெருமூச் சுண்டாகிப்
பஞ்சு போலக் கண்வெளிறிப்
பாலுங் குடியா துளத்திவரும்
துஞ்சா திரவும் பகலுந்தான்
சுருங்கப் பண்ணி மிகவேர்க்கும்
செஞ்சொற் கிள்ளை மொழிமாதே
செப்பாய் நீர்ப்புள் தோஷமிதே.

*(ஏடு.4485-4), (புத்.476-20,477-18,572-25)*

### *குடிநீர்*

வெச்செனவிட் ணுக்கரந்தை சீரங் கூட்டி
வெந்தநீர் கொடுத்திடவே வியாதி போமே.

*(ஏடு.4485-5) (புத்476-20,477-19)*

### *குளிசம்*

தோத முதலைக் கொழுப்போடு
துருவ வட்டத் துத்தியின்வேர்
மாதே யிதனைக் குளிசமிட்டு
மருவப் போட்டுக் கட்டினபின்
ஓதே தோட மந்திரத்தால்
ஒருநூற் றெட்டுச் செபித்திடுவாய்
பாதே நீர்ப்புள் தோடமது
பயந்து பறந்து ஓடிடுமே

*(புத்.477-19,476-20,572-26)*

### *மற்றுமொரு நிவர்த்தி*

பச்சோந்தி தன்னை ழீங்காரஞ் சொல்லிப்
பாங்குடனே பிடித்துவந்து மஞ்சள்நூல் சுற்றி
அச்சமற புறமடைநீர் எழுதரஞ் சொரிந்
தழகான செஞ்சேவல் பலிகொ டுத்து
நிட்செயமாய் இயந்திரம் கட்டத் தீரும்
நிகரான மருந்துதனை நிகழ்த்துங் காலை.

*(புத்.476-20,477-19)*

### *பேய்க்கண் புள் தோடம் - குறிகுணம்*

பேய்க்கண்ணன் தோடமப்புள் போலக்கண்
காட்டிப் பிரலா பித்தல்
வர்ய்க்குமட்டிக் குடித்தபால ப்படியே
யெதிரெடுத்து மயக்க மாதல்
தாய்க்கமல முகங்காணி லருவறுத்தல்
கண்குழித லுச்சி தாழ்தல்
ஆய்க்காணு மவனிதனி லிதன்குறிக
ளவைகண்டே யறைகு வாயே. *(புத்.477-17-18)*

### *பேயத்திக் குளிசம்*

பேயத்தி முதனாளில் காப்பு கட்டிப்
பிடுங்கிவந் தைந்துநிற நூலைச் சுற்றி
நேயத்த தோடமந் திரநூற் றெட்டு
நினைவாக வோதியக் குழந்தை தன்னை

ஆயத்த மதிலெடுத் தணைக்கச் சொல்லி
அப்பொழுதே தூபதீ பங்கள் காட்டி
பேயொத்த வக்குழவி யரையிற் கட்டப்
பேய்க்கட்புட் டோடமஃ தகலுந் தானே.

*(புத்.477-18)*

### *வறட்புள் தோடம் - குறிகுணம்*

உடல் வறண்டு வாந்தி
உறங்கிடு மேனி வற்றும்
கடலிரைந் தாற்போல் சத்தங்
கண்குழி தலையு மாட்டம்
திடமுடன் நாவ றண்டு
திக்கெங்கும் பார்த்தி ருக்கும்
விடமது போலக் காயும்
விரண்டிடும் வறட்புள் தானே.

வேப்பம் பூப்போல் வயிறொழுகும்
விடாத கண்ணீர் தலைவலியும்
பூப்புனல் மாந்திப் புறங்கையால்
பொருந்த மூக்கை யேதுடைக்கும்
கோப்பாய்த் தனக்கே யெதிரில்சலங்
குடிக்கக் கண்டு பரிதவிக்கும்
கோப்பன் குரலாம் விலாகுளிரும்
கேளாய் வறட்புள் தோடமிதே. *(புத்.477-17)*

வேப்பம் பூப்போல் வயிறுகழியும்
விடாத வெப்புத் தலைவலியும்
பூப்போல் புறங்கை ஐவகையால்ப்
பொருந்த மூக்க வேதுடைத்து
கோப்பாய் நாவும் வறண்டுதண்ணீர்
குடிக்க வென்று பரிதவிக்கும்
சேப்பங் கயத்தின் முகமாதே
செப்பாய் வறட்புள் தோடமிதே.

*(ஏடு.4485-4) (புத்.476-19).*

பாலகன் மேனி வாடிப்
பசலைவாய் விழிகள் நீராய்
சீலமாய் விலா குளிர்ந்து
சீறும்பால் எதிரெ டுக்கும்
கோலமாய்க் கண்கு ழிந்து
குணமது பலவே செய்து
மாலுற வயிறு போகும்
வறட்புள்ளின் தோஷந் தானே.

கழிந்தபின்பு மேனி வற்றிக்
கண்ணின் மணிகள் நீர்கலங்கித்
துளிர்த்து ளிராய்க்குளிர்ந் துமிக
தொண்டை நாவு மிகவறண்டு
வழுத்த வேப்பம் பழச்சாற்போல்
வயிறுபோம் தலைய சைக்கும்
அழுத்த வுடம்பு மிகவெதும்பும்
ஆண்குரல் போல்வேற்றுக் குரலே.

குரலே கையால் முகந்துடைக்கும்
குமுறிப் புறங்கை யாலுந்துடைக்கும்
வரவே நாவு மிகவறண்டு
வாயால் குடிக்கமிக தவிக்கும்
அரலே அஞ்சித் தானழுகும்
அன்னத் துவேஷ விடாயப்போலே
எரலே இந்த குணங்கண்டால்
என்றோம் வறட்புள் தோஷமென்றே.*(புத்.476-19)*

### *குளிசம்*

மென்றே வட்ட நரிமிரட்டி
வியாழந் தன்னில் காப்பிட்டுத்
துன்றுஞ் சேவல் பலிகொடுத்துத்
தோடந் தீர வெனப்பணிந்து
குன்றி மஞ்சள் அஞ்சோதிக்
குழந்தைத் தாயைக் குளிப்பித்து
மன்றன் வேர்ப்பிடுங் கிக்கட்ட
வறட்புள் தோடம் போய்விடுமே.

*(புத்.477-17,476-19).*

### *திலகம்*

செப்புத் தகடு தனையடித்துச்
சேர்ந்த பட்சி ராசனை
யுற்பாத்த தெழுதித் தரித்தண்ணீர்
மிகச்சொ ரிந்து தகடுகட்டில்
நெய்ப்புக் கோழி பலிகொடுத்து
..................... திலதமிடத்
துப்பா மேனி அரனுமைக்குச்
சொன்னார் முனிவர் சொன்னாரே. *(ஏடு.4485-4)*

### *விளக்கொளிக் கண் புள் தோடம் - குறிகுணம்*

குடித்தபால் எடுக்கும் மெய்யும்
கூர்மையாய்க் காயும் ஓயும்
அடிக்கடிக் காயும் அன்றி
அரியதாய்ச் சிந்தை நோக்கும்
பிடித்துநல் முலையுண் ணாது
பெருவிடாய் கொண்டு சோரும்
விடுத்திடும் விளக்கை நோக்கா
விளக்கொளிக் கண்ணன் தானே. *(புத்.477-15)*

### *குளிசம்*

சின்னிவசம் புள்ளி சிறுவிளா தானான்கும்
நன்றாக வேமுடிந்து நற்சீலை - தன்னாலே
மார்பில் படக்கட்ட வாரா விளக்கொளிக்கண்
காரிழையாய் சொன்னதிது காண். *(புத்.477-15)*

### *வீங்குபுள் தோடம் - குறிகுணம்*

உச்சியுங் குழிந்து நாவு
உலர்ந்திடும் உவாந்தி பண்ணும்
பச்சென மலமுந் தானும்
பாலது போல ஆகும்
பித்துடன் எடுக்கும் பாலும்
பின்கையால் முகந்து டைக்கும்
நிட்செயம் வீங்கு புள்ளின்
திகழ்குண மென்று சொல்லே. *(புத்.476-16-17)*

### *அதிமதுர மாத்திரை*

மதுர முத்த மதிவிடைய
    மானே கடுக்காய் மாவசம்பு
உதிருந் தேவ தார்மஞ்ச
    ளுடனே வகைக்கே யோரளவாய்
அதிருங் குறிஞ்சிப் பொடுதலைச்சா
    றதனா லரைத்தே வுண்டைசெய்து
சதுர முலைப்பால் தன்னிலிடத்
    தரியா வீங்குபுள் தோடமிதே. *(புத்.477-14,476-17)*

### *வெங்கண்புள் தோடம் - குறிகுணம்*

வெளுக்கெனக் கழியும் பால்போல்
    வெளிறிமெய்த் துவண்டு காயும்
குளுக்கென இரைச்சல் உண்டாம்
    குடித்தவவ் வணம்பே திக்கும்
அளித்திடும் வயிற்றின் உள்ளே
    ஆனதோர் வலியும் ஆகும்
வெளிப்படை ஆமோ என்னில்
    வெங்கணன் குணம தாமே. *(புத்.477-16)*

### *கற்றாழைநீர்*

கன்னியன்னத் தோடு கடுக்காய்ப் பொடிகூட்டி
உன்னிதமாய்த் தான்பிசைய ஊறுநீர் - பின்னேகேள்
திப்பிலித்தூள் இட்டருந்தச் சேர்ந்தவெங் கண்ணென்னும்
ஒப்பில்லாத் தோடமோ டும் *(புத்.477-16,476-18)*

### *பறவை தோடம் - குறிகுணம்*

குஞ்சியின் உடலு ணர்ந்து
    குடல்தனில் பாலுந் தங்கா
நெஞ்சையும் சுழியாய் வாங்கும்
    நெறியவே வலியு முண்டாம்
துஞ்சிடும் போதெழுந்து
    துணிக்கிட நீர் குடிக்கும்
பஞ்சிமென் முலையி னாளே
    பறவையின் தோடந் தானே. *(சர.வை.ஜ.12)*

குஞ்சியின் உடம்பு ணார்ந்து
குடல்தனில் பாலுந் தங்கா
நெஞ்சையுஞ் சுழியாய் வாங்கும்
நெற்றியும் வலிப்புண் டாகும்
தஞ்சிடும் போது சற்றே
துணுக்கென வலித்துச் சீறும்
பஞ்சின்மே லடியி னாளே
பறவையின் தோஷந் தானே
*(புத்.572-57) (ஏடு.612-2)*

குடித்த பாலுந் தங்காது
குஞ்சி யுடலு மிகநொந்து
முடித்தநெஞ்சு முயர்ந்திருக்கும்
மிகவே கொக்குச் செடிநாறும்
துடிக்குங் கைகால் சுளுக்கேறி
பதைத்து வருத்தப் படுமாகில்
துடித்து மின்னே ரிடையாளே
சொல்லும் பறவைத் தோஷமிதே. *(ஏடு.4485-1)*

குடித்தபா லெதிரெ டுக்கும்
குழிந்திடுங் கண்டலும் வாயு
மடிக்கடித் திடுக்கிட்டேங்கும்
அரமெலிந் தற்ப மாகு
மெடுத்தவர் கையில் தங்காதே
எதிரளப் பெடுக்கும் பிள்ளைக்
கடுத்துடன் வயிறு போகுங்
கருதுநல் பறவை தானே. *(ஏடு.362-8,169)*
*(புத்.576-15)*

### *குடிநீர்*

திறமைசீ ரகமீ ருள்ளித்
திகழ்வாருள் பூலா வேரும்
முறைமையாய்க் காய்ச்சி யேதான்
முதுபிணி குழவிக் கீயே. *(ஏடு,362-9,169-12)*

### *கற்கம்*

ஈயத்திண் ணிவா லோடு
இசைந்ததோர் வெள்ளைத் தேரை
பாதத்திண்ணி நாகப் பாம்பு
பால் நண்டுப் பசுவின்
பூதத்திண்ணி பூசனியின் பிஞ்சு
புகழவே யரைத்துப் பூசி
கோதத் திண்ணி யுள்ளு மீயக்
கொடும்பட்சி தோஷம் போமே. *(ஏடு.612-2)*

### *1. துவாலை*

மாவின் மரத்துமேல் முசுறு
மாறுவின விளாவின்மேல் முசுறும்
தாவிவள ராவரை யோடு
தனித்த காடிவிட் டரைத்து
ஓவிப் பிள்ளை உடம்பெங்கும்
முழுகத் துவாலை செய்வீராய்க்
காவின்பரைத் தோஷ மெல்லாங்
கடுகிப் பறந்து போய்விடுமே. *(ஏடு.612-11)*

### *3. துவாலை*

வன்மரைக் கொழுந்தி னோடு
மருவிய முடக்கொத் தானுந்
தன்மரைச் சின்னி யோடு
தனித்தவல் லாரை கூடப்
பன்மரை வசம்போ டுள்ளி
பால்நண்டு காடி யாடி
அன்மரைத் துவாலைப் பூச
அகண்டுபோல் பறவைதோ ஷந்தானே.
*(ஏடு.612-22)*

### *குளிசம்*

பச்சை ஓலை யிலே
பட்சி ராசன் தனையெழுதி
கொச்சைக் கோழி பலியிட்டு
சொரிந்து தாளக் கட்ட

அசமில்லை குழிமிட் டான்
அன்னி வத்தி விளாவிலையு
மெச்சத் துவைத்து நீருடனே
விரவிக் குளிக்க நிவாரணமே. *(ஏடு.4485-1)*

### *குளிசம்*

பறவையின் தோஷம் போகப்
பயனுரைத் திடுவேனிந்த
துறையை நீகேளா யாயின்
துளிர்தன்னைக் குளிச மாடி

... ... ...
... ... கீயே. *(ஏடு.362-9,169-12)*

### *நிவர்த்தி*

புருடனென்ற உடும்பினுட நாக்கு வாங்கிப்
புகழான எருக்கனார்க் குளிச மாடிப்
புருடனென்ற தாம்பூல முன்னே வைத்துப்
புதுமையாய்ப் பூசைசெய்யச் சொல்வேன் கேளு
புருடனென்ற நயவசிய நூற்றெட் டோதி
பூமுலையாய்ப் பாலகர்க்குக் கட்டு கட்டு
புருடனென்ற குழந்தைகட்கு கட்டும் போது
புகழ்பலி ஓணான்கொடுக்கத் தோடம் போமே.
*(புத்.476-21,572-22-23)*

### *பட்சி தோடம் - குறிகுணம்*

உதிரமுங் கழிவ தென்ன
உலர்த்திய மிகவுண் டாகும்
மதீதமொடு தலையெடாமல்
செலைக்கணணும் பீளைக் கட்டி
விதவித மாக மேனி
வெதும்பியே பேய்போல் சீறும்
பதமிக முனிவர் சொல்லும்
பட்சியின் தோஷந் தானே. *(ஏடு.362-8)*

பெருகி வயிறு தான்போகும்
   பேதமுடம்பு கண்குளிரும்
பெருக முகத்தி முகஞ்சோரும்
   பேயின் குரல்போல் சீறியழும்
அருவி முலையு முண்ணாது
   அலறித் தண்ணீர் தரச்சொல்லும்
பரிகவி யோனத் தானறிய
   பகர்வீர் பட்சி தோஷமிதே *(சர.வை.மு. 12)*

பணிந்திட்ட பிள்ளையது பாலுண் ணாது
   பகர்சலமாய் வயிறுளையும் வாந்தி பண்ணும்
வணிந்திட்ட கண்குழியுந் தலையெடாது
   வார்வீருளை சாருமுடன் பேதி யாகும்
அணிந்திட்ட சீறியழு முடல்வெ துப்பும்
   அலறியே கண்டமுகஞ் சிறுசி றுக்குந்
துணிந்திட்ட பட்சிதோடம் குணத்தி னேர்மை
   கூறினார் கும்பமுனி கூறி னாரே *(583-84)*

## *குறிகுணம்*

உச்சி யுடல தனைப்பற்றி
   யுடல்மேலெங்கும் வெதுப்புண்டாம்
அச்ச மாக நாவுலர்ந்து
   அதுவே கண்ணும் வெளுப்பெய்தும்
பச்சை மஞ்சள் முறிந்தாப்போல்
   பசும்பொன் னிறமாய் மினுமினுக்கும்
இச்சை புரிந்த குழல்மடவீ
   ரிதுவே பட்சி தோஷமிதே. *(புத்.572-57)*

## *குறிகுணம்*

உதகமாய்க் கழிவ தன்றி
   உவாந்தியு மிகவுண் டாகி
இதமொடு தலையெ டாமல்
   இருகண்ணில் பீளை கட்டி
விதவித மாக மேனி
   வெதும்பியே பேய்போல் சீறும்

பதமிது முனிவன் சொன்ன
பட்சியின் தோடந் தானே. *(ஏடு.169-11)*

பெருகி வயிறு தான்போகும்
பேதம் உப்பும் கண்குழியும்
பெருகுங் கறுத்து முகஞ்சிறுக்கும்
பெரிய குரல்போல் சீறியழும்
அருவி முலையு முண்ணாது
அலறுந் தண்ணீர் குடியாது
பருவ விடையோன் தானறியப்
பகரும் பட்சி தோடமிதே. *(புத்.477-10-11)*

### வகைகள்

ஆண்பெண் மலட்டோ டலிப்பட்சி நான்கென்று
காண்பட்சி தோடங் கணி *(477-100)*

### ஆண்பட்சி தோடம் - குறிகுணம்

ஆண்பட்சித் தோடம் அறையக்கேள் நீர்வேட்கை
சாண்யாக்கை மிக்குலரல் கண்குழிதல் - மாண்பாக
வீழ்தல்நா நீட்டல் மிகுபேதி யுண்டாதல்
தாழ்தல் குரலொலியுந் தான். *(புத்.477-11)*

### பெண்பட்சி தோடம் - குறிகுணம்

பெண்பட்சி பேதியழல் பேண்தாகம் சீறியழல்
கண்சொருகல் சீதம் கடுப்புவிக்கல் - கண்ணோய்
உடல் நடுக்கல் வாய்னீ ருண்ணாப்பால் தோலோ
கடலரிகீழ் வாய்பிதுங்கல் காண். *(புத்.477-11)*

### மலட்டுப்பட்சி தோடம் - குறிகுணம்

பார்மலட்டுப் பட்சி பகரிலிளைப் புச்சிகுழி
பேர்வாந்தி யாயாசம்பேதியும் - கூர்ந்ததொரு
நீர்வேட்கை மிக்காதல் நேர்ந்தவுடல் முற்றிலும்
ஆர்காங்கை யாதலுமே யாம்.

### அலிப்பட்சி தோடம் - குறிகுணம்

அலிப்பட்சித் தோட மறையவே தோளில்
கலிமுதுகு கண்டமுழங் கைவில் - நலமாய்க்

குழிவிழுத லுச்சி கொடுவாந்தி யாதல்
கழிதல்மிக வாந்தாகங் காண். *(புத்.477.11)*

### *பட்சி தோடத்திற்கு சூரியபுட நெய்*

பட்சியின் தோஷந் தீர
பனையின்வேர் குளிச மாடி
உச்சித மணித்தக் காளி
உறைந்திடும் வேரோ டுள்ளி
பிச்சியின் வேரோ டெண்ணெய்
பிசைந்துநீ கதிர்ப்புடமே செய்து
உச்சியி லிட்டுப் பின்னே
உள்ளுக்குங் கொடுத்தி டாயே.
*(ஏடு.169-12,362-8) (புத்.477-12)*

### *கத்தூரி எண்ணெய்*

ஏகநாயகன்றன் இணையடியைப் போற்றி செய்து
வாருடனே எண்ணெய் வசனிப்பேன் - யோகமுள்ள
கோரோசனையும் கோஷ்டம் அதிமதுரம்
சீரந்திப்பிலி தேவ தாரமுடன் - பேரான
சந்தனமும் ஏலம்தன் னுடனே மாசிக்காய்
வெந்தயமும் சுக்கு வெள்ளுள்ளி - அந்தமுள்ள
பேரான கத்தூரிப் பெருவசம்பு ரோகணியும்
பாரமுள்ளமூங்கில் பச்சைத்தோல் - சீராய்
வகைக்கு வராகனெடை வாடநிறுத்து வகுத்துத்
தொகையாய் அரைப்பதற்கு சொல்லக்கேள் - தகமையுடன்
எருமுட்டைப் பீநாரி இசைந்ததொரு சாற்றில்
வருந்தி அரைத்து வழித்ததனைத் - திரும்ப
விளக்கெண்ணெய் ஓர்படியும் விட்டெரித்துத் தான்இறுத்து
மலைக்காமல் நோய்க்கெல்லாம் வைப்பாய் - கலக்கமற
பிள்ளைப் பிணிக்குப் பேராகத் தான்கொடுக்க. *(புத்.476-56)*

உள்ளநோய்ப் போகும் ஓதக்கேள் - கள்ள
பட்சியின் தோஷம் பழங்காய்ச்சல் - அக்கணமே
இத்தனை நோயெல்லாம் இருப்பிடத்தைவிட்டுவிட்டு
கத்தி விழுந்தோடுங் காண். *(புத்.476-56)*

## *பட்சி தோடத்திற்கு மாதுளம் குளிகை*

மானே ஏலம் அதிமதுரம்
 வழங்கும் வங்கம் கச்சோலம்
தக்கோல முடனே மாய காய்
 தானே கெருடப் பச்சையுடன்
சில முடனே வசுவாசி
 சிறந்த கிராம்பு பத்திரியும்
வாள முடனே திப்பிலியும்
 மருவும் சீனக் காரமுடன்
வலுவாய் சாத்திர பேதியுடன்
 வகைக்கோர் கழஞ்சு தான்கொண்டு.

கொண்டே நிறுத்து மாதுளத்தின்
 கூறும் விரையைத் தான்போக்கி
பண்டே யுள்ளே தான்வைத்து
 பகரும் எருமைச் சாணிதனில்
ஊனே பொதிந்து செலவுடனே
 உமிப்புட மிட்டு தனையெடுத்து
கண்டார் குழலாள் முலைப் பாலில்
 அரைத்தே பெரும்பயி ரளவாகும்
ஊனே சொல்வே னனுபானம்

## *1,2. குளிசம்*

காணவே செப்பேடு தகடு வாங்கிக்
 கண்மணியே எண்கோணம் அதன்மேல் வட்டம்
பூணவே சிங்ஹ்ரீயும் ஸ்ரீயுஞ் சவ்வும்
 பூட்டியே எண்கோணம் அதிலே யூன்று
தோணவே நான்சொல்வேன் தரும மாகத்
 தூக்கான ஐயுமென்று நடுவிற் போடு
மானவே போட்டதிலே ஐந்து நூலால்
 மகிமையாய்ச் சுற்றிநன்றாய்க் குளிச மாமே.

ஆடுகிற உளுந்துடனே யரிசி போட்டே
 யச்சமறச் சமைத்தொரு பாண்டம் தன்னில்

வாடுகிற எருக்கிலையில் சாதம் வைத்து
வளமாக மூவிளக்கு மாவா லேற்றி
நாடவே மந்திரத்தால் நூற்றெட் டோதி
நயமாகச் சாந்திசெய்து குளிசங் கட்ட
பாடுகிற தில்லையந்தப் பட்சி தோடம்
பலத்தநோய் பறந்தோடும் வித்தை தானே.
*(புத்.477-12,572-23-24)*

## *நிவர்த்தி*

பக்ஷி யென்ற நோயினது தோஷத் துக்குப்
பரிதகட்டில் அறுகோணம் வரையீ ராறு
நிக்ஷ்யித்த இருபத்தஞ் சரைவீட் டுக்குள்
நினைவாக யு-வ-சி-ந-ம- வென்று மாறி
அக்ஷியதன் நடுவணையைப் பிடித்து மாறி
அதனுள்ளே பெண்ணெழுத்து ம-ய-வ-சி. யென்றிட்டு
மக்ஷியென்ற அறுகோணங் கிலியும் பூட்டி
மயேஸ்பரியை பூசைபண்ணிக் கட்டிப் போடே.
*(புத்.572-57)*

## *3. குளிசம்*

பட்சியின் தோஷந் தீர
பனையின் வேர் குளிசமாடி.
*(ஏடு.362-8,169-12,477-12)*

## *நீலிப்பறவை (பட்சி)யின் தோடம்*

எய்தாம லவர்பிறந்த நாழி தன்னில்
என்றநீலி பெண்பட்சி விழிக்கு மாகில்
எய்தாமல் சீறியமுங் கண்ணோக் காடு
இசறியரும் விக்கலுடன் வாய்நீரூறல்
எய்தாமல் இக்குணங்கள் தீர்க்க வேண்டின்
இயம்புகிறேன் கழிப்புதனை யியல்பாம் மைந்தா.
*(புத்.572-53)*

### *நீலிப்பட்சி தோடத்திற்கு மந்திரமும் நிவர்த்தியும்*

எய்தாமல் எண்ணெய்ச்சட்டி யொன்றெ டுத்து
என்மகனே மூன்றுவர்ணப் புள்ளிக் குத்தே.
மூன்றுவர்ணப் புள்ளியிட்டு புட்பஞ் சாத்தி
முக்கியமாய் தாம்பூலங் குங்கு மத்தூள்
அன்றுமுதல் பேயினுட நாமஞ் சொல்லி
ய-ந-ம-சிவ- நூற்றெட்டு அருளை யோதி
வான்றுயிந்த சாந்திசெய்து கால சந்தி
வடதிசையில் கொண்டுவைக்க சாந்தி யாச்சு
மான்றுபனை யோலையிலே ரீங்கார மிட்டு
மடித்தந்த குளிசமதைக் கழுத்தில் கட்டே.

*(புத்.572-53)*

# கரப்பான்

*வே.பெ.:- கரப்பான்*

**இயல்:-** உடல் முழுவதும் புண், தடிப்பு இரணத்தை உண்டாக்கி கொப்புளங்கள் கண்டு, தோலின் இயற்கை நிறத்தை வேறுபடுத்தி சிலவேளை வெடிப்பு, நீர்க்கசிதலை யுண்டாக்கி வறட்சியை ஏற்படுத்தும் தோலைப் பற்றிய இரண நோய்.

## *நோய் வருவழி*

தாய் தந்தையரின், மேகத்தாலும் தோஷங்களினாலும் செயல் களாலும் கிருமிகளாலும் இந்நோய் குழந்தையைத் தாக்குகிறது. தாயானவள் பாலூட்டுங் காலத்து இறைச்சி, கெளிற்றுமீன், சோளம், கம்பு, வரகு, காரரிசி, வாழைக்காய், பாகற்காய், கத்தரிக்காய் போன்ற கரப்பானை உண்டாக்கும் உணவுப்பொருட்களை மிகுந்து உண்பதாலும் குழந்தையானது அவற்றை உட்கொள்வதாலும் ஒவ்வாமை ஏற்பட்டு கரப்பான் நோயுண்டாகிறது.

இந்நோய் பெரும்பாலும் தாலப்பருவம் முதல் வருகைப் பருவம் வரையுள்ள நான்கு பருவங்களிலும் அதாவது மூன்று மாதம் முதல் ஓராண்டுவரை (பாலுண்ணும் பருவம் முதல் பாலும் சோறும் உண்ணும் பருவம் வரை) குழந்தையைத் தாக்குகிறது. அதாவது மூன்று அல்லது நான்கு வயது வரைக்குங் காணும்

தாயோ குழந்தையோ சத்துள்ள உணவுப்பொருட்களை உட்கொள்ளாமையினாலும் குழந்தை மண்ணில் விளையாடுதலாலும் அசுத்தமான பொருட்களைத் தொட்டு விளையாடி அப்படியே சாப்பிடுவதாலும் இந்நோய் குழந்தையைப் பற்றிக் கொள்கிறது.

## *குறிகுணங்கள்*

தலையில் குருக்கள் தோன்றும். தலைவலி ஏற்படும். குரல் கம்மும்; விக்கல் ஏற்படும்; வாய்ப்புண் உண்டாகும். குரல்வளையில் தினவேற்படும். சளிபிடித்துக்கொள்ளும்.

கண்கள் வெளுத்துக்காணும், கண்ணில் நீர் பெருகும். மூக்கில் புண்ணுண்டாகி அரிப்பேற்படும்.

குழந்தை பால் குடிக்காமல் அழும். வயிறு வீங்கும். கழிச்சல் உண்டாகும். கால், கை, கடுக்கும். கைகால் சந்துகளில் தடிப்பேற்படும்.

உடம்பில் ஆங்காங்கே வீக்கம் ஏற்படும். சொறி, புண், ஏற்பட்டு தடிப்பேற்படும். வண்டளவில் குருக்கள் தோன்றும். பின்னர் புண் ஏற்பட்டு புண்ணில் விஷநீர் போன்று குருதி வடியும்.

மலச்சிக்கல் ஏற்படும். இலிங்கப்புற்று, யோனிப்புற்று போன்ற நோய்கள் ஏற்படும்.

***வகைகள்***

யூகி முனிவர் பொதுவான கரப்பான் வகைகளாக வாதக்கரப்பான், கண்டக்கரப்பான், வறட்சிக்கரப்பான், திமிர்வாதக்கரப்பான், கபாலகரப்பான், பித்த கரப்பான், சேத்தும கரப்பான் ஆகியவற்றைக் கூறுகிறார்.

அரிகரப்பான், ஊதுகரப்பான், சூலைகரப்பான், வெடிகரப்பான், மண்டைக்கரப்பான், பொரிகரப்பான், சட்டைக்கரப்பான், ஓடுகரப்பான், கருங்கரப்பான், செங்கரப்பான், கொள்ளிக்கரப்பான், வளிக்கரப்பான், அழற்கரப்பான், ஐயகரப்பான், தோட கரப்பான், வாலை(பால) கரப்பான்,வறள்கரப்பான், வீங்கு கரப்பான் என பதினெட்டு வகைகளாக பாலவாகடம் கூறுகின்றது.

கருங்கரப்பான், செங்கரப்பான், வரிகரப்பான், சொறிகரப்பான், ஆனந்தக் கரப்பான், மண்டைக்கரப்பான், வெடிகரப்பான், ஓடுகரப்பான், சீட்டைக்கரப்பான் ஆகிய வகைகளைப் பால வைத்திய போதினி கூறுகின்றது.

செங்கரப்பான், அனல்கரப்பான், மண்டைக் கரப்பான், சிரங்கு கரப்பான், அரிகரப்பான், பொரிகரப்பான், எழுகரப்பான், நீர்க்கரப்பான், உதிரக்கரப்பான், கட்டிக்கரப்பான், வீங்கிய கரப்பான், சட்டைக் கரப்பான், தடிக்கரப்பான், வெடிக்கரப்பான், சிங்கமுக எரி கரப்பான், வாத கரப்பான், பித்தகரப்பான், சிலேத்தும கரப்பான் ஆகிய பதினெண்வகைகளை ஓலைச்சுவடியில் உள்ள நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

செங்கரப்பான், கொள்ளிக்கரப்பான், கருங்கொள்ளிக்கரப்பான், பெருங்கரப்பான், சடைக்கரப்பான், சொறிகரப்பான், ஓடுகரப்பான், மண்டைக்கரப்பான், கடுவன்கரப்பான், வரிக்கரப்பான், கண்டக்கரப்பான், உமிகரப்பான், ஊதுகரப்பான், விஷக்கரப்பான், கருங்கரப்பான், புடைக்கரப்பான், முழங்காற்கரப்பான், சிலந்திக்கரப்பான், கழலைக்

கரப்பான், பைத்தியக்கரப்பான், கர்ப்பிணிக்கரப்பான், குடூரக்கரப்பான், வீக்கக்கரப்பான், அரிகரப்பான், ஆனந்தக்கரப்பான், அக்கினிக்கரப்பான், திமிர்க்கரப்பான், வறட்சிக்கரப்பான், இடிகரப்பான் ஆகிய 29 வகைகள் திரு.டி.வி.சாம்பசிவம் பிள்ளை அகராதியில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

இவற்றை வாதக்கரப்பான், பித்தக்கரப்பான், சிலேட்டுமக்கரப்பான், முன்கரப்பான், பின்கரப்பான் ஆகிய ஐந்து வகைகளுக்குள் அடக்குவர்.

அச்சான மருத்துவ இலக்கியங்கள், அச்சாகாத ஓலைச்சுவடிகள் கையெழுத்துபடிகள் ஆகியவற்றினின்றும் தொகுக்கும் போது 54 கரப்பான் வகைகள் காணப்படுகின்றன.

***மேற்சொன்ன கரப்பான் வகைகளின் அகரவரிசை பின்வருமாறு,***

1. அண்ட கரப்பான்.
2. அத்திக்கரப்பான்
3. அரி கரப்பான்
4. அனல் கரப்பான்
5. ஆனந்தக் கரப்பான்
6. இடிகரப்பான்
7. இரணக்கரப்பான்
8. உதிரக்கரப்பான்
9. உமிகரப்பான்
10. ஊதுகரப்பான்
11. எழுகரப்பான்
12. ஓடு கரப்பான்
13. கடுவன் கரப்பான்
14. கட்டிக் கரப்பான்
15. கட்டுகரப்பான்
16. கருங்கரப்பான்
17. கருங்கொள்ளிக் கரப்பான்
18. கர்ப்பிணிக்கரப்பான்
19. கழலைக் கரப்பான்
20. கிரந்திக் கரப்பான்
21. குட்டக்கரப்பான்
22. கொள்ளிக்கரப்பான்
23. சடைக்கரப்பான்
24. சட்டைக்கரப்பான்
25. சிங்கமுக எரி கரப்பான்
26. சிரங்கு கரப்பான்
27. சிலந்திக் கரப்பான்
28. சிலேத்தும கரப்பான்
29. சுரகரப்பான்
30. சுரகர்ண கரப்பான்
31. செங்கரப்பான்
32. சொறிகரப்பான்
33. தடிக்கரப்பான்
34. திமிர் கரப்பான்
35. தோடக்கரப்பான்
36. நீர்க்கரப்பான்

37. படர்கரப்பான்
38. பின்கரப்பான்
39. புடைக்கரப்பான்
40. புண்கரப்பான்.
41. பூதக்கரப்பான்
42. பெருங்கரப்பான்
43. பைத்தியக் கரப்பான்
44. மண்டைக் கரப்பான்
45. முன்கரப்பான்
46. முழங்காற்கரப்பான்
47. வரிகரப்பான்
48. வறள் கரப்பான்
49. வால (பால) கரப்பான்
50. விஷக்கரப்பான்
51. வீக்கக் கரப்பான்
52. வீங்கு கரப்பான்
53. வெடிகரப்பான்
54. வெண்கரப்பான்.

## *நடைமுறையில் உள்ள மருத்துவ முறைகள்.*

### *மருத்துவம்*

கரப்பான் நோய்க்கு வழக்கிலுள்ள பொது மருத்துவமும், மருந்துகளும் இங்கு விளக்கப்படுகின்றன.

குடற்கிருமியின் காரணமாக கரப்பான் தோன்றின் முதலில் குடற்கிருமிகளை நீக்கும் மருந்துகளைக் கொடுத்தல் வேண்டும். பின்னர் கரப்பான் நோய்க்குரிய மருந்துகளைக் கொடுத்தல் வேண்டும்.

மலக்கட்டு இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மலம் கட்டியிருந்தால் விளக்கெண்ணெய் 250மி.லி., ஈருள்ளி 125கி., காட்டு மொச்சைக் கிழங்கு (நாக மொச்சை) 105கி. எடுத்து சிதைத்துப் போட்டுக் காய்ச்சி, ஈருள்ளி மொறுமொறுப்பான பதத்தில், பரங்கிப் பட்டை 35கி. பொடித்துத் தூவி பதத்தில் இறக்கி வடித்து 5மி.லி. காலை, மாலை கொடுக்கவும். அதன் கடுகை கழற்சிக் காயளவு உள்ளுக்குக் கொடுக்கலாம்.

### *சூரணம்*

அமுக்கராவேர் 140கி., திப்பிலி, ஓமம், திப்பிலி மூலம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லி வற்றல், பரங்கிப் பட்டை, நீரடி முத்து இவற்றை வகைக்கு 35கி., சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு வகைக்கு 3கி. எடுத்திடித்து சூரணம் செய்து 250மி.கி. எடுத்து தேனில் கொடுக்க வேண்டும்.

### *எண்ணெய் வகைகள்*

1. மேற்றோல் சீவிய கொல்லன் கோவை 70கி., அப்பைக்கிழங்கு 18கி.

இவற்றை அரைத்து 250மி.லி. விளக்கெண்ணெயில் போடுக. எள் நெய் 125மி.லி. சேர்த்து மிருதார் சிங்கி 7கி. பொடித்துப் போட்டு காய்ச்சிக் கொள்க. கரபாகத்தில் கருப்புக் கட்டி 70கி. தட்டிப்போட்டு இறக்கி எண்ணெயை 5மி.லி. கொடுத்து அவ்வெண்ணெயைத் தேய்த்துக் குளிப்பாட்டவும்.

2. பச்சைக் கொடிவேலி வேர்ப்பட்டை, தோல் நீக்கிய வெள்ளைப் பூண்டு வகைக்கு 280கி. எடுத்தரைத்து 500மி.லி. நல்லெண்ணெயில் கலந்து அவ்வளவே பொடுதலைச் சாற்றையும் விட்டுக்காய்ச்சுக. வெள்ளைப்பூண்டு பொன் நிறமாய் வரும் சமயத்தில் இறக்கி நாளொன்றுக்கு 5மி.லி. காலை, மாலை கொடுக்கவும்.

3. கொடிவேலி, மாவிலங்கு, தலைச்சுருளி என்ற ஃசுரமூலி இவற்றின் இலைச்சாறு, நல்லெண்ணெய் வகைக்கு 250மி.லி. அம்மூலிகைகளின் வேர்ப்பட்டைகள் மூன்றும் வகைக்கு 18கி., மிளகு, வெள்ளைப்பூண்டு, கடுக்காய், கடுகுரோகணி, கத்தூரிமஞ்சள், கருஞ்சீரகம் வகைக்கு 14கி. அரைத்துப் போட்டு கலந்து காய்ச்சிக் கொள்க. அதனை வடித்து 5-10மி.லி. 3 நாட்கள் கொடுக்கவும்.

### *குடிநீர்*

பொடுதலைச்சமூலம், பூவரசம்பட்டை வகைக்கு 9கி. எடுத்து மைபோலரைத்து 65மி.லி. காடி நீரில் கரைத்து மூன்று நாட்கள் காலை சாப்பிட கொடுத்து உப்பில்லா பத்தியம் வைத்து நீர்கஞ்சி கொடுக்கவும். மறுபத்தியம் மூன்றுநாள் வைத்து எட்டாம் நாள் தலைக்குத் தண்ணீர் விட்டு உப்பு வறுத்துக் கூட்டவும். கரப்பான், அரையாப்பு, பரங்கிப்புண் தீரும். ஒரு வாரம் வரை கரப்பான் பண்டம் நீக்கவும்.

பரங்கிப்பட்டை சூரணம், பரங்கிப்பட்டை பதங்கம், சங்கு பற்பம், பவளபற்பம், குக்கில்பற்பம், சிலாசத்துப்பற்பம் போன்றவற்றை அளவுப்படி வழங்கலாம்.

### *புறமருந்துகள்*

கொப்புளங்கள் இருக்கும் காலத்து கழுவு நீர்கள் பயன்படுத்தலாம். தாபிதம் இருக்கும் போது நெய்ப்புப் பொருட்களைப் பயன்படுத்தலாம். புண்களாக இருந்தால் களிம்பு, பசை இவற்றைப்பயன்படுத்தல் நல்லது. தோலின் தன்மைக்குத் தக்கபடி காரவேறுபாடு உள்ள மருந்துகளை வெளியில் தடவ வேண்டும். பக்கு கட்டியிருந்தால் நெய்ப்புப்

பொருட்கள் உள்ள மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். வெதுவெதுப்பான நீரில் குளிக்க வேண்டும்.

சிகைக்காய் தூள், சவுக்காரம் பயன்படுத்தாது பாசிப்பயறு, நலுங்குப்பொடி தேய்த்து குளிக்கலாம்.

இலிங்கம், மிருதார்சிங்கி, இரசகற்பூரம், வெள்ளைக்குங்கிலியம், கடுக்காய், மாசிக்காய், காய்ச்சுக்கட்டி, தான்றிக்காய் இவற்றைச் சம எடை எடுத்துப் பொடித்து பசுவின் வெண்ணெயில் அரைத்துத் தண்ணீரில் ஒரு நாள் மிதக்கப் போட்டு மறுநாள் எடுத்து புண்களில் போட நீங்கும்.

கரப்பான் தைலம், அறுகன் தைலம், தேங்காய் நெய், குங்கிலிய வெண்ணெய் இவற்றை மேலுக்குப் பூசலாம்.

புண்களாக இருப்பின் புங்கன் எண்ணெய், வங்கக்களிம்பு இவற்றைப் பயன்படுத்தலாம்.

### *சிவப்பெண்ணெய்*

புங்கம்வேர் 44கிலோ, தேங்காய்நெய் 1கிலோ, மஞ்சிட்டி, நன்னாரி இவற்றை வகைக்கு 62கி., வெள்ளைக் குங்கிலியம் 52கி., சுருள்பட்டை 3கி, செவ்வல்லிக்கொடி 10கி. எடுக்க. புங்கன்வேரின் மேல் பட்டையைச் சீவி பால் எடுத்து தேங்காய் எண்ணெய் கலந்து அடுப்பேற்றி காய்ச்சுக. அதில் மஞ்சிட்டி, நன்னாரி இவற்றை இடித்து கற்கமாக்கி சேர்த்துக் கொள்க. கொதித்து வரும் சமயத்தில் சுருள் பட்டை, செவ்வல்லிக் கொடி இரண்டையுமிடித்து சூரணித்து வடிகட்டும் தருவாயில் கலந்துகொள்க. மெழுகு, குங்கிலியம் இவ்விரண்டையும் ஒரு பாத்திரத்திலிட்டு அதில் மேற்கண்ட தைலத்தை வடிகட்டி மேலுக்குப் பூசலாம்.

### *ஆகாப்பொருட்கள்*

பாலூட்டும் தாய்க்கும், குழந்தைக்கும் இறைச்சி கவிச்சுப்பொருட்கள், மசாலைப் பொருட்கள், மணப்பொருட்கள், காரப்பொருட்கள், கத்தரிக்காய், பூசனிக்காய் போன்ற கரப்பான் பண்டங்களையும் எள், எருமைப்பால், நெய் ஆகிய உணவுப் பொருட்களையும் நீக்குதல் வேண்டும். குழந்தைகளுக்கு உணவைக் குறைத்து கொடுக்க வேண்டும்.

மருந்துண்ணும் காலத்து பாலூட்டும் தாய் அல்லது குழந்தை உப்பு, புளி நீக்க வேண்டும். பாலூட்டும் தாய் போகத்தைத் தவிர்த்தல் வேண்டும்.

## *பொதுவான மருத்துவம்*

கரப்பானின் வகைகளுக்குரிய தனித்தனி மருத்துவம் அவ்வகைகளின் கீழ் விளக்கப்படுகின்றன. பொதுவாகக் கரப்பானுக்குரிய மருத்துவம் இங்கு கூறப்படுகிறது. மருந்துகள் சுரசம், சாறு, குடிநீர்...என மருந்தின் வாழ்நாள் அடிப்படையில் வழங்கப்பட்டுள்ளது.

## *குடிநீர் வகைகள்*

1. திரிபலை, நிலவேம்பு, சீந்தில் தண்டு, வழுதலை வேர், முத்தக் காசு, கருவேம்பிலை ஆகிய இம்மூலிகைகளை வகைக்கு 50கி. எடுத்து 5.2லி. நீரில் போட்டு எட்டொன்றாக்கிக் காய்ச்சி 15-30மி.லி. உள்ளுக்குக் கொடுக்க கரப்பானும் அதனால் ஏற்படும் சுரமும் நீங்கிப்போகும். *(ஏடு.313-68)*

2. சாரணைப்பூநீர், நவச்சாரம், வெடியுப்பு, கடுக்காய், சுக்கு இவற்றைச் சமஅளவெடுத்து குடிநீராக்கி 15-30மி.லி. கொடுக்க கரப்பான் நீங்கும்.

## *கற்கம்*

அப்பைப் கோவைக் கிழங்கைக் கொட்டைப் பாக்களவு எடுத்து தேவையான அளவு பசும்பாலில் அரைத்துக் கொடுக்க கரப்பான் தீரும். *(கை.பிரதி)*

## *களி*

காட்டுமல்லிகை இலையை 2பிடி எடுத்து இரங்கமீட்டான் நெல்லரிசியோடு நன்கு சேர்த்து இடித்துப் புடைத்து, அரைத்து வெள்ளாட்டுப்பால் விட்டுக் களி கிண்டி, அந்த ஆவியைக் கரப்பான் நோயுள்ள குழந்தைகளின் முகத்தில் பிடித்து அதை வெல்லத்துடன் கூட்டிச் சாப்பிட கொடிய கரப்பான் தீரும். *(சர.வை.மு. 229)*

## *சூரணம்*

சங்கம்பட்டை, வெள்ளறுகு, சிவனார்வேம்பு, சங்கங்குப்பி, சித்திரமூலம், பிரமியிலை, நொச்சியிலை, செங்கத்தாரிப்பட்டை, நிலவாகை, சின்னியிலை இவற்றை வகைக்கு 35கி., அவுரியிலை 70கி. எடுத்து இடித்துப் பொடித்துக் கொள்க. திப்பிலி, திப்பிலி மூலம், செவ்வியம், தேசாபுரம், அசமதாகம், கருஞ்சீரகம், வசம்பு, அரத்தை இவற்றை வகைக்கு 20கி., வெள்வெங்காயம் 70கி., எடுக்க. அனைத்துச்

சரக்குகளையும் இடித்து முறைப்படி சூரணம் செய்து 250மி.கி. அளவு இருநேரமும் எட்டுநாள் கொடுக்க கட்டுக் கரப்பான், விஷகரப்பான், வெடிகரப்பான் ஊதுகரப்பான், இன்னும் பல கரப்பானும் நீங்கும். கார்ப்பு, புளிப்பு தவிர்க்கவும். *(ஏடு.87-142,143)*

### *பிட்டு*

பூவரசன் பட்டை, அதன் தழை, சங்கன் பட்டை, அதன் தழை, புனுகுப்பிடித்தழை இவை மூன்றையும் கம்பரிசியுடன் சேர்த்திடித்து பிட்டவியல் செய்து குழந்தைக்குக் கொடுக்கவும், கரப்பான் குணமாகும். *(ஏடு.206-65)*

### *நெய் வகைகள்*

1. நிலவேம்பு, செஞ்சந்தனம், கடுக்காய், முத்தக்காசு, திப்பிலி, தேவதாரம், கருவேப்பிலை, தேற்றான்விரை, மஞ்சள் இவற்றை வகைக்கு 10கி. எடுத்து இடித்துப் பொடித்து 3.9லி. பாலில் கலந்து கொள்க. 2.6லி. நெய்யையும் உடன் சேர்க்க. காய்ச்சி பக்குவத்துடன் வடித்து 5-10மி.லி. உள்ளுக்குப் புகட்டவும். மேலுக்கும் பூசவும். அனைத்துக் கரப்பானும் தீரும். *(ஏடு.313-68)*

2. தேங்காய் எண்ணெய், நல்லெண்ணெய், பசுநெய் இவற்றை முறையே 325மி.லி., 1.3லி., 165மி.லி. எடுத்துக் கொள்க. அமிர்தவல்லி, விஷ்ணு கிரந்தி, பேய்ப்புடல், முசுமுசுக்கை, ஆனை நெருஞ்சில், சிறுபுள்ளடி, விரால் தலையிலிருக்கும் கல், வெண்குடங்கல், கருங்குடங்கல், மருதோன்றி, தாமரைத்தண்டு, எலுமிச்சங்காய் ஆகிய பன்னிரு சரக்குப் பொருட்களையும் வகைக்கு 35கி. எடுத்து இடித்துச் சாறு பிழிந்து கொள்க. அதனை நெய்யில் சேர்த்துக் கொள்க. சதை அதிகமாகவுள்ள கோழியொன்றின் உயிரைப் போக்கி இரத்தத்தை விடாது அதனைப் போட்டிடித்துக் கொள்க. தேங்காய்ப்பால் 2.6லி. சேர்த்து மேற்சொன்ன திரவங்கள் அனைத்தையும் ஒன்று சேர்க்க.

அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, அதிரம் (அதிமதுரம்), ஏலம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சீரகம், கருஞ்சீரகம், நற்சீரகம், கார்போகரிசி, வாலுளுவையரிசி, திப்பிலியரிசி, வெட்பாலை அரிசி (அல்) விளாவரிசி, மூங்கிலரிசி, ஏலரிசி ஆகிய பொருட்களை வகைக்கு 5கி. எடுத்துக்கொள்க.

சித்திரமூலம் 35கி. எடுத்து சுத்தி செய்து அரைத்து நெய்யில் சேர்த்து காய்ச்சி திரண்டு வரும் பொழுது 35கி. சர்க்கரையைப் போட்டுபதத்தில் பார்த்து இறக்கி வடித்துக் கொள்க. பின்அதனை நோயின் வன்மைமென்மையை அறிந்து கொண்டு மூன்று நாட்கள் காலை, மாலை 5-10துளிகள் கொடுக்க கரப்பான் நீங்கும்.

*(கை.பி.98-46-47)*

### *வல்லாரை இளகம்*

வல்லரைச்சாறு, பொடுதலைச்சாறு, பொன்னாங்காணிச்சாறு இவற்றை வகைக்கு 1.3லி., எலுமிச்சம்பழச்சாறு 675மி.லி. ஆவின்பால், ஆவின்நெய் இவற்றை வகைக்கு 2.6லி. எடுக்க. சாதிக்காய், சாதிபத்திரி, மாசிக்காய், கற்கடகசிங்கி, அதிமதுரம், காட்டாத்திப்பூ, வால்மிளகு, ஏலம், கிராம்பு ஆகியவற்றை வகைக்கு 10கி. எடுக்க. மட்பாண்டத்தில் மேற்கூறிய திரவங்களை விட்டு அடுப்பேற்றி மிருதுவாக எரித்து கொதிவரும் போது மருந்துச் சரக்குகளைச் சூரணித்து பால்விட்டரைத்து கலவையில் கலந்து வண்டல் மெழுகுபதம் திரளுஞ்சமயம் வடித்து வாயகன்ற புட்டியில் விட்டு 70கி. சர்க்கரையைப் போட்டுக் கலக்கி நெய்யை விட்டு கிளறி பத்திரப்படுத்துக. 100மி.கி. வேளைக்குக் கொடுத்து இருவேளையாகக் கொடுக்கவும். *(வை.சிந்-207)*

## எண்ணெய் வகைகள்

### *1. பிரமதண்டெண்ணெய்*

பிரமதண்டு சமூலச்சாறு, வெள்ளறுகுச்சாறு, புங்கம்பால், வல்லாரையிலைச்சாறு இவற்றை வகைக்கு 325மி.லி. எடுக்க. 1.3லி. சிற்றாமணக்கெண்ணெயையும் அதனுடன் கலந்து அடுப்பேற்றி காய்ச்சி மெழுகுபதம் வர சிறுக எரித்து வடிகட்டி பத்திரப்படுத்துக. காலையில் மட்டும் 15மி.லி. அளவு உடலின் வன்மை, மென்மைக்கேற்றவாறு கொடுக்க நான்கைந்து முறை கழிச்சலாகும். இவ்வாறு 3, 5 நாட்கள் கொடுக்க சொறி, சிரங்கு, கரப்பான் தீரும். *(வைத்.சிந்-188)*

### *2. ஆதொண்டை எண்ணெய்*

புங்கிலை, ஆதொண்டையிலை, நாய்வேளையிலை, சங்கிலை இவற்றை ஒரு கைப்பிடி எடுத்துக் கொண்டு நன்றாக அரைத்துக் கொள்க. வசம்பு, உள்ளி, சீரகம், கருஞ்சீரகம், வெளிச்சைப்பிசின்,

முருங்கை நறுவிலிப் பிசின், பொடுதலை, கத்தூரிமஞ்சள், கடுக்காய்த் தோல் ஆகிய எண்வகைப் பொருட்களையும், பொடிசெய்து கொள்க. வெங்காயத்தை 1.3லி. அளவு எடுத்துக் கொள்க. விளக்கெண்ணெய் 2.6லி. சங்கங்குப்பியிலைச்சாறு 1.3லி. எடுத்து அதில் மேற்கூறிய எல்லாவற்றையும் போட்டு வெயிலில் வைக்க. அதனை 5 சொட்டுகள் கொடுக்க குழந்தைகட்கு வரும் கரப்பான் நீங்கிவிடும். *(புத்.476-109-110,477-245-246)(ஏடு.362-47)*

### *3. சாரணை எண்ணெய்*

சாரணை, உத்தாமணிவேர், முடக்கொத்தான், சிறிய வழுதலை வேர், எருக்கு. முருங்கை, புங்கு இவற்றின் வேரை எடுக்க. கொடிக்கழற்சி, மிளகு, உள்ளி, பூதக்கரப்பான், வசம்பு இவற்றைச் சமனெடுக்க. அனைத்தையும் இடித்துப்பொடித்து கற்கமாக்கி ஆமணக்கெண்ணெயிற் கலந்து கொதிக்க வைத்து பதத்தில் வடித்து உள்ளுக்கு 5-10மி.லி. கொடுத்து மேலுக்குப் பூச பலவகை கரப்பான் தீரும். *(ஏடு.42-335)*

### *4. பூவரசு எண்ணெய்*

பூவரசம் பூச்சாறு, பூவரசங்காய்ச்சாறு, செம்மணித்தக்காளிச் சாறு ஆகிய மூன்றின் சாறும் வகைக்கு 335மி.லி. எடுத்து அதில் 165மி.லி., கற்றாழைச்சாறு, சிற்றாமணக்கெண்ணெய் 1லி. ஆகியவைகளைக் கூட்டிக் கொள்க. அதில் இலவங்கப் பட்டைப் பொடி 4கி., ஏலப்பொடி 4கி., சிவதைப் பொடி 4கி., கரப்பான் பட்டைப் பொடி 4கி., வீதம் எடுத்துக் கலக்கி எரித்துக் கடுகு திரளும் பாகத்தில் இறக்கி வைக்க.

இம்மருந்தை 5-10மி.லி. உள்ளுக்குக் கொடுக்கும்போது கடுகை மேலில் பூசவேண்டும். அப்போது கரப்பான் வகைகள் அனைத்தும் தீரும். தாயானவள் கவிச்சுப் பொருட்கள், பூசனிக்காய், எருமைப்பால், எருமைநெய், எள், கொள் முதலியவற்றை நீக்கல் வேண்டும். *(புத்.476-110,477-241)*

5. செங்கத்தாரி, கருநொச்சி, கொத்தான், கழற்சியிலை, புங்கன், சங்கன், சங்கங்குப்பி, கிரந்தி நாயகன், செருப்படி, சவுரி, வேலிப்பருத்தி, வேம்பாடம்பட்டை, சிவனார் வேம்பு, சிவதை சமூலம், கண்டங்கத்திரி, கடுக்காய், கடுகுரோகணி, பூத கரப்பான் பட்டை, நல்ல சீரகம் இவற்றைக் கூட்டி சாறு வகைகளை பிழிந்தெடுத்துக் கொள்க.

தேங்காயெண்ணெயில் சாற்றைக் கலந்து எரித்து மற்ற மருந்துகளை இடித்துப் பொடித்துப் போட்டு வடித்தெடுத்துக் கொள்க. அதனை 5-10மி.லி. உள்ளுக்குக் கொடுக்க கொள்ளிக் கரப்பன், விஷகரப்பன், அரிகரப்பன், செங்கரப்பன், கருங்கரப்பன் இவை தீரும். கார்ப்பு, புளிப்பு தவிர்க்கவும். *(ஏடு.87-222)*

6. நன்னாரி வேர், சிறுகுறிஞ்சாவேர், நெல்லிப் பருப்பு, நிலவேம்பு, சிவனார் வேம்பு, ஈசுரமூலிவேர், அந்தரத்தாமரை வேர், கொழிஞ்சி வேர், வேலிப்பருத்திவேர், மணித்தக்காளி வேர், பேய்ப்பீர்க்கங் கூடு ஆகிய மூலிகைச் சரக்குகளை இடித்து வெள்ளாட்டின் சிறுநீரில் பிசைந்து வடித்து அதனுடன் நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், புங்கெண்ணெய், தேங்காயெண்ணெய் நான்கையும் சமனெடுத்து கூட்டி எண்ணெயையும் சாற்றையும் கலந்தெரித்து வடித்து உள்ளும் கொண்டு மேலும் பூசி அந்திக்கு வெந்நீர் குளிப்பாட்ட கரப்பான் வகை தீரும். *(ஏடு.400-287,288)*

### *7. செருப்படை எண்ணெய்*

சிறுசெருப்படை, இண்டங்கொடி, கிரந்தி நாயகம், நிலப்பனங் கிழங்கு, நொச்சியிலை, சங்கங்குப்பியிலை, முட்சங்கிலை, கொட்டைக் கரந்தைச்சமூலம், கழற்சியிலை, துளசியிலை, கருநொச்சியிலை, செங்கரிப்பான், பெருங்கிழங்கு, முருக்கம்பட்டை, கொடிவேலி, கோழியவரையிலை, வெள்ளுள்ளி, தூதுவளையிலை, அத்திப்பட்டை, தேட்கொடுக்கிலை, கரிசலாங்கண்ணிச் சமூலம், சங்கம்பட்டை, அவுரியிலை, சுவற்று முள்ளங்கி, அமுக்கரா இலையும் கிழங்கும், ஆடு தீண்டாப்பாளைச்சமூலம், வெட்பாலைப்பட்டை, பிராயப்பட்டை, பூவரசம்பட்டை, பூவரசம் பழுப்பு, சிறுசின்னியிலை, நீர்முள்ளி, முடக்கறுத்தான், புங்கம்பட்டை, ஆதொண்டையிலை, சாணாக்கி இலை, சிறுகுரட்டை, சீந்திற்கொடி, பழுபாகலிலை கண்டங்கத்திரி சமூலம், முள்ளிச்சமூலம், அறுகு ஆகிய 42 பொருட்களின் சாறும் கழுதைலத்திப்பால், யானைலத்திப்பால், பசுவின் நீர், எலுமிச்சைப் பழச்சாறு, 'வெங்காயச்சாறு ஆகிய ஐந்தும் வகைக்கு 10.7லி. எடுத்து 5.3லி. சிற்றாமணக்கெண்ணெய் எடுத்துக்கொள்க. மேற்சொன்ன திரவங்களைக் கலந்து வெய்யிலில் வைக்க. அதில் மரமஞ்சள், சதகுப்பை, பூதகரப்பான் பட்டை, பரங்கிப் பட்டை, செங்கத்தாரிப் பட்டை, வேம்பாடம் பட்டை, கார்போகவரிசி, வாளம், வசம்பு ஆகிய

ஒன்பது பொருட்களின் பொடியை வகைக்கு 8கி. எடுத்து சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து காலை மட்டும் 16.மி .லி வீதம் கொடுத்து வர எல்லாக் கரப்பானும் நீங்கும். தாய்க்குப் பத்தியம் அவசியம்.

8. ஈர வெங்காயச்சாறு, ஆமணக் கெண்ணெய் இவற்றை வகைக்கு 1.3லி. எடுக்க. சின்னியிலை, சிவனார் வேம்பு, சாரணை, தூதுவளை, கருநொச்சில், மணித்தக்காளி, கற்பூரவல்லி, சிறுகீரை, சேம்பு, செருப்படி, பருத்தி, பொன்னாங்காணி, நீர்முள்ளி, சங்கங்குப்பியிலை, சங்கன் இலை, வெருகு, கண்டங்கத்திரி இலை ஆகிய மூலிகைகளை இடித்துப் பிழிந்த சாறு வகைக்கு 1.3லி. எடுக்க. அதிமதுரம், சீரகம், கருஞ்சீரகம், கடுக்காய், ஏலம், மிளகு, பரங்கிப்பட்டை, சதகுப்பை, மரமஞ்சள், ஓமம், திப்பிலி இவற்றை வகைக்கு 8கி. எடுத்துக் கொள்க. பரங்கிப்பட்டையைத் தவிர மற்றவற்றை முறைப்படி சூரணித்து மேற்கூறப்பட்ட கலவையில் கலந்து காய்ச்சி பதத்தில் இறக்கிக் கொள்க. பரங்கிப்பட்டையைச் சூரணித்து பாத்திரத்திலிட்டு அதில் எண்ணெயை வடித்துக்கொள்ளவும். வேளைக்கு 5-10மி.லி. அளவெடுத்து கரப்பான் நோயுள்ள குழந்தைகளுக்குக் கொடுக்கவும். நோயில்லாதவர்களுக்கு 5-10மி.லி. அளவெடுத்து தேவையான அளவு வெண்ணெயிற் கலந்து கொடுக்கவும். 2 அல்லது 3 முறை வயிறு கழியும். பாசிப்பயிறும், அரிசியும் சேர்த்துக் கஞ்சி காய்ச்சிக் கொடுக்கவும். கரப்பான் ஒழியும். *(சர.வை.மு-226-227)*

### *9. புங்கம்பூ எண்ணெய்*

புங்கம்பூ, புளிநறளை, வசம்பு, பூண்டு, கருஞ்சீரகம், பாலைப்பட்டை, நன்னாரிவேர் ஆகிய ஏழுபொருட்களையும் வகைக்கு 9கி. எடுத்து பசுவின் பால் விட்டரைத்து 280கி. பசுவின்பாலும் 280கி. ஆமணக்கு நெய்யும் எடுத்துசேர்த்து அதனுடன் முன்பு அரைத்து வைத்துள்ள கற்கத்தைக் கரைத்து எரித்துப் பதத்தில் வடித்து காலையில் மட்டும் குழந்தைகட்கு 16மி.லி. வீதம் மூன்று நாள் புகட்டினால் கரப்பான் யாவும் நீங்கிவிடும். *(புத்.482-85-86,477-241,476-115)*

### *10. சிறுகுறிஞ்சான் எண்ணெய். (கரப்பான் எண்ணெய்)*

சிறுகுறிஞ்சான் வேர், மிளகரணைவேர், காட்டு மல்லிவேர், கொடிப்பாலை வேர், நிலவிளாவேர், வசம்பு, உள்ளி, ஆகாசக்கருடன் கிழங்கு ஆகிய எண் வகைப் பொருட்களையும் சமனெடை எடுத்து

நீர்விட்டரைத்து மேற்கொண்ட அளவிற்குச் சரியெடை சிற்றாமணக்கு நெய், எடுத்துக் கலந்து எரித்துப் பக்குவ பதத்தில் வடித்து நோய்க்குத் தக்கபடி எண்ணெயின் அளவும், நாளளவும் கவனித்துக் கொடுக்கவும்.
*(புத்.482-85,476-118,477-244)*

11. செங்கத்தாரிப்பட்டை, இலவங்கப்பட்டை, மிளகு, சிறு குறிஞ்சான் வேர் இவற்றைச் சேர்த்து நல்லெண்ணெயிலே காய்ச்சி நாள்தோறும் குடிக்க பல கரப்பானும் நீங்கும். *(ஏடு.362-48)*

12. கரு நொச்சி இலை அரைத்த விழுதினை ஒரு நாரத்தாங்காயளவு எடுக்க. வெள்ளைப்பூண்டு, வசம்பு, கருஞ்சீரகம், கடுக்காய் ஆகியவற்றை வகைக்கு 35கி. எடுத்து நன்றாக அரைத்து ஆமணக்கெண்ணெய் 1.3லி. எடுத்து அதில் கலந்து மூன்று நாட்களுக்கு வெயிலில் வைக்கவும். நான்காம்நாள் பகலில் எடுத்து அடுப்பிலிட்டெரித்து பதத்தில் வடிக்கவும். இவ்வெண்ணெயை 5-10லி. எடுத்து உள்ளுக்குக் கொடுக்க கரப்பான், கிரந்தி தீரும்.
*(சர.வை.மு-237-238)*

13. விளக்கெண்ணெய் 1.3லி. எடுக்க. கையாந்தகரை, பொடுதலை, தவசிமுருங்கை, செப்பு நெருஞ்சில், சிறு செருப்படி, பெருஞ்செருப்படி, தக்காளி, மணித்தக்காளி, வெண்ணொச்சி, கருநொச்சி, புங்கிலை, தேள் கொடுக்கிலை, பொன்முசுட்டை, வண்ணத்தி, அவுரி, கோட்டான், கிரந்தி, வேப்பிலை, சங்கங்குப்பி, தழுதாழை, வெள்ளறுகு, சிவனார் வேம்பு, சங்கிலை, முருக்கிலை, சாணாக்கி, முருவிலி, தூதுவளை, குமிழ், கோழியவரை, கிரந்திநாயகம், பிரமிவழுக்கை, இலுப்பையிலை, பூவரசிலை, சின்னியிலை, கழற்சியிலை, சிறுபுள்ளடி, பழம்பாசி, ஓரிலைத்தாமரை, கற்றாழஞ்சாறு, பேய்க்கொம்மட்டிக்காய்ச்சாறு, கருங்கழுதைலத்திச்சாறு, எருமைசாணிச்சாறு இவற்றை வகைக்கு 325மி.லி., ஈரவெங்காயச்சாறு 650மி.லி. எடுக்க. பிரப்பங்கிழங்கு, ஈச்சம் வேர், கூவிளாத்திவேர், பொன் முசுட்டை, செங்கத்தாரிப்பட்டை, குமிளம்வேர் இவற்றை வகைக்கு 350கி. எடுத்து குடிநீராய்க் காய்ச்சி முன் சொன்ன சாறு கலந்த எண்ணெயில் கலக்க. கடுக்காய், கடுகுரோகணி, சீரகம், கருஞ்சீரகம், ஏலம், பூதகரப்பான் பட்டை, மிளகரணைப்பட்டை, செங்கத்தாரிப்பட்டை, உள்ளி, வசம்பு கிரந்திநாயகம்வேர், வெட்பாலரிசி இவற்றை வகைக்கு 9கி.,

பரங்கிப்பட்டை 105 கி.எடுத்து அரைத்துக் கரைத்து, முன்புள்ள குடிநீர், சாறு இவற்றுடன் கலந்து கொள்க. அதனை வெயிலில் வைக்க. 5 நாட்களும் காலையில் மட்டும் 5-10மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுக்கவும். உப்பு, புளிப்பு ஆகாது. வெந்நீரும் சோறும் தரவும்.

*(ஏடு.87-222-224)*

### *14. பாலசஞ்சீவி மணி எண்ணெய்*

சுத்தி செய்த 4கி. இரச செந்தூரத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்துப் பிறகு 4கி. சுத்தித்த இரசகற்பூரத்தையும் சேர்த்து ஒரு மணி நேரமரைத்து சிற்றாமணக்கு எண்ணெயைச் சிறுகச்சிறுகவிட்டு அரைத்துக் கொண்டேயிருந்து 350கி. எண்ணெயும் தீர்ந்த பிறகு கலவையை வழித்து சீசாவிற் பத்திரபடுத்தி வைக்க.

4 அல்லது 5கி. தாய்ப்பாலுடன் கலந்து குழந்தைக்குப் புகட்ட வேண்டும். முதலில் 5 துளிகள் எண்ணெய் கொடுத்து குழந்தையின் உடல் தன்மையை அறிந்து அதற்கேற்றபடி அதிகப்படுத்தியும் குறைத்தும் கொடுக்க வேண்டும். நோயின் வன்மைக் கேற்றபடி ஒன்று அல்லது இரண்டு வேளை மட்டும் உபயோகிக்கலாம்.

மேலுக்குப் பூசவும், உள்ளுக்கும் உபயோகிக்கலாம். நோய் கடினமாயிருப்பின் கடும் பத்தியமாகவும் இலகுவாயிருந்தால் இலகு பத்தியமாகவும் வைக்க வேண்டும். நோய் பலத்திற்குத்தக்கபடி 3 அல்லது 5 நாட்கள் உபயோகிக்கலாம். நோய் எவ்வளவு கடினமானதாயினும் இடையில் ஒரு வாரம் விட்டு விட்டு 2 அல்லது 3 தடவைகள் உபயோகித்தால் எல்லாக் கரப்பான்களும் நீங்கும்.

*(கை.பி.பால.வை.போதினி 145-146)*

15. நாய்வேளை, தைவேளை, செம்பருத்தி, மணித்தக்காளி, பொன்னாங்காணி, நத்தைச்சூரி, அம்மான் பச்சரிசி, தகரை, பழம்பாசி, குட்டி விளாம்பட்டை, பாகல், கருந்துளசி, செம்முள்ளி, இண்டு பாவட்டை, கருங்காலி, புள்ளடி, சுரை, துவரை, கொன்றைப்பட்டை, தவசு முருங்கைப் பட்டை, கோடகசாலை, அகத்தி, குமரி, சிறுசின்னி, ஈருள்ளி, பூண்டு ஆகிய சரக்குகளின் சாறு வகைக்கு 325மி.லி. எடுத்து ஒரு மட்பாண்டத்தில் விட்டு அதில் 5.3லி. ஆமணக்கு நெய் சேர்த்து சூரிய வெப்பத்தில் வைக்க; அதில் ஓமம், சாதிக்காய், சாதிபத்திரி, வசம்பு, கோட்டம், கொத்துமல்லி, காட்டுச்சீரகம், திப்பிலி, இஞ்சி

ஆகியவற்றை வகைக்கு 20கி. எடுத்து அரைத்துக் கலக்கி எரித்துப் பதத்தில் வடித்துக்குழந்தைகட்கு 5-10 துளிகள் கொடுத்து வர பதினெண் கரப்பானும் நீங்கி விடும். 16 வயது வரைக்கும் வரும் கரப்பானுக்குக் கொடுக்கலாம். *(புத்.572-49-50,477-243,476-117)*

16. சிற்றவரைக்கிழங்கு, சிறு குறட்டைக்கிழங்கு, சிவதை, ஆதண்டை, நிலக்குமிழ், அமுக்கிரா, கொடிவேலி, சாரணை, முருங்கை, செங்கத்தாரி, மிளகரணை இவற்றின் வேர்களையும் வகைக்கு 140கி. எடுத்து, உலர்த்தி இடித்துப் பொடித்துக்கொள்க. கருஞ்சீரகம், வாலுளுவையரிசி, விழலரிசி, வெட்பாலையரிசி, கார்போகரிசி, ஈரவெங்காயம், மிளகு இவற்றை வகைக்கு 35கி. எடுத்து மேற்கூறிய தூளுடன் இடித்துக் கலந்து கொள்க. விளக்கெண்ணெய் 5.2லி. எடுத்து சரக்குத்தூளைக் கலந்து எரித்து கடுகுபதத்தில் இறக்கி வைத்துக் கொள்க. இறுத்தெடுத்து 5-10மி.லி. எண்ணெயெடுத்து செங்கரப்பான், கருங்கரப்பான், கொள்ளிக் கரப்பான், பொரிகரப்பான் போன்ற கரப்பான் உள்ள குழந்தைகட்குக் கொடுக்க தீரும். மேலுக்கும் பூசவும். கைப்பு, புளிப்பு, கிரந்தி பண்டங்களைத் தவிர்க்கவும். சிறுகுழந்தையானால் தாய் பத்தியம் காக்கவும். *(ஏடு.822-112,113)*

17. நிலவாகை, தூதுவளை, சங்கங்குப்பி, கூவிளை, செந்தொட்டி, குட்டித்தக்காளி, செம்முள்ளி, கண்டங்காரி, கருநொச்சி, இண்டு, வெங்காயம் இவற்றின் சாற்றை 336மி.லி. எடுத்து கொள்க. அதனைப் பாத்திரத்தில் ஊற்றி அதனுடன் விளக்கெண்ணெய் 1.3லி. சேர்த்துக் கொள்க. தழுதாழை, செங்கத்தாரி, மணிக்கடுக்காய், கரிய சீரகம் ஆகியவற்றை வகைக்கு 5கி. எடுத்து அரைத்து எண்ணெயதனில் கலந்து ஒன்று சேர்த்து அடுப்பேற்றிப் பதமாய்க் காய்ச்சி தெளிவாக வடித்திறுத்தி 5-10மி.லி. அளவறிந்து உள்ளுக்குக் கொடுக்க கரப்பானும் நீங்கிவிடும். *(கை.பி.98-39-40)*

18. மிளகு, துருசு, கடுக்காய், கோட்டம், திப்பிலி, கரியசீரகம், ஓமம், கஞ்சாங்கோரை, நத்தைச் சூரி, சிறியாவாரை,பெரியாவாரை, சிவனார்வேம்பு, உத்தமதாளி இவற்றைப் பொடித்து ஒன்று சேர்த்து எண்ணெயாக கொதிக்கச் செய்து பக்குவ பதத்தில் இறக்கி வைத்துக் கொள்ளவேண்டும். அதனைக் குழந்தைகளுக்கு 5-10மி.லி. அளவறிந்து கொடுக்க நீங்குவதற்கரிய கரப்பான் பதினெட்டும் நீங்கிப் போகும். *(புத்.476-111)*

19. சூரை, கீழாநெல்லி, ஆவாரை இவற்றின் வேர்கள், காக்கிணத் திலை, ஆடுதீண்டாப்பாளை ஆகியவற்றை அரைத்து நல்லெண்ணெயில் வேகவைத்து 5-10மி.லி. உள்ளுக்குக் கொடுக்க கரப்பான் தீரும்.
*(தனி. அ.கை.வை. - 8)*

## *20. அகத்தி எண்ணெய்*

அகத்தி, கற்பூரவள்ளி, அவுரி, வெள்ளறுகு, நுங்கு, ஆடாதோடை, மணித்தக்காளி, ஆவாரை, சங்கங்குப்பி, நிலக்கடம்பு, கிரந்திநாயகம், கருநொச்சி, முருக்கு, வெங்காயம் இவற்றை எடுத்து சாற்றைப் பிழிந்து வகைக்கு 336மி.லி. எடுத்துக் கொள்க.

ஆமணக்கெண்ணெயை அளவாகக் கூட்டிஎடுத்துக் கொள்க. மஞ்சள், மரமஞ்சள், கத்தூரி மஞ்சள், சிவதை, கடுகுரோகணி, நற்சீரகம், கருஞ்சீரகம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றை வகைக்கு 4கி. எடுத்துப் பொடித்து அதனை முன்சொன்ன சாற்றில் சேர்த்துக் கொள்க. அக்கலவையை அடுப்பில் வைத்து சிறுக எரித்து மெழுகு பதத்திலிறக்கி வேறு கலசத்தில் வடித்துக்கொள்க. அதனை 5-10மி.லி. அளவறிந்து 3 நாள் கொடுத்துவந்தால் குழந்தைகட்கு வரும் பதினெட்டு வகை கரப்பானும் நீங்கிவிடும். *(புத்.476-114,477-239,482-86)*

21. கருஞ்சீரகம், பூதக்கரப்பான் பட்டை, பற்பாடகம், வெங்காயம், பெருங்காயம், வசம்பு, சுத்தி செய்த கௌரிபாடாணம், சடைச்சி, காட்டு மொச்சை, சிறுகாஞ்சொறி, மிளகரணைவேர், பொன்முசுட்டை வேர், பெருங்குரும்பை, புனலித்தண்டு, சத்திச்சாரணை, நன்னாரி வேர், பெரு மருந்து, சிறு குறட்டை, கொடிவேலிவேர், சிற்றவரைக்கிழங்கு, குப்பைமேனி வேர் ஆகிய அனைத்து மூலிகைகளையும் வகைக்கு 12கி. எடுத்து தண்ணீர் விட்டு நன்றாக அரைத்து பசுவின் நெய் 1.3லி. அல்லது விளக்கெண்ணெய் எடுத்து குழப்பிக் கொள்க. அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக வடிக்கவும். இதைத் தினந்தோறும் 5-10மி.லி. அளவெடுத்து பாலில் கலந்து சாப்பிட்டுவர அனைத்து கரப்பானும் தீரும். *(சர.வை.மு-228-229)*

22. மிளகு, துருசு, கடுக்காய், கோட்டம், திப்பிலி, கரிய சீரகம், ஓமம், கஞ்சாங்கோரை, நத்தைச்சூரி, சிறிய ஆவாரை, பெரிய ஆவாரை, சிவனார் வேம்பு, வேலிப்பருத்தி இவற்றின் வேரைச் சமஎடை

எடுத்திடித்து போதிய அளவு விளக்கெண்ணெயிற் போட்டுக் காய்ச்சி 5-10மி.லி. கொடுக்க கரப்பான் நீங்கும். *(புத்.482-86)*

23. தூதுவளை வேர், மாதுளை வேர், கொடி வேலி வேர், மிள கரணை வேர், வட்டத்திருப்பி வேர், சிற்றவரை வேர், முடிமேல் முடி வேர், கொழிஞ்சி வேர், கீழாநெல்லி வேர், சத்திச்சாரணை வேர், மெருகங்கிழங்கு, கருஞ்சீரகம், கருங்குங்கிலியம், வெங்காரம், வசம்பு, பூத கரப்பான் பட்டை, கம்பிப்பிசின் இவற்றைச் சமனெடுத்து பொடித்து கூட்டி நல்லெண்ணெயில் கலந்து காய்ச்சி உள்ளுக்கு 5-10மி.லி. கொடுத்து மேலுக்குப் பூசவும். தீரும். கை கண்டது. *(ஏடு.273-102)*

24. கரிசலாங்கண்ணிச்சாறு, கம்பந்திராய் வேர்ச்சாறு, கருடக் கொடி வேர்ச்சாறு, பூதகரப்பான் பட்டைச்சாறு ஆகிய சாறுகளை வகைக்கு 335மி.லி. வீதம் எடுத்து 1.3லி. ஆமணக்கு நெய்யில் சேர்த்து அதனுடன் பொரி காரம், வசம்பு, உள்ளி ஆகியவற்றை வகைக்கு 9கி. எடுத்து மேற்சொன்ன சாற்றை விட்டரைத்து சேர்த்து எரித்து பக்குவத்தில் வடித்து குழந்தையின் வயதுக்குத் தக்கபடி 8 - 15மி.லி. காலையில் மட்டும் கொடுத்து வர தொண்ணூற்றாறு வகை கரப்பானும் நீங்கி விடும். *(புத்.477-244)*

25. மணித்தக்காளி நுரைபீர்க்கு, பூவரசம் பட்டை, முருக்குப் பட்டை, புங்கம் பட்டை, ஈருள்ளி இவற்றைச் சமனெடுத்து வெளிச்செண்ணையில் அரைத்துக் குழப்பி மேலுக்குப் பூசவும். *(231(அ)-19)*

26. கற்றாழை, கண்டங்கத்திரி, தூதுவளை, செந்தொட்டி, செம்மு ள்ளி, கருநொச்சி, இண்டு, குட்டித்தக்காளி, நிலவாகை, கழற்சி, சங்கங்குப்பி, (சங்கு), வில்வம், ஈருள்ளி இவற்றின் சாறு வகைக்கு 335மி.லி. எடுத்துக் கொள்க. சிற்றாமணக்கெண்ணெய் 1.3லி. எடுத்துக் கொள்க. செங்கத்தாரிப்பட்டை, வாதமடக்கி வேர், கடுக்காய் வகைக்கு, 70கி. எடுத்துக் கொள்க. கருஞ்சீரகம் 8கி. எடுத்து மேற்சொன்னவற்றை அரைத்துப் போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து வைக்க. அதை 5-10மி.லி. வீதங் கொடுக்க வாதபித்த சிலேற்பன கரப்பான் முதலிய பதினெட்டும் தீரும். *(புத்.482-84-85)*

27. சத்திச்சாரணைக் கிழங்கு, சிற்றவரைக்கிழங்கு, செங்கத்தாரி வேர், வேலிப்பருத்தி வேர், அப்பைக்கோவைக்கிழங்கு இவற்றை வகைக்குச்

சமஅளவு எடுத்து அரைத்து எலுமிச்சங்காயளவு எடுத்துக் கொள்க. உள்ளிப்பூண்டு, வசம்பு, கம்பிப்பிசின், கார்போகவரிசி, கருஞ்சீரகம், கடுகுரோகணி, பூதக்கரப்பான் பட்டை இவற்றை வகைக்கு 4கி. எடுத்து நன்றாகத் தண்ணீர் விட்டு அரைத்துக்கொள்க. மணித்தக்காளிக்காய் 40கி. எடுக்க. சிற்றாமணக்கெண்ணெய் 1.3லி. எடுத்து மேற்சொன்ன விழுதைக் கலந்து கொள்க. கலவையைப் பக்குவமாக எரித்து வடித்திறக்கும் போது சிலந்திப்பூச்சியை 250மி.கி. போட்டு இறக்கி 5-10மி.லி. கொடுக்க பலவிதகரப்பான், கிரந்தி தீரும்.

*(சர.வை.மு-235)*

## *28. ஆதண்டை எண்ணெய்*

ஆதண்டை இலை, பூ, ஊமத்தை, புலித்துடக்கி, சாணாக்கி, கோழியவரை, நொச்சி, இண்டு, சங்கு, பிராய், சின்னி, தூதுவளை, கற்பூரவள்ளி, சிலந்தி நர்யகம், மணித்தக்காளி ஆகிய மூலிகைகளின் சமூலங்களை எடுத்திடித்து சாறு 2.6லி. எடுக்க. கொள்எண்ணெய் 1.3லி. எடுக்க. வெங்காயச்சாறு 675மி.லி. எடுக்க. உள்ளி, வசம்பு, அரத்தை, பூதக்கரப்பான், சதகுப்பை, பெருங்குரும்பை, மஞ்சள், மரமஞ்சள், குக்கில், திப்பிலி ஆகிய மருந்துச் சரக்குகளை வகைக்கு 35கி. எடுத்து சாறு கொண்டரைத்து எண்ணெயில் கலந்து எரித்து பதத்தில் வடித்து இறக்கவும்.

29. சிற்றாமணக்கெண்ணெய் 975மி.லி. சிறுசின்னி, முதியார் கூந்தல், சவுரிக் கொடி, சிறுசெருப்படை, நொச்சி, கிரந்தி நாயகம், சங்கங்குப்பி, மூக்கரைச்சாரணை, வெள்ளறுகு இவற்றின் சாறு வகைக்கு 335மி.லி. எடுக்க. அதில் கருஞ்சீரகம், நற்சீரகம், கடுகு ரோகணி, பூதகரப்பான்பட்டை, கண்டங்கத்திரி, கஞ்சாங்கோரை, வேம்பாடம்பட்டை, அரத்தை, சுக்கு. பரங்கிப்பட்டை, குமிழம் வேர், சுத்தித்த நேர்வாளம் இவற்றை வகைக்கு 17.5 கி. வீதம் எடுத்து அரைத்துப் போட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி, 5-10மி.லி கொடுக்க கரப்பான் அனைத்தும் தீரும். *(புத்.482-85)*

30. புங்கம்பட்டை, துருஞ்சிப்பட்டை, சங்கம் வேர்ப்பட்டை, சித்திரமூலவேர்ப்பட்டை, புலித்துடக்கிப் பட்டை, இவற்றை இடித்து பொடித்துக் கொள்க. செருப்படை, பெருங்கரந்தை, சிலந்தி நாயகம், கோழியவரை ஆகிய இந்நான்கு மூலிகைகளின் சாற்றை வகைக்கு 1.3லி. எடுக்க. விளக்கெண்ணெய் 1.3லி. எடுக்க. பூண்டு ஒன்று,

ஈரவெங்காயம் இடித்த தூள் எலுமிச்சங்காயளவு எடுத்து எண்ணெயில் கலந்து காய்ச்சி உள்ளுக்கு 5-10மி.லி. கொடுக்க கரப்பான் குணமாகும்.

*(ஏடு.273-86)*

31. விழுதிவேர், இலை, கொட்டைப்பாசி இலை, சங்கன் இலை, கையாந்தகரை இலை,செருப்படி, வெள்ளைப்பூண்டு, வசம்பு இவற்றை வகைக்கு 4கி. எடுத்து நறுக்கி 250மி.லி. விட்டு, வைத்தெரித்து மெழுகு பதமானபின் இறக்கிக் கொள்க. சூடு ஆறுமுன் குங்கிலியத்தைத் தூள் செய்து போட்டு குழப்பி 5-10மி.லி. அளவு கொடுக்கவும். இவ்வாறு 3 நாட்கள் கொடுக்க கரப்பான் தீரும்.

*(சர. வை.மு.-240)*

## வெளிப்பூச்சுத் தைல வகைகள்

### *1. பூவரசம்பட்டைத் தைலம்*

பூவரசம்பட்டை, செங்கத்தாரிப்பட்டை, பூதகரப்பான் பட்டை, கண்டங்கத்திரி வேர், நிலவாகை வேர், வெள்ளாட்டுப்பால், மிளகு, வசம்பு, சதகுப்பை, வலம்புரிக்காய், வெள்ளுள்ளி, பரங்கிப்பட்டை, கார்போகி, கருஞ்சீரகம் ஆகிய சரக்குகளுள் முதல் ஐந்தைக் குடிநீராகக் குறுக்கி அதனுடன் 1.3லி. வெள்ளாட்டின் பாலைக் கலந்து கொள்க. மிளகு, சதகுப்பை ஆகிய சரக்குகளை வகைக்கு 35கி. எடுத்து தாய்ப்பால் விட்டரைத்து மேலே சொன்ன குடிநீரில் கரைத்து 1.3லி. நல்லெண்ணெயையும் அல்லது விளக்கெண்ணெயைச் சேர்த்து எரித்து மெழுகு பதத்தில் வடித்து 5-10மி.லி. உடல் வன்மைக்குத் தக்கவாறு நோயின் வன்மையறிந்து உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசிவர கரப்பான் நீங்கும். தாய் பத்தியம் இருக்க.

*(புத்.476-118,482-85,477-242)(வை.சிந்-190)*

2. வெங்காயம், கருஞ்சீரகம், பூதகரப்பான் பட்டை, வட்டக் கிலுகிலுப்பை வேர், காட்டுப்பாகல்வேர், சதகுப்பை, வெள்ளைக் காக்கணான் வேர், தேவதாரச்சக்கை, வசம்பு, முட்சங்கனிலை, வெள்ளறுகு, பரங்கிச் சக்கை ஆகிய பன்னிரண்டு பொருட்களையும் வகைக்கு 9கி. எடுத்துக் கொண்டு 20 நேர்வாளப் பருப்பையும் எடுத்துக் கொள்க. இவற்றைச் சங்கங்குப்பிச்சாறு 1.3லி. எடுத்து அதிலரைக்க. சிற்றாமணக்கு எண்ணெய் 1.3லி. எடுத்து அதில் மேற்சொன்ன கலவையைக் கலந்து கதிர்ப்புடம் (சூரிய ஒளியில்)

வைத்து 15மி.லி. காலையில் மட்டும் உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசிவர அனைத்துக் கரப்பான்களும் நீங்கும்.

*(புத்.476-115,477-238-239,482-85)*

3. ஒரு அகன்ற பெரிய கரண்டியில் 250மி.லி. நல்லெண்ணெய் விட்டுக் கொள்க. 4கி. பொடித்த தாளகத்தையும் இரண்டு துண்டாகக் கத்தரித்த சேங்கொட்டை 10ஐயும் சேர்த்து எரிக்க. கொட்டைகள் மிதக்கும் சமயம் இத்தைலத்தை, கழுநீரும் சுத்தமான தண்ணீரும் சமமாகக் கலந்து வைத்திருக்கின்ற ஓர் அகன்ற பாத்திரத்தில் ஊற்றுக. மறுநாள் கோழியிறகால் மேலுள்ள எண்ணெயை வழித்து கரண்டியில் விட்டு நீர் சுண்டச் சிறிதுநேரம் காய்ச்சி பத்திரப்படுத்துக. இதனை ஆறாத விரணங்களுக்குத் தடவிவர விரைவில் குணமாகும்.

*(வை.சிந்-204)*

4. வேம்பாடம்பட்டை, கருஞ்சீரகம், ஈருள்ளி, செவ்வரளிப்பூ இவற்றைச் சம அளவெடுத்து பொடித்து 325மி.லி. நல்லெண்ணெயில் போட்டு, மூன்று நாள் வெயிலில் வைக்க. அதைக் கோழியிறகு கொண்டு கரப்பானில் தடவ ஆறாத புண், சிரங்கு நீங்கும். நான்காம் நாள் நல்லெண்ணெய் தடவி அரப்பிட்டு தலை குளிப்பாட்ட வேண்டும்.

*(ஏடு.257-13)*

5. மிளகு, வெள்ளுள்ளி, வசம்பு இவற்றை வகைக்கு 8கி. வெங்காயம் 17.5 கி. ஒரு பிடி நெல்லி வற்றல், பூவரசம்பூ சுட்டசாம்பல் ஒரு பிடி, இவற்றை எடுத்துக் கொள்ளவேண்டும். இச்சரக்குகளை ஆடுதீண்டாப் பாளைச் சாறுவிட்டரைத்து அதனை 500மி.லி. நல்லெண்ணெயில் கலந்து எரித்து பக்குவ பாகத்தில் வடித்து ஆற்றி கோழியிறகால் தோய்த்து குழந்தையின் இரு காதுக்குள்ளும் இரு துளிகள் விட்டு, மேலிலும் பூச கரப்பான் நீங்கும். *(புத்.476-109,477-242)*

6. நான்கு பெரிய தேங்காயை உடைத்து திருகிய பூவாக எடுத்து நீர் சேர்த்து பிழிந்தெடுத்துக் கொள்க. அப்பாலுடன் கல்லுப்பு, மஞ்சள், கத்தூரி மஞ்சள், கருஞ்சீரகம் இவற்றை வகைக்கு 9கி. எடுத்து அம்மியிலிட்டு சிறிதளவு பால் விட்டு மைபோலரைத்துக் கொள்க. அரைத்த விழுதைப் பாலில் கலக்கி சுத்தமான இரும்புக் கடாயில் விட்டு அடுப்பேற்றி சிறு தீயில் எரிக்க. எண்ணெய் பிரியும் போது பக்குவத்துடன் வடித்து பத்திரப்படுத்துக.

சொறி, சிரங்கு, கரப்பான் முதலியவற்றின் மீது இத்தைலத்தைப் பூசித் தேய்க்க. அதன் மீது மாம்பட்டையை நீர் விட்டரைத்துப் பூசி 3 மணி நேரத்திற்குப்பின் குழந்தையைக் குளிப்பாட்டவும். இவ்வாறு 3 அல்லது 5 நாட்கள் செய்ய சொறி, சிரங்கு, கரப்பான் தீரும்.

*(வை.சிந்-205)*

7. தேங்காயெண்ணெய், 325மி.லி., கழற்சியிலை 1.3லி., காரையிலை, பேராயிலை இவற்றைச் சமனெடுத்துத் தேவையான அளவு தேங்காயெண்ணெயிலெரித்து அரக்குப் பதத்தில் வடித்து உள்ளுக்குக் கொடுக்கவும். எண்ணெயை வடித்து மீதமுள்ள கருக்கை அரைத்து கரப்பானின் மேல் பூசவும். *(ஏடு.23 -19)*

### *8. பூதகரப்பான் பட்டைஎண்ணெய்*

பூதகரப்பான் பட்டை, பூவரசம்பட்டை, நுணாப்பட்டை, கரப்பான் பட்டை, இலுப்பைக்கட்டி ஆகிய இவ்வைந்து பொருட்களையும் அதற்குச் சரிசமமாக எடுத்துச் சுட்டு சாம்பலாக்கி நல்லெண்ணெயில் கூட்டிக் குழப்பி கரப்பான் மேல் பூச கரப்பான் நீங்கும். காலையிலும் மாலையிலும் பூசி வெந்நீரில் குளிப்பாட்ட வேண்டும். *(புத்.477-241, 476-109)*

### *9. விடதாரி எண்ணெய்*

விடதாரி இலைக்கள்ளி, திருகுக்கள்ளி, சதுரக்கள்ளி, மாவிலங்கு, தழுதாழை, கொம்மட்டி, குப்பைமேனி, அவுரி, பொடுதலை, நிலக்கடம்பு, ஆட்டாங்கொடி, நொச்சி, ஆமணக்கு, இண்டங் கொழுந்து ஆகிய பதினைந்து பொருட்களின் சாறும் வகைக்கு 335மி.லி. வீதம் எடுத்து அதில் 335மி.லி. நல்லெண்ணெயைக் கலந்து அதில் சீரகம், கடுகு, கோரைக்கிழங்கு, இலிங்கம், குந்திரிக்கம், மைசாட்சி, முக்கடுகு, கருஞ்சீரகம், தேவதாரம் ஆகிய ஒன்பது பொருட்களையும் வகைக்கு 35கி. பொடித்துத் தூவிக் கலந்து எரித்து பக்குவத்தில் வடித்து நோயின் வன்மை, உடல்வன்மை அறிந்து தக்க அளவு மேல்பூச வேண்டிய நாள்வரை பூசிவர கரப்பான் அனைத்தும் நீங்கும்.

*(புத்.476-119,477-243,482-900)*

10. வெற்றிலை, மிளகுத்தக்காளி இவற்றின் சாறு வகைக்கு 1.3லி. எருக்கம்பழுப்பு, நாய்வேளை இவற்றின் சாறு வகைக்கு, 675மி.லி., நல்லெண்ணெய் 1.3லி. இவற்றைக் கலந்து, அதில் சுக்கு, மிளகு,

திப்பிலி, வசம்பு இவற்றை வகைக்கு 35கி. எடுத்து அரைத்துப் போட்டுக் காய்ச்சி கரப்பான் மேல் பூச தீரும்.

முருங்கைப்பூ, எருக்கம்பூ, முத்தெருக்கஞ்செவி, கார்த்திகைக் கிழங்கு இவற்றை வகைக்கு 10கி. எடுத்து அரைத்து 670மி.லி. பசுவின் நெய்யில் போட்டுக் காய்ச்சி சிவந்த பதத்தில் வடித்து கசடை நீக்கி எண்ணெயைக் கண்டத்திற்குக் கீழ் பூசி மாலையில் அரப்பிட்டுக் குளிக்க கரப்பான் தீரும். *(புத்.482-92)*

11. புளியம் இலை, ஆவாரை வேர்ப்பட்டை இவற்றை வகைக்கு ஒருபிடி எடுக்க. கருஞ்சீரகம், வசம்பு சுட்டகரி, கார்போகஅரிசி இவற்றை வகைக்கு 50கி. எடுக்க. இவற்றை ஆடுதின்னாப் பாளைச்சாற்றில் அரைத்து 250மி.லி. எண்ணெயில் கலக்கி 3 நாள் வெய்யிலில் வைத்தெடுக்க. அதனை, சொறி, சிரங்கு, கரப்பான் உள்ள இடத்தில் பூசித் தேய்க்கவும். 3 மணி நேரத்திற்குப் பின் அரப்பிட்டு குளிப்பாட்டவும். இவ்வாறு 3 முதல் 5 நாட்கள் செய்ய கரப்பான், சொறி, சிரங்கு தீரும். *(வை.சிந்-205)*

12. கெந்தி, துருசு, துத்தம், மனோசிலை இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. சாம்பிராணி, கருஞ்சீரகம் இவற்றையும் வகைக்கு 5கி. எடுக்க. இலிங்கத்தை 2.5கி. எடுக்க. இவை அனைத்தையும் சுத்தி செய்து சாந்துபோல அரைத்துப் பொடி செய்து வெண்ணெயிலிட்டு மைபோலாட்டி பூச சிரங்கு, தீராத கரப்பான் எல்லாந்தீரும்.
*(ஏடு.601-108)*

13. உருக்கின தேங்காய் நெய் 1.3லி. கருவையிலைச் சாறு 1.3லி. எடுத்துக்கொள்க. கருஞ்சீரகம், கார்கோலரிசி, கத்தூரிமஞ்சள், வேம்பாடம்பட்டை, துத்தம், துருசு, வசம்பு, கெந்தகம் இவற்றை வகைக்கு 35கி. எடுத்து, இவை எல்லாவற்றையும் அரைத்து முன் சொன்ன சாற்றுடன் கலக்கிக் கொள்க. வெங்காயம் 2.6லி. எடுத்து அரிந்து அதனுடன் சேர்த்து காய்ச்சிக் கொள்க. வெங்காயம் வெந்து மிதக்கும் தருவாயில் வடித்துக் கொள்க. அதனைத் தொட்டுப் பூச கரப்பான் நீங்கும். *(ஏடு.601-108)*

### *கரப்பான் வகை விளக்கம்*

பிள்ளைப்பிணி தொடர்பான அச்சு நூல்கள், ஓலைச்சுவடிகள், கையெழுத்துப்படிகள் ஆகியவற்றில் காணப்பட்ட கரப்பான் வகைகளுள்

குறிகுணம் சொல்லப்பட்ட கரப்பான், குறிகுணத்தோடு மருத்துவம் சொல்லப்பட்ட கரப்பான் ஆகியவை இங்கு அகரமுறையில் விளக்கம் தரப்பட்டுள்ளன.

அத்திக்கரப்பான், அரிகரப்பான், ஊதுகரப்பான், ஓடுகரப்பான், கண்டகரப்பான், கட்டுக்கரப்பான், கருங்கரப்பான், கிரந்தி கரப்பான், கொள்ளிகரப்பான், சட்டைக்கரப்பான், சிலேத்தும கரப்பான், சிறுசிரங்கு சொறி, சுரகர்ணன் கரப்பான், சுரகரப்பான், சூலைகரப்பான், செங்கரப்பான், சொறிகுட்டகரப்பான், தோடக்கரப்பான், நீர் கரப்பான், படர்கரப்பான், பாலகரப்பான், பித்தகரப்பான், புண்கரப்பான், பெருங்கரப்பான், பொரிகரப்பான், மண்டைகரப்பான், வறள் கரப்பான், வறட்சிக்கரப்பான், வாத கரப்பான், விஷக்கரப்பான், வீங்குகரப்பான், வெடிகரப்பான் எனும் கரப்பான்களின் விளக்கமும் செவ்வாப்பு, உடுப்புச் செவ்வாப்பு, கட்டுச்செவ்வாப்பு, நெத்திச் செவ்வாப்பு, பொரி செவ்வாப்பு ஆகிய செவ்வாப்புகளின் விளக்கமும் இங்குத் தரப்படுகின்றன.

### *1) அத்திக்கரப்பான் - குறிகுணங்கள்*

உடம்பெல்லாம் நீர் ஊறி அத்திக்காய் போல் இருத்தல், புண்ணிலிருந்து நீர் சொரிதல், சீழ் வருதல், காய்ச்சல் உண்டாதல். இவையே அத்திக் கரப்பானின் குறிகுணங்கள். *(கை.பி.98, 152)*

### *எண்ணெய் வகைகள்*

1. துத்தம், துருசு, உள்ளி, சீரகம், மிளகு, சந்தனம், கோட்டம், (ஊழலாற்றி) துளசி இவற்றை எடுத்துக் கொள்க. செம்பொன் நெருஞ்சியின் சாறு 1.3லி. தேவையான் அளவு நெய் இவற்றை இக்கலவையில் போட்டுக் காய்ச்சிக் கொடுக்க அத்திக் கரப்பான் நீங்கிவிடும். *(கை.பி.98,152-153)*

2. சிறியாநங்கை, உள்ளி இவற்றைப் பசுவின் நெய்யில் கூட்டிக் காய்ச்சி இறுத்து கொடுக்க கரப்பான் நீங்கும். *(கை.பி.98,153)*

### *2) அரிகரப்பான் - குறிகுணங்கள்*

இலிங்கப்புற்று, யோனிப்புற்று, உடலில் ஆறாப்புண், அரிப்பு, உடலுருவு மாறல் இக்குறிகளுடன் இரு துடைகளின் இடையில் மிகுந்த புண்ணாகி அதிலிருந்து நீர்வடியும், புண்ணில் தசை மிகக் கரைந்து வலியுண்டாகும். நாட்பட இருந்து உடல்வாடும். இளைக்கும் ஆகிய இக்குறிகுணங்கள் ஏற்படும். *(புத்.476-111,477-230,482-87)*

## எண்ணெய் வகைகள்

### *1. அரிகரப்பானுக்குக் கரந்தை எண்ணெய்*

கொட்டைக் கரந்தை வேர், செருப்படை வேர், பசரியிலை, நீலிவேர்ப் பட்டை, கோடகசாலை வேர்ப்பட்டை, மிளகரணை வேர்ப்பட்டை, உத்தாமணிச்சமூலம், கரிசலாங்கண்ணிச்சமூலம், பெருங்களா வேர்ப்பட்டை, ஆவாரைவேர், பொன்னாங்கண்ணிவேர், பிரமட்டைவேர், சிறுகீரை வேர், வட்டத்திருப்பி வேர், இண்டங்கொடியின் வேர்ப்பட்டை, வசம்பு ஆகிய 16 பொருட்களையும் 18கி. எடுத்துக் கொண்டு அத்துடன் 325மி.லி. சிற்றாமணக்கு நெய் சேர்த்துக் காய்ச்சி வடித்து 16 மி.லி வீதம் ஏழுநாள் கொடுக்க அரிகரப்பான் நீங்கும்.

*(புத்.476-111-112,477-230-231,482-87)*

### *2. மேல்பூச்சு எண்ணெய்*

உள்ளி, கடுக்காய், எருக்கன்பட்டை, மருக்காரை வேர்ப்பட்டை, வட்டக்கிலுகிலுப்பை, உத்தாமணி வேர்ப்பட்டை ஆகிய சரக்குப் பொருட்களை 18 கி. எடுத்துக்கொண்டு அதனைப் பொடித்து நல்லெண்ணெய் 524 மி.லி. எடுத்து அதில் போட்டுக் காய்ச்சிக் கொள்க. அதனை ஆறு வேளைக்குத் துவாலையிட அரிகரப்பான் நீங்கும். *(புத்.482-88,476-112,477-231)*

### *3. வனசபத்திர எண்ணெய்*

தாமரைச்சாறு, கழுதைலத்திச்சாறு, கருநொச்சிச்சாறு, சங்கங்குப்பிச் சாறு ஆகிய நான்கு பொருட்களையும் வகைக்கு 70கி. எடுத்து அத்துடன் 35கி. கருஞ்சீரகத்தையும் 140கி. ஆமணக்கு நெய்யையும் கூட்டிக் காய்ச்சி வடித்து துட்டெடை கொடுக்க அரிகரப்பான் நீங்கும்.

*(புத்.477-231)(கை.பி.போ.161)*

### *3) ஊதுகரப்பான் - குறிகுணங்கள்*

குளிர்க் காய்ச்சல் உண்டாகும். பாதம் முதல் தலை வரை பருத்து விடும். தலை வீங்கி விடும். உடம்பு முழுதும் ஊதிவிடும். சொறி ஏற்படும். காது, கண் இவை வீங்கிக் கொள்ளும். சுரம் ஏற்படும். இவையே ஊதுகரப்பானின் குறிகுணங்கள். *(ஏடு.424-31)*

கட்டிகள் உண்டாகும். பிணம் போன்று உடல் செயலற்றுக் காணப்படும். மூக்கில் புண்ணுண்டாகி அரிக்கும். ஆகிய

இக்குறிகுணங்கள் ஊது கரப்பானுக்குத் தோன்றும்.

*(புத்.476-112,477-231-232)*

### குடிநீர்

இலுப்பையின் சருகை எரித்து அதைச் சாம்பலாக்கிக் கொள்ளவேண்டும். கரப்பான் பட்டையை அதனுடன் போட்டு தண்ணீர் வார்த்து காய்ச்சி குடிக்க ஊது கரப்பானில் ஏற்படும் ஊதல், வீக்கம் போன்றவை தீரும். *(ஏடு.424-31)*

### 4) ஓடு கரப்பான் - குறிகுணம்

கீல்களில் வீக்கங்கண்டு பலத்த நோயுடன் நீட்டவும், முடக்கவும் முடியாமல் செய்யும். நரம்பு மண்டலம் முற்றும் வலித்தலுடன் குத்தலுங்காணும். மலம் சிக்கும். உடலில் தடிப்பு கண்டு அரித்து பிறகு வீங்கும். இக்குறிகுணங்கள் ஓடு கரப்பானுக்கு ஏற்படும்.

*ை்க.பி(பால.வை.போதினி-168) (புத்.477-234)*

### எண்ணெய் வகைகள்

1. பெருமருந்துப்பட்டைச்சாறு, குவலம்பட்டைச்சாறு, எலியாமணக்கிலைச்சாறு, வேம்பாடம்பட்டைச்சாறு, கோமூத்திரம் இவை வகைக்கு 200மி.லி. எடுக்க; சிற்றாமணக்கெண்ணெய் 280மி.லி. எடுக்க; மேற்கூறிய திரவங்களை ஒன்றாய்க் கலந்து சிறு தீயாக எரித்துக் கடுகுதிரள் பதத்தில் இறக்கி வடிகட்டி திப்பி நீக்கி பத்திரப்படுத்துக. *(கை.பி.பா.வை.போதினி-168)*

2. ஆமணக்கெண்ணெய், ஈரவெங்காயம் 1.3லி. சங்கங்குப்பிச்சாறு 2.6லி., பூதகரப்பான்பட்டை 8கி., வசம்பு 8கி. இவையெல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து சூரியபுடமிட்டு வைத்து (நண்பகல் மட்டும் வெய்யிலிலிருக்க), எண்ணெய் நுரைத்துப் பொங்கும். அந்த பதம் அறிந்தெடுத்து சிறு கனமாக உள்ள விறகிட்டெரித்து வடித்துக் கொண்டு உள்ளுக்குக் காசெடை (4கி.) அளவு கொடுக்கவும். கசப்பு, புளிப்பு தவிர்க்கவும். *(ஏடு.612-20)*

### வேது வகைகள்

1) மேற்கூறிய எண்ணெயைப் பயன்படுத்தும்போது பெருமருந்துப் பட்டை, குவளம்பட்டை, எலியாமணக்கிலை, வேம்பாடம்பட்டை ஆகிய சரக்குகளை வெயிலில் உலர்த்திப் பொடித்து நெருப்பிலிட்டுப் புகைத்து வேது பிடிக்க ஓடுகரப்பான் தீரும்.*(கைபி.பால.வை.போ.168)*

2) பெருமருந்துப்பட்டை, வில்வப்பட்டை, எலியாமணக்கிலை, வேம்பின் நீர்ப்பட்டை ஆகிய இந்நான்கு பொருட்களையும் சிறிதெடுத்து இடித்து பசுநீர் சேர்த்துக்காய்ச்சி வேது பிடிக்க ஓடுகரப்பான் தீரும்.

*(புத்.477-234)*

### *5) கட்டுக்கரப்பான் - குறிகுணங்கள்*

தலை கனத்துக் கொள்ளும். சுரமும் ஏற்படும். கன்னம், கழுத்து, அடிவயிறு, கெண்டைக்கால், துடை போன்றவற்றில் துண்டு துண்டாய் கட்டிக் கொள்ளும். இதுவே கட்டுக்கரப்பானின் குறிகுணமாகும்.

*(ஏடு.424-32)*

#### *எண்ணெய்*

சத்திச்சாரணையின்வேர், அசுவகந்தம், கொல்லங்கோவை, புளியரணை, நீலி இவற்றைச்சாறு எடுத்து அதனுடன் விளக்கெண்ணெய் கூட்டி நன்றாகக் காய்ச்சி பக்குவபதத்துடன் இறக்கி வைத்து உள்ளங்கையிலிட்டு அருந்த, கட்டுக் கரப்பான் போகும்.

*(ஏடு.424-33)*

### *6) கண்டகரப்பான் - குறிகுணங்கள்*

தலை வறண்டு விடுதல், இருமல் வருதல், பித்தம் அதிகமாதல், காதில் தினவெடுத்தல், சொறியேற்படுதல் ஆகியவை கண்ட கரப்பானின் குறிகுணங்கள்.

தலைகனத்து காது, மண்டை தடித்து வலித்தல், குளிர்தல், நாதடித்தல், உடம்பு அரித்தல், மயிர் கூச்செறிதல், கண் கூசுதல், தொண்டை காகரத்தல், முள் போல் குத்துதல். *(ஏடு.233-168)*

#### *எண்ணெய்*

ஓரிதழ்த்தாமரை, கோரைக்கிழங்கு, நன்னாரி, சாரணை, சுக்கு. மிளகு, திப்பிலி, கருஞ்சீரகம், வசம்பு, பூண்டு, கையாந்தகரை இவற்றைச் சமனெடுத்து வேப்பம்பட்டைத் தோல் நீரால் அரைத்து தேவையான அளவு தேங்காய் எண்ணெயுடன் சேர்த்தெரித்து பக்குவத்தில் வடித்து 5-10மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுக்க கண்டகரப்பான் தீரும்.

*(ஏடு.42-235)*

### *7) கருங்கரப்பான் - குறிகுணங்கள்*

உடலெல்லாம் காக்கையைப் போல கறுப்பாக ஆகும். கொப்பளித்துவிடும்;சுரமேற்படும்; கால், கை வீங்கும்; சொறி, நமைச்சல்

அதிகமாக ஏற்படும். குழந்தை அழும்; உடல் சூடாக இருக்கும்; பால் குடிக்காது; உடல் நிறம் மாறும்; நரம்பு பசுமையாக வெளியில் தெரியும். முகம் ஊதி, குழந்தை கையில் தங்காது; முறுக்கும்; துள்ளி விழும். கால்கள் வீங்கும். *(புத்.482-86,476-111,477-235) (ஏடு.424-27)*

### எண்ணெய் வகைகள்

1. கருநொச்சிச்சாறு, செருப்படையிலைச் சாறு, குழிமீட்டான் சாறு, வெட்பாலைச்சாறு, கருஞ்சீரகம் இவற்றை எடுத்துக் கொள்க. ஆமணக்கெண்ணெயைச்சேர்த்துக் கொள்க. அடுப்பில் தீ வைத்தெரித்து பதமாகக் காய்ச்சி வடித்தெடுத்து உள்ளங்கையில் ஊற்றி நக்க கருங்கரப்பான் நீங்கி விடும். *(ஏடு.424-28)*

2. வரியுடைய கொட்டைக் கரந்தை வேர், செருப்படையின் வேர், அவுரியிலை, தும்பை, முத்தக்காசு, கோடகசாலை பட்டையின்தோல், மிளகரணை, வேலிப்பருத்தி, கரிசாலை, பெருங்களாப்பட்டை வேர், ஆரைவேர், காணிவேர்ப்பட்டை, விளாம்பட்டை, சிறுகீரையின் வேர், வட்டத்திருப்பியின் வேர், புலித்துடக்கிப் பட்டைத்தோல் இவை வகைக்கு 18கி. எடுத்துக் கொள். வசம்பு 18கி., ஆமணக்கெண்ணெய் 335மி.லி. எடுக்க. மேற்சொன்ன சரக்கு வகைகளை இடித்துத் தூளாக்கி எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடிகட்டி இறுத்து வைத்துக் கொள்க. அதனை ஏழுநாட்களுக்குக் கரண்டி வீதம் கொடுக்க கருங்கரப்பான் நீங்கும். *(புத்.572-34-35)*

3. மிளகு, துருசு, கடுக்காய், கோட்டம், நத்தைச் சூரி, திப்பிலி, கரியசீரகம், ஓமம், கஞ்சாங்கோரை, சிறிய ஆவரை, பெரிய ஆவரை, சிவனார் வேம்பு, வேலிப்பருத்தி இவற்றின் வேரைச் சம எடை எடுத்து இடித்து விளக்கெண்ணெயில் போட்டுக் காய்ச்சிக் கொடுக்க கருங்கரப்பான் நீங்கும். *(புத்.482-86)*

### 8) கழலைக்கரப்பானுக்கு எண்ணெய்

அறுகம்புல் சாறு 1.3லி., கோட்டம், சந்தனம், அதிமதுரம், நன்னாரிவேர், வெள்ளறுகு, தாமரை முகிழ், நாய்ப்பாகல் முகிழ் இவற்றை வகைக்கு 8கி., நல்லெண்ணெய், பசுவின்பால் இவற்றை வகைக்கு 1.3லி எடுக்க. திரவங்களை ஒன்று சேர்த்து அதில் சரக்குகளைப் பொடித்துக் கலந்து காய்ச்சி வடித்து கழலைக் கரப்பான் மீது பூச தீரும். *(ஏடு.185-89)*

### *9) கிரந்திக் கரப்பான்-குறிகுணங்கள்*

குழந்தைகளின் நெஞ்சைப் பேசவிடாமலும், பாலை உண்ண விடாமலும் செய்தல், நெஞ்சு வீங்குதல், மேல்மூச்சு வாங்குதல், உடம்பு கனமாதல், நிறம் வேறாதல், தொண்டை கட்டுதல், உடல் நோகல், இருமல் கண்டு தாழொலியாக அழுதல், குரல் கம்மல் போன்ற குறிகுணங்கள் காணப்பட்டால் அது கிரந்திக் கரப்பான்.

*(புத்.477-245) (கை.பி.பா.வை.போதினி.154)*

## எண்ணெய் வகைகள்

### *1. பூவரசு எண்ணெய்*

பூவரசம்பட்டைச்சாறு, பசுவின்பால், கருநொச்சிச்சாறு ஆகிய மூன்றை வகைக்கு 70கி. எடுக்க; நிலக்கடம்பு வேர், கருஞ்சீரகம் இவற்றை வகைக்கு 35கி. எடுக்க; அத்துடன் 9கி வசம்பு, 4கி., கோரோசனை, 280கி. ஆமணக்கு நெய் எடுத்துக் கொள்க. மேற்கூறப்பட்ட சாறுகளையும், பாலையும் ஒரு மண் சட்டியிலூற்றி மற்ற சரக்குகளைப் பொடிசெய்து அதிலிட்டு எரித்துப் பக்குவபாகத்தில் இறக்கி காலை, மாலை இருவேளைக்கு காசெடை (4.4கி.) கொடுக்க கிரந்திக் கரப்பான் தீரும்.

*(புத்.477-245)*

2. கருஞ்சீரகம் 70கி., வசம்பு 9கி. எடுத்து இடித்து தண்ணீர் வார்த்தரைத்து அதனுடன் பூவரசம் பட்டைச்சாறு, வெண்ணொச்சிச் சாறு, கருநொச்சிச்சாறு ஆகிய மூன்று வகைச் சாறுகளையும் அதில் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்துக் கடுகுதிரள் பதத்திலிறக்கி வடிகட்டி திப்பி நீக்கி, வேற்று பாத்திரத்தில் எடுத்து வைக்க வேண்டும். அதில் கோரோசனையைப் பொடித்துத் தூவி நன்றாகக் கலக்கிப் பத்திரப்படுத்த வேண்டும். மூன்று அல்லது ஐந்து நாட்கள் கொடுக்கலாம். பாலூட்டும் தாய், உப்பு, புளி, புகை இவற்றை விலக்கல் நன்று. உப்பை வறுத்தும், புளியைச் சுட்டும் உபயோகிக்கலாம்.

*(கை.பி.போதினி-154-155)*

### *10) கொள்ளிக்கரப்பான் - குறிகுணங்கள்*

இது தீராத நோய் வகையைச் சேர்ந்தது. வயிறு வீங்கல், மலங்கட்டல், இளைப்புண்டாதல், குரல்கம்மல், விக்கல் ஆகிய இக்குறிகுணங்கள் காணப்பட்டால் கொள்ளிக்கரப்பான் ஆகும். இக்கொடிய நோயால் பீடிக்கப்படும் குழந்தைகள் பிழைப்பதரிது.

உடம்பெல்லாம் கொப்புளங்கள் கொள்ளு வறுத்தாற்போல் தோன்றும்; முகம் வாடும், உடலெல்லாம் எரியும். *(ஏடு.424-30)*

வயிறு வீங்கி விடும். தொண்டையடைக்கும். இருமல் ஏற்படும். இளைப்புண்டாகும். குரல் சிறிதாக ஆகிவிடும். உடலில் எரிவு ஏற்படும். வயிறு கனத்து விக்கலுண்டாகும். இக்குணங்கள் ஏற்பட்ட குழந்தை பிழைப்பது கடினமாகும்.

தேகமெல்லாம் கொப்புளங்கள் ஏற்படும். அதில் இரத்தம் கோர்த்துக் கொள்ளும். மலங்கட்டி, பழுப்பாக இருக்கும். *(கை.பி.98-152) (புத்.477-236) (ஏடு.435-25,424-30,601-21)*

### *குடிநீர்*

வேப்பம்பட்டை, சுண்டைவேர், புடல், ஆடாதோடைச்சாறு, பொன்நெருஞ்சி, தெற்றி, குக்கில், பரங்கிப்பட்டை, மஞ்சள், சுக்கு, சீரகம், திரிபலை, மாமரப்பட்டை இவை வகைக்கு 5கி. எடுத்துக் கொண்டு பொடித்து குடிநீராக்கி அதில் தேன்விட்டு குடிக்க கொள்ளிக் கரப்பான் நீங்கும். *(கை.பி.98-152)*

### *எண்ணெய் வகைகள்*

1. செங்கத்தாரி, கருநொச்சி. முடக்கொத்தான், கழற்சி, புங்கு, சங்கங்குப்பி, கிரந்திநாயகம், சிறுசெருப்படை, முதியார்கூந்தல், உத்தாமணி, கொடிவேலி, வெள்ளறுகு, வேம்பாடம்பட்டை, சிவனார் வேம்பு, சிவதை, கண்டங்கத்திரி, பூத கரப்பான்பட்டை, சீரகம், கருஞ்சீரகம் இவை அனைத்தையும் சமவெடை எடுத்து விளக்கெண்ணெயில் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொடுக்க கொள்ளிக்கரப்பான் நீங்கும். *(புத்.482-91)*

2. ஆமணக்கெண்ணெய், ஈரவெங்காயம் 1.3லி. சங்கங்குப்பிச்சாறு 2.6லி., பூதகரப்பான்பட்டை 8கி. வசம்பு 8கி. இவையெல்லாவற்றையும் ஒன்று சேர்த்து சூரிய புடமிட்டு வைத்து நண்பகலில் மட்டும் வெய்யிலிலிருக்கச் செய்யவேண்டும். எண்ணெய் நுரைத்துப் பொங்கும் பதம் பார்த்தறிந்து எடுத்து சிறுகன விறகிட்டெரித்து வடித்துக் கொள்க. அதனைக் காசளவு (4கி.) கொடுக்கவும். கசப்பு, புளிப்பு தவிர்க்க. *(ஏடு.612-20)*

*மருந்து*

முயல், வெள்ளாட்டுப் புழுக்கையைச் சுட்டுப் பூச கொள்ளிக்கரப்பான் தீரும். *(ஏடு.424-30)*

## *11) சட்டைக்கரப்பான் - குறிகுணங்கள்*

சட்டைபோட்டாற்போல உடம்பெல்லாம் தடித்து விடும். திடீரென தடிப்பு மாறி தீட்டிய அரிசிபோல் உடம்பெங்குமிருக்கும்; சொறி ஏற்படும். உடல் எல்லாம் கொப்பளம் ஏற்படும். *(ஏடு.424-28)*

கீல்களில் வலித்தல், பிறகு கள்ளிப்பூவைப் போல் உடம்பெல்லாம் கிளைத்தல், அவற்றிலிருந்து பனித்துளிபோல் நீர் கசிதல், உடல் வெப்பமாயிருத்தல், மலஞ்சிக்குதல், தலை நோதல், சோற்றில் வெறுப்பு ஆகிய குறி குணங்கள் காணப்பட்டால் சட்டைக்கரப்பான் ஆகும்.
*(கை.பி.பால.வை.போதினி-169) (புத்.477-234)*

*குடிநீர்*

தவசி முருங்கையின் சமூலத்தைக் கொண்டு வந்து நறுக்கிப் போட்டு குடிநீராய்க் காய்ச்சி பக்குவத்தில் இறக்கிக் கொடுக்க சட்டைக்கரப்பான் நீங்கும். *(ஏடு.424-28)*

## எண்ணெய் வகைகள்

### *1. சங்கங்குப்பி எண்ணெய்*

சங்கங்குப்பியிலைச்சாறு, ஊழலாற்றிப் பட்டைச் சாறு, நிலக்கடம்புச் சாறு, குவளையிலைச்சாறு, வேம்பின் பட்டைச்சாறு, இவை வகைக்கு 335மி.லி. எடுத்து அத்துடன் 35கி. ஆட்டுப்புழுக்கையும், 280கி. ஆமணக்கு எண்ணெயும் சேர்த்துக் கலந்தெடுத்துப் பக்குவமாக வடித்தெடுத்து அதனைக் காசெடை (4கி.) உட்கொள்ள சட்டைக்கரப்பான் தீரும். *(புத்.477-234)*

2. வெள்ளாட்டுப் புழுக்கையை 35கி. எடுத்து பொடித்துக் கொள்க. அதனுடன் 280கி. சிற்றாமணக்கெண்ணெயையும் எடுக்க. வகைக்கு 168மி.கி. சங்கங்குப்பிச்சாறு, பூவரசம்பட்டைச்சாறு, ஊழலாற்றிச் சாறு, நிலக்கடம்புச்சாறு, குவளைப் பட்டைச் சாறு, வேப்பம்பட்டைச்சாறு ஆகியவற்றைக் கலந்து அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்துக் கடுகுதிரள் பதத்தில் இறக்கி வடிகட்டி வைத்துக்கொள்க. அதனை 4கி. கொடுக்க

சட்டைக்கரப்பான் தீரும். நோய்க்குத் தகுந்தபடி உப்பு, புளியை நீக்கவேண்டும். ஒவ்வாமை ஏற்படின் உப்பை வறுத்தும் புளியைச் சுட்டும், சேர்த்து வரவேண்டும். *(கை.பி.பால.வை.போதினி-169)*

### *பொடுகிற்கு எண்ணெய்*

மிளகு. வசம்பு இவற்றைச் சமமாய் எடுத்துப் பொடித்து நல்லெண்ணெயில் கலந்து மூன்று நாள் தவறாமல் சூரிய ஒளியில் வைக்க. அவ்வெண்ணையை எடுத்து இறுத்து தலைப்பொடுகிற்குப் போட தீர்ந்துவிடும். *(கை.பி.98-35) (ஏடு.109-36)*

### *12) சிலேத்தும கரப்பான் - குறிகுணங்கள்*

வாயில் பேசமுடியாதபடி புண்ணாகும். அப்புண்கள் நீர்கொண்டு திரளும். அவை ஒரு வகையாக கடுக்கும். நெஞ்சு சரிவரப் பேசவொட்டாமல் அடைக்கும். குரல் கம்மிப்போதல், அதுவுமன்றி மார்படைக்கும். நெஞ்சிலும் மார்பிலும் உள்ளே புண்ணுண்டாகும். புண்கள் நீர் கொண்டு திரளல், தலை வலிக்கும் உடல் வெளுத்துப்போதல், ஈளை, இருமலுண்டாதல், காதிரைச்சல். *(புத்.476-109,477-230) (சர.வை.மு-35) (ஏடு.233-170)*

### *நன்னாரி எண்ணெய்*

நன்னாரி வேர்ப்பட்டையும், வேம்பாடம்பட்டையும் வகைக்கு 35கி. எடுக்க. புங்கம்பூ, நிலக்கடம்பு இலை இவற்றின் சாறு வகைக்கு 70கி. கம்பிப் பிசின், கத்தூரி மஞ்சள் இவற்றின் பொடி வகைக்கு 17.5கி., ஆமணக்கெண்ணெய் 280கி. எடுத்துக்கொள்க. இவையனைத்தையும் ஒன்று சேர்த்து எரித்துப் பக்குவமாக வடித்து அதைக் காலை, மாலை இரு வேளையிலும் காசெடை (4கி) அளவு கொடுக்க ஐயக்கரப்பான் நீங்கும். *(புத்.477-230) (கை.பி.பா.போதினி-158)*

### *13) சிறு சிரங்கு கரப்பான் - சாறு*

கொடிக்கள்ளியை வதக்கி பிழிந்து கொண்டு, அச்சாற்றைக் குழந்தைக்கு மூன்று நாள் உள்ளுக்குக்கொடுக்க சிரங்கொடு சொறியும் போகும். *(புத்.476-119,477-246)*

### *சிறுசிரங்குக்குத் தேங்காயெண்ணெய்*

காட்டுச் சீரகம், கார்போகரிசி, கத்தூரி மஞ்சள், ஏலம், அரிதகி,

(கடுக்காய்) நீரடிமுத்து இவை ஆறு சரக்குகளையும் சமவெடையாக எடுத்து நன்கு பொடித்துக் கொள்க. அப்பொடியெடைக்குச் சமஅளவாய் மிளகை எடுத்துக் கொள்க. இவை அனைத்தையும் ஊமத்தங்கா யொன்றை எடுத்து அதனுள் திணிக்கவேண்டும். அதனை ஒன்றரை எரு வைத்துப் புட மிட வேண்டும். ஆறிய பிறகு முற்கூறிய பொடி திணிக்கப்பட்ட கண்டத்தை எடுத்து அதனைத் தேங்காயெண்ணெய் விட்டு குழிக்கல்லில் இட்டு ஆட்டிக் கொள்ளவேண்டும். அதனை எடுத்து சூரியனின் முன் மூன்று நாள் வைத்துக் காட்டி எடுத்து வைத்துக்கொள்க. அதனைச் சிரங்கின் மேல் தடவிவிட சொறி நமைச்சல் போய்விடும். *(புத்.476-119-120,477-247)*

### *14) சுரகரப்பான்-குறிகுணங்கள்*

சுரமொடு இருமல் உண்டாகும். சுரம் விட்டபிறகு தேகங்குளிரும். கை முதலாக உடல் முழுவதும் தடிப்பாகும். உடம்பில் ஊறல் ஏற்படும். சொறி ஏற்படும். குழந்தையின் வாய் புண்ணாகும். நுரை நுரையாய்த்தள்ளி கக்கும். *(கை.பி.98-156)*

### *15) சுரகர்ணன் கரப்பான் - குறிகுணங்கள்*

சுரம் வரும். காதில் குத்தலும், இரைச்சலும் ஏற்படும். கழுத்து வீங்கி பருக்கும். மண்டைக்குள் குத்தல் ஏற்படும். மூக்கு வழியாகச் சீழுடன் கூடிய நீர் வெளிப்படும். இதுவே சுரகர்ண கரப்பானின் குறி குணங்கள் ஆகும். *(கை.பி.98-154)*

### *16) சூலைகரப்பான் - குறிகுணங்கள்*

குழந்தையின் முகமானது வாடிவிடும். உடலில் பலவிதமாக வெடிப்பு ஏற்பட்டு அதனால் வலிதாங்காது பரிதவிக்கும். முழங்கால்களை நீட்டவும், மடக்கவும் முடியாமல் துன்பப்படும். கையால் உணவெடுத்து உண்ணமுடியாது. மயக்கமேற்படும் இவையே இக்கரப்பானின் குறிகுணங்கள். முழங்கை, முழங்காலிற் சூலை கட்டும்.

*(புத்.476-113,482-86,477-232)*

#### *குணங்கள்*

உடல் களைத்துத் திரண்டு நீர்போல இரத்தம் கோர்த்துக் கொண்டு பலவிதத் துன்பம் செய்யும். வீக்கம் கண்டு சிவந்து புண்ணாகும்.

கைகளில் பரங்கிக் காயைப் போல் வெடிப்புகள் உண்டாகும். பின்னர் பழுத்துவிடும். *(கை.பி.98-154)*

### *புங்கன் வேர்ப்பட்டை எண்ணெய்*

வடக்கே நோக்கிச் செல்லும் புங்கன் வேர், சங்கம் வேர், ஆதொண்டை வேர் ஆகிய மூன்றையும் வகைக்கு 35கி. வீதமெடுத்து தண்ணீர் விட்டரைத்து 1.3லி. சிற்றாமணக்கெண்ணெயில் கரைத்து வைத்துக் கொள்க. 350கி. வெங்காயத்தைச் சிறுக அரிந்து அதிலிட்டு 9கி. கடுகுரோகணியையும் 5கி. சமுத்திர விதையையும் எடுத்துப் பொடித்துக் கலந்து நன்றாக உறவாகுமட்டும் கதிர்ப்புடம் வைத்தெடுத்துக் காலையில் மட்டும் 8மி.லி. முதல் 16மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுத்து வெளிப்பிரயோகமும் செய்தல் வேண்டும். ஒருநாள்விட்டு மறுநாள் கொடுக்க; இவ்வாறு 7 நாட்கள் கொடுக்க. புளி, சினைப்புப் பண்டம் முதலியவற்றை நீக்கவும். *(புத்.476-113,477-232,482-86)*

### *மருந்து*

335மி.லி. சங்கங்குப்பிச்சாறு, 335மி.லி. பசுவின் நெய்யையும் கலந்து கொள்க. இலிங்கம், கெந்தகம், வசம்பு, கருஞ்சீரகம் இவற்றை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. துரிசு 1கி., எடுத்தரைத்து ஒன்றாகச் சேர்த்துக் கொள்க. வெங்காயம் தேவையான அளவு, கழுதைப் பால் 336மி.லி., பசுவின் பால் 672மி.லி., கழுதை லத்தி தேவையான அளவு ஆகிய இவற்றை மேற்சொன்னவற்றுடன் ஒன்று சேர்த்து அடுப்பேற்றி எரித்து காய்ச்சி பக்குவபதத்தில் எடுத்து வடித்துக் கொள்க.

*(கை.பி.98-154)*

### *17) செங்கரப்பான் - குறிகுணங்கள்*

1. துடை, முகம் உடல் எங்கும் தடித்தல், செவ்வட்டை கடி போல சிவத்தல். உடம்பு சிவந்து தலை நோகும். உடல் வெடிக்கும். சில நேரங்களில் அதில் சீழும் வடியும், சிறுநீரும், மலமும் கட்டுப்படும். உடம்பு மெலியும். மரணக் குறிகள் காணும்.

உடல் கடுக்கும். உடல் ஊதும். மிகுதியாய் கன்றிப் போதல், சுரம் விட்டு விட்டாலும் உடல் கனகனவென்றிருக்கும். தினவெடுக்கும். முகம் கறுக்கும். உடல் சிவந்து குரல் கம்மி சுரம் ஏற்படும். உடல்நோகும். கழுத்தைச்சுற்றி சுண்டைக்காய்போல் கட்டிக்கொள்ளும்.

உடம்பில் நீர்வடிவதோடு பலாசுப்பூப் போன்று தலையிலும் உடம்பிலும் புண்கள் தோன்றும். வேர்க்குருபோன்ற சிறு கறுப்புக் கட்டிகள் தோன்றும். முகம் கறுப்பாகி உடல் சிவப்பாதல், ஆகிய குறிகுணங்கள் செங்கரப்பானுடையவை.

*(புத்.476-110,477-235) (ஏடு.601-22,424-27)(கை.பி.98-153)*

### செங்கரப்பான் - கற்கம்

முசுமுசுக்கை இலையைப் பசுவின் பாலில் அரைத்துக் கொடுக்க நீங்கும். *(ஏடு.612-19)*

### சூரணம்

நொச்சி வேர், கொடிவேலி வேர் இவற்றை வகைக்கு 325மி.கி., அரப்பொடியும் அதே அளவு எடுக்க. இவற்றைப் பொடித்துத் தேனில் கலந்து 250மி.கி. அளவு கொடுக்க செங்கரப்பான் குணமாகும்.

*(ஏடு.42-329)*

### நெய்வகைகள்

1) **ஆதொண்டைநெய்:-** பசுவின் நெய் 336மி.லி., ஆதொண்டை, முதியார் கூந்தல், முருக்கிலை, நெருஞ்சில், கொத்தான், பூவரசம்பட்டை, சிறுசின்னி, வெங்காயம் இவை வகைக்கு 165மி.லி. எடுக்க. இவற்றின் சாற்றையும் நெய்யையும் சேர்த்து எரித்து மெழுகு பதத்தில் வடித்து வேளை ஒன்றுக்கு 16மி.லி. வீதம் காலை மட்டும் வேண்டிய நாள் வரை கொடுக்க செங்கரப்பான் தீரும்.

*(ஏடு.435-26,601-22) (புத்.476-110.477-236,482-86)*

ஆதொண்டைச் சாற்றை எடுத்துக் கொள்க. சூரைப்பட்டை 35கி. எடுத்து அரைத்து கொதிக்க வைத்துக் கொள்க. பின் அதனைக் கடைந்தெடுக்க. பச்சிலைச் சாற்றில் சேர்த்து நெய்யையும் தேவையான அளவு விட்டுக் காய்ச்சிக் கொள்ளவும். இதனை அளவறிந்து கொடுக்க நீங்கும். *(ஏடு.601-22,435-26)(புத்.477-236)*

2. அதிமதுரம், கெருடப்பச்சை, கொத்துமல்லி, கருஞ்சீரகம், ஓமம், விளாவரிசி, சுக்கு, ஏலம், குடப்பாலை அரிசி, மிளகு, சீரகம், திப்பிலி, வசம்பு, வங்கம், சிவதை, உள்ளி இச்சரக்குகளை வகைக்கு 5கி. எடுத்துக் கொள்க. பசுநெய் 1.3லி. எடுக்க. மேற்சொன்னவற்றைப் பொடித்து நெய்யில் சேர்த்து எரித்து பதமறிந்து வடித்துக் கொள்க.

அதனைக் காசெடை (4கி.) உள்ளுக்குக் கொடுத்து உடம்பிலும் பூசிவர செங்கரப்பான் நீங்கிப் போகும். பத்து நாள் மேனியில் பூசிவர குழந்தையின் உடம்பு பொன்னாக ஆகும். பழைய கஞ்சி, பனை வெல்லம், புளிப்பு இவற்றைத் தள்ளல் வேண்டும். *(ஏடு.601-78-79)*

3. முதியார் கூந்தல், தெற்றி, பருத்திப்பூ, தென்னம்பாளை, வெங்காயம், செம்பொன்னெருஞ்சி, கழுதை லத்திப்பால், இவற்றை இடித்துச்சாறு பிழிந்து 336மி.லி. எடுத்துக் கொள்க.

சீரகம், கருஞ்சீரகம், சூரைப்பட்டை, சந்தனம், பூலாவிருட்சம், சாத்திரபேதி, இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம் இவற்றைச் சாறுடன் சேர்க்க. சிற்றாமணக்கு எண்ணெயையும் சேர்க்க. இவையனைத்தையும் இணைத்து பதத்துடன் காய்ச்சி எடுத்து கொடுத்தால் செங்கரப்பான் தீரும். *(கை.பி.98-153)*

4. சின்னபச்சிலை, திப்பிலி இவற்றை 336மி.லி. எண்ணெயில் அரைத்துக் கொள்க. பிறகு அதில் கருஞ்சீரகம், குப்பைமேனி கோட்டம், கொங்குவல்லி, அதிமதுரம் இவற்றைத் தூள் செய்து போட்டு பக்குவத்தில் இறக்கிக் கொள்க. செங்கரப்பான் வந்தால் மூன்று நாட்கள் இதைக் குடிக்க தீரும்.

குப்பைமேனிச் சாற்றையும் விளக்கெண்ணெயையும் சேர்த்து 3 நாட்கள் குடிக்க செங்கரப்பான் நீங்கும். *(ஏடு.601-23)*

### *5. பூவரசு நெய்*

பூவரசம்பட்டை, செங்கத்தாரிப் பட்டை, வேம்பாடம்பட்டை, சடைச்சி ஆகிய இந்நான்கு பொருட்களையும் சுரசம் செய்து வகைக்கு 165மி.லி. வீதமெடுத்து அதை 280மி.லி. ஆமணக்கெண்ணெயுடன் கலந்து அத்துடன் கம்பிப்பிசின், கருஞ்சீரகம் ஆகிய இரண்டையும் 12கி. கூட்டி எரித்துப் பக்குவமானவுடன் வடித்துக் காலையில் மட்டும் ஒரு சிறு கரண்டி அளவு கொடுக்க செங்கரப்பான் நீங்கும்.

உப்பு, புளி ஆகியவற்றை நீக்கவும். கோரோசனையை பொடித்துத் தூவிப் பத்திரப்படுத்தவும். உப்பை வறுத்தும் புளியைச் சுட்டும் சாப்பிடவும். *(கை.பி.பால.வை:போதினி-165) (புத்.477-236)*

## எண்ணெய் வகைகள்

1. செங்கத்தாரி, கருநொச்சி, முடக்கொத்தான், கழற்சி, புங்கு, சங்கு, சங்கங்குப்பி, கிரந்திநாயகம், சிறுசெருப்படை, சிறுசின்னி, முதியார் கூந்தல், உத்தாமணி, கொடி வேலி, வெள்ளறுகு, வேம்பாடம்பட்டை, சிவனார் வேம்பு, சிவதை, கண்டங்கத்திரி, பூதகரப்பான் பட்டை, சீரகம், கருஞ்சீரகம், இவையெல்லாம் ஓர் நிறையாய் எடுத்து தூய்மை செய்து விளக்கெண்ணெயிற் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொடுக்க செங்கரப்பான் தீரும். *(புத்.482-91)*

2. செங்கத்தாரி, பூவரசம்பட்டை, பங்கம்பாளை, வசம்பு, வெங்காயம் இவற்றை ஆமணக்கெண்ணெயில் ஊறவைத்து நாவிலிட்டால் செங்கரப்பான் நீங்கிவிடும். *(ஏடு.424-27)*

3. வெந்தயம், மருள் கிழங்கு, வெட்பாலையரிசி, மகிழவிரை, முருங்கைப் பருப்பு, செங்கழுநீர், கோட்டம், இந்துப்பு, இவை வகைக்கு 70கி. எடுத்துக் கொள்க.

வெள்ளரளிச்சாறு 2.6லி. நல்லெண்ணெய் 1.3லி. எடுக்க. மேற்சொன்ன மருந்துகளை வெள்ளரளிச்சாறு விட்டரைத்து நல்லெண்ணெயைச் சேர்த்து காய்ச்சி தலைக்கிடத் தீரும். *(ஏடு.612-19)*

4. வரியையுடைய கொட்டைக் கரந்தைவேர், செருப்படையின் வேர், அவுரியிலை, தும்பை, (விசரிப்பட்டை) முத்தக்காசு, கோடகசாலை பட்டையின் தோல், மிளகரணை, வேலிப்பருத்தி, கரிசாலை, பெருங்களாப்பட்டை வேர், ஆரைவேர், காணிவேர்ப்பட்டை, விளாம்பட்டை, சிறுகீரையின் வேர், வட்டத்திருப்பியின் வேர், புலித் துடக்கிப் பட்டைத் தோல் இவை வகைக்கு 18கி. எடுத்துக் கொள்க. வசம்பு 18கி., ஆமணக்கெண்ணெய் 335மி.லி. எடுக்க. மேற்சொன்ன சரக்குகளை இடித்துத் தூளாக்கி எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடிகட்டி இறுத்து வைத்துக் கொள்க. அதனை ஏழு நாட்களுக்கு ஒரு கரண்டி வீதம் கொடுக்க செங்கரப்பான் நீங்கும். *(புத்.572-34-35)*

### *இசங்கன் வேர்த்தைலம்*

இசங்கம் வேரை எடுத்திடித்து ஆற்றுநீர் 20 லி ஊற்றி எட்டொன்றாய் காயச்சி வடித்துக் கொள்க. அதில் நல்லெண்ணெய் 2.6 லி ஊற்றி கொள்க. 35 கி முடக்கத்தானிலையை அரைத்து அக்கலவையில்

போட்டுக் காய்ச்சி மெழுகாக்கிக் கொள்க. அதனைச் சிரங்கின் மீது தடவ செங்கரப்பான் தீரும். *(அவை-6.தனி-16)*

## *செங்கரப்பானுக்குப் பூச்சு*

அமுதவள்ளிக் கிழங்கு, சத்திச் சாரணைவேர், சில்லரைக் கிழங்கு, மாவிலங்கம் வேர், சிறுபூளைவேர், பனைவேர், உள்ளி, வசம்பு இவை சேர்த்து பசுவின் நெய்யில் வேக வைத்துப் பூசவும். *(ஏடு.612-19)*

5. கொடிவேலி வேர், முக்காவேளைவேர், சத்திச்சாரணை வேர், புளிநறளை, கொல்லங்கோவை குரோட்டை, காட்டுக்கருணை, கோழியவரையின் வேர், அவுரி, மூக்கரட்டை, மிளகரணை, தலைச்சுருளி, வக்கணப்பட்டை, விழுமிவேர், கடுக்காய், வெங்காயம், வசம்பு ஆகிய மூலிகைகளைச் சமனாய்ச் சேர்த்து பொடித்துக் கொள்க. சரக்குகளின் சூரணத்திற்குச் சம அளவு ஆமணக்கெண்ணெயைச் சேர்த்து எரித்து பதத்தில் வடித்துக் கொள்க. அதனைக் கரப்பான் உள்ள இடங்களில் பூசி உள்ளுக்குச் சிறிதளவு கொடுக்க செங்கரப்பனும் மற்ற பல கரப்பானும் தீரும். *(ஏடு.42-334,335)*

6. தலைச்சுருளி, காரையிலை இவற்றின் சாற்றைச் சமன் எடுக்க. வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, வெள்ளுள்ளி இவற்றைச் சமமாய் எடுத்து பொடித்து தேங்காய் எண்ணெயில் கலந்து மேற்சொன்ன சாற்றையும் சேர்த்து காய்ச்சுக. அதனை அளவறிந்து 5-10மி.லி. கொடுத்து மேலுக்கும் பூச செங்கரப்பான் தீரும். *(ஏடு.42-329)*

## *18) சொறி குட்டக்கரப்பான் - குறிகுணங்கள்*

உடம்பெங்கும் தீயாய் எரியும், வாடும்; பஞ்சைப் போலும் அத்திக்காயைப் போலவும் உடம்பெல்லாம் குருக்கள் உண்டாகி வெடித்து சேலையின் வெண்மையைப் போல் உடலெங்கும் பரவி வரும். *(புத்.572-31)*

## *சொறிக்கு ஊறல் குடிநீர்*

பூவரசம்பட்டையை 35கி. எடுத்துக் கொள்க. நீராகாரம் 168மி.லி. எடுத்துக் கொள்க. நீராகாரம் 168மி.லி. எடுத்துக் கொள்க. பட்டையை நீராகாரத்தில் ஊற வைத்துக் கொள்க. அதனை மூன்றுநாள் குடிக்க சொறி போகும். உப்பைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது. *(புத்.476-120)*

### *சஞ்சீவி இளகம் (அமிர்தாதி இளகம்)*

சஞ்சீவி கொடி எடுத்து மேல் தோலை நீக்கிவிட்டு துண்டுதுண்டாய் வெட்டி வெய்யிலில் உலர்த்தி இடித்துப் பொடி செய்து கொள்க. இப்பொடிக்குச் சமமாக கரிசலாங்கண்ணியின் சூரணத்தைச் சேர்த்துக் கொள்க. சாதிக்காய், சாதிபத்திரி, சுகந்தமல்லி, சண்பகப்பூ, கற்கடக சிங்கி, குங்குமப்பூ, சந்தனத்தூள், இலவங்கப் பூ, சுக்கு, ஏலம் இவற்றை வகைக்கு 9கி. எடுத்து சூரணித்து முன் சொன்ன சூரணத்துடன் சேர்க்க. 175மி.கி. கற்கண்டைச் சேர்க்க. இச்சரக்குக் கலவையைத் தேவையான பசுவெண்ணெயைச் சேர்த்து இளகம் கிண்டிக் கொள்ள வேண்டும். இதுவே சஞ்சீவி இளகமாகும். *(புத்.572-31-32)*

### *பேய்ச் சொறிக்கு மருந்து*

இந்துப்பைப் பொடியாய்ச் செய்து நெய்யிலே பொடியைக் கொட்டி கிண்டி வெயிலில் வைத்துக் கொள்க. அதை எடுத்து தலைக்கிட்டு. மேல் பூசி அடுத்த நாள் தலை முழுகிவிட வேண்டும். அவ்வாறு செய்ய தூக்கமில்லாது செய்யும் பேய்ச்சொறி நீங்கிப்போகும். *(புத்.476-120)*

### *19) தோடக்கரப்பான் - குறிகுணம்*

உள்ளுக்கும், மேலுக்கும் நடுக்கத்துடன் காய்ச்சலுண்டாகும். உடம்பெங்கும் நடுக்கத்துடன் காய்ச்சலுண்டாகும். உடம்பெங்கும் அழன்று புண்போல் நோகும். வாயில் கள் மணம் உண்டாகும். உடலில் கழலைகள் ஏற்பட்டு உடல் பூதம் போல் வீங்கும். மூக்கினில் அரிப்புண்டாகும். ஏக்கத்துடன் அழும். இக்குறிகுணங்கள் ஏற்பட்டால் அது தோடக் கரப்பான் ஆகும். *(புத்.477-236)*

### *திருகு கள்ளி எண்ணெய்*

திருகுகள்ளிச்சாறு, பூதக்கரப்பான் பட்டைச்சாறு, வேப்பம் பட்டைச்சாறு, சங்கங்குப்பிச் சாறு, நிலக்கடம்புச்சாறு, கருநொச்சிச் சாறு, பெருங்குறிஞ்சானிலைச்சாறு ஆகிய இவ்வேழை வகைக்கு 70மி.லி. எடுத்து அதை 280மி.லி. சிற்றாமணக்கெண்ணெயுடன் சேர்த்துக் கொடுக்கத் தோட கரப்பான் தீரும். தாயானவள் புளி, கவிச்சுப் பொருட்களை நீக்க வேண்டும். *(புத்.477-237)*

மேற்குறிப்பிட்ட சாறுகளுடனேயும் (பெருங்குறிஞ்சானுக்குப் பதில்) சிறுகுறிஞ்சானிலைச் சாறு, எண்ணெயையும் கலந்து அடுப்பேற்றிச் சிறு தீயாக எடுத்துக் கடுகுதிரள் பதத்தில் எடுத்து வடிகட்டித் திப்பி

நீக்கி எண்ணெயைப் பத்திரப் படுத்தவேண்டும். உப்பு, புளி, புகை முதலியவற்றை நீக்கிவிடவும். புளியை நீக்கி உப்பை வறுத்துச் சேர்த்துக் கொள்ளவும். *(கை.பி.பால.வை.போதினி 160)*

## *20) நீர்க்கரப்பான் - குறிகுணங்கள்*

நாள்தோறும் உடம்பெல்லாம் சூடாயிருக்கும். சிறு சிறங்காக வந்து பின்னர் பெரிதாகி பழுப்பு நிறமாகும். கால் பெரிதாக வீங்கி விடும். வாய்புண்ணாகும். இவையே நீர்க்கரப்பானின் குறிகுணங்கள். *(கை.பி.98-156)*

### *குடிநீர்*

எலுமிச்சைப்பட்டை, நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய், சுண்டை, அதிமதுரம், கருஞ்சீரகம், சுக்கு, மஞ்சள், வேம்பு, குக்கில், சீனப்பா (பரங்கிப்பட்டை) தெற்றி, வெங்காயம் இவற்றின் பட்டைகளைச் சமஅளவு எடுத்து இடித்து காய்ச்சி எட்டொன்றாய் வடித்துக் கொடுக்க நீர்க்கரப்பான் நீங்கிப்போகும். *(கை.பி.98-157)*

## *21) படர்கரப்பான் - குறிகுணங்கள்*

உடம்பில் புள்ளியிட்டது போலவும், வண்டுகள் அமர்ந்தது போலவும் தேகமெங்கும் குருக்கள் தோன்றி கண்ணில் நீர் பெருக்கெடுத்து நிற்கும். சுரம் வரும்.

பின் கண்கள் பொங்கும். அதனின்று நீர்வடியும். இக்குறிகுணங்கள் கண்டால் அதனைப் படர்கரப்பான் என்பர் பெரியோர். *(ஏடு.601-24)*

### *நெய் வகைகள்*

1. செங்கத்தாரிப் பட்டை, கீழ்க்காய் நெல்லி, பசளை, தாமரை, புரமெரித்தான் வேர் எனும் குப்பைமேனி இவற்றை எலுமிச்சைப் பழச்சாற்றில் அரைத்து 2கி. நெய்யை சேர்த்து வேக வைத்து நெய் பதமாக வந்தபிறகு இறக்கி ஒரு கரண்டி கொடுக்க படர் கரப்பான் நீங்கும். *(ஏடு.601-24)*

2. ஏலம், வசம்பு, கருஞ்சீரகம், மிளகு, கார்கோலம், வெங்காயம், மஞ்சள், இருசீரகம் (பெருஞ்சீரகம், நற்சீரகம்) இவற்றைச் சமபங்காய் எடுத்துக் கொள்க. கரிய நெல்லியையும் சேர்த்து ஆமணக்கெண்ணெய் 336மி.லி. எடுத்து அதில் மேற்சொன்னவற்றைச் சேர்த்து காய்ச்சிக் கொள்க. வெந்தவுடன் கடுகு, வெள்வங்கப்பூ சேர்த்து இறக்கிக்

கொள்க. அந்த எண்ணெய் நோயளவு அறிந்து தர படர்கரப்பான் நீங்கிவிடும். *(ஏடு.601-23)*

### *22) பால கரப்பான் - (வாலை) குறிகுணங்கள்*

கால் கடுக்கும். கீல்கள், கழுத்து இவ்விடங்களில் வெடித்துப் புண்ணாகும். கால், கை, சந்து ஆகிய விடங்களில் கடி விடங்களில் தடிப்புப் போல் காணும்: அதனின்றும் பனிநீர் போல் நீர் பாய்ந்து வற்றியும் நாறும். குழந்தை இளைக்கும். குழந்தையினது உடம்பெல்லாம் பால் கோர்த்துக் கொண்ட சொறி போல ஏற்படும். சாரைப் பாம்பின் உடல் போல ஆகும். உடம்பெல்லாம் புண்கள் ஏற்பட்டு விஷநீர் குருதி போன்று வடியும். உடல் இளைத்து அழகிழந்து போகும். உடம்பு சக்தி இழந்து நடுக்கம் உண்டாகும். தொண்டையில் புண் ஏற்பட்டு உடல் வெப்பமாகும். இவையே பால (வாலை) கரப்பானின் குறிகுணங்கள். *(புத்.572-19,482-87, 477-237,476-112)*

கால், கை, துடையிடுக்கு இவ்விடங்களில் வலியுண்டாகிப் பின்பு உடல் முழுவதும் பரவி தடித்தல், நாக்கில் புண் ஏற்படல்.

*(சர.வை.மு-36)*

### *பால கரப்பானுக்கு நெய்*

பூவரசம்பட்டைச்சாறு 1.3லி. சிற்றேரண்டெண்ணெய் 1.3லி. இவை இரண்டையும் சேர்த்தெரித்துக் கொள்க. பிறகு கசகசாபால் 1.3லி. எடுக்க. நற்சீரகம், கருஞ்சீரகம், கரிசாலை இவற்றை வகைக்கு 9கி. எடுக்க. ஏலம், இலவங்கம், சடாமஞ்சில், நுணாவேர் இவற்றை வகைக்கு 35கி. எடுத்து நிழலிலுலர்த்தி பொடிசெய்து கொள்க. சர்க்கரை 175கி. எடுத்துக் கொள்க. மேற்கூறிய சாறு எண்ணெயைக் கலந்து அடுப்பிலேற்றி கடுகு பதத்தில் வரும்போது இச்சூரணங்களைப் போட்டு கிளறி நெய்ப்பாகமாக வரும்போது இறக்கி வடித்துக் கொள்க. அதனைக் கரண்டி அளவு உள்ளுக்குக் கொடுக்க பால கரப்பான் நீங்கிப் போகும். ஏழு நாட்கள் உட்கொள்கையில் புளி, கசப்பு, இறைச்சி, மீன், பாகற்காய் இவற்றை நீக்கவேண்டும். மேலுக்கு கடுகைப் பூச அசாத்திய செவ்வாப்பு, செங்கரப்பான் இவை நீங்கும். *(புத்.572-19-20,482-87, 477-237,476-112-113)*

## 23) பித்தகரப்பான் - குறிகுணம்

வாந்தி உண்டாகும். உடல் சிவப்பாகும். கடுகு போலே புறப்பட்டுத் தினவுண்டாய் வீங்குதல், தலை நோவும். சுரமிருக்கும். அரிப்பு இருக்கும். உடல் எரியும். சூடாக இருக்கும். நீர் சிவந்திருக்கும். மலச்சிக்கல் ஏற்படும், கண் பச்சை நிறமாக ஆதல், இவை கரப்பானின் குறிகுணங்கள் ஆகும். *(புத்.476-108,477-229,482-84)*

கண்கள் பஞ்சை அடைத்தது போன்று இருளும். அப்போது பலவித வர்ணங்கள் தோன்றும். *(கை.பி.பால.வை.போதினி-157)*

### பித்தகரப்பானுக்குக் குடிநீர் வகைகள்

1. கொடிவேலி, குறிஞ்சான், குளப்பாலை, சிவனார்வேம்பு இவைகளின் வேர், பெருமரத்துப் பட்டை, வெள்ளறுகு, மிளகு, கருவேப்பீர்க்கு, செங்கத்தாரிப்பட்டை இவைகளைச் சமமாய் எடுத்து இடித்து தண்ணீரிற் போட்டு காய்ச்சிக் கொடுக்க பித்தகரப்பான் தீரும். *(புத்.482-84)*

2. இருவேலிவேர், சந்தனம், செருப்படிவேர், முத்தக்காசு, திருத்துழாய்வேர், இவற்றைச் சமனாய் எடுத்து இடித்து 5.2லி. தண்ணீரில் போட்டு எட்டொன்றாக்கிக் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்க பித்த கரப்பான் நீங்கும். *(ஏடு.313-67,68)*

3. கருநொச்சியிலை, ஏரழிஞ்சிப்பட்டை, விஷ்ணுகரந்தை, சிறுசின்னியிலை, சாணாக்கி, சிற்றாமணக்கின் வேர், வெங்காயம், சுட்டவசம்பு, கடுகுரோகணி இவற்றைச் சமமாய் இடித்து குடிநீர் செய்து கொடுக்கத் தீரும். *(புத்.482-84)*

### சூரணம்

கொடிவேலி, குறிஞ்சான், குளப்பாலை, சிவனார் வேம்பு, இவற்றின் வேர் பெருமருந்து பட்டை, வெள்ளறுகு, மிளகு, கருவேப்பீர்க்கு, செங்கத்தாரிப்பட்டை ஆகிய பொருட்களை இடித்து வடிகட்டிச் சூரணம் செய்து மூவிரலளவு வெந்நீரிற் கொடுக்க பித்த கரப்பான் தீரும். *(புத்.482-84)*

### எண்ணெய் வகைகள்

1. செங்கத்தாரிப்பட்டை, சின்னியிலை, சிறுகுறிஞ்சான்வேர், மிளகு, இவைகளைச் சமமாய் எடுத்து இடித்து விளக்கெண்ணெயிற் காய்ச்சி கொடுக்க பித்தக் கரப்பான் போகும். *(புத்.482-84)*

### *2. குன்றி எண்ணெய்*

குன்றியிலை, கருநொச்சியிலை, கழற்சியிலை, கிரந்திநாயகமிவை இந்நான்கையும் சுரசம் செய்து வகைக்கு 325மி.லி. எடுத்து ஒன்றுசேர்த்து 70கி. வெள்ளாட்டுப் புழுக்கையைப் பொடிசெய்து அதில் கலந்து 280மி.லி. ஆமணக்கு நெய் சேர்த்து சிறுதீயில் எரித்து பக்குவபதத்தில் வடித்து வேளைக்கு 4கி. காலை. மாலையில் கொடுத்து வர பித்த கரப்பான் நீங்கிவிடும். *(புத்.477-229-230) (கை.பி.பால.வை. போதினி-157)*

3. நொச்சிக் கொழுந்தையும் மிளகையும் அரைத்து எலுமிச்சங்காயளவு எடுக்க. நல்லெண்ணெய் 325மி.லி. எடுத்து அதில் கற்கத்தைக் கலந்து காய்ச்சி எண்ணெயை 5-10மி.லி. அளவு உள்ளுக்குக் கொடுக்கவும். மேலுக்கும் பூச புடைகரப்பான் தீரும். *(ஏடு.185-87)*

### *24) புடைகரப்பானுக்கு மருந்து*

மிளகிலையைக் கருக வறுத்துப் பொடி செய்து கொள்க. கற்பூரவள்ளி இலையை இடித்த சாற்றில் பொடியைக் குழப்பி கரப்பானில் பூச தீரும். *(ஏடு.283-12)*

### *25) புண்கரப்பான் - குறிகுணங்கள்*

காதடி, கழுத்து, நெற்றி, காலடி, இடுப்புச்சந்து, தலை ஆகிய விடங்களில் புண் ஏற்பட்டு சீழ் அதில் கோர்த்திருக்கும். இவையே புண் கரப்பானின் குறிகுணமாகும். *(ஏடு.424-29)*

### *புண்கரப்பானுக்கு மருந்து*

வெள்ளாட்டுச்சாணம், கழுதைச்சாணம், தேட்கொடுக்கிலைச்சாறு, பசுவின் சாணப்பால் ஆமணக்கெண்ணெய் இவற்றை ஒன்று சேர்த்து எரித்து வார்க்க புண்கரப்பான் தீர்ந்துபோகும். *(ஏடு.424-29)*

### *மருந்து*

வேப்பம்பட்டை, உள்ளி, வசம்பு, தேவதாரம், சாதிக்காய், இந்துப்பு, வெள்ளி, படிகாரம், மரமஞ்சள் இவற்றைச் சமனெடை எடுத்து அரைத்து நல்லெண்ணெயில் கலந்து, வடித்து மேலுக்குப் பூசவும். 12 நாளிலே பூதக்கரப்பான் குணமாகும். முருங்கைக்காய், முருங்கையிலை சேர்க்கலாம். *(ஏடு.277-3,4)*

### *26) பூதக்கரப்பானுக்கு எண்ணெய்*

ஆமணக்கெண்ணெய், ஈரவெங்காயம் 1.3 லி, சங்கங்குப்பிச்சாறு 2.6 லி, பூதக்கரப்பான் பட்டை 8 கி, வசம்பு 8 கி இவையெல்லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து சூரிய புடமிட்டு வைத்து நண்பகல் வரை வெய்யிலில் வைக்க எண்ணெய் நுரைத்துப் பொங்கும். அந்தப் பதம் அறிந்தெடுத்து சிறுகன விறகிட்டெரித்து வடித்துக் கொண்டு உள்ளுக்கு காசெடை கொடுக்க பூதக்கரப்பான் தீரும். கசப்பு, புளி தவிர்க்க. *(ஏடு.612-20)*

### *27) பெருங்கரப்பான் - குறிகுணங்கள்*

உடம்பு வீங்கிவிடும், உடம்பில் அங்கங்கு வெடிப்பேற்பட்டு இரத்தம் ஒழுகும். கண்ணும் வீங்கிப் போகும். சுரமும், குளிரும், ஏற்படும். மூச்சு வாங்கும். மயக்கமேற்படும். இவையே பெருங்கரப்பானின் குறிகுணங்களாகும். *(ஏடு.424-29)*

### *பெருங்கரப்பானுக்கு எண்ணெய் வகைகள்*

1. இலுப்பையிலைச் சாறுடன் ஏரண்டத் தைலத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இலுப்பை, பூவரசு, கருநொச்சி, சங்கங்குப்பிப்பூ, செங்கத்தாரி, சிறுகுறிஞ்சான் வேர், கொல்லங்கோவை, சடைச்சிவேர் இவற்றைக் குடிநீராக்கிக் கொள்க. பிறகு வெட்பாலை வித்து, இருவகை ஓமம், சோம்பு, கருஞ்சீரகம், இருவகை கரப்பான்பட்டை இவற்றை முன் சொன்ன குடிநீரில் இட்டு நன்கு காய்ச்சி பதத்துடன் வடித்தெடுத்து உள்ளங்கையிலூற்றி நக்க பெருங்கரப்பான் தீரும். *(ஏடு.424-30)*

2. வாகையிலைச் சாற்றையும் நல்லெண்ணெயையும் சேர்த்துக் கொடுக்க பெருங்கரப்பான் குணமாகும்.

கருஞ்சீரகம், நன்னாரிவேர், புங்கிலை இவற்றைக் காடி வார்த்தரைத்து கொதிக்க வைத்து வெச்சென்றிருக்கும் நேரத்தில் பெருங்கரப்பான் உள்ள இடத்தில் பூச குணமாகும். *(ஏடு.400-287)*

### *26. பொரிகரப்பான் - குறிகுணங்கள்*

பலமுறை இடைவிடாது அடித்தால் உண்டாகும் வீக்கத்தைப் போல் உடம்பு முழுதும் சிவந்த தடிப்புகளுண்டாகும். அவை நாளுக்கு நாள் கனத்து வெடிக்கும். அவ்வெடிப்பில் தீபோன்று சுடும். பின் குளிர்ந்திருக்கும். நா உலர்ந்து நீர்வேட்கை காணும். இக்காரணங்களால் தன் சுய அறிவு கெடும். இக்குறி குணங்கள் காணப்பட்டால் பொரிகரப்பான் ஆகும். *(புத்.477-233) (சர.வை.மு-36)*

ஒரு இடம்விட்டு மற்றோரிடத்தில் ஓடித் திரிதல், கண், மண்டைக்குழி ஆழ்ந்திருத்தல், இரணங்கள் இலகுவில் ஆறாமல் நாட்பட நீடித்திருத்தல்.

*(கை.பி.பால.வை.போதினி162)*

## எண்ணெய் வகைகள்

### *1. புங்கம் எண்ணெய்*

புங்கம்வேர்ப்பட்டை, கிரந்திநாயகம் சமூலம், சங்கனிலை, சங்கங்குப்பியிலை, சின்னியிலை, செங்கத்தாரிச் சமூலம், முடக்கொத்தான் சமூலம், செருப்படைச் சமூலம், தூதுவளைச் சமூலம், கழற்சி இலை ஆகிய இவைகளின் சாறும், ஆவின் சாணிப்பாலும் வகைக்கு 165மி.லி. வீதம் எடுத்து 975மி.லி. முத்தெண்ணெயுடன் கூட்டிக் காய்ச்சிக் கொடுக்கப் பொரி கரப்பான் தீரும். *(புத்.477-234)*

2. முள்ளி, சின்னி, முள்ளிவேர், பிரண்டை, வேலிப் பருத்தியின் வேர், அழிஞ்சில் , செந்நெரிஞ்சில், கொழிஞ்சில், செங்கத்தாரி. தலைச்சுருளி, குமிழம் வேர், தண்ணீர் விட்டான், வெள் வெங்காயம், வசம்பு, மிளகு ஆகிய மூலிகைகளைச் சமனெடுத்து சேர்த்து தேவையான அளவு விளக்கெண்ணெயிலரைத்து எரித்து பக்குவத்தில் வடிக்கவும். அதனை 5-10மி.லி. உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசவும்.

*(ஏடு.42-328, 329)*

3. சுத்தி செய்த இரசகற்பூரம், சுத்தி செய்த இரசசெந்தூரம், கோரோசனை இம்மூன்றும் வகைக்கு 4கி. எடுத்து செம்மையாகப் பொடித்து விளக்கெண்ணெயிற் சேர்த்து உபயோகித்து வந்தால் கடினமான கரப்பான் நீங்கும். *(பால.வை.போதினி 163)*

4. காத்தொட்டிவேர், கொடிவேலி வேர், அவுரிவேர், மிளகு (சிரங்கை அளவு) இந்த நான்கு வகையும் நாரத்தங்காய் அளவு எடுத்துக் கொள்க. விளக்கெண்ணெய் 1.3லி. எடுத்து சரக்குகளைச் சேர்த்து காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்து 2கி. அளவு உள்ளுக்குக் கொடுக்கவும். இந்த எண்ணெயை உடம்பிலும் பூசவும். கைப்பு, புளிப்பு தவிர்க்கவும்.

*(ஏடு.612-20)*

## *29) மண்டைக்கரப்பான் - குறிகுணங்கள்*

தலையில் புண்ணுண்டாகும். காதில் சீழ் ஏற்படும். கையில் சொறி, காதில் இரைச்சல் உண்டாகும். தினந்தோறும் சுரம் ஏற்பட்டு வலியும் ஏற்படும். தலையெங்கும் புண்ணாய் இருக்கும். *(ஏடு.424-31)*

மண்டையில் பரபரவென்று ஓடி நமைச்சல் உண்டாகும். அதைச் சொரிந்தால் புண்ணாகும். அடிக்கடி காதிலிருந்து சீழ் வடிந்து ஆறும். தலை வலிக்கும், மூக்கிலிருந்து நீர்வடியும், உடல் இளைக்கும். சுரங்காயும் குரல் வளையில் தினவெடுக்கும். *(புத்.477-233) (கை.பி.போதினி-166) (சர.வை.மு-36)*

தலையினில் குருக்கள் தோன்றும். முடிப்புகளேற்படும். வயிறு அதிகமாக ஊதும். பாறை போல் கெட்டியாய் விடும். இரத்தம் அதிகமாக குருக்களிலிருந்து பாயும். இரத்தம் வரும் போது நிறம் மஞ்சள் போல் இருக்கும். வாய், மூக்கு, காது இவற்றில் சீழ் வழியும். சன்னி வரும். நிச்சயமாய் இருபதுக்குள் உயிரும் போய்விடும். *(கை.பி.98-159) (ஏடு.42-326,277-82)*

## எண்ணெய் வகைகள்

1. கருநொச்சி, பங்கம்பாளை, காட்டெலுமிச்சை, சிறுசின்னி, தேட்கொடுக்கிலை, செருப்படை, சடைச்சி, கழற்சிக் கொடி, சங்கங் குப்பி, தழுதாழை, குப்பைமேனி, வரிகளையுடைய செங்கத்தாரி, கொட்டைக்கரந்தை ஆகிய இவற்றின் சாற்றை எடுத்துக் கொள்க. ஆமணக்கெண்ணெயை அதில் சேர்த்துக் கொள்க. அக்கலவை கொதிக்கும்போது பூங்கரப்பான்பட்டை, வசம்பு, வெங்காயம், ஓமம், கார்கோலரிசி ஆகிய சரக்குகளைப் பொடித்துக் குழப்பி எரித்துப் பதத்துடன் இறக்கிக் கொள்க. அதனை உள்ளங்கையிலூற்றி நக்க மண்டையில் ஏற்படும் கரப்பான் நீங்கிப் போகும். *(ஏடு.424-32)*

2. சிறுதும்பைச்சாறு 1.3லி., சிற்றாமணக்கு எண்ணெய், வேப்பெண்ணெய் இவற்றை வகைக்கு 325மி.லி. எடுக்க. மூன்றையும் கலந்து காய்ச்சி குழந்தையை முகர வைக்கவும். *(ஏடு.283-32)*

## 3. வேளை எண்ணெய்

வேளை சமூலம், கருநொச்சியிலை, பூவரசம் பட்டை, வேப்பம்பட்டை, நுணாயிலை ஆகிய ஐந்து பொருட்களையும் சுரசம் செய்து வகைக்கு 165மி.லி. எடுத்து அத்துடன் 280மி.கி. முத்தெண்ணெயைச் சேர்த்து எரித்துப் பக்குவத்தில் எடுத்து 4கி. உள்ளுக்குக் கொடுத்து காதிலும் இரண்டு மூன்று துளி விட்டு வர மண்டைக் கரப்பான் தீரும். *(புத்.477-233)*

### 4. *சீதேவித்தைலம்*

நன்னாரி, முத்தக்காசு, தூதுவளை, சீதேவி செங்கழுநீர், ஓரிதழ்த்தாமரை, சிவனார்வேம்பு, நிலவேம்பு ஆகியவற்றை வகைக்கு 250மி.கி. எடுக்க. மலைதாங்கி, வட்டச்சாரணைவேர் இவற்றை வகைக்கு 5கி. எடுக்க. சுக்கு, மிளகு, திப்பிலி, சோமனுப்பு, கடுக்காய், கருஞ்சீரகம், வசம்பு, உள்ளி, சென்னகரம், பழங்கச்சோலம், கடுகுரோகணி, வெளிச்சைப்பிசின், அதிமதுரம் ஆகிய இவற்றைச் சமன் சேர்க்க. அனைத்தையும் பொடித்து எண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் கொள்க. அதனை மேலுக்குப் பூச கபால கரப்பான் தீரும்.

*(ஏடு.42-327,277-82)*

5. முருங்கை, குப்பைமேனிப்பூ, செம்பொன்னெருஞ்சி இவற்றை வகைக்கு ஒரு பிடி எடுத்துக் கொள்ளவும். தேங்காய்எண்ணெய் 325மி.லி. எடுக்க. கருஞ்சீரகம், நற்சீரகம், கார்போகரிசி, வேம்பாடம், சடாமாஞ்சில், மனோசிலை இவற்றைப் பொடித்து 5கி . ஆக எடுக்க. வெங்காயம் ஒருபிடி அளவு எடுத்துப் போட்டு அனைத்தையும் ஒன்று சேர்த்துக் காய்ச்சி பதம் பார்த்து வடித்து மண்டையில் பூச மண்டைக்கரப்பான் தீரும். *(கை.பி.98-30)*

6. சிற்றாமணக்கெண்ணெய் 280மி.கி. நொச்சிச்சாறு, பூவரசம்பட்டைச்சாறு, வேப்பம்பட்டைச்சாறு. நுணாப்பட்டைச்சாறு இவை வகைக்கு 162மி.லி. எடுத்துக் கொள்க. மேற்கண்ட சாறு வகைகளை ஒன்றுசேர்த்து எண்ணெயையும் கலந்து வெய்யிலில் வைத்து வரவேண்டும். நாள்தோறும் அதை நன்றாக 2, 3 தடவைகள் கலக்கிவிடவேண்டும். இவ்விதம் 3 நாட்கள் வைத்து 4ஆம் நாள் அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து மெழுகு பதத்திறக்கி வடிகட்டி பத்திரப்படுத்துக.

2 (அல்) 2.5 கி. உள்ளுக்குக் கொடுப்பதுடன் காது, மூக்கு முதலியவைகளிலும் சொட்டுகளை விட்டுவர மண்டைக்கரப்பான், இரணம், புண் முதலியவை நீங்கும். *(கை.பி.பால.வை.போதினி-166)*

7. குருக்கு எனும் பிரமதண்டுவித்து, கத்தூரி மஞ்சள், கருஞ்சீரகம் எனும் இம்மூலிகைகளைத் தண்ணீர் விட்டரைத்து தேங்காயெண் ணெயில் கலந்து காய்ச்சி மணல் பருவத்தில் இறக்கிக் கொள்க. அவ்வெண்ணெயைத் தலையில் தேய்த்து அடுத்தநாள் வெந்நீரில் குளிப்பாட்டவும் மண்டைக்கரப்பான் நலமாகும். *(த.சு.அ.வை-38)*

8. எலுமிச்சம்பழச்சாறு, அவுரி, துளசி, கையாந்தகரை இவற்றின் சாறு வகைக்கு 2.6லி. எடுக்க. நல்லெண்ணெய் 1.3லி. எடுக்க. ஒன்று சேர்க்க. அதிமதுரம், இலவங்கம்,ஏலம், பச்சிலை, நாகப்பூ, செங்கழுநீர், கோட்டம், இலாமிச்சம், சாதிக்காய், கோரைக்கிழங்கு, ஐங்கோலவிதை, சுக்கு, மிளகு, திப்பிலி, இருவேலி, சந்தனம், சங்கின்காய். புனுகு, குமிழ் ஆகிய மருந்துச் சரக்குகளை 1.3லி. எண்ணெயில் அரைத்து முன் சொன்ன கலவையில் கலந்து எரித்து பதத்தில் வடித்துக் கொள்க. அதனைத் தேவையான அளவு எடுத்து மண்டைக் கரப்பான் மீது பூச சொறி, சிரங்கு, பொடுகு, கபால குட்டம் அனைத்தும் குணமாகும்.

*(ஏடு.42-330-331)*

### *மண்டைக்கரப்பானுக்கு மெழுகு*

தேங்காயைத் துருவி வெந்நீரில் பிழிந்து அந்தப் பாலில் சேங்கொட்டையை அரைத்து அதனை எரித்து மெழுகு பதமாகிவரும்போது வடித்து இறுத்துத் தலையில் மாலை நேரமாகத் தேய்த்துக் கொள்ள வேண்டும். காலையில் அரப்பு தேய்த்து வெந்நீரில் மூழ்க மண்டைக்கரப்பான் நீங்கும். *(கை.பி.98-35)*

### *குழம்பு வகைகள்*

1. புங்கம்விதை, தேங்காய்ப்பூ, இரண்டையும் வெவ்வேறாக வறுத்து வகைக்கு 70கி. எடுத்துக் கொள்க. கருஞ்சீரகம் 5கி. எடுத்து இளவறுப்பாய் வறுத்து முன் சொன்னதுடன் அரைத்துக் குழம்புபோல் வழித்தெடுத்து மண்டை, தோள், கை இவற்றின் மேல் பூச கரப்பான் புண்பக்குகள் போகும். *(கை.பி.98-29) (ஏடு.109-30)*

2. முருங்கையிலை, எருக்கம்பூ, சங்கங்குப்பி, தாளி, கொன்றை இவைகளின் சாறு 325மி.லி. எடுத்துக் கொள்க. தேங்காய் எண்ணெய் 672மி.லி. எடுக்க; கருஞ்சீரகம், கார்போகரிசி, மிளகு, வசம்பு, வெங்காயம் இவை 5கி. எடுத்துக் கொள்க. இச்சரக்குகளை மேற்சொன்ன கலவையினால் அரைத்து குழம்பு போல வடித்துப் பூச மண்டைக்கரப்பான், சிரங்குகள், தீராத பல கரப்பான் நீங்கிவிடும்.

*(கை.பி.98-30)*

புகையூறல், ஈருள்ளி இவற்றையெடுத்து வெண்ணெயிலரைத்து மண்டைக்கரப்பானில் பூச தீரும். *(ஏடு.185-88)*

*மண்டைக்கரப்பானுக்குப் பூச்சு*

கற்பூரத்தைச் சுட்டு, அனல் குறைந்த பிறகு அதனை எடுத்து நல்லெண்ணெய் வார்த்து அரைத்து கரப்பான் மேல் பூசத் தீரும்.

*(கை.பி.98-29) (ஏடு 109-30)*

முட்டைத்தூள், கந்தகம் 5கி. எடுத்துப் பொடித்துக் கொள்ள வேண்டும். அதனை வாய்மூடிச் சீலை செய்து ஒரு புடத்தில் வைத்தெடுக்க வேண்டும். அதனைத் தேங்காய் எண்ணெய் சேர்த்தரைத்து கரப்பான் மீது பூசத்தீரும். *(ஏடு 109-30) (கை.பி.98-29).*

*நசியம்*

பேய்ப்பீர்க்கம் கூட்டைக் கொண்டு வந்து நன்றாய்ப் பொடித்து 100மி.கி. தூளை வெள்ளாட்டுப் பால்விட்டு மத்தித்து இரு நாசித்துளைகளிலும் நசியம் செய்விக்க வேண்டும்.

பிறகு நற்சீரகத்தைப் பொடித்து வெண்ணெயிலே கலந்து இரு நாசித்துளைகளிலும் விட வேண்டும்.

அரிசி, பாசிப்பயிற்றைக் கலந்து கஞ்சியாகக் காய்ச்சி பால் ஊற்றி குழந்தைகட்குக் கொடுக்கவும். மண்டைக் கரப்பான் தீரும்.

*(ஏடு.273-71)*

**30) மாரியின் குணம்:-** காசுக்கட்டி போல் உடம்பு சிவந்து மேலும் மேலும் சிவப்பாகும். அச்சங் கொண்டு பறவை போல குழந்தையும் அழுதுகாட்டும். குரல் கம்மும். மலம், நீர்கட்டும் கபம் அதிகமாக, மரணமேற்படும்.

### *31) வறள்கரப்பான் - குறிகுணங்கள்*

உடலில் உச்சிமுதல் உள்ளங்கால் வரைக்கும் உள்ள இடங்களில் சிலைத்தண்ணீர் கோர்த்துக் கொண்டிருக்கிற சிறு சிரங்குகள் உண்டாகும். தினந்தோறும் அவைகள் வெடித்து அதினின்று நீர் சிந்துவதுடன் நமைச்சலுண்டாகும். தூக்கம் பிடிக்காது. இக்குறிகுணங்களே வறள் கரப்பானுக்குரியவையாகும். *(புத்.477-238)*

### *32) வறட்சிக் கரப்பான் - குறிகுணங்கள்*

உச்சி முதல் உள்ளங்கால்வரை சிறு சிரங்கு மிகுந்து வெடித்துதினவுஞ்சொரியுங் காணும். நித்திரை வராது. *(புத்.482-88)*

## எண்ணெய் வகைகள்

1. தூதுவளை, ஓரிலைத்தாமரை, வெள்ளெருக்கு, கொடிவேலி, நீலி இவைகளின் வேர், கரிய சீரகம், கெந்தகம், கார்போகரிசி, ஓமம், சீரகம் வகைக்கு 9கி. எடுத்துக் கொள்க. மேற்சொன்ன சரக்குகளைப் பொடித்து 335மி.லி. நல்லெண்ணெயிற் போட்டு வேகவைத்து உள்ளுக்குக் கொடுத்து மேலிலும் பூசத்தீரும். *(புத்.482-88)*

2. புங்கங்கொட்டை, மரமஞ்சள், வேம்பாடம் பட்டை, அவுரிவேர், துருசு, கெந்தகம், தாளகம் வகைக்கு 9கி. எடுத்துப் பொடித்து 335மி.லி. நல்லெண்ணெயிற் போட்டுக் காய்ச்சி உடம்பில் காலையில் பூசி மாலையில் அரப்பு போட்டு குளிக்க இக்கரப்பான் தீரும். *(புத்.482-88)*

3. சிறுசின்னிச்சாறு, விளக்கெண்ணெய் இவற்றை வகைக்கு 1.3.லி. எடுத்து ஒன்றாகக் கலந்து கொள்க. அதில் மிளகு, செங்கத்தாரிப் பட்டை, சிறுகுறிஞ்சா வேர்ப்பட்டை வகைக்கு 20கி. எடுத்து அரைத்துப் போட்டுப் பதமாகக் காய்ச்சி கொடுக்க வறட்சி கரப்பான் தீரும். *(புத்.482-88)*

4. ஆமணக்கு முத்தை எடுத்து வேகவைத்து, அதனின்று பிழிந்தெடுத்த சிற்றாமணக்கெண்ணெய் 1.3லி. எடுக்க; கற்பூரவல்லி, சிறுசெருப்படை, நரி வெருட்டி, வெங்காயம் இவற்றின் சாறு வகைக்கு 1.3லி. எடுக்க; இத்திரவங்களை ஒன்றாய்ச் சேர்த்து காய்ச்சி வடித்து, ஒரு சங்கு வீதம் குழந்தைகளுக்கு உள்ளுக்குக் கொடுத்து மேலிலும் பூசிவரத் தீரும். *(புத்.482-88)*

## 33) வாத கரப்பான் - குறிகுணங்கள்

வாதகரப்பான், வாயுகரப்பான், வளிகரப்பான் ஆகிய மூன்றும் ஒன்றே. திமிருடன் சுரமடிக்கும். கட்டி ஏற்படும். உடல் கனத்து வெளுத்துப் பிரண்டை போல் தடித்துக் கட்டும். கண் சிவக்கும்.

நாவறளும். பேசவும் உண்ணவும் முடியாதபடி நோகும். உடல் முழுதும் வீங்கும். அடிக்கடி உடம்பைத் திமிர்த்தி முறுக்குதல், கடுத்தல் இவை பொறுக்க முடியாது அழும். உடலில் நெற்பொரியை இரைத்தது போன்ற தலை விரிந்த புண்கள் உண்டாகும். அப்புண்கள் வெடித்துச் சீயும் குருதியுமாக பொங்கும். திமிருடன் சுரம் அடிக்கும். இவை வாத கரப்பானின் குறி குணங்கள். *(புத்.477-229,476-108,482-83)*

நரம்புகளில் வேதனை, உடம்பு வீக்கம், கடுப்பு, வலிதாங் காமலழுதல், *(சர.வை.மு.-35)*

சொறி ஏற்படுதல், உடம்பு பதைபதைத்தல், *(ஏடு.42-35)*

சில இடங்களிலே சிவந்தும் கருகியும் அதிலே வெள்ளைக் கடுகு போலே இதழாய்க் கிளம்பி திணவுண்டாதல் *(ஏடு.313-67)*

உடலெங்கும் வீங்கிவிடும். வலிக்கும். கை கால்கள் வீங்கிவிடும். உடல் வறட்சியாய் இருக்கும். வெடித்து புண்ணாகி விடும். தலையும் கனத்து விடும். குரல் எரிச்சல் உண்டாகும். உடம்பில் திமிருண்டாகும். கை, கால் வலித்து உளைச்சல் ஏற்படும். உடம்பும் வலித்து நடுக்க மேற்படும். உடம்பில் பலத்தைக் குறைத்து வறட்சியை உண்டு பண்ணி, குலைத்து விடும். இது கொடிய வாத கரப்பான் ஆகும். *(ஏடு.601-24)*

கண்ணில் ஆயுதத்தால் குத்தியது போல் வலியேற்படுதல், *(ஏடு.42-320,272-13,579-5)*

எலும்புப் பொருத்துகள் வீங்கி வலிக்கும். புண்போல் ஆகி சுரம்வரும். ஒரு இடத்தில் இருக்க விடாது வலித்துக் கொண்டே இருக்கும். வெப்பம் அதிகமாக ஏற்படும். *(ஏடு.601-25)*

கண், வயிறு வீங்கி சோர்வடையும்; உடல் சூடாகும். துடை கனக்கும். உடம்பு நடுங்கும். மயக்கம் ஏற்படும். *(ஏடு.601-25)*

உட்கார்ந்திருந்து எழுந்திருந்தால் கால் சந்துகள் வலிக்கும். உடல்திமிர் கொண்டு வறண்டு வெடித்துப் புண்ணாகும். இக்குணங்கள் ஏற்படில் திமிர் வாத கரப்பான் ஆகும். *(ஏடு.601-25)*

குழந்தையின் உடலானது வீங்கிக் காணுதல், உடல் திமிர்க்கடுப்பாய் இருத்தல், உடலின் மீது கைப்பட்டால், அழுதல், உடலெங்கும் பொறி பறந்தது போல புண்ணாயிருத்தல், வெடித்துச் சீழ் வடிதல், சுரம், நாவறட்சி, முதலியவைகளாம். *(கை.பி.பா.வைபோ-155)*

### *குடிநீர் வகைகள்*

1. அதிமதுரத்தை 50 கி. எடுத்தரைத்து 5.2லி. தண்ணீரில் கலந்து எட்டொன்றாய்க் காய்ச்சி தேவையான அளவு தேன் கலந்து 15-30 மி.லி. கொடுக்க வாதகரப்பான் குணமாகும்.

ஆடாதோடையை அரைத்து தேவையான அளவு தேனில் கலந்து கொடுக்க வாதகரப்பான் மாறும். *(ஏடு.313-67)*

### *குடிநீர்*

வெள்ளைச் சாட்டரணைவேர், உப்பு, கடுக்காய்த்தோல், மாச்சுக்கு ஆகிய நான்கு பொருட்களையும் வகைக்கு 9கி. எடுத்து இடித்து ஒரு மண் சட்டியிலிட்டு 9கி. தண்ணீர் விட்டு 84மி.லி. ஆகக் காய்ச்சி ஒரு வேளைக்குக் கொடுக்கவும். வீக்கம் இவைகள் நீங்கும். இவ்வாறு 3 அல்லது 5 முறை கொடுக்கவும். *(புத்.476-114,477-244)*

### *சூரணம்*

கருஞ்சீரகம், ஏலக்காய், கிராம்பு, பூதக்கரப்பான் பட்டை, வசம்பு, சாதிபத்திரி, கூகைநீறு, அமுக்கிராக் கிழங்கு ஆகிய மருந்துச் சரக்குகளை வகைக்கு 35கி. எடுத்து நன்றாக உலர்த்திக் கல்லுரலிலிட்டு இடித்து 250 மி.கி. சூரணத்தைத் தேனில் குழைத்து தினமும் 3 வேளை சாப்பிடவும் வாதக்கரப்பான் தீரும். *(சர.வை.மு-230)*

### *நெய்*

கஞ்சாங்கோரை, தண்ணீர் விட்டான் கிழங்கு, செருப்படி, புங்கம்பட்டை ஆகிய மூலிகைகளைத் தனித்தனியே இடித்துப் பிழிந்த சாறு வகைக்கு 1.3லி. எடுத்துக் கொள்க. பசுவின் பால் 1.3லி. எடுக்க சாற்றுடன் கலக்க. ஒருநாள் இக்கலவையை அப்படியே வைத்திருந்து மறுநாள் இரண்டு கூறாகப் பிரித்துக் கொள்க. பசுவின் நெய்யை 1.3லி. எடுத்து அதில் ஒரு பங்கைக் கலந்து பக்குவமாகக் கலந்து வடித்து 5-10 மி.லி. உள்ளுக்குக் கொடுக்கவும்.

இரண்டாவது பங்கை, நல்லெண்ணெய் 1.3 லி. எடுத்து அதில் கலந்து அடுப்பேற்றிக் காய்ச்சி பக்குவமாக வடித்துக் கொள்க. தினமும் உடம்பில் தேய்க்கவும். வாதக் கரப்பான் தீரும். *(சர.வை.மு.-231)*

### எண்ணெய் வகைகள்

1. உத்தமதாளி, தழுதாழை, ஓரிலைத்தாமரை, வெள்ளறுகு, நத்தைச்சூரி, நாயுருவி, நாய்க்கடுகு, நன்னாரி, சிற்றாமுட்டி, பேராமுட்டி சிறியாநங்கை, கவுதும்பை, வெள்ளெருக்கு, மாவிலங்கு இவற்றின் வேர்களை வகைக்கு 175கி. எடுத்து இடித்து அதனை 33லி. தண்ணீரில்

போட்டு வற்ற வைக்க வேண்டும். அதில் தேங்காய்ப்பால், சிற்றாமணக்கெண்ணெய் வகைக்கு 1.3லி. சேர்க்கவேண்டும். பிறகு கோரோசனை, பஞ்சலவணம் திரிகடுகு (சுக்கு, மிளகு, திப்பிலி) திரிபலா (நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய்) முத்தக்காசு, பேரீச்சு, முந்திரிப்பழம், கற்கண்டு வகைக்கு 12 கி. எடுத்து பொடித்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து, நேரத்துக்கொரு கரண்டி வீதம் கொடுக்கத் தீரும். பத்தியமாய் இருக்க வேண்டும்.

மிளகு, பூண்டு, வசம்பு, வகைக்கு 8கி. ஈருள்ளி 17.5 கி, நெல்லிமுள்ளி, பூவரசம்பூசாம்பல் வகைக்கொரு பிடி எடுத்து இவற்றை யெல்லாம் ஆடு தீண்டாப் பாளைச் சாற்றில் அரைத்து 337 மி.லி நல்லெண்ணெயில் போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து புண்ணில் போடத்தீரும். *(புத்.482-83)*

## *2. புங்கெண்ணெய்*

மஞ்சள், வெள்ளைப்பாடாணம், வேம்பாடம்பட்டை, வல்லாரைச்சாறு, நல்லெண்ணெய், புங்கன் வேர்ப்பட்டைச் சாறு இவற்றைத் தக்க அளவிற்குக் கூட்டி பதத்தில் வடித்து மேலே பூச வேண்டும். பிறகு குளிப்பாட்ட வேண்டும்.

தூதுவளை, ஓரிலைத்தாமரை, நீலி, எருக்கம் வேர், கொடிவேலி இவற்றைச் சமமாக எடுத்துக் கொள்க. கார்போகி, கருஞ்சீரகம், கெந்தகத்தை எடுக்க. நல்லெண்ணெயைச் சேர்த்து காய்ச்சி பதத்தில் வடித்திறுத்து கரப்பானின் மேல் போட குணமாகும். *(ஏடு.42-328)*

3. குருந்து, பெருமருந்து, சிறுகுறிஞ்சாவேர், தூதுவேளையின் பருத்தவேர், முருங்கை, புலிதுடக்கி (இண்டு), கொடிப்பாலை, சிறுகத்திரி, பொன்முசுட்டைவேர், ஆதொண்டை, மிளகரணை, சங்கன் வேர், கருணைக்கிழங்கு, பீநாறிப்பட்டை, செங்கத்தாரிவேர், எருக்குவேர், அவுரிவேர், நன்னாரிவேர், வெள்ளைப்பூண்டு, வசம்பு ஆகிய இச்சரக்குகளை வகைக்கு 12கி. எடுத்து சிறுசிறு துண்டுகளாக நறுக்கி அனைத்தையும் தண்ணீர் விட்டு நன்றாக அரைத்துக் கொள்க.

நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், வேப்பெண்ணெய் ஆகிய மூன்றையும் சேர்த்து 1.3லி. அளவெடுத்து கற்கமாக்கிய சரக்குகளைக் கலந்து பக்குவமாக எரித்து வடிகட்டி இறக்கவும். இதனைக்

கரப்பானுள்ள குழந்தைகளின் தலை, மார்பு முதலிய இடங்களில் தடவி வர வாதகரப்பான் நீங்கும். *(சர.வை.மு-232-233)*

4. ஆமணக்கெண்ணெய், ஈரவெங்காயம், 1.3லி. சங்கங்குப்பிச்சாறு 2.6லி. பூதக்கரப்பான்பட்டை 89கி., வசம்பு 8கி. இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து சூரிய புடமிட்டு வைத்து நண்பகல் வரை வெய்யிலில் வைக்க, எண்ணெய் நுரைத்துப் பொங்கும். அந்தப் பதம் அறிந்தெடுத்து சிறுகன விறகிட்டெரித்து வடித்துக் கொண்டு உள்ளுக்கு 4கி. அளவு கொடுக்கவும். கசப்பு, புளிப்பு தவிர்க்கவும். *(ஏடு.612-20)*

5. புங்கு, ஆடாதொடை, நாய்வேளை, சங்கு இவைகளின் வேர் வகைக்கொருபிடி, வசம்பு, உள்ளி, கருஞ்சீரகம், நற்சீரகம், வெளிச்சிப்பிசின், கடுக்காய், பொடுதலைக்காய், கத்தூரிமஞ்சள் வகைக்கு 25கி. ஈருள்ளி 350கி. எடுத்துக் கொள்க. 1.3லி. விளக்கெண்ணெய், சங்கங்குப்பிச்சாறு 1.3லி. இவற்றை எடுத்து அதில் மேற்சொன்ன சரக்குகளைப் பொடித்துப் போட்டு சூரியபுடம் வைத்து 4கி. கொடுக்க கரப்பான் தீரும். *(புத்.482-843-84)*

***எண்ணெய்***

வெள்ளாட்டு மொந்தையை அரைத்து தேங்காயெண்ணெயில் கலந்து காய்ச்சி 5-10மி.லி. உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் பூச தீரும். *(ஏடு.185-100)*

6. விளக்கெண்ணெயையும் பூவரசங்காயையும் இடித்துப் பிழிந்த சாறு, மணித்தக்காளிச்சாறும் வகைக்கு 395மி.லி.. குமரிச்சாறு 163மி.லி. இவற்றைக் கலந்து கொள்க. அதில் கருவாப்பட்டை, ஏலம், சிவதை, பூதகரப்பான்பட்டை வகைக்கு 4கி. அரைத்துப் போட்டு, அதைக் கடுகு பதமாய்க் காய்ச்சி 488 மி.கி. அளவு மூன்று வேளை கொடுத்து மேலெங்கும் அக்கடுகை பூசி வரக் கரப்பான் தீரும்.

*(புத்.482-84) (கை.பி.பால.வை.போதினி-155)*

7. எருக்கம்பால், அரிதாரம், கொடிவேலி, வெள்ளுள்ளி, வசம்பு, சீனக்காரம் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து வதக்கிய இலைக் கள்ளியின் இலைச்சாற்றில் பதமாக அரைத்துக் கொள்க. நெய், நல்லெண்ணெய், சிற்றாமணக்கெண்ணெய், வேப்பெண்ணெய் இவற்றைத் தேவையான் அளவெடுத்து மேற்சொன்ன விழுதைக்

கலந்து கொள்க. மஞ்சள் பொடியைச் சேர்க்க. எண்ணெயைக் காய்ச்சி பதத்தில் வடித்துக் கொள்க. அதனைத் தினமும் வீக்கத்தின் மேல் ஊற்றி தடவுக. இரவில் பன்னிரெண்டு எருக்கிலையை வதக்கி கரப்பான் மேல் வைத்துக்கட்ட வாத கரப்பான் வீக்கம் நீங்கி குணமாகும்.

*(ஏடு.822-410, 411, 42-320, 321)*

8. மாவிலங்கப்பட்டைச்சாறு, இலைக்கள்ளிச்சாறு, வாத கரப்பான் பட்டைச்சாறு, ஆற்றுத் தும்மட்டிக்காய்ச்சாறு, குப்பைமேனி இலைச்சாறு, திருகுகள்ளிச்சாறு, அவுரியிலைச்சாறு இவை வகைக்கு 5.2லி. எடுத்துக் கொள்க. சிற்றாமணக்கெண்ணெய் 1.3லி. எடுத்துக் கொள்க. இவற்றை ஒன்று சேர்த்துக் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்துக் கடுகு திரள் பதத்தில் கோரோசனை 4கி. எடுத்துப் பொடித்துத் தூவி கிளறி பத்திரப்படுத்தி வைத்துக் கொள்க.

*(கை.பி.பால.வை.போதினி-155,156)*

### குழம்பு

வெள்ளைப்பூண்டு, மிளகு இவை இரண்டையும் வகைக்கு 15கி. செருப்படியின் சாறு 325மி.லி. எடுக்க. சாற்றில் சரக்கை அரைத்து எரித்து குழம்பாக்கி கிண்ணத்தில் வழித்து வைக்க. நாளைக்கு இரண்டு வேளையாக நான்கு நாட்களுக்குக் கொடுக்கவும். இவ்வாறு கொடுக்க வாத கரப்பான் குணமாகும். *(ஏடு.277-107,108)*

### மருந்து

பூதகரப்பான் பட்டை, பூவரசம்பட்டை, நுணாவேர்ப்பட்டை, இலுப்பைக்கட்டி இவைகளைச் சமமாய்ச் சுட்டுச் சாம்பலாக்கி நல்லெண்ணெயிற் குழைத்துத் தடிப்பு மேல் தடவ மாறும். கொன்றைக் கொழுந்தை அரைத்துத் தடவ மாறும். *(புத்.482-83)*

### 34. திமிர் வாத கரப்பான் - குறிகுணங்கள்

உட்கார்ந்து எழுந்திருக்கும் போது கால், கை, இடுப்புசந்து திமிர்த்து பிடித்துக் கொள்ளுதல், நெறி கட்டிக் கொள்ளும். செயலிழந்து வீங்கி வெடித்துப் புண்ணாகும். உடல் ஊதிக் கொள்ளும். தண்ணீர் வேட்கையுண்டாகும். உடம்பில் சூடுண்டாகும். உடலில் உளைச்சல் ஏற்படும். இவை திமிர்வாத கரப்பானின் குறிகுணங்கள்.

*(ஏடு.233-168)*

### *எண்ணெய்*

சத்திச்சாரணை, மிளகரணை, சிறுகுறிஞ்சா, பெருமருந்து, நன்னாரி, பெருங்காவளை, தூதுவளை, சடைச்சி, சிவதை, சிறுவழுதலை, கண்டங்கத்திரி, சிற்றாவரை, சிறுகுரோட்டை, சீந்தில், அப்பை, உத்தாமணி இவற்றை வகைக்கு 35கி. எடுத்து தண்ணீரில் போட்டு நான்கிலொன்றாய்க் காய்ச்சி அதில் அரத்தை, சதகுப்பை, இந்துப்பு, பூதகரப்பான்பட்டை, உள்ளி, வசம்பு, கடுகு இவற்றை வகைக்குச் சமனெடுத்து கூட்டி தண்ணீர் விட்டரைத்துக் கொள்க. நொச்சி, சங்கு, சங்கங்குப்பி, குப்பைமேனி, மணித்தக்காளி இவற்றின் சாறுகளை வகைக்கு 1.3லி. எடுக்க. அவ்வளவே விளக்கெண்ணெய் எடுத்து சேர்த்தெரித்து வடித்து 5-10மி.லி. உள்ளுக்குக் கொடுக்கவும். மேலுக்குப் பூசவும். *(ஏடு.316-210,211).*

### *35. விஷக்கரப்பான் - குறிகுணங்கள்*

உடம்பு சிவப்பாக ஆகி சிரங்கு ஏற்பட்டு அதில் நீர்பாயும். ஊறல் ஏற்படும். தலை வலிக்கும். சூடாய் இருக்கும். வாயில் புண் உண்டாகும். அது வெடித்து நீராகும். *(கை.பி.98-155)*

### *விஷக்கரப்பானுக்கு நெய்*

காட்டில் வளரும் நீர்வெட்டி நெல்லைப் பழைய காடி வார்த்து வைத்துக் கொள்க. அதனுடன் கருஞ்சீரகத்தை அரைத்துச் சேர்த்துக் காய்ச்சிக் கொள்க. அந்நெய்யை உடம்பில் பூச விஷக்கரப்பான் நீங்கும். *(ஏடு.601-79)(கை.பி.98-159)*

### *36. விஷக்கரப்பான் - குறிகுணங்கள்*

உடம்பில் சேனையின் குருப்புப் போல பல குருப்புகள் ஏற்பட்டு அதிலிருந்து நீர் வெளிப்பட்டு சொறியுண்டாகும். விடத்தினில் சூடு ஏற்பட்டு, குருக்கள் வெடித்து பிறகு புண்ணாய் ஏற்படும்.

முகம் கனமாய் ஆகும். நீர்கோர்த்துக் கொள்ளும். வெள்ளரிப்பழம் போல் ஆகி அதனின்று நீரும்பாயும். இவை கடிவிஷக்கரப்பானின் குறிகுணங்கள். *(கை.பி.98-159)*

### *தைலம்*

நெய் 1.3லி. கருஞ்சீரகம், துத்தம், வேம்பாடம், கார்கோல், மஞ்சள், கோட்டம், மிளகு, துருசு, சந்தனம், சாம்பிராணி, சாதிக்காய்,

அதிமதுரம், கருஞ்சூரை இவற்றை வகைக்கு 5கி. ஆகவும் எடுத்துக் கொள்க. செந்நெருஞ்சிச்சாறு, சாரையிலைச்சாறு, வெங்காயச்சாறு, மாறாந் தண்டின் சாறு, சீந்தில், அவுரிச்சாறு, வெற்றிலைச்சாறு இவற்றைச் சமமாக எடுத்துக் கொண்டு சேர்த்துக் காய்ச்சி தேய்த்து வந்தால் விஷக்கரப்பான் நீங்கும். *(கை.பி.98-155)*

## *37. வீங்குகரப்பான் - குறிகுணங்கள்*

முன்னதாக உடம்பில் அங்கங்கு துண்டு துண்டாக வீங்கும். பிறகு அவைகள் புண்ணாகி நெருப்பு பட்டால் எரிவதைப் போன்று எரியும். சிறிதுநேரம் கழித்து அவ்வெரிச்சல் நீங்கிக் குளிர்ந்து அந்தப் புண்களிலிருந்து சிலை நீர் சொரியும். *(புத்.477-238)*

### *எண்ணெய்*

செங்கத்தாரி, கருநொச்சி, முடக்கொத்தான், கழற்சி, சங்கு, சங்கங்குப்பி, கிரந்தி நாயகம், சிறுசெருப்படை, சிறுசின்னி, முதியார் கூந்தல், உத்தாமணி, கொடி வேலி, வெள்ளறுகு, வேம்பாடம்பட்டை, சிவனார்வேம்பு, சிவதை, கண்டங்கத்திரி, பூதகரப்பான் பட்டை, சீரகம், கருஞ்சீரகம் இவையெல்லாவற்றையும் சமமாய் எடுத்து விளக்கெண்ணெயிற் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொடுக்க வீங்கு கரப்பான் நீங்கும். *(புத்.482-91)*

## *38. வெடி கரப்பான் - குறிகுணங்கள்*

உடல் முழுதும் வீங்கும், அசைவுள்ள கீல்கள் தோறும் வீங்கி அதில் முகமுண்டாகி வெடிக்கும். சுரமடிக்கும், தலை வலிக்கும். நமைச்சல் உண்டாகும். இக்குறிகுணங்கள் ஏற்பட்டால் வெடி கரப்பான் ஆகும். *(புத்.477-232) (கை.பி.பால.வை.போதினி-170)*

உடலெல்லாம் வெடித்துப் போகும். வெள்ளரிப்பழம் போல ஆகி அதனின்று நீர் பாயும். சுரம் அதிகமாகும். தடித்து பிறகு விடம் போல் வீங்கிக் கொள்ளும். உடல் எங்கும் புண்ணாகி விடும். துடித்துப் போகும். கோழையும் ஏற்படும். *(கை.பி.98-158)*

### *சூரணம்*

கருஞ்சூரை, நிலவாகை, சிவனார்வேம்பு, காட்டு மல்லிகை, மிளகரணைவேர், கிரந்திநாயகம், கழற்கொடிவேர் ஆகிய இச்சரக்குகளின் வேரை வெயிலில் நன்றாக உலர்த்தி இடித்து சூரணித்துக் கொள்க.

அதில் 250மி.கி. அளவெடுத்து இளஞ்சூடான வெந்நீரில் கலந்து நாளொன்றுக்கு இரண்டு வேளை சாப்பிடவும். 10 நாளைக்கு இம்மருந்தைச் சாப்பிட்டு மறுபடியும் பத்துநாள் பத்தியம் பிடிக்கவும். முதல் 10 நாளும் இளங்கீரை, முருங்கைப்பிஞ்சு இவற்றைக் கூட்டிப் புளியை விலக்கவும். *(சர.வை.மு. 233-234)*

### *சங்கங்குப்பி எண்ணெய்*

சங்கங்குப்பியிலை, சின்னியிலை, குப்பை மேனியிலை, நீர்ச்சுண்டிவேர், கழற்சியிலை, புங்கம்வேர், நுணாயிலை ஆகிய இவ்வேழின் சாற்றை வகைக்கு 165மி.லி. வீதம் எடுத்து அத்துடன் 280மி.லி. ஆமணக்கு எண்ணெயைச் சேர்த்துக் காய்ச்சி பக்குவ பாகத்தில் வடித்து உள்ளுக்கு 4கி. வீதம் புகட்டி வர வெடிக்கரப்பான் நீங்கும். *(புத்.477-232-233) (கை.பி.பால.வை.போதினி-170)*

### *39. வெண்கரப்பான் - குணங்கள்*

சுரம் உண்டாகும். உடல் வெடிக்கும். வெடித்துப் புண்ணாகும். நீர்போல் கோர்த்துக்கொண்டு வீக்கமும் ஆகும். கோழையுமுண்டாகும். குரல் தாழ்ந்து போகும். கழிச்சல் அதிகமாகும். மாதம் மூன்றில் தான் வரும். *(கை.பி.98-154)*

### *செவ்வாப்பு*

குழந்தை பிறந்தவுடன் உடல்முழுதும் சிவந்து வீங்கிக் காணுமோர் நோய்.

### *அளி செவ்வாப்புக்கு எண்ணெய் வகைகள்*

1. கழுதை விட்டை, குண்டுமணிவேர், சடைச்சி வேர், செம்முள்ளிவேர், கொழிஞ்சி வேர், தலைச்சுருளி வேர், ஈரவெங்காயம், வசம்பு, கொத்துமல்லி, செஞ்சந்தனம், சித்தரத்தை, பூதகரப்பான்பட்டை, இலவங்கம், வெள்ளை வெங்காயம் ஆகிய இவற்றை எடுத்து இடித்துப் பொடித்துக் கொள்க. அப்பொடியை வேப்பெண்ணெயில் போட்டு வேக வைத்து காய்ச்சிப் பதமானவுடன் இறக்கிக் கொள்க. அதனை உள்ளுக்கு 4கி. அளவு கொடுக்க அளிசெவ்வாப்பு நீங்கும். *(ஏடு.612-16)*

2. சிறுகிளாவேர், குட்டிவிளாவேர், முத்திருக்கம் வேர், தைவேளைவேர், சாரணைவேர், நாய்க்கடுகுவேர், நாயுருவி வேர், கருஞ்சூரைவேர்,

சங்கன்வேர், தலைச்சுருளி, பொன்முசுட்டைவேர், கருவாலம்பட்டை, தூதுவளைவேர், கரிப்பான் வேர், நீர்முள்ளிவேர், அஞ்சிலை, நொச்சி வேர், துத்திவேர், கத்தூரி மஞ்சள், கருஞ்சீரகம், கடுக்காய், செவ்வள்ளிக்கொடி, கொத்துமல்லி, பூதக்கரப்பான் பட்டை, வசம்பு, ஓரைப்பூடு, இலவங்கம், மிளகு, ஈரவெங்காயம், கடுகுரோகணி, வாய்விடங்கம் ஆகிய மருந்து பொருட்களை ஒன்று சேர்த்து பொடித்துக் கொள்க. வேப்பெண்ணெய், விளக்கெண்ணெய் இவற்றைக் கலந்து அதில் பொடியைத் தூவி வேக வைத்துப் பக்குவமானவுடன் வடித்திறக்கிக் கொள்க. இதனை உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசவும். புளி, வெல்லத்தைத் தவிர்க்கவும். இவ்வாறு செய்ய அளி செவ்வாப்பு நீங்கிவிடும். *(ஏடு.612-18)*

3. காட்டாமணக்கு வேர், கொடிவேலிவேர், சங்கங்குப்பிவேர், சங்கம்வேர், பொன்முசுட்டை, முருக்கம், செம்முள்ளி, தலைச்சுருளி ஆகியவற்றின் வேர்கள். புரசம் பட்டை, உகாயின் பட்டை, துத்தம், துருசு, ஈரவெங்காயம், வசம்பு, கத்தூரி மஞ்சள், கருஞ்சீரகம், கடுக்காய், சுக்கு, மிளகு ஆகியவற்றை எடுத்து இடித்துப்பொடித்துக் கொள்க. வேப்பெண்ணெயில் அதனைப் போட்டு வேகவைத்து மேலுக்குப் பூச அளி செவ்வாப்பு ஒழியும். *(ஏடு.612-18)*

### *உடுப்பு செவ்வாப்பு - குறிகுணங்கள்*

உடம்பெங்கும் வீங்கி வெடிக்கும். தோல் உரிந்து புண்ணாகும். குழந்தை வெப்பாய்க் கழியும். இவை உடுப்புச் செவ்வாப்பின் குறிகுணங்கள்.

புரசம்பட்டை, குட்டிவிளாவேர், குருந்தவேர், சடாமாஞ்சில் வேர், நன்னாரிவேர், பொன்முசுட்டைவேர், தலைச்சுருளிவேர், முத்திருக்கம் வேர், மாவிலங்கம் வேர் ஆகியவற்றை வேப்பெண்ணெயில் வேகவைத்து உள்ளுக்குக் கொடுக்கவும். மேலுக்கும் பூச உடுப்புச் செவ்வாப்பு நலமாகும். *(ஏடு.612-16)*

### *கட்டுச் செவ்வாப்பு*

குமிழன் பட்டை, கருஞ்சூரைவேர், பாவட்டை வேர், சிறுசின்னிவேர், முத்திருக்கம்வேர், பொன்முட்டைவேர், செம்பூலாவேர், ஈரவெங்காயம், வசம்பு, கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள், பூத கரப்பான்பட்டை, இலவங்கம்,

வெள்ளைப்பூடு ஆகியவற்றைச் சமமாகச் சேர்த்து வேப்பெண்ணெயில் வேகவைத்துக் கொடுக்கவும். *(ஏடு.612-13)*

### *நெத்திச் செவ்வாப்பு*

கருநொச்சியிலை, கழற்சி, சடைச்சியிலை, கிரந்திநாயகம், சூரத்திப்பட்டை, செங்கத்தாரிப்பட்டை, கூகைநீறு வேர், கழற்சி வேர், குண்டு மணிவேர், தலைச்சுருளிவேர், கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள், பூதகரப்பான்பட்டை, வெங்காயம், வசம்பு, செவ்வல்லிக்கொடி, செஞ்சந்தனம், அரத்தை, சதகுப்பை, மிளகு, வெள்ளை வெங்காயம், திப்பிலி ஆகியவற்றைக் கூட்டி இடித்து சிதைத்துத் தூளாக்கி வேப்பெண்ணெயில் வேகவைத்து 8.8கி. அளவு உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூசவும். இவ்வாறு செய்ய நெத்திச் செவ்வாப்பு நீங்கும். *(ஏடு.612-14)*

### *பொரிசெவ்வாப்பு*

உடம்பெங்கும் பொரிந்து சங்கம் பழம் போலே குமிழ்க்கும்.

பொன்முசுட்டை வேர், சங்கம்வேர், சூடுதுரத்திப்பட்டை, கருஞ்சுரைவேர், குமிழ்வேர், குமுத்திராக்கவேர், பாஞ்சாவேர், கொழிஞ்சிவேர், ஈரவெங்காயம், இலவங்கபத்திரி, மஞ்சள், கருஞ்சீரகம், கொத்துமல்லி, பூதகரப்பான் பட்டை ஆகியவற்றைக் கூட்டி இடித்து சிதைத்து வேப்பெண்ணெயில் கொதிக்க வைத்து உள்ளுக்கு 4.4கி. கொடுத்து மேலுக்கும் போட பொரி செவ்வாப்பு நீங்கும். *(ஏடு.612-15)*

# கரப்பான் - பாடல்கள்

## *நோய் வருவழி*

'பெருகுஞ் சோள மிறுங்கும் பெருங்கம்பு
வரகு காருடன் வாழையின் காயொடு
உரைகொள் பாகல் கெளிற்று மீனுண்டிடில்
விரிவதாய்க் கரப்பனு மிகுந்ததே' *(சர.வை.மு-34)*

ஏழான கரப்பன்தன் உற்பத்தி கேளு
யேத்தமா மாங்கிஷங்கள் புசிக்க யாலும்
கூழான கம்புதினை .... வரகு சாமை
கொடிதான கிழங்குவகை யருந்த லாலும்
பாழான பெண்மாய்கை தன்னில் சிக்கி
பாங்கான விகத்தான முயற்சி யாலும்
தாழான பாண்டங்கள் சமைத்துத் தின்னல்
தாக்குமே கரப்பானின் சாயல் தானே'

சாயலாய் தனக்குத்தான் மூத்த பெண்ணை
சாவினோ தாட்சியாஞ் சாதி தன்னில்
காயலாய்க் கலந்துண்டோர் கலகஞ் செய்தோர்
கற்புடைய மங்கையரைக் கருதி னோர்கள்
வாயாய் வாழைமரத்தை வெட்டி னோர்கள்
மருத்துவர்கள் வண்ணா னாவிதங் கூலி
கூயலாய் குடாதோர்கள் குருநிந் தித்தோர்
கொடும்பாவி கரப்பானில் குறிகொள் வாரே'

*(ஏடு.233-167)*

## *கரப்பான் தோன்றுதற்குரிய காரணங்கள்*

கரப்பான் தந்தைதாய்மேகத் தாலும்
கருவான தோஷங்கள் விஷத்தி னாலும்
கோப்பான கிரந்தியினால் கர்மத் தாலும்
கொங்கைபால் குடித்தமந்த கிருமி யாலும்
தாப்பான் கரப்பனது அணுகிக் கொள்ளும்
சத்தியமாய்ச் சொல்லுகிறேன் தகமை கேளு
ஏற்பான கரப்பனது ஈரொன்ப தாகும்
இதின்மேலே அவுஷதங்கள் குறியும் கேளே.

கேளப்பா வாதத்தில் கரப்ப னெட்டு
　　கெறுவான பித்தத்தில் கரப்ப னஞ்சு
நாளப்பா சேற்பனத்தில் கரப்ப னஞ்சு
　　நாடுமப்பா பதினெட்டுத் துகையு மாச்சு
சூளப்பா வாதத்தில் பேர்தான் கேளு
　　சுகமான மாரிகொள்ளி அத்திக் காயும்
வாளப்பா, கொத்துச் செங்கரப்பான் சூலை
　　வெப்பான சுரகர்ணன் கரப்பன் தானே.

தானென்ற பித்தத்தில் கரப்பன் கேளு
　　தயவான விஷகரப்பன் சுரக ரப்பன்
தேனென்ற நீர்க்கரப்பன் உள்ளு ரோகம்
　　தேகமதில் தழுகணையு மிவைக ளைத்து
நானென்ற வெடிகரப்பன் செங்கி ரந்தி
　　நல்லவிஷ வெடிகரப்பன் மண்டை சூலை
கானென்ற சுரவாதக் கரப்ப னோடு
　　கண்டறிந்து அசாத்தியமும் சாத்தியமும் பாரே.

பாரென்ற வாதத்தில் சாத்தியங் கேளு
　　பாங்கான சுரகர்ணன் மாரி வெப்பு
ஊனென்ற பித்தத்தில் சுரக ரப்பன்
　　உள்ளிநோய்க் கரப்பனொடு யிவைகள் தீரும்
கானென்ற சேற்பனத்தில் வெடிகரப்பன்
　　தயவான மண்டையிலே கரப்பன் சூலை
வேனென்ற இத்திரையும் சாத்திய மாச்சு
　　விளம்புவேன் குறிகுணமும் மருந்து மேலே.

*(கை.பி.98-150-151)*

### *கரப்பான் - குறிகுணங்கள்*

தயங்குக ணந்தோன்றுந் தான்கரப்பான் - நயம்படவே
　　வந்தூறும் அக்கணத்தில் வாதக் கரப்பான்.

*(ஏடு.477-228)*

பிள்ளையுங் கனத்தி ருக்கும்
　　பிரண்டைபோல் கடித்துக் கட்டும்

உள்ளமுஞ் சிவந்து கண்ணில்
உடல்தனில் வெளுத்தி ருக்கும்
தள்ளவே மேனி வாடித்
தலையெடுத் திராது கண்டாய்
கள்ளவிழ் கோதை மாதே
கரப்பா னின்குண மீதே.
*(ஏடு.362-47)(புத்.476-109)*

### *கரப்பான் வகைகள்*

ஆமென்ற கரப்பான்தா னேழுவித மாகும்
அடங்காத வாதத்தின் கரப்ப னோடு
காமென்ற கண்டமாங் கரப்பா னாகுங்
கடுகியதோர் வறட்சியாங் கரப்பா னோடு
தேமென்ற திமிர்வாத கரப்பான் தானும்
சிரசின்லிலே யேழு கபாலக் கரப்பான்
போமென்ற பித்தமாங் கரப்ப னோடு
பெரியசேற் றுமகரப்பான் பேர்தா னேழே'
*(ஏடு.233-167)*

முத்தோட மரியூது சூலை
முன்னுவெடி மண்டைபொரி சட்டை
சற்றோடு எருமையொடு செம்மை
தனிக்கொள்ளி தோடமொடு வாலை
முற்றோல்வ றட்சியொடு வீங்கல்
மூரிவரும் பதினெட்டு வகையாம்
கொத்தான கரப்பான்க ளென்று
கூறினார் பண்டையோ ராமால். *(புத்.477-228)*

செங்கரப்பான் அனல்கரப்பான் தானும் மண்டை
சிரங்குபண்ணும் அரிகரப்பான் பொரிக ரப்பான்
அங்கமதி லெழுகரப்பான் தானு மிக்க
அளராம் உதிரக்கரப்பான் கட்டி யோடு
பொங்கமாய்வீங்கிய கரப்பா னுந்தான்
புகலரி சட்டைதடி வெடி கரப்பான்

சிங்கமுக எரிகரப்பான் வாத பித்த
    சேஷ்மத்தோ டேகரப்பான் பதினெட் டாமே.
*(புத்.476-108)*

கருத்துறப் புடைக்க ரப்பான்
    கருங்கொள்ளி கரப்பான் வீங்கி
வருத்திடுங் கரப்பான் பித்தம்
    வாத சேற்றும கரப்பன்
பெருத்திடுங் செங்க ரப்பன்
    பிலத்ததோர் வரிக ரப்பன்
திருத்தமாங் கரப்ப னெல்லாம்
    தீர்ந்திட மருந்து கேளே' *(ஏடு.130-195)*

## குடிநீர்

ஓடுகின்ற சாரணையு முப்பு மரிதகியும்
    வாடுகின்ற பாருசுக்கு மாகுடிநீர்- நாடணையீர்
மருகமருக் குடிக்க வாய்வு கரப்பன் வீக்கம்
    பருபருக்கக் கழியும் பார் *(ஏடு.362-48)*

## ஆகாப் பொருட்கள்

... ... ... ...
    ... ... ... ...
... ... ... ...
    ... ... ... இப்பாலே
ஏற்றி இறைச்சி கவிச்சுடனே
    இனிய கரப்பான் பண்டமெலாம்
சாற்ற ஆகா வெனமுனிவர்
    சகச மாக மொழிந்தனரே. *(புத்.476-109,477-241)*

## கரப்பானுக்கு நெய்

உற்பனமாம் நெய்யொன்று சொல்லக் கேளே
    உய்ந்திடுந்தெங் கெள்ளெண்ணெ பசுநெய்
        மூன்றும்
விற்பனமாம் படிகால் காலரைநே ரான
    விட்டதிலே அமிர்தவல்லி விஷ்ணு கிரந்தி

அற்புதமாம் பேய்ப்புடோல் முசுமு சுக்கை
ஆனையடி சிறுபுட்கால் பிறுத்தி மண்டை
கற்புலவும் வெண்குடங்கல் கருங்கு டங்கல்
கைதோன்றி தாமரையின் வளையங் கூட்டே.

வளையமொடு தேசிக்கா யீரா றுந்தான்
வகையொன்றுக் கோர்பலம தாகக் கூட்டி
களங்கமற யிடித்துச்சார் பிழிந்து நெய்யில்
கலந்துடனே சதைகறுத்த கோழி யொன்று
புளகமுறுங் குருதிவிடா துயிரை மாட்டி
போட்டிடித்து தேங்காய்ப்பால் படிரெண் டுக்குள்
தளகமுறப் பிழிந்தெல்லா மொன்றாய்ச் சேர்த்து
தானதிலே கற்கவகை சாற்றக் கேளே.

கேளடா திரிகடுகு மதிர மேலம்
கிருபையுள்ள சாதிக்காய் பத்திரி கிராம்பு
வாளடா சீரகம்ரெண் டரிசி யாறு
வளமாக வகைவகைக் கோர்க்கழஞ்சு

சூளடா சிவந்ததொரு சித்திரமூ லந்தான்
சுத்திசெய்து பலமொன்று சேர்த்த ரைத்து
மாளடா நெய்தனிலே கதைத்துக் காய்ச்சி
வரும்பொழுது சர்க்கரை யோர் பலந்தான் போடே.

போட்டதனை வயதுகண்டு வடித்துக் கொண்டு
புகட்டிவிடு மூன்றுநா ளந்தி சந்தி
--- --- --- ---
--- --- --- ---
ஊட்டிடவே கரப்பன் --- ---
ஓடிவிடும் --- --- --- *(கை.பி.98-46-47)*

## *2. ஆதொண்டை எண்ணெய்*

புங்குட னாதொண்டை நாய்வேளை சங்குடன்
போதவோர் பிடிய தாகப்
புதுவசம் புள்ளியிரு சீரகம் வெளிச்சையோடு
பொடுதலை கத்தூரி நிசியும்

பொங்கமுள வரிதகி யோடளவு தானரை
போடு படிவெண் காயமும்
பொழிலாய் விளக்கெண்ணெ யிருநாழி
தன்னுடன்
போட்டிடித் திவைக ளெல்லாம்

சங்கநற் குப்பியிலை யின்சாறு கூடவே
தானுமொரு நாழி விட்டுத்
தையலே பானுபுட மேற்றியோரு காசளவு
தான் பாலர்க் கீயவே

அங்கமதி லெழுகரப் பானோடு கர்ப்பத்தில்
ஆமிரு கிரந்தி முதலாய்
ஆருங் குடித்துவிட வேறெண்ணெய் தேடாத
ஆதொண்டை எண்ணெ யிதுவே.
*(ஏடு.362-47)(புத்.477-245-246,476-109-110)*

### 3. சாரணை எண்ணெய்

சாரணை யுத்தா மணிவேருந்
தானே கிளரு முடக்கொத்தான்
வாரணி சிறிய வழுதலைவேர்
... மெருக்கு முருங்கைபுங்கு
வேருடன் கொடிக்கழல் மிளகுள்ளி
மிகுத்த பூதக் கரப்பானுங்
கூரணி வசம்புஞ் சமனாகக்
கொண்டா மணக்கெண்ணெயிற் கெந்தித்தே
பதத்தில் வடித்து உள்ளுக்குக் கொடுத்து
மேலும் பூசவும். *(ஏடு.42-335)*

### 4. பூவரசு எண்ணெய்

வளமாய்ப்பார் சிற்றேரண் டெண்ணெய் முக்கால்
வகையுடனே பூவரசம் பூவும் காயும்
இளமாய்ப்பா ரிடித்ததன் சாற்கால் கூட்டி
இனிசிவந்த மணிக்காளிச் சாறு காலும்

தளமாய்ப்பார் கருவாயின் பட்டை யேலம்
தண்மையென்ற சிவதையோடு கரப்பான் பட்டை
குளமாய்ப்பார் குமரிச்சா றரைக்கால் சேர்த்துக்
குஞ்சரமே கடைச்சரக்கு வராக னொன்றே.

ஒன்றாக விவையெல்லாங் கலந்து கொண்டிங்
குத்தமமாய்க் கடைச்சரக்கைச் சூரணித்துத்
தென்றாகத் தெளிந்தநன்றா யடுப்பி லேற்றித்
தேவிமனோண் மணிதன்னைத் தியானம் பண்ணி
கண்ணான கணபதியை வணங்கிப் போற்றிக்
கடுகெடுத்துப் பதமுடனே பார்த்தி றக்கித்
துன்றாகத் துட்டெடைதான் மூன்று வேளை
தொட்டெடுத்து நாவதனில் புகட்டி டாயே.

புகட்டியே மேலெங்குங் கடுகைப் பூசு
பொல்லாத முன்சொன்ன நோய்க ளோடும்
மகட்டியே தாய்தனக்குக் கவிச்சா காது
வையகத்தில் பூசனிக்காய் எள்கொள் ளாகா
அகட்டியே எருமைப்பால் நெய்யா காது
அன்பாக மற்றதெல்லாங் கூட்டச் சொல்லு
தகட்டியே பதினாறு பிராய மட்டும்
தன்மையுடன் மங்கையினால் நோயுண் டாமே
*(புத்.477-241,476-110)*

### 7. செருப்படை எண்ணெய்

செருப்பினடி யிண்டோடு சேர்கிரந்தி நாயகம்
வெருக்கில் நிலக்கிழங்கு நொச்சில் - நெருக்கஞ்சங்
குப்பிலை சங்கோடு கொட்டைக் கரந்தையும்
செப்புங் கழல்துளசி சேர்.

சேர்கரு நொச்சிலொடு செங்கரிப்பான் மாக்கிழங்கு
கூர்முருக்கம் பட்டை கொடிவேலி - சேர்கின்ற
கோழி யவரையுள்ளி கோதையேதூ துவளை
கோளியுந்தான் தேட்கொடுக்கு கொள்.

கொள்ளக் கரிசாலை கூறுஞ்சங் கம்பட்டை
அள்ளல் அவுரி அழகுசுவர் - முள்ளங்கி
கேளமுக்க ராவின் கிழங்கிலையு மாகப்பா
தாளமூ லிக்கூடத் தான்.

வத்தகப் பட்டைபிராய் வார்பூ வரசந்தோல்
செத்த பழுப்பு சிறுசின்னி-ஒத்தநீர்
முள்ளிமுடக் கற்றான் முதிர்புங்கம் பட்டை தொண்டை
தள்ளவொண்ணாச் சாணாக்கி தான்.

சிறுகுறட்டை சீந்திலுடன் சேர்பழு பாகல்
முருகுகண்டங் கத்திரி முள்ளி-அறுகுடனே
தன்னொக்கச் சாறு தனியே வடித்துக்கொள்ள
இன்னங்கேள் சொல்வாம் இசைந்து.

பெருவாயன் லத்திப்பால் பேரானை லத்தி
குருவாம் பசுவினிட கோநீர்-கருகாத
நிம்பழச் சாறும் நிறைவெங்கா யச்சாறும்
இன்பமுடன் எல்லாம்ப தக்கு.

எண்ணெய் குறுணிகலந் தீண்டே வெயில்வைத்துப்
பண்ணும் படிகற்கம் பார்த்திடீர்-நண்ணும்
மரமஞ்சட் குப்பை வளர்பூதப் பட்டை
தெரிபரங்கிப் பட்டையுடன் சேர்.

சேர்செங்கத் தாரி திகழும்வேம் பாடனுடன்
கார்போ கரிசி கனவாளம் - பாரில்
வசம்பும் வகைக்கீர் வராக னெடையாம்
நிசம்பெறவே காய்ச்சிவிடு நீ.

நீகேள் கரண்டிதா னேராகக் கொள்ளவே
வாகாய்க் கரப்பான் வகைதீரும்-நோகாய்க்கேள்
சூலிக்குத் தான்கொடுக்கச் சொன்னா ரறிந்துடனீ
பாலிக்கும் பத்தியஞ்செய் பார். *(புத்.477-240)*

### *8. எண்ணெய்*

ஈரவெங்கா யச்சாறோர் படிவிளக்கெண்
　　ணெயும் படியொன் றிரண்டுகூட்டிச்
சீரிதா கியகலசத் தினிலூற்றிச்
　　சின்னியிலை சிவனார்வேம்பு
சாரணைதூ துவளைகரு நொச்சில்மணித்
　　தக்காளி தன்னோடேகற்
பூரவல்லி சிறுக்கீரை சேம்புசெருப்
　　படிபருத்தி பொன்னாங்கண்ணி

கண்ணிநீர்முள் ளியுஞ்சங்கங் குப்பிவிரு
　　குசங்கு கண்டங்கத்திரித்
தன்னிலையோ டேயிடித்துச் சாறுபிழிந்
　　தேயந்தச் சாறோர் நாழி
நண்ணுமதி மதுரஞ்சீ ரகங்கருஞ்சீ
　　ரகங்கடுக்காய் நல்லயேலம்
உண்ணுமிள குடன்பரங்கிப் பட்டைசத
　　குப்பைமர மஞ்சள்ஓமம்.

ஓமந்திப் பிலியிதெலா மொருவகைக்கீர்
　　காசெடையிட் டுரலிற்றூள்செய்
தாமணக்கெண் ணெயிற்போட்டுக் காய்ச்சிவடிக்
　　கட்டியெடுத் ததனை வைத்தே
நேமமுட் னேகரப்பான் ரோகிகளுக்
　　கோர்கரண்டி நேரமொன்றுக்
காமின்னோ யில்லாருக் கந்தவெண்ணெய்
　　காசெடையொன் றதிற்கலந்தே

கலந்திரண்டு மேகலந்து கொடுவிரண்டு
　　மூன்றுவிசை கழியும்பத்தியம்
உலர்ந்தபா சிப்பயிரு மரிசியுங்காய்ச்
　　சிக்கொடுத்தா லுடன்கரப்பான்
றொலைந்திடுமிவ் வெண்ணெய்வடித் துணும்போது
　　பரங்கிப்பட் டைசூரணித்தோர்
கலந்தனிலிட் டேயதிலே வடித்துக்கொள்
　　சரபமன்னர் கருத்தி தாமே. *(சர.வை.மு.-226)*

### *9. புங்கம்பூ எண்ணெய்*

புங்கம் பூவும் புளிநறளை
புனித மான வசம்புள்ளி
கங்கு லாதி சீரகமும்
கதித்த பாலை நன்னாரி
பொங்கு பசுவின் பால்வார்த்துப்
போத வெண்ணெ யெரித்திடவே
எங்கு முள்ளகரப்பன்போ
மெரிக்கும் விளக்கி னெண்ணெயிதே.
*(புத்.477-241,476-115)*

### *10. சிறுகுறிஞ்சான் எண்ணெய்*

சிறுகுறிஞ்சான் மிளகரணை காட்டு மல்லி
செப்பியிடு பாலொடிவை நிலவி ளாவும்
அறிவாய்கே ளிவைவேர்கள் வசம்போ டுள்ளி
ஆகாசக் கருடனுட கிழங்கு மெல்லாம்
தருகாமல் சமன்கூட்டி யதிலே ரண்டம்
தந்திடுமே யெண்ணெயது சமனாய்க் கொண்டு
முருகவே காய்ச்சிவடித் தருந்த நித்தம்
முந்நூற்றிரு பதுகரப்பான்-போமே.
*(புத்.477-244,476-118)*

### *11. எண்ணெய்*

கூசுஞ்செங் கத்தாரிப்பட்டை சின்னி கூர்மிளகு
வீசுஞ் சிறுகுறிஞ்சா வேர்கூட்டி-காசினியில்
ஏற்கும் பல-கரப்பன் யெண்ணெயிட வேகுடிநீர்
திண்ணமுடன் போமே தினம். *(ஏடு.362-48)*

### *12. எண்ணெய்*

கருங்கிரந்திக் கரப்பானுக்குக் கருநொச்சி
யிலையெண்ணெய் கலந்தரைத்தே
வொருநாரத் தங்காய்போ லொருவிழுதும்
வெள்ளைப்பூண் டுடன்வசம்பும்

கருஞ்சீரகங் கடுக்காய் கலந்தோர்படி
விளக்கெண்ணெய் கலந்தரைத்தே
பரிந்துகரைத் தொருமூன்று பகல்வெயிலிட்
டேநாலாம் பகலெடுத்தே.

எடுவெரித்து பதத்தில்வடித் தேயொருகா
சத்தினையுள் ளிறங்கத் தானே
கொடுதொண்டைக் கட்டிருமல் கருங்கிரந்திக்
கரப்பானோடு கொடுநோயாவும்
விடுமென்று சரபேந்திர வேந்தர் சொல்லு
முறையிதனை விரும்பிக் கொள்வார்
படிமிசையி லடைந்தவர்க்கும் படிப்பிப்பார்
பரம்பரையாய் படருந்தானே *(சர.வை.மு.-237-238)*

*15. பதினெண் கரப்பானுக்கு வேளை எண்ணெய்*
பார்த்திடா யிருவேளைசெம்ப ருத்தி
பரிமணித்தக் காளியுடன் பொன்னாங்காணி
பார்த்திடாய் சூரியந்த நத்தைச் சூரி
பகரம்மான் பச்சரிசி தகரை பாசி
வார்த்திடாய் குட்டிவிளாம் பட்டை பாகல்
வண்மைகருந் துளசிச்செம் முள்ளி யிண்டு
கார்த்திடாய்பாவட்டை பொடுத லைத்தான்
கருங்காலி கழலிலைபுள் ளடிய தாமே.

ஆமேதான் சுரைதுவரை கொன்றைப் பட்டை
அழகான தவமுருங்கை சாலை மேலும்
வாமேதே னகத்திகற் றாழஞ் சோறும்
வகையான சின்னியீ ருள்ளி பூண்டும்
காமேதா னிவ்வகைக்குத் தனிநீர் வாங்கிக்
கடும்பாண்ட மதனிற்கால் படிதான் வார்த்துத்
தாமேதான் ரவியில்வைத்துக் கடைமருந்து
தாரணியில் நல்லோமம் சாதிக் காயே.

காயோடு பத்திரியும் வசம்பு கோட்டம்
கண்மணியே கொத்துமல்லி காட்டுச் சீரம்
வாயோடு திப்பிலியு மிஞ்சி கூட்டு
வகைவகைக்கு வராகனெடை யஞ்சதாகத்
தாயோடே யாமணக்கி னெண்ணெய் தானும்
தப்பாமல் குறுணியதா யளந்த தூற்றி
மாயோடு சரக்கையெல்லா மெழுகா யாட்டி
வண்மையாய் கலக்கிவிட்டு மகிமை பாரே.

மகிமையா யெரித்திட்டே யெண்ணெ யாக்கி
வளமாகச் சிறுகுழந்தை யாண்டீ ரெட்டு
மகிமைபா ரிவ்வயதில் கரப்பான் கண்டால்
வகையுடனே பதினெட்டுக் கரப்பா னும்போம்
செகமகிழு மிந்தவெண்ணெய் செப்பக் கூடா
தேயத்தி லுண்மையென்ற பண்டி தர்கட்
ககமகிழ நூலீந்த தர்மத் தோரை
அங்கரத்தா லவர்பதத்தைத் தெண்டஞ் செய்யே.
*(புத்.572-49-50,477-243,476-117)*

## *17. எண்ணெய்*

வளருகின்ற நிலவாகை குமரி சங்கு
மணிக்கழற்சி தூதுவளை சங்கங் குப்பி
தளருகின்ற கூவிளை செந்தொட் டிக்கும்
தக்காளி செம்முள்ளி கண்டங் காரி
தளருகின்ற கருநொச்சி இண்டீ ருள்ளி
துவைத்துச்சா றொன்றரைக்கால் படிவீ தந்தான்
கிளருகின்ற கற்கமதி லளந்து விட்டு
கிருபையுள்ள விளக்கெண்ணெ படிதான்வாரே.

வார்த்தவுடன் தழுதாழை செங்கத் தாரி
மணிக்கடுக்காய் கரியசீ ரகமோ றொன்று
கோர்த்தவுடன் வகைக்குநால் கழஞ்சு வீதங்
குறையாம லரைத்தெண்ணெய் தனில்க லந்து
சேர்த்தவுடன் அடுப்பேற்றிப் பதமாய்க் காய்ச்சி
தெளிவாக வடித்திறுத்துக் கரண்டி வீதம்

பார்த்தவுடன் கொடுத்திடவே கரப்ப னென்ற
பதினெட்டுந் தீருமின்னும் பகரு வேனே.
*(கை.பி.98-39-40)*

## *18. எண்ணெய்*

அரிய மிளகு துருசுகடு
கதுவுங் கோஷ்டந் திப்பிலியும்
கரிய சீரகமும் ஓமம்
கஞ்சாங் கோரைக் குழிமீட்டான்
சிரியா வாரைப் பெரியாவாரைச்
சிவனார் வேம்புத் தமதாளி
பெரிய எண்ணெக் கொதிப்பித்து
பிள்ளை கட்கு கொடுப்பீரேல்
வரிய கரப்பான் பதினெட்டும்
மறந்து பறந்து ஓடிடுமே. *(புத்.476-111)*

## *20. அகத்தி எண்ணெய்*

அகத்திகற் பூர வள்ளி
அவுரிவெள் ளறுகு சங்கு
மகத்துவ வாடா தோடை
மணித்தக்கா ளியுமா வாரை
சுகத்தொடு சங்கங் குப்பி
சொன்னதோர் நிலக்க டம்பு
முகத்திநா யகங்க றுத்த
நெச்சியு முருக்கு கூட்டே.

பாரினில் ஈர வுள்ளி
பலவகை யுந்து வைத்துச்
சீர்பெற வகைக்கு ழக்காய்ச்
சிறக்கவே பிழிந்து கொண்டே
ஏர்பெற வாம ணக்கி
னெண்ணெயு மளந்து கூட்டி
வாரணி மாதே மஞ்சள்
மரமஞ்சள் கத்தூரி மஞ்சள்

சிவதை கடுகு ரோகணியும்
சீரக மான திருவகையும்
நவமாந் திரிகடு குடனேதான்
நல்ல திரிபலை யுங்கூட்டி
இவைவகை வராக னொன்றாக
எல்லாஞ் சரியாய் நீநிறுத்துத்
தவமா யரைத்து முன்சொன்ன
சாற்றில் கரைத்துக் கலக்கிடுமே.

எல்லா மொன்றாய்த் தான்கலந்தே
யிதமா யடுப்பில் வைத்தெரித்து
மெல்ல மெழுகு பதத்திறக்கி
வேறே கலச மதில்வடித்து
நல்லாய் கரண்டி யெண்ணெயுமே
நல்க விதிப்படி மூன்றுநாள்
சொல்லாக் கரப்பன் பதினெட்டுத்
துயரப் பட்டே யோடிடுமே. *(புத்.476-114,477-239)*

### *21.எண்ணெய்*

கருஞ்சீர கம்பூதக் கரப்பான்பற்
பாடகம்வெண் காயம் காயம்
பரிந்தவசம் புடன்கௌரி பாடாணஞ்
சடைச்சிகான்ப டருமொச்சை
சொரிந்துகொளச் செயுஞ்சிறுகாஞ் சோறிமிள
கரணைபொன்மு சுட்டைவேரும்
பெருங்குரும்பை புனலிசத்திச் சாரணைநன்
னாரிவேர்பெ ருமருந்தே.

மருந்தினங்கேள் சிறுகுறட்டை கொடுவேலி
வேர்சிற்ற வரைக்கிழங்கும்
இருந்தகுப்பை மேனியின்வேர் இவையனைத்து
மேயரைத்து கரைத்து நெய்செய்
அருந்திநக்கி யுண்டிடவு மலதுவிளக்
கெண்ணெயிற்செய் தவ்வாறுண்ணென்
றொருங்குடனற் சரபேந்திர ருரைத்தபடி
யுணக்கரப்பா னுடனேபோமே' *(சர.வை.மு.-228)*

## *24. கரிசாலை எண்ணெய்*

கரிசால் கம்பந் திராய்வேரு
கனத்த கருடக் கொடியுடனே
பொரிச்சால் பொரியும் பொரிகாரம்
பூதக் கரப்பான் பட்டையுடன்
எரிச்சா லெண்ணெய் வசம்புள்ளி
யெனவே கெட்டக் கரப்பான்கள்
மறுத்தால் தொண்ணூற் றறுகரப்பான்
அரண்டோ மெனவே போய்விடுமே. *(புத்.477-244)*

## *27. எண்ணெய்*

சத்திச்சா ரடைக்கிழங்கு சிற்றவரைக்
கிழங்குசெங்கத் தாரிவேரும்
இத்துடன்வே லிப்பருத்தி யின்வேரப்
பைக்கிழங்கு மிவையோரொன்றுக்
கெத்தினையொப் பெலுமிச்சங் காயளவ
தரைத்துள்ளி யிதில்வசம்பும்
வைத்திடுகம் பிப்பிசின்கார் போகரிசி
கருஞ்சீராம் வகையும் வைத்தே.

வகைக்கடுகு ரோகணியும் பூதகரப்
பானுடன்முன் வகையும் வைத்தே
புகன்மருந்துக் கோரோருகா செடைய ரைத்துக்
கரைத்ததனை பொருந்தக் கூட்டி
யிகழவின்மணித் தக்காளி யீரைஞ்சோ
டுடன்சிற்றா மணக்கினெண்ணெய்
பகர்நாழி விட்டிதெலாம் பதமாகக்
காய்ந்துவரும் பாத்திரத்தே

பார்த்தெடுத்துச் சிலந்திப்பூச் சியுமுழுக்குப்
போட்டிதெல்லாம் பதத்திறுத்தே
வார்த்தொருகா செடையளவு நக்கியுண்ட
பின்பதனை வகையாய்ப் பூசிற்

பூத்தபல கிரந்திபல கரப்பானும்
போமெனவே புலவர் மெச்சுஞ்
சீர்த்தசர பேந்திரனார் செய்முறையென்
றாலெவர்க்குந் திடமுண்டாமே'

*(சர.வை.மு.-234-235)*

இறக்கிப் பிள்ளைக் குள்ளுக்கே
யீந்து மேலுக் குப்பூசத்
திறக்கும் பதினெண் கரப்பானும்
தீர்ந்து போகு முண்மையிதே
பறக்கு மின்னும் பத்தியங்கார்
பவள வதர பயோதரப்பூச்
சிறக்கு மன்ன நடையாளே
செய்தே பரீஇக்கைப்பார்த்துவிடே

*(புத்.477-242,476-118)*

## *28. ஆதண்டை எண்ணெய்*

ஆதண்டை யிலைப்பூ மத்தை
யாம்புலித் துடக்கி சாணாக்கி
யிதாங் கோழி பிராய்சின்னி
தூதளை கற்பூர வள்ளியுடன்
சுகித்த சிலந்தி நாயகனு
மேதா முட்டி மேல்முட்டியெனு
மிசைந்த கோழி யவரையுடன்

மணித்தக் காளி முதலாக
மறுவத் துவைத்து சாறுகொண்டு
இணத்தாஞ் சாறு இருநாழி
யெண்ணெய் நாழி யேரண்டம்
அணிக்கொ ளெண்ணெய் நாழியதி
மான வெங்காயச் சாறுரியும்
கணித்த மாகக் கரமது
காணச் சொல்வோங் கருதிக்கேள்

உள்ளி வசம்பு அரத்தையுடன்
உகந்த பூதக் கரப்பானு
மெல்ல சதகுப்பை பெருங்குரும்பை
மேவு மஞ்சள் மரமஞ்சள்
உள்ள குக்கிலுந் திப்பிலியு
முகந்த தொருநாழி யெண்ணெய்க்கு
கொள்ளப் பலமொன்று விழுக்காடு
கொண்டே யரைத்துப் பதத்தில் வடி

வடித்துப் பூசு நசியம் பண்ண
மண்டைக் கரப்பன் முதலாக
அடுத்த வயிற்றில் விப்புருதி
ஆன பிளவை யிருமலுடன்
மிடித்த வுடம்பில் பலவீக்கம்
மேவுங் கரப்ப னிவைதீரும்,
அடியா தண்டைத் தயிலமென
அகத்திய பகவா னருளியதே *(புத்.42-331,332)*

## *31. எண்ணெய்*

சங்கிலைகை யாந்தகரை யிலைவிழுவி
வேரிலைகள் சரியதான
பங்குகொட்டைப் பாசிசெருப் படியிலையுஞ்
சமங்கூட்டிப் பருத்த வெள்ளை
வெங்காயம் வசம்பினை யுமேகூட்டி
நறுக்கிவிளக் கெண்ணெய் விட்டே
பொங்கவெரித் தேயிறக்கிக் குங்கிலியப்
பொடி போட்டப் புறந்துளாவே

துளாவுற வைத்திருகா செடைகொடுக்க
முக்கரப்பான் தொலைந்துபோகுங்
கிளையாது மேல்வந்து கிட்டாதென்
றேசரபேந் திரர்கிளர்த்தும்

வளமொழியே நமக்கிதமா கியமருந்தென்
    றேயழகை மாந்தரக்கண
கிளைஞர்முத லோரெவருங் கிடைத்தது கை
    கண்டதெனக் கிளிர்த்துவாரே. *(சர.வை.மு-240)*

### *1. பூவரசம் பட்டைத் தைலம்*

பூவரசு செங்கத் தாரி
    பூதகரப்பான் கண்டங் காரி
மேவுநில வாகை வகைக்கு
    விளங்கும் பத்துப் பலமாக
ஏவ நறுக்கிக் கியாழமிட்
    டிறுத்தாட் டுப்பால் படியொன்று
ஆவ மிளகு சதகுப்பையரிய
    வசம்பு வலம்புரிக்காய்.

காய்வெள் ளுள்ளி பரங்கிப்பட்டை
    கார்கோ லரிசி கருஞ்சீரம்
மூய வகைக்குக் கழஞ்சிரண்டு
    முலைப்பால் விட்டுத் தானரைத்து
பாயக் கியாழத் திற்கரைத்துப்
    பாய்வெள் ளாட்டுப் பால்விட்டுத்
தோயு மேஎண் ணெயிற்கலந்து
    சுகமாய் மெழுகு பதமி றக்கே.

### *2. எண்வகை கரப்பானுக்கு எண்ணெய்*

எண்வகைக் கரப்பா னிகழ்த்திடக் கேளா
    யீருள்ளி கரியசீ ரகமும்
இயம்பிய பூத கரப்பானும் வட்டக்
    கிலுப்பைவேர் காட்டினிற் பாகல்
ஒண்டிய மூல முடன் சத குப்பை
    உயர்வெள்ளைக் காக்கணான் மூலம்
ஓதிய தேவ தாரமும் வசம்பு
    முட்சங்கு வெள்ளறு குடனே

நண்புள சீனப் பட்டையுஞ் சுத்தி
நவின்றிடும் வகைவகைப் பலங்கால்
நாடுதோர் வாள விதையிரு பதுமின்
நற்சங்கங் குப்பிநீர் நாழி
அண்டரைத் ததில்சிற் றாமணக் கெண்ணெ
யதுவொரு நாழிவிட் டருந்த
ஆமொரு காசா யுடல்தனிற் பூச
வகையெட்டு மகலுமா மென்றே.

*(புத்.477-238-239,476-115)*

## *5. அனைத்துக் கரப்பானுக்கும் மேற்பூச்சு எண்ணெய்*

மிளகுள்ளி வசம்புவகை வராகன் ரண்டு
வெண்காயம் பலமரைத்தான் நெல்லி முள்ளி
இளகப்பூ வரசம்பூச் சுட்ட சாம்பல்
இதமாக ஒருவிடியு மிவையெல் லாந்தான்
விளராக ஆடுதின்னாப் பாளைச் சாறு
விட்ட்ரைத்துக் காலரைக்கால் படிதா னெண்ணெய்
உளமகிழ மருந்தையதி லிழைத்துத் தீயில்
உண்மையுடன் கொதிக்கவைத் திறக்கி யாற்றே.

ஆற்றிக் கோழி இறகதானால்
அன்னாள் வார்த்துக் கரப்பான்மேல்
தூற்றித் தடவக் கரப்பானுந்
துலைந்தே போகு மிப்பாலே
ஏற்றி யிறைச்சி விச்சுடனே
யினிய கரப்பான் பண்டமெலாம்
வாற்ற வாகா வெனமுனிவர்
சகச மாக மொழிந்தனரே.

*(புத்.477-242,476-109)*

## *8. பூதக்கரப்பான் பட்டை எண்ணெய்*

பூத கரப்பான் பட்டை
பூவரசம் பட்டை நுணாப்பட்டை
ஏதமில் கரப்பான் பட்டை
இலுப்பைக் கட்டி சரியாக

சாதிவை யெல்லாஞ் சுட்டுச்
சாம்பலாக இருநல் லெண்ணெய்ப்
போதக் குழைத்துக் கரப்பான்மேல்
போதத் தீரும் பொற்கொடியே.
*(புத்.477-241,476-109)*

### *9. விடதாரி எண்ணெய்*

வீங்கிய கரப்பான் விடத்தலை யிலையின்
கள்ளியுந் திருகிய கள்ளி
விளம்பிய வஜ்ரமா விலங்குடனே
முத்தமுந் தாழைக் கொம்மட்டி
ஓங்குறு குப்பை மேனியு மவுரி
உயர்பொடு தலைநிலக் கடம்பு
உறும்எரு மையின்ஆட் டாங்கொடி நொச்சில்
ஒப்புமா மணக்கிண்டி னிலையும்

ஆங்கிவை வகைக்கு சாறுழக் கதனில்
அதிக நல்லெண்ணெயு முழக்கு
அவையினிற் கற்கம் சீரகம் கடுகு
மடர்குரு விந்தம் குந்திரிக்கம்
பாங்குள குக்கில் திரிகடுகு காசியம்
பகர்தேவ தாரமிவ் வெடைதான்
பலம்பல மெரித்துப் பூசிக்கொள் கரப்பான்
பானுமுன் பனியெனப் படுமே.
*(புத்.477-243,476-119)*

### *12. கரப்பான் அனைத்திற்கும் பூசக்குழம்பு*

சட்டமாய்க் கெந்தியோடு துருசு துத்தம்
சாருவெண் காந்தமொடு பவளப் புற்று
மட்டவே மனோசிலையும் ஆக வொன்று
வாங்குவாய் கழஞ்சி வீதமாகக் கொண்டு
திட்டமாய் சாம்பிராணி கருஞ் சீரகம்
சேர்த்திடுவாய் அரைக்கழஞ்சி லிங்கந் தானும்
இந்தவகை மருந்தெல்லா மொன்றாய் சாந்து
போலரைத்து நன்றாய் பொடியே பண்ணி

வானந்த வெண்ணெயில் மைபோ லாட்டி
மைந்தனே வாடாதே பூசு
வாக்குதென்ற சிரங்கு குட்டம்
தீராத கரப்பன்வகை யெல்லாம் தீரும்
மன்னனேகே ளரைப்படி குளிக்க தேகம்
வந்திரம்போல் தெளிய மேனியமே நன்றாம்.
*(ஏடு.601-108)*

### *1. அத்திக் கரப்பான் - குறிகுணம்*

நில்லப்பா தேக மெல்லாம்
நிறைந்திடு மத்திக் காய்போல்
இல்லாப்பா ஊர்ந்து நீரும்
இழத்திடும் சொறிந்து புண்ணும்
வெல்லவே சலமும் பாயும்
வெருண்டெழுங் காயு மேனி
குல்லப்பா குறிதான் கண்டால்
கூறிடு மெண்ணெய் கேளே. *(கை.பி.98-152)*

### *1. எண்ணெய்*

துத்தமும் துருசு உள்ளி
சீரக மிளகு வேம்பான்
ஒத்ததோர் சந்தங் கோட்டம்
உலத்தியின் குருந்து வேரு
வைத்ததோர் துளசி செம்பொன்
நெருஞ்சியின் சாறு நாழி
பொய்த்ததோ குருக்கு நெய்தான்
புகழ்பெறக் கலந்து காய்ச்சே.
காய்ச்சியே பிரட்டும் போது
கண்டதோர் கரப்பன் தீரும். *(கை.பி.98-152-153)*

### *2. எண்ணெய்*

வீச்சியே சிறியா நங்கை
விரவதாய்ப் பசுவின் நெய்யில்
வாச்சதோ ருள்ளி கூட்டி
வகையுடன் காய்ச்சி றுத்து

தீச்சுடன் கொடுக்கும் போது
    தீர்ந்திடும் கரப்பன் தானே. *(கை.பி.98-153)*

### *அரிகரப்பான்-குறிகுணம்*

உற்ற அரிகரப்பான் ஓதக்கேள் ஒண்டொடியீர்
மற்றலிங்க யோனிகளில் வந்திடும்புற் - றுற்றுடலில்
ஆறாமற் புண்ணரிக்குமூ ஆஆ உருவழிக்கும்
மாறாது இக்குணத்தின் வாறு *(புத்.476-111)*

இடைசி றுத்துவன கனியு ரைத்தமொழி
    இனிய தானவத ரத்தினாய்
துடையி டைக்குள்மிகு விரண மாகியதிற்
    சூழ்ச. லங்களுமி குந்துநோய்
புடையு நீள்தசை கரைந்து நாட்பட
    விருந்து பூதவுடல் வாடினால்
அடைவு சேரரி கரப்ப னாமிதை
    யறிந்து நன்மருந் தாற்றிடே *(புத்.477-230)*

### *1. கரந்தை எண்ணெய்*

............... ..................... ....................
    ................... ............. ..............

அரிகரப்பான் எண்ணெய்தனை வருடிப் பேன்கேள்
    அரியகொட் டைக்கரந்தை வேர்பட்டை யின்வேர்
முரியான பசரியிலை நீலிப் பட்டை
    முற்றக்கோ டகசாலை வேரின் பட்டை
கரியான மிளகரணை வேலி நல்ல
    கரிசாலை பெருங்களாப் பட்டை வேரே.

வேரான ஆவரைவேர் காணி வேர்த்தோல்
    வீறுபிர மட்டைசிறு கீரை யின்வேர்
சீரான வட்டத்தி ருப்பி யின்வேர்
    சிவசிவா புலித்தொடக்கி வேரின் பட்டை
காரான பலமரையாய் நிறுத்து வாங்கிக்
    கனவசம்பு பலமரையு மதனோ டொக்க
ஆரான வேரண்டம் படிகா லாக
    அவ்வகையு மிடித்துநீ யதனிற் சேரே.

அதனிற்சே ரடுப்பேற்றிக் கொதிக்கக் காய்ச்சி
அச்சமற வடிகட்டி இறுத்துக் கொண்டே
அதனிற்சேர் நாளேழு கரண்டி கொள்ள
அரிகரப்பான் --- --- ---
--- --- ---
அவைகதறி யோடுமே கண்பா ராமல்
--- --- ---
--- --- --- போமே.

*(புத்.477-230-231,476-111-112)*

### *2. மேல் பூச்சு எண்ணெய்*

போமென்ற மேலுக்குத் தைலஞ் சொல்வேன்
புகழான வுள்ளிகடு வெருக்கம் பட்டை
வாமென்ற மருக்காரை வேரின் பட்டை
வட்டகிலு கிலுப்பையுத்தா மணியின் வேர்த்தோல்
காமென்ற நல்லெண்ணெய் தன்னி லிட்டுக்
காய்ச்சியே துவளையிடக் கருகிப் போகும்
நாமென்ற விருமூன்று வேளை போதும்
நல்லதுவா லைத்தைலம் நல்கு வீரே.

*(புத்.477-231,476-112)*

### *3. வனசபத்திர எண்ணெய்*

மூட்டுவாய்வனசப் பத்தி ரங்கழுதை
லத்தி மொய்த்தகரு நொச்சிலுங்
கூட்டுவா யதிற்சங்கங் குப்பி யொடுங்
கூறுஞ் சாறுகாற் சேரதாய்
நாட்டுவாய் கருஞ்சீர மோர் பலம்
நவின்ற வாமணக் கெண்ணெயும்
வாட்டமா யரைச் சேரி விட்டெரி
வடித்த ருந்திடவு மாறுமே. *(புத்.477-231)*

### *4. ஊதுகரப்பான்-குறிகுணம்*

பாதமே முதலாய்க் கேசம்
பாரித்துச் சென்னி வீங்கி
பூதமே மேனி யெல்லா
முடம்பெல்லாஞ் சுரசு ரக்குங்

காதுடன் கண்ணும் வீங்கிக்
கனத்திடுஞ் சுரமுண் டாகு
மூதிடுங் கரப்பா னென்றே
உரைத்தனர் புலவர் தாமே. *(ஏடு.424-31)*

கேளாய் குளிர்காய்ச்சல் கேடாங் கருங்கழலை
மூளாவி தான்போல் முயன்றுநிற்கும்-நாள்தோறும்
பூதம்போல் வீங்குவிக்கும் புண்ணாகி மூக்கரிக்கும்
ஊதுகரப் பான்தோடம் உற்று.
*(புத்.477-231-232,476-113)*

## குடிநீர்

இலுப்பையின் சருகு தன்னை
யெரித்ததை சாம்ப லாக்கி
வலுப்பறுங் கரப்பான் பட்டை
வாங்கியே யதனிற் போட்டு
நலுப்பற தண்ணீர் வார்த்து
நலமுடன் காய்ச்சி யுண்ண
வெலுப்பீடு கரப்பா னூதல்
வீக்கமுந் தீரு மன்றே. *(ஏடு.424-31)*

## 5. ஓடுகரப்பான் - குறிகுணம்

எண்ணு கின்றதொரு கீலி லேவலிக
ளேக மாகியது கட்டியே
வண்ண மெய்நரம் பெங்கு மேயிசிவு
குத்த லாகிமல பந்தமாய்
தண்ணி யேதினவு மாய்த்தடித் துடவி
னாடி வீக்கமு மிகுந்திடிற்
கண்ணி ஓடுகரப் பான்இதென்றமுறை
கண்டு கொள்ளடி கருத்திலே. *(புத்.477-234)*

## பெருமருந்துப் பட்டையாதிவேது

கருத்தி லேண்ணுநற் பெரும ருந்துநிலை
காட்டில்வாழ் குவளம் பட்டையுந்
திருத்த மானவெலி யாம ணக்கினொடு
சேர்ந்த வேம்படிப் பட்டையும்

பெருத்த கோசலமும் விட்டெரித் துடலிற்
    பேணி வேதுகள் பிடித்திடில்
வருத்தி யோடுகரப் பானி ருந்திட
    வழக்கு மில்லைநினை மங்கையே. *(புத்.477-234)*

### *5. கட்டுக்கரப்பான் - குறிகுணம்*

சென்னியுங் கனத்துக் கொள்ளுநீ
    திறம்படச் சுரமுங் காயு
மன்னிய கன்ன மூலம்
    வளர்கழுத் தடிவ யிற்றிற்
றுன்னிய கெண்டைக் காலிற்
    றுடைதனிற் றுண்டு துண்டா
யுன்னியே யோடிக் கட்டு
    முயர்கட்டுக் கரப்பன் தானே. *(ஏடு.424-32)*

### *எண்ணெய்*

சத்திச்சா ரணையின் வேருந்
    தகவிலா வசுவ கந்த
முத்ததோர் கல்லங் கோவை
    உயர்புளி யறணை நீலி
பத்திய சாறு வாங்கிப்
    பகர்விளக் கெண்ணெய் கூட்டி
வத்திடக் காய்ச்சி நக்க
    வருங்கட்டுக் கரப்பான் போமே. *(ஏடு.424-33)*

### *6. கண்டகரப்பான் குறிகுணம்*

போதச் சிரமே வறண்டுமிகப்
    பொருந்து மிடத்தில் விடுவதெனில்
மோடுப் பற்றி செடுசார்ந் திருமி
    முக்கால் நீரும் விழவென்று
சேதப் படவே பித்தமிகச்
    செய்யுங் குணங்க ளீரெட்டுக்
காதுஞ் சொறிவர மிடற்சொறிவாங்
    கண்டங் கரப்ப னெனலாமே*(ஏடு.272-31,42-325)*

தளிராகச் சிரமெங்கும் மிகக்க னத்து
    தலைகாது மண்டையெலாந் தடித்து நோகும்
நளிராக வருத்திவிக்கும் நாத்த டிக்கும்
    நலமான உடம்புதனில் சொறியு மாகும்
குளிராகக் குளுந்துமே மயிர்கூச் சாகும்
    கூப்பிட்டால் மிகபயக்குங் கூசுங் கண்தான்
களிராக முள்ளுப்போல்க் கண்டந் தன்னில்
    கரகரக்குங் கண்டங் கரப்பா னாமே.

*(ஏடு.233-168)*

## *தைலம்*

தூது மோரிதழ்த் தாமரையுந்
    துய்யென் முத்தம் நன்னாரி
ஓதுஞ் சாரணை திரிகடுகு
    உகந்த கருஞ்சீரகம் வசம்புள்ளி
காதங் கையாந் தகரையுடன்
    கசக்கும் வேப்பந் தோல்தண்ணீ
போது மெண்ணெய் தனைக்கூட்டிப்
    போத யெரித்து நக்குவதே. *(ஏடு.42-325)*

## *7. கருங்கரப்பான் - குறிகுணம்*

காக்கைபோ லுடல மெல்லாங்
    கறுத்திடுங் கொப்ப ளிக்கு
மாக்கையிற் சுரமுந் தோன்று
    மடவுடன் காலுங் கையுந்
தூக்கையுங் கட்டி வீங்குஞ்
    சொறிதின வதிக முண்டாஞ்
சேக்கையே கருங்க ரப்பான்
    செய்திடுங் குணமி தாமே. *(ஏடு.424-27)*

அறியக் கேளாய் கருங்கரப்பான்
    அழுமே குழவி உடல்வெதும்பும்
செறியு முலையும் உண்ணாது
    தேக நிறமும் வெவ்வேறாய்க்

கரிய மேனி பசுநரம்பு
கதித்தே காட்டும் பரபரத்து
முறுக்கி மிகவுந் துள்ளிவிழும்
முகமும் பதங்கள் ஊதிடுமே.

*(புத்.477-235,476-111)*

### 1. கருங்கரப்பான்-எண்ணெய்

திகழ்தரு நொச்சிச் சாறு
செருப்படை யிலையின் சாறு
புகழ்குழி மிட்டான் சாறு
போந்தவெப் பாலைச் சாறு
மிகழ்கருஞ் சீரகத் தோடே
ஏரண்டத் தெண்ணெய் கூட்டி
யகழவ னெரித்து நக்க
வடைகருங் கரப்பான் போமே *(ஏடு.424-28)*

### 2. எண்ணெய்

வருகரப்பான் எண்ணெய்தனை வரவழிப் போங்கேள்
வரிகொட்டைக் கரந்தைவேர் செருப்படையின் வேரு
முரியான நீலியிரை விசரிப் பட்டை
முத்தகோ டகசாலைப் பட்டை யின்தோல்
கரியான மிளகரணை வேலிப் பருத்தி
கரிசாலை பெருங்களாப் பட்டை வேரே.
வேரான ஆரைவேர்க் காணிவேர்ப் பட்டை
விதமான விளாம்பட்டை சிறுகீரையின் வேரு
சீரான வட்டத் திருப்பியின்தன் வேரு
சிவசிவா புலிதுடக்கிப் பட்டைத் தோலும்
காரான பலம்அரையாய் நிறுத்து வாங்கி
கார்வசம்பு பலம்அரையும் அதனோ டொக்க
ஆரான ஏரண்டம் படிகா லாக
அவ்வகையைத் தூளிடித்து அதனிற் சேரே.
அதனிற்சே ரடுப்பேற்றிக் கொதிக்கக் காய்ச்சி
ஆச்சமற வடிகட்டி இறுத்துக் கொண்டு வதனிற்சேர்

நாளேழு கரண்டி கொள்ள
--- --- --- ---
கதனிற்சேர் கருங்க ரப்பான்
கதறிட்டு ஓடிடும்பார் கண்பா ராமல்
--- --- --- ---
--- --- --- --- *(புத்.572-34)*

### *9. கிரந்திக் கரப்பான் - குறிகுணம்*

மேலு நெஞ்சினை யடைத்து வீங்கியியர்
மேற்சு வாசமது வாங்கியே
தூல மேனிநிற பேத மாகிவளர்
தொண்டை கட்டியுடல் நொந்துநின்
றால மாமிருமற் கண்டு சிற்றொனிக
ளாக வேயழுது கம்மினாற்
பாலி னேர்மொழியி னாய்கி ரந்திகரப்
பானெனச் சிகிச்சை பண்ணிடே *(புத்.477-245)*

### *1. கிரந்தி கரப்பானுக்குப் - பூவரச எண்ணெய்*

பண்ணுப் பூவரசம் பட்டை பால்கரு
நொச்சிச் சாறிரண்டு பலமதாய்
திண்ணி லக்கடம்போடு மேகருஞ்
சீர மோர்பலம் வசம்புகா
லெண்ணு மாதிகோ ரோச னைப்பொடி
நிட்க மாமணக் கெண்ணெய்சேர்
திண்ண மாகவே வடித்தோர் காசெடை
புகட்டக் கரப்பான் தெறிக்குமே. *(புத்.477-245)*

### *10. கொள்ளிக்கரப்பான் - குறிகுணம்*

கொத்துங் கொள்ளிக் கரப்பான்வகை
குணத்தைக் கேளாய் குலமாதே
யெத்தும் வயிறுந் தான்வீங்கு
மிரும லடைக்கு மிளைப்புண்டாம்
கத்துங் குரலு மறிவுண்டானால்
கனத்த விக்க லுண்டானால்
பத்தும் பலது மோதுவதேன்
பாலன் பிழைப்ப தரிதென்னே. *(ஏடு.435-25)*

கொள்ளினை வறுத்திட் டாற்போற்
கொப்பளித் துடல மெல்லா
மெல்லிய முகமும் வாடு
மெரிந்திடு மேனி யெல்லாம் *(ஏடு.424-30)*

கொத்துங் கொள்ளிக் கரப்பான்வகை
கூறும் குணத்தை யினிக்கேளீர்
எத்தும் வயிறு தான்வீங்கும்
இரும லடைக்கு மிளைப்புண்டாம்
கத்துங் குரலு மெரிவுண்டாய்
வயிறுகனத்தே விக்கலுண்டானால்
பத்தும் பதியும் மோதுவதே
பாலன் பிழைப்ப தரிதெனவே. *(ஏடு.601-21)*

என்ற தேக மெல்லாம்
எழும்பிய பொன்னல் போலே
குன்றதோர் பனியுங் காட்டி
குப்பெனப் புடைத்து மோதும்
நன்றென மலமுங் கட்டும்
நல்பழுப் பதுவுந் தோன்றும் *(கை.பி.98-152)*

### *குடிநீர்*

செய்திடு நிம்பம் சீந்தி
செறுசுண்டைவேரும் புடோலம்
பய்யவே ஆடா தோடை
பருஞ்செம் பொன்னெருஞ்சி தெற்றி
கொய்யவே குக்கில் சீனப்
பாவோடு வரகு மஞ்சள்
நைய்யவே சுக்கு சீரம்
நல்திரி பலையும் சேரே.

சேர்ந்திடும் வகையொன் றுக்கு
சேகரம் கழஞ்சு கூட்டி
பார்த்திடும் கஷாய மிட்டுப்
பையதே னுறையும் விட்டு

தீர்த்துட னருந்தும் போது
    தீர்ந்திடுந் திண்ண மென்று
கார்த்திடு மீச னாணை
    கருத்துடன் செய்துநில்லே. (கை.பி.98-152)

### *கொள்ளிக்கரப்பானுக்கு மருந்து*

துள்ளிய முயல்வெள் ளாட்டுப்
    புழுக்கையைச் சுட்டுப் பூசிக்
கொள்ளியின் கரப்பான் தீர்ந்து
    கொப்பள மாறிப்போமே. *(ஏடு.424-30)*

### *11. சட்டைக்கரப்பான்-குறிகுணம்*

சட்டை யேறிட்டாப் போலத்
    தடித்திடு மேனி யெல்லாந்
திட்டெனத் தடிப்பு மாறித்
    தீட்டிய வரிசி போலக்
கொட்டிடுந் தினவுண் டாகிக்
    கொப்பளித் திடுமெய் யெல்லாம்
பட்டையாய்ச் சட்டை போக்கும்
    பகரசட்டைக் கரப்பான் தானே *(ஏடு.424-28)*

மங்கை கீலில்வலி கள்ளிப் பூவென
    மலர்ந்து வாரியிடு மெய்யினிற்
பொங்கு நீர்ப்பணிகள் போல்விழுந் துடலம்
    வெப்ப மாகிமலஞ் சிக்கியே
துங்க மான சிரநோவு மாகிவளர்
    தூய வன்னமது துவேடமாம்
தங்கு சட்டை கரப்பானே னச்சிகிச்சை
    தானே தற்குவிரித் தோதுவாம் *(புத்.477-234)*

### *குடிநீர்*

தானெனத் தவமு ருங்கை
    சமூலங் கொண்டு வந்து
வேனென நறுக்கிப் போட்டு
    வெச்சென காய்ச்சி வார்த்து

தேனெனு மொழியி னாளே
சிறந்த பதமாய் வந்தா
லூனெனுந் தினவு நீங்கி
உயர்சட்டைக் கரப்பான் போமே (ஏடு.424-28)

### *1. சங்கங்குப்பி எண்ணெய்*

ஓது சங்கினது குப்பி பூவரசு
மூழ லாற்றிநிலக் கடம்புடன்
நீதி சேர்குவளை வேம்பிவ் வாறுவகை
நிகழ்த்துஞ் சாறுக ளுழக்கதாய்ச்
சாதி யாட்டினது புழுக்கை யோர்பலமுந்
தாக்குமுத் தெணெயி லிட்டெரித்
தாதி காலமுத லுட்கொள் சட்டை
கரப்பா னகன்று விடு (புத்.477-234)

### *சிரசு பொடுகிற்கு எண்ணெய்*

பாரமாம் சிரசுதனில் பொடிப்புத் தீர
பரிவான எண்ணெயொன்று பகரக் கேளு
காரமாம் மிளகுடனே வசம்பு ரண்டும்
கலந்துசம னிடித்துடனே பொடிய தாக்கி
சாரமாம் நல்லெண்ணெய் தனில்க லந்து
தவறாமல் மூன்றுநாள் ரவியில் காய்ந்து
தீரமா மெண்ணெதனை யிறுத்துப் போட
சிரசுதனில் பொடிப்புலரும் திட்டந் தானே.
(ஏடு.109-36)

### *2. சிலேத்தும கரப்பான் - குறிகுணம்*

இசையு நெஞ்சுக ளடைத்து ளேவிரண மாகி யேதலை வலித்திடும்
அசையும் வாயதனில் வெந்துமே திரட்சி யாகி யேகடு கடுத்திடில்
விசையுஞ் சேத்தும கரப்ப னெனசிகிச்சை மேவு செவ்வரி பறந்துநின்
வசைபொ ருந்தும்விழி கலைதிரண்டமுக வனிதை யேயவுட தங்களே.
(புத்.477-230)

பேதியாய் சரீரமது வெளிறிக் காணும்
பேச்சுதான் கம்மலாய்த் தானி ருக்கும்
புத்தியாய் வார்தையது பொறுக்கிச் சொல்லும்
பிற்பலந்தான் மிகப்பேச்சு மூச்சுண் டாகும்
யேத்தியாய் சகலகையும் யேவல் கொள்ளும்
யீளையிருமல் மேல்மூச்சு காதி ரைச்சல்
மூத்தியாய் மோட்சம் வழி முறமை யாகும்
முதிர்சேற்றும கரப்பானின் மூர்க்கந் தானே'

(ஏடு.233-170)

### *நன்னாரி எண்ணெய்*

தங்கு மாதிநன் னாரி யோடுவேம்
பாடம் பட்டைசரி தாக்கியே
புங்கம் பூவுடனி லக்க டம்புவகை
யோடு சாறுகால் சேரதாய்
மங்கை யேகம்பிப் பிசின்கத் தூரியெனு
மஞ்சளும் வகைய ரைப்பலம்
பொங்கு மாமணக் கெண்ணெய்
சேரோடு பொருந்த வேளித் துள்ளிடே.

(புத்.477-230)

### *13. சிறு சிரங்கு கரப்பான் - சாறு*

கொடிக்கள்ளி தன்னை வாட்டிக்
குறுகவே பிழிந்து கொண்டு
முடுக்குடன்தினமு ளைக்கு
மூன்றுநா ளுள்ளே வார்க்கத்
திடத்துடன் --- ---
சிரங்கொண்டு சொரியுந் தானே
நடுக்கறத் தீரு மென்று
நாதனிங் கருள்செய் தாரே.

(புத்.477-246,476-119)

### *சிறுசிரங்குக்கு - தேங்காய் எண்ணெய்*

காட்டுச் சீரகம் கார்போ கரிசியும்
மாட்டுங் கத்தூரி மஞ்சளு மோமமும்

நீட்டரி தகியு நீரடி முத்தும்
ஈட்ட வாறுஞ் சமனெடை யாயெடே.
எடுத்த வைபொடி செய்வெண் மிளகினில்
அடுத்த ஓரெடை யூமத்தங் காயினுள்
தொடுத்த டைத்தொன் றரைஎரு முட்டைசூழ்
பொடுத்த மாய்ப்புடம் போட்டெடுத் தாற்றிடே.

ஆற்றி முற்பொடி கூட்டிய கண்டமும்
நாற்றிடு நாளிகே ரத்தி னெண்ணெய்விட்
டூற்றிடு நற்குழிக் கல்லி லரைத்துற
மாற்றி டெண்ணெய்பின் வார்த்துநீ யாட்டிடே.

ஆட்டி பானுமு னப்படி மூன்றுநாள்
காட்டி வைத்துக் கடந்தனில் வந்ததோர்
சாட்டிய சிரங்கின்மீ திற்நீ தடவிட
நாட்டிய தினவு நமைச்சலும் போகுமே.

*(புத்.477-247,476-119-120)*

### *15. சுரகர்ணன் கரப்பான் - குறிகுணம்*

அதுவே சுரமு முண்டாகி
அடைவாய்க் காதில் குத்துளைச்சல்
பொதுவே கண்டம் மேல்வீங்கி
புடைக்குங் காதில் பழுத்துடையும்
எதுவே மண்டைக் குள்குத்தும்
எடுக்கும் சன்னி பத்ததிலே
பதுவே நாசி வழியாகப்
பாயுஞ் சோரை யுடன்-...... *(கை.பி.98-154)*

சுரமொடு யிரும லுண்டாய்
சுரமறக் குளிருந் திம்மல்
கரமொடு தேக மெல்லாம்
கரகரந் தூர்ந்து காட்டி
பரபரத் திணப்புண் டாக
பாலகர் வாயும் புண்ணாம்
நுரைநுரை சேரரை கக்கும்
நூல்வழி பதினெட் டென்றே. *(கை.பி.98-156)*

### 16. சூலைக்கரப்பான் - குறிகுணம்

பிள்ளை முகம்வாடிப் பேதவெடி மெனியெல்லாம்
சள்ளை பொருந்தித் தவிக்குமே-மெள்ளக்கேள்
வள்ளல்முழங் கால்கை மருவியுண்ணக் கூடாது
தள்ளுமென்ற சூலையது தான்.
*(புத்.477-232,476-113)*

கண்டாய் சூலைக் கரப்பனது
கனத்துத் திரண்டு நீர்போலே
விண்டாய் பனியு முண்டாகி
விதனம் பலதும் செய்துவரும்
குண்டாய் சிவந்து புண்ணாகும்
குடுங்கிப் பழுக்கும் சிலதெல்லாம்
சிண்டா மங்கை யெல்லாமும்
சீறி வெடிக்கும் பரங்கியைப்போல். *(கை.பி.98-154)*

### புங்கன் வேர்ப்பட்டை எண்ணெய்

வடக்குவரும் புங்குசங் காதண் டம்வேர்
வலுவரைத்து மூன்றும் விரை வாகச் சேர்த்தே
அடக்கமுள் ளவிளக்கெண்ணெய் படியீ டாக
ஆனதின்பி னீருள்ளி யுழக்க ரிந்து
விடக்கடுகு ரோகணிபால் பலம்ச முத்திரா
விதம்பாதி தூளாக்கி யதனிற் போட்டு
முடக்கிவிடுஞ் சூலைப்புண் கரப்பா னோடு
முன்பானு வின்புடம்வைத் துண்ண னன்றே.
*(புத்.477-232,476-113)*

### மருந்து

போலா மிந்தக் குறிதீர
பொங்கும் சங்கங் குப்பிச்சார்
காராம் பசுவின் நெய்யதுவும்
கலந்து காய்ச்சும் மருந்தைக்கேள்
கோலா மிலிங்கங் கெந்தகமும்
கொடுத்த வசம்பு கருஞ்சீரகம்
கூலாம் வகைக்குக் கழஞ்சென்று
கூட்டுந் துரிசி யதில்கால்தான்

காலா யரைத்துத் தான்கலக்கி
கதித்த யீர வுள்ளியுடன்
வேலே பசுவின் நெய்யுழக்கு
வெருண்ட கழுதைப் பாலுழக்கு
கூலே பசுவின் பாலுரியும்
கூட்டுங் கழுதை லத்தியது
வேலே தீரும் காய்ச்சினிமேல்
வேக முரைத்தேன் மடமாதே. *(கை.பி.98-154)*

### *17. செங்கரப்பான்-குறிகுணம்*

சீத்தங் கேளீர் செங்கரப்பான்
சிரசு வலிக்கும் மேல்சிவக்கும்
மூத்தால் வெடிக்கும் நீரோடும்
முழங்கும் முதல்வலங் கேட்கும்
ஆத்தாள்அங்கே அகமெலியும்
ஆகும் குணங்க ளிவைகண்டால்
ஒத்த கிரிகை வகைதானும்
உரைப்பேன் கேளாய் ஒண்ணுதலே. *(ஏடு.601-22)*

சிரசு வலிக்கும் மேல்சிவக்கும்
தேகம் நோகும் நீர்வடியும்
புரசம் பூப்போல் சிவந்துவரும்
புண்ணாக தலையில் தேகமெல்லாம்
குரல்கம்மும் புண்வெடிக்கும்
குருப்போல் புடைத்துப் பின்காணும்
பிரலும் சிலது கரிந்துவரும்
புண்ணும் புடைக்குங் கரப்பனிதே.
*(கை.பி.98-153)(ஏடு 424-27)*

காய்ச்ச லோடு கடுப்பாகி யூதியுடல்
கன்றி மெத்தவு மழன்றுபோய்
மேய்ச்ச லான தினவாகி யெங்கணும்
வியர்க்கு ருவுகள் மிகுந்துதான்

பாய்ச்ச லான முகமுங் கறுத்துடல்
　　பரிந்து தானது சிவந்திடில்
சூட்ச மாகி வளர்செங் கரப்பனெனத்
　　தேற்றியே யவுடதஞ் செயே. *(புத்.477-235)*

செவ்வாப்பு மீறில் கரப்பனாஞ்
　　செய்யுங் குணங்கள் தலையிழுப்பு
வொவ்வா துடைமுகம் உடலெங்கும்
　　உகந்து சிவந்து எழுந்திருக்கும்
யெவ்வவ் வுடம்பு தடித்திருக்கும்
　　மேவு செவ்வட்டை கடிபோல
பவ்வாய்ச் சிவந்து தடித்திருக்கும்
　　பகர்வோ மின்னங் குறிதாமே

பறக்கு மிடத்து கொடிவழுதிலைங்காய்
　　போலப் பெருக்கக் கண்ணுமது
உறக்குஞ் சற்றே வெதுப்புமுடல்
　　....... ...... மனும்
நெறிக்கொள் நெஞ்சை மிகக்கிட்டும்
　　நீளு மீளு மீளாதாகி
லரிக்கை சொன்னோ மிதுதீரா
　　தாஞ்செங் கரப்பா னடையிதுவே’

*(ஏடு.42-334,335)*

### *1. ஆதொண்டை நெய்*

பத்துஞ்செங் கரப்பான் தீரப்
　　பசுவினெய் யுழக்கா தொண்டை
முத்துநன் முதியார் கூந்தல்
　　முருக்கிலை நெருஞ்சில் கொத்தான்
இத்துபூ வரசு சின்னி
　　யீருள்ளி தன்னைக் கொண்டே
எத்துட னடுப்பி லேற்றி
　　யிருபதஞ் சிவந்த போதே.

போதநீ கேளாய் முன்பு
புகன்றதை வடித்துக் கொண்டு
தீதகல் கரண்டி வீதந்
திகழ்ந்தநெய் தன்னிற் கொள்ள
மாதுவுந் தந்தை செய்த
வகையெலாங் கழிந்து பிள்ளை
பேதைசெங் கரப்பான் தீரும்
பின்வேறு குணம்சொல் வாமே.

*(ஏடு.435-26,601-22 )(புத்.477-236)*

## 2. நெய்

அதிமதுரம் கெருடப்பச்சை கொத்து மல்லி
அமந்தகருஞ் சீரகமும் அளவா யோமம்
விதிபுகலும் விளாவரிசி சுக்கு யேலம்
மிகுந்தகுடப் பாலரிசி மிளகுசீரம்
பதிவளரும் திப்பிலியும் வசம்பு வங்கம்
பகர்சிவதை யுள்ளிவகை கழஞ்சி யொன்று
கெதியாவின் நெய்நாழி தன்னில் சேர்த்து
கிண்டிஅனல் மூட்டிவெந்து வடித்திடாயே.

வடித்தவுடன் காசெடைதான் சிறுவ ருக்கு
வளமாகக் கொடுத்துடம்பில் பூசி வீதம்
வெடித்திருந்த செங்கரப்பன் கடிவி ஷந்தான்
வேர்முகிப் போகயிது வித்தார் முன்னோர்
குடித்துடம்பில் பூசிடுவாய் பத்து நாள்தான்
குழவியினுட மேனிபொன்னாங் கூறி னேன்கேள்
படிதனிலே குழவிதாய்ப் பத்தி யங்கள்
பழங்கஞ்சி பனையின்வெல்லம் புளிப்புத் தானே.

*(ஏடு.601-78-79)*

## 3. நெய்

இதுவே தீரக் கூந்தல்-தெற்றி
யிதமாப் பருத்தப் பூவுடனே
அதுவே பாளை யீருள்ளி
யடுத்த செம்பொ னெரிஞ்சிநங்கை

பொதுவே கழுதை லத்திச்சார்
புகட்டி யிடித்துச் சாறுழக்கு
எதுவே சீரம் கருஞ்சீரம்
எடுத்த சூரைப் பட்டைசந்தம்.

சந்தம் பூலா விருட்சமுடன்
சாத்திர பேதி திரிசாதி
பொந்த மெரேண் டெண்ணெயாம்
புகட்டி நீயுங் கால்படியாய்
விந்தம் பரு... மெழுகதிலே
விரவாய் வடித்துக் கொடுத்திடுகில்
ஏந்துங் குழலாள் செங்கரப்பன்
யெல்லாந் தீருங் கண்டாயே. *(கை.பி.98-153)*

## *4. நெய்*

சின்னப் பச்சிலை பெரும்பாலும்
செஞ்சலத்தில் துலங்கும் திப்பிலியும்
சேர்த்தரை யெண்ணெ தானுழக்கே
சொன்னேன் கருஞ்சீ ரகமும்துய்ய
மேனி கோட்டம் கொங்குவல்லி
மதிரம் கேளும்நீர் செப்பமானே
செங்கரப்பான் மெய்யில் வந்ததென்றால்
மேனிச் சாற்றி லெண்ணெயைச்சேர்
மூன்று நாள் குடிக்கல் ஒப்பமானே
செங்கரப்பான் ஓடும் உண்மையிதுவே.
*(ஏடு.601-23)*

## *5. பூவரசு நெய்*

செய்ய பூவரசு செங்கத்தாரிவேம் பாடம் பட்டையொடு சடைச்சியும்
நைய வேசுரச மோரக் கிவையில் நாட்டுகம் பிப்பிசின் கூட்டியே
வெய்ய தானகருஞ் சீர மூன்றுநிட்க மேவுமாமணக் கெண்ணெய் சேர்
பைய வேவடித் துட்கொள் செங்கரப் பானு மேபறந் தோடுமே.
*(புத்.477-236)*

### *எண்ணெய்*

தலைச்சுருளி காரை யிலைச்சாறு
தண்ணி லொக்கச் சமன் கொண்டு
இலகு வசம்பு திரிகடுகு
இயன்ற வெள்ளுள்ளி யிவைசமனாய்
கலக்கி யெண்ணெய்க் கொதிப்பித்துக்
காரண மாக வதுதன்னை
இலகா நக்கப் பூசுவரே
ஆறுங் கரப்ப னானதுவே' *(ஏடு.42-329)*

### *2. மேற்பூச எண்ணெய்*

சீர்பெறு செங்கத் தாரி
சிறந்தபூ வரசம் பட்டை
நேர்பெறு பங்கம் பாளை
நிறைந்தவா மணக்கி னெண்ணெய்
ஏர்பெறு வசம்போ டுள்ளி
இதுதனை யூற வைத்து
ஆர்பெற நாவி லிட்டா
லகன்றிடுஞ் செங்க ரப்பான். *(ஏடு.424-27)*

### *4. எண்ணெய்*

வருகரப்பான் எண்ணெய்தனை வருஷிப்போங்கேள்
வரிகொட்டைக் கரந்தைவேர் செருப்படையின் வேரு
முரியான நீலியிலை விசரிப் பட்டை
முத்தகோ டகசாலைப் பட்டை யின்தோல்
கரியான மிளகரணைவேலிப் பருத்தி
கரிசாலை பெருங்களாப் பட்டை வேரே.

வேரான ஆரைவேர்க் காணிவேர்ப் பட்டை
விதமான விளாம்பட்டை சிறுகீரையின் வேரு
சீரான வட்டத் திருப்பியின் தன்வேரு
சிவசிவா புலிதொடக்கிப் பட்டைத் தோலும்
காரான பலமரையாய் நிறுத்து வாங்கி
கார்வசம்பு பலமரையும் அதனோ டொக்க

ஆரான ஏரண்டம் படிகா லாக
அவ்வகையைத் தூளிடித்து அதனிற் சேரே.
அதனிற்சேர் அடுப்பேற்றிக் கொதிக்கக் காய்ச்சி
அச்சமற வடிகட்டி இறுத்துக் கொண்டு
வதனிற்சேர் நாளேழு கரண்டி கொள்ள
--- --- ---
கதனிற்சேர் செங்கரப்பான் .... .....
கதறிட்டு ஓடிடும்பார் கண்பா ராமல்.

*(புத்.572-34-35)*

## *இசங்கன் வேர்த்தைலம்*

வித்தையாய் யிசங்கம்வேர் தயிலங் கேளு
வெட்டிவந்து காத்தில்லாமல் இடித்துப் போட்டு
ஆற்றுநீர் தூணிவிட்டுக் கியாழம் செய்து
அப்பனே எட்டொன்றாய் வடித்து வாங்கி
வார்த்திடுவாய் எள்ளெண்ணெய் படிதான் இரண்டு
வளமான முடக்கதிலே பலமரைத்துப் போடு
போட்டதனைக் காய்ச்சியே மெழுகி னாக்கால்
புகட்டியே வடித்திடுவாய் பூசக் கேளு

சிரங்குடனே கிரந்தியுறு சூலை ரோகம்
செங்கரப்பன் வண்டுகடி சிலவி ஷங்கள்
குரங்கு போல் வலிக்கின்ற வலிச யங்கள்
குத்திருமல் நெட்டிருமல் கிறுகி றுப்பு
துரிதமாய்த் தீருமென் றுரைத்தார் முனிவர்
கும்பமுனி யருளதனைக் கூர்ந்து பாரே'

*(அ.வை.6-சு.தனி-16)*

## *5. எண்ணெய்*

கொடிவேலிவேர் முட்கா வளைவேர்
கோல சத்திச் சாரணைவேர்
யிடுமே புளிநறளை கொல்லங்கோவை
யான குரோட்டை யதுவன்றி

மிடுகாங் காட்டுக் கரணையுடன்
　　மிகுத்த கோழி யவரையின்வேர்
ஒடுகா மவுரி மூக்கரத்தை
　　யுகந்த மிளகரணை தலைச்சுருளி

வக்கணப் பட்டை விழுமிவேர்
　　மகிழுங் கடுக்காய் வெண்காயம்
மிக்க வசம்பு இவையெல்லா
　　மீறாச் சமனாய் தான்சேர்த்து
ஒக்க ... ... தானன்றி
　　யுகந்தே ரண்ட யெண்ணெயுமாந்
தக்க பதத்தில் வடித்தெண்ணெய்
　　தானே மேலும் பூசுவதே
உள்ளுக்குஞ் சற்றே கொடுக்க
　　சகல கரப்பனுந் தீரும். *(ஏடு.42-334-335)*

### *சொறிகுட்டக் கரப்பான் - குறிகுணம்*

ஓடிடும் ஆனந்த கரப்பான்
　　உண்மையதன் விவரம் சொல்வோம்
தேடிடும் கர்ம மூடருக்கு
　　தீயாய் மூளுங் கொள்ளிசுண்டன்
பாடிடும் சர்வாங்க மெல்லாம்
　　பஞ்சை போலுங்கெச் சையதாம்
நாடிடும் அத்திக் காயதுபோல்
　　நானில மெல்லாம் மிகவெடித்தே.

வெடித்துடன் மிகசீழ் சேலை
　　வெண்மையது போல் திரேக மெல்லாம்
படித்துடனே மிஞ்சிப் புண்
　　பரவி நிற்கும் கடிபோல
கடித்துமன் னுள்ளுங் கருகிநிற்கும்
　　காமப் பிணியு மாகாது
தடித்து உடம்பு குட்டசொறி
　　தணலா மெரியுஞ் திரேகமென்றே. *(புத்.572-31)*

### *சொறிக்கு-ஊறல் குடிநீர்*

பார்த்து பூவரசம் பட்டை ஓர்பலம்
தார்த்து நீரா காரத்தில் ஆழாக்கிட
ஏற்று மூன்று நாள் இவ்விதங் கொண்டிடில்
போற்று மெசொறி போம்உப்பு விட்டிடே.

*(புத்.476-120)*

### *சஞ்சீவி இளகம் (அமிர்தாதி இளகம்)*

எரியுமென்ற சஞ்சீவி லேகி யங்கேள்
என்னசொல்வேன் லேகியத்தின் மார்க்கந் தன்னை
குறியொன்ற சஞ்சீவி கொடிதான் வாங்கி
குவலயம்போல் மேல்தோலைப் போக்கிப் போட்டு
சிறியதுண்டாய் வெட்டியதை ரவியு லர்த்தி
சிவசிவா தூளிடித்து வைத்துக் கொண்டு
கரிமுகனை வணங்கியதைச் சுத்தி பண்ண
கரிசாலை அதற்குநிகர் சூரணமே சேரே.

சூரணஞ்சேர் சாதிக்காய் சாதி பத்திரி
சுகந்தமல்லி சண்பகப்பூ கற்கடக சிங்கி
சூரணஞ்சேர் குங்குமப்பூ சந்த னத்தூள்
சிறுசான லவங்கப்பூ சுக்கோ டேலம்
சூரணஞ்சேர் வகைக்குக்கால் பலமே சேர்த்து
சூரணித்து சூரணத்தோ டோடக் கூட்டி
சூரணஞ்சேர் அஞ்சுபலங் கற்கண் டிட்டு
கோவெண்ணெய்க் கூட்டியிட்டு அரைத்தி டாயே.

அரைத்திடவே அமுதாதி லேகி யந்தான்
அரஹரா ..... ...... ...... ......
..... ...... ...... ......
விதமான அனுபனம் முன் செந்தூ ரந்தான்
கரைத்திட்ட லேகியத்தின் செயலோ மத்த
கரைகாணா தோடுமெல்லா மகன்று போகும்

*(புத்.572-31-32)*

### *பேய்ச் சொறிக்கு மருந்து*

நோக்கமில்லாப் பேய்ச்சொறிக்கு மருந்து கேளு
நுண்மையுடன் இந்துப்பு பொடியாய்ச் செய்து
தாக்கவே நெய்தனிலே பொடியைக் கொட்டி
தன்மையுடன் கிண்டியதை ரவியில் வைத்து
தீர்க்கமுடன் தலைக்கிட்டு மேலும் பூசி
திறமாக மறுநாள்தான் முழுகிப் போடு
தூக்கமில்லாப் பேய்ச்சொறிதான் ஓடிப்போகும்
சுருக்கான மருந்திதுதான் சூஷம் பாரே.

*(புத்.476-120)*

### *19. தோடக்கரப்பான்-குறிகுணம்*

உள்ளு மேலு நளிர்காய்ச்ச லாகி யுடம்பெங்கும் புண்ணென வழன்றுவாய்
கள்ளு நாறி யுடல்தன்னிலே கழலைகண்டு பூதமென வீங்கியே
எள்ளின் மாமலரை யொக்கு மூக்கினி லரித்துநின் றழுது மேங்கினால்
துள்ளு மான்கணின் காய லாய்கொடிய தோட மான கரப்பானிதே.

*(புத்.477-236)*

### *திருகுகள்ளி எண்ணெய்*

பான லங்கணாய் திருகு கள்ளியொடு
பன்னு பூதகரப்பான் பட்டை
கான வேப்பந்தோற் சங்கங்குப்பிநிலக்
கடம்பு டன்கரு நொச்சியும்
வான மால்கு றிஞ்சா னல்லிலை
வகைக்குச் சாறுசேர் காலதாய்
ஆன வாமணக் கெண்ணெய் சேர்கலந்
தடுப்பி லிட்டெரித் துள்ளிடே. *(புத்.477-237)*

### *20. நீர்க்கரப்பான் - குறிகுணம்*

நீரா லெடுத்த கரப்பனது
நித்தங் காயுந் தேகமெல்லாம்
வாளச் சிரங்கு போல்வந்து
வளர்ந்தே குருப்போல் பழுப்பாகும்

கூரம் பெரிய கால்வீங்கும்
குழவி வாயில் புண்ணாகும்
பாரம் பெருத்த நீர்க்கரப்பான்
பகருங் குணங்க ளதுதானே. *(கை.பி.98-156)*

### *குடிநீர்*

நிம்பம் பட்டை திரிபலையும்
நிலத்தில் சுண்டை படவலமும்
கம்பஞ் சூரை அதிமதுரம்
கறுத்த சீரகம் சுக்குமஞ்சள்
வேம்பங் குக்கில் சீனப்பா
வேண்டுந் தெற்றி யீருள்ளி
நம்பங் காய்ச்சி யெட்டொன்றாய்
நலமாய்க் கூட்டிக் கொடுப்போமே.*(கை.பி.98-157)*

## *21. படர்கரப்பான் - குறிகுணம்*

பாரே படர்கரப்பன் குணத்தை யெல்லாம்
பகரும் புள்ளி யிட்டதுபோல் தானே
வண்டு மமர்ந்தது போரே தேகமெங்கும்
வாரி வைக்குமஞ்சென கண்ணீரிசி போலே
மஞ்சி சுத்தேங்கும் பாய்ந்து கொண்டு
பரந்தே காந்தலும் .... .....
சோரே யாகும் பண்டி மையால்
சோறு போல பொங்கிப் பொங்கிச்
சலமுந் தான்வ டிந்து ..... .....
பொருந்துங் குணங்களிவை கண்டால்
பார்த்துச் சொல்ல படர்கரப்ப னென்று
பகர்ந்தார் பெரியோர் பகர்ந்தாரே. *(ஏடு.601-24)*

### *படர்கரப்பானுக்கு நெய்*

பண்டார் மூலிவேர் செங்கத் தாரிப்
பட்டை கீழ்காய் நெல்லியுடன் பசலி
தண்டார் குடிபுர மெரித்தான் வேரு
பகரிலு மிச்சம் பழத்தில் தானரைக்கில்

கொண்டநீர் முன்சொன்ன மருந்து வகை
கூட்டி யோரொன்று பாக்களவு நெய்யில்
வண்டார் குழலே பதத்தில் வெந்து
வழங்கும் நெய்யரை கரண்டி கொள்ளே.

### *2. நெய்*

ஏலம் வசம்பு கருஞ்சீரகம்
இசம்பு மிளகு கார்கோலம்
மானே யீர உள்ளியுடன்
மஞ்ச ளோடே யிருசீரகமும்
கருகுவாய்க் கொழுந்துட னோரொன்று
கதிய நெல்லி கார்யழக்கு
துலங்கும் ஆமணக் கெண்ணெதா
னுழக்கில் வெந்து வத்திய
கருகோடு வெள்வங் கப்பூச
--- --- ---
பாலன் பூண்ட கரப்பனெல்லாம்
போகும் சொன்னேன் மடமயிலே. *(ஏடு.601-23)*

### *22. பால கரப்பான் - குறி குணம் (வாலைகரப்பான்)*

காலது கடுக்குஞ் சந்து கண்டமும் வெடித்துப் புண்ணாய்
ஏலவே கடிவி டம்போல் இருந்துபன் னீர்போல் பாய்ந்து
கோலமாய் வற்றி நாறும் குழவியு மொடுங்கு மாகில்
மலருங் குழலாய் வால கரப்பான்செய் வாறு தானே.

கால்க ரங்களோடு சந்து
மேவலிக ளாகிய கடிவிடங்கள் போல்
மேல்தடித் ததிலும் நீர்பறிந்து
மகள்மெய்யொ டுங்கி யிரணங்களாய்
மூல நாளினுள் தொண்டையோடு
விரணங்க ளாகி முதிர்வெப்பமாம்
வாலை யான கரப்பானிதென்
றவுழ் தங்களுஞ் சிறிது வைத்திடே.

பணியான விகாரமுற் றனேகங் கூறாய்
    பரபரத்து தேகமெல்லாஞ் சொறிபோலாகி
பிணியான சாரையுடல் போலேகாணும்
    பிணிவாயில் விடசலந்தான் உதிரம் போல
தினியான சூலைவற்றி திருவ ழிந்து
    திசதாது பீடமெல்லாம் நடுந டுங்கி
வனியான இக்குணங்கள் கண்ட தானால்
    வாலகரப் பானதுவென் றியம்ப லாமே.

*(புத்.477-237,476-112)*

### *நெய்*

இயம்பவே யிந்நோய்க்கு நெய்தா னொன்று
    இன்பமாய்ச் சொல்லுவோம் நன்றாய்க் கேளாய்
இயம்பவே பூவரசம் பட்டைச் சாறும்
    இன்பமுடன் தானேயோர் படியு மெய்யாய்
இயம்பவே சிற்றேரண் டெண்ணெய் ஒன்று
    இயல்பாக விவ்விரண்டுஞ் சேர்த்தெரித்தங்
கிரம்பவே கசகசாப்பால் படிதா னொன்றாம்
    இருசீர கத்தினெடை கால்கோல் காலே

காலான ஏலமுடன் லவங்க மாஞ்சில்
    கரிசாலை நுணாவேரும் வகைப்ப லந்தான்
நீலான நிழலுலர்த்திச் சூர ணஞ்செய்
    நெடுஞ்சீனி பலமைந்து நிறுத்தொன்றாக்கி
வாலான சாறெண்ணெ யடுப்பி லேற்றி
    வகையுடனே கடுதிரண்டால் சூர ணம்போட்
டேலான கிண்டி நெய்ப்பாக மாக்கி
    யிறக்கியந்த நெய்யதனை வடித்துக் கொள்ளே.

கடித்துமே கரண்டிநிறை யுள்ளுக் கேற்ற
    வாலகரப் பான்ரோகம் வகைகெட் டோடும்
தடித்துமே ஏழுநாள் கொள்ளும் போது
    தவறான புளிகசப் பிறைச்சி மீன்கள்

மடித்துமே யெள்கொள்பா கற்காய் தள்ளு
மற்றவெல்லா நோய்க்காகு மருவிக் கூட்டு
அடித்துமே மேலுக்குக் கடுகு பூச
--- --- கரப்பான் போமே.

*(புத்.477-237,476-112-113)*

### *23. பித்தகரப்பான் - குறிகுணம்*

செப்புந் தலைநெறித்துச் சேருங்காய்ச் சல்தினவு
ஒப்பச் சிவந்தெரித் துட்டணமுந்-தப்பாமல்
வாந்திவரும் நீர்வசிக்கும் வந்துமலஞ்சிக்கிவிடும்
சேர்ந்தபித்தச் செங்கரப்பான் திண்ணம்.

(இதுவுமது)

கொடுமையான சிரநோயி னோடு சொறிகூறு முட்டிணமும் வாந்தியும்
கடுமையான சுரமெய்சிவந்திடுதல் கண்பசந்து தொனிமுந் தியே
தடைகளாக மலபந்த மாகிவிடில் சார்ந்தபித்த கரப்பா னென்றே
விடமுநே ரமுதமுஞ்ச மான விழிவெண் ணகைத்திரு மருந்திடே.

*(புத்.477-229,476-108)*

தானாகக் கண்தூங்கி நடுவுந் தித்தான்
கனத்துடல் சுரந்துமே வெதுப்புண் டாகுந்
தானாக கிறுகிறுத்து உடலுஞ் சோருஞ்
சொரிந்துமே உடம்புபசி மஞ்ச ளிக்கும்
வேனாக அன்னத்தை யிறங்கொட் டாது
மிடுக்கான தீபனமந் திச்சுப் போகும்
பேனாக ஊருவது போலக் காணும்
பித்த கரப்பான் குணத்தின் பேதி தாமே'

*(ஏடு.233-170)*

### *2. எண்ணெய்*

மருந்து குன்றி கருநொச்சி யோடு
மிகவளர் கழற்சியிலை மன்னுசீர்
கிரந்தி நாயக முடன்றனிச் சுரச
மேயு ழக்குவளர் கின்றவூழ்

புரிந்த வெண்தகரி னற்பு முக்கையது
    போடி ரண்டுபல நீதியாய்
இருந்த ஆமணக் கெண்ணெய் சேரொடு
    மரித்தோர் காசெடை யிசைத்திடே.
*(புத்.477-229-230)*

### *25. புண்கரப்பான் - குறிகுணம்*

காதடி கழுத்து நெற்றி
    காலடி யிடுப்புச் சந்து
தீதறத் தலைகளெல்லாஞ்
    சிறந்தபுண் ணாகி யெங்குங்
கோதறு·சீயும் புண்ணுங்
    குழகுழத்திடுமெப் போதும்
போதறப் புண்க ரப்பான்
    பொருந்திய குணமி தாமே. *(ஏடு.424-29)*

### *புண்கரப்பானுக்கு மருந்து*

தக்கவெள் ளாட்டுச் சாணந்
    தரும்பெரு வாயன் சாண
மிக்கதேட் கொடுக்கிச் சாறு
    மிகுந்திரு சாணப் பாலு
மொக்கவா மணக்கி னெண்ணெ
    யூத்தியே யெரித்து வார்க்கச்
சிக்கெனப் புண்க ரப்பான்
    தீர்ந்திடு மென்று சொன்னார். *(ஏடு.424-29)*

### *27. பெருங்கரப்பான் - குறிகுணம்*

வீங்கிடு மேனி யெல்லாம்
    வெடித்திடுஞ் செந்நீர் வீழுந்
தூங்கிடுஞ் கண்ணும் வீங்கிச்
    சுரமுடன் குளிருங் காணும்
வாங்கிடு மூச்சு தானு
    மயக்கிடு மேனி யெல்லாந்
தேங்கிடும் பெருங்க ரப்பான்
    செய்திடுங் குணங்கள் தானே. *(ஏடு.424-29)*

### *1. பெருங்கரப்பானுக்கு எண்ணெய்*

இலுப்பை இலைச்சா றோடே
யேரண்டத் தயிலங் கூட்டி
இலுப்பை பூவரசு மப்பை
கினாக கருநொச்சி குப்பை
வலுப்புறு செங்கத் தாரி
வளர்சிறு குறிஞ்சா வேரும்
பலுப்பறு கல்லாங் கோவை
பாரினிற் சடைச்சி வேரே.

வேரினைக் கியாழம் வைத்து
விட்டுவெப் பாலை வித்துப்
பாரிரு வோமஞ் சோம்பு
பகர்கரு சீர கந்தான்
நேரிரு கரப்பான் பட்டை
நிறையுடன் போட்டுக் காய்ச்சிச்
சீருடன் வடித்து நக்கத்
திகழ்பெருங் கரப்பான் போமே. *(ஏடு.424-30)*

### *28. பொரிகரப்பான் - குறிகுணம்*

மாறு மாறென வடித்த வாயென
வுடற்கு ளேதடிப் பாகியே
ஏறு மேசிவந் தோடி யேகனத்
தெங்கு மேல்வெளுத் துள்ளுமே
நீறு போலனல் குளிர்ச்சி யாகியுழ
னாவு லர்ந்து நெறி தாழ்ந்திடில்
ஆறி டாப்பொரி கரப்ப னாமென
வறிந்து பண்டிதந் தொகுத்திடே. *(புத்.477-233)*

### *1. புங்கம் எண்ணெய்*

தொகுத்த புங்கொடு கிரந்தி நாயகஞ்
சூழுஞ் சங்கினோடு குப்பியுஞ்
செகுத்த சின்னியொடு செங்கத் தாரிகொத்
தானு மேசெருப் படியுடன்

பகுத்த தூதளை கழற்சி பாலினது
சாணிப் பாலரைக் கால்நிறை
வகுத்த முத்தெண்ணெய்முக் கால்நி றைக்குள்
வடித்தாதி சால்முத லுள்ளிடே. *(புத்.477-234)*

### *2. எண்ணெய்*

முள்ளி சின்னி முள்ளிவேர்
முசியாப் பிரண்டை யுடனாக
வுள்ள வேலிப் பருத்தியின்வே
ருற்ற அழிஞ்சில் சென்னெரிஞ்சில்
கொள்கற் பொழிஞ்சில் செங்கத்தாரி
கோலத் தலைச்சுருளி குமிள்வேரும்
மெள்ளத் தண்ணீர் மீட்டானும்
வெள்வெங் காயம் வசம்புடனே
மிளகுங்கூட்டி விளக்கெண்ணெ யிலெரித்து
உள்ளுங் கொடுத்து மேலும் பூசவும்.
*(ஏடு.42-328-329)*

## *29. மண்டைக் கரப்பான் - குறிகுணம்*

சிரந்தனிற் சிரங்குண் டாகிச்
செவிதனிற் சீயு முண்டாங்
கரந்தனிற் சொறியு முண்டாய்க்
காதினிற் பரப ரத்து
நிரந்தரஞ் சுரமுண் டாகி
நோதலை வலியு முண்டாய்ப்
பரந்திடுங் கபால முற்ற
கரப்பானாம் பண்பு தானே. *(ஏடு.424-31)*

ஓடி மண்டைதனி லேபுண் ணாகி
யுயர்காதிற் சீவழிந் தாறியே
நாடியே தலைவ லித்து மூக்கினில்
நயந்து நீரது பரிந்திடும்

வாடி மெய்யதும்வெப்ப மோடுகுரல்
வளையி னின்றினவு மாகவே
கூடில் மண்டைக்கரப்பானெ னப்பரி
கார மேலினிக் கூறுவாம். *(புத்.477-233)*

*கபாலக்கரப்பான் - குறிகுணம்*

காதுந் தினவாங் கண்தினவாங்
கண்டந் தினவாங் கரகரத்து
ஓதுங் கண்ணீ்ர் தானொழுக்கி
யுன்னு மூக்கு நீர்ப்பாயும்
யோது முழுக்கால் நலப்பதனால்
வொன்றைக் குறைந்து சீவீழில்
சேரு மிகவே மிடறதனால்
சேருங் கபால கரப்பனிதே' *(ஏடு.42-326,277-82)*

காணவே காதெல்லாந் தினவுண் டாகுங்
கண்தினவாங் கண்டந்தான் கரக ரக்கும்
பூணவே கண்ணீரும் பீளை யுண்டாம்
பேச்சுமந்த மூக்கதனில் நீரே பாயும்
தோணவே சிரசுதனில் சொரிச்ச லுண்டாந்
தும்மலது மிகவுண்டாந் துடிக்கும் நெற்றி
ஆணவே் அண்ணாக்கில் அழலுண் டாகும்
அடங்காத கபால கரப்பான் தானாமே'
*(ஏடு.233-169)*

தலையினில் பனியுண் டாகி
தயவுடன் முடிபு கிளந்து
சிரசினில் குருப்போல் வந்து
சிறுத்திடும் சுரமுங் காயும்
பலமுடன் வயிறு மூதும்
பாறைபோ லூதிக் கொள்ளும்
குலைசெய்யுங் குருவு டைந்து
குறுகுறாய்ப் பாயும் ரெத்தம்

இரத்தமும் பாய்ந்த போது
    நிறமஞ்சள்போலப் பாயும்
ஒத்ததோர் வாயில் மூக்கில்
    ஓய்ந்ததோர் காதி னோடு
மெத்தவே பாயும் போது
    மேலெழும்பும் சன்னி தானும்
சித்தமா யிருப துக்குள்
    ஜீவனும் பறக்கு மென்றே. *(கை.பி.98-159)*

### *எண்ணெய்*

கருநொச்சி பங்கம் பாளை
    காட்டெலு மிச்சை சின்னி
வருசிறு தேட்கொ டுக்கி
    வளர்செ ருப்படை சடைச்சி
தருகழக் கொடியுஞ் சங்கு
    தழுதாழை குப்பை மேனி
பொருவரி செங்கத் தாரி
    புகழ்கொட்டை கரந்தைச் சாறே.

சாறுமா மணக்கி னெண்ணெய்
    சாரித்துக் கொதிக்கும் போது
நாறுபூங் கரப்பான் பட்டை
    நல்வசம் புள்ளி யோமங்
கூறுகார் போகி சேர்த்துக்
    குழப்பியே எரித்து நக்க
மாறுசேர் சென்னி தன்னில்
    வளர்ந்திடுங் கரப்பான் போமே. *(ஏடு.424-32)*

### *எண்ணெய்*

தானென்ற முருங்கை யொடுவ டக்கித்
    தண்ணீர் மேனிப்பூ செம்பொன்னெரிஞ்சி நான்கும்
ஊனென்ற வகைக்கு ஒரு பிடிதான் சாறாய்
    உருக்குத் தேங்காயெண்ணெ உழக்கதனில் சேர்த்து

மானென்ற இருசீரம் கார்கோல் வேம்பாடல்
மாஞ்சி மனோசிலை பொடித்தோர் கழஞ்சி
கானென்ற உள்ளியோர் சிரங்கை யிட்டு
காய்ச்சிவடித் திடமண்டைக் கரப்பான் போமே.

*(கை.பி.98-30)*

## மெழுகு

திட்டமா மின்னமொன்று செப்பக் கேளு
தேங்காயொன் றுடைத்து நன்றாய்த் திருகிவெந்து
சட்டமாய் வெந்நீரில்ப் பிழிந்து பாலில்
தானரைத்துக் கலந்திடு சேங்கொட்டை யைந்தும்
மட்டதாய்க் கலந்தெரித்து மெழுகுபத மானால்
வடித்திறுத்துச் சிரசிலிடு மாலை நேரம்
கட்டமா யரைப்பிட்டு வெந்நீர் மூழ்கி
கழன்றுபோம் சிரசுதனில் கரப்பன் தானே.

*(கை.பி.98-35)*

## 1. பூசுவதற்குக் குழம்பு

பூசவே யின்னமொன்று புகழக் கேளு
புங்கம்விதை தேங்காய்ப்பூ ரண்டும் வேறாய்
கூடவே வறுத்து வகைக்கிரு பலந்தான்
கொண்டுகருஞ் சீரகமோர் கழஞ்சி கூட்டி
வீசவே யிளவறுப்பாய்வெதுப்பிச் சேர்த்து
விரைந்தரைத்துக் குழம்புபோல் வழித்தெடுத்து
பேசவே தோட்கைமேல் பூசப் போகும்
பிறத்தெழுந்த கரப்பான்முரு முருப்பும் போமே.

*(எடு.109-30)(கை.பி.98-29)*

## 2. பூசுவதற்குக் குழம்பு

முருங்கையிலை எருக்கம்பூ சங்கங் குப்பி
மூலல்லாத்தாளிதலை சூடிச் சாறு
நெருங்கவே ஓர்வகைக் குழக்குசாறு கொண்டு
நீயுருக்கு தெங்கெண்ணெய் உரிதான் சேர்த்து

கருஞ்சீரம் கார்கோல்மிளகு வசம்பீ ருள்ளி
　　கழஞ்சரைத்து குணம்போல் வடித்துப் பூச
சிரங்குபல கரப்பன்-மண்டைக் கரப்பனோடு
　　தீராத கரப்பனெல்லாந் தீருந் தானே.
*(கை.பி.98-30)*

**பூச்சு**

ஏந்த-லில்லாச் சூடனது கொஞ்சம் கூட்டி
　　எள்ளெண்ணை வார்த்தரைத்துப் பூசத் தீரும்
போந்ததொரு அண்டத்தூள் கழஞ்சி கெந்தி
　　பொடித்திட்டு வாய்மூடி சீலை செய்து
மாந்தையோ ரொருபுடத்தி லிட்டு வாங்கி
　　வார்த்தெண்ணெய் தனிலரைத்துப் பூசப் போமே.
(கை.பி.98-29)

### *30. மாரியின் - குறிகுணம்*

காசுபோல் சிவந்து விட்டு
　　கடுஞ்சிவப் பாகத்தோன்றி
கூசியேபறவை போலே
　　குழந்தையு மழுது காட்டும்
வீசிய குரலுங் கம்மும்
　　விரும்பிய மலநீர் கட்டும்
பேசிய கபமு முட்டும்
　　பேசிடு மரண மென்றே. *(கை.பி.98-151)*

### *31. வறள்கரப்பான் - குறிகுணம்*

உச்சிமுத லுள்ளங்கா லுற்றளவி லெவ்விடமும்
நச்சுச் சிறுசிரங்கு நண்ணியே-நிச்சல்
வெடித்துநீர் மேவுநடை மேவா துறக்கம்
கடித்தவறட் சிக்கரப்பான் காண். *(புத்.477-238)*

### *32. வறட்சிக் கரப்பான் - குறிகுணம்*

கண்டகமாய் மிகவீங்கும் குத்த லுண்டாங்
　　கனமான உடம்பெங்கும் மிகவே ஊறும்
துண்டமாய் யுடம்பதைச்சு சொறிச்ச லுண்டாஞ்
　　சோருமே யென்னேர மயக்கத் தாலே

வண்டகர்தா னில்லாமல் உடம்பு வற்றும்
மாறுபாடாய் பித்ததி மருகும் வார்த்தைப்
பிண்டமாய் கிடந்துருண்டு புலாலே நாறும்
பெருவறட்சி கரப்பானின் பேரி தாமே'

*(ஏடு.233-169)*

வீங்கும் ... ...
விடாதே திமிர்த்து .... ரநிற்கும்
பாங்கும் புண்ணில் சலம்விழுந்தால்
பரிந்த தினவு சொறிசெய்யும்
நீங்கிச் செலவே தீராது
நெடுநாள் படவே வெகுண்டு நிற்கும்
... விட்டுச் சுட்டு விட்டுத்
தீரும் வாதக் கரப்பனிதே.

நொந்துதான் கண்ணில் மிக்க
நோவுடைக் கண்கள் தன்னில்
வந்துவல் லாயு தங்கள்
வடுப்புறத் தைத்தி டிலும்
சந்துதாள் மொழிப்பொ ருத்து
தசைதா ணங்க ளாகி
வந்துதான் கடுக்குஞ் செய்தி
வாதமாய் கரப்ப னாமே' *(ஏடு.42-320,272-13)*

### *33. வாதகரப்பான் - குறிகுணம்*

தலையுங் கனத்து குரலெரித்து
தறுகா துடம்புந் திமிருண்டாய்
உலையும் கைகா லோகநய்யும்
உலையா திருக்க உறுப்புளையும்
மலையுஞ் சீதநோய் மெய்நடுக்கும்
வலுவைக் குறைத்து வறண்டுவரும்
குலையும் செய்யும் குணம்வாதக்
கொடியகரப்பா னிதுவாமே.

சந்துதான் மொளிபொ ருத்து
 தாங்கள் முனைந்து வீங்கி
வந்துதான் புண்போல் காயும்
 வருந்தி யேயிருந் துவரும்
நொந்துதா னிருக்கொட் டாது
 நோவுதான் வெதுப்புந் தோன்றும்
நோய்வலிய வாத ...
 கரப்பனென் றறிய லாமே.

கண்ணுந் தூங்கி நடுவுந்தி
 கனமாய் சோர்ந்து வெதுப்புடலும்
நன்னுந் துடையும் கனத்திருக்கும்
 நயந்தே யுடம்பு கிளுகிளுக்கும்
மண்ணில் பிறந்தோர் தங்களுடல்
 வந்தே மயங்கி வருந்தடக்கில்
யெண்ணில் வாதக் கரப்பனென்று
 என்றே முனிவ ரியம்பினரே. *(ஏடு.601-24-25)*

இயம்புதிமிர் காய்ச்சல் இயங்குந் திரட்சி
நயங்கு கணங்கரப்பான் தங்கும்-நயம்படவே
வந்தூறு மாக்கணத்தில் வாதக் கரப்பானும்
செந்தா மரையாளே செப்பு.*(புத்.477-229,476-268)*

கால்தலை யுடம்பு தேகங்
 கனக்கவே பங்க மாகிச்
சேலது கெட்டு வற்றித்
 தினவுடன் சொறிவ தாகில்
சாலவே காது நாசி
 மிடருதான் கரக ரக்கில்
மால்தரு மடந்தை கேளாய்
 வறட்சியாங் கரப்ப னாமே.*(ஏடு.42-327,272-31)*

வாதஞ் செரிந்து மயங்காதே
வறட்சிக் கரப்பன் வகைகேளீர்
ஆருஞ் சொறியு ... ...
வுடம்பு மிகவே பதைப்புண்டாம்
தீரு மருந்து பரந்தேருந்
திதமாய்ச் சாறுமறப் பெருக்கேரு
மாறு மொருவர்க் குண்டெனவே
சடாயும் புலால்மேல் நாறுவதே' *(ஏடு.42-325)*

உடம்பெல்லாம் வெதும்பி நொந்து
வுளைந்துகால் கைகள் தானும்
இடங்களால் சந்து வீங்கி
யிருப்பினு மிதுக்கு கைகால்
முடங்கியே வறண்டு மேனி
வற்றியே வெடித்துப் புண்ணு
மிடங்கொடு கரப்பன் வாத
மென்றுதா னியம்ப லாமே'
*(ஏடு.579-5,277-392,272-12,233-167)*

தெறிக்கும் வீங்குமுட லெங்குமே
திமிர்கடுப்ப தாகியழுந் தேகமேற்
பொறிப்ப றந்ததென வேபுண் ணாகியதி
லேவெடித் ததிக பொங்கமாய்
முறுக்கி யேசுரம் தாகி நாவது
வறண்டு நோயது முதிர்ந்திடில்
வேறிக் 'கருங்குழலி மாது வாதகரப்
பானெனப் புகல்வர் மேவிடே. *(புத்.477-229)*

இருந்தே யெழுந்திருக்கும் போது
இசந்து கால்சந்து நொந்திடில்
திமிர்த்து வாங்கி வறண்டுடலும்
திடனாய் வெடித்துப் புண்ணாகும்
திருந்திய வங்கந் தானும்
செயம்பெற பொருந்து மாகில்
திருந்து மிக்குணங்கள் கண்டால்
திமிர்வாதக் கரப்ப னாமே. *(ஏடு.601-25)*

## *2. குடிநீர்*

ஓடுகின்ற சாரணையும் உப்பு மரிதகியும்
வாடுகின்ற மாச்சுக்கு மாக்கூட்டி - நாடி
மருகிக் குடிக்க வளிகரப்பான் வீக்கம்
பருகப்பருகக் கழியும் பார். *(புத்.477-244,476-114)*

## *சூரணம்*

வாதகக்கரப் பானகலும் வகைகருஞ்சீ
ரகமேலம் வண்கிராம்பு
பூதகரப்பான் வசம்பு புகலும்வகைக்
கொருபலந்தான் போட்டபின்பு
மீதுவசு வாசுகுகை மென்னீறு
மமுக்கிராவு மேயொக்கக் கொண்
டேதேனிற் குழைத்துணவு மினஞ்சொல்வோ
மெனச்சரபேந் திரர் சொன்னாரே’

*(சர.வை.மு-229-230)*

## *நெய்*

இனப்படிகஞ் சாங்கோரை குழிமீட்டான்
செருப்படிபுங் கினியபட்டை
தனித்தனியே யிடித்திறுத்துச் சாறுவகைக்
கோர்நாழி தானுங் கூட்டி
யினிப்பாலு மொருநாழி யிதிலூற
பொருநாளிட் டடிருகூறாக்கி
நினைத்தொருபங் கினைநெய்யி லேவேக
வைத்தந்த நெய்யிற் கொள்ளே.

கொள்ளவுமெண் ணெயிலொன்றைக் கொதித்திடவே
கச்செய்து கொண்டுண் டெண்ணெய்
மெள்ளவுடம் பினிற்பூச விடும்வாதக்
கரப்பான்மேன் முறையுங் கேண்மின்!
உள்ளுகடல் சூழுலகீர்! என்றுசர
பேந்திரனார் சொன்னது யாவுங்
கள்ளமனக் கதங்காற்று கற்றவருற்
றவாக்கிதுகை காட்டுவாரே’

*(சர.வை.மு-230-231)*

### *3. எண்ணெய்*

குருந்துபெரு மருந்துசிறு குறிஞ்சிவேர்
  தூதுவளைக் கொழுத்த வேரும்
முருங்கைபுலி துடக்கிபா லொடிவிசிறு
  கத்திரிபொன் முசுட்டை வேரும்
பரிந்துணுமா தொண்டைமிள கரணைசங்கம்
  வேர்கருணைப் பெருங்கிழங்கும்
மருந்தெனப்பீ நாறிசெங்கத் தாரியெருக்
  கவுரியும்வன மரைநன்னாரி.

நன்றாக விவையனைத்தும் நறுக்கியுள்ளி
  வசம்புடனே நல்லெள்ளெண்ணெய்
குன்றாக விளக்கெண்ணெய் வேப்பெண்ணெய்
  யுங்குழப்பிக் கூட்டி மைந்தன்
தன்றலைமார் பகமட்டுந் தடவிவீக்க
  முமிறங்குநூ தனையும் வார்க்கத்
துன்றுகரப் பான்வாதந் தொலையுமெனச்
  சரபேந்திரர் சொன்னவாறே' *(சர.வை.மு-231-232)*

### *1. எண்ணெய்*

எருக்கம் பாலோ டரிதாரம்
  மெலியு மருந்து கொடிவேலி
திருத்த மான வெள்ளுள்ளி
  தெளியும் வசம்பு சீனக்காரம்
பெருக்க வேரொன் றைங்கழஞ்சு
  பேணி யக்கி யிலைக்கள்ளி
பருக்க வாட்டி யிலைச்சாற்றில்
  பதத்தி லரைத்துக் கொள்ளுவதே.

கொள்ளே நறுநெய் நல்லெண்ணெய்
  கூட்டுஞ் சித்தா மணக்கெண்ணெய்
நிள்ளே. 'திரக்கும் நிம்பெண்ணெய்
  நலங்கா வெச்சொட் டிட்டுமஞ்சள்

துள்ளாய் தொக்கப் பொடிசெய்து
  துளாவிக் காய்ச்சி எண்ணெயுடன்
கொள்ளா திடுமே லேயுழக்கு
  வாத கரப்பா னுக்கே.

எண்ணெய் வைச்சே தெனப் பிடித்தேன்
  வீக்கத்தி லிடுக நாளும்
வன்னமாம் ராத்தி ரிக்கு
  வகையுடன் எருக்கெ லையே
பன்னிரெண் டெலையே வாட்டி
  பதத்துடன் கட்டு வீராய்
என்னில் வாத கரப்பா
  னிறங்கிடும் வீக்க மென்றே'

*(ஏடு.42-322,822-410,411)*

### *மாவிலிங்க எண்ணெய்*

மேவு மாவிலிங் கத்தோலி லைக்களி
  விரிந்த வாதகரப் பான்பட்டை
தாவு கொம்மட்டிக் காயு மேனியிலை
  சாய்ந்த தோர்திருகு கள்ளியும்
வாவு நீலியிலை யேழுமோர்வகை
  யுழக்குச் சாறெனவகுத்துநீ
மாவி ளக்கெண்ணெயி லிட்டெ ரித்ததை
  வடித்ததோர் காசெடை கொடுத்திடே.

*(புத்.477-229)*

### *2. புங்கெண்ணெய்*

புங்கெண்ணெய் பசிய மஞ்சள்
  புதிய வெள்ளைப் பாசாண
மங்குஞ் சென்னகரம் வேம்பாடல்
  வல்லாரைச் சாறு நல்லெண்ணெ
பங்கப் ப்டவே சொரியாமல்பூதத்தில்
  வடித்து மேல்பூசத்
தங்கப் பிணையே வெய்யதண்ணீ
  தண்ணிற் குளிக்கத் தறுகாதே

தூது மோரிலைத் தாமரைவேர்
துய்ய நீலி யெருக்கம்வேர்
மீது கொடுவேலி சமன்செய்து
மிகவே கூட்டி யொக்கக்கொள்
காது மோதங்கள் கார்போகி
கரிய சீரகமுங் கெந்தகமுங்கூட்
டேது வாக யெள்ளெண்ணெய்
லெரித்துப் பதத்தி லிறுத்திடவே *(ஏடு.42-328)*

### *வாதகரப்பானுக்குக் குழம்பு*

வெள்ளைப் பூண்டு முக்கழஞ்சு
மிளகு மூன்று கழஞ்சுடனே
கள்ள வொண்ணாத செருப்படியின்
சாறு கால்படி தன்சாறாய்
மெள்ள அரைத்துக் குழம்பாக்கி
மேவுங் கிண்ணந் தனில்வழித்து
உள்ளத் துறையும் மடமாதே
ஒருநாள் இரண்டு தான்கொள்ளே.

இப்படிக் கொள்ள நாலுநாள்
இடியும் வாத கரப்பானும்
அப்படி யென்றே அசவாதே
அருள்சேர் முனிவ னுரைத்தபடி
தப்பொரு நாளும் வாராது
சதுராய்க் கண்ட(அ)து காணும்
நட்புறு குழலாய் மடமாதே
நாலு நாள்மறு பத்தியமே. *(ஏடு.277-107,108)*

## *34. திமிர்வாத கரப்பான் - குறி குணம்*

வண்மையா யுட்கார்ந்து யெழும்பும் போது
வருத்தமாய் கால்கைக ளிடுப்பு சந்து
திண்மையாய் திமித்துமே கரடு கட்டுஞ்
செயலிழந்து வீங்கி வெடித்து புண்ணும்

தண்மையாய் சடமெங்கும் ஊத லாகும்
 தண்ணீர்தான் மிகத்தவித்து தனிச்சூ டுண்டாம்
உண்மையா மேனியெங்கும் உளைச்ச லுண்டாம்
 உதறுமே திமிர்வாத கரப்பா னாமே. *(ஏடு.233-168)*

பேராக யிருந்தெழுந்து நடக்கும் போது
 பேறாமல் கால்சந்து திமிர்த்து வீங்கி
வேறாக உடம்பெங்கும் வெடித்துப் புண்ணாம்
 வெதும்பியே சரீரமெங்கும் பொரும லாகும்
தேறாக யுடம்பெங்கும் திரைஞ்சு போகுந்
 திமிருதான் துண்டுதுண்டாய்ச் சிதறிக் காணும்
பாறாக திமிர்வாத கரப்பா னென்று
 பாரிலுள்ளோர் தனக்கித்தைப் பரிந்து தானே.
*(ஏடு.233-169)*

## *35. விஷக்கரப்பான் - குறிகுணம்*

தேகத்தில் சிவந்து பொங்கி
 சிரங்குபோல் நீரும் பாய்ந்து
ஆகத்தில் ஊர்ந்து கொண்டு
 அடைவுடன் தலையுங் காயும்
நோகுமே யுதரத் துள்ளே
 நோயகால் ரெண்டும் புண்ணாய்ப்
பாகமாய் வடித்து நீரும்
 பற்றியே பாய்ச்ச லாமே. *(கை.பி.98-155)*

## *நெய்*

கானகத்தில் வாழு மந்த
 கடியநீர் வெட்டி நெய்யை
மானேகேள் பழைய காடி
 வார்த்துநீ வைத்துப் பின்பு
தானந்த கரிய சீரம்
 தனையரைத்து உடனே காய்ச்சி
தேனேகே ளுடம்பில் போடத்
 தீர்ந்திடுந் திண்ணந் தானே.
*(ஏடு.601-79)(கை.பி.98-159)*

### *36. கடிவிஷக் கரப்பான் - குறிகுணம்*

படத்தின்மேல் முட்டின் கீழே
பனிகுளிர் சீதம் பற்றி
திடத்துடன் தினவுண் டாகும்
சேனையின் குருப்புப் போலே
விடத்தினில் வெக்கை கொண்டு
வெடித்துடன் வெருண்டு புண்ணாய்
கடித்திடுங் குழல்நல் லாளே
கடிவிஷக் கரப்பன் றானே.

முடியுனை முட்டின் கீழே
முயங்குமா முகத்தைச் சூழ்ந்து
கடிபுனை கரண்டை மேலாய்
கனத்திடும் நீரும் பாயும்
வெள்ளரிப் பழம்போ லாகும்
வெகுண்டுடன் நீரும் பாய்ந்து
கடிவிஷக் கரப்ப னென்று
காதலாய்க் கருதி னாரே *(கை.பி.98-159)*

### *தையிலம்*

ஆமே யுருக்கு நெய்நாழி
அடவாய் ரெட் ....நெய்யுழக்கு
போமே கருத்த சீரகமும்
பொருந்துந் துத்தம் வேம்பாடை
தாமே கால்கோல் மஞ்சள்கோட்டம்
தக்க மிளகு துருசுபுற்றும்
நாமே சந்த சாம்பிராணி
நல்ல மூன்று சாதியுமே.

சாதி மதுரம் கருஞ்சூரை
சாரும் வகைக்கு கழஞ்சொன்று
பதிரும் பெரிய செந்நெருஞ்சி
பகரும் காரை யிலைச்சாறும்

நீதிப் படியே யுள்ளிச்சார்
நேரே மாறும் தண்டின்சார்
சீந்தி யவலிச் சாறாகிச்
சிறக்க வெற்றிலை சரிகாய்ச்சே.

காய்ச்சி வடித்துத் தேய்த்துவரும்
கருத்து கரப்பன் நீர்சிரங்கு
நீச்சத் துடனே தான்தீரும்
நிசமாய்த் தீரும் ...
வாச்ச யெண்ணெ யிதுபோலே
வாலை கட்கு யில்லையென்று
ஓச்சம் பெரிய பொதிகைமுனி
உரைசெய் முறையென் றறிவாயே. *(கை.பி.98-155)*

### *37. வீங்கு கரப்பான் - குறிகுணம்*

முன்னரே யாங்கங்கு மூரிக் கனமுண்டாய்ப்
பின்னரவை புண்ணாய்ப் பெருந்தீயாய்-மன்னியெரிந்
தப்பா லதுதணிந் தவ்வவற்றி னீர்சொரிதல்
தப்பாவீங் குக்கரப்பான் தான். *(புத்.477-238)*

### *38. வெடிகரப்பான்-குறிகுணம்*

அரிவை யேயுடல்க ளெங்கும் வீங்கு
மசைகீலில் வீங்குமதில் துண்டாம்
விரிய வீங்கியதி லேவெடித்திடு
மிகுந்த வெப்பதுவு மாகவே
திரிகி யேதலை வலித்து மேலும்வெகு
தினவு மாகியது வோடினால்
உரிய தாகும்வெடி கரப்ப னாமென
புகந்து பண்டித முணர்த்திடே. *(புத்.477-232)*

வெடித்திடுந் தேக மெல்லாம்
வெள்ளரிப் பழம்போ லாகி
கடுத்திடும் நீரும்பாயும்
காய்ச்சலு மிகுதி யாகும்

தடித்துடன் விஷம்போல் வீங்கும்
சடமெல்லா மொருப்போல் புண்ணாம்
துடித்திடும் கபமு முண்டாம்
சொல்லிடில் மரண மென்னே. *(கை.பி.98-158)*

### *சூரணம்*

கருஞ்சூரை நிலவாகை சிவனார்வேம்பு
காட்டுமல்லி கையிலைமிள கரணைவேரும்
கிரந்திநாய கம்கழலின் கொடிவேரெட்டுங்
கிளைந்துகளைந் தெடுத்து வெயிற்
கிடத்திவைத்தே ...... ...... ......
பரிந்திடித்து வத்மிரகா யமுநன்றாகப்
பண்ணியதைக் கொண்டுவெரு கடிப்பிரமாணம்
எரிந்துவரு மிளவெந்நீர் தன்னிலேதா
னிருபோதுண பத்தியநா ளீரைந்தாமே.

நாளொருபத் தும்மறுபத் தியம்பிடிக்கி
நனலமான வுப்புசற்றே நல்கக் கொள்வாய்
மீளவுந்தா னிளங்கீரை முருங்கைக்கீரை
மேற்புடிபிஞ் சுங்கூட்டிக் கொள்ளலாகுங்
கோளசெய் புளி யாகாது பத்துநாளுங்
கூட்டாதே கைகண்ட குணங்காணென்ன
வாளேந்து கரசரபப் பூபர்சொன்ன
வாகடநூன் முறைமையிது மகிமையாமே'
*(சர.வை.மு.-283)*

### *வெடிகரப்பானுக்கு சங்கங்குப்பி எண்ணெய்*

உணர்ந்தி டாதசங் குப்பி சின்னிவள
றுகந்த மேனிச டைச்சி வேர்
பனைத்தி டுங் கழற் புங்கம் வேரினோடு
பகருகின்ற நுணாவுமே
இணைத்த சாறுவகை யாழக்கு மாமணக்
கெண்ணெய் சேரினி லெரித்து நீ
யணைத்த ருந்திடவு மோடு மேவெடி
கரப்ப னாமென வறிந்திடே. *(புத்.477-232-233)*

### *39. வெண்கரப்பான் - குறிகுணம்*

மாதே கேளாய்வெண்கரப்பான்
　　மருண்டு சுரம்போ லுண்டாகும்
கோதே வெடிக்கும் புண்ணாகும்
　　கோரும் நீர்போல் வீக்கமுமாய்
பாதே கபமு முண்டாகி
　　பதிந்து போகும் குரல்சத்தம்
நீதே கழிச்சல் மிகவாகி
　　நீங்கும் மாசம் மூன்றதுவே *(கை.பி.98-154)*

# கழிச்சல்

***வேறுபெயர் - பேதி***

| | | |
|---|---|---|
| அதிசாரக் கழிச்சல் | - | மிகு கழிச்சல், பெருங்கழிச்சல். |
| ஆமக்கழிச்சல் | - | சீதக்கழிச்சல். |
| நிணக்கழிச்சல் | - | ஊன்கழிச்சல், பலநிறக்கழிச்சல், கொடிய கழிச்சல், நாறும் கழிச்சல், கிராணி பேதி. |

***இயல்***

குடலின் இளக்கத்தினால் மலம் இயல்பாக வெளியேறாது செரியாமலோ, செரித்தும் செரியாததுமாகவோ, நீர் நீராகவோ, சளியாகவோ, இரத்தமாகவோ, பல்வேறு நிறங்களுடனோ குடல் புண்பட்டு இற்று கழிச்சலில் கலந்தோ வயிற்றுப்புண்ணினை உண்டாக்குவது.

***நோய்வரும் வழி***

மாப்பண்டம், புலால், நெய், எண்ணெய்வகைகள் கூடிய உணவுகள், அழுகிய மீன், அழுகிய காய்கறிகள், ஊசிய பொருட்கள், எளிதில் செரிக்கக் கூடாத உணவு, கிச்சடி, வெல்லநீர் இவற்றை மிகுதியாய் உண்ணல், தேவையான அளவுக்கு அதிகமாக உண்ணல், வேகாப் பொருட்கள், சுனைநீர், சுண்ணம் கலந்த நீர் முதலிய கடின நீர்களை உட்கொள்ளல் ஆகிய காரணங்களால் கழிச்சல் தோன்றும். காரம், புளிப்பு கூடிய உணவுகளைக் கொள்ளல், இரசம், பாடாணம் கூடிய மருந்துகளை மிகுந்த அளவில் அல்லது நாளளவில் மிகுந்தேனும் கொள்ளல், குன்றிமணி, இந்திரமூலம், சேங்கொட்டை, மூசாம்பரம் போன்ற புண்ணாக்கக் கூடிய பொருள்களால் ஆன மருந்தை உள்ளுக்கு வழங்குதலால் குடல் தாபிதமடைந்து புண்ணாகி குருதிக் கழிச்சல் ஏற்படும்.

உணவு வேளையில் உண்ணாதிருத்தல், அடிக்கடி பட்டினி கிடத்தல், இரவு நேரங்களில் விழித்திருத்தல் ஆகிய காரணங்களால் உடலின் வன்மை குறைந்து தீக்குற்றங்கள் கேடடையவும் குற்றங்களின் கேட்டால் பசித்தீ கெட்டு உண்ட உணவு செரியாது புளித்து வயிற்றிலேயே தங்கி விடும். தீக்குற்றத்தின் மேலீட்டால் மேல்நோக்குக்கால், கீழ்நோக்குக் கால், பரவுகால் இவற்றின் செயலால் நிணக்கழிச்சல் எனும் கிராணிக் கழிச்சல் ஏற்படுகிறது.

பசித்தீ குறைந்த நிலையைத் தக்கவாறு மருந்துகளாலும் உணவு வகைகளாலும் நீக்காவிடின் உடல் வன்மை குறைந்து குற்றங்கள் மிகுதிப் படுவதினால் இக்கழிச்சல் வருகிறது. பெருங்கழிச்சல் உண்டான பொழுது அதற்குத் தக்கவாறு மருத்துவ பரிகாரம் செய்யாததினால் குடற்புண் உண்டாகி நிணக்கழிச்சல் ஏற்பட்டு விடுகிறது.

சிறுகுழந்தைகள் விளையாட்டுப் பொருட்களையும் மற்ற பொருட்களையும் அப்படியே வாயில் வைப்பதாலும் பச்சைக்காய்கறிகள், பழங்கள் இவற்றைக் கழுவாமல் சாப்பிடுவதாலும் மண்ணில் விளையாடி விட்டு அப்படியே விரல்களை வாய்க்குள் வைத்திருப்பதாலும் முன்கூட்டியே வயிற்றிலுள்ள கிருமிகளாலும் கழிச்சல் ஏற்படுகிறது.

தட்பவெப்ப நிலை வேறுபாட்டாலும் சில சமயங்களில் பயம், பீதி முதலிய காரணங்களாலும் கழிச்சல் உண்டாகும்.

பலவிதமான தோடங்களினாலும் சுரநோய்க்குத் துணையாகவும் இந்நோய் வரும்.

### *குறிகுணங்கள்*

வயிற்றுவலி, வயிற்றிரைச்சல், நாக்கில் மாப்படிதல், நாவில் முள் பாய்தல், தாகம் அல்லது நாவறட்சியேற்படுதல், களைப்பு, வாய்நீருறல், வாய் குமட்டல், விக்கல், ஏப்பம், வயிறுப்பல், குடலிரைதல், அடிவயிறு இழுத்துப் பிடித்தாற் போலிருத்தல், வயிறு பொருமி வலித்து காற்று கூடி இரைதல், நீரிறங்காது அடிக்கடி கழிதல், உண்ட உணவு செரிக்காது மஞ்சளித்து உடல், கை, கால், வீங்கி காய்ச்சலுடன் உடல் வெளுத்து தலை வலித்து வாந்தியுண்டாதல், செரிக்கும் தன்மை இன்றேனும் பொய்ப்பசியெடுத்தல், உடல் நாளுக்கு நாள் இளைத்தல், கொப்பூழைச் சுற்றியுள்ள் குடல் முறுக்கி வலித்து உடலைத் துவளச் செய்யல், வயிறும் கீழ்வாயும் கடுத்து கருமையாகவும் நுரையுடனும் கூடிக் கழிதல், பின்பு நுரை நுரையாய்க் கழிதல், மார்பில் கோழை, இருமல், பெருமூச்சு, இழுப்பு, உடம்பினுள் ஓர் அழற்சி, குளிர்தல், புளித்தேப்பம், உணவில் விருப்பமின்மை, செரித்தும் செரிக்காததுமாய் அடிக்கடி கழிதல், நாளுக்கு நாள் கழிச்சல் அதிகமாகி வன்மை குறைந்து வறட்சியுண்டாதல், கால் வீங்கி நீர் கோர்த்தல், சோர்வு, வெகுளி, கை, கால்சில்லிடல் ஆகிய குறிகுணங்கள் பெருங்கழிச்சலுக்குரியவை.

தலைவலித்தல், வாய் குமட்டி வாந்தி வருவது போன்ற தோற்றமேற்படல், வயிறுகடுத்தல், கீழ்வாய் எரிச்சல் ஏற்படுதல், வயிற்றைப் புரட்டல் ஆகிய முற்குறிகளைக் காட்டி வயிறு கடுகடுத்துக் கழியத் தொடங்கல், கழிச்சலில் சளிபோல சீதம் கலந்திருத்தல், இரண்டு மூன்று முறை கழிச்சலான பின் வயிற்றுக் கடுப்பும், கீழ்வாய்க்கடுப்பும் மிகுதிப்படல், நாளாக ஆக மலம் கலவாமலே சீதமும் குருதியும் கூடி சிறு அளவில் கழிதல், கழியும் போது வலி அதிகமாதல், ஒரு நாளைக்குக் கணக்கற்ற முறை (ஐம்பது, அறுபது) கழிதல், ஆகியவை சீதக்கழிச்சலின் குறிகுணங்கள்.

சீதக்கழிச்சலுக்குத் தக்க மருத்துவம் செய்யாவிடின் நாடி தளர்ந்து உடல் வியர்த்து கண் பஞ்சடைந்து நாவறண்டு முப்பிணியை யுண்டாக்கும்.

சில வேளைகளில் சீதத்தோடு குருதியும் அதிக அளவில் வெளியேறும். மருத்துவத்தால் கழிச்சல் நின்றுவிட்ட சில நாட்களுக்கு அல்லது சில திங்களுக்குப் பின்னும் மீண்டும் கழிச்சல் காணும். குடல் இற்றுச் சீதமும் குடல் புண்ணிலிருந்து இரத்தமும் அதிக அளவில் வெளியேறுவதால் உடலின் குருதி குறைந்து வள்மையிழந்து உடல்வெளுத்து இளைக்கும்.

வயிறு மந்தமாயிருத்தல், உண்ணாத போதும் வயிறு உண்டது போன்றிருத்தல், உண்ட பின் உணவு வயிற்றை விட்டிறங்காது வயிற்றிலேயே தங்கியிருப்பது போல் தோன்றல், வாய்நீரூறல், வாந்தி வருவது போன்றிருத்தல், வயிறு கடுத்தல், அடிவயிறூதல், இரைதல், வலித்தல், புரளல் எனும் குறி குணங்கள் நிணக்கழிச்சலில் தோன்றும். பொய்ப்பசி தோன்றல், காற்று, சிறு குடல், பெருங் குடலில் சேர்ந்து தங்குமிடமெல்லாம் கட்டி போல் காணல், கழிச்சல் கருநிறத்தோடும் வெல்லப்பாகு போன்றும் பல நிறமாகக் கழிதல், நரம்பு தளரல், இற்றுப்போன குடலின் தோல் தன் வடிவில் வெளியாதல் ஆகிய குறிகுணங்கள் நிணக்கழிச்சலுக்குரியவை. எருவாய் சூட்டுடன் எரிதல், குத்தலுண்டாக்குதல், கழிச்சல் கெட்ட நாற்றமாயும் வெளுப்பாயும் இருத்தல், கை, கால் தளர்தல், உட்காய்ச்சலுண்டாதல், கண்கள் சிவத்தல், மூக்கு, நா வறளல், குடல் நைந்து உரித்த பாம்பின் தோல் போல் குடலின் மெல்லிய தோல் கழிச்சலில் கலந்து காணல், குளிர்,

தலைவலி, நடுக்கல் ஆகியவையும் நிணக்கமிச்சலுக்குரிய குறிகுணங்கள்.

சில வகையான நிணக்கழிச்சல் நோயில், வயிறு வலித்து மார்பு பக்கவிலா எலும்புகள் வலித்தல், படுக்கையில் பொருந்தாமை, மயக்கமுண்டாதல், கண்கள் குழி விழுந்து இருளடைதல், ஆகிய குறிகுணங்களும் நிணக்கழிச்சல் எனும் கிராணிக் கழிச்சலில் தோன்றும்.

***மருத்துவம்***

கழிச்சலுக்குப் பொதுவாக வழங்கக் கூடிய மருந்துகள் இங்குத் தரப்படுகின்றன. அதிசாரம் எனும் பெருங்கழிச்சல் நோயில் பசித்தீ கெட்டு குற்றங்களைத் தூண்டி கீழ்நோக்கு வாயுவைப் பெருகச் செய்யுமாதலால் பசித்தீயைத் தூண்டுவதற்கான மருந்துகளையும் தன்னளவில் மிகுந்த குற்றங்களையும் வாயுவையும் தன்னிலைப்படுத்தும் பொருட்டு மருந்துகளைக் குழந்தையின் உடல் வன்மை, நோயின் தன்மையைப் பொறுத்து அளித்தல் வேண்டும்.

துவர்ப்பிச் செய்கையுடையதும் பசித்தீத்தூண்டும் மருந்துகளையும் அகட்டுவாய்வகற்றி மருந்துகளையும் கொடுத்தல் நலம் பயக்கும். இச் செய்கையுடைய மருந்துச் சரக்குகளாலான குடிநீர், சூரணம், மாத்திரை, இளகம், மணப்பாகு ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும்.

## *குடிநீர் வகைகள்*

### *1. மாதுளம் பழத்தோல் குடிநீர்*

மாதுளம்பழத்தோல், சுக்கு இவற்றை வகைக்கு 15கி. எடுத்து 2.6மி.லி. நீர்விட்டு 325மி.லி.யாய் சுருக்கிக் காய்ச்சி தேனும் கூட்டி 15-30மி.லி. கொடுக்க பெருங்கழிச்சல் குணமாகும்.

### *2. அதிவிடையக் குடிநீர்*

அதிவிடையம், வில்வப்பழம், இருவேலி, கோரைக் கிழங்கு இவற்றை வகைக்கு 10கி. எடுத்து 2.6லி. நீர்விட்டு எட்டிலொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. அதில் சுக்கு, திப்பிலியைப் பொடித்துப் போட்டு 15-30மி.லி. கொடுக்க பெருங்கழிச்சல் குணமாகும்.

3. கோரைக்கிழங்கு, செங்கழுநீர்க்கிழங்கு, கோட்டம், நன்னாரி, சிறுதேக்கு, தேவதாரம், பற்பாடகம், தாமரை வளையம், சுக்கு, பங்கம்பாளை, ஓமம் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து, 2.6லி. தண்ணீர்

விட்டு 325 மி.லி. யாகச் சுருக்கிக் காய்ச்சி வடித்து அதில் அதிவிடையம் பொடியைச் சேர்த்து 15-30மி.லி. கொடுக்க சுரத்தோடு வரும் பெருங்கழிச்சல் தீரும்.

4. மாதுளம்பிஞ்சு, அதிவிடையம், முத்தக்காசு, பெருமரத்தோல், சுக்கு, விளாங்காய்ச்சதை இவற்றை வகைக்கு 10கி. கூட்டி 2.6லி. நீர்விட்டு 325மி.லி. யாய்க் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்க பெருங்கழிச்சல் குணமாகும்.

### *5. திப்பிலியாதிக் குடிநீர்*

திப்பிலி, கொடிவேலி, வசம்பு, வெட்பாலை, உத்தாமணி வேர், இலந்தைவேர், கோரைக்கிழங்கு, அதிவிடையம், செவ்வியம், கடுகுரோகணி, கண்டுபாரங்கி, திரிகடுகு, பெருங்குரும்பை, வேப்பம் ஈர்க்கு, கடுகு, கருஞ்சீரகம், கீழ்க்காய் நெல்லி, விளாவேர், பெருங்காயம் இவற்றைச் சமனெடை எடுத்துப் பொடியாக்கி 250மி.கி. அளவெடுத்து குடிநீர் செய்து சாப்பிட பெருங்கழிச்சல், பொருமல், நாபிச் சூலை, கடுப்பு, இருமல் தீரும். பசியுண்டாகும்.

### *6. மரமஞ்சள் குடிநீர்*

மரமஞ்சள், மஞ்சள், அதிமதுரம், வில்வப்பழம், வெட்பாலையரிசி இவற்றை வகைக்கு 10கி. எடுத்து 2.6லி. தண்ணீர் விட்டு 325மி.லி. யாய்க் காய்ச்சி அதிவிடையம் தூள் செய்து போட்டு 15-30மி.லி. கொடுக்க கழிச்சல் வகைகள் தீரும்.

### *சூரண வகைகள்*

தயிர்ச்சுண்டி, சுண்டை வற்றல் பொடி, அன்னப்பொடி, தாளிசப்பொடி ஆகிய சூரணங்களைக் கொடுக்கலாம்.

### *1. தயிர்ச்சுண்டி சூரணம்*

இந்துப்பு, வெங்காரம், வெடியுப்பு, பூநீறு, சோற்றுப்பு, சுக்கு இவற்றை வகைக்கு ஒருபலம் எடுக்க. புளித்த தயிர் 60 அவுன்ஸ் எடுக்க. தயிரில் மேற்சொன்ன அனைத்துச் சரக்குகளையும் ஊறப்போட்டு வெயிலில் வைக்க. தண்ணீர் முழுதும் வற்றியவுடன் நன்கு சூரணித்துக் கொள்க. அதனை 15-30கி. அளவு எடுத்து தண்ணீரில் கலந்து குழந்தைகட்குக் கொடுக்க செரியாமை, கழிச்சல் குணமாகும்.

## 2. சுண்டைவற்றல் சூரணம்

சுண்டைவற்றல், கருவேப்பிலை, மாம்பருப்பு, மாதுளைத்தோல், ஓமம், நெல்லிமுள்ளி, வெந்தயம் ஆகிய மருந்துச் சரக்குகளைச் சம அளவெடுத்துக் கொள்க. இளவறுவலாக வறுத்துப் பொடித்துக் கொள்க. எருமைத்தயிரில் வேண்டிய அளவு எடுத்து கலந்து கொடுக்க செரியாமை, அதிசாரக் கழிச்சல் தீரும்.

## 3. அன்னப்பொடி

சோற்றுப்பு 150கி., இந்துப்பு 150கி., பெருங்காயம் 200கி., சுக்கு, ஓமம், மிளகு, சீரகம், காய்ந்த கருவேப்பிலை இவற்றை வகைக்கு 1-1/2கி. எடுத்துத் தூய்மைப்படுத்தி தனித்தனியே முறைப்படி சூரணம் செய்து கொள்க. அவற்ற்ற ஒன்று சேர்த்து வேண்டிய அளவு சோற்றில் கலந்து சாப்பிட கொடுக்கவும். செரியாமை நீங்கும்.

## சுரசம்

தைவேளையிலை, வசம்பு இவற்றைத் தட்டிப் போட்டு நன்றாக வெதுப்பிச் சாறு பிழிந்தெடுத்து அதனை அளவறிந்து குழந்தைகட்குக் கொடுக்க கழிச்சல் குணமாகும். *(புத்.482-107)*

## அனைத்து வகை கழிச்சல் சாறு

கோவைத்தண்டு, வாழைக்கிழங்கு, தென்னங் குரும்பை இவற்றை எடுத்துப் பிழிந்த சாறு 675மி.லி. எடுக்க. அதில் ஒரு பிடி சர்க்கரை போட்டு கொடுக்க ஆறு போல ஓடும் கழிச்சல் உடனே நிற்கும்.

## வயிறு இரைந்து கழிதல் குடிநீர் வகைகள்

1. சுக்கு, திப்பிலி, சீரகம், தான்றிக்காய் இவற்றை வகைக்கு 70கி. எடுத்து முறைப்படி குடிநீராய்க் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்க வயிறு இரைந்து கழிவது நிற்கும். *(எடு.262-100)*

2. ஈரவெங்காயம், வேலிப்பருத்தியிலை, முடக்கொத்தானிலை இவற்றைச் சமமாய் எடுத்து தண்ணீர் ஊற்றி எட்டிலொன்றாய்ச் சுருக்கிக் காய்ச்சி வடிகட்டி 15-30மி.லி. கொடுக்க கழிச்சல் தீரும். *(புத்.482-107)*

## 3. பிட்டவித்த குடிநீர்

புளியாரையுடன் வாழைப்பூவைச் சம அளவு சேர்த்து பிட்டவித்து

பிழிந்தெடுத்துக் கொள்க. அதனுடன் தேனையும் கலந்து 15-30மி.லி. கொடுக்க கழிச்சலனைத்தும் நீங்கும். *(ஏடு.550-231) (கை.பி.போ.233)*

4. காவிக்கல் எடுத்து 1.3லி. தண்ணீரில் போட்டு சுண்டக் காய்ச்சி ஒரு கைப்பிடியளவாக இறுத்துக் குழந்தைக்குக் கொடுக்கவும். கழிச்சல் கட்டும். *(ஏடு.231-15)*

5. ஆலங்கொழுந்தும் பட்டையும் ஆவாரங் கொழுந்தும் பட்டையும் விடதாரிக் கொழுந்தும் பட்டையும் நாவல் கொழுந்தும் பட்டையும் கருவேலங்கொழுந்தும் பட்டையும் எடுத்துக் கொள்க. அத்திப்பட்டை, தென்னை மொக்கு இவற்றையும் சேர்த்து வகைக்கு 9கி. எடுத்து இடித்துக் கொள்க. ஒரு மட்பாண்டத்தில் 675மி.லி. நீர் விட்டு 160மி.லி யாகச் சுண்டக்காய்ச்சிக் கொள்க. அதில் அதிவிடையம், சீரகம், மாசிக்காய், கிராம்பு, சாதிக்காய், விளாம்பிசின் ஆகிய மருந்துப் பொருட்களை வகைக்கு 1கி. எடுத்துப் பொடித்து குடிநீரில் தூவிக் கொள்க. அதனை வேளைக்கு 20மி.லியாக இரண்டு வேளை மூன்று நாட்கள் கொடுக்க கழிச்சல் தீரும். *(புத்.482-159)*

***கற்கவகைகள்***

1. தாழைவிழுது, பரிசந்தனம், கலைக்கொம்பு, திருநாமம், இலவங்கம், செங்கழுநீர்க் கோட்டம், அதிமதுரம், சிறுகீரைவேர், பொன்னாங்காணி வேர், வரிக்கற்றாழைச்சோறு, நீர்ப்பூலாவேர் இவற்றைச் சம அளவெடுத்து அரைத்து வெண்ணெயில் குழப்பிக் கொடுக்கத் தீரும். *(த.சு.கை.ம.ம.செய்முறை-44)*

2. அபினி, சாதிக்காய், கோரோசனை, அதிவிடையம், இவற்றைச் சம அளவெடுத்தரைத்து தயிரில் கலந்து கொடுக்கவும், ஒரு நேரம் மட்டும் பாலில் கொடுக்கவும். *(ஏடு.322-33)*

***3. கீழா நெல்லி கற்கம்***

கீழாநெல்லி வேரைத் தேவையான அளவெடுத்து தாய்ப்பாலில் அரைத்து தாய்ப்பாலிலேயே கலந்து கொடுக்க கழிச்சல் குணமாகும். *(புத்.477-326,482-107)*

4. நாவல் கொழுந்தை எடுத்து எலுமிச்சங்காயளவு அரைத்து எருமைத் தயிரில் கலந்து மூன்றுநாள் கொடுக்க கழிச்சல் தீரும். *(ஏடு.725-58)*

5. ஏலம், நற்சீரகம், சுக்கு, நெல்லிப்பருப்பு, சாதிக்காய், காசுக்கட்டி, மாவிதை இவற்றைச் சமஅளவு எடுத்து நன்கு அரைத்து வடிதயிரில் கலந்து கொடுக்கவும். இவ்வாறு மூன்று நாட்களுக்குக் கொடுக்க கழிச்சல் குணமாகும்.

6. மாம்பட்டை, அதன் பிசின், களிப்பாக்கு இவற்றைச் சமனாக எடுத்து அரைத்து பசுவின் பாலில் கலந்து மூன்று நாள் காலை 250மி.கி. அளவு கொடுக்கவும். *(ஏடு.639-167)*

### *7. குன்றி கற்கம்*

வெண்குன்றிப்பருப்பு, புளிவிதைத் தோல், அத்திப்பால், எருமை வெண்ணெய் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து அரைத்து 250மி.கி. கொடுக்க அனைத்து வகை கழிச்சலும் தீரும். *(புத்.477-329)*

8. ஓமம், மிளகு இவற்றை 35கி. எடுத்து வெதுப்பிப் பொடித்து வெல்லம் 35கி. சேர்த்தரைத்து வெருகடியளவாக 10 நாள் கொடுக்கவும். *(ஏடு.725-58)*

### *1. சூரணம்*

வெட்பூலாவேர், விடத்தோல்பட்டைச்சாறு, நீர்ப்பூலாவேர், கஞ்சாயிலை, நெல்லிப்பருப்பு இவை அனைத்தையும் சேர்த்து உலர்த்திப் பொடித்து கொள்க. நல்ல சந்தனத்தை அரைத்துக் குழப்பி அதில் மருந்துப்பொடியினையும் போட்டு குழப்பி 250மி.கி. கொடுக்கவும். இவ்வாறு மூன்று நாள் கொடுக்க சீதக்கழிச்சல், இரத்தக் கழிச்சல், சாதாரண வயிற்றுக் கழிச்சல் இவை நீங்கும்.

### *2. பஞ்சதீபாக்கினிச் சூரணம்*

மாங்கொட்டைப் பருப்பு, கருவேப்பிலை இலை, சுண்டைக்காய் வற்றல், வெந்தயம், ஓமம் இவற்றைச் சமஅளவெடுத்து காய வைத்து வறுத்திடித்து சூரணமாக்கிக் கொள்க. அதனை 250மி.கி. அளவெடுத்து நீர் நீக்கிய கெட்டியான பசுவின் தயிரில் கலந்து காலை, மாலை கொடுக்கவும், பெருங்கழிச்சல், வயிற்றிரைச்சலுடன் கூடிய கழிச்சல், சீதக்கழிச்சல், வயிற்றுக்கடுப்பு முதலியவை நீங்கும். *(கை.பி.அ.வை-178)*

3. வெள்வெங்காயப்பூண்டு உரித்து நடுநரம்பு எடுத்து போட்டு அரைத்துத் தயிரில் குழப்பி புகட்டவும். அவரையிலை நறுக்கி ஆழாக்குச்

சாறு பிழிந்து மட்டிச் சுண்ணாம்பு துவரையளவு கூட்டித் தினமொரு நேரம் புகட்டவும்.

4. காசுக்கட்டி சற்றே வெதுப்பிப் பொடி செய்து பன்றி எருமைத் தயிர் அல்லது தாய்ப்பாலில் கூட்டி புகட்டவும். சிறு குழந்தைகளுக்கான கடுப்புக் கழிச்சல் நிற்கும். *(ஏடு.313-92,93)*

5. நற்சீரகத்தை இளவறுப்பாக வெதுப்பிப் பொடி செய்து கொள்க. அதற்குச் சமபங்கு சீனிசேர்த்து தேவையான அளவு பசு நெய்யில் குழப்பிக் கொள்க. விளாங்காய் அளவு மூன்று நாள் இரண்டு நேரமும் உட்கொள்ள கழிச்சல் குணமாகும். *(ஏடு.400-274)*

6. இலவம்பிசின், அதிவிடையம், காசுக்கட்டி, கிராம்பு, சாதிக்காய், குரோசாணி ஓமம், வெள்ளைக் குங்கிலியம், அபினி, வசுவாசி, கார்த்திகைக் கிழங்கு இவற்றைச் சமன் சேர்த்து சூரணித்துக் கொள்க. சூரணம் உள்ள எடைக்குச் சமமாக சுக்கை எடுத்து நன்றாக வெதுப்பிச் சுட்டு சூரணமாக்கிக் கொள்க. இரண்டு சூரணங்களையும் தனியாகவோ கலந்தோ வைத்துக் கொள்க. சூரணத்தை வகைக்கு 250மி.கி. எடுத்து தயிரிலே கலந்து கொடுக்க கழிச்சல் நீங்கும். *(ஏடு.400-275)*

7. சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சாதிலிங்கம், அபின், ஊசிக்காந்தம் இவற்றை வகைக்கு 8கி. ஊமத்தை விதை 4கி. எடுத்து இந்த ஏழு வகையையும் கூட்டி பொடி செய்து சூரியபுடத்தில் வைத்து பொடி செய்து எடுத்துக் கொண்டு மாலை வேளையில் மட்டும் 250மி.கி. சாப்பிட கொடுக்கவும் . அனைத்துக் கழிச்சலும் தீரும். *(ஏடு.212-174)*

8. நீலக் குந்திரிக்கத்தைப் பொடித்து தேங்காய்ப்பாலில் கொடுக்க கழிச்சல் குணமாகும். *(ஏடு.239-3)*

9. ஆவாரை, கொன்றை, நாவல், அத்தி, மருத மரத்தின் பட்டை இவற்றைச் சமனெடுத்துப் பொடித்து 250மி.கி. எடுத்து தேனில் கலந்துண்ண கழிச்சல் குணமாகும். *(ஏடு.822-31)*

10.ஆளிவிதையை நன்கு பொடித்துக் கொள்க. அரிசியின் தவிட்டைச் சேர்த்து பேயன்பழத்தில் கலந்து கொடுக்க குழந்தைகளின் கழிச்சல் தீரும். *(ஏடு.275-125-126)*

11. சாதிபத்திரி, கிராம்பு, வசுவாசி, மாங்கொட்டை, காசுக்கட்டி, களிப்பாக்கு, சாத்திரபேதி, அதிவிடையம், காட்டு இலவம்பிசின், சுக்கு,

மிளகு, புளியங்கொட்டைத்தோல், அசமதாகம் இவற்றைச் சம அளவெடுக்க. விடத்தலையிலை, வேர், பூலாங்கிழங்கு இவற்றை வகைக்கு ஒரு பிடி எடுத்து காய வைத்து பொடித்துக் கொள்க. நெல்லும் பொரியும் பொடி செய்து தேவையான அளவு சீனியைப் பொடி செய்து சேர்த்துக் கொள்க. அதனை 250மி.கி. எடுத்து உள்ளங்கையில் வைத்து கொடுக்கவும். *(ஏடு.322-6)*

12. அதிவிடையம், சீரகம், ஓமம், கருவேப்பிலையீர்க்கு, மிளகு, வால்மிளகு இவற்றைச் சரியெடை எடுத்து சூரணித்துக் கொள்க. மேற்கத்திய வெல்லம், நல்ல வெல்லம் இவற்றைப் போட்டிடித்துக் கொள்க. அபினி 4கி. உடன் சேர்த்துப் பொடிக்க. சடைக்கஞ்சாவைப் பசுவின் நெய்யில் வறுத்தரைத்து 4கி. அளவெடுத்து உடன் சேர்த்துப் பொடித்து பிண்ணாக்கு பதமாய் வரும்போது எடுத்து பத்திரப்படுத்தவும். அதனை 250மி.கி. அளவெடுத்து காலை, மாலை கொடுக்க இரத்தக்கழிச்சல், சீதக்கழிச்சல், நாட்பட்ட கழிச்சல் ஆகிய அனைத்து வகை கழிச்சலும் தீரும். *(ஏடு.268-93)*

13. அதிவிடையம், வெட்பாலை, நாவற்கொட்டை, கறுத்த உப்பு, மிளகு, பற்பாடகம், மாங்கொட்டை இவற்றை வகைக்கு 35கி. எடுத்து முறைப்படி சூரணமாக்கிக் கொள்க. அதனை 250மி.கி. அளவு தக்க அனுபானத்தில் கொடுக்க கழிச்சல் குணமாகும். *(ஏடு.32-1,275-279)*

14. காசுக்கட்டி, அதிவிடையம், சீரகம், ஓமம், சுக்கு, கம்பிப்பிசின், அபின் இவற்றை வகைக்கு 35கி. எடுத்து இளவறுவலாய் வறுத்து சூரணித்துக் கொள்க. பனைவெல்லம் 250கி. சேர்த்து 3மணி நேரம் இடித்துக் கொள்க. 4கி. அபினியை வேறாக எடுத்து உடன் சேர்த்து இடித்துப் பொடித்துக் கொள்க. அதனைப் பத்திரப்படுத்தி காலை, மாலை, 130-250மி.கி. நோயின் தன்மை அறிந்து கொடுக்க குழந்தையின் கழிச்சல் குணமாகும். *(ஏடு.268. 92)*

15. சிவதை 240கி., தாளிசபத்திரி 4கி., சுக்கு 12கி., திப்பிலி 12கி., மிளகு 16கி., திப்பிலிமூலம் 20கி., கிராம்பு 24கி., எடுத்துக் கொள்க. சிவதையைச் சுத்தி செய்தெடுக்க. இவை அனைத்தையும் இடித்துச் சூரணமாக்கி 250மி.கி. குழந்தைகட்குக் கொடுக்க கழிச்சல் நிற்கும். *(ஏடு.231-40)*

## *நெய்வகைகள்*

1. உப்பிலிக் கொடியினை வட்டமாக நறுக்கி பசுவின் நெய் சேர்த்துக் காய்ச்சி பக்குவத்தில் வடித்து 5மி.லி. கொடுக்க அனைத்து வகை கழிச்சலும் தீரும். *(புத்.572-33)*

2. ஆடுதின்னாப்பாளைச் சமூலம், சிறுதேக்கு, அதிமதுரம், வசம்பு, சுக்கு, மிளகு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், அதிவிடையம், கோட்டம், முத்தக்காசு இவற்றை வகைக்கு 5கி. எடுத்து நறுக்கிக் கொள்க. இவற்றுடன் இம்பூரல் சாறு, பசுநெய் இவற்றை வகைக்கு 1.3லி. சேர்த்து காய்ச்சி பக்குவத்தில் வடித்து 5மி.லி. - 10மி.லி. கொடுக்க அனைத்து வகை கழிச்சலும் தீரும். *(புத்.482-107)*

3. ஆடுதின்னாப்பாளைச் சமூலம், சிறுதேக்கு, அதிமதுரம், வசம்பு, சுக்கு, மிளகு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், அதிவிடையம், கோட்டம், முத்தக்காசு இவற்றை வகைக்கு 5கி. எடுத்து நறுக்கிக் கொள்க. இவற்றுடன் இம்பூரல் சாறு, பசுநெய் இவற்றை வகைக்கு 1.3லி. சேர்த்து காய்ச்சி 5-10மி.லி. கொடுக்க கழிச்சல் குணமாகும். *(புத்.482-107)*

## *4. வேலிப்பருத்தி நெய்*

வேலிப்பருத்திச் சாறு, எருமை நெய் ஆகிய இரண்டையும் தேவையான அளவெடுத்து ஒரு மண் சட்டியிலூற்றி ஒன்று சேர்த்து அதில் 5கி. கருஞ்சீரகத்தை வெந்நீர் விட்டரைத்துக் கலக்கி அடுப்பேற்றிச் சிறுக எரித்து நெய் பாகமாகக் காய்ச்சிப் பதமாக உடன் வடித்து அதை வேளைக்கு 5மி.லி. வீதம் நோய் வன்மைக்குத் தக்க நாளளவு கொடுக்க கழிச்சல் தீரும். *(புத்.477,329)*

5. ஆவின் நெய் 1.3லி. எடுக்க. ஆறுவகை அரிசி (கார்போகரிசி, வாலுளுவையரிசி, திப்பிலியரிசி, வெட்பாலையரிசி, மூங்கிலரிசி, ஏலரிசி) வெங்காயம், பெருங்காயம், குரோசாணி ஓமம், அசமதாகம், திரிசாதி (ஏலம், சாதிக்காய், சாதிபத்திரி) அதிவிடையம், அக்கிராகாரம், கருஞ்சீரகம், இலவங்கப்பட்டை, புளியன் விதைத் தோல் இவற்றை வகைக்கு 5கி. எடுத்துப் பொடித்துக் கொள்க. நெய்யில் சரக்குப் பொடிகளைப் போட்டு மாமிசம் இரண்டு துண்டுகளையும் சேர்த்து காய்ச்சிக் கொள்க. பக்குவத்தில் வடித்திறக்கி 5மி.லி. அந்தி சந்திக்குக் கொடுக்க குழந்தைகளின் கழிச்சல் குணமாகும். *(ஏடு.109-32)*

### *6. வட்டத்திருப்பி நெய்*

வட்டத்திருப்பி, சிறுதேக்கு, அதிமதுரம், வசம்பு, சுக்கு, மிளகு, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த் தோல், நெல்லி வற்றல், அதிவிடையம், கோட்டம், கோரைக்கிழங்கு ஆகிய 12 பொருட்களையும் வகைக்கு 5கி. வீதமெடுத்து வெந்நீர் விட்டு நன்றாக அரைத்துக் கொள்க. இம்பூரல் சாறு, பசுநெய் இவற்றை வகைக்கு 1.3லி. ஊற்றிக் காய்ச்சி பக்குவத்துடன் இறக்கிக் கொள்க. வேளைக்கு 5-10மி.லி. நோய் வன்மைக்குத் தக்க அளவு கொடுக்க கழிச்சல் நீங்கும்.

*(புத்.482-328)*

7. வெங்காயம், பருத்திப் பிஞ்சு, அகத்தியிலை, தென்னம்பூ ஆகியவற்றுடன் இளநீர், தென்னை மட்டைச்சாறு ஆகிய இவற்றை வகைக்கு 335 மி.லி. வீதம் எடுத்து அதனுடன் கூட்டி வைத்துக் கொள்ள வேண்டும். பசுவின் நெய்யை 1.3லி. சேர்க்க வேண்டும்.

அதிமதுரம், கெருடப்பச்சை, சீரகம், சாதிபத்திரி, சாதிக்காய், ஓக் மரத்தின் (மாயக்காய்) கொட்டை, வசம்பு, நன்னாரிவேர், இவற்றை வகைக்கு 10கி. அளவாக எடுத்துக் கொண்டு வெட்பாலைச்சாறு சேர்த்தரைத்துக் கொள்ள வேண்டும். இவ்விழுதை மேற்சொன்ன கலவையில் சேர்த்துக் காய்ச்சி வெந்தபின் வடித்தெடுத்துக் கொண்டு 5மி.லி. வீதம் கொடுக்க கழிச்சல் போகும். *(கை.பி.98,39)*

ஆவின் சாணப்பால், கோமியம், பால், நெய், தயிர், தயிர் தெளிய வைத்த தண்ணீர், சதுரக்கள்ளிச்சாறு, தில்லைச்சாறு இவற்றை வகைக்கு 1.3லி சேர்த்து காய்ச்சி வடித்து அளவறிந்து எட்டு நாள் கொள்ளவும். அதிகமாய்க் கழிந்தால் எருமை நெய் கொடுக்கவும். *(ஏடு.301-47)*

### *இளக வகைகள்*

1. சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகுரோகணி, இந்துப்பு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், முத்தக்காசு, அதிவிடையம், ஓமம், வாய் விடங்கம், கடுகுமூலம் இவற்றை வகைக்கு 35கி. நிலவாகைச் சூரணம் 675மி.கி. எடுத்து சேர்த்து சூரணித்துக் கொள்க. அவ்வளவிற்குச் சிவதையையும் எடுத்துப் பொடித்துக் கொள்க. ஆமணக்கெண்ணெய் விட்டரைத்து இளகம் போல கிண்டிக் கொள்க. குழந்தைக்குக் கொடுக்கும்போது சீனியைச் சிறிதளவு வாயில் போட்டு பிறகு இளகத்தைப் போட்டு விழுங்கச் செய்யவும். இவ்வாறு குழந்தையின்

தன்மை, நோயின் வன்மை, மென்மையறிந்து கொடுக்க கழிச்சல் நீங்கும். *(ஏடு.187-53)*

2. சாதிக்காய், குரோசாணி ஓமம், சுத்தி செய்த கஞ்சா, கிராம்பு, இலவங்கப்பட்டை, கருவேம்பு இவற்றைச் சமமாக எடுத்து வறுத்து, இடித்துப் பொடித்துக் கொள்க. ஆவாரைப் பொடியைச் சேர்க்க. சரக்குகளின் பொடிக்குச் சம அளவு வெல்லம் சேர்த்து இளகமாகக் கிளறிக் கொள்க. அதைச் சுண்டைக்காயளவு உருட்டி இரண்டு நேரமுங் கொடுக்க சலக்கழிச்சல், கிராணிக்கழிச்சல் தீரும்.

*(ஏடு.129-147)*

### *எண்ணெய் வகைகள்*

1. பசுவின் பால் எடுத்து அதில் நல்லெண்ணெய் விட்டுக் கொதிக்க விடுக. ஒரு கொதி வந்ததும் ஆவாரை இலைப் பொடியைத் தூவி காய்ச்சி பதத்தில் வடித்துக் கொள்க. பிறகு அக்கடுகைத் தின்று எண்ணெயை இரண்டு நேரமும் உட்கொள்ள வேண்டும். அதனையே தலைமுழுகி வர அனைத்து வகை கழிச்சலும் தீரும். *(ஏடு.751-16)*

2. மா, இண்டு, சங்கு, செம்முள்ளி, வேலிப்பருத்தி, பொடுதலை, வேளை இவற்றை வகைக்குச் சமமாய் எடுத்து பொடித்துக் கொள்க. எருமை வெண்ணெயில் சரக்குப் பொடியை வேக வைத்து எலுமிச்சங்காயளவு கொடுக்க கழிச்சல் தீரும். *(புத்.482-107)*

### *மாத்திரை வகைகள்*

1. மிளகு, நேர்வாளம் வகைக்கு 105கி. பொரிகாரம், சுக்கு வகைக்கு 50கி. கெந்தகம், திப்பிலி வகைக்கு 17கி. எடுக்க. இவற்றை 3 மணி நேரமரைத்து 130மி.கி. அளவு உருண்டை செய்து வேளைக்கொரு மாத்திரையைத் தக்க அனுபானத்தில் வழங்கவும். மோருஞ்சோறும் சாப்பிடவும். கழிச்சல் மாறும். *(ஏடு.273-48)*

2. கற்கடகசிங்கி, திப்பிலி, அதிவிடையம், இந்த மூன்றையும் வகைக்கு 20கி. எடுத்து கூட்டி தேனிலரைத்து 130மி.கி. அளவு உருண்டை செய்து வைத்துக் கொள்க. 1 மாத்திரையைக் குழந்தைகளுக்கு கொடுக்க கழிச்சல் தீரும். *(ஏடு.273-103)*

3. ஆவாரை, பஞ்சமூலி (ஏலக்காய், சாதிபத்திரி, தக்கோலம், சாதிக்காய், கோலவித்து) இவற்றை வகைக்கு 280மி.கி. எடுக்க.

சாதிலிங்கம், கெருடப்பச்சை, கல்நார், சாத்திரபேதி, கல்மதம் இவற்றை வகைக்கு 20கி. எடுக்க. இச்சரக்குகளனைத்தையும் சூரணித்து எருமை மோர் 1.3லி. கூட்டி பிசைந்து 250மி.கி. அளவுள்ள உருண்டைகளாகச் செய்து நிழலிலுலர்த்துக. பின் அதனை 1 அல்லது 2 எடுத்து எருமை மோரில் கலந்து கொடுக்க அனைத்துக் கழிச்சலும் அதனாலுண்டான நாவறட்சியும் நீங்கும். *(ஏடு.822-30)*

### *4. வச்சிரகபாட உருண்டை*

சாதிலிங்கம், நாபி, வெங்காரம், சாதிக்காய், இந்துப்பு, இலவங்கம், சுக்கு, கல்மதம், சித்திரமூலம், அதிவிடையம், காட்டாத்திப் பூ இவற்றை வகைக்கு 4கி. எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துக் கொள்க. கஞ்சாயிலைச் சாற்றில் ஒரு நாள் அரைத்து மிளகளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்திக் கொள்க. அதனைத் தேனில் அல்லது குடிநீரில் ஆறுநாள் கொடுக்க நாட்பட்ட, பெருங்கழிச்சல், கடுப்பு, சீதக்கடுப்பு ஆகிய அனைத்துக் கழிச்சலும் தீரும். *(ஏடு.751-16)*

5. அதிவிடையம், சீரகம், சுக்கு, அசமதாகம், வேப்பம்பிசின், கம்பிப்பிசின், அபின், இவற்றைச் சமஅளவு எடுத்து முறைப்படி சூரணித்துக் கொள்க. அதற்குச் சம அளவு பனைவெல்லம் சேர்த்து உருண்டை பிடித்துக் கொள்க. அதனை வேளைக்கொரு உருண்டை கொடுக்க வெப்புக் கழிச்சல், கடுப்பு இவை அனைத்தும் தீரும். *(ஏடு.268-91)*

6. கடுக்காய்ப்பிஞ்சு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், சோம்பு, இசுப்புத்தோல், போஸ்தக்காய் இவற்றை அரைத்துக் குடிநீராய்க் காய்ச்சிக் கொள்க. காசுக்கட்டி, கொட்டைப்பாக்கு இவை இரண்டையும் சேர்த்து குடிநீராய் வைத்துக் கொள்க. பின் அம்மருந்துச் சரக்குகளைச் சேர்த்தரைத்து 130மி.கி. அளவுள்ள உருண்டை செய்து வைத்துக் கொள்க. 1 மாத்திரையைக் குடிநீரில் இழைத்துக் கொடுக்க கழிச்சல் கட்டுப்படும். *(ஏடு.256-60)*

7. சாதிக்காய், சாதிபத்திரி, பெருங்காயம், சீரகம், அதிவிடையம், கிராம்பு, அபின், இலிங்கம், வெந்தயம், கழற்சிப் பருப்பு, குரோசாணி ஓமம் இவற்றை வகைக்கு 9கி. எடுக்க. பொடித்து கஞ்சா குடிநீரில் அரைத்து 130மி.கி. அளவில் மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வாழைப்பூச்சாற்றிலாவது சுக்குக் குடிநீரிலாவது கொடுக்க கழிச்சல் நீங்கிக் குணமாகும். *(ஏடு.268-63)*

8. சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், ஏலம், அதிமதுரம், அதிவிடையம், அபினி, சுத்தி செய்த கஞ்சா, குரோசாணி ஓமம், முத்தக்காசு, வெந்தயம், சீரகம், சிறுநாகப்பூ, உலர்த்தின புளியாரை, காட்டாத்திப்பூ, மாதுளம் பிஞ்சு, வாழைப்பூ ஆகிய சரக்குகளைச் சமன் எடுத்து இடித்துப் பசுவின் பாலில் பிட்டவியலாகச் செய்து கொள்ள வேண்டும். பின் அதனை வாழைப்பூச்சாறு அல்லது மாதுளம் பழச்சாறு கொண்டரைத்து மிளகளவு உருண்டை செய்து கொள்க. வேளைக்கொரு உருண்டை சர்க்கரையில் தர கழிச்சல் குணமாகும்.

*(புத்.476-150,477-333,482-110-111)*

9. சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், ஏலரிசி, அதிமதுரம், அதிவிடையம், சுத்தி செய்த கஞ்சா, குரோசாணி ஓமம், வெந்தயம் இவற்றைச் சற்று வறுத்துக் கொள்ளவும். சீரகம், சிறுநாகப்பூ, உலர்த்தின புளியாரை, காட்டாத்திப் பூ, உலர்த்தின மாதுளம் பிஞ்சு, நரம்பு நீக்கி உலர்த்தின வாழைப்பூவிதழ் இவற்றின் சூரணம் வகைக்கு 10கி., அபின் 10கி., பசுவின் பால், வாழைப்பூச்சாறு, மாதுளம் பிஞ்சை இடித்த சாறு இவற்றைத் தேவையான அளவு எடுத்துக் கொள்ள வேண்டும்.

அபினியைக் கல்வத்திலிட்டு சிறிது தண்ணீர் வார்த்து மை போலரைத்துக் கொள்க. மேற்படி சூரணங்களை ஒன்று சேர்த்து முன் கூறிய மருந்தைச் சிறிது சிறிதாகக் கலந்து இரண்டு மணி நேரமரைத்து நன்கு கலந்து வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு மண் பாத்திரத்தில் பசுவின் பாலை அரையளவு இருக்கும்படியாகச் செய்து வேடு கட்டி சூரணத்தை வைத்து மேற்சட்டி மூடி சிறு தீயாக எரித்து பிட்டுப்போல் வெந்த பின்பு கீழிறக்கி ஆறின பிறகு கல்வத்திலிட்டு வாழைப் பழச்சாற்றை (அல்லது) மாதுளம் பிஞ்சுச் சாற்றை (அல்லது) இரண்டு சாறும் சேர்ந்த கலவையைச் சிறுக 12மணி நேரம் அரைத்துக் கடலை அளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி பத்திரப்படுத்தி வைக்கவும். குழந்தைகட்கு அளவறிந்து கொடுக்க கழிச்சல் நிற்கும்.

*(கை.பி.போ. 284)*

### *10. அதிவிடைய மாத்திரை*

அதிவிடையம், கிராம்பு, கோட்டம், அதிமதுரம், இலவம்பிசின், விளாம்பிசின், சாதிக்காய், சாதிபத்திரி, சிறுலவங்கப்பட்டை, சடாமாஞ்சில், மாதுளங்காய், கஞ்சாச்சாறு ஆகிய 10 சரக்குகளை

வகைக்கு 4கி. எடுத்து நல்ல மாதுளங் காய்க்குள் வைத்து சீலை சுற்றி அதன் மீது சாணத்தைப் பூசி சிறு புடம் போட வேண்டும். அதனின்று துடரிப் பழ அளவாக மாத்திரையைச் செய்து கொள்க. 1 மாத்திரையைத் தேனில் இழைத்துக் கொடுக்கலாம். கஞ்சா இலைச்சாறு, கஞ்சாக் குடிநீர், குரும்பைச் சாறு, தயிர், தென்னம்பாளைச்சாறு, வாழைப்பூச்சாறு இவற்றில் ஏதேனுமொன்றில் நோய் வன்மைக்குத் தக்கவாறு வேண்டிய நாள் இழைத்துக் கொடுக்க வேண்டும். *(புத்.477-332, 482-110)*

### *11. அதிவிடைய மாத்திரை (வேறு)*

அதிவிடையம், சாதிக்காய், சாதிபத்திரி, அபினி, கடுக்காய்த் தோல், தான்றிக்காய்த்தோல், மிளகு, சீரகம், கருஞ்சீரகம் ஆகிய ஒன்பது சரக்குகளை வகைக்கு 2 கி. எடுத்துக் கொண்டு குழிக்கல்லிற் போட்டு மாதுளந்தளிர், அத்திப்பட்டை ஆகிய இரண்டையும் வகைக்கு 175கி. எடுத்து இடித்து மண்சட்டியிலிட்டு 1.3லி. தண்ணீர் விட்டு காற்பங்களவாக வற்றும்படி காய்ச்ச வேண்டும். அக்குடிநீரை விட்டு குழிக்கல்லில் போட்டவற்றை அரைத்து வழித்து அடைபோல் தட்டிக் கொள்ள வேண்டும். பிறகு வேறொரு சட்டியை அடுப்பிலேற்றி மேற்படி அடையை அரசிலையால் மூடி அவ்விலை கருகும் வரை எரிக்க வேண்டும். இவ்விதமாக புதிது புதிதான அந்தக் குடிநீரால் அரைத்து ஐந்து, ஏழு அல்லது பத்து முறை செய்து எடுத்து அரைத்து 130மி.கி. அளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்த வேண்டும். அதனை வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் எருமைத் தயிர் அல்லது நீரில் கொடுத்தால் கழிச்சல் நீங்கும். கழிச்சலுக்கு ஏற்றபடி வேறு துணை மருந்துகளிலும் கொடுக்கலாம். *(புத்.477-327, 482-107)*

12. கோரோசனை, களிப்பாக்கு, சீரகம், காசுக்கட்டி இவற்றைச் சமமாய் எடுத்து தேவையான அளவு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் கொள்க. அதனைப் பாக்கு அளவாக உருண்டை செய்து கொள்க. நோயின் தன்மை, நோயாளியின் வன்மைக் கேற்றபடி அதனைத் தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க கழிச்சல் குணமாகும்.

*(புத்.482-106-107)*

13. அரசிலை, வெங்காயம், மாம்பட்டை, இலவங்கம், ஓமம், மாங்கொட்டை, கிராம்பு இவற்றைச் சம அளவெடுத்து புளித்த தண்ணீரை இறுத்த சாதத்தினோடு அரைத்து வில்லைகளாக்கி

வைத்துக் கொள்க. நோயின் தன்மை, நோயாளியின் வன்மை அறிந்து அதனை வேளைக்கு ஒன்று கொடுக்க கழிச்சல் குணமாகும்.

*(கை.பி.98-17)*

### *14. பால சஞ்சீவி மாத்திரை*

சுக்கு, மிளகு, திப்பிலி, வெங்காரம், சாதிலிங்கம் இவ்வைந்து சரக்குகளையும் சமமாக எடுத்துக் கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றினால் மூன்று மணி நேரம் நன்றாக அரைத்துக் கொள்ள வேண்டும். அவ்விழுதை 32மி.கி. அளவு உருண்டை செய்து நிழலில் உலர்த்திட வேண்டும். நோயின் தன்மை, நோயாளியின் வன்மை அறிந்து இந்தப் பாலசஞ்சீவி மாத்திரையைக் குழந்தைகளுக்குக் கொடுக்க கழிச்சல் போகும். *(புத்.476-124)*

## *குழம்பு வகைகள்*

1. ஓமம் 9கி. ஏலம் 350கி. எடுக்க; நல்லெண்ணெய், தாய்ப்பால் இவற்றைச் சம அளவெடுக்க; ஓமத்தைச் சுத்தி செய்து கொண்டு ஏலத்தையும் சேர்த்து தாய்ப்பால் விட்டு நன்றாயரைத்து அப்பாலிலேயே கலக்கிக் கொள்க. அடுப்பிலிட்டு கிண்டி வேகவைத்து மெழுகு பதம் வரும்போது சிறிது நல்லெண்ணெய் கூட விட்டு கிண்டி இறக்கிக் கொள்க. அதனைப் புன்னைக்காயளவாக மூன்று நாள், ஆறு பொழுது சாப்பிட கொடுக்கவும் கழிச்சல், வயிற்றுளைச்சல் தீரும்.

*(அ.வை.ம.மு.த.சு-71)*

2. பெருமரத்துப்பட்டை, குடசப்பாலைவேர் இவை இரண்டையும் சமன் எடுத்து இடித்து 2.6லிட்டர் தண்ணீர் ஊற்றி எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்துக்கொள்க. அதில் வெள்ளை வெங்காயம், சுக்கு, மிளகு, அசமதாகம், சீரகம், கிராம்பு இவற்றைப் பொடித்துப் போட்டு காய்ச்சி இறக்கி குழம்பாக்கிக் கொள்க. அதனை எருமைத் தயிரிலும் எண்ணெயிலும் குழப்பி அளவறிந்து குழந்தைக்குக் கொடுக்க கழிச்சல் தீரும். *(ஏடு.262-243)*

3. ஓமம் 4கி., சுக்கு, ஆமைஓடு வகைக்கு 35கி. எடுத்துப் பொடி செய்து கொள்க. நுணாயிலைச்சாறு 30மி.லி. எடுத்து சட்டியில் பிழிந்து மேற்சொன்ன பொடியைப் போட்டு காய்ச்சி குழம்புப் பதத்தில் வரும் போது சிறிதளவு நல்லெண்ணெய் விட்டு கொதித்த உடனே இறக்கிக்

கொள்க. 15மி.லி. தாய்ப்பாலை அச்சட்டியிலுள்ள மருந்தில் பீச்சி குழந்தைக்குப் புகட்ட கொடுக்கவும். *(ஏடு.313-90)*

### *மருந்துகள்*

1. கழற்சிக் கொழுந்தை ஒரு பிடி எடுத்து நன்றாக விழுதுபட அரைத்து நல்லெண்ணெயைத் தேவையான அளவு சேர்த்து கொடுக்கவும். *(ஏடு.639-108)*

2. காடியை மூன்று முறை பொங்க வைத்துக் கொள்க. அதில் உப்பை அரைத்து பாக்களவு கலந்து கொள்க. நன்றாக கொதிக்க வைத்து இறுத்து சிறங்கையளவு கொடுக்கவும். கழிச்சல் குணமாகும். *(ஏடு.231-15)*

3. பொன்னாங்காணியை எடுத்து வெயிலிலே சருகாய்க் காய வைத்து இடித்துச் சூரணித்துக் கொள்க. பசுவின் பாலில் போட்டு காய்ச்சிக் கொள்க. இவ்வாறு எட்டு நாள் குழந்தைக்குக் கொடுக்க நீர் நீராய்ப் போகும் கழிச்சல் தீரும். கார்ப்பு, புளிப்பு நீக்கவும். *(ஏடு.579-203)*

4. பிரண்டையைக் கொண்டு வந்து கணு நறுக்கி எருமைத் தயிரில் போட்டு ஒரு நாள் ஊற வைத்துக் கொள்க. அடுப்பில் வைத்து நன்றாய் வேகவிட்டுக் கொள்க. பின்பு ஆறவிட்டு நன்றாய்ப் பிசைந்து பிழிந்து போட்டு அதனுடன் சுக்கு, மிளகு, திப்பிலி, உள்ளி, அசமதாகம் இவற்றை வகைக்கு 17 1/2 கி., ஓமம் 70கி., கறியுப்பு 8கி, எடுத்து அரைத்துக் கலந்து கொள்க. மருந்துக் கலவை இறுகியதின் பின் எண்ணெய் விட்டு தாளிதம் செய்து நெல்லிக் காயளவு இரண்டு நேரமுங் கொடுக்கவும். வயிற்றில் இரைச்சலையுண்டாக்கும் கழிச்சல் நீங்கும். *(ஏடு.579-183)*

5. காட்டுக்கருணைக் கிழங்கைக் கொண்டு வந்து கழுநீர் விட்டு கழுவி, கழுநீர் விட்டரைத்து அவ்வளவே வெண்ணெய் போட்டு காய்ச்சி நீர் சுருங்கும் போது இறக்கி அவ்வளவே நாட்டுச் சர்க்கரையைச் சேர்த்துக் கொள்க. எலுமிச்சங்காயளவு கொடுக்க கழிச்சல் குணமாகும். *(ஏடு.579-179)*

6. வேலிப்பருத்திச்சாறு, எருமை வெண்ணெய் இவற்றை வகைக்கு 335மி.லி. எடுத்து அதில் 5கி. கருஞ்சீரகத்தை அரைத்துப் போட்டுக் கலந்து காய்ச்சிக் கொடுக்க கழிச்சல் தீரும். *(புத்.482-108)*

7. சுக்கு, மிளகு, வசம்பு, உள்ளி இவற்றை வகைக்குச் சம அளவெடுத்து அரைத்து 5லி. மோரில் கரைத்து 1.3லி. அளவாய்ச் சுருக்கிக் காய்ச்சி குழந்தைகட்குக் கொடுக்க வயிறு இரைந்து கழிவது குணமாகும்.
*(ஏடு.262-100)*

8. வசம்பின் இலையை நன்கு கருக்கிக் கொள்க. அதனுடன் பழைய துடைப்பம் ஒரு பிடி கூடப் போட்டுக் கருக்கி ஓமத்தைப் போட்டு பொரிய விடுக. 1.3லி. தண்ணீர் விட்டு 675மி.லி. யாகச் சுண்டக் காய்ச்சிக் கொள்க. அதனை மூன்று நாட்களுக்கு இருவேளையாகக் கொடுக்க வயிறு சுரந்து கழிவது நலமாகும். *(ஏடு.437-1)*

9. அத்திப்பால், கோழிமுட்டையின் மஞ்சள் கரு இவற்றை 4 நாட்கள் தயிரில் ஊறவைத்துக் கொள்க. பின் எடுத்து பருத்தி விதை அளவு சுண்ணாம்புத் தெளிவினைக் கூடச் சேர்த்துக் கொடுக்க எல்லாக் கழிச்சலும் தீரும். *(ஏடு.322-33)*

10. அத்திப்பட்டையை இடித்து மோரை விட்டுப் பிசைந்து கொடுக்கவும். கஞ்சாவை கருக்கி மோரை விட்டுப் பிசைந்து இறுத்துக் கொடுக்கவும்.
*(ஏடு.225-63)*

11. வேம்பின் தழையைக் கொண்டு வந்து இலையை உருவி நெட்டுகளை எடுத்து அரிந்து ஒரு சிறங்கை எடுத்துக் கொள்க. அதைச் சிதைத்து தாய்ப்பால் விட்டு நன்கு பிசைந்து வைத்துக் கொள்க. ஒரு சட்டியில் சிரட்டையாலாகிய நெருப்பைப் போட்டு அதில் சாம்பிராணியைப் பொடித்துப் போட்டு மேல் ஒரு சட்டி மூடுக. சிறிது நேரம் சென்ற பிறகு முன்கூறிய பாலைச் சட்டியில் ஊற்றி நன்கு பிசைந்து ஆற வைத்துக் கொள்க. அதனை அளவறிந்து மூன்று நேரம் குழந்தைகட்கு உள்ளுக்குக் கொடுக்க கழிச்சலும் அதனுடன் கூடிய வாந்தியும் தீரும். *(அ.வை.ம.மு.த.சு.63)*

13. கோழிமுட்டையின் வெள்ளைக்கருவில் கடுக்காய்ப் பூவைப் பொடித்துப் போட்டு சிறிது நல்லெண்ணெய் விட்டு பொரித்துக் கொடுக்க கழிச்சல் தீரும். *(ஏடு.725-58)*

14. வெள்ளாட்டுப்பாலில் எலுமிச்சம்பழச்சாறு பிழிந்து மூன்றுநாள் விடியலில் கொடுக்கத்தீரும். *(ஏடு.725-58)*

15. சீரகத்தை 9கி. எடுத்துப் பொடித்துக் கொள்க. வெள்ளைச்

சர்க்கரை 9கி., நெய் 9கி. எடுத்து அனைத்தையும் ஒன்று சேர்த்து மூன்று நாள் சாப்பிட கொடுக்க சீதபேதி, இரத்தபேதி தீரும்.

### *கழிச்சலில் வரும் தாகத்திற்கு உருண்டை*

வேப்பமுத்தைக் கருக வறுத்து மேல் தோல் நீக்கிப் புடைத்து விடுக. பின் அப்பருப்பை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருண்டை செய்து நிழலிலுலர்த்தி வைக்க. அதனை எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்து முதுகுத்தண்டில் பூச கழிச்சலும் உடன் வரும் தாகமும் தீரும். *(ஏடு.313-54)*

### *கழிச்சலின் வகைகள்*

சீதக்கழிச்சல், இரத்தக்கழிச்சல், சலக்கழிச்சல் அல்லது நீர்க்கழிச்சல், சங்கரக்கழிச்சல், சோபக்கழிச்சல், வெள்ளுடைக்கழிச்சல், வயிற்றுக்கழிச்சல் ஆகிய ஏழு வகைப்படும் என்று டி.வி.சாம்பசிவம் பிள்ளை அகராதியில் கூறப்பட்டுள்ளது.

செரியாமைக் கழிச்சல் (அசீரணக் கழிச்சல்), அத்திசுரக் கழிச்சல், அதிசாரக்கழிச்சல் (பெருங்கழிச்சல்), இரத்தக்கழிச்சல், கடுப்புக் கழிச்சல், கணக்கழிச்சல், சலக்கழிச்சல் (நீர்க்கழிச்சல்), ஆமக்கழிச்சல் (சீதக்கழிச்சல்), நாட்பட்ட கழிச்சல் (நிணக்கழிச்சல்), தோஷக் கழிச்சல் (திரிந்த பால்போல் கழிதல், பச்சிலை போல் கழிதல், முட்டையுடைத்தாற்போல் கழிதல், பால் போல் கழிதல்), பொருமல் கழிச்சல், மலக்கட்டு கழிச்சல், மாந்தக் கழிச்சல், மூலக்கடுப்பு கழிச்சல். வயிறு பருத்து கழிதல், வாந்தி கழிச்சல், விடக் கழிச்சல், விசூழி கழிச்சல், விடாக்கழிச்சல், வெப்புக் கழிச்சல் ஆகிய வகைகள் சுவடிகளில் கூறப்பட்டுள்ளன.

### *1. அங்கந்திறந்து கழிதல்-கற்கங்கள்*

1. சந்தனத்தை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து அளவறிந்து கொடுக்கவும். *(ஏடு.273-62)*

2. இலவம்பிசின் 4கி. சுக்கு, மிளகு, அசமதாகம், மாதுளங்கொழுந்து, பிஞ்சு இவற்றைச் சமஅளவு எடுத்து எலுமிச்சஞ்சாறு விட்டு அரைத்து குழப்பிக் கொடுக்கவும். *(ஏடு.273-62)*

### *எண்ணெய்*

320மி.லி. நல்லெண்ணெயைக் காய வைத்து அதனுடன் வடிகட்டிய

எருமைத்தயிரை எலுமிச்சங்காயளவு கலந்து சூடேற்றி குழந்தைகளுக்குக் கொடுக்க கழிச்சல் குணமாகும். *(ஏடு.273-62)*

### *2. அசீரணக் கழிச்சலுக்குக் குடிநீர்*

வேப்பீர்க்கு, ஒதியீர்க்கு, சுக்கு, சீரகம், ஓமம், இவற்றை வகைக்கு 9கி. எடுத்து வெதுப்பி 1.3லி. தண்ணீரில் போட்டு 675மி.லி.யாய் வற்ற வைத்துக் கொள்ளவும். இவ்வாறு வற்ற வைத்து 15-30மி.லி.யாக 6 வேளை கொடுக்க அசீரணக் கழிச்சல் தீரும். *(ஏடு.725-57)*

### *மருந்து*

ஒரு கை அகல துணி கிழித்து அதில் 2கி. அளவுக்கு சுண்ணாம்பு தடவி நெருப்பில் சுட்டு வேகவைத்து எடுத்துக்கொள்க. அதனை 250மி.லி. வெந்நீரில் போட்டு கரைத்து தெளிய விட்டு கொடுக்கத் தீரும். *(ஏடு.273-74)*

### *3. அத்தி சுரக்கழிச்சல்-நெய்*

உள்ளி, கீழ்க்காய் நெல்லி, பொடுதலை, கையாந்தகரை, பிரமி, கொடுப்பை, பழம்பாசி, அகத்தி, ஆடாதோடை, முருங்கை, முருக்கு, வேலிப்பருத்தி, தெற்றி, ஆரை, நத்தைச் சூரி ஆகிய மூலிகைகளின் சாறு வகைக்கு 335மி.லி. எடுத்துக் கொள்க. இளநீர், தண்ணீர், வகைக்கு 335மி.லி. எடுக்க. பசும்பால், பசுநெய் இவை வகைக்கு 1.3லி. எடுக்க.

சாதிக்காய், கொத்துமல்லி, திரிகடுகு, சடாமாஞ்சில், கல்நார், மாயக்காய், அதிவிடையம், கெருடப்பச்சை, அத்தித்திப்பிலி, வெண்சந்தம், கோட்டம், அதிமதுரம், கச்சோலம், சீரகம் ஆகிய சரக்குகளை வகைக்கு 5கி. வீதமெடுத்து தேவையான அளவு இளநீர் விட்டரைத்து மேற்சொன்ன கலவையில் கரைத்து விடுக.

கலவையைப் பதமாய்க் காய்ச்சி வடித்தெடுத்துக் கொள்க. பின் அப்பொடியை நன்கரைத்து அதனுடன் கோரோசனையைக் கலந்து கொள்க. இதனைக் குழந்தைகட்கு 5மி.லி. யாக காலை, மாலை 12 நாட்களுக்குக் கொடுக்க அத்திசுரக் கழிச்சல் நீங்கும்.

*(கை.பி.98.200-63)*

### *4. அதிசாரக் கழிச்சல்-அத்திக்காய்ச்சாறு*

அத்திக்காய்ச்சாறு, எருமைத்தயிர் ஆகிய இரண்டையும் வகைக்கு

35கி. எடுத்து அதனுடன் 4கி. ஓமத்தை அரைத்துக் கலந்து 5மி.லி. கொடுக்க பெருங்கழிச்சல் குணமாகும். *(புத்.477-331)*

## *குடிநீர் வகைகள்*

1. காட்டாத்திப்பூ, கோரைக்கிழங்கு, குடசப்பாலைப்பட்டை, அதிவிடையம், பெருமரப்பட்டை, மாதுளம்பூ, சுக்கு இவற்றைச் சமனாக எடுத்து குடிநீரிட்டு எட்டிலொன்றாய் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்க அதிசாரம் நீங்கும். *(ஏடு.639-312)*

2. விஷக்காய் (நாயுருவி), மாங்கொட்டை, பீமரத்துப்பட்டை, சுக்கு கொடிப்பாலை விரை இவற்றைச் சரி சமமாய் எடுத்து குடிநீராய்க் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்கவும். *(ஏடு.639-138)*

3. சுக்கு, கோரைக்கிழங்கு, அதிவிடையம், பெருமரத்துப்பட்டை, நிலவேம்பு, மாந்துளிர் இவற்றைச் சம அளவெடுத்து குடிநீராய்க் காய்ச்சி 15-30 மி.லி. அளவறிந்து கொடுக்க அதிசாரம் நீங்கும்.

4. காட்டாத்திப்பூ, கருங்காலி வேர்ப்பட்டை, வில்வவேர் நரம்பு, அத்தித் திப்பிலி இவற்றைச் சமமாய் எடுத்து குடிநீராக்கி சிறிதளவு தேன் விட்டு 15-30மி.லி. கொடுக்க குழந்தைகளின் அதிசாரம் தீரும். *(ஏடு.639-64) (புத்.476-148,482-109,477-331)*

5. சீந்தில், சுக்கு, வட்டத்திருப்பி, பெருமுத்தக்காசு, இரத்தப் பாலை வேர் இவற்றைச் சமனெடுத்து குடிநீராக்கிக் கொடுக்க அதிசாரம் எனும் பெருங்கழிச்சல் தீரும். *(ஏடு.639-64)*

6. வில்வப்பழம், காட்டாத்திப்பூ, வெட்டிவேர், பலாசம்பட்டை, ஆனைத்திப்பிலி இவற்றைச் சரிசமமாய்ச் சேர்த்து நீர்விட்டு எட்டிலொன்றாய்க் காய்ச்சிக் கொள்க. அதில் சிறிதளவு தேன் சேர்த்து நெற்பொரியைத் தூவி அளவறிந்து குழந்தைகட்குக் கொடுக்க அதிசாரமனைத்தும் தீரும். *(ஏடு.639-63)*

7. குடசப்பாலை, அதிவிடையம், மாதுளங்காயோடு இவை மூன்றையும் சமனெடுத்து குடிநீராகக் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்கலாம்.

முத்தக்காசு, சுக்கு இவற்றைச் சேர்த்து குடிநீரிட்டுக் கொடுத்தாலும் இரத்தம் விழும் அதிசாரம் (பெருங்கழிச்சல்) தீரும். சீதமும் வயிற்று வலியும் நீங்கும். *(ஏடு.639-63)*

8. மரமஞ்சள், மஞ்சள், குடசப்பாலைப்பட்டை, ஆடாதோடையீர்க்கு, அதிமதுரம் இவற்றைச் சமன் கூட்டி குடிநீராக்கிக் கொடுக்க அதிசாரத்தில் வரும் சுரம் தீரும். *(ஏடு.639-63)*

9. சுக்கு, அதிவிடையம், நிலவேம்பு, முத்தக்காசு, சீந்தில், குடசப்பாலைப்பட்டை இவற்றைச் சம அளவெடுத்து குடிநீரிட்டு 15-30மி.லி. கொடுக்க அனைத்து வகை அதிசாரம் (பெருங்கழிச்சல்) தீரும். *(ஏடு.639-63)*

10. கோரைக்கிழங்கு, கொத்துமல்லி, வில்வக்காய்ஓடு, திப்பிலி, விளாம்பட்டை, சிறுநாகப்பூ ஆகிய சரக்குகளைச் சமனெடுத்து ஒன்று சேர்த்துக் காய்ச்சி அதனுடன் தேனைச் சேர்த்து குழந்தைக்குக் கொடுக்க அதிசாரக் கழிச்சல் தீரும்.

விளாம்பட்டையை நீக்கி வில்வவேர், வில்வப்பட்டை, வெள்ளி லோத்திரம் சேர்ப்பதுமுண்டு. *(புத்.476-148,482-109,477-331)*

### *கற்க வகைகள்*

1. மஞ்சள், மரமஞ்சள், வெட்பாலையரிசி, திப்பிலி இவற்றைச் சமன் சேர்த்து தாய்ப்பாலில் அரைத்துக் கொடுக்க கழிச்சல் தீரும். *(ஏடு.231-10)*

2. ஓமத்தை அத்திக்காயின் சாற்றிலரைத்து தயிருடன் கலந்து குழந்தைகட்குக் கொடுக்க அதிசாரக் கழிச்சல் குணமாகும். *(புத்.476-148,482-109)*

3. வில்வபத்திரிவேர், கருவேலங்கொழுந்து, வேப்பங்கொட்டை, ஆவாரம்பூ, ஏலரிசி, சாதிபத்திரி, கிராம்பு ஆகிய இச்சரக்குகளைச் சமனெடுத்து சேர்த்தரைத்து வைத்துக் கொள்க. 2கி. எடுத்து தாய்ப்பாலில் கலந்து கொடுக்க அதிசாரக் கழிச்சல் குணமாகும். *(புத்.476-98)*

### *பித்த அதிசாரம்-சூரணம்*

அதிவிடையம், கொட்டைப்பாலை விதை, (கொட்டைக் கரந்தை) அத்திப்பூ, கோரைக்கிழங்கு, மாதுளை மொட்டுப்பூ, பெருமரத்துப்பட்டை, வில்வக்காய்ச்சோறு, ஏலம், இலவங்கப்பத்திரி இவற்றைச் சேர்த்து சூரணித்து இளநீரில் கொடுக்கவும். *(ஏடு.639-139)*

### *சிலேத்தும அதிசாரம்-குடிநீர்*

கோரைக்கிழங்கு, தூதுவளை, குமிழம், நறுமூலம், நிலவேம்பு, சீரகம், கொடிப்பாலை விதை, கழற்சிப்பருப்பு இவற்றைக் குடிநீரிட்டுக் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்க குழந்தைகளின் அதிசாரம் தீரும். *(ஏடு.639-138)*

### *மாத்திரை*

சாதிலிங்கம், மிளகு, கெந்தகம், திப்பிலி, வெங்காரம், நாபி, கறுத்த ஊமத்தம் விதை இவற்றைச் சமன் கூட்டி கஞ்சாவிலைச் சாற்றில் 3 மணி நேரமரைத்து மிளகளவு மாத்திரை செய்து அளவறிந்து கொடுக்க தீரும். *(ஏடு.639-98)*

### *மேல்பூச மருந்து*

பனைவேரும் வசம்பும் சேர்த்து வார்த்தரைத்து வயிற்றின் மேல் பூச வயிற்று வலி குறையும். *(ஏடு.639-167)*

### *5. அளச்சல் கழிச்சல்-நெய்*

பிட்டரிசி, வெங்காயம், பெருங்காயம், குரோசாணி ஓமம், அசமதாகம், இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம், அதிவிடையம் அக்கிராகாரம், கருஞ்சீரகம், புளியம் விதைத்தோல் ஆகிய இச்சரக்குகளை வகைக்கு 5கி. எடுத்துக் கொண்டு பொடித்து வைத்துக் கொள்ள வேண்டும். 1.3லி. நெய் எடுத்துக்கொண்டு அதில் மேற்சொன்ன பொடித்த சரக்குகளைப்போட்டு வயல்நத்தை, மாங்கிஷம் இரண்டையும் அதில் அரிந்து போட வேண்டும். பிறகு அடுப்பேற்றி கிண்டி காய்ச்சி பதம் பார்த்து வடித்திறுத்து வைத்துக் கொள்ள வேண்டும். அதனை 50மி.லி. அந்தி, சந்தி மூன்று நாளைக்குக் கொடுக்க அளச்சல் கழிச்சல் தீரும். *(கை.பி.98, 200-31)*

### *6. இரத்தக் கழிச்சல்-குடிநீர் வகைகள்*

1. கொட்டைப்பாலை விதை, குமிழம் வேர், பாவட்டம் வேர், கோரைக்கிழங்கு, அதிவிடையம் இவற்றைக் கூட்டி குடிநீராக்கி 15-30மி.லி. கொடுக்கவும். *(ஏடு.639-138)*

2. தாழைவிழுதின் சாறு, இளநீர், எலுமிச்சம் பழச்சாறு இவற்றை வகைக்கு 9கி. எடுத்து ஒன்றாகக் கலந்து கொள்க. அதில் சுக்கு,

சீரகத்தை வகைக்கு 4கி. எடுத்து இடித்துப் போட்டு ஊற வைத்து வடித்து 15-30 மி.லி. கொடுக்க இரத்தக் கழிச்சல் குணமாகும்.
*(புத்.476-147,477-330,482-100)*

3. மிளகைத் தேவையான அளவு எடுத்து முறைப்படி குடிநீர் செய்து 15-30மி.லி. கொடுக்க இரத்தக் கழிச்சல் குணமாகும். *(ஏடு.262-273)*

### *7. உஷ்ண (வெப்பமான) இரத்தக் கழிச்சல்-குடிநீர்*

மாசிக்காய், சீரகம், இவற்றைச் சமஅளவு எடுத்துப் பொடித்துக் கொள்க. வாழைப்பூவினைப் பிட்டவியல் செய்து பிழிந்த சாற்றில் அப்பொடியைக் குழப்பி 15மி.லி. கொடுக்க உஷ்ணமான இரத்தக் கழிச்சல் தீரும். *(ஏடு.313-91)*

***கற்க வகைகள்***

1. ஆட்டிலொட்டி வேரை அரைத்து எலுமிச்சங்காயளவு எடுத்துக் கொள்க. கிராம்பு 2, திப்பிலி 2, கடுக்காய், சாதிக்காய், மிளகு இவற்றை வகைக்கு 10 எடுத்து ஒன்று சேர்த்தரைத்துக் கொள்க. விழுதை வடிகட்டின தயிரில் குழப்பிக் கொடுக்க இரத்தக் கழிச்சல் தீரும்.
*(ஏடு.299-2)*

2. ஒரு பிடி பொடுதலையை எடுத்து வாட்டிக் கொள்க. அத்துடன் 50 மிளகைச் சேர்த்தரைத்துக் கொள்க. அவ்விழுதை மூன்று நாட்கள் கழித்து எருமைத்தயிரில் கலந்து அளவறிந்து கொடுக்க இரத்தக் கழிச்சல் மாறும். *(ஏடு.273-60)*

3. அத்திப்பட்டை தோலைச் சீவிப்போட்டு விட்டு உள்பட்டையைச் சீவிக்கொள்க. மிளகளவு காசுக்கட்டியைப் போட்டு அரைத்து தேவையான அளவு எருமைத் தயிரில் கலந்து கொடுக்கவும். கடுப்புடன் கூடிய இரத்தக் கழிச்சல் நிற்கும். *(ஏடு.273-60)*

4. ஒரு பிடி மிளகை இளவெந்நீரில் அரைத்து அளவறிந்து குழந்தைக்குக் கொடுக்கவும். கடுப்புடன் கூடிய இரத்தக் கழிச்சல் நலமாகும்.

5. சீரகம், கொத்துமல்லி, மாதுளைப்பிஞ்சு, கீழாநெல்லி வேர் இவற்றைச் சமனெடுத்து வெந்நீர் விட்டரைத்து காலையில் மட்டும் 250மி.கி. கொடுக்க இரத்தக் கழிச்சல் குணமாகும். இதற்குத் தயிர்ச்சோறு பத்தியம். *(புத்.476-147,477-330,482-109)*

### சூரணம்

வசம்பு, மிளகு, ஓமம், புளியம்புறணி ஆகிய நான்கையும் வகைக்குச் சமஅளவெடுத்து சூரணம் செய்து கொள்க. 4கி. தூளையெடுத்து 675மி.லி. நல்ல தண்ணீரில் கலந்து பின் தெளிய வைத்துக் கொள்க. நுணாயிலையெடுத்து சூரணித்துக் கொள்க. அதில் தெளிய வைத்த தண்ணீரை வார்த்து குடிநீராய்க் காய்ச்சிக் கொள்க. திப்பிலி மூலத்தையும் சாதிக்காயையும் புடம் போட்டு எடுத்து குடிநீரில் கலந்து கொள்க. கழிச்சலைக் கட்டுப்படுத்தும் கபாடச் சூரணத்தையும் அதில் கலந்து குழந்தைக்குக் கொடுக்க இரத்தக் கழிச்சல் குணமாகும்.

*(ஏடு.268-92)*

### இளகம் வகைகள்

1. பூண்டு 35கி, கிராம்பு 9கி. எடுக்க. உப்பை அரைத்து பூண்டிலே தடவி சுட்டு உரித்தெடுத்துக் கொள்க. கிராம்பை நன்கு பொடி செய்து அதன் மீது உரித்த பூண்டை போட்டரைத்தெடுத்துக்கொள்க. கரண்டியில் தேன்விட்டு கொதிக்கும்போது மேற்கூறிய மருந்தைப் போட்டு கிண்டி இளகமாக்கிக் கொள்க. சூடாய் இருக்கும் போதே நான்கு உருண்டை பிடித்து சாப்பிட கொடுக்கவும். இதற்குப் பத்தியமாக ஆட்டுமோரையும் சோற்றையும் சேர்த்துக் கொடுக்கவும். *(ஏடு.273-51)*

2. இலவங்கப்பட்டை, காசுக்கட்டி, களிப்பாக்கு, இலவம்பிசின், அபினி இவற்றைச் சமனெடை எடுக்க. பாவட்டை இலையைத் துவைத்துப் பிட்டவியல் செய்து பிழிந்த சாற்றில் அவித்துப் பின் 2கி. அளவு உருண்டை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்க. அவ்வுருண்டையை வாழைப்பூ பிட்டவியல் செய்த சாற்றில் உரைத்துக் குழப்பி புகட்ட உஷ்ணத்தினாலான இரத்தக் கழிச்சல் நீங்கும்.

*(ஏடு.313-91)*

3. கொச்சி தேச மதனகாமப்பூ கோட்டான் சாப்பிடும் காட்டாத்திப்பூ, அச்சி நாட்டு வால் மிளகு, சுக்கு, அதிவிடையம், கசகசா, கிராம்பு, ஏலம், செஞ்சி நாட்டு கஞ்சா, அபினி, சேலத்துப்பனை வெல்லம் சாதிக்காய் இவற்றை அளவறிந்து எடுத்துக் கொள்க. வெல்லத்தை விடுத்த மற்ற சரக்குகளைச்சட்டியில் வாட்டி பூண் இல்லாத உலக்கையைக் கொண்டு தூள் செய்து கொள்க. பனை வெல்லத்தைப் பாகாய்க் காய்ச்சி அதில் மேற்குறிப்பிட்ட சூரணத்தைப் போட்டு கிளறி

இளகமாய்ச் செய்து கொள்க. அதனை அளவறிந்து குழந்தைகட்குக் கொடுக்க இரத்தக் கழிச்சல் குணமாகும். *(புத்.476-150)*

*மருந்துகள்*

கஞ்சாயிலைப் பொடியும், கோழி முட்டையும் பொரித்துக் கொடுக்க இரத்தமாய்க் கழிவது நிற்கும். *(ஏடு.639-85)*

ஆவாரம் பட்டையை இடித்துத் தூள் செய்து கொள்க. புளியங் கொட்டையின் மேல் தோலை எடுத்து இவை இரண்டையும் சேர்த்து சாப்பிடத் தீரும். *(ஏடு.725-23)*

### *8. இரத்த சீதக்கழிச்சல் கற்கம்*

முருங்கைப்பூ 350கி., வெள்ளுள்ளி 9கி. எடுத்து நன்கரைத்து எருமைத் தயிரில் கலந்து குடிக்கவும். உப்பு, புளி, தவிர்க்கவும். *(ஏடு.225-77)*

*மருந்து*

சாதிக்காய் மூன்று எடுத்து நெய் வார்த்து சுட்டெடுத்துப் பொடியாக்கிக் கொள்க. அதைக் கோழி முட்டையில் கலந்து கொள்க. பிறகு நெய் வார்த்து பொரித்து மூன்று நாள் கொடுக்கவும். *(ஏடு.639-108)*

### *9. எண்ணெய்த் தொங்கலுக்குக் குடிநீர் வகைகள்*

1. மண்ணாங்கட்டியைச் சட்டியிற் போட்டு பழுக்க வறுத்து 1.3லி. தண்ணீர் ஊற்றி எட்டிலொன்றாய்ச் சுருக்கிக் கொள்க. அதனை 15-30 மி.லி. கொடுக்க எண்ணெய்த் தொங்கல் குணமாகும். *(புத்.482-121)*

2. சீயக்காயைத் தட்டிப் போட்டு தண்ணீரில் ஊற வைத்து 15-30மி.லி. கொடுக்க எண்ணெய்த் தொங்கல் தீரும். *(புத்.482-121)*

### *10. கடுப்புக் கழிச்சலுக்குச் சாறு*

அவரையிலையை நறுக்கி 160மி.லி. சாறு பிழிந்து மட்டிச் சுண்ணாம்பு துவரையளவு கூட்டி தினமொரு நேரம் புகட்டவும். *(ஏடு.313-92-93)*

*கற்கம்*

1. கற்கடகசிங்கியை அரைத்து அதற்குத் தேவையான அளவு எருமைத் தயிரெடுத்து அதில் குழப்பிக் கொடுக்கவும். வயிற்றுக் கடுப்புடன் கூடிய கழிச்சல் குணமாகும். *(ஏடு.301-65)*

2. வெள்வெங்காயப்பூண்டில் பாதியை உரித்து நடுநரமபெடுத்து விட்டு அதை அரைத்துத் தயிரில் குழப்பி குழந்தைகட்குப் புகட்ட கடுப்புக் கழிச்சல் தீரும். *(ஏடு.313-92)*

3. பொன்னாங்காணி இலையை எலுமிச்சங்காயளவு எடுத்தரைத்து எருமைப்பாலில் கலந்து மூன்று நாள் கொடுக்க அனைத்து வகை கடுப்புக் கழிச்சலும் நிற்கும். *(ஏடு.639-38)*

### *சூரண வகைகள்*

1. காசுக்கட்டியைச் சற்றே வெதுப்பிச் சூரணித்துக் கொள்க. அதை எருமைத் தயிரிலாவது தாய்ப்பாலிலாவது கலந்து குழந்தைகட்குப் புகட்ட கடுப்புக் கழிச்சல் குணமாகும். *(ஏடு.313-92-93)*

2. புனலிக் கொடியின் வேரையும் சீரகத்தையும் சமமாக எடுத்து சேர்த்துப் பொடித்துக் கொள்க. 250மி.கி. எடுத்துத் தேனில் கலந்து கொடுக்க சீதக் கடுப்புக் கழிச்சல் நீங்கும். *(புத்.476-149,477-322)*

3. சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், உப்பு, கருவேப்பிலை, பெருங்கா யம், சுண்டை வற்றல் இவற்றை ஓர் நிறையாக வெதுப்பிப் பொடித்து சுடு சோற்றில் வெருகடி அளவு தூவி நெய் வார்த்து சாப்பிடக் கொடுக்க வயிற்றுக் கடுப்புக் கழிச்சல் தீரும். *(ஏடு.725-58)*

### *பிட்டவியல்*

விடத்தேரிலையை வாய் பேசாமல் இரண்டு பிடியைப் பறித்துக் கொள்க. அரிசியுடன் சேர்த்திடித்துக் கொள்க. அந்த மாவினைப் பிட்டவித்துக் கொள்க. நல்லெண்ணெயையும் வெல்லத்தையும் தேவையான அளவு மாவுடன் சேர்த்து மூன்று நாள் குழந்தைகட்குக் கொடுக்கவும். கடுப்புக் கழிச்சல் குணமாகும். *(ஏடு.400-274)*

### *மருந்து*

முள்ளிலவம்பட்டைச்சாறு எடுத்து வறுத்த மிளகுப்பொடியைக் கூட்டி அதனுடன் எருமைத்தயிர் சேர்த்துக் குழப்பி சாப்பிடக் கொடுக்கவும். வயிறு கடுத்து கழிவது நிற்கும். *(ஏடு.229-144)*

## *11. கணக்கழிச்சல் - குறிகுணம்*

சீதமாய் அல்லது மலமாய்க் கழிதல், கெட்டுப் போன பால் போலவும் கரித்தண்ணீர் போலவும் கழிதல், கை கால் குளிரல், காது அடைத்தல்,

சுரங்காய்தல், குழந்தை கையில் தங்காமை ஆகிய குறிகுணங்கள் கணத்தினால் வந்த கழிச்சலுக்குரியவை. *(புத்.476-145,477-327)*

### *வெங்காயக் குடிநீர்*

கருவேலீர்க்கு ஒரு பிடி, சீரகம் 4.4கி., வெந்தயம் 8.8கி. எடுத்து வறுத்திடித்துக் கொள்க. 10 வெங்காயத்தைச் சிறுக அரிந்து 675மி.லி. நீரிற் போட்டு பாதியாய்க் காய்ச்சிக் குடிநீராக்கிக் கொள்க. 15-30மி.லி. இருவேளை கொடுக்க கணக்கழிச்சல் தீரும். *(புத்.476-145,477-327)*

### *உருண்டை*

அதிமதுரம், கோட்டம், திப்பிலி, திரிசாதம், சந்தனம், சாத்திரபேதி, இலவங்கம், இலவங்கப்பத்திரி, பற்பாடகம், வசுவாசி இவற்றை வகைக்கு 4கி. கோரோசனை 16கி. எடுத்து இளநீரில் அரைத்து 135மி.கி. அளவில் உருட்டி சர்க்கரை சேர்த்துக் கொடுக்க கணக்கழிச்சல் நீங்கும். *(புத்.482-120)*

## *12. குடற்படுவன் - அமிர்தாதிக் குளிகை*

அதிமதுரம், சண்பகப்பூ, ஏலம், கோரோசனை, சாத்திரபேதி, வெட்டிவேர், கோட்டம், மாசிப்பச்சை, விலாமிச்சம் வேர் ஆகியவற்றைச் சமமாக எடுத்து ஆதொண்டைச்சாறு விட்டு 3 மணி நேரம் அரைக்க. அதனை 135மி.கி. அளவெடுத்து மாத்திரைகளாக்கிக் கொள்க. 1 மாத்திரை எடுத்து/தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க குடற்படுவன் தீரும். *(புத்.476-76)*

## *13. சலக்கழிச்சல்-ஊறல் குடிநீர்*

தேங்காயின் கண் திறந்து தேற்றாங்கொட்டையைச் சீவி அதில் ஊறப்போட்டெடுத்துக் கொள்க. பின் அதனை இளநீர் வார்த்தரைத்து, இளநீரில் கலந்து கொடுக்கவும். கழற்சிப்பருப்பையும் உடன் சேர்த்து மூன்று நாள் குழந்தைகளுக்குக் கொடுக்க நீராய்க் கழியும் கழிச்சல் நிற்கும்.

### *கற்க வகைகள்*

1. வெண்குன்றிப் பருப்பு, புளியம் விதைத்தோல், அத்திப்பால் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து எருமை வெண்ணெயில் அரைத்து 250மி.கி. அளவு கொடுக்க சலக்கழிச்சல் குணமாகும். *(புத்.476-147,482-109)*

2. ஆவாரைத்துளிர், கொன்றை வேர் இவற்றைச் சமனெடை எடுத்துப் பொடித்து புளித்த மோரில் கலந்து கொடுக்க காவிரி போல் ஆறாய் ஓடும் கழிச்சல் குணமாகும். *(ஏடு.400-80)*

### *சூரண வகைகள்*

1. கொடிவேலி, பருத்தி வேர், சிறுசின்னி, குறிஞ்சாவேர், சதாவேலிக் கிழங்கு, அமுக்கிராவேர், சாதிக்காய், கிராம்பு, ஏலம் இவற்றை வகைக்குச் சமமாய் எடுத்துக் கொள்க. முறைப்படி சூரணமாக்கிக் கொள்க. அதனை 250மி.கி. எடுத்துத் தேவையான அளவு தேனில் கலந்து கொடுக்க சலக்கழிச்சல் தீரும். *(ஏடு.152-74)*

2. பிண்ணாக்குப்பொடி எடுத்து அதற்குச் சமஅளவு ஆவாரைப்பூவின் மொட்டுப் பொடி எடுத்து கலந்து தேனில் குழைத்து சலக்கழிச்சலுள்ள குழந்தைக்குக் கொடுக்க தீரும். *(ஏடு.400-83)*

3. ஆளிவிதையைப் பொடித்துக் கொள்க. அதனுடன் தவிட்டைக் கூட்டிக் கொள்க. இரண்டையும் சேர்த்து பேயன் பழத்திலிட்டு தேனையும் உடன் கலந்து குழந்தைக்குச் சாப்பிட கொடுக்கவும். கழிச்சலனைத்தும் தீரும். *(ஏடு.275-125,126)*

4. அபின், குரோசாணி ஓமம், அசமதாகம், நீர்முள்ளிவிதை, சுண்டை விதை, நெட்டி விதை இவற்றை ஒரு நாளைக்கொரு நாள் 5கி. அளவு கூட்டிப் பொடித்து புதிய ஓட்டில் வைத்துக் கொள்க. அதை 250மி.கி. எடுத்து தண்ணீரில் கலந்து கொடுக்க. தேனிலும் கலந்து கொடுக்கலாம். இவ்வாறு இரண்டு நேரமும் கொடுக்க நீராய்க் கழியும் கழிச்சல் தீரும். *(ஏடு.579-206)*

### *இளக வகைகள்*

### *1. அமுக்கிராலேகியம்*

அமுக்கிரா, காட்டவரை, தூதுவளை இவற்றை வகைக்கு 35கி. எடுக்க. வெயிலில் வைத்துலர்த்திக் கொள்க. வேலிப்பருத்திச் சாற்றால் மெழுகு போல் அரைத்துக் கொள்க. சாதிக்காய், கிராம்பு, ஏலம், வால்மிளகு, கடுக்காய், சுக்கு, தான்றிக்காய், நெல்லிக்காய், குங்குமப்பூ, கோரோசனை இவற்றைச் சமனெடுத்து இளவறுப்பாய் வறுத்துப் பொடித்துக் கொள்க. மறுபடியும் அனைத்துச் சரக்குகளையும் ஒன்று சேர்த்துக் கொள்க. நெய் 675மி.லி. எடுத்துச் சேர்க்க. வெங்கலப் பாத்திரத்தில் அனைத்தையும் போட்டு கிளறி இறக்கி ஆற வைத்துக்

கொள்க. அதனை 5மி.லி. எடுத்து வெள்ளாட்டு ஊனில் சேர்த்துக் கொடுக்க வேண்டும். இவ்வாறு 40 நாட்கள் கொள்ள சலக்கழிச்சல் தீரும். *(ஏடு.152-98,99)*

## *2. திரிலேகியம்*

கத்திரி வேர், கிரந்திவேர், வேப்பங்கொழுந்து இவற்றை வகைக்கு 35கி. எடுத்து சூரணித்துக் கொள்க. வால்மிளகு, கடுக்காய், பெருங்காயம், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றைச் சம அளவு எடுத்துப் பொடித்துக் கொள்க. புடலங்காய் சாற்றிலாட்டிக் கொள்க. அரசு, ஆவாரை இவற்றின் விறகால் எரித்து நெருஞ்சியின் கோலால் கிண்டி மெழுகு பதமானவுடன் இறக்கி பத்திரப்படுத்திக் கொள்க. அதனை அளவறிந்து குழந்தைகட்குக் கொடுக்க சலக்கழிச்சல் தீரும். *(ஏடு.275-125,126)*

## *உருண்டை*

கிழக்கே போகும் புங்கம்வேர் முற்றியது முழத்தளவில் இரண்டு அல்லது மூன்று எடுத்து வந்து மேலிருக்கும் புறணியைச் சீவி விடவேண்டும். உள்ளிருக்கும் பட்டையை விளாங்காய் அளவு எடுத்துப் பசுவின் பால் வார்த்தரைத்து ஒரு உருண்டையாகச் செய்து வைத்துக் கொள்க. மணித்தக்காளியிலையை அரைத்து விளாங்காயளவும் நற்சீரகம் ஒரு பிடி எடுத்து பசுவின் பால் வார்த்தரைத்து ஒரு உருண்டையளவும் எடுத்து மூன்று உருண்டைகளையும் ஒன்று சேர்க்க.

ஒரு விளாங்காயளவு பசுவின் வெண்ணெய் உடன் சேர்த்து 130மி.கி. அளவு உருண்டை செய்து காலை, மாலை வேளைக்கு ஒரு உருண்டை வீதம் கொடுக்கவும். 20 நாட்கள் இவ்வாறு கொடுக்கவும்.

பொன்னாங்காணி இலை, பிண்ணாக்கு சேர்த்து ஒரு கைப்பிடியளவு பூண்டு கூட்டி உப்பு போடாது கறி சேர்த்துக் கொள்ளவும். சலக்கழிச்சல் நீங்கும். *(ஏடு.579-202)*

## *பற்பம்*

நொச்சியிலை 70கி எடுத்து புதுச்சட்டியில் போட்டு நன்கு தேய்த்து அதனுடன் 5கி ஈயத்தைச் சேர்த்து உருக்கிக் கொள்க. உருகி வரும் பொழுது மனோசிலையை உடன் போட்டு கரண்டியால் நன்கு மத்தித்துக் கொள்ள பற்பமாகும். அதில் ஒரு எடை எடுத்து

வாழைப்பழத்திற்குள் வைக்க கரைந்து நீராகி விடும். அதனைக் கொடுக்க வேண்டும். வெண்ணெயை அனுபானமாய் கொண்டு உட்கொள்ள சலக்கழிச்சல் தீரும். *(ஏடு.152-94,95)*

## *14. சீதக்கழிச்சல் - குறிகுணம்*

அருந்திய பால் எதிரெடுத்தல், உடல் அதிகமான மாறுதலடைதல், இரத்தம் அதிகமாகச் சுண்டிப் போதல், சுரம் அதிகமாக இருத்தல், குரல் தாழ்ந்து போதல், கால், கை அசைவற்று குளிர்ந்து காணப்படுதல், வயிரிறைதல், இரத்தம் விழுதல் ஆகிய இவைகள் ஆமக் கழிச்சலின் குறிகுணங்கள். *(புத்.476-147,477-330)*

### *குடிநீர் வகைகள்*

1. வெள்ளாட்டுப் புழுக்கை, முச்சந்தி கூடின மண், ஆவாரங்கொழுந்து இவற்றை வகைக்கு ஒரு பிடி, வசம்பு 4கி. இவற்றைச் சட்டியில் போடுக. தீப்பிடித்து வெந்தபின் வெந்தயம், ஓமம் இவற்றை வகைக்கு 16கி. போட்டு ஓமம் எரியும் போது 2.6லி. தண்ணீர் விட்டுக் காய்ச்சுக. காற்பங்காய் வற்ற வைத்து 3 வேளைக்குக் கொடுக்கத் தீரும்.

2. வில்வப்பழம் 2 எடுக்க. நாட்டுச்சர்க்கரையில் கலந்து 500மி.லி. தண்ணீர் விட்டு சுண்டக் காய்ச்சிக் கொள்க. அதை இறுத்து மூன்று வேளை கொடுக்கவும். *(கை.பி.அ.வை-102) (முக.கை.பி.-5)*

3. அத்திக்காயை இடித்து 675மி.லி. நீர் விட்டு 80மி.லி.யாகச் சுண்டக் காய்ச்சி 4கி. மிளகைப் பொடித்துப் போட்டுக் கொள்க. அதனை 15-30மி.லி. அளவு இருவேளை கொடுக்க சீதக்கழிச்சல் குணமாகும். *(கை.பி.அ.வை-147)*

4. புனலி வேர், சீரகம், ஆவாரைச் செடியின் ஐந்து உறுப்புகள் (இலை, காய், பூ, பட்டை, வேர்) இவற்றை வகைக்கு ஒரு பிடி எடுத்து இடித்து 2.6லி. தண்ணீரில் போட்டு முறைப்படி குடிநீராய்க் காய்ச்சிக் கொள்க. அதில் குங்குமப்பூவையும் கோரோசனையையும் அரைத்துக் கலக்கி 15-30மி.லி. யாக மூன்று நாள் கொடுக்க சீதரத்தக் கடுப்புக் கழிச்சல் தீரும். *(புத்.482-110)*

5. பெருமுட்டை எனும் பீநாறி, நாய்வேளை, நல்லவேளை, சிறுபுள்ளடி, செப்பு நெருஞ்சில், வல்லாரை, நல்லாரை இவற்றின் பட்டைகளை அரிந்து போட்டு வறுத்து சீரகத்தை முடிந்து போட்டு தண்ணீர்

விட்டுக் குடிநீராய்க் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்க வயிற்றுக் கடுப்புடன் கூடிய சீதக்கழிச்சல் தீரும். *(ஏடு.639-312)*

6. வேப்பீர்க்கு. உதியீர்க்கு. சுக்கு, சீரகம், ஓமம் இவற்றை வகைக்கு 9கி. எடுத்து வெதுப்பி 1.3லி. தண்ணீரில் போட்டு 675மி.லி.யாய்ச் சுருக்கிக் காய்ச்சிக் கொள்ளவும் 15-30மி.லி. அளவாக 6 வேளை கொடுக்கவும். *(ஏடு.725-171)*

### கற்க வகைகள்

1. சீரகம், கொத்துமல்லி, மாதுளம்பிஞ்சு, கீழாநெல்லி வேர் ஆகிய இவற்றைச் சமன் கூட்டி இளவெந்நீரில் அரைத்து கலக்கி மூன்று நாட்களுக்குக் கொடுக்க சீத இரத்தக்கழிச்சல் தீரும். *(ஏடு.273-70)*

2. ஈருள்ளி, மாம்பட்டை, அதிமதுரம், இலவங்கம், ஓமம், சீரகம், மாங்கொட்டை, கிராம்பு இவற்றைச் சமஅளவெடுத்து அரைத்து அளவறிந்து குழந்தைகளுக்குக் கொடுக்க கடுப்பு, சீதக்கழிச்சல் அனைத்தும் நீங்கும். *(ஏடு.109-17)*

### சூரண வகைகள்

1. அமுக்குரா வேரையும் இந்துப்பையும் சமமாய் எடுத்துப் பொடித்து தேனில் மத்தித்துக் குழந்தைகட்கு அளவறிந்து கொடுக்க சீதம் விழுவது நிற்கும். *(ஏடு.725-57)*

### 2. அதிவிடையச்சூரணம்

அதிவிடையம், சுக்கு, திப்பிலி இவற்றை வகைக்கு 5கி., மிளகு, ஏலம், சீரகம் இவற்றையும் 5கி. எடுக்க. இலவங்கம் 3கி., நெல்லிப்பருப்பு, இலவம்பிசின் 6கி., சம்பங்கி மொக்கு, சாதிப்பூ வகைக்கு 7கி. எடுத்து அனைத்தையும் பொடித்து உருண்டை செய்து நெய்யிலே தோய்த்து நான்கு முறை விளக்கிலே காய்ச்சிப் பொடி செய்து கொள்க. அதனை 250மி.கி. கொடுக்க வயிற்றுக் கடுப்புடன் கூடிய சீதரத்தம் நீங்கும். *(ஏடு.313-2,3)*

### 3. எண்ணெய்

பசும்பால் 325 மி.லி. பசுநெய் 1.3 லி எடுத்து சேர்க்க. சாதிக்காய், கொத்துமல்லி, சுக்கு, மிளகு, திப்பிலி, சடாமாஞ்சில், மாயக்காய், அதிவிடையம், கெருடப் பச்சை, அத்தித் திப்பிலி, வெண்சந்தனம், கோட்டம், அதிமதுரம், கச்சோலம், சீரகம் இவற்றை வகைக்கு 5கி

எடுத்து இளநீர் விட்டரைத்துக் கொள்க. பதமாய், எண்ணெயைக் காய்ச்சி, கரண்டியளவு காலை, மாலை பன்னிரெண்டு நாட்கள் கொடுக்க சீதக் கழிச்சல் குணமாகும். *(கை.பி.98-63)*

வெண்குன்றிப் பருப்பு, புளியவிரைத்தோல் இவற்றை வகைக்கு 4 கி. எடுத்துப் பொடித்து எருமை வெண்ணெயில் கொடுக்கத் தீரும். *(ஏடு.725-171)*

4. வெள்ளைக் குங்கிலியம், சீனாக்காரம் இவற்றைச் சம அளவெடுத்து கரண்டியில் வைத்து நெருப்பில் வைத்தெரிக்க பொங்கி சிட்டங் கட்டிக் கொள்ளும். பின் அதை எடுத்துப் பொடித்து 2 1/2கி. எடுத்து எருமை வெண்ணெயில் கலந்து இரண்டு அல்லது மூன்று வேளை கொடுக்க சீதக்கழிச்சல் குணமாகும். *(கை.பி.அ.வை-180,181)*

5. அமுக்குரா வேரையும் இந்துப்பையும் சமமாய் எடுத்துப் பொடித்து தேனில் மத்தித்துக் குழந்தைகட்கு அளவறிந்து கொடுக்க சீதம் விழுவது நிற்கும். *(ஏடு.725-57)*

### *நெய்*

நல்ல கஞ்சாவையெடுத்து பசுவின் நெய்யில் ஏழு முறை வறுத்து அரைத்து 4கி. அளவு எடுக்க. அபினி 4கி. எடுக்க. சுண்ணாம்பை இரண்டின்மேலும் பூசி நெருப்பில் சுட்டெடுக்க. பின் சுண்ணாம்பைத் தட்டி விட்டு பசுவின் நெய்யில் அரைத்துக் கொள்க. அதனை 250மி.கி. அளவு காலை, மாலை இருவேளையும் பசு நெய்யில் கொடுக்க சீதக்கழிச்சல் குணமாகும். பசுந்தயிர், ஊர்க்குருவி, கவுதாரி, கிழங்கான் மீன், வெள்ளாட்டு உப்புக்கண்டம் சேர்க்கவும். மற்ற மாமிசங்களை, புளிப்பைத் தவிர்க்கவும். கழிச்சல் கட்டும்.

### *எண்ணெய் வகைகள்*

1. வாகையிலைச் சாற்றையும் எண்ணெயையும் சமன் சேர்த்து அதில் ஒருதலைப் பூண்டைச் சேர்த்தரைத்துக் கொள்க. 5மி.லி. அளவெடுத்து மூன்று நாட்கள் கொடுக்க சீதக்கழிச்சல் தீரும். *(ஏடு.400-274)*

### *2. சாதிக்காயெண்ணெய்*

பூரம், சோற்றில் அவித்த சாதிக்காய் இவற்றை வகைக்கு 4கி. எடுத்து

எண்ணெய் விட்டரைத்து 105கி. சிற்றாமணக்கு நெய்யுடன் கலக்கி காலையில் மட்டும் 5மி.லி. கொடுக்க சீதக்கழிச்சல் குணமாகும். *(புத்.477-330,482-106)*

### *மாத்திரை*

சாதிக்காயைக் குடைந்து அதற்குள் அபினை 488மி.கி. அளவு வைத்து மூடி மஞ்சளை அரைத்து காய்க்கு மேல் அங்கியாக கவசமிட்டுக் கொள்க. உமியில் வேதுபுடம் வைத்து பின் கவசத்தை நீக்கிக் கொள்க. அப்பற்பத்தைத் தாய்ப்பாலிலரைத்து 62மி.கி. அளவு உருட்டிக்கொள்க. அதனைத் தேன் அல்லது தாய்ப்பாலில் இழைத்துக் கொடுக்க சீதக்கழிச்சல் குணமாகும். *(ஏடு.725-171)*

### *குழம்பு*

பேய்ச்சொறியின் வேரதனைக் கழுவி வெதுப்பி இடித்து சாறெடுத்துக் கொள்க. 320மி.லி. சாற்றுடன் அதே அளவு மிளகைப் பொடித்து சேர்த்து காய்ச்சி குழம்பு பக்குவத்தில் இறக்கி வைத்துக் கொள்க. 5மி.லி. அளவெடுத்து தயிருடன் கூட்டிக் கொடுக்க சீதக்கழிச்சல் தீரும். *(ஏடு.400-273)*

### *மருந்து*

நல்ல வெல்லம் 210கி., அத்திப்பால் 175கி. எடுத்து ஒன்று சேர்த்துப் பிசைந்து உருட்டிக் கொடுக்க குழந்தைகளின் சீதக்கழிச்சல் தீரும். *(ஏடு.663-8)*

## *15. திரிந்த பால் போல் கழிதல் - கற்கம்*

675மி.லி. எருமைப்பால் எடுத்து தயிர் துவைத்து, மறுநாள் அதிகாலையில் 9கி. கடுகை அரைத்து தயிரிலே குழப்பி அளவறிந்து கொடுக்கவும். இரவில் தயிர்தோய்த்து வைத்து மறுநாள் இரவில் கொடுக்கவும். மூன்று நாளைக்குக் கொடுக்க வயிற்றுக் கழிச்சல் தீரும். *(ஏடு.307-72)*

### *மருந்து*

உத்தாமணியிலை, அவரையிலை இவற்றை வகைக்கு 5 எடுத்து பூண்டினை 5 எடுத்து உரித்துக் கொள்க. எருமை வெண்ணெயைக் கரண்டியிலிட்டு மேற்சொன்னவற்றைப் போட்டு இலை முறியக் காய்ச்சிக் கொள்ள வேண்டும். அதனுடன் தாய்ப்பாலை ஊற்றி குலுக்கி

குழந்தைக்கு மூன்று நாள் கொடுத்திட திரிந்த பால் போல் கழிதல் குணமாகும். *(புத்.476-149)*

### *குளிசம்*

முத்தெருக்கஞ்செவி வேர் 2கி. அல்லது சுண்டைக்காயளவு எடுத்துத் தாய்ப்பாலில் கொடுக்க கழிச்சல் குணமாகும். இந்த வேரையே குளிசமாகக் கட்டவும். *(புத்.262-266)*

### *16. நாட்பட்ட கழிச்சல் - சாறு*

முற்றின மாமரத்தின் பட்டையை 350கி. எடுத்து மேல் தோலைச் சீவிக்கொள்க. அதனை உரலிலிட்டு பஞ்சாகு மட்டும் இடித்து சாற்றைப் பிழிந்து 325மி.லி. எடுத்துக் கொள்க. 675மி.லி. எருமைத் தயிரில் மேற்கூறப்பட்ட சாற்றைக் கலந்து மூன்று நேரம் கொடுக்கவும். கார்ப்பு, புளிப்பு தவிர்க்கவும். சோற்றிலே எருமைத்தயிர் சேர்த்து சாப்பிட கொடுக்கவும். *(ஏடு.262-98)*

### *குடிநீர்*

நாயுருவியின் சுணையைக் கொண்டு வந்து 1 1/4 கிலோ நிறுத்தி பானையில் போட்டு கருக்கிக் கொள்க. மிளகு 70கி., வெள்ளைச் சாட்டரணை 105கி., வசம்பு 35கி. எடுத்து கருக்கிக் கொள்க. அதனுடன் வெற்றிலைக்குச் சுண்ணாம்பு தடவிப் போடுக. 2.6லி. தண்ணீர்வார்த்து 1.3லி. யாக சுண்டக் காய்ச்சிக் கொள்க. அதனை 15-30மி.லி. அளவாக 3 நாட்கள் குடிக்கக் கொடுக்க கழிச்சல் போகும். *(ஏடு.256-60)*

### கற்கம்

1. சாதிக்காய், மிளகு, வில்வப்பிசின், இலவங்கம், கொடிவேலி வேர், வெங்காரம், அபின் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து கஞ்சாயிலைச் சாறு வார்த்தரைத்து, தயிரில் 250மி.கி. அளவு கலந்து கொடுக்கவும். *(ஏடு.313-40)*

2. ஓமத்தை 675மி.கி. எடுத்து சுத்தி செய்து ஓட்டில் போட்டு இளவறுப்பாக வறுத்து உரலில் போட்டு துவைத்து உமியை நீக்கிக் கொள்க. இவ்வாறு 7 முறை செய்து எடுக்க. வசம்பை 35கி. எடுத்து புகையின்றி கரியாக சுட்டுக் கொள்க. மேற்கூறப்பட்ட ஓம அரிசி, வசம்பு சுட்டகரி இரண்டையும். அம்மியில் வைத்து தேவையான அளவு

தேன்விட்டு விழுதுபட அரைத்து இளகமாக்கிக் கொள்க. கொட்டைப் பாக்களவு இரண்டு வேளையாக குழந்தைக்குக் கொடுக்க நாட்பட்ட கழிச்சல் தீரும். *(கை.பி.அ.வை.161)*

### *சூரண வகைகள்*

1. சாதிபத்திரி, சாதிக்காய், அதிவிடையம், அபின், கஞ்சா இவற்றை வகைக்கு 16கி., மற்ற சரக்குகளை வகைக்கு 8கி., பனங்கருப்பட்டி 8கி., பொடுதலைப் பொடி 1கி., கையாந்தகரைப் பொடி 16கி. எடுத்துக் கொள்க. இவற்றை வறுத்துப் பொடி செய்து கொண்டு நன்றாக அரைத்து 250மி.கி. அளவு உருண்டையாகச் செய்து கொடுக்கவும் நீண்ட நாட்கள் தொடர்ந்திருக்கும் கிராணிக் கழிச்சல் தீரும்.

2. வெட்பூலா, விடத்தேர், நீர்ப்பூலா, இவற்றின் வேர், கஞ்சா, நெல்லிமுள்ளி இவற்றை நன்றாக இடித்துப் பொடி செய்து சந்தனக் குழம்பில் கலந்து அளவறிந்து கொடுக்க நாட்பட்ட வயிற்றுக் கழிச்சல் தீரும். (ஏடு.262-265).

3. நாயுருவி, கரிசலாங்கண்ணி இவற்றின் சமூலங்களைப் பொடி செய்து கொள்க. 1.3லி. பொடிக்கு 160மி.லி. மிளகை வறுத்து சூரணித்து உடன் கலந்து கொள்க. 250மி.கி. சூரணத்தைக் குழந்தைகட்குக் கொடுக்க நாட்பட்ட கழிச்சல் குணமாகும். *(ஏடு.262-94)*

### *நெய் வகைகள்*

1. நாவல், நெல்லி, அத்திமரப்பட்டை, மலைதாங்கி இவற்றை வகைக்கு 36கி. எடுத்து 1.3லி. தண்ணீர் விட்டு 75மி.லி. யாகக் காய்ச்சிக் கொள்க. பின்னர் துளசி, பழைய பாசி, தகரை, கிணைப்பூடு, வெங்காயம், தண்ணீர்விட்டான் இவற்றைச்சமபங்காய் எடுத்துப் பிழிந்து மேற்சொன்ன குடிநீரில் கலந்து கொள்க. கடுக்காய், நெல்லி, தான்றிக்காய், சீரகம், கிராம்பு, குரோசாணி ஓமம், கெருடப்பச்சை, ஒக் மரத்தின் கொட்டை, அதிவிடையம், அதிமதுரம், ஏலம், கல்நார், இலவங்கம் இவற்றை வகைக்கு 2 1/2கி. எடுத்துப் பொடித்து சாற்றுடன் கலக்க வேண்டும். அனைத்தையும் கன்றுள்ள பசுவின் நெய்யில் கலந்து காய்ச்சிக் கொள்க. அதனை 5-10மி.லி. கொடுக்க நாட்பட்ட வெப்புக் கழிச்சல் தீரும். *(கை.பி.98, 37-38)*

2. காராம்பசுவின் நெய், பூக்களுள்ள வாழையின் சாறு, மாதுளைப் பூவின் சாறு இவற்றைத் தேவையான அளவு எடுத்துக் கொள்ள

வேண்டும். பிறகு அதிமதுரம், கெருடப்பச்சை, ஏலம், ஓக் மரத்தின் கொட்டை இவற்றைச்சமஅளவு எடுத்துக் கொள்ள வேண்டும். இலவங்கம், பஞ்சு, கல்நார் இவற்றை வகைக்கு 5கி. எடுத்து முன்கூறிய சாற்றாலாட்டி ஒன்றாக வார்த்து அடுப்பிலேற்றி பதமாய் காய்ச்சி மெழுகு பதமாக வரும்போது சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, அதிவிடையம், வசுவாசி, முத்தக்காசு போன்றவற்றை 10கி. எடுத்து அனலில் வாட்டி பொடித்து அதில் போட்டு இதமறிந்து வடித்து வைத்துக் கொள்ள வேண்டும். 5மி.லி. கொடுக்க கிராணிக் கழிச்சல் தீரும். *(கை.பி.98.49-50)*

### *மாத்திரை வகைகள்*

1. பேய்முசுட்டை இலையை 2 குத்தெடுத்து 2.6லி. மோர் விட்டு பிட்டவித்துக் கொள்க. அவ்விலையுடன் சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், அதிவிடையம், மாதுளந்தளிர் இவற்றைச் சேர்த்து மறுபடி பிட்டவித்தெடுக்க. மோர் சுண்டிய பிறகு சரக்குகளை எடுத்து விட்டு குடிநீரைக் காய்ச்சுக. கற்கத்தைக் குடிநீர் விட்டு அரைத்து தேற்றான் விதை அளவு மாத்திஸ்ர செய்து கொள்க. அக்குடிநீரிலேயே ஒரு மாத்திரையை இழைத்துக் கொடுக்க நாட்பட்ட கழிச்சலனைத்தும் குணமாகும். *(ஏடு.262-315)*

2. சாதிக்காயைச் சிறுக வெட்டி கரண்டியில் நல்லெண்ணெய் ஊற்றி பொன்னிறமாய் வறுத்துக் கொள்க. வெங்காரம், அதிவிடையம், அபின் வகைக்கு 4கி. எடுத்துக் கொள்க. சாதிக்காய் வெந்த எண்ணெய் வார்த்து மேற்கூறிய சரக்குகளை 6மணி நேரமரைத்து 130மி.கி. அளவு குளிகை செய்து தேனில் அல்லது வெந்நீரில் கொடுக்கவும். உப்பு, புளி தவிர்க்க. நாட்பட்ட கழிச்சல் தீரும். *(ஏடு.262-264)*

3. 35கி. மிளகெடுத்து புளித்த மோர் அல்லது புளித்த காடியில் ஒரு நாள் ஊறப்போட்டு அடுப்பில் வைத்து மோர் வற்றும் வரை எரித்து மிளகு பொரியும் போது எடுத்து வைத்துக் கொள்க. மாம்பட்டையை அவித்துப்பிழிந்த சாற்றில் மிளகை அரைத்துக்கொள்க. 4கி. அபினையும் சேர்த்தரைத்து சீலையில் பதின்மூன்று புடம் போடவும். பின் எடுத்து 130மி.கி. அளவு உருண்டை செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக. வெந்நீரில் அல்லது தேனில் 1 மாத்திரையை உரைத்துக் கொடுக்க அனைத்து வகை கிராணிக் கழிச்சலும் குணமாகும். *(ஏடு.268-93)*

### குழம்பு

கொம்பரக்கு, வெள்ளைக்குந்திரிக்கம், சாதிக்காய், மிளகு, கடுகுரோகணி இவற்றை வகைக்கு 35கி. எடுத்து இம்மருந்தைச் சூரியபுடமாக வைத்து இடித்துச் சூரணித்துக் கொள்க. நல்லெண்ணெய் விட்டரைத்து குழம்பாக்கி மூன்று நாள், ஆறு பொழுது கொடுக்க கழிச்சல் தீரும். (அ.வை.ம.த.சு.44).

### *17. நீர்ப்பாடு - அமிர்தாதிக் குளிகை*

குடற்படுவனுக்கு வரும் 'அமிர்தாதிக் குளிகை' எனும் குளிகை வகை இதற்கும் பொருந்தும். *(புத்.476-76)*

### *18. படுவன் கழிச்சல் குடிநீர்*

முருங்கையிலையை அவித்தெடுத்து குடிநீரில் நற்சீரகம், ஓமம் இவற்றைப் பொரித்துப் பொடி செய்து 2கி. அளவு கலந்து கொடுக்க படுவன் கழிச்சல் குணமாகும். *(த.சு.கை.ம.ம.மு. - 45)*

### *19. பச்சிலை போல் கழிதல் - கற்கம்*

ஏலம், சாத்திரபேதி, அதிமதுரம் இவற்றை வகைக்கு 2கி. எடுத்து நீராகாரம் விட்டரைத்து மூன்று நாள் கொடுக்க பச்சிலை போல் கழிதல் நீங்கும். *(புத்.476-149,477-332,482-110)*

### *20. பால் போல் கழிதல் - மருந்து*

பிரண்டையிலை, பெருந்தும்பையிலை இவற்றை வகைக்கு 5 எடுத்து கரண்டியில் வெதுப்பி தாய்ப்பால் விட்டு சாறு பிழிந்து கொள்க. அதில் கோரோசனை, கருஞ்சீரகம், கத்தூரி மஞ்சள், இவற்றை வகைக்கு 65மி.கி. எடுத்துப் பொடித்துப் போட்டு மூன்று நாள் கொடுக்கத் தீரும். *(புத்.482-107)*

### *21. பொருமல் கழிச்சல் - ஆமையோட்டுக் கற்கம்*

ஆமையோடு, அதிவிடையம், ஓமம், வட்டத்திருப்பி, பாவட்டை, மிளகு, சுக்கு ஆகிய ஏழு பொருட்களையும் சம எடை எடுத்து தாய்ப்பால் விட்டரைத்து 130 மி.கி. அளவு மாத்திரை செய்து தாய்ப்பாலிலாவது கொதி நீரிலாவது இழைத்துக் கொடுக்க பொருமல் கழிச்சல் நீங்கும். *(புத்.477-331, 482-109)*

### *22. மலக்கட்டுக் கழிச்சல் - சாறு*

பூநாகத்துடன் இந்துப்பைப் பொடித்துப் போட்டு வைத்தால்

சிவப்பான நீர் இறங்கும். அதனுடன் இஞ்சிச்சாற்றைச்சேர்த்து குழந்தைகட்குக் கொடுக்க மலசலம் நன்கு போகும். *(கை.பி.98-14)*

## *23. மாந்தக் கழிச்சல் குறிகுணம்*

வாந்தி, மயக்கம், மூர்ச்சை, குரல் கம்மல், உடல் காய்ந்து உடல் வெதுவெதுப்பாய் இருத்தல், வாய் உலர்தல், கை கால் குளிர்ந்திருத்தல், வலித்தல், மலம் சேர்ந்திருந்து பலவிதமாய்க் கழிதல், குழந்தை சரியான நிலையில்லாமல் பலவித துன்பத்தையடைதல் போன்றவை மாந்தக் கழிச்சலின் குறிகுணங்கள். இது மிகவும் கொடியதாகும்.
*(புத்.476-143-144,477-325,326,482-108)*

### *பச்சிலைச்சாறு*

நல்வேளையிலை, நாய்வேளையிலை, வேலிப்பருத்தியிலை, குப்பைமேனியிலை, அகத்திப்பழுப்பு, வசம்பு, வெள்ளுள்ளி ஆகிய ஏழு மூலிகைகளின் சாறுகளைச் சரிஎடை எடுத்து ஒன்றாகக் கூட்டி நோய் வன்மைக்குத் தக்க அளவு உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் துவாலையிட மாந்தக் கழிச்சல் நீங்கும்.
*(புத்.476-143-144,477-325,326,482-108)*

### *குடிநீர்*

தணலிற் சட்டியைக்காய வைத்து கைப்பிடியளவு உப்பைப் போட்டுச் சாம்பலாக்கித் துடைத்துப் போட வேண்டும். பின் வசம்பைப் போட்டு கருகித் தீப்பற்றி வேகும் போது ஒரு பிடி வேளையை மூன்று அறுப்பாய் செய்து போட்டு பொன்னிறமாய் வறுத்துக் கொள்க. பின்னர் அரைக் கைப்பிடியளவு நீர் தெளித்துச்சுண்டும் அளவு வறுத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு இரண்டு முறை வறுத்த பிறகு 1.3லி. தண்ணீர் விட்டு வற்றும் படி காய்ச்சி இறக்கி 15-30மி.லி. கொடுக்க மாந்தம் தீரும். *(புத்.482-106)*

### *கற்கம்*

கோரோசனை, களிப்பாக்கு, சீரகம், காசுக்கட்டி இவற்றைச் சமன்கூட்டி எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து களிப்பாக்களவு எடுத்துக் கொள்க. அதைத் தாய்ப்பாலில் கலக்கிக் குழந்தைகட்குக் கொடுக்க கழிச்சல் தடைபடும். *(ஏடு.255-24)*

### *குளிகை*

வசம்பு 15கி., பூண்டு, சுக்கு, மிளகு, திப்பிலி, அசமதாகம்,

கருஞ்சீரகம் இவை வகைக்கு 20கி. சாரணை வேர் 25கி., கடுக்காய்த் தோல் 10, பெருந்தும்ப்ப, பொடுதலை, வேலிப்பருத்தி இவற்றின் இலைகளை வகைக்கோர் பிடி எடுத்து சாறு பிழிந்து கொள்ள வேண்டும். கடுக்காய்த் தோலை நன்கு வேகவைத்து நன்றாக இடித்து முன் கூறிய மூலிகைகளின் சாறு விட்டரைத்து விழுதைத் தூதளங்காய் அளவினதாக உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். இதனைக் குழந்தைகளின் நோய் வன்மை, வயது இவை அறிந்து கால், அரை, முக்கால் என்று எடுத்து வெந்நீரில் கலந்து புகட்ட மாந்தக் கழிச்சல் தீரும். *(கை.பி.98-19)*

### *மருந்து*

சுக்கை 5மி.கி. எடுத்து வறுத்துப் பொடி செய்து கொள்க. அதற்குத் தேவையான அளவு நல்லெண்ணெயில் போட்டு கொதிக்க வைக்க, அச்சட்டியில் தாய்ப்பாலைப் பீச்சி ஆறவைத்து குழந்தைகட்கு அளவறிந்து புகட்ட மாந்த கழிச்சல் நீங்கும். *(ஏடு.313-91)*

## *24. முட்டையுடைத்தல் போல் கழிதல்-மருந்து*

திரிந்த பால் போல் கழிவதற்குக் கொடுக்கப்பட்ட அம்மருந்தே இதற்கும் கொடுக்கலாம். *(புத்.476-149,482-110)*

## *25. மூலக்கடுப்பு கழிச்சல்-சூரணம்*

சாதிக்காய், கிராம்பு, வ்சுவாசி, கருவேர்க்கொம்பு, மிளகு, கடுக்காய், அசமோதம், திப்பிலி, நற்சீரகம், இவற்றைச் சம அளவெடுக்க. முறைப்படி சூரணித்துக் கொள்க. அதனைத் தேனில் 250மி.கி. அளவு கலந்து குழந்தைகட்குக் கொடுக்க மூலக்கடுப்பு கழிச்சல் மாறும்.

*(ஏடு.275-331)*

### *மாத்திரை*

அதிவிடையம், கோட்டம், கிராம்பு, அதிமதுரம், இலவம்பிசின், விளாம்பிசின், சாதிக்காய், சாதிபத்திரி, சடாமாஞ்சில், சன்ன இலவங்கப் பட்டை ஆகிய இவற்றைச் சம அளவாய் எடுத்து மாதுளம் பழத்தினுள் வைத்துத் துணி சுற்றி மேல் சாணம் பூசிக் காய வைத்துக் கருகாமல் புடமிட்டெடுத்துக் கொள்க. அதனைக் கஞ்சாச் சாற்றாலரைத்து 130மி.கி போல் உருண்டை செய்து உலர்த்தி வைக்க. பின் அதனைக் கஞ்சா,

தென்னங்குரும்பை, தென்னம்பூ, வாழைப்பூ இவைகளின் சாற்றிலாவது, தேன் அல்லது தயிரிலாவது கலந்து கொடுக்க மூலக் கடுப்புக் கழிச்சல் தீரும். *(புத்.476-148-149,482-110)*

## *26. வயிறு பருத்து கழிதல்-மருந்து*

நற்சீரகத்தைப் பொடி செய்து கொள்க. சட்டியைக் காய வைத்து நல்லெண்ணெயைக் காய வைத்துக் கொள்க. சீரகப் பொடியைத் தூவிக் கிண்டி எடுத்து பத்திரப்படுத்திக் கொள்க. அளவறிந்து அதனைக் குழந்தைகளுக்குக் கொடுக்க கழிச்சல் மாறும். (ஏடு.317-12).

## *27. வாந்திக் கழிச்சல் - நெல்லிக் குடிநீர்*

நெல்லிப்பட்டை, மாம்பட்டை, அரசம்பட்டை, பருத்திக்கொட்டை, பருத்திப் பிஞ்சு, அத்திப்பட்டை, அத்தித் துளிர் இவை வகைக்கு 4கி. எடுத்து சிதைத்து 2.6லிட்டர் நீர் விட்டு காய்ச்சி சுண்டிய பிறகு இரு வேளையும் 15-30 மி.லி கொடுக்க வாந்திக் கழிச்சல் நிற்கும். *(புத்.476-146,477-329)*

## *28. விஷக் கழிச்சல்-குடிநீர்*

வெற்றிலையில் சுண்ணாம்பு தடவி ஈர்க்கு எடுத்துப் போட்டு 35கி. எடுத்துக் கொள்க. மிளகை 35கி. எடுத்து ஒன்று சேர்க்க. 1.3லி. தண்ணீர் ஊற்றி எட்டிலொன்றாய்ச் சுருக்கிக் காய்ச்சி 15-30மி.லி. கொடுக்க விஷபேதி குணமாகும். *(ஏடு.225-81)*

## *29. விசூழிகழிச்சல்-குறிகுணங்கள்*

அடிக்கடி வயிற்றுப்போக்கு ஏற்படுதல், தாகம் அதிகமுண்டாதல், நாவறட்சியுண்டாதல், முகம் வேறுபட்டு காணுதல், ஆகிய குறிகுணங்களையுண்டாக்கும். (டி.வி.எஸ்.) உருண்டை, அபின், இலிங்கம், தேவதாரம், கற்பூரம் இவற்றைச் சமஎடை எடுத்து தாய்ப்பால் வார்த்தரைத்து 130மி.கி. அளவு உருண்டை செய்து கொள்க. உப்பு, ஆமணக்கு இலை இடித்து கொட்டி விட்டு அந்தச் சட்டியில் 35கி. ஓமத்தைப் போட்டு வெடிக்க விட்டு புகை அடங்கும் போது தண்ணீர் விட்டு காய்ச்சி எட்டிலொன்றாய்ச் சுருக்கி வைக்க ஓமக் குடிநீராகும். அதில் மேற்சொன்ன உருண்டை ஒன்றை இழைத்துக் குழந்தைக்குக் கொடுக்க விசூழி கழிச்சல் குணமாகும். தேன், தாய்ப்பால் இவற்றைச் சமஅளவு சேர்த்து தனியே கொடுக்கலாம். அதையே அனுபானமாகக்

கொண்டு மேற்கூறிய மாத்திரையை இழைத்தும் கொடுக்க விசூழி கழிச்சல் குணமாகும்.

கழிச்சல் அதிகமாய் ஏற்பட்டு தாகம் உண்டாயின் ஆடுதின்னாப்பாளை சமூலம், மிளகு, வசம்பு இவற்றைப் பொடித்து கொடுக்கவும். தாகம் நீங்கும். *(ஏடு.268-64)*

### *30. விடாக்கழிச்சல்-கற்கம்*

சாதிக்காய், அதிவிடையம், சாதிபத்திரி, அபினி இவற்றைச் சமமாய் எடுத்து நல்லெண்ணெய் விட்டரைத்து தாய்ப்பாலில் 250மி.கி. அளவு கலந்து கொடுக்க தீரும். *(புத்.476-149,482-110)*

### *31. வெப்புக்கழிச்சல்-குடிநீர்*

வில்வவேர் இரண்டு பிடி எடுத்து நைய இடித்து சீலையிலே வடித்துக் கொள்க. ஓமம், வெந்தயம் இவற்றை வகைக்கு 165கி. எடுத்து தனித்தனியே வறுத்துக் கொள்க. தாய்ப்பாலைக் கூட சேர்த்து கிழியாகக் கட்டி வைக்க. புதுச்சட்டிக்குள்ளே 2.6லி. தண்ணீரை ஊற்றி அதில் கிழி கட்டிய பொட்டணத்தைப் போட்டு கொதிக்க வைக்க. பிறகு அந்தக் கிழி பொட்டணத்தை இறுக்கிப் பிழிந்து அக்குடிநீரை 15-30மி.லி. அளவு கொடுக்கவும். இவ்வாறு 3 பொழுது கொடுக்கவும். இவ்வாறு 3 பொழுது கொடுக்க குழந்தைகளின் வெப்புக்கழிச்சல் நீங்கும். *(ஏடு.601/437-98)*

### *அதிமதுர மாத்திரை*

அதிமதுரம், அதிவிடையம், சாதிக்காய், மாதுளம்பூ, சீரகம் இவற்றைச் சம எடை எடுத்து மாதுளஞ்சாற்றில் (அல்லது) புளியாரைச் சாற்றில் அரைத்து தூதுளங்காய் அளவு மாத்திரை செய்து கொடுக்க வெப்புக்கழிச்சல் நீங்கும். *(புத்.476-147)*

ஒரு மாத்திரை பொடி செய்து வெந்நீரில் கலந்து நோய் வன்மைக்குத் தக்க அளவு குழந்தைக்குக் கொடுக்க வெப்புக் கழிச்சல் போகும். *(புத்.477-329)*

### *32. வெள்ளைக் கழிச்சல்*

#### *சூரண வகைகள்*

1. விளாம்பிசினைப்பொடித்து எருமைத்தயிரில் மூன்று நாள் கொடுக்க வெள்ளைக் கழிச்சல் தீரும். *(ஏடு.725-57)*

2 வெண்குன்றிப்பருப்பும் புளியவிரைத்தோலும் வகைக்கு 4கி எடுத்து மைபோல் பொடித்து வைத்து எருமை வெண்ணெயில் குழைத்து ஆறு பொழுது கொடுக்க வெள்ளைக்கழிச்சல் குணமாகும்.

*(ஏடு.725-171,725-57)*

**மருந்து:-** வெள்ளைக் குங்கிலியம் 4கி எடுத்துப் பொடித்து மோரில் போட்டு மத்தால் கடைந்து வடிகட்டிக் கொள்க. பின் அதனைத் தேவையான அளவு தேங்காய்ப்பாலிற் கலந்து அளவறிந்து குழந்தைகட்குக் கொடுக்க வெள்ளைக்கழிச்சல் தீரும். *(ஏடு.725-57)*

# பின்னிணைப்புகள்

# பின்னிணைப்பு - I.

## முதன்மை நூற்பட்டியல்

### அ. ஓலைச்சுவடிகள்

1. அகத்தியர் பிள்ளைப் பிணி வாகடம்
2. குழந்தைகள் மருத்துவ நூல்
3. தெட்சணா மூர்த்தி வாலை வாகடம்
4. புலத்தியர் வைத்தியம்.
5. பிள்ளைப் பிணி வாகடம்
6. பிள்ளைப் பிணி வாகடம் (வேறு)
7. அகத்தியர் வாலை வாகடம்

✶ 8. வாலாரிஷ்ட வைத்தியம்

✶ 9. பிள்ளைப் பிணி கெற்ப உற்பத்தி

✶ 10. பிள்ளைப் பிணிக்கு வாகடம்

11. வைத்திய அட்டவணை
12. பால வாகடம்
13. அகத்தியர் பால வாகடச் சீவிகை - 200
14. பிள்ளைகள் தோசம்
15. அகத்தியர் பால வாகடம்
16. மாந்த நிதானம்

### ஆ. கையெழுத்துப் படிகள்

1. பால வாகடம் 200
2. பால வைத்திய போதினி

### இ. நூற்கள்

1. பாலவாகட மெனும் சிமிட்டு ரத்தினச் சுருக்கம்.

2. பாலவாகடம், மரு. பொன். குருசிரோன்மணி

3. பால வாகடத்திரட்டு வைத்தியம் 1200, கந்தசாமி முதலியார்.

4. பாலவாகடம் உரைநடை.

குறிப்பு :- இந்நூற் கருத்துகள் பெறப்பட்ட நூற்களாதலால் முதன்மை நூற்பட்டியலென்று குறிக்கப் பெற்றது.

* இக்குறியிட்ட சுவடிகள் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள், நூலகச் சுவடிகள் பிற நம் இயக்ககச் சுவடிகள்.

# பின்னிணைப்பு - II.

## துணை நூற் பட்டியல்

1. குணபாடம், பொருட் பண்பு நூல் (பாகம் - 1) சித்த மருத்துவ வாரியம், சென்னை - 106.

2. குணபாடம், தாதுசீவ வகுப்பு, (பாகம் 2-3) ஆர். தியாகராஜன், இந்திய மருத்துவத் துறை, 1981.

3. சித்த மருத்துவம் (பொது), சித்த மருத்துவ வாரியம், சென்னை - 106.

4. தன்வந்திரி பால வாகடம், குருசாமி நாயுடு, குயப்பேட்டை, சென்னை, 1903.

5. தன்வந்திரி குழந்தை வாகடம், க. லலிதாம்பிகா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1984.

6. ஆவியளிக்கும் அமுத முறைச் சுருக்கம், அருள்மிகு தண்டாயுத பாணிச் சுவாமி திருக்கோயில், சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு, 1975.

7. சித்த மருத்துவாங்கச் சுருக்கம், இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்ககம், சென்னை - 106.

8. நோய் நாடல் நோய் முதல் நாடல் திரட்டு - பாகம் 1-2 இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்கம் சென்னை - 106.

9. Siddha Medical Dictionary Vol - 1 T.V. Sambasivam Pillai. The Research Institute of Siddhars Science Madras - 1931.

10. Siddha Medical Dictionary Vol - 2. T.V. Sambasivam Pillai. The Research Institute of Siddhars Science Madras - 1931.

11. Siddha Medical Dictionary Vol - 3. T.V. Sambasivam Pillai. The Research Institute of Siddhars Science Madras - 1931.

12. Siddha Medical Dictionary Vol - 4. T.V. Sambasivam Pillai. The Endowment of G.D. Naidu, Coimbatore - 1977.

13. Siddha Medical Dictionary Vol - 5. T.V. Sambasivam Pillai. The Endowment of G.D. Naidu, Coimbatore - 1978.

14. கழகத் தமிழகராதி, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை.

15. மருத்துவ அகராதி, இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்ககம், சென்னை - 1992.

# பின்னிணைப்பு - III.

## நோய்கள் அகரமுதலி

# பின்னிணைப்பு - IV.

## மருந்துகள் - அகரமுதலி

# பின்னிணைப்பு - V

## பாடல் முதற் குறிப்பகராதி

## இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித் துறை வெளியிட்ட நூற்பட்டியல்

| வ. எண் | நூல்களின் பெயர் |
|---|---|
| 1. | குணபாடம் மூலிகை |
| 2. | குணபாடம் தாது சீவவகுப்பு - II & III |
| 3. | நோய்களுக்குச் சித்த பரிகாரம் பாகம் 1 |
| 4. | நோய்களுக்குச் சித்த பரிகாரம் பாகம் 2 |
| 5. | நோய் நாடல் நோய் முதல் நாடல் திரட்டு பாகம் 1 |
| 6. | நோய் நாடல் நோய் முதல் நாடல் திரட்டு பாகம் 2 |
| 7. | சித்த மருத்துவம் சிறப்பு |
| 8. | மகளிர் மருத்துவம் |
| 9. | நோயில்லா நெறி |
| 10. | சட்டம் சார்ந்த மருத்துவமும் நஞ்சு மருத்துவமும் |
| 11. | சித்த வைத்தியத் திரட்டு |
| 12. | சூல் மருத்துவம் |
| 13. | சித்தர் அறுவை மருத்துவம் |
| 14. | குழந்தை மருத்துவம் |
| 15. | பதார்த்த குண சிந்தாமணி |
| 16. | வர்மத் தொகுப்பு |
| 17. | நஞ்சு முறிவு நூல் |
| 18. | உடல் தத்துவம் |
| 19. | பிள்ளைப்பிணி மருத்துவம் - பாகம் 1 |
| 20. | பிள்ளைப்பிணி மருத்துவம் - பாகம் 2 |
| 21. | சித்த மருத்துவம் (பொது) |
| 22. | யூகி வைத்திய சிந்தாமணி |
| 23. | தேரையர் யமக வெண்பா பாகம்-1 |
| 24. | கடுக்காய் வல்லாரையின் தனி மாண்பு |
| 25. | நல்வாழ்விற்கு ஓர் நல் மருத்துவம் |
| 26. | பிணி உடற் பொருள் தேர்வக ஆய்வு முறைகள் |
| 27. | தோற்றக் கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும் |
| 28. | சித்த மருத்துவாங்கச் சுருக்கம் |
| 29. | உடற் கூறு |
| 30. | புலிப்பாணி வைத்தியம் |

## இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித் துறை வெளியிட்ட நூற்பட்டியல்

| வ. எண் | நூல்களின் பெயர் |
|---|---|
| 31. | சரக்கு சுத்தி செய்முறைகள் |
| 32. | நோயும் மருந்தும் |
| 33. | அரிய சித்த மருத்துவ முறைகள் |
| 34. | மூலிகை விளக்கம் |
| 35. | சித்த மருத்துவ அகராதி - பாகம் 2 |
| 36. | சித்த மருத்துவ அகராதி - பாகம் 3 |
| 37. | அகத்தியர் வைத்திய சிந்தாமணி |
| 38. | அகத்தியர் இரண நூல் |
| 39. | சித்த மருத்துவத்தில் வர்ம பரிகாரமும் சிகிச்சை முறைகளும் |
| 40. | சித்த மருத்துவ சிந்தாமணி |
| 41. | வைத்திய மூலிகை விரிவகராதி |
| 42. | மருந்து செய் முறைகள் |
| 43. | அகத்தியர் மருத்துவம் |
| 44. | சித்த மருந்தாக்கியல் விதிகளும் செய்முறைகளும் |
| 45. | அனுபவ வைத்தியம் கைமுறை |
| 46. | பல சாத்திரம் |
| 47. | புலிப்பாணி கற்ப தீட்சை |
| 48. | தேரையர் வைத்திய காவியம் |
| 49. | ஆவியளிக்கும் அமுத முறை சுருக்கம் பாகம் 1 |
| 50. | ஆவியளிக்கும் அமுத முறை சுருக்கம் பாகம் 2 |
| 51. | தேரையர் வைத்திய காவியம் |
| 52. | கோரக்கர் மருத்துவம் |
| 53. | மருந்து செய் இயலும் கலையும் |
| 54. | அகத்தியர் ஒடிவு முறிவு காரி நிகண்டு |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |

# Siddha Medical Books in English

| வ. எண் | நூல்களின் பெயர் |
| --- | --- |
| 1. | A Compendium of Siddha Doctrine |
| 2. | Introduction to Siddha Medicine |
| 3. | Simple Home Remedies |
| 4. | Hospital of Siddha Pharmacopoeia in Indian Medicine |
| 5. | History of Siddha Medicine |
| 6. | Siddhars Science of Longevity and Kalpa Medicine |
| 7. | Siddha Principle of Social & Preventive Medicine |
| 8. | Siddha Materia Medica-Part II |
| 9. | Tamil to English Dictionary of Medicine Chemistry, Botany & allied Science |
| | T.V.Sambasivam Pillai Part I |
| | T.V.Sambasivam Pillai Part II |
| | T.V.Sambasivam Pillai Vol. II Part I |
| | T.V.Sambasivam Pillai Vol. II Part II |
| | T.V.Sambasivam Pillai Vol. III |
| | T.V.Sambasivam Pillai Vol. IV Part I |
| | T.V.Sambasivam Pillai Vol. IV Part II |
| | T.V.Sambasivam Pillai Vol. V |
| 10. | Theraiyur Maha Karisal |
| 11. | Anuboga Vaidya Navaneetham - Part I |
| 12. | Anuboga Vaidya Navaneetham - Part II |
| 13. | Pathartha Guna Cintamani |
| 14. | Special Medicines in Siddha |
| 15. | Principles of Diagnosis in Siddha |
| 16. | Siddha Medicine General (Part I) |
| 17. | Line of Treatment in Siddha (Part I) |
| 18. | Siddha Toxicology |
| | |
| | |
| | |
| | |

## ஆயுர்வேத நூல்கள் (தமிழில்)

| வ. எண் | நூல்களின் பெயர் |
|---|---|
| 1. | சரக சம்உறிதை பாகம்.1 |
| 2. | சரக சம்உறிதை பாகம்.2 |
| 3. | சரக சம்உறிதை பாகம்.3 |
| 4. | சுசுருத சம்உறிதை பாகம் 1 |
| 5. | சுசுருத சம்உறிதை பாகம் 2 |
| 6. | ஆயுர்வேத மருத்துவ வரலாறு |
| 7. | பதார்த்த விஞ்ஞானம் |

## நூல்கள் கிடைக்கும் இடங்கள்


இயக்குநர்,

இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித் துறை,

அரும்பாக்கம், சென்னை - 600 106.

தொலைபேசி : 044-26143500 / 26216244 / 26281563

முதல்வர்

அரசினர் சித்த மருத்துவக் கல்லூரி,

பாளையங்கோட்டை

திருநெல்வேலி - 627 002.

தொலைபேசி : 0462 - 2572736 / 2572737 / 2572738

